ஸ்ரீ:

நம்மாழ்வார் அருளிச்செய்த

# திருவாய்மொழி.



ஆசாரியர்களால்

V K. ராமாநுஜதாஸனைக்கொண்டு

எழுதப்பட்ட

எளிய தமிழ் உரையுடன்

கூடியது.

## இரண்டாவது ஸம்புடம்.

(நான்காம்பத்துமுதல் நாலு பத்துக்கள்.)

---

இஃது

என். ராஜகோபாலாசாரியரால்

கும்பகோணம்

யதார்த்தவசனீ அச்சுக்கூடத்தில்

அச்சிடப்பட்டது.

---

# 2-வது ஸம்புடத்தின் விஷயஸூசிகை.

# 2-வது ஸம்புடத்தின் பிழைதிருத்தம்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 4 | வெயில | வெயயில |
| 6 | 23 | இலம்-தன்மை | இலய-இராகதகாலத தன்மை |
| 7 | 7 | சித | சிதம |
| ,, | 14 | மனனு | மினனு |
| 8 | 3 | மொக்கலின் | மொககுளின் |
| 8 | 8, 9 | | |
| ,, | 27 | மொககலில | மொககுளில |
| ,, | ,, | மொக்கலைப்போல | மொககுகளைப் போல |
| 18 | 2, 3 | எனபதறகு | எனபது |
| 22 | 27 | சக்கிரம | சககரம |
| 23 | 30 | அல்ல | அலலள் |
| 41 | 23,24 | உருவில சிறுமான | இலசாரியை |
| 43 | 28 | மேகக்தை | மேகதகை |
| 44 | 2 | அவளுக்கு | இவளுக்கு |
| 45 | 5 | இவன | இவள |
| ,, | 29 | அல்ல | அன்று |
| 46 | 3 | கணணனல்ல | கணணனன்று |
| 50 | 6 | பெருமானே | பெருமானே வா |
| 62 | 15 | இப்பவா | இருப்பவா |
| 86 | 24 | தோள்கன | தோளகள் |
| 106 | 14 | ஷணி (8) | ஷடுணி (3) |
| 112 | 20 | மறுக்கேல-பிறவினை எதிர் | மறுக்கேல எதிர் |
| 121 | 26 | நாயஃ | நாயழ் |
| 128 | 25 | றும் | நும் |
| 226 | 7 | வனுமல்ல | வனுமல்லன் |
| ,, | 8 | | |
| 243 | 19 | மூடிக்கோண்டு | மூடிக்கொண்டு |

146-வது பக்கம் 17, 18-வது வரியிலிருக்கும் இலக்கணம் பிழை.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 243 | 15 | கினகிறனவே | கின்றன |
| 247 | 4 | என்று என்றுயிற்று | என்றுயிறறு |
| 362 | 3 | கொண்டலொதது | கொணடாலொதது |
| 366<br>367 | 21<br>7 | அடக்கும் | அடங்கும |
| 387 | 14 | வாரஸ்ரோதஸ்ஸு | வாரஸ்ரோதெஸ்ஸு |
| 415 | 3 | சொல்லிகொடுதது | சொலலிக்கொடுதது |
| 437 | I | விஷங்க | விஷஙக |
| 542 | 6 | முதனிலைதொ | முதனிலைததொ |
| 575 | 20 | மழையாயிருககிருய் | மழையாயுமிருக்கிருய் |
| 575 | 24 25 | பொஙகு பொஙகி; பகுதியே வினை யெசசப் பொருளில் வந்தது, | பொங்கு-வினைததொகை வினை, |
| 576<br>,, | 18<br>19 | ஆசாரங்களாலே | ஆகாரஙகளாலே |
| 579<br>,, | 4<br>13 | துய்க்காய் | துயக்காய் |
| 585 | 45 | நாநாவிவிஷவ | நாநாவிஷவ |
| 615 | 10 | இங்குமங்கும் | இஙகுமஙகும 597 |

श्रीमते वेदान्तरामानुज महादेशिकाय नमः ।

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# நான்காம்பத்து.

श्रियःकान्तोऽनन्तः शुभतनुविशिष्टः समतनौ
समावाप्तो द्वेधा स्वयमिति निरूपाय्य शतकैः ।
जगौ नीचं प्राज्ञैस्स्वकृते जह यात्र्या श्रीनिवस्या
समुक्तं तद्वेद्य श्रूयति तदनुरूपा विधेः ॥ ॥௩௧॥

லக்ஷ்மீபதியாய், அநந்தன் என்று சொல்லப்பட்டவனாய், சுபமாயும் அழகுள்ளதாயுமிருக்கிற திருமேனியையுடையவனாய் இருக்கிற எம்பெருமானே அடையவேண்டிய பலன் என்றும், அந்தப் பலனை அடைவதற்கு அவனே உபாயம் என்றும் மூன்று பத்துக்களாலே தீர்மானம் செய்து, இப்போது தன்னுடைய நினைவிலிருக்கிற வரிசைப்படி அவன் பலனாயிருப்பதையே வேறு பலன்களில் ஆசையில்லாதவராய் முனிச்ரேஷ்டரான ஆழ்வார் நாலாம்பததில யுக்தியால் உறுதிப்படுத்துகிறார். (9)

स्थिरैश्वर्यं दायं सहजबहुभोग्यं निरवधि
नृपः श्लिष्टं क्लेशापहसहितदास्यं निजजनैः ।
कृतार्थीकर्तव्यं प्रणयिविरहे सद्भूहरणं
स्वसाम्यस्वापेक्ष्यं स्वमतमवधेः स्वमतम् ॥ ॥௪௦॥

நாலாவதுபத்தில் ஆழ்வார் எம்பெருமானைப் பத்துக்காரணங்களால் பிராப்பியனென்று சொல்லி அநுபவிக்கிறார். அவைகளாவன:—(1) நிலையான ஐசுவரியமுள்ளவனாயிருப்பது; (2) தானாயுள்ள பலவிதமான போக்கியவஸ்துக்களையுடையவனாயிருப்பது; (3) ஆச்ரிதர்களும் தானும் ஒருவரோடு ஒருவர் சேர்ந்திருப்பது; (4) பிரிந்தகாலத்தில் வருத்தத்தை உண்டுபண்ணும் தன்னுடைய வஸ்துக்களையும் தன்னைப்போன்றவைகளையுமுடையவனாயிருப்

*பது ; (5) தன்னைச் சேர்ந்தவர்களைக் கிருதார்த்தர்களாகச் செய்வது ; (6) தன்னிடத்தில் ஆசையுள்ளவர்களின் வருத்தத்தைப் போக்கும் மருந்தாயிருப்பது ; (7) அநேக குணங்களுள்ளவனாயிருப்பது ; (8) தன்னால் உபேக்ஷிக்கப்பட்டவைகள் ஆச்ரிதர்களால் விடத்தகுந்தபடியிருப்பது , (9) ஆச்ரிதர்கள் மனதுக்குப் பிடித்த பலனாயிருப்பது ; (10) மிகவும் உயர்ந்தவன் என்று நன்றாய் அறியப்படுகிறவனாயிருப்பது.* (10)

---

## முதல் திருவாய்மொழி.

*அவதாரிகை :—முதல் திருவாய்மொழியில் - எம்பெருமானே நிலையான ஐசுவரியமுள்ளவனென்று ஆழ்வார் பிறருக்குஉபதேசம் பண்ணுகிறார். இஃது அணைவதில் (2—8) சொல்லப்பட்டபோதிலும், அதில் எம்பெருமான் ஐசுவரியமுள்ளவனாகையால் பிராப்பியன் என்றுமாத்திரம சொல்லப்பட்டது இந்தத திருவாய்மொழியில் மற்றவர்கள் ஐசுவரியம் நிலையில்லாதது , அவனுடைய ஐசுவரியமே நிலையுள்ளது என்று சொல்லி, அவன் பிராப்பியன் என்று சொல்லப்படுகிறது. வீடுமினில (1—2) பக்தியோகத்தைச் செய்யுங்கள் என்றும், சொன்னால் விரோதத்தில் (3—9) எம்பெருமானையே பாடுங்கள் என்றும் உபதேசம் செய்தார். இதில் அவனையே பிராப்பியமாகப் பற்றுங்கோள் என்கிறார்.*

(கலித்துறை.)

ஒருநா யகமா யோட வுலகுட னண்டவர்
கருநாய் கவர்ந்த காலர் சிதைகிய பானையர்
பெருநாடு காண விம்மையிலே பிச்சைதாங் கோள்வர்
திருநா ரணன்தாள் காலம்பெறச் சிந்தித் துய்மினோ. (க)

(பதவுரை) உலகு - பூமியை, உடன் - (ஏழுத்வீபங்களுடன்) கூட (அவைகளில் ஒன்றையும் விடாமல்), ஓட-நீண்டகாலம் அதிகாரம் செல்லும்படி, ஒருநாயகமாய்-(விரோதியில்லாமல்) ஒரே ஈசுவரனாய் ஆண்டவர், இம்மையிலே - இந்தப்பிறப்பிலேயே, கருநாய் கவர்ந்த காலர் - கருதத நாயால் கவ்வப்பட்ட காலையுடையவர்களாய், சிதைகிய பானையர் - உடைந்த பானையை யுடையவர்களாய்,

பெரு நாடு காண - (பகலிலேயே) ஊரிலிருக்கிற எல்லாரும் பார்க்கும்படி, பிச்சை தாம் கொள்வர் - பிச்சையை தாமே வாங்குவர்கள்; திரு நாரணன் தாள் - லக்ஷ்மியோடு கூடிய நாராயணனுடைய திருவடிகளை, காலம்பெற - சீக்கிரத்தில், சிந்தித்து - (பிராப்பியமாகத்) தீர்மானம் செய்து, உய்மினோ - பிழையுங்கள்.

(கருத்து) ஏழு த்வீபங்களோடுகூடிய பூமியை நீண்டகாலம் ஒருவிரோதியுமில்லாமல் ஆண்டவர்களும் ராஜ்யத்தை இழந்து பிச்சையெடுத்து பிழைப்பர்கள். இந்த வேலையைச்செய்ய வேறு ஸஹாயமில்லாமல் தாமே அதைச் செய்வர்கள். தகுந்த பாத்திரம் அகப்படாமல் ஊருக்குவெளியே கிடக்கும் ஓட்டைப்பானையை எடுத்துக்கொண்டு பகலில் பிச்சை எடுக்க வெட்கப்பட்டு ராத்திரியில போய், இருட்டில் கருப்பு நாயின்மேல் காலை வைத்து அதினால் கடிக்கப்பட்டு, மறுபடியும் பகலிலேயே எல்லாரும் காணும்படி பிச்சை எடுப்பர்கள். ஆகையால் மனிதர்கள் ஐசுவரியம் நிலையில்லாதது. அதை விட்டுவிட்டு, நிலையான ஐசுவரியமுள்ள லக்ஷ்மியோடுகூடிய நாராயணனுடைய திருவடிகளைப் பிராப்பியம் என்று தீர்மானம் செய்து, அவைகளைச் சீக்கிரம் பற்றுங்கோள்.

(இலக்கணம்) நாடு - ஆகுபெயராய் அதிலிருக்கிறவர்களைச் சொல்லுகிறது. (1)

---

அவ—கீழ்ப்பாட்டில் ஐசுவரியம் நிலையில்லாதது என்று சொன்னார்; இதில் ஐசுவரியம் போய் படுகிற கஷ்டங்களைச் சொல்லுகிறார் :—

உய்ம்மின் றிறைகொணர்ந் தென்றுல காண்டவ ரிம்மையே
தம்மின் சுவைமட வாரைப் பிறர்கொள்ளத் தாம்விட்டு
வெம்மி னொளிவெய்யிற் கானகம் போய்க்குமை தின்பர்கள்
செம்மின் முடித்திரு மாலை விரைந்தடி சேர்மினோ. (உ)

(ப-ரை) திறை கொணர்ந்து உய்மின் என்று - (உங்களுடைய தநத்தை) கப்பமாகக் கொண்டுவந்து கொடுத்துப் பிழையுங்கள் என்று (சத்துருராஜாக்களைப் பார்த்துச்) சொல்லி, உலகுஆண்டவர் - உலகத்தை ஆண்ட ராஜாக்கள், இம்மையே - இந்த பிறப்பிலேயே, தம் இன் - தமக்கு இனியவர்களான, சுவை மடவாரை -

போகரஸத்தைக் கொடுதத ஸ்திரீகளை, பிறர் கொள்ள - சத்துருக்கள் கைக்கொள்ளும்படி, தாம்விட்டு, வெம் மின் ஒளி வெய்யில் கானகம் போய-கடுமையான மின்னலைப்போல் பிரகாசத்தோடு கூடிய வெய்யில் நிறைந்த காட்டுக்குப்போய், குமை தின்பர்கள் - துன்பத்தை அநுபவிப்பர்கள். செம் மின் முடி - சிவப்பாய் பிரகாசிக்கிற கிரீடத்தையுடைய, திருமாலை - லக்ஷ்மீபதியினுடைய, அடி - திருவடிகளை, விரைந்து - சீக்கிரமாய், சேர்மின் - சேருங்கள்.

(கருத்து) சத்துரு ராஜாக்களைப் பார்தது "உங்களுடைய தநத்தைக் கப்பமாகக் கொண்டுவந்துகொடுத்து, பிழையுங்கள்" என்று சொல்லி, உலகத்தை ஆண்ட ராஜாக்கள் அந்தப் பிறப்பிலேயே ராஜ்யத்தை இழந்து, தங்களுக்கு இனியவர்களான ஸ்திரீகளை மற்றவர்கள் கைக்கொள்ளும்படி விட்டுவிட்டு, காட்டுக்குப் போய், அதில் கடுமையான வெய்யிலில் அலைந்து திரிந்து கஷ்டப்பட்டு, அங்கும் முன் சத்துருக்களால் துன்பம் அடைவர்கள். ஆகையால் நிலையில்லாத இந்த ஐசுவரியத்தை ஆசைப்படாமல் சிவப்பாக விளங்கும் கிரீடத்தையுடைய லக்ஷ்மீபதியினுடைய திருவடியைச்சீக்கிரம் சேருங்கள். அவைகளைப் பிராப்பியமென்று தீர்மானியுங்கள். (2)

---

அவ-கீழ் இரண்டு பாட்டுக்களில் ஐசுவரியம் நிலையில்லாதது என்று சொன்னார்; இதில் அதை அனுபவித்தவர்களும் நிலையில்லாதவர்கள் என்று சொல்லுகிறார்:—

அடிசேர் முடியின ராகி யரசர்க டாந்தொழ
இடிசேர் முரசங்கள் முற்றத் தியம்ப விருந்தவர்
பொடிசேர் துகளாய்ப் போவர்க ளாதலி னொக்கெனக்
கடிசேர் துழாய்முடிக் கண்ணன் கழல்க ணினைமினோ. (௩)

(ப-ரை) அடி சேர் முடியினராகி - (தங்களுடைய) காலில் விழும் கிரீடங்களையுடையவர்களாய், அரசர் தாம் வணங்க-அரசர்கள் வணங்கும்படியும், இடி சேர் - இடியின் ஓசை சேர்ந்த, முரசங்கள், முற்றத்து இயம்ப - முற்றத்திலே சப்திக்கும்படியும், இருந்தவர் - இருந்த ராஜாக்கள், பொடி சேர் துகளாய் போவர்

கள் - ஒரு பொடியோடு சேர்ந்த இன்னொரு பொடியாய் ஆவர்கள்; ஆதலில் - ஆகையால், கடி சேர் துழாய் முடி - வாஸனைசேர்ந்திருக்கிற துளஸிமாலையைத் திருமுடியிலுடைய, கண்ணன் கழல்கள் - கண்ணனுடைய திருவடிகளை, நொக்கென நினைமின் - சீக்கிரம் பிராப்பியமாக நினையுங்கள்.

(கருத்து) சிற்றரசர்கள் தங்கள் காலில் விழுந்து வணங்கும்படியும், முரசங்கள் முற்றத்தில் இடிபோல் சப்திக்கவும் இருந்து அரசாண்டவர்கள் தாங்கள் தூளிகள்போல் இருந்தவிடம் தெரியாமல் போகிறார்கள். ஆகையால் துளஸி மாலையைத் திருமுடியில் உள்ளவனும் மிகவும் இனியவனும் ஸுலபனுமிருக்கிற கண்ணன் திருவடிகளைச் சீக்கிரம் பிராப்பியமாக நினையுங்கள்.

குறிப்பு :—'பொடிசேர் துகளாய்' என்பதற்கு ஒரு பொடியோடு சேராவிட்டால் கண்ணுக்குக் காணப்படாத பொடியாய் என்று பொருள். அதுபோல் ராஜாக்கள் ஆகிவிடுவர்கள்.

(இ - ம்) நொக்கென - உரிச்சொல். (3)

---

அவ—முன் பாட்டில் ராஜாக்கள் தூளியாய்ப் பரந்து போவர்கள் என்று சொன்னார்; அப்படிப்போகாமல் நிலையாயிருக்கிறவர்களைப் பார்க்கவில்லை என்று சொல்லி, முன்பாட்டில் சொன்னதையே இதில் உறுதிப்படுத்துகிறார் :—

நினைப்பான் புகிற்கட லெக்கலி னுண்மண லிற்பல
ரெனைத்தோ ருகங்களு மிவ்வுல காண்டு கழிந்தவர்
மனைப்பால் மருங்கற மாய்தலல் லான்மற்றுக் கண்டிலம்
பனைத்தாண் மதகளி றட்டவன் பாதம் பணிமினே. (ச)

(ப - ரை) நினைப்பான் புகில் - (போனராஜாக்களை) நினைக்க ஆரம்பித்தால், எனைத்து ஓர் உகங்களும் - அநேக யுகங்களெல்லாவற்றிலும், இ உலகு ஆண்டு கழிந்தவர்கள் - இந்த உலகத்தை ஆண்டு போனவர்கள், கடல் எக்கலில் - ஸமுத்திரத்தில் அலைகளாலே உண்டுபண்ணப்பட்ட மணல்மேட்டிலிருக்கும், நுண் மணலில் பலர் - ஸூக்ஷ்மமான மணல்களைக்காட்டிலும் அதிகமானவர்கள், மனைப்பால் மருங்கு - தங்களுடைய வீட்டின் பக்கத்திலுள்ள

வீடுகளும், அற - நசிக்கும்படி, மாய்தல்அல்லால் - நாசத்தையடைவதல்லது, மற்று - வேறொன்றை, கண்டு இலம் - பார்த்தோமில்லை, பனை தாள் - பனைமரம்போன்ற கால்களையுடைய, மதம் களிறு அட்டவன் - குவலயாபீட மென்கிற மதயானையைக் கொன்றவனான கண்ணனுடைய, பாதம் பணிமின் - திருவடிகளை வணங்குங்கள்.

(கருத்து) முன் வெகுகாலமிருந்து அரசாண்ட ராஜாக்களின் கணக்கை நினைக்க ஆரம்பித்தால், ஸமுத்திரத்தில் அலைகளாலே உண்டுபண்ணப்பட்ட மணல்மேட்டிலிருக்கும் பொடி மணல்களைக் காட்டிலும் பலராயிருக்கிறார்கள். எவ்வளவு காலம் அரசாண்டாலும் நிலையாயிருப்பதில்லை. அதுமாத்திர மன்று. அவர்கள் வம்சத்தில் ஒருவரும் மீதியில்லை. ஆதலால் குவலயாபீடமென்கிற யானையைக் கொன்றதுபோல், ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் செய்கிற கண்ணனுடைய திருவடிகளை வணங்குங்கள்.

குறிப்பு—பாட்டில் ‘ மனைப்பால் மருங்கு அற ’ என்பதற்கு அந்த ராஜாக்கள் இருந்த வீடுகளும், அவைகளின் பக்கங்களிலிருந்த வீடுகளும் நாசம் அடைந்தன என்று பொருள். இதனால் அவைகளில் இருந்தவர்களும் அதாவது அந்த ராஜாக்களைச் சேர்ந்த எல்லாரும் நாசம் அடைநதார்கள் என்று கருத்து.

(இ - ம்.) நினைப்பான்-நினைக்க, வினையெச்சம். மணலில்-இல் ஐந்தாம் வேற்றுமை உருபு; மணலைக்காட்டிலும் என்று பொருள் இலம் - தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று. (4)

---

அவ—கீழ் பாட்டுக்களில் மற்றவர்களை ஆளும் ரஸம் நிலையில்லாதது என்று சொன்னார்; இதில் ஸ்திரீகளை அநுபவிக்கும் ரஸமும் நிலையில்லாதது என்கிறார் :—

பணிமின் றிருவரு ளென்னுமஞ் சீதப்பைம் பூம்பள்ளி
யணிமென் குழலா ரின்பக் கலவி யமுதுண்டார்
துணிமுன்பு நாலப்பல் லேழையர் தாமிழிப்பச் செல்வர்
மணிமின்னு மேனிநம் மாயவன் பேர்சொல்லி வாழ்மினே. (ரு)

(ப - ரை) திருஅருள் (நான் உங்களுக்குக் கைங்கரியம் செய்யும்படியான) திருவருளை பணிமின் - அருளிச்செய்யவேண்டும், என்னும் - என்று (சேரும் காலத்தில் பிரீதியுடனும் வணக்கத்துடனும்) சொன்னவர்களான, அணி - அலங்காரத்தையுடைய, மென் குழலார் - மிருதுவான கூந்தலையுடைய ஸ்திரீகளுடைய, இன்பம் கலவிஅமுது-இன்பமான சேர்க்கையாகிற அமிருதத்தை, அம் சீதம் பைம் பூம் பள்ளி - அழகாய் குளிர்ந்த விசாலமானபுஷ்பங்களால் செய்யப்பட்ட படுக்கையில், உண்டவர் - அநுபவித்தவர்கள், துணி முன்பு நால - (இடுப்பில் கட்டியிருக்கும்) துணியானது (பின்பக்கத்துக்கு எட்டாமல்) முன்பக்கத்தில் தொங்கும்படி, பல் ஏழையர்தாம் - முன்பு தங்களிடத்தில் சபலமுள்ளவர்களான பல ஸ்திரீகள், இழிப்ப - (மற்றவர்களையடைந்து இவர்களைக்) கண்ணாலே பார்க்காமலிருக்க, செல்வர் - (ஆசையினால் அவர்களிடம்) போவர்கள். மணி மின்னு மேனி - நீலமணிபோலே பிரகாசிக்கிற திருமேனியையுடைய, நம் மாயவன் - நமமுடைய ஆச்சரியமாயிருக்கிறவனுடைய, பேர் சொல்லி - திருநாமங்களைச் சொல்லி, வாழ்மின் - வாழுங்கள், (ஆநந்தத்தை அடையுங்கள்.)

(கருத்து) முன்பு ராஜாக்களாயிருக்கும்போது, தங்களுடன் சேர்ந்த இனிமையான மிருதுவான கூந்தல்களையுடைய ஸ்திரீகள் "உங்களுடைய கைங்கரியத்தை நாங்கள் செய்யும்படி திருவுள்ளத்தை அருளிச்செய்யவேண்டும்" என்று பிரீதியுடனும் வணக்கத்துடனும் சொன்ன அவர்களைப் புஷ்பப்படுக்கையில் அநுபவித்தார்கள். ராஜ்யம் போனபிறகு அந்த ஸ்திரீகளே மற்றவர்களை அடைந்து இவர்களைக் கண்ணாலே பார்க்காமல் அலக்ஷியம் செய்தபோதிலும், ஆசையினால் இடுப்புக்கு நிறைந்த துணியில்லாமல் அவர்களிடம் போவர்கள். ஆகையால் ஸ்திரீகளின் அநுபவமும் நிலையில்லாதது. நீலரத்நம்போல் பிரகாசமுள்ளதாயும் அழகு நிறைந்ததாயுமிருக்கிற திருமேனியுடையவனாய் ஆச்ரிதர்களுக்கு ஸுலபனாயிருக்கும் எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லி ஆநந்தம் அடையுங்கள். (5)

---

அவ—ஐசுவரியம் அடைந்தது முதல் இதுவரையில் அஃது ஒருபோதும் நீங்காதபடி இருந்தவர்கள் இல்லையோ என்ன?

அதற்குப் பதில் இந்தப் பாட்டில் சொல்லி, நாலாம் பாட்டில் சொன்னதையே உறுதிப்படுத்துகிறார் :—

வாழ்ந்தார்கள் வாழ்ந்தது மாமழை மொக்குளின் மாய்ந்துமாய்ந்
தாழ்ந்தாரேன் றல்லா லன்று முதலின் றறுதியா
வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்ப ரேன்பதில்லை நிற்குறி
லாழ்ந்தார் கடற்பள்ளி யண்ண லடியவ ராமினே. (சு)

(ப - ரை) வாழ்ந்தார்கள் - ஐசுவரியத்தை அநுபவித்தவர்கள், வாழ்ந்தது - அதை அநுபவித்து வாழ்ந்தது, மாமழைமொக்குளின் - பெரிய மழையில் உண்டாகும நீர்க்குமிழிபோல் (கொஞ்ச காலமே இருந்து) மாய்ந்துமாய்ந்து - நசித்துநசித்து, ஆழ்ந்தார் - (இருந்த காலத்திலே செய்த பாபங்களாலே) தாழ்ந்த கதியை அடைந்தார்கள், என்று அல்லால் - இப்படி இருப்பதல்லாமல், இன்று அறுதியா - இதுவரையில், வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பது இல்லை, நிற்கு உறில் - நிலையாயிருப்பதை (நீங்கள்) ஆசைப்பட்டால், ஆழ்ந்து ஆர் கடல் பள்ளி - ஆழமான விசாலமான திருப்பாற்கடலைப் படுக்கையாகவுடைய, அண்ணல் - ஸ்வாமிக்கு, அடியவர் ஆமின் - தாஸராக ஆகுங்கோள்.

(கருத்து) ஐசுவரியத்தையடைந்து வாழ்ந்தவர்கள் வாழ்வு பெரிய மழையில் உண்டாகும் நீர்க்குமிழிபோல் கொஞ்சகாலமே இருந்து நசித்துப்போய்விட்டது. அதை அடைந்தவர்களும் இருந்தகாலத்தில் செய்த பாபங்களாலே தாழ்ந்தகதியை அடைந்தார்கள். இப்படியில்லாமல் ஐசுவரியமுண்டானதுமுதல் இது வரையில் ஐசுவரியம் ஒருபோதும் நீங்காமல் வாழ்ந்தவர்கள் இல்லை. ஆதலால், நிலையான ஐசுவரியத்தை நீங்கள் ஆசைப்பட்டால் ஆச்ரிதர்களிடத்தில் ஆசையினால் திருப்பாற்கடலிற் பள்ளி கொண்டிருக்கிற ஸ்வாமிக்குத் தாஸராக ஆகுங்கள்.

(இ - ம்.) மொக்குளில் - மொக்குளைப்போல். நிற்கு - நில் பகுதி. கு தொழிற்பெயர்விகுதி. அறுதியா-அறுதியாக, கடைக் குறை. (6)

---

அவ—அங்கம் பாகம் முதலான ரஸங்களும் நிலையில்லாதவைகள் என்று இதில் அருளிச்செய்கிறார் :—

ஆமின் சுவையவை யாறோ டடிசிலுண் டார்ந்தபின்
றூமென் மொழிமட வாரிரக்கப் பின்னுந் துற்றுவா
ரீமி னெமக்கொரு துற்றென் றிடறுவ ராதலிற்
கோமின் றுழாய்முடி யாதியஞ் சோதி குணங்களே. (எ)

(ப - ரை) ஆம் - ஆகும் (நல்லதாக ஆகும்) இன் - இனிமையான, அவை - பிரஸித்தங்களான, ஆறு சுவையோடு - ஆறுரஸங்களுடன்கூடின, அடிசில் உண்டு - அந்நத்தைச் சாப்பிட்டு, ஆர்ந்தபின் - திருப்தியையடைந்தபின், தூ மென மொழி மடவார் - பரிசுத்தமான (தம்மிடத்தில் பிரீதியுடையவைகளான) மிருதுவான வார்த்தைகளையுடைய ஸ்திரீகள், இரக்க - (எனக்காக ஒரு உருண்டை சாப்பிடவேண்டுமென்று) வேண்ட, பின்னும் துற்றுவார் - (அவர்கள் வேண்டுதலை மறுக்கமுடியாமல்) மறுபடியும் அதைச் சாப்பிடுகிறவர்கள், (ஏழையானபிறகு பசித்து) எமக்கு ஒரு துற்று ஈமின் என்று - எமக்கு ஒரு கவளம் அந்நம் கொடுங்களென்று (அந்த ஸ்திரீகளை) யாசித்து, இடறுவர் - மனை வாசல்களில் தட்டிக்கொண்டு திரிவார்கள், ஆதலில் - ஆகையால், துழாய் முடி - துளஸியைக் கிரீடத்திலுடையவனும், ஆதி - ஜகத்காரணமான, அம் சோதி - அழகான காந்தியுள்ள திருமேனியையுடைய எம்பெருமானுடைய, குணங்களே - குணங்களையே, கோமின் - சேர்த்து அநுபவியுங்கள்.

(கருத்து) ஸம்பத்து இருந்த காலத்தில் சாப்பிட்டுப் பசி அடங்கினபிறகும், எந்த ஸ்திரீகள் வேண்டுதலாலே மறுபடியும் கொஞ்சம் சாப்பிட்டானோ, அவன் ஏழையாய்ப்போன பிறகு அந்த ஸ்திரீகளையே ஒரு கவளம் ஆஹாரம் கொடுங்கள் என்று யாசித்துக்கொண்டு அவர்கள் வாசலில் தட்டிததிரிவன். ஆகையால் அந்நமும் பாநமும் நிலையில்லாதவைகள். ஆதலால் துளஸி மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தையுடையவனும், ஜகத்காரணமாய் அழகான ஜ்யோதிர்மயமான திருமேனியையுடையவனை எம்பெருமானுடைய குணங்களைச் சேர்த்து அநுபவியுங்கோள். (7)

---

அவ—எம்பெருமானை ஆசிரயித்து நிலையான ஐசுவரியத்தை அடையக்கூடாதோ என்றால், அதுவும் நிலையுள்ளது என்று இதில் அருளிச் செய்கிறார் ;—

குணங்கொ ணிறைபுகழ் மன்னர் கொடைக்கடன் பூண்டிருந்
திணங்கி யுலகுட ளாக்கிலு மாங்க வனையில்லார்
மணங்கொண்ட போகத்து மன்னியு மீள்வர்கண் மீள்வில்லை
பணங்கொ ளரவணை யான்றிரு நாமம் படிமினே. (அ)

(ப - ரை) குணம் கொள் - குணங்களைக்கொண்ட, நிறைபுகழ்- நிறைந்த கீர்த்தியுடைய, மன்னர் - ராஜாக்கள், கொடை கடன் பூண்டு இருந்து - தானம் பண்ணுவதையே கடன்பட்டதுபோல் செய்துகொண்டிருந்து, இணங்கி - பொருந்தி, (எல்லாருக்கும் அநுகூலராய்) உலகு - உலகத்தாரை, உடன் ஆக்கிலும் - தன்னை விட்டுப் பிரியாமல் அநுஸரிக்கும்படி செய்தபோதிலும், ஆங்கு - அந்த ராஜ்யத்தை அநுபவிக்கிற விஷயத்திலே, அவனை இல்லார் - எம்பெருமானை (உபாயமாக) அடையாதவர்கள் (அந்த அநுபவத்தை அடையமாட்டார்கள்.) மணம் கொண்ட போகத்து - கலியாணத்தோடுகூடிய போகத்திலே, மன்னியும் - நிலையாயிருந்தாலும், மீள்வர்கள்-அதைவிட்டுத் திரும்புவர்கள்; பணம் கொள் அரவு அணையான் - படங்களைக்கொண்ட ஆதிசேஷனைப் படுக்கையாகக் கொண்ட எம்பெருமானுடைய, திருநாமம் படிமின் - திருநாமங்களை விடாமல் சொல்லுங்கள்; மீள்வு இல்லை - திரும்பி வருவதில்லை.

(கருத்து) ஒருவன் தானத்தை கடன்பட்டதுபோல் செய்துகொண்டு உலகத்தாருக்கு அநுகூலமாயிருந்து, அவர்கள் தன்னை விட்டுப் பிரியாமல் தன்னைப் பின்தொடரும்படி செய்து, ராஜ்யத்தின் அநுபவத்தை அடைய முயற்சி செய்தாலும், எம்பெருமானை அதற்கு உபாயமாக அடையாவிட்டால் அந்த அநுபவம் கிடைக்காது. எம்பெருமானை ஆசிரயித்து அது கிடைத்தாலும், ராஜ்யத்தை வெகுகாலம் அநுபவித்து, பிறகு அதில் அலுப்பு உண்டாய் அதை விட்டுவிடுவன். ஆதிசேஷன்மேல் பள்ளி கொண்டிருக்கிற எம்பெருமானுடைய திருநாமங்களை ஓயாமல் சொல்லிக்கொண்டு அவனையே பிராப்பியமாக எண்ணி அடைந்தால் அவனுடைய அநுபவம் கிடைக்கும். அது நிலையாயிருக்கும். அதைவிட்டுத் திரும்புகிறதில்லை. திருவனந்தாழ்வானைவிட்டாலன்றோ ஆச்ரிதனான இவனை எம்பெருமான் விட்டுவிடுவது.

(8)

அவ—கீழ்ப்பாட்டுகளில் இந்த உலகத்தின் ஐசுவரியம் நிலையில்லாதது என்று சொன்னார்; இதில் ஸ்வர்க்கம் முதலான இடங்களில் கிடைக்கும் அநுபவமும் நிலையில்லாதது என்று சொல்லுகிறார்:—

படிமன்னு பல்கலன் பற்றேோ டறுத்தைம் புலன்வென்று
செடிமன்னு காயஞ்செற் றாகளு மாங்க வனையில்லாா
குடிமன்னு மின்சுவர்க்க மெய்தியு மீள்வர்கண் மீள்வில்லை
கொடிமன்னு புள்ளுடை யண்ணல் கழல்கள் குறுகுமினோ.

(ப - ரை) படி - பூமியையும் (வீடு நிலம் முதலானவைகளையும்) மன்னு பல்கலன் - ஸ்திரங்களான (தலைமுறை தலைமுறையாய் வந்திருக்கிற) பல நகைகளையும், பற்றோடு அறுத்து - வாஸனையோடு விட்டுவிட்டு, ஐம்புலன் வென்று - ஐந்து இந்திரியங்களையும் ஜயித்து, செடி மன்னு காயம் செற்றார்களும் - செடிகள் நாலு பக்கமும் வளரும்படி உடம்பை நாசம் அடையும்படி செய்தவர்களும் (தபஸ்ஸு செய்தவர்களும்), ஆங்கு - (அந்த ஸ்வர்க்கத்தை அடையும் விஷயத்தில்), அவனையில்லார் - எம்பெருமானை உபாயமாக அடையாவிட்டால் அந்த ஸ்வர்க்கத்தை அடையமாட்டார்கள், குடி மன்னு - ஜனங்கள் நிலையாயிருந்து அநுபவிக்கக்கூடிய, இன் சுவர்க்கம் - இனியதான ஸ்வர்க்கத்தை, எய்தியும் - அடைந்தும், மீள்வர்கள் - (புண்ணியம் நசித்தவுடன் அதைவிட்டுத்) திரும்புவார்கள். கொடி மன்னு புள்ளுடை - த்வஜத்தில் நிலையாயிருக்கும் கருடனையுடைய, அண்ணல கழல்கள் - ஸ்வாமியினுடைய திருவடிகளை, குறுகுமின - கிட்டுங்கோள் (அடையுங்கள்). மீள்வில்லை - திரும்புவதில்லை.

(கருத்து) ஒருவன் ஸுவர்க்கத்தை அடைவதற்காக வீடு வாசல்களிலும் நகை நாணயங்களிலும ஆசையை வாஸனையோடு விட்டு இந்திரியங்களை ஜயித்து, உடம்பில் செடி வளர்ந்து கெடும்படி அதைக் கவனிக்காமலிருந்து தபஸ்ஸு செய்தாலும் எம்பெருமானை உபாயமாக ஆச்ரயிக்காவிட்டால் அந்த ஸ்வர்க்கம் கிடைக்காது. அதில் பூமியைப்போலில்லாமல் வெகுகாலமிருந்து இனிமையான ஸுகத்தை அநுபவிக்கலாம். அப்படியிருந்தபோதிலும் அதிலும் புண்ணியம் முடிந்தவுடன் அதை விட்டுவிட்டுத் திரும்புவன். ஆகையால் ஸ்வர்க்கம் முதலிய ஐசுவரியத்தை விட்டு

பக்ஷிராஜனை த்வஜமாக உடைய எம்பெருமானுடைய திருவடிகளை ஆச்ரயிங்கோள். அவைகளைவிட்டுத் திரும்புவதில்லை. பக்ஷி ராஜனை விட்டாலன்றோ ஆச்ரிதர்களை எம்பெருமான் விடுவது.

(9)

அவ—ஸ்வர்க்கம் நிலையாயிராவிட்டால் ஒருவன் தன் ஆத்மாவைமாத்திரம் அநுபவிப்பதாகிய கைவல்யத்தை அடைவதற்குப் பாடுபடக்கூடாதோ என்றால், அதுவும் நிலையில்லாதது என்று இதில் அருளிச்செய்கிறார் —

குறுக மிகவுணர் வத்தொடு நோக்கியெல் லாம்விட்ட
இறுக லிறப்பென்னு ஞானிக்கு மப்பய னில்லையேல்
சிறுக நினைவதோர் பாசமுண் டாம்பின்னும் வீடில்லை
மறுகலி லீசனைப் பற்றி விடாவிடில் வீடஃதே. (௧0)

(ப - ரை) உணர்வத்தொடு - ஜ்ஞாநத்தோடு (ஜ்ஞாநம் என்கிற ஸாரமான குணத்தைக்கொண்டே அறியவேண்டிய) ஆத்மாவோடு, குறுக - கிட்ட இருக்கும்படி, மிக நோக்கி - மிகவும் பார்த்து (வேறு விஷயம் கலக்காமல் ஆத்மாவைப் பார்த்து) எல்லாம்விட்ட - அதைத்தவிர வேறு எல்லாப் பிரயோஜநங்களையும் விட்டவனாய், இறுகல் - சுருங்குதலை (சுருங்கி இருக்கிற ஆத்மாவின் அநுபவத்தை), இறப்பு என்னும் - மோக்ஷ ஸுகமென்று எண்ணுகிறவனாய் இருக்கும், ஞானிக்கும், அப்பயன் இல்லையேல் - அந்த எம்பெருமானுடைய உபாஸநமில்லாவிட்டால், சிறுகநினைவது - தெளிவான தியாநமில்லாத நினைவை உண்டுபண்ணும், ஓர் பாசம் - விஷயங்களில பற்றுதலானது, உண்டாம் - உண்டாகும். பின்னும் - ஆத்மாவைப் பார்ப்பது உண்டானாலும், மறுகலில் - மரணம் அடையுங்காலத்திலே, ஈசனை பற்றி - ஈச்வரனைப்போல் ஜ்ஞாநமாயும் ஆநந்தமாயுமிருக்கிற ஆத்மாவின் ஸ்வரூபத்தை நினைத்து, விடாவிடில் - உடம்பை விடாதபோது, வீடு இல்லை - ஆத்மாவின அநுபவம் கிடைக்காது. அஃதே வீடு - எம்பெருமானுடைய கைங்கரியமே உண்மையான மோக்ஷம்.

(கருத்து) ஆத்மாவைக்காட்டிலும் வேறான எல்லா விஷயங்களையும் விட்டு, ஆத்மாவின் அநுபவத்தையே மோக்ஷம் என்று எண்ணி, விஷயங்களில் அலைந்துகொண்டிருந்த மனதை அவை

களினின்றும் திருப்பி, ஆத்மஸ்வரூபத்தில் வைத்து, வேறு எண்ணம் கலப்பில்லாமல் அதையே நினைத்துக்கொண்டிருக்கப் பிரயத்தினப்பட்டாலும், எம்பெருமானை உபாஸிக்காவிட்டால் விஷயங்களில் உள்ள பற்றுதலானது மறுபடியும் வந்து ஆத்ம ஸ்வரூபத்தைத் தெளிவாகப் பார்க்கமுடியாமல் செய்யும். எம் பெருமானை உபாஸித்து ஆத்மஸ்வரூபத்தைப் பார்த்தாலும் மரணம் வருகிற காலத்தில் எம்பெருமானைப்போல ஜ்ஞாநமாயும், ஆநந்தமாயும் இருக்கிற ஆத்மஸ்வரூபத்தின் நினைவு வராவிட்டால் ஆத்மாநுபவம் கிடைக்காது அது கிடைத்தாலும் அது பூர்ண மான மோக்ஷாநுபவம் அன்று. எம்பெருமானுடைய கைங்கரி யமே உயர்ந்த மோக்ஷாநுபவம். ஆகையால் இடைஞ்சலில்லாமல் ஆத்மாவைப் பார்ப்பதற்கும், மரணம் அடையுங்காலத்தில் ஆத் மாவின் உண்மையான ஸ்வரூபத்தை நினைப்பதற்கும், எம்பெரு மானுடைய உபாஸநம் வேண்டியிருப்பதாலே எம்பெருமானு டைய கைங்கரியத்தைக் காட்டிலும் ஆத்மாவின் அநுபவம் குறைந்ததாகையாலும எம்பெருமானுடைய கைங்கரியமே உண் மையான மோக்ஷமாகையாலும் அறிவுள்ளவன் எம்பெருமானையே உபாஸிக்கவேண்டியது.

குறிப்பு—எம்பெருமானுடைய உபாஸநம் பலனைப்போல் இனியதாயிருப்பதால் அதைப் பாட்டு 'பயன்' என்று சொல்லு கிறது.

(இ - ம்) மறுகலில் - இல் ஏழாம் வேற்றுமை உருபு. (10)

---

அஃதேயுய் யப்புகு மாறென்று கண்ணன் கழல்கண்மேற்
கொய்பூம் பொழில்சூழ் குருகூர்ச் சடகோபன்குற் றேவல்கள்
செய்கோலத் தாயிரஞ் சீர்த்தொடைப் பாட லிவைபத்து
மஃகாமற் கற்பவ ராழ்துயா போயுய்யப் பாலரே. (கக)

(ப - ரை) அஃதே - அதையே (எம்பெருமானைப் பாடுவ தையே,) உய்ய புகும் ஆறு-பிழைத்திருப்பதற்கு உபாயம், என்று- என்று தீர்மானித்து, கண்ணன் கழல்கள்மேல் - கண்ணனுடைய திருவடிகளின்மேல், கொய் பூம் பொழில்-எப்போதும் பறித்துக் கொண்டிருக்கிற பூக்களுள்ள சோலைகளையுடைய, குருகூர் சட கோபன் - ஆழ்வாரால், குற்றேவல்கள் செய் - அந்தரங்க கைங் கரியங்களாகச் செய்யப்பட்ட, கோலத்து ஆயிரம் - அலங்கார

முடைய ஆயிரமாய், சீர் தொடை பாடல் - எம்பெருமானுடைய நல்லகுணங்களைச் சொல்லுகிற பாட்டுக்களில், இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், அமைக்காமல்-குறையாமல் (தப்பாமல்) கற்பவர் - படிக்கிறவர்கள், ஆழ் துயர் போய் - ஆழமான துன்பங்கள் போய், உய்யப் பாலர் - பிழைக்கும் ஸ்வபாவமுள்ளவர். (பிழைப்பர்.)

(கருத்து) ஆழ்வார் தாம் பிழைப்பதற்கு உபாயமாக கண்ணன் திருவடிகள்மேல் சொன்ன ஆயிரம் பாட்டுகளுக்குள் இந்தப் பத்துப் பாட்டுக்களைத் தப்பாமல் படிக்கிறவர்கள் ஆழமான துக்கங்களால் விடப்பட்டு எம்பெருமானுடைய கைங்கரியமாகிய பெரிய ஸம்பத்தைப் பெறுவர்கள். (11)

ஶ்ரீமாந் நாராயண: ஸ்வாஶ்ரிதநுபமமணிகோடோ வீரபாஶாங்க
ஸௌஶீல்யாப்யாம் ஜ்ஞாநாதிஷட்குணநியதநு: ஸ்வா
யோயிதஸ்ஸ்வ: । விஶ்வாத்யம் ஜ்யோதிரத்யாஸிதபணிஶயநோ
வேதாத்மாவஹகேதுர்நிரவதிகஶோபாஶேஷதோஷ: ப்ரஸாத
ய கதித: ஸாயுஜ்யே ஶ்ரேயஸீஶ: ॥ ॥௪௫॥

இந்தத் திருவாய்மொழியில் நாராயணனை மிகவும் நிலையான ஐசுவரியத்துக்கு எல்லைநிலமென்று பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) லக்ஷ்மியோடுகூடியிருப்பது; (2) ஸ்வாமியாயிருப்பதற்குத் தகுந்த கிரீடமுள்ளவனாயிருப்பது; (3) எல்லாருக்கும மேற்பட்டவன் என்று காட்டுகிற துளஸிமாலையைத் திருமுடியில் தரிப்பது; (4) ஒருவராலும் அடக்கமுடியாத குவலயாபீடம் முதலான சத்துருக்களைக் கொல்லுவது; (5) எப்போதும ஆச்சரியமான திருமேனியுடன்கூடி இருப்பது; (6) பிரளய ஸமுத்திரத்தில் படுத்திருப்பது; (7) உலகத்துக்குக் காரணமான ஜ்யோதிஸ்ஸாயிருப்பது; (8) பூமியைத் தாங்குகிற ஆதிசேஷன்மேல் படுத்திருப்பது; (9) வேதத்தை உடம்பாகக்கொண்ட பக்ஷிராஜனை த்வஜமாக உடைத்தாயிருப்பது; (10) ஒருவிதமான தோஷமில்லாமலிருப்பது.

குறிப்பு :—பத்தாம் பாட்டில் 'மறுகலிலீசனை' என்பதற்கு தோஷமில்லாதாகவரனை என்றும் பொருள்கொள்ளலாம். இதை அநுஸரித்து, சுலோகத்தில் "நிரவதிகாஶேஷதோஷ:" என்று சொல்லியிருக்கிறது.

---

# இரண்டாம் திருவாய்மொழி.

அவ—கீழ் திருவாய்மொழியில் ஐசுவரியத்தையும், கைவல்லிய த்தையும்விட்டு, எம்பெருமானையே பரமபிராப்பியன் என்று ஆச் ரயிங்கோள் என்று ஆழ்வார் சொன்னார். இதனாலே தமக்கு அவ னுடன் ஸம்ச்லேஷம் உண்டாகவேண்டுமென்று ஆசை பிறந்து அது உடனே கிடையாமையால் மனது கலங்கி, இந்தத் திருவாய் மொழியில் ஆழ்வார் வருத்தப்படுகிறார். முடியானில் (3—8) பிறந்த இந்த ஆசையானது வேறு காரணத்தாலே மறைந்திருந்து, இப்போது தலையெடுத்தது. எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறாமல் வருத்தப்படுகிற ஒரு பிராட்டியின் தாயார் அவள் வருத்தத்தை எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்வதுபோல் தம் வருத்தத்தை ஆழ்வார் பேசுகிறார்.

(கலிவிருத்தம்.)

பாலனா யேழுல குண்டு பரிவின்றி
யாலிலை யன்ன வசஞ்செய்யு மண்ணலார்
தாளிணை மேலணி தண்ணந் துழாயென்றே
மாலுமால் வல்வினை யேன்மட வல்லியே. (க)

(ப - ரை) பாலனாய் - குழந்தையாய், ஏழு உலகு உண்டு - ஏழுலோகங்களையும் சாப்பிட்டு, பரிவு இன்றி - ஒரு நோவுமில் லாமல், ஆல் இலை - ஆலிலையில், அன்னவசம் செய்யும் - தூங்கு கிற, அண்ணலார் - ஸ்வாமியினுடைய, தாள் இணைமேல் - இரண்டு திருவடிகளின்மேல், அணி - அலங்காரமாக ஸமர்ப்பிக்கப்பட்ட, தண் அம் துழாய் என்றே - குளிர்ந்த அழகான துளஸியே வேண்டுமென்று, வல் வினையேன் - பலமான பாபங்களையுடைய என்னுடைய, மட வல்லி - மடப்பமுள்ள கொடிபோலிருக்கும் பெண், மாலும் - மோஹத்தை அடைகிறாள்.

(கருத்து) ஏழு உலகங்களையும் பிரளயகாலத்தில் சாப்பிட்டு குழந்தையாய் ஆலிலைமேல் பள்ளிகொண்டிருக்கும் எம்பெருமா னுடைய திருவடிகளின்மேல் ஸமர்ப்பிக்கப்பட்ட திருத்துழா யையே என்னுடைய இந்தப் பெண் ஆசைப்பட்டு மயங்குகிறாள்.

குறிப்பு :—(1) குழந்தைகள் கையில் அகப்பட்டதைச் சாப்பிடுவதுபோல், எம்பெருமான் குழந்தைத்தனத்தாலே ஏழு உலகங்களையும் சாப்பிட்டான் என்று திருத்தாயாரின் கருத்து.

(2) 'துழாயென்றே' என்பதற்கு அந்தக்காலத்தில் அணிந்திருந்த திருத்துழாயே வேண்டும், இந்தக்காலத்து திருத்துழாய் வேண்டாம் எனறும், அது இந்தக்காலததில் ஸர்வசக்தியான எம்பெருமானாலும் அடையமுடியாது என்று அறியாமல் இந்தப் பெண் மயங்குகிறாள் என்றும் கருத்து.

(3) 'வல்வினையேன்' என்பதற்கு கிடைக்கமுடியாததை இந்தப்பெண் ஆசைப்படுவது தன்னுடைய பாபம் என்று திருத்தாயார் நினைக்கிறாள்.

(4) 'மடவல்லி' என்பதற்கு பிடித்ததை விடாமல் அதிகமாக ஆசைப்படுகிறவள் என்று பொருள்.

(5) அன்னவசம் செய்து - சாப்பிட்ட அந்நதை வசமாகப்பண்ணி என்று பொருள். இது தூக்கத்தில உண்டாகுமாகையால், அந்த வாக்கியத்துக்கு தூங்கி என்று கருத்து.

(இ - ம்) என்றே - ஏகாரத்திற்குப் பிரிநிலைப்பொருள். ஆல்- அசைநிலை. (1)

---

வல்லிசேர் நுண்ணிடை யாய்ச்சியர் தம்மொடுங்
கொல்லைமை செய்து குரவை பிணைந்தவா
நல்லடி மேலணி நாறு துழாயென்றே
சொல்லுமாற் சூழ்வினை யாட்டியேன் பாவையே. (உ)

(ப - ரை) வல்லி சேர் - கொடிபோலிருக்கிற, நுண் இடை - ஸூக்ஷ்மங்களான இடுப்பையுடையவர்களான, ஆய்ச்சியர் தம்மொடும் - கோபிகளோடே, கொல்லைமை செய்து - உலகத்தில் ஏற்பட்டிருக்கும் மரியாதைகளை அழிக்கும்படியான வேலைகளை (விடன் செய்யும் வேலைகளை) செய்து, குரவை பிணைந்தவர் - ராஸக்ரீடை செய்தவனுடைய, நல் அடிமேல் - நல்ல திருவடிகளின் மேலே, அணி நாறு துழாய் என்றே - அலங்காரமாக ஸமர்ப்பிக்கப்பட்ட வாஸனையுள்ள துளஸியே வேண்டுமென்று, சூழ்வினையாட்டியேன் - சூழ்ந்த பாபங்களையுடைய என்னுடைய, பாவை = பெண்ணானவள், சொல்லும் = சொல்லுகிறாள்,

(கருத்து) நல்ல அழகு வாஸனை, மிருதுவாயிருக்கும் தன்மை முதலான தன்னுடைய குணங்களைக் காட்டி, வரம்புகடந்த வேலைகளைச் செய்து கோபிகைகளுடன் ராஸக்ரீடை செய்து தன் திருவடிகளில் அவர்கள் வந்து விழும்படி செய்த கண்ணன் திருவடிகளின்மேலிருக்கும் திருத்துழாயே வேண்டுமென்று பாவியான என்னுடைய இந்தப் பெண் சொல்லுகிறாள்.

குறிப்பு:– குரவை பிணைந்தவர்—கண்ணன் இரண்டிரண்டு கோபிகளுக்கு நடுவில் இருந்துகொண்டு குழந்தைகள் கோலாட்டம் போடுவதுபோல் சுற்றிச் சுற்றிவந்து அவர்களுடன் விளையாடினான். இதை ராஸக்ரீடை என்கிறது. (2)

---

பாவியல் வேதநன் மாலை பலகொண்டு
தேவர்கண்மா முனிவ ரிறைஞ்ச நின்ற
சேவடி மேலணி செம்பொற் றுழாயென்றே
கூவுமால் கோள்வினை யாட்டியேன் கோதையே. (௩)

(ப - ரை) பா இயல் - பாக்களாலே செய்யப்பட்ட, நல் பல வேத மாலை கொண்டு - நல்ல பல வேதங்களாகிய மாலைகளைக் கொண்டு, தேவர்கள் மா முனிவர் - தேவர்களும் பெரிய ருஷிகளும், இறைஞ்ச நின்ற - வணங்கும்படி (ஆச்ரயிக்கும்படி திருப்பாற்கடலில்) நின்ற எம்பெருமானுடைய, சேவடிமேல் - சிவந்த திருவடிகளினமேல், அணி - அலங்கரிக்கப்பட்ட, செம் பொன் - செம்பொன்போலே ஆசைப்படத்தகுந்த, துழாய் என்றே - துளஸியே வேண்டுமென்று, கோள் வினையாட்டியேன் - பலமுள்ள பாபங்களையுடையவளான என்னுடைய, கோதை - மாலைபோலிருக்கிற பெண்பிள்ளை, கூவும் - கூப்பிடுகிறாள்.

(கருத்து) பிரம்மா முதலான தேவர்களும் ஸநகர் முதலான பெரிய ரிஷிகளும் நல்ல பதங்கள் உள்ளவைகளாய் செய்யப்பட்டு மிகவும் மங்களமாய் அநேகமாயிருக்கிற வேதங்களாகிய மாலைகளைக்கொண்டு ஆச்ரயிக்கும்படி திருப்பாற்கடலில் இருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளுக்கு அலங்காரமான துளஸியே வேண்டுமென்று பலமான பாபங்கள் செய்த என்னுடைய பெண் கூப்பிடுகிறாள்.

குறிப்பு :—முதலடியில் பா - என்ற சொல்லுக்கு அநுஷ்டுப் முதலான சந்தஸ்ஸுகள் என்று பொருள். அநுஷ்டுப் என்பதற்கு ஒவ்வொரு அடியில் எட்டு எழுத்துக்கள் சேர்ந்த நாலு அடிகள் உள்ளது. காயத்ரீ என்பது எட்டெழுத்துச் சேர்ந்த மூன்றடிகளுள்ளது. இவைபோல் மற்றவைகளும். (3)

---

கோதில வண்புகழ் கொண்டு சமயிகள்
பேதங்கள் சொல்லிப் பிதற்றும் பிரான்பரன்
பாதங்கண் மேலணி பைம்பொற் றுழாயென்றே
யோதுமா லூழ்வினை யேன்றடந் தோளியே. (ச)

(ப - ரை) கோது இல - தோஷ மில்லாத, வண் புகழ் கொண்டு - மேன்மையான குணங்களைக் கொண்டு, சமயிகள் பேதங்கள் சொல்லி - தாங்கள் அநுபவிக்கும் குணங்களுக்கு மற்ற குணங்களைக் காட்டிலும் உயர்வைச் சொல்லி, பிதற்றும் - முன்னும் பின்னுமாய் ஸ்தோத்ரம் பண்ணப்படுகிற, பிரான் - உபகாரகனான, பரன்-பரவாஸுதேவனுடைய, பாதங்கள்மேல் அணி- திருவடிகள்மேல் அலங்காரமாக ஸமர்ப்பிக்கப்பட்ட, பைம் பொன் துழாய் என்றே - பசுத்த பொன்போலிருக்கிற துளஸியே வேண்டும் என்று, ஊழ் வினையேன் - அநாதிகாலமாகப் பாபஞ் செய்த என்னுடைய, தடம் தோளி - விசாலங்களான தோள் களையுடைய பெண், ஓதும - (வேதத்தைப் படிப்பதுபோல் அடிக் கடி) சொல்லுகிறாள்.

(கருத்து) நித்திய ஸூரிகளில் ஒவ்வொருவரும் எம்பெருமானுடைய மேன்மையான குணங்களில் ஒன்றை அநுபவித்து இதுவே மிகவும் உயர்ந்த குணம் என்று அதில ஈடுபட்டு தீர்மானம் செய்து மற்றக் குணங்களைக்காட்டிலும் அதின் உயர்வைக் கொண்டாடி ஸ்தோத்ரம் பண்ணுகிறார்கள். அந்த பரவாஸுதேவனுடைய திருவடிகளுக்கு அலங்காரமான அவன் திருமேனியில் பட்டதாலே பசும்பொன்போலிருக்கிற துளஸியே வேண்டுமென்று மிகுந்த பாபியான என்னுடைய பெண் சொல்லிக்கொண்டே இருக்கிறாள்.

குறிப்பு :—சமயி என்றால் ஒரு விஷயத்தில் தீர்மானம் செய்தவன். இங்கே எம்பெருமானுடைய குணங்களில், ஒருவர்

ஒரு குணத்தையே மிகவுமுயர்ந்தது என்றும், இன்னொருவர் இன்னொரு குணத்தையே உயர்ந்தது என்றும் இப்படியே எல்லாரும் சொல்லிக்கொண்டிருப்பதால், அவர்களைப் பாட்டு ‘சமயிகள்’ என்று சொல்லுகிறது. (4)

---

தோளிசேர் பின்னை பொருட்டெரு தேழ்தழீஇக்
கோளியார் கோவல னார்குடக் கூத்தனா
தாளிணை மேலணி தண்ணந் துழாயென்றே
நாளுநா ணைகின்ற தாலென்றன் மாதரே (ரு)

(ப - ரை) தோளி - மிகுந்த அழகுள்ள தோள்களையுடையவளாய், சேர் - தனக்கு ஒப்பான, பின்னை பொருட்டு - நப்பின்னைக்காக, ஏழ் எருது தழீஇ கோளியார் - ஏழு காளைமாட்டுக்களைத் தழுவிக்கொள்ளும் ஸ்வபாவமுடையவனாய், (கொல்லும் ஸ்வபாவமுள்ளவனாய்,) குடக் கூத்தனார் - குடக்கூத்து ஆடினவனாயிருந்த, கோவலனார்-கோபாலனுடைய, தாள் இணைமேல் அணி - திருவடிகள்மேலே அணியப்பட்ட, தண் அம் துழாய் என்றே - குளிர்ந்த அழகான துளஸியே வேண்டுமென்று, நாளும் நாள் - ஒவ்வொரு நாளும், என் மாதர் - என்னுடைய பெண், நைகின்றது - தளர்ச்சியை அடைகிறாள்.

(கருத்து) நப்பின்னைப் பிராட்டிக்காக ஏழு எருதுகளைக் கொன்ற, ஆச்ரிதர்களின் கண்களுக்குத் திருப்தி வரும்படி குடக்கூத்து ஆடின கோபாலன் திருவடிகளுக்கு அலங்காரமான துளஸியே வேண்டுமென்று ஒவ்வொரு நாளும் சொல்லிக்கொண்டு என் பெண் தளர்ச்சியை அடைகிறாள்.

குறிப்பு :—(1) ‘சேர்’ என்கிற சொல்லாலே கண்ணனுக்கு ஸமமான அழகுள்ளவள் என்று சொல்லி, ‘தோளி’ என்று நப்பின்னையைச் சொல்லுவதால் அவனைக் காட்டிலும் அவளுக்குத் தோள் அழகு அதிகமென்று காட்டப்படுகிறது.

(2) நப்பின்னையோடு சேர்வதற்கு ஸாதநமாய் இருந்ததால் எருதுகளைக் கொல்லுவதும் கண்ணனுக்கு இனியதாயிருந்தது

என்று காட்டுவதற்காக "தழீஇக் கோளியார்" என்று பாட்டு சொல்லுகிறது.

(இ - ம்) தழீஇக் கோளியார் என்கிற இடத்தில் தழீஇ - என்பதற்கு தழுவி என்று பொருள், வினையெச்சம். (5)

---

மாதர்மா மண்மடந் தைபொருட் டேனமாய்
யாதியங் காலத் தகலிடங் கீண்டவர்
பாதங்கண் மேலணி பைம்பொற் றுழாயென்றே
வோதுமா லெய்தின ளென்றன் மடந்தையே. (௬)

(ப - ரை) மாதர் மா மண் மடந்தை பொருட்டு - அழகும் நல்ல குணங்களும் நிறைந்த பூமிப்பிராட்டிக்காக, ஏனமாய் - வராக ரூபத்தை எடுத்துக்கொண்டு, ஆதி - இந்த கல்பததின் ஆதியான, அம் காலத்து - அழகான காலத்தில், அகல் இடம் கீண்டவர் - விஸ்தாரமான பூமியை பிரளய ஜலத்திலிருந்து எடுத்துக்கொண்டு வந்த எம்பெருமானுடைய, பாதங்கள்மேல் அணி - திருவடிகள் மேலே அணியப்பட்ட, பைம்பொன் துழாய் என்றே - பசுமையான பொன்போலே இருக்கிற துளஸியே வேண்டுமென்று, ஓதும் மால் - சொல்லிக்கொணடிருக்கும்படியான மோஹத்தை, என்தன் மடந்தை - என் பெண், எய்தினள் - அடைந்தாள்.

(கருத்து) நல்ல அழகும் ஸௌசீல்யம் முதலான நல்ல குணங்களும் நிறைந்த பூமிப்பிராட்டிக்காக இந்தக்கல்பத்தின் ஆதி காலத்தில் வராஹரூபத்தை எடுத்துக்கொண்டு பூமியை பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்த எம்பெருமானுடைய திருவடிகளின்மேல் அணியப்பட்ட பசும்பொன்போலிருக்கிற துளஸியே வேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கும்படியான மோஹத்தை என் பெண் அடைந்தாள்.

குறிப்பு :—'ஆதி அம் காலத்து' என்கிறவிடத்தில், அம் என்பதற்கு அழகான என்று பொருள். காலத்துக்கு அழகாவது - எம்பெருமான் அவதாரம் செய்வதற்குத் தகுதி. (6)

---

மடந்தையை வண்கம லத்திரு மாதினைத்
தடங்கொடார் மாரபினில் வைத்தவர் தாளின்மேல்
வடங்கொள்பூந் தண்ணந் துழாயமலாக் கேயிவள்
மடங்குமால் வாணுத லீரேன் மடக்கொம்பே. (எ)

(ப - ரை) வாள் நுதலீர் - பிரகாசமுள்ள நெற்றியையுடைய ஸ்திரீகளே! மடந்தையை - யௌவநத்தையுடைய, வண் கமலம் - அழகான தாமரைப் பூவிலிருக்கிற, திருமாதினை - பிராட்டியை, தடம் கொள் - விசாலமான, தார் மார்பில் - மாலையோடு கூடிய மார்பில், வைத்தவர் தாளின்மேல் - வைத்துக்கொண்டிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகள்மேல் இருக்கும், வடம் கொள் - வடத்தைக்கொண்டிருக்கிற (மாலையாகத் தொடுக்கப்பட்டிருக்கிற) பூம் - மலர்ந்த, தண் அம் துழாய் மலர்க்கே - குளிர்ந்த அழகான துளஸி புஷ்பத்துக்காகவே, என மட கொம்பு இவள் - மடப்பமுள்ள கொம்பு போல மெல்லியதான உடம்பையுடைய இந்தப் பெண், மடங்கும் - சுருண்டுவிழும்.

(கருத்து) ஸர்வலோகத்துக்கும் ஈசுவரியாய், அழகு, ஸௌகுமார்யம் முதலான அளவில்லாத குணங்களால் அலங்கரிக்கப்பட்ட பிராட்டியை, துளஸிமாலையையுடைய விசாலமான திருமார்பில் வைத்துக்கொண்டிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளின்மேலிருக்கிற வடமாய்த் தொடுக்கப்பட்ட மலர்ந்த குளிர்ந்த துளஸியையே வேண்டுமென்று இந்தப்பெண் ஆசைப்பட்டு அது கிடைக்காமையால் முடிந்தாள். (7)

---

கொம்புபோற் சீதை பொருட்டிலங் கைநக
ரம்பெரி யுய்த்தவர் தாளிணை மேலணி
வம்பவிழ் தண்ணந் துழாய்மலர்க் கேயிவ
ணம்புமால் நானிதற் கென்செய்கேன் நங்கைமீர். (அ)

(ப - ரை) கொம்புபோல் - கொம்புபோலிருக்கிற, சீதை பொருட்டு - ஸீதைக்காக, இலங்கை நகர் - இலங்காபட்டணத்தில் அம்பு எரி உய்த்தவர் - பாணங்களால் உண்டுபண்ணப்பட்ட நெருப்பைச் செலுத்தின சக்ரவர்த்தித் திருமகனுடைய, தாள் இணை மேல் அணி - இரண்டு திருவடிகள்மேல் அணியப்பட்ட,

வம்பு அவிழ் - வாஸனை வீசுகிற, தண் அம் துழாய் மலர்க்கே - குளிர்ந்த அழகான துளஸியே வேணுமென்று, நங்கைமீர் - நங்கைகளே! இவள் நம்பும - இந்தப் பெண் நம்புகிறாள், நான் இதற்கு எனசெய்வேன்.

(கருத்து) ஸீதைக்காக இலங்காபட்டணத்தில் அம்புகளால் நெருப்பை மூட்டிய சக்கிரவர்த்தி திருமகனுடைய திருவடிகளின் மேலிருக்கிற துளஸிப்பூவை, நங்கைகளே! இந்தப்பெண் ஆசைப் படுகிறாள். அவன் ஒரே பதநியுள்ளவன். கிருஷ்ணவதாரத்தில் போலில்லை. அவன் திருவடிகளிலிருக்கும் துளசியை ஆசைப் படுகிறவர்கள் உண்டோ? ஆசைப்பட்டால கிடைக்குமோ? இதற்கு நான் என்ன செய்வேன்.

குறிப்பு :—கோம்புபோல் சீதை — அழகினாலும் குணங்களா லும் லக்ஷ்மியைக்காட்டிலும் ஸீதை உயர்ந்தவள் என்று கருத்து: லக்ஷ்மியே ஸீதையாக வந்திருந்தபோதிலும் பாரூபத்தைக்காட்டி லும் அவதார ரூபத்தில் சில குணங்களால் உயர்வை நினைத்து இப்படிச் சொலலபபட்டது. அவதாரரூபததில்தான் காருண்யம் ஸௌசீல்யம் முதலான குணங்கள் நன்றாய் விளங்குகின்றன (8)

---

நங்கைமீர் நீருமோர் பெண்பெற்று நல்கினீ
ரெங்ஙனே சொல்லுகேன் யான்பெறற வேழையைச்
சங்கென்னுஞ் சக்கர மென்னுந் துழாயென்னு
மிங்ஙனே சொல்லு மிராப்பக லென்செய்கேன். (௯)

(ப - ரை) நங்கைமீர் - அழகு நிறைந்த ஸ்திரிகளே! நீரும் - நீங்களும், ஓர் பெண் பெற்று - ஒரு பெண்ணைப் பெற்று, நல்கி னீர் - பிரீதியுடன் வளர்க்கிறீர்கள், யான் பெற்ற ஏழையை - சபலையான என் பெண்ணைப்பற்றி, எங்ஙனே சொல்லுகேன் - எப்படிச் சொல்லுவேன், சங்கு என்னும் - சங்கு என்று சொல் லுகிறாள், சக்கிரம் என்னும் - சக்கிரமென்று சொல்லுகிறாள், துழாய் என்னும் - துளஸியென்று சொல்லுகிறாள், இராப்பகல், இங்ஙனே சொல்லும் - இப்படியே சொல்லிக்கொண்டு நிற் கிறாள், என் செய்கேன் - இதற்கு நான் என்ன செய்வேன்.

(கருத்து) நங்கைமீர்! நீங்களும் ஒரு பெண்ணைப் பெற்று பிரீதியுடன் வளர்க்கிறீர்கள்; நான் பெற்ற இந்த சபலையான பெண்ணைப்பற்றி எப்படிச் சொல்வேன், எம்பெருமானுடைய குணாநுபவத்தில் ஈடுபட்டவள்; இவள் மற்றப் பெண்ணைப் போலில்லை; சங்கு என்று சொல்ல ஆரம்பித்து மேலே சொல்லமுடியாமல் நிற்கிறாள், மறுபடியும் சக்கரம் என்று சொல்ல ஆரம்பித்து, மேலே சொல்லமுடியாமல் இளைப்பாறுகிறாள்; மறுபடியும் துளஸியென்று சொல்ல ஆரம்பித்து அதை முடிக்காமலிருக்கிறாள்; இப்படி இராத்திரியும் பகலும் சொல்லிக்கொண்டே இருக்கிறாள். நான் என்னசெய்வேன்.

குறிப்பு :—(1) மற்றப் பெண்களும் எம்பெருமானை ஆசைப்படுவார்கள். இப்பாடுபட்டவர்கள் அவர்களில் உண்டோ? என்று முதல் இரண்டு அடிகளுக்குக் கருத்து

(2) எம்பெருமான் திருவாழியையும் திருச்சங்கையும் ஏந்திக்கொண்டிருக்கிற அழகைக் காணவேண்டுமென்றும் பரரூபத்திலும் மத்ஸ்யம் முதலான அந்தந்த அவதாரங்களிலும் அந்தந்த வேலைகளைச் செய்யும்போதும் அந்தந்த திருவடிகளுக்கு அலங்காரமான திருத்துழாய் வேண்டுமென்றும் ஆசைப்பட்டு, அந்த ஆசைப்பட்டதை முழுவதும் சொல்லமுடியாமல் வருத்தப்படுகிறாள் என்று கடைசி இரண்டு அடிகளுக்கும் கருத்து.

(இ - ம) நல்கினீர் - நல்கு என்பது விரும்பி வளர்த்தலைச் சொல்லுகிறது. (9)

---

என்செய்கே னென்னுடைப் பேதையென் கோமள
மென்சொல்லு மென்வச மும்மல்லள் நங்கைமீர்
மின்செய்பூண் மார்பினன் கண்ணன் கழற்றுழாய்
பொன்செய்பூண் மென்முலைக் கென்று மெலியுமே (௧0)

(ப - ரை) நங்கைமீர்! என்னுடைய பேதை - என்னுடைய சிறு பெண், என் கோமளம் - என்னுடைய மிருதுவான பெண், என் சொல்லும் அல்லள் - நான் சொன்ன வார்த்தையைக் கேட்கிறவள் அல்லள்; என் வசமும் அல்லள், மின்செய் - பிரகாசத்தை வீசுகிற, பூண் மார்பினன் - நகைகளை மார்பிலுடைய, கண்ணன் கழல் துழாய் - கண்ணனுடைய திருவடிகளிலிருக்கிற துளஸி

யானது, பொன்செய் - பொன்னாலே செய்யப்பட்ட, பூண் மென் முலைக்கு என்று - நகைகளைத் தரித்திருக்கிற மிருதுவான ஸ்தனங்களுக்கு அலங்காரமாக இருக்கவேண்டுமென்று, மெலியும் - இளைத்துப்போகிறாள், என் செய்கேன் - நான் என்ன செய்வேன்.

(கருத்து) நங்கைமீர்! பிரகாசமுள்ள முத்துமாலை முதலான நகைகளைத் திருமார்பில் தரித்துக்கொண்டிருக்கிற கண்ணன் திருவடிகளின் துளஸியானது அவனுடன் சேர்வதற்காக நகைகளைப் போட்டுக்கொண்டிருக்கிற தன்னுடைய ஸ்தநங்களுக்கு அலங்காரமாக இருக்கவேண்டுமென்று ஆசைப்பட்டு அது கிடைக்காமையால் இந்தப்பெண் இளைத்துப்போய்க்கொண்டிருக்கிறாள். அவள் சிறு பெண்ணாகையால் இது கிடைக்கமுடியாதென்று அறியவில்லை. இந்த ஆசையை விட்டுவிடு என்றால் என் சொல்லைக் கேட்கிறதில்லை. கட்டாயப்படுத்தக்கூடாதோ என்றால், அவள் எனக்கு உட்பட்டவளல்ல. அவளை விட்டுவிடுவோமோ என்றால், அவள் மிருதுவான உடம்போடு விரஹதாபத்தைப் பொறுக்கமுடியாதவளாயிருந்து வருத்தப்படுவதைப் பார்த்து அவளை விட முடியவில்லை. நான் என்ன செய்வேன்?

---

மேலியுநோய் தீர்க்குநங் கண்ணன் கழல்கண்மேன்
மலிபுகழ் வண்குருகூர்ச்சட கோபன்சொ
லொலிபுக ழாயிரத் திப்பத்தும் வல்லவர்
மலிபுகழ் வானவர்க் காவர்நற் கோவையே. (கக)

(ப - ரை) மெலியும் நோய் - (உடம்பை) இளைக்கும்படி செய்யும் பிரிவாகிய வியாதியை, தீர்க்கும், நம் கண்ணன் கழல்கள் மேல் - நம்முடைய கண்ணனுடைய திருவடிகளின்மேல், மலி புகழ் - நிறைந்த கீர்த்தியையுடைய, வண் குருகூர் சடகோபன் சொல் - ஆழ்வாராலே சொல்லப்பட்ட, ஒலி புகழ் - கொண்டாடப்பட்ட குணங்களையுடைய, ஆயிரத்து - ஆயிரத்துக்குள், இ பத்தும் வல்லவர் - இந்தப் பத்துப்பாட்டுக்களைப் படிக்க சக்தியுள்ளவர்கள், மலி புகழ் - நிறைந்த கீர்த்தியையுடைய, வானவர்க்கு - நித்திய ஸூரிகளுக்கு, நல் கோவை யாவர் - நல்ல சேர்த்தியாவர்,

(கருத்து) தன்னைவிட்டுப் பிரிந்து வருத்தப்படுகிறவர்களுடைய வருத்தத்தைத் தீர்க்கும் கண்ணனுடைய திருவடிகளின் மேல் ஆழ்வாரால் சொல்லப்பட்ட ஆயிரத்துக்குள் இந்தப் பத்துப் பாட்டுக்களைப் படிக்கச் சக்தியுள்ளவர்கள் நித்திய ஸூரிகள் கூட்டத்திற்கு ஒரு அலங்காரமாக அவர்களுடன் சேர்ந்து அவர்களுக்குப் பிரீதிக்கு விஷயமாய் இருப்பார்கள்.

குறிப்பு:—(1) முதல் அடியாலே ஆழ்வாருடைய வருத்தத்தை எம்பெருமான் தீர்த்தான் என்று காட்டப்படுகிறது.

(2) இரண்டாவது அடியில், மலிபுகழ் - புகழாவது எம்பெருமானுக்குச் சேஷமாயிருப்பதிலேயே ருசியுள்ளவர் என்கிற கீர்த்தி. (11)

---

ஶைத்யாத் ஸௌரப்யஹ்ருத்யா ரஸவிரஸதயா
போஷணாதாபீரவ்யூஹாத் ஸ்துத்யாத் வ்ருஷஹநநாத்தி
த க்ஷாஸமுத்காரயோகாத் ஶ்ரீதஸ்து। லக்ஷ்ம்யா யோகஸ்ய யோமா
அபி ஸமுத்யபாத்ய ஸங்க்ஷீயாப்தா நைஸ்ஸங்ஸ்தாநக ஹோ
ம்யம் நிரவிஶத்ஜிதம் க்ருஷ்ணஹ்ருத்யம் ஶௌரி: ॥ ॥௧௫॥

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுக்கு அநேக போக்கிய வஸ்துக்கள் இருக்கின்றன என்று பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன:—(1) குளிர்ந்ததாயும், மிகுந்த நல்ல வாஸனையை உடையதாயும் காந்தியாலே அழகுள்ளதாயும், எம்பெருமான் திருமேனியில் பட்டதாலே மலர்ந்ததாயும், அழகாயும், தொடுக்கப்பட்டதாயும், புஷ்பங்களுள்ளதாயும் இப்படிப்பட்ட ஆசைப்படத் தகுந்த துளஸிமாலையை உடைத்தாயிருப்பது; (2) பிரளய ஜலத்தில் ஆலிலைமேல் பள்ளி கொண்டிருந்தது; (3) கோபிகளுடன் ராஸக்ரீடையைச் செய்தது; (4) திருப்பாற்கடலில் தேவர்களும் ருஷிகளும் ஆச்ரயிக்கும்படி யிருப்பது; (5) பரமபதத்தில் நித்திய ஸூரிகளால் ஸ்தோத்திரம் பண்ணப்படுவது; (6) நப்பின்னைக்காக ஏழு எருதுகளைக் கொன்றது; (7) பிரளய ஜலத்திலிருந்து பூமியை மேலே கொண்டுவந்தது; (8) திருப்பாற்கடலைக் கடைந்தபோது வெளியில் வந்த லக்ஷ்மியைத் திருமார்பில் வைத்துக்கொண்டது; (9) ஸீதைக்காக லங்கையைக் கொளுத்தினது; (10) சங்கம் சக்கிரம் இவைகளை வைத்துக்கொண்டிருப்பது.

---

# மூன்றாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் வேறு இடங்களிலும் வேறு காலங்களிலும் உள்ளவைகளை ஆசைப்பட்ட ஆழ்வாருடன் எம்பெருமான் சேர்ந்தான்: அவனுடைய பிரணயித்வம் என்கிற குணத்தை அநுபவித்து, அதினால் உண்டான ஸந்தோஷத்தால் அதை இதில் பேசுகிறார்.

(2) அவர் ஆசைப்பட்டது கிடைக்காமலிருக்க, அவர் எப்படி ஸந்தோஷப்படக்கூடும் என்பதற்கு மூன்றுவிதமாய் ஆசாரியர்கள் நிர்வாஹம் செய்திருக்கிறார்கள் :–(1) அம்புலிமாமனை ஆசைப்பட்ட குழந்தைக்குத் தேங்காயைக் கொடுத்து ஸந்தோஷப் படுத்துவதுபோல், கிடைக்கமுடியாததை ஆசைப்பட்ட ஆழ்வாருடன் எம்பெருமான் சேர்ந்து அவர் ஆசையை மறக்கும்படி செய்தான். இது எம்பாருடைய நிர்வாஹம். (2) ஒருவன் ஒன்றைக் கேட்கும்போது மற்றொருவன அதைக் கொடுப்பதாகச் சொன்னால், அது நிச்சயமாய்க் கிடைக்கும் என்று நம்பி ஸந்தோஷப்படுகிறான். அப்படியே எம்பெருமானும் ஆழ்வார் கேட்டதைக் கொடுக்கிறேன் என்று சொல்ல, ஆழ்வார் அது கிடைத்ததாகவே எண்ணி ஸந்தோஷப்பட்டார் என்று திருமலைநம்பி நிர்வாஹம். (3) ஆழ்வார் ஆசைப்பட்டதையெல்லாம் எம்பெருமான் கொடுத்தான். அதைக்கொண்டு ஆழ்வாரின் ஆசை தீர்ந்தது என்று பட்டர் நிர்வாஹம் செய்திருக்கிறார்.

(3) இந்தத் திருவாய்மொழியில் தம்முடைய உடம்பின் அவயவங்களை எம்பெருமான் சந்தனமாகவும் புஷ்பங்களாகவும் எண்ணி, தம்முடன் கலந்ததை அநுபவித்து, மிகவும் இப்படிச் செய்யும்படி பண்ணுகிற அவனுடைய ஸ்நேஹத்தைக் கொண்டாடுகிறார்—

( அறுசீராசிரிய விருத்தம்.)

கோவை வாயாள் பொருட்டேற்றி னெருத்த மிறுத்தாய் மதிளிலங் [கைக்
கோவை வீயச் சிலைகுனித்தாய் குலநல் யானை மருப்பொசித்தாய்
பூவை வீயா நீர்தூவிப் போதால் வணங்கே னேலுநின்
பூவை வீயா மேனிக்குப் பூசுஞ் சாந்தென் னெஞ்சமே. (க)

(ப - ரை) கோவை வாயாள் பொருட்டு - கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தையுடைய நப்பின்னைக்காக, ஏற்றின் எருத்தம் - ருஷபங்களுடைய பிடரை, இறுத்தாய் - முறித்தவனே! மதிள் இலங்கை கோவை - மதில்களை உடைய லங்கையின் ராஜாவான ராவணன், வீய - நாசம் அடையும்படி (ஸீதையின் பொருட்டு) சிலை குனித்தாய் - வில்லை வளைத்தவனே! குலம் நல் யானை மருப்பு ஒசித்தாய் - (வஸுதேவர் முதலான ஆச்ரிதர்களுக்காக,) நல்ல ஜாதியில் பிறந்து நல்ல லக்ஷணங்களையுடைய (குவலயா பீடமென்கிற) யானையின் தந்தத்தை ஒடித்தவனே! பூவை வீயா நீர் தூவி - (அந்தந்த காலங்களில் உனக்கு உண்டான சிரமம் போகும்படி) பூவைவிட்டுப் பிரியாத ஜலத்தை திருவடிகளில் ஸமர்ப்பித்து, வணங்கேனேலும் - நான வணங்காமலிருந்தபோதிலும், என் நெஞ்சமே - என மனதானது, பூவை வீ ஆ மேனிக்கு - காசாம்பூவைப்போன்ற உன் திருமேனிக்கு, பூசும் சாந்து - பூசத்தகுந்த சந்தனம்.

(கருத்து) ஆச்ரிதையான நப்பின்னைக்காக மிகுந்த பலமுள்ள அஸுரர்களான ஏழு எருதுகள் பிடரை முறித்தவனே! ஸீதைக்காக இலங்கையின ராஜாவான ராவணன் பிள்ளைகள் பந்துக்களுடன்சாகும்படி வில்லை வளைததவனே! வஸுதேவர் முதலானவர்களுக்காக குவலயாபீடம் என்கிற யானையின் தந்தத்தை முறித்து கமஸனைக் கொனறவனே! இப்படி ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் செய்ததால் அந்தந்த காலங்களில் நீ பட்ட சிரமம் போவதற்காக உன் திருவடிகளில் புஷ்பங்களோடு சேர்ந்த தீர்த்தத்தை நான் ஸமர்ப்பிக்கவிலலை. அப்படியிருந்தபோதிலும் இப்போது என் மனதைக் காசாம்பூப்போன்ற உன் திருமேனியில் பூசத்தகுந்த சந்தனமாக எண்ணுகிறாய். இஃது என்ன ஸ்நேஹம்!

குறிப்பு:—பூவை வீயாமேனிக்கு - காசாம்பூ உதாரணத்தால் திருமேனி குளிர்ந்ததாயும் நல்ல வாஸனையுள்ளதாயும் மிருதுவாயும் இருக்கிறது என்று கருத்து.

(இ - ம்) இரண்டாம் அடியில், கோவை - இரண்டாம் வேற்றுமை உருபு முதல் வேற்றுமையின் பொருளில் வந்திருக்கிறது. ஒசித்தாய், இறுத்தாய், குனித்தாய் இவைகள் வினையால் அணையும் பெயர்களின் விளிவேற்றுமை. (1)

பூசும் சாந்தென் னெஞ்சமே புனையுங் கண்ணி யெனதுடைய
வாச கஞ்செய் மாலையே வான்பட் டாடையு மஃதே
தேச மான வணிகலனு மென்கை கூப்புச் செய்கையே
யீசன் ஞால முண்டுமிழ்ந்த வெந்தை யேக மூர்த்திக்கே. (உ)

(ப - ரை) ஞாலம் - உலகங்களை, உண்டு உமிழ்ந்த, ஈசன் - ஸர்வேசுவரனாய், எந்தை - என் ஸ்வாமியாய், ஏக மூர்த்திக்கு - ஒரேவிதமாயிருக்கும் திருமேனியையுடையவனாய் இருக்கிற எம்பெருமானுக்கு, என் நெஞ்சமே - என்னுடைய மனதின் வியாபாரமே, பூசும் சாந்து - பூசததகுந்த சந்தனம், எனதுடைய-என்னுடைய, வாசகம் செய் மாலையே - வாக்கினால் செய்யப்பட்ட மாலைபோலிருக்கும் பிரபந்தமே, புனையும் கண்ணி - சாத்தத் தகுந்த திருமாலை, அஃதே - அந்தப் பிரபந்தமே, வான் பட்டு ஆடையும் - பெரிதான (சிலாக்கியமான) பீதாம்பரமும், என் கை கூப்பு செய்கையே-என்னுடைய கைகூப்புதலாகிய செய்கையே, தேசமான - காந்தியுள்ள, அணிகலனும் - அணியப்பட்ட நகைகளும்.

(கருத்து) எல்லா உலகங்களையும் உண்டுபண்ணி அழிக்கிறவனாய் இதினால் ஸர்வேசுவரனாகக் காட்டப்பட்டவனாய் எப்போதும் ஒரேவிதமாயிருக்கும் திருமேனியையுடையவனாய் பரமபதத்திலிருக்கிற, ஸர்வேசுவரன் என்னுடைய மனதின் வியாபாரத்தைச் சந்தநமாகவும், நான் செய்யும் பிரபந்தத்தைப் பூமாலையாகவும் உயர்ந்த பீதாம்பரமாகவும், நான் செய்யும் அஞ்சலியை நகைகளாகவும் செய்துகொண்டு இருக்கிறான். அவனுக்கு என்னிடத்தில் என்ன பிரீதி! (2)

---

ஏக மூர்த்தி யிருமூர்த்தி மூன்று மூர்த்தி பலமூர்த்தி
யாகி யைந்து பூதமா யிரண்டு சுடரா யுருவாகி
நாக மேறி நடுக்கடலுட் டுயின்ற நாரா யணனேயுன்
னாக முற்று மகத்தடக்கி யாவி யல்லல் மாய்த்ததே. (௩)

(ப - ரை) ஏகமூர்த்தி - (பரமபதததில் எப்போதும்) ஒரே விதமான திருமேனியை உடையவனாயிருந்து, இரு மூர்த்தி - பிர

கிருதி மஹத் என்கிற இரண்டு ரூபமாய், மூன்று மூர்த்தி-மூன்று விதங்களான அஹங்காரங்களின ரூபமாய், பல மூர்த்தி ஆகி - பதினொரு இந்திரியங்களின் ரூபமாய், ஐந்து பூதமாய் - ஐந்து பூதங்களின ரூபமாய், இரண்டு சுடராய் - சந்திரன் ஸூர்யன் ஆகிய இரண்டு தேஜோரூபமாய், அருவாகி - ரூபமில்லாத ஆத்மாக்களின் ரூபமாகி, நாகம் ஏறி - ஆதிசேஷன்மேலே ஏறிக்கொண்டு, நடு கடலுள் துயின்ற - நடு ஸமுத்திரத்தில் தூங்குகிற, நாராயணனே! உன் ஆகம் முற்றும் - உன் திருமேனி முழுவதையும், (அதற்கு வேண்டிய சந்தநம் முதலான எல்லாவற்றையும்,) அகத்து அடக்கி - எனக்குள்ளே இருப்பதாக நீ எண்ணுவதை நான் நினைத்து, ஆவி - என ஆத்மா, அல்லல் மாய்த்தது - துக்கத்தைப் போக்கிற்று.

(கருத்து) பரமபதத்தில் அப்ராகிருதமாய் எப்போதும் ஒரேவிதமாயிருக்கும் திருமேனியையுடைய நாராயணனே! நீ பிரகிருதியில் ஒரு க்ஷோபத்தை உண்டுபண்ணி, (அசையும்படி பண்ணி) அதை மஹத், மூனறு அஹங்காரங்கள், பதினொரு இந்திரியங்கள், ஐந்து பூதங்கள், சந்திர ஸூரியர்கள் இப்படியாகும் படி அவைகளையும் அவைகளுக்குள்ளிருக்கும் ஆத்மாக்களையும் உண்டுபண்ணி அவைகளை ரக்ஷிப்பதற்காக அவைகளுக்குள் ஆத்மாவாக இருந்து ஆதிசேஷன்மேல் நடு ஸமுத்திரத்தில் தூங்குகிறவனே! உன் திருமேனிக்கு வேண்டிய சந்தனம் முதலான எல்லா போக்கியவஸ்துக்களும் என்னுள் இருப்பதாக எண்ணுகிறாய். இந்த உன்னுடைய மஹா குணத்தை நினைக்கவே என்னுடைய எல்லா துக்கங்களும் போய்விட்டன.

குறிப்பு:—(1) பாட்டில் "அருவாகி" என்பதற்கு ரூபமில்லாத ஆத்மாக்களை உண்டுபண்ணி, அதாவது அவர்களுடைய ஜ்ஞாநம் என்கிற குணம் விகாஸம் அடையும்படிசெய்து, என்று பொருள். பிரளயகாலத்தில் அது மிகவும் சுருங்கியிருந்தது. ஆத்மாக்கள் நித்தியமாகையால், அவைகளின் ஸ்வரூபம் உண்டு பண்ணப்படுவதில்லை. (3)

மாய்த்த லெண்ணி வாய்முலை தந்த மாயப் பேயுயிர
மாய்த்த வாய மாயவ னேவா மநனே மாதவா
பூத்தண் மாலை கொண்டுன்னைப் போதால் வணங்கே னேலுநின்
பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையுங் கண்ணி யெனதுயிரே. (ச)

*(ப - ரை) மாய்த்தல் எண்ணி - (எல்லாரையும்) கொல்லு வதை எண்ணிக்கொண்டு, வாய் முலை தந்த - வாயில் ஸ்தநத் தைக்கொடுத்த, மாயப்பேய் - மாயைகளுள்ள பூதனையாகிய பிசா சினுடைய, உயிர் மாய்த்த-உயிரை நாசம் செய்த, ஆய மாயவனே- கோபாலனுன ஆச்சரியனே! வாமனனே! மாதவா - மாதவனே! போதால் - சொன்ன அந்தந்த காலங்களிலே, - தண பூ மாலை கொண்டு - குளிர்ந்த பூமாலைகளைக்கொண்டு, உன்னை வணங்கே னேலும் - நான உன்னை வணங்காவிட்டாலும், எனது உயிரே - என் ஸ்வரூபமே, நின் - உன்னுடைய, தண பூ மாலை - குளிர்ந்த பூமாலைகளையுடைய, நெடு முடிக்கு - நீணட கிரீடததுக்கு, புனை யும் கண்ணி - சாத்தத் தகுநத பூமாலை.*

*(கருத்து) எல்லாரையும் கொல்ல நினைத்துவந்த பூதனை என்கிற பிசாசு உன் வாயில ஸ்தநத்தைக் கொடுக்க, அவளைக் கொன்ற கோபாலனே! இந்திரனுக்காக வாமந ரூபத்துடன் மஹாபலியிடம் போய் மூன்று அடி மண் கேட்டவனே! இப்படி ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் செய்து அவர்கள் வேலையை முடித்துவைக்கிறவனே! மாதவா! இந்த ஸமயங்களில் உன் சிர மம் தீரும்படி குளிர்ந்த பூமாலைகளைக்கொண்டு உன்னை நான் வணங்கவில்லை. அப்படியிருந்தபோதிலும் இப்போது என் ஸ்வ ரூபத்தை உன் கிரீடத்துக்குச் சாத்தத் தகுந்த பூமாலையாக நீ எண்ணுகிறுய்.*

*குறிப்பு :—"மாய்த்தல்" என்கிற இடத்தில் இன்னாரை என்று சொல்லாததால், தலைவனுன இவனைக்கொன்றால் எல்லாம் அழிந்துவிடும் என்று பூதனையின் எண்ணம்.*

(இ - ம்) போதால் - ஆல் மூன்றும் வேற்றுமை ஏழாம் வேற்றுமைப்பொருளில் வந்திருக்கிறது. உருபுமயக்கம். (4)

கண்ணி யெனதுயிர் காதல் கனகச் சோதி முடிமுதலா
வெண்ணில் பல்க லன்களு மேலு மாடையு மஃதே
நண்ணி மூவு லகுந விற்றுங் கீர்த்தியு மஃதே
கண்ண னெம்பி ரானெம்மான் காலசக் கரத்தா னுக்கே. (௫)

(ப - ரை) கண்ணன் - கிருஷ்ணனும், எம் பிரான் - எனக்கு உபகாரம் செய்கிறவனும், எம்மான் - என் ஸ்வாமியாய், கால சக்கரத்தானுக்கு - (சத்துருக்களுக்கு) மிருத்யுபோலிருக்கிற சக்கிரத்தை உடையவனும் இருக்கிற எம்பிரானுக்கு, எனது உயிர்- என் ஸ்வரூபம், புனையும் கண்ணி-(சாததத் தகுந்த துளஸி) மாலை, காதல் - என்னுடைய பக்தியானது, கனக சோதி - பொன்னால் செய்யப்பட்டு பிரகாசமுள்ள, முடி முதல் ஆ - கிரீடம் முதலான, எண்ணில் - கணக்கில்லாத, பல் கலன்களும் - பல நகைகளும், ஏலும - அவனுக்குத் தகுந்த, ஆடையும் அஃதே - பீதாம்பரமும் அதுவே, அஃதே-அந்த பக்தியே, மூவுலகும் - மூவுலகத்தாரும், நண்ணி - கிட்டவந்து, நவிற்றும் - சொல்லுமபடியான, கீர்த்தியும்.

(கருத்து) பிரதிகூலர்களுக்கு நாசத்தைச் செய்யும் திருவாழியை உடையவனும், எனக்கு உபகாரம் செய்கிறவனும், எனக்கு ஸ்வாமியாயிருக்கிற எம்பெருமானுக்கு என்னுடைய ஸ்வரூபம் திருமுடியிலும், திருமார்பிலும், திருத்தோளிலும் சாத்தத்தகுந்த துளஸிமாலைகள். என் பக்தியே கிரீடம் முதலான கணக்கில்லாத பல நகைகளும், பீதாம்பரமும், மூன்று உலகத்தார்களும் கிட்ட வந்து சொல்லும்படியான கீர்த்தியும்.

(இ - ம்) முதலா - முதலான ; கடைக்குறை. (5)

---

அவ-எம்பெருமானைப்பார்த்து, "நானும் என்னைச் சேர்ந்தவைகளும் உனக்கு இனியவைகளாயிருப்பதுபோல், நீயும் உன்னைச் சேர்ந்தவைகளும் எனக்கு இனியவைகளாயிருக்கின்றன." என்று இதில் அருளிச்செய்கிறார் :—

காலசக்க ரத்தொடு வெண் சங்கங் கையேந் தினாய்
ஞால முற்று முண்டுமிழ்ந்த நாரா யணனே யென்றென்
றோலமிட்டு நானழைத்தா லொன்றும் வாரா யாகிலுங்
கோல மாமென் சென்னிக்குன் கமல மன்ன குரைகழலே. (௬)

(ப - ரை) கால சக்கரத்தோடு - சத்துருக்களுக்கு மிருத்யு போலிருக்கிற சக்கிரத்துடன், வெண் சங்கம் - வெளுப்பான சங்கையும், கை ஏந்தினாய்-திருக்கைகளில் ஏந்தினவனே, ஞாலம் முற்றும் - உலகம் முழுவதையும், உண்டு உமிழ்ந்த - சாப்பிட்டு அதை வெளிப்படுத்தின, நாராயணனே! என்று என்று, ஓலமிட்டு - கூப்பிட்டு, நான் அழைத்தால், ஒன்றும் வாராயாகிலும் - கொஞ்சமும் வராமல்போனபோதிலும், கமலம் அன்ன உன் குரை கழல் - தாமரைப்பூவைப்போன்றவைகளும் நகையினால் சப்திக்கிறவைகளும் ஆகிய உன் திருவடிகள், என் சென்னிக்கு - என் தலைக்கு, கோலமாம் - அலங்காரமாகும்.

(கருத்து) ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம்பண்ணுவதை ஸ்வபாவமாகவுடைய சக்கிரத்தையும் சங்கையும் திருக்கைகளில் ஏந்தினவனே! உலகம் முழுவதையும் பிரளயகாலத்தில் உன் வயிற்றில் வைத்துக்கொண்டிருந்து அதை ஸிருஷ்டி காலத்தில் வெளிப்படுத்தும்படியான காருண்யம் ஸௌஹார்த்தம் ஸௌசீல்யம் முதலான குணங்களையுடைய நாராயணனே! என்று சொல்லி நான் முன்னால் கூப்பிட்டபோது, இப்போது என்னோடு சேர்ந்திருக்கிற நீ கொஞ்சங்கூட வராமலிருந்தபோதிலும், உன்னிடத்தில் இருந்த என் ஆசைக்குக் குறைவில்லை. உன்னுடைய திருவடிகளை என் தலைக்கு அலங்காரமாகவே எண்ணிக்கொண்டிருந்தேன்.

இந்தப் பாட்டுக்கு வேறு விதமாயும் அர்த்தம் சொல்லலாம். அதாவது :—ஒன்றும் வாராயாகிலும் - கொஞ்சம்கூட வராதிருக்க நினைத்தாயாகிலும், நான் இப்படி அழைத்தாலும் வராதிருக்கும்படி என்னை விட்டுப் பிரிய நினைத்தாயாகிலும். (மற்றவை முன்போல்.) நீ என்னை விட்டுப் பிரிய நினைத்தாலும் உன் திருவடிகள் என் தலையைவிட்டுப் பிரியாது. எல்லாம் செய்ய சக்தியுள்ள உன்னாலும் விடமுடியாதபடி என்னோடு சேர்ந்தாய் என்று கருத்து.

(இ - ம்) ஏந்தினாய் - வினையால் அணையும் பெயரின் விளி வேற்றுமை. (6)

குரைக ழல்க ணீட்டிமண் கொண்ட கோல வாமனா
குரைக ழல்கை கூப்புவார்கள் கூட நின்ற மாயனே
விரைகொள் பூவு நீருங்கொண் டேத்த மாட்டே னேலுமுன்
னுரைகொள் சோதித திருவுருவ மென்ன தாவி மேலதே. (எ)

(ப - ரை) குரை கழல்கள் - நகையினால் சப்திக்கிற திருவடிகளை, நீட்டி - மேலே போகும்படி நீட்டி, மண் கொண்ட - பூமியை (மஹாபலியினிடமிருந்து) எடுத்துக்கொண்ட, கோல வாமனா - அழகான வாமனனே! கை கூப்புவார்கள் - அஞ்ஜலிமாத்திரத்தைச் செய்கிறவர்கள், குரை கழல் கூட நின்ற - நகையினால் சப்திக்கிற உன திருவடிகளை அடையும்படி இருக்கிற. மாயனே - ஆச்சரியமானவனே! விரை கொள் - வாஸனையை உடைய, பூவும் நீரும் கொண்டு - பூவையும் தீர்த்தத்தையும் கொண்டு, ஏத்தமாட்டேனேலும் - ஸ்தோத்திரம் பண்ண நான் சக்தியில்லாதவனாயிருந்த போதிலும், உரை கொள் - சொல்லுதலை ஜயித்த, (வாக்கினால் சொல்லமுடியாத) சோதி உன் திரு உருவம் - பிரகாசிக்கிற உன்னுடைய திருமேனி, என்னது ஆவி மேலதே - என் ஸ்வரூபத்தின மேலே நிற்கிறது. (என் ஸ்வரூபத்தாலே தாங்கப்படுகிறது.)

(கருத்து) ஆச்ரிதனான இந்திரனுக்காக மஹாபலியினிடம் யாசித்து, உன்னுடைய திருவடிகளை மேலே போகும்படி நீட்டி, மூன்று உலகங்களையும் எடுத்துக்கொண்ட அழகுள்ள வாமனனே! இதினால் ஆச்சரியமான வேலைகளைச் செய்தவனே! பக்தியுடன் ஓர் அஞ்ஜலிமாத்திரம் செய்கிறவர்களையும் உன் திருவடிகளை அடையும்படி செய்கிற ஆச்சரியமானவனே! மிகவும் குளிர்ந்த நல்ல வாஸனையுள்ள புஷ்பங்களையும் தீர்த்தத்தையும் உன் திருவடிகளில் ஸமர்ப்பித்து, உனக்கு என்னிடத்தில் ஆசையுண்டாகும்படி உன்னை ஸ்தோத்திரம் பண்ண எனக்குச் சக்தியில்லை. அப்படியிருந்தபோதிலும், மனதாலும் வாக்காலும் எட்டமுடியாத பிரகாசமுள்ள உன் திருமேனியை என் ஸ்வரூபம் தாங்குவதாயும் அது உனக்கு போக்கியமாயிருப்பதாயும் பிரீதியினாலே நீ எண்ணுகிறாய். (7)

என்ன தாவி மேலையா யேர்கோ ளேழு லகமுந்
துன்னி முற்று மாகிநின்ற சோதி ஞான மூர்த்தியா
யுன்ன தென்ன தாவியு மென்ன துன்ன தாவியு
மின்ன வண்ண மேநின்றா யென்று ரைக்க வல்லேனே. (அ)

(ப - ரை) ஏர் கொள் - அழகைக்கொண்ட, ஏழ் உலகும் - ஏழு உலகங்களையும், துன்னி - நிறையும்படி வியாபித்து, முற்றும் ஆகி நின்ற - அவைகள் எல்லாமாகி நின்ற, சோதி ஞான மூர்த்தியாய் - ஸ்வயம்பிரகாசமான ஜ்ஞாந ஸ்வரூபனாய், என்னது ஆவி மேலையாய் - என்னுடைய ஸ்வரூபத்தாலே தூக்கப்பட்டவனே! என்னது ஆவியும் - என்னுடைய ஸ்வரூபமும், உன்னது - உன்னுடையது, உன்னது ஆவியும் என்னது - உன்னுடைய ஸ்வரூபமும் என்னுடையது, இன்ன வண்ணமே நின்றாய் என்று - இன்ன விதமாய் என்னுடன் சேர்ந்திருக்கிறாய் என்று, உரைக்க வல்லேனே - சொல்ல சக்தியுள்ளவனோ?

(கருத்து) ஏழு உலகங்களை அவைகளுக்குள்ளேயிருந்து நியமநம் பண்ணிக்கொண்டு, வியாபித்து இருக்கிறவனே! ஸ்வயம்பிரகாசமான ஸ்வரூபத்தையுடையவனே! நீ ஆசைப்படுவது எல்லாம் கிடைத்திருந்தபோதிலும் என்னை ஆசைப்படத்தகுந்த வஸ்துவாக எண்ணி, நானில்லாவிட்டால் உன ஸ்வரூபம் தரிக்க மாட்டாதென்று எண்ணுகிறவனே! உன்னுடைய ஸ்வரூபம் நானிட்ட வழக்காயும், என ஸ்வரூபம் நீயிட்ட வழக்காயும் இருக்கும்படி என்னுடன் சேர்ந்திருக்கிறாய். (இப்படிச் சொல்லியும், திருப்தி வராமையாலே மேல் சொல்கிறார்) இன்னவிதமாய் என்னுடன் சேர்ந்திருக்கிறாய் என்று எவ்வளவு சொன்னாலும் போதாது. பூர்ணமாய்ச் சொல்ல என்றால் முடியுமோ?

குறிப்பு:—ஏர்கோள் - எம்பெருமான் உலகங்களுக்கு ஆத்மாவாயும் அவைகள் அவனுக்கு உடம்பாயுமிருப்பதாலும், ஆத்மா ஸந்தோஷப்பட்டால் உடம்புக்கு அழகு உண்டாகிறபடியாலும் ஆழ்வாருடைய சேர்க்கையாலே எம்பெருமானுக்கு ஸந்தோஷமுண்டாயிருக்கிறபடியால், உலகங்களுக்கும் ஓர் அழகு உண்டாயிருக்கிறது என்று கருத்து.

(இ - ம்) வல்லேனே - ஏகாரத்திற்கு எதிர் மறைப்பொருள். வல்லேனில்லையென்று கருத்து. மேலையாய், மூர்த்தியாய் - இவைகள் மேலையான் மூர்த்தியான் என்பனவைகளின விளிவேற்றுமை.

---

உரைக்க வல்லே னல்லேனுன் னுலப்பில் கீர்த்தி வெள்ளத்தின்
கரைக்க ணென்று செல்வனுன் காதன் மைய லேறினேன்
புரைப்பி லாத பரம்பரனே பொய்யி லாத பரஞ்சுடரே
யிரைத்து நல்ல மேன்மக்க ளேத்த யானு மேத்தினேன். (கூ)

(ப - ரை) உரைக்க - (உன்னுடைய கீர்த்தியைச்) சொல்லுவதற்கு, வல்லேன அல்லேன் - நான் சக்தியுள்ளவன் அல்லேன், உலப்பு இல் - எல்லையில்லாத, உன் கீர்த்தி வெள்ளத்தின் - உன் கீர்த்தியாகிய ஆற்றின், கரைக்கண் - கரையிலே, நான் என்று செல்வேன் - நான் எப்போது போக சக்தியுள்ளவன் ஆவேன், (ஒருநாளும் போகமுடியாது.) காதல் மையல் ஏறினேன் - ஆசையாலே மோஹத்தை அடைந்தேன, புரைப்பு இலாத - பேதமில்லாத, (என்னிடத்தில் பேதம் பண்ணுமல் உள்ளபடி எனக்குத் தோனறின) பரம்பரனே - உயர்ந்தவர்களுக்கும் உயர்ந்தவனே! பொய் இலாத - உண்மையான பிரீதியுள்ளவனே! பரம் சுடரே - பரம் ஜ்யோதிஸ்ஸு என்று சொல்லப்பட்டவனே! நல்ல மேன் மக்கள் - உயர்ந்த நித்தியஸுரிகள், இரைதது ஏத்த - இரைந்து (உயர்ந்த குரலோடு) ஸ்தோத்திரம் பண்ணவே, யானும் ஏத்தினேன் - நானும் ஸ்தோத்திரம் பண்ணினேன்.

(கருத்து) உன்னுடைய கீர்த்தியைச் சொல்லுவதற்கு எனக்குச் சக்தியில்லை, எதைச் சொல்லமுடியுமோ, அதைச் சொல் என்றால், என்னுடன் சேர்ந்திருக்கிற உன் கீர்த்தியானது அளவில்லாத ஒரு ஆறுபோல் பெருகிக்கொண்டிருக்கிறது. அதின் கரையின் ஸமீபத்தில்கூட ஒருபோதும் என்னால் போகமுடியாது. ஆனால் ஏன சொல்லுகிறாய் என்றால், என் ஆசையின் மிகுதியால் இது செய்யமுடியும், இது செய்யமுடியமாட்டாது என்று அறியமுடியாதபடி மோஹம் அடைந்திருக்கிறேன். எனக்கு உன்னை உள்ளபடி காட்டின உயர்ந்தவர்களுக்கு எல்லாம் உயர்ந்தவனே! ஸ்வயம்பிரயோஜநமாக உண்மையான பிரீதியை என்னி

டத்தில் பண்ணுகிறவனே! என்னுடன் சேருவதையே அளவில்லாத தேஜஸ்ஸாக உடையவனே! நித்தியஸூரிகளும் மிகுந்த பக்தியுள்ளவர்களாய், உன்னை உள்ளபடி ஸ்தோத்திரம் பண்ண முடியாதென்று அறியாமல் மோஹங்கொண்டு ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். நானும் அப்படியே செய்கிறேன்.

குறிப்பு :—(1) 'பொய்யிலாத' என்பதற்கு, எம்பெருமானுக்கு ஆழ்வாரிடத்தில் பிரீதி குறைவாயிருந்து அதை அதிகமாகக் காண்பித்தவனில்லை. அவனுக்கே அது பூர்ணமாயிருக்கிறது. ஏனெனறால்; அதையே ஸ்வயம்பிரயோஜநமாக எண்ணிக்கொண்டிருக்கிறான் என்று கருத்து

(இ - ம்) கரைக்கண் - கண்-ஏழாம் வேற்றுமை உருபு ; கரையில் என்று பொருள். (9)

---

யானு மேத்தி யேழுலகு முற்று மேத்திப் பின்னையுந்
தானு மேத்தி லுந்தன்னை யேத்த வேத்த வெங்கெய்துந்
தேனும் பாலும் கன்னலு மமுது மாகித் தித்திப்ப
யானு மெம்பி ரானையே யேத்தி னேன்யா னுய்வானே. (௧0)

(ப - ரை) தன்னை - (அளவிலலாத) தன்னை, யானும் ஏத்தி - நானும் ஸ்தோத்திரம் பண்ணி, ஏழு உலகும் முற்றும் ஏத்தி - அறிந்தவன் அறியாதவன என்கிற பிரிவில்லாமல் ஏழு உலகங்களிலும் உள்ளவர்கள் ஸ்தோத்திரம் பண்ணி, பின்னையும்-மேலும், தானும் - (எல்லாம் அறிந்த) தானும், (எம்பெருமானும்) ஏத்திலும் - ஸ்தோத்திரம் பண்ணினாலும், ஏத்த ஏத்த - தன்னை எப்போதும் ஸ்தோத்திரம் பண்ண, அது எங்கு எய்தும் - எந்த குண விஷயத்தில் முடிவை அடையும், தேனும பாலும், கன்னலும் - வெல்லமும், அமுதமும், ஆகி தித்திப்ப-இவைகளைப்போல் இனியவைகளாய் அவனுடைய குணங்கள் இருக்கவே, யானும் - நானும், எம்பிரானை - என் ஸ்வாமியை, யான் உய்வான் - நான் பிழைத்திருப்பதற்காக, ஏத்தினேன் - ஸ்தோத்திரம் பண்ணினேன்.

(கருத்து) இப்போது உமக்கு ஸ்தோத்திரம் பண்ண சக்தி இல்லாவிட்டாலும் அதை ஸம்பாதித்துக்கொண்டு ஸ்தோத்திரம் பண்ணலாமேயென்றால், நானும் ஏழு உலகங்களிலுள்ள அறிந்தவர்களும் அறியாதவர்களும் இயற்கையாய் எல்லாம் அறிந்த எம்பெருமானும் எல்லாரும் சேர்ந்து எப்போதும் ஸ்தோத்திரம் பண்ணினாலும் ஒரு குணத்தையாவது முடியச் சொல்லக் கூடுமோ? அவன் குணங்கள் தேனும் பாலும் வெல்லமும் அமுதமும்போல் இனியவைகளாயிருக்கிறபடியால் அவைகளை ஸ்தோத்திரம் பண்ணுகிறேன். இனியதாயிருந்தாலும் முடியாதது ஒன்றைச் செய்ய ஆரம்பிப்பார்களோ என்றால், ஸ்தோத்ரம் பண்ணாவிட்டால் நான் உயிரோடு இருக்க முடியாது. பிழைத்திருப்பதற்காக ஸ்தோத்திரம் பண்ணுகிறேன்.

(இ - ம்) உய்வான - உய்ய; வினையெச்சம்  (10)

---

உய்வு பாய மற்றின்மை தேறிக் கண்ணனொண் கழல்கள்மேற்
செய்ய தாம ரைப்பழனத் தென்னன் குருகூர்ச் சடகோபன்
பொய்யில் பாட லாயிரத்து ளிவையும் பத்தும் வல்லார்கள்
வையம் மன்னி வீற்றிருந்து விண்ணு மாள்வா மண்ணூடே. (கக)

(ப - ரை) உய்வு உபாயம் - பிழைத்திருப்பதற்கு உபாயம், மற்று இன்மை - (ஸ்தோத்திரம் பண்ணுவதைக் காட்டிலும்) வேறு இல்லாமையை, தேறி - தெளிந்து, கண்ணன் கழல்கள் மேல - கண்ணனுடைய திருவடிகளின்மேல், செய்ய தாமரை பழனம் - செந்தாமரைப் பூக்கள் உள்ள வயல்களையுடைய, தென்னன் குருகூர் சடகோபன - தெற்கு தேசத்திலிருக்கிற குருகூருக்குத் தலைவரான ஆழ்வாருடைய, பொய் இல் - பொய் கலப்பில்லாத, (நடந்ததை நடந்தபடி சொல்லுகிற) பாடல் ஆயிரத்துள் - ஆயிரம் பாட்டுக்களுக்குள், இவையும் பத்தும வல்லார்கள்- இந்தப் பத்துப் பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள், வையம் மன்னி - இந்த பூமியில் நிலையாய், வீற்றிருந்து - உயர்ந்தவராயிருந்து, மண்ணோடே - இந்த லீலா விபூதியோடு, விண்ணும் - நித்திய விபூதியையும் (இந்த தேஹம் போனபிறகு) ஆள்வர்.

(கருத்து) எம்பெருமானை ஸ்தோத்திரம் பண்ணுவதைக் காட்டிலும் வேறு உபாயம் பிழைத்திருப்பதற்கு இல்லையென்று

தெரிந்து, ஆழ்வார் நடந்ததை நடந்தபடி சொன்ன ஆயிரம் பாட்டுக்களுக்குள் இந்தப் பத்துப்பாட்டுக்களையும் சொல்ல சக்தியுள்ளவர்கள் இந்த உலகத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீயுடன் வெகுகாலமிருந்து, இந்த தேஹம் போனபிறகு, இரண்டு விபூதிகளையும் ஆளுவர்.

குறிப்பு :—பொய்யில் பாடல் - எம்பெருமான் அளவில்லாத ஆசையோடு தம்மிடம் சேர்ந்த சேர்க்கை முழுவதும் உண்மை என்று ஆழ்வார் கருத்து. (11)

[illegible] ||

இந்தத் திருவாய்மொழியில் ஆழ்வார் எம்பெருமானுடனும், அவன் அவருடனும் பலவிதமாய் சேர்ந்திருந்தது சொல்லப்படுகிறது. அந்த விதங்களாவன :—(1) அவருடைய மனது அவனுக்குச் சந்தனமாயிருந்தது. (2) ஸ்தோத்திரம் பண்ணுகிற அவருடைய வாக்கு மாலையாகவும, பீதாம்பரமாகவும், அவருடைய அஞ்ஜலி நகைகளாகவுமிருந்தது. (3) அவருடைய பிராணன் அவனுக்கு இருப்பிடமாயிருந்தது. (4, 5) அவருடைய ஸ்வரூபமும், அவருடைய ஸ்நேஹமும் அவனுடைய கிரீடத்துக்கு அலங்காரமாயிருந்தது. (6) அவருடைய தலை அவனுக்கு பாதபீடமாயிருந்தது. (7) அவனுடைய திருமேனிக்கு அவருடைய ஸ்வரூபம் வீடாக இருந்தது. (8) அவன் அவருக்கு ஆத்மாவாகவும் அவர் அவனுக்கு ஆத்மாவாகவும் இருந்தது.

# நாலாம் திருவாய்மொழி.

அவ—எம்பெருமான் தம்முடன் சேர்ந்த சேர்க்கையாலே அளவில்லாத பிரீதியை ஆழ்வார் அடைந்து, அவனைக் கீழ்த்திருவாய்மொழியில் ஸ்தோத்திரம் பண்ணினர்; அந்த பிரீதியினல் அவருடைய ஸ்வரூபத்துக்குக்கூட கெடுதி வருமோ என்று நினைத்து, அந்த பிரீதி அடங்குவதற்காக எம்பெருமான் கொஞ்சம் விலகியிருக்க, ஆழ்வார் அவனைக் காணுமல் மிகுந்த வியஸநத்தை அடைந்தார். கணவனை விட்டுப் பிரிந்த நாயகி அவன் பிரிவைப் பொறுக்கமுடியாமல் பிச்சேறிச் சொல்லுகிற பேச்சுக்களையும், செய்கிற வேலைகளையும் அவள் தாயார் பார்க்கவந்த பந்துககளுக்குச் சொல்லுவதுபோல், தம்முடைய வருத்தத்தை இந்தத் திருவாய்மொழியில் ஆழ்வார் பேசுகிருர்.—

(அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.)

மண்ணை யிருந்து துழாவி வாமனன் மண்ணிது வென்னும்
விண்ணைத் தொழுதவன் மேவு வைகுந்த மென்றுகை காட்டுங்
கண்ணையுண் ணீர்மல்க நின்று கடல்வண்ண னென்னுமன்னே
[யேன்
பெண்ணைப் பெருமையல் செய்தார்க் கென்சேய் கென்பெய்
[ வளையீரே.

(ப - ரை) பெய் வளையீர் - மழை பெய்வதுபோல் அதிகமாகக் கையில் போடப்பட்ட வளைகளையுடைய ஸ்திரீகளே! இருந்து - (இருந்த இடததிலிருக்க முடியாமல் அலைந்துகொண்டிருந்த இவள்) ஒரே இடத்திலிருந்துகொண்டு, மண்ணை - பூமியை, துழாவி - கையால் தடவி, இது வாமநன் மண் என்னும் - இது வாமநனுடைய மண் என்று சொல்லுகிருள். விண்ணை தொழுது - ஆகாசததை (பார்த்து) அஞ்ஜலிபண்ணி, அவன் மேவும் வைகுந்தம் என்று - அவன் பிரீதியுடனிருக்கும் வைகுந்தமென்று, கை காட்டும் - கையாலே காட்டுகிருள், உள் நீர் கண்ணை மல்க நின்று - உள்ளே இருக்கிற நீரானது கண்ணுக்குள் அடங்காமல் ஆறுபோல் பிரவஹிக்கும்படி இருந்து, கடல் வண்ணன் என்னும் - ஸமுத்திரத்தின் வர்ணத்தையுடையவன் என்று சொல்லுகிருள்,

என் பெண்ணை பெரு மையல் செய்தார்க்கு - என் பெண்ணுக்கு இவ்விதமான பெரிய மோஹத்தை உண்டுபண்ணினவருக்கு, அன்னே - ஐயோ! என் செய்கேன் - நான் என்ன செய்வேன்?

(கருத்து) எம்பெருமானை விட்டுப் பிரிந்த துக்கத்தைப் பொறுக்கமுடியாமல் அவள், முன்பு இந்த உலகத்தை அளந்த போது, இந்த மண் அவன் திருவடியாலே தொடப்பட்டது என்று பார்த்து, அதைத் தடவி அதினாலே ஆறுதலை அடைந்து 'இது என் வாமனன் மண்' என்று சொல்லுகிறாள். ஆகாசத்தைப் பார்த்து, அதற்கும் வைகுந்தத்திற்கும் விண் என்கிற பெயர் ஒன்றாயிருப்பதால் கையைக் கூப்பிக்கொண்டு அவனிருக்கும் வைகுந்தம இது என்று வாயால் சொல்லமுடியாமல் கையாலே காட்டுகிறாள் அவனைக் காணாமையாலே கண்ணீர் பெருகி 'ஸமுத்திரம்போன்ற வர்ணமுடையவனே' என்று அழைக்கிறாள். கை நிறைய வளையுள்ளவர்களே! இப்படி என் பெண்ணுக்கு பெரிய மோஹத்தை உண்டுபண்ணினவருக்கு நான் என் செய்கேன்! (11)

---

பெய்வளைக் கைகளைக் கூப்பிப் பிரான்கிடக் குங்கடலென்னுஞ்
செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தியீதென்னு
நையுங்கண் ணீர்மல்க நின்று நாரணனென்னுமன் னேயென்
றெய்வ வுருவிற் சிறுமான் செய்கின்ற தொன்றறி யேனே. (௨)

(ப - ரை) பெய் வளை - போடப்பட்ட வளைகளையுடைய, கைகளைக்கூப்பி, பிரான் கிடக்கும் கடல் என்னும் - ஆச்ரிதர்களுக்கு உபகாரகனான எம்பெருமான் படுத்திருக்கும் திருப்பாற்கடல் என்று சொல்லுகிறாள், செய்யது - சிவப்பான, ஓர் ஞாயிற்றை - ஒப்பில்லாத ஸூரியனை, காட்டி சிரீதரன் மூர்த்தி ஈது என்னும் - இது ஸ்ரீதரனுடைய திருமேனி என்று சொல்லுகிறாள், நையும் - (அவன் கைக்கு எட்டாதபோது) தளர்ச்சியையடைகிறாள், கண்ணீர் மல்க நின்று - கண்ணீர் பெருகும்படி நின்று, நாரணன் என்னும - நாராயணனே என்று சொல்லுகிறாள், அன்னே - அம்மே! என் தெய்வ உருவில் - என்னுடைய நித்தியஸூரிகளைப்போலே எம்பெருமானுடைய அநுப

வத்தினாலேயே தரித்திருக்கிற உடம்பை உடையவளான, சிறு மான் - சிறிய மான்போலிருக்கிற இப்பெண், செய்கின்றது - செய்கிற வேலைகளை, ஒன்று அறியேன - நான் ஒன்றும் அறிகி லேன்.

(கருத்து) இராத்திரியில் ஸமுத்திரத்தின் ஓசையைக் கேட்டு அதைத் திருப்பாற்கடல் என்று எண்ணி, கைகளைக் கூப்பிக் கொண்டு, இஃது எனக்கு உபகாரம் செய்த எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கும் திருப்பாற்கடல் என்று சொல்லுகிறாள். பொழுது விடிந்து ஸூரியன் உதயமானபோது, அவனும் அவன் பிரபையும் விடாமல் சேர்ந்திருப்பதுபோல் எம்பெருமானும் பிராட்டியும் சேர்ந்திருப்பதை நினைத்து ஸூரியனை எம்பெரு மானாக பிரமித்து, இது ஸ்ரீதானுடைய திருமேனி என்று சொல்லுகிறாள். ஸூரியனைக் கைகளை நீட்டி எட்டமுடியாமை யால் தளர்ச்சியை அடைகிறாள். அந்த வியஸநத்தைப் பொறுக்க மாட்டாமையாலே கண்ணீர் பெருக 'நாராயணனே' என்று சொல்லுகிறாள். நித்தியஸூரிகளைப்போல அவனுடைய அனு பவத்தாலேயே உயிரை வைத்துக்கொண்டிருக்கிறாள். இப்படியி ருக்கிற சிறு மான்போன்ற இந்தப் பெண் செய்கிற வேலைகளை பந்துக்களே! நான் ஒன்றும் அறியவில்லை.

குறிப்பு :—பெய்வளை—முன்னாலே நழுவின வளைகள் 'கடல் வண்ணன்' என்று சொன்னமாத்திரத்தில், ஸந்தோஷத்தினால் பூரித்தன என்று கருத்து.

(இ - ம்) ஈது - இது, செய்யுள் விகாரம் நீண்டது. உருவில் சிறுமான் - இல் சாரியை. (2)

---

அறியுஞ் செந்தீ யைத்தழுவி யச்சுத னென்னும் மெய்வேவா [ம்
ளெறியுந் தண்காற் றைத்தழுவி யென்னு டைக்கோ விந்தனென்னு
வெறிகொள் துழாய்ம லாநாறும் வினையுடை யாடி யேன்பெற்ற
செறிவ ளைமுன் கைச்சிறுமான் செய்கின்ற தென்கண் ணுக்
[கொன்றே.

(ப - ரை) அறியும் - (தொட்டால் சுடுவதாக எல்லாராலும்) அறியப்பட்ட, செம் தீயை - சிவப்பான நெருப்பை, தழுவி -

கட்டிக்கொண்டு, அச்சுதன் என்னும் - அதை அச்சுதன் என்று சொல்லுகிறாள், மெய் வேவாள் - உடம்பு வெந்துபோகிறதில்லை, எறியும் தண் காற்றை - வீசுகிற குளிர்ந்த தென்றல் காற்றை, தழுவி - கட்டிக்கொண்டு, என்னுடைய கோவிந்தன் என்னும் - என்னுடைய கோவிந்தன் என்று சொல்லுகிறாள், வெறி கொள் துழாய் மலர் நாறும் - வாஸனையைக்கொண்ட துளஸி புஷ்பங்களின் வாசனை அவளிடம் மணக்கிறது, வினையுடை யாட்டியேன் - பாபம் செய்த நான், பெற்ற, செறி வளை முன் கை - (அவனைப் பிரிந்து வருத்தப்படுவதற்கு முன்) நெருங்கின வளைகளை முன் கைகளிலுடைய, சிறு மான் - சிறிய மானைப்போன்ற இந்தப் பெண், செய்கின்றது - செய்கிற வியாபாரம், என் கண்ணுக்கு, ஒன்றே - ஒன்றா? (அநேகங்கள் என்று கருத்து.)

(கருத்து) நெருப்பைப் பார்த்து அதின் பிரகாசத்தாலே அதை எம்பெருமான் என்று நினைத்து, கட்டிக்கொண்டு இதினால் உண்டான பிரீதியாலே இது என் அச்சுதன் என்று சொல்லுகிறாள். இந்த பிரீதியாலே பிரிவினாலுண்டான அவள் உடம்பின் தாபம் போய்விடுகிறது. வீசுகிற குளிர்ந்த தென்றல் காற்றை மாடுமேய்க்கப் போய் திரும்பிவருகிற கண்ணனாக எண்ணி, அதைக் கட்டிக்கொண்டு இது என்னுடைய கோவிந்தன் என்று சொல்லுகிறாள். அவள் உடம்பில் துளஸி புஷ்பங்களின வாஸனை காணப்படுகிறது. ஆகையால் இவள் அவனுடன் சேர்ந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. அவனை விட்டுப் பிரிவதற்கு முன்னாலே இவள் முன்கையில் வளைகள் ஒட்டியிருந்தன. இப்போது உடம்பு இளைத்து அவைகள் நழுவுகின்றன. எம்பெருமானைப் பிரிந்து வருத்தப்படத் தகுதியில்லாத சிறுமான்போன்ற இந்தப் பெண் என் பாபத்தாலே பிச்சேறி செய்கிற வியாபாரங்கள் ஒன்றா இரண்டா? அவைகளுக்குக் கணக்கில்லை.

குறிப்பு :-(1) 'மெய்வேவாள்' என்பதற்கு, உரையில் சொன்னபடியே பொருள்கொள்ள வேண்டும். பிரஹ்லாதனுக்கு எம்பெருமானுடைய அனுக்கிரஹத்தால் நெருப்பு சுடவில்லை. அவனைக் காட்டிலும் அதிக பிரபாவமுள்ளவராகையால் ஆழ்வாருக்கும் அது சுடவில்லை. இந்த விஷயம் தெளிவானபடியால் சொல்ல வேண்டியதில்லை. ஆகையால் வேறுவிதமாய் அர்த்தம் பண்ணி இருக்கிறது.

(2) 'கோவிந்தன்' என்று பாட்டில் சொல்வதால் மாடு மேய்க்கப்போய் திரும்பி வந்த கண்ணனை ஆழ்வார் நினைக்கிறார் என்று கருத்து.

(இ-ம்) ஒன்றே - ஏகாரத்திற்கு எதிர்மறைப்பொருள். ஒன்று அல்ல என்று கருத்து. (3)

---

ஒன்றிய திங்களைக் காட்டி யொளிமணி வண்ணனே யென்னு
நின்றகுன் றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவு
நன்றுபெய் யும்மழை காணி னாரணன் வந்தானென் றாலு
மென்றின மையல்கள் செய்தா னென்னுடைக் கோமளத்தையே.

(ப-ரை) ஒன்றிய-கலைகள் பொருந்தின, திங்களை காட்டி-சந்திரனை (ஸமீபத்தில் இருந்தவர்களுக்குக்) காட்டி, ஒளி மணி வண்ணனே என்னும் - பிரகாசமுள்ள ஸ்படிகம்போன்ற வர்ணமுள்ளவனே என்று சொல்லுகிறாள். நின்ற குன்றத்தினை நோக்கி-(முன்னாலே) இருக்கிற ஒரு மலையைப் பார்த்து, நெடுமாலே வா என்று, கூவும் - அழைக்கிறாள். நன்று பெய்யும் மழை காணில் - நன்றாக பெய்யப்போகிற மேகத்தைக் கண்டவுடன், நாரணன் வந்தான் என்று, ஆலும் - (மயில்போல்) ஆடுகிறாள். என்னுடை கோமளத்தை - என்னுடைய மிருதுவான பெண்ணை, என்று - என்றைக்கு, இன-இவ்விதமான, மையல்கள் செய்தான்-மோஹங்களைச் செய்தான்.

(கருத்து) குளிர்ந்த எல்லாக் கலைகளும் நிறைந்த சந்திரனைக் கிட்ட இருக்கிறவர்களுக்குக் காட்டி அதை எம்பெருமானாக எண்ணி, பிரகாசமுள்ள ஸ்படிகம்போன்ற வர்ணமுள்ளவனே என்று சொல்லுகிறாள். எதிரில் இருக்கிற மலையைப் பார்த்து, முன் பூமியையும் ஆகாசத்தையும் அளப்பதற்கு அவைகள் நிறையும்படி பெரிய ரூபத்தை எடுத்துக்கொண்ட திரிவிக்கிரமனாக எண்ணி, 'நெடுமாலே வா' என்று அழைக்கிறாள். ஸமுத்திர ஜலத்தை நன்றாய்க் குடித்து மழை பெய்யப்போகிற மேகத்தைப் பார்த்து அதை எம்பெருமானாக எண்ணி, நாரணன் வந்தான் என்று சொல்லி, மேகத்தைக் கண்ட மயிலைப்போல் கூத்தாடுகிறாள்.

இவள் இப்போதுதானே அவனைப் பார்த்தாள். இவ்விதமான மோஹங்களை அவன் இவளுக்கு எப்போது உண்டுபண்ணினுனோ?

குறிப்பு:—'நெடுமால்' என்பதற்கு பெரிய திருமேனியை உடைய ஸ்வாமி என்று பொருள். நீடித்திருக்கும் ஸ்நேகத்தை உடையவன் என்றும் பொருள்கொள்ளலாம். (4)

---

கோமள வான்கன் றைப்புல்கிக் கோவிந் தன்மேய்த் தனவென்னும்
போமிள நாகத் தின்பின்போ யவன்கி டக்கை யீதென்னு
மாமள வொன்று மறியே னருவினை யாட்டி யேன்பெற்ற
கோமள வல்லியை மாயோன் மால்செய்து செய்கின்ற கூத்தே (ரு

(ப-ரை) கோமள வான் கன்றை புல்கி - இளமையான பருத்த கன்றுகளைக் கட்டிக்கொண்டு, கோவிந்தன் மேய்த்தன என்னும் - இவை கோவிந்தனுல் மேய்க்கப்பட்டவைகள் என்று சொல்லுகிருள். போம் இள நாகத்தின் பின் போய் - போகுகிற இளமையுள்ள பாம்பின் பின்னுலே போய், ஈது கோவிந்தன் கிடக்கை என்னும் - இது கோவிந்தனுடைய படுக்கையாகிய ஆதிசேஷன் என்று சொல்லுகிருள். அரு வினையாட்டியேன் பெற்ற - (அநுபவித்துத்) தீராத பாபங்களைச் செய்த நான் பெற்ற, கோமள வல்லியை - மிருதுவான கொடிபோலிருக்கிற இந்தப் பெண்ணுக்கு, மாயோன் - ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற எம்பெருமான், மால் செய்து - மோஹங்களை உண்டு பண்ணி, செய்கின்ற கூத்து - பண்ணுகிற ஆட்டங்கள், ஆம் அளவு - எப்படி முடியுமோ என்பதை, ஒன்றும் அறியேன் - கொஞ்சமும் நான் அறியவில்லை.

(கருத்து) இளமையான புஷ்டியுள்ள கன்றுகளைக் கண்ணன் மேய்த்த கன்றுகளாக எண்ணி, அவைகளைக் கட்டிக்கொண்டு, இவைகள் கோவிந்தனுல் மேய்க்கப்பட்டன என்று சொல்லுகிருள். ஓடுகிற பாம்பைப் பார்த்து, இது மிருதுவாயும், அழகாயும், இளமையுள்ளதாயுமிருப்பது எம்பெருமானுடைய சேர்த்தியினுல் என்று அதை ஆதிசேஷனுக நினைத்து, அதைக் கட்டிக் கொண்டு இது எம்பெருமானுடைய படுக்கை என்று சொல்லு கிருள். இப்படி எம்பெருமான் என் பெண்ணுக்கு மோஹங்

களைச் செய்யும்படி அநுபவித்துத் தீராத பாபங்களை நான் பண்ணியிருக்கிறேன். அவன் இவள் விஷயத்தில் செய்கிற கூத்து என்னமாய் முடியுமோ? பாம்பின வாயில் அகப்படுவளோ? எனக்கு ஒன்றும் தெரியவில்லை.

குறிப்பு :—இவள் பாம்பின் வாயில் அகப்பட்டு முடிந்தால் அவனும், அவன் விபூதியும் முடியுமே என்று கருத்து. (5)

---

கூத்தர் குடமெடுத் தாடிற் கோவிந் தனாமெ னாவோடும்
வாய்த்த குழலோசை கேட்கின் மாயவ னென்றுமை யார்க்கு
மாய்ச்சியா வெண்ணெய் கள்காணி லவனுண்ட வெண்ணெ
[யீதென்னும்
பேய்ச்சி முலைசுவைத் தார்க்கென் பெண்கொடி யேறிய பித்தே.(௬)

(ப - ரை) கூத்தர், குடம் எடுத்து ஆடில் - குடத்தைத் தலையில் வைத்துக் கூத்தாடினால், கோவிந்தன் ஆம் எனா ஓடும் - இவன் கோவிந்தன்தான நிச்சயமென்று அவர்களிடம் ஓடுகிறாள். மையார்க்கும் - மோஹத்தையடையும், வாய்த்த - தற்செயலாய் உண்டான, குழல் ஓசை கேட்கில் - குழல் ஓசையைக் கேட்டால், மாயவன் என்று ஓடும் - ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற கண்ணன் என்று சொல்லி, அந்த ஓசை கேட்குமிடத்துக்கு ஓடும், (மையார்க்கும்) ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் இடைப்பெண்களுடைய வெண்ணெயைப் பார்த்தால், ஈது-இது, அவன் உண்ட வெண்ணெய் என்னும், (இவைகள்) பேய்ச்சி முலை சுவைததார்க்கு-(பூதனையென்கிற) பிசாசியினுடைய ஸ்தநங்களை உண்ட கண்ணன் விஷயத்தில், என் பெண்கொடி - கொடி போன்ற என் பெண், ஏறிய பிதது - அடைந்த பித்துக்கள்.

(கருத்து) எவராவது குடத்தைத் தலையில் வைத்துக் கொண்டு கூத்தாடினால் அவரைக் கண்ணனென்று எண்ணி அவர்களிடம் ஓடுகிறாள். அவர்கள் கண்ணன் அன்று என்று நாங்கள் சொன்னால், கண்ணன்தான், இது நிச்சயம் என்கிறாள். போய்ப் பார்த்து, கண்ணன் அல்லர் என்று தெரிந்தபோது மோஹத்தை அடைகிறாள். அவள் காதில் குழல் ஓசை கேட்கக்கூடாதபடி நாங்கள் செய்திருக்கிறோம் தற்செயலாய் அந்த ஓசை கேட்டால்

அதைக் கண்ணனுடைய வேணுகாநம் என்று நினைத்து, அந்த ஓசை கேட்கும் இடத்திற்குப் போகிறாள். போய்ப் பார்த்து, கண்ணனல்ல என்று தெரிந்தபோது மோஹத்தை அடைகிறாள். இடைச்சிகளின் வெண்ணெயைப் பார்க்கும்போது இது கோவிந்தன் சாப்பிட்ட வெண்ணெய் என்கிறாள். தன்னைக் கொல்ல வேணும் என்ற எண்ணத்துடன் வந்த பூதனையைக் கொன்ற கண்ணனுடைய வேலைகள் இவளை இப்பாடு படுத்துகிறது.

(இ - ம்) என - என்று, வினையெச்சம். ஆம்-ஆகும். இடைக் குறை. ஆடில், கேட்கில், காணில், இவைகள் வினையெச்சங்கள். ஆடினால், கேட்டால், கண்டால் என்று பொருள். (6)

---

ஏறிய பித்தினோ டெல்லா வுலகு கண்ணன் படைப்பென்னு
நீறு செவ்வே யிடக்காணி னெடுமா லடியா ரென்றோடு
நாறு துழாய்மலர் காணி னாரணன் கண்ணி யீதென்னுந்
தேறியும் தேறாது மாயோன் றிறத்தின ளேயித் திருவே. (எ)

(ப-ரை) ஏறிய பித்தினோடு-விருத்தியடைந்த பித்தோடுகூட, எல்லா உலகு - எல்லா உலகங்களும், கண்ணன் படைப்பு என்னும் - கண்ணனால் உண்டுபண்ணப்பட்டவைகள் என்று சொல்லுகிறாள். நீறு செவ்வே இட காணில் - சாம்பலை ஊர்த்வமாக நெற்றியில் இட்டவர்களைப் பார்த்தால், நெடுமால் அடியார்கள் என்று ஓடும் - அவர்கள் எம்பெருமானுடைய தாஸர்கள் என்று நினைத்து அவர்கள் இருக்குமிடம் ஓடுகிறாள். நாறு துழாய் மலர்காணில் - மணக்கிற துளஸியின் புஷ்பத்தைப் பார்த்தால், ஈது நாரணன் கண்ணி என்னும் - இது நாராயணனுடைய மாலையென்று சொல்லுகிறாள். இ திரு - லக்ஷ்மிபோன்ற இந்தப் பெண், தேறியும் - மோஹமில்லாமல் நல்ல நினைவு உள்ளபோதும், தேறாதும் - நல்ல நினைவில்லாமல் கலங்கினபோதும், மாயோன திறததினள் - ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற எமபெருமான் விஷயத்தில் இருப்பவள்.

(கருத்து) இவளுக்கு மோஹம் விருத்தியடைந்து இருக்கையிலும் இந்த உலகமெல்லாம் கண்ணனால் உண்டுபண்ணப்பட்டது என்று தப்பாமல் சொல்லுகிறாள். எவனாவது நெற்றியில்

நீறை ஊர்தவ புண்ட்ரமாக இட்டுக்கொண்டிருந்தால், அவன் நெடுமால் தாஸன் என்று எண்ணி, அவன் இருக்குமிடம் போகிறாள். எம்பெருமானுடைய ஸம்பந்தமில்லாதவைகளையெல்லாம் அவனுடையது என்று எண்ணுகிற இந்தப் பெண், அவனுக்கே ஸொந்தமான மணக்கிற துளஸீ புஷ்பங்களைக் கண்டால் இது நாராயணனுடைய மாலை என்று சொல்லமாட்டாளோ. பிராட்டி எம்பெருமானை விட்டுப் பிரியாததுபோல் இந்தப் பெண் அவனை மனதால் விட்டுப் பிரிகிறதில்லை. பலசொல்லி என்ன? அவள் மனது மோஹம் கொண்டு கலங்குகிறதோ, மோஹமில்லாமல் தெளிந்திருக்கிறதோ, எப்போதும் அவளுக்கு அவன் நினைவு தான்.

(இ - ம்) திறத்தினளே-ஏகாரத்திற்குப் பிரிநிலைப்பொருள்; வேறு திறத்தில் அவள் இல்லை என்று கருத்து. (7)

---

திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டே னேயென்னு
முருவுடை வண்ணங்கள் காணி லுலகளந் தானேன்று துள்ளுங்
கருவுடைத் தேவில்க ளெல்லாங் கடல்வண்ணன் கோயிலே யென்
[னும்
வெருவிலும் வீழ்விலு மோவாள் கண்ணன் கழல்கள் விரும்புமே.

(ப - ரை) திரு உடை மன்னரை காணில் - ஸம்பத்தை உடைய ராஜாக்களைப் பார்த்தால், திருமாலை - எம்பெருமானை, கண்டேன் என்னும - கண்டேன என்று சொல்லுகிறாள், உருவுடைய - நல்ல ரூபத்தையுடைய, வண்ணங்கள் - நீலநிறமுள்ள பதார்த்தஙகளை, காணில் - கண்டால், உலகு அளந்தான் என்று துள்ளும் - உலகத்தை அளந்த திரிவிக்கிரமன் என்று துள்ளுகிறாள், கரு உடை - கர்ப்பத்தை (ஒரு விக்கிரஹத்தை) உடைய, தேவு இல்கள் எல்லாம் - கோவில்களெல்லாம், கடல் வண்ணன் கோயிலே என்னும் - ஸமுத்திரத்தின் ஸ்வபாவத்தையுடைய கண்ணனுடைய கோயில் என்று சொல்லுகிறாள், வெருவிலும் - பயப்படுகையிலும், வீழ்விலும் - (மோஹித்து) விழுகையிலும், ஓவாள் - ஒழிகிறாள் இல்லை, கண்ணன் கழல்கள் விரும்பும் - கண்ணனுடைய திருவடிகளை ஆசைப்படுகிறாள்.

(கருத்து) ஸம்பத்துக்களையுடைய ராஜாக்களைக் கண்டால், இந்த ஸம்பத்து கண்ணனைத் தவிர வேறொருவருக்கும் இருக்காது. ஆகையால் இவர்கள் கண்ணனதானென்று நினைத்து திருமால் வந்தானே என்று சொல்லுகிறாள். நல்ல அழகும் நீல வர்ணமும் உள்ள மேகங்கள், கருநெய்தல் புஷ்பங்கள், காசாம்பூ, கடல் முதலான பதார்த்தங்களைக் கண்டால், அவைகள் உலகத்தை அளந்த திரிவிக்கிரமனென்று நினைத்து உலகு அளந்தானென்று துள்ளுகிறாள். விக்கிரஹத்தை உள்ளேயுடைய கோயில்களைக் கண்டால் அவைகளெல்லாம் கண்ணன கோயில்கள் என்று சொல்லுகிறாள். உள்ளே போய், அது கண்ணன் விக்கிரஹமல்லா திருப்பதைப் பார்த்து, ஏங்கி விழுகிறாள் அப்போதும் மயங்குகிறபோதும் அவன் நினைவை அவள் விடுகிறதில்லை. கண்ணனுடைய திருவடிகளையே விரும்புகிறாள்.

(இ - ம) ஒவாள் - எதிர்மறை வினைமுற்று. ஒ-ஆ-அள். (8)

---

விரும்பிப் பகவரைக் காணில் வியலிட முண்டானே யென்னுங்
கரும்பெரு மேகங்கள் காணிற் கண்ணனென் றேறப் பறக்கும்
பெரும்புல வாநிரை காணிற் பிரானுள னென்று பின்செல்லு
மரும்பெறற் பெண்ணினை மாயோ னலற்றி யயாப்பிக் கின்றனே.

(ப - ரை) பகவரை-பகவான்களை (ஸந்நியாஸிகளை) காணில்-கண்டால், விரும்பி - ஆதரம் செய்து, வியல் இடம் - விசாலமான பூமியை, உண்டானே என்னும் - சாப்பிட்டவனே என்கிறாள். கரும் பெரு மேகங்கள காணில் - கறுத்த பெரிய மேகங்களைப் பார்த்தால், கண்ணன் என்று ஏற பறக்கும் - மேலே போவதற்காக பறக்க பிரயத்தனப்படுகிறாள். பெரும் புல ஆநிரை காணில் - பெரிய அழகான பசுமாட்டுக் கூட்டத்தைப் பார்த்தால், பிரான் உளன் என்று - (அதற்குள்ளே அவைகளுக்கு நல்ல மேய்ச்சலைக் கொடுத்து) உபகாரம் செய்கிற கண்ணன் இருக்கிறான் என்று நினைத்து, பின செல்லும - அநின் பின்னால் போகிறாள். மாயோன்-ஆச்சரியமானவன், அரும் பெறல் பெண்ணினை-கஷ்டப்பட்டு அடையப்பட்ட பெண்ணை, அலற்றி அயர்ப்பிக்கின்றான் - வாய்விட்டுப் புலம்பி மோஹத்தை அடையும்படி செய்கிறான்.

*(கருத்து) அளவில்லாத எம்பெருமான் விஷயமான ஜ்ஞாந முள்ளவர்களாய், வேறு ஒன்றிலும் ஆசையில்லாதவர்களாய் இருக்கிற ஸந்நியாஸிகளைக் கண்டால் இவ்விதமான வைராக்கியம் எம்பெருமானைத் தவிர வேறொருவரிடமும் இருக்காது. ஆகையால் இவர்கள் எம்பெருமான்தான் என்று நினைத்து, அவர்கள் விசாலமான பூமியை பிரளய காலத்தில் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தவன்தான் என்று பிரீதியுடன் சொல்லுகிறாள். கறுத்த பெரிய மேகங்களைப் பார்த்தால், அவைகளைக் கண்ணன் என்று நினைத்து தன்னுடைய மிகுந்த ஆசையையே சிறகாகக்கொண்டு மேலே ஏறுவதற்காக யத்னப்படுகிறாள். அது தனக்கு எட்டமுடியாமையால் மயங்குகிறாள். பெரிய அழகான பசுமாடுகளின் கூட்டத்தைப் பார்த்தால், அதற்கு நல்ல மேய்ச்சலைக் கொடுதது உபகாரம் செய்த கண்ணன் அதற்குள்ளே இருக்கிறான் என்று நினைத்து அதின் பின்னாலே போகிறாள். இந்தப் பெண்ணை நான் தபஸு செய்து பெற்றேன். இவளைத் தன்னை அலற்றி மோஹத்தை அடையும்படி மாயோன் செய்கிறான்.*

*குறிப்பு :—பகவர் என்பது ஸ்ரவாநு என்கிற வடமொழிச் சொல். அதற்கு ஞானம் முதலான ஆறு குணங்களுள்ளவர் என்று பொருள். தமிழில் இடுகுறிப்பெயராயிருந்து எல்லாவற்றையும் விட்ட ஸந்நியாஸிகளைச் சொல்லுகிறது. உரையில் இரண்டு அர்த்தத்தையும் சேர்த்து எழுதியிருக்கிறது.* (9)

---

அயர்க்குஞ் சுற்றும் பற்றிநோக்கி யகலவே நீணோக் குக்கொள்ளும்
வியர்க்கு மழைக்கண் ணேரும்ப வெவ்வுயிர்க் கொள்ளும் மெய்சோரும்
பெயர்த்துங் கண்ணாவென்று பேசும் பெருமானே வாவென்று கூவு
மயற்பெருங் காதலென் பேதைக் கென்செய் கேன்வல் வினை
[யேனே. (௧௦)

*(ப - ரை) அயர்க்கும் - மோஹத்தை அடைகிறாள், சுற்றும் பற்றி நோக்கி - நாலு பக்கமும் பார்த்து, அகலவே - விஸ்தாரமாக (கண்ணைத் தூரச்செலுத்தி), நீள் நோக்கு கொள்ளும் - நீண்ட காலம் பார்க்கிறாள், வியர்க்கும்-வேர்வையை அடைகிறாள்.*

மழை கண் துளும்ப - மழைபோல் பெருகுகிற கண்ணீர் துளி துளியாய் கீழே விழும்படி, வெவ்வு உயிர் கொள்ளும் - உஷ்ணமாக பெருமூச்சு விடுகிறாள். மெய் சோரும் - உடம்பு நிற்க முடியாமல் இருக்கிறாள். பெயர்த்தும் - மேலும், கண்ணா என்று பேசும் - கண்ணா என்று பேசுகிறாள். பெருமானே வா என்று கூவும் - பெருமானே வா என்று கூப்பிடுகிறாள். மயல் பெரும் காதல் - மோஹத்தைச் செய்யும்படியான மிகுந்த ஆசையை உடைய, என் பேதைக்கு - என்னுடைய சிறு பெண்ணுக்கு, வல் வினையேன் - பலமான பாபங்களைச் செய்த நான், என் செய்கேன் - என்ன செய்வேன்.

(கருத்து) அதிக வியஸநத்தாலே மோஹத்தை அடைகிறாள். வெகுகாலம் கழிந்தபின் அறிவு வந்து, எம்பெருமான் தன் ஸமீபத்தில் வந்ததாக எண்ணி நாலு பக்கத்திலும் பார்க்கிறாள். வரவில்லை என்று தெரிந்தபின் கண்ணை வெகுதூரம் செலுத்தி, அவன் வருகிறதாக எண்ணி நீண்ட காலம் பார்ததுக்கொண்டிருக்கிறாள். தூரததிலும் அவனைப் பார்க்காமல் நீராய் உருகுகிறாள். மழைபோல் பெருகுகிற கண்ணீர் துளிததுளியாய் கீழே விழும்படி உஷ்ணமாகப் பெருமூச்சு விடுகிறாள். மறுபடியும் பெணகளுக்கு எல்லாவிதத்தாலும் ஸுலபனான கண்ணன் வராமலிருக்கமாட்டான் என்று எண்ணி 'கண்ணா' என்று சொல்லுகிறாள். அவன் வந்திருப்பதாக எண்ணி, 'பெருமானே வா' என்று கூப்பிடுகிறாள். இப்படி மோஹத்தை உண்டாக்கும் மிகுந்த ஆசையை உடையவளாய் இந்தச் சிறுபெண் இருக்கிறாள். பலமான பாபங்களைச் செய்த நான் என்ன செய்வேன்? அவளை மோஹம் அடையாதபடி செய்கிறதா? அல்லது அவன் வரும்படி செய்கிறதா? அல்லது இவளுடைய வருத்தத்தைப் பார்த்துப் பொறுத்துக் கொண்டேயிருக்கிறதா? இன்னதென்று தெரியவில்லை. (10)

வல்வினை தீர்க்குங் கண்ணனை வண்குரு கூர்ச்சட கோபன்
சொல்வினை யாற்சொன்ன பாட லாயிரத் துள்ளிவை பத்து
நல்வினை யென்றுகற் பார்க ணலனுடை வைகுந்த நண்ணித்
தொல்வினை தீர வெல்லாருந் தொழுதெழ வீற்றிருப் பாரே. (கக)

*(ப - ரை) வண்குருகூர் சடகோபன், வல் வினை தீர்க்கும் கண்ணனை - (ஆச்ரிதர்களுடைய) பலமான பாபங்களை நாசம் செய்கிற கண்ணனை, சொல் வினையால் - அவனை ஸ்தோத்திரம் பண்ணும்படி செய்கிற பக்தியாகிய கர்மத்தாலே, சொன்ன பாடல் ஆயிரத்துள், இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், நல் வினை என்று - ஸ்வரூபத்துக்குப் பொருந்தின வேலை என்று, கற்பார்கள் - படிக்கிறவர்கள், நலன் உடை வைகுந்தம் நண்ணி - ஆநந்தமென்கிற குணத்தையுடைய வைகுந்தத்தைக் கிட்டி, தொல் வினை தீர - அநாதிகாலமாய் வந்த கர்மங்கள் போகவே, எல்லாரும் தொழுது எழ - நித்தியஸூரிகள் ஆதரம் செய்து ஸந்தோஷத்தாலே எழுந்திருக்கும்படி, வீற்று இருப்பர் - திரும்பி வாராமையாகிய மேன்மையை அடைந்திருப்பார்கள்.*

*(கருத்து) ஆச்ரிதர்களுடைய பலமான பாபத்தைத் தீர்க்கிறவனாய், அவர்களுக்கு ஸுலபனாயிருக்கிற எம்பெருமானைப்பற்றி ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப்பாட்டுக்களையும் வேறு பிரயோஜநங்களில் ஆசையில்லாமல் படிக்கிறவர்கள் அநாதிகாலமாக வந்த பாபங்கள் போய் ஆநந்தமயமான வைகுந்தத்தை அடைந்து, நித்தியஸூரிகள் கொண்டாடும்படி எம்பெருமானுக்கும் அவன் பக்தர்களுக்கும் கைங்கரியம் செய்வதாகிய பெருமையைப் பெற்று இருப்பர்கள்.* (11)

---

[illegible] ॥ ௪௮ ॥

இந்தத் திருவாய்மொழியில் மதுவைக்கொன்ற எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவைகளாலும், தன்னைப்போல் இருக்கிறவைகளாலும் பக்தர்களை, தன்னைவிட்டுப் பிரிந்தகாலத்தில் வருத்தப் படுத்துகிறான் என்று சொல்லப்படுகிறது. அவைகளாவன :— (1) பூமியும் ஆகாசமும், (2) ஸமுத்திரமும் ஸூரியனும், (3, 4) நெருப்பும், சந்திரனும், காற்றும், மலையும், மேகமும், (5) கன்றுகளும், பாம்பும், (6) குடக்கூத்தர்களும், குழலோசையும், ஆய்ச்சியர் வெண்ணெயும், (7) உலகங்களும், ஊர்த்வ புண்ட்ரத்தைத் தரித்தவர்களும், துளஸிபுஷ்பங்களும், (8) ராஜாக்களும், நீலவர்ணமுள்ள வஸ்துக்களும், கோவில்களும், (9) பாகவதர்களும், மேகங்களும், பசுக்கூட்டங்களும், (10) அவனுடைய ஸௌலப்யமும் பரத்வமும்.

(இ - ம்) நலன் - நலம் : போலி. (11)

## ஐந்தாம் திருவாய்மொழி.

அவ :—மூன்றும் திருவாய்மொழியில் எம்பெருமானை அநுபவித்து அளவில்லாத ஸந்தோஷத்தை ஆழ்வார் அடைந்தார். அஃது அடங்குவதற்காக எம்பெருமான் கொஞ்சம் விலகிநிற்க, ஆழ்வார் நாலாம் திருவாய்மொழியில் வருத்தப்பட்டார். எம்பெருமான் அவருக்கு தாம் வைகுண்டத்திலிருக்கும் இருப்பைப் பூர்ணமாகக் காட்ட, அதைக் கண்ணாலே பார்த்து, எனக்கு என்ன குறை இருக்கிறதென்று தன ஸந்தோஷத்தை இத்திருவாய்மொழியில் பேசுகிறார். 'சன்மம் பல பல'-வில் (3—10) எம்பெருமானைப்பாடப்பெற்ற எனக்கு என்னகுறையென்று சொன்னார். இதில் வைகுந்தத்திலிருக்கும் அவனுடைய இருப்பைக் கண்டு பேசுகிறார் :—

(கலித்துறை.)

வீற்றிருந் தேழுல குந்தனிக் கோல்செல்ல வீவில்சீ
ராற்றன்மிக் காளுமம் மானைவெம் மாபிளந் தான்றன்னைப்
போற்றியென் றேகைக ளாரத் தொழுதுசொன் மாலைக
ளேற்றநோற் றேற்கினி யென்ன குறையெழு மையுமே. (க)

(ப - ரை) வீற்றிருந்து - தன்னுடைய மேன்மை தோன்றும்படி பரமபதத்தில் இருந்து, ஏழு உலகும் - ஏழு உலகங்களிலும், தனிக்கோல் செல்ல - ஒப்பில்லாத ஆஜ்ஞை நடக்கும்படி, வீவு இல் - நாசமில்லாத (ஒரு தடையுமில்லாத) சீர் - ஜ்ஞாநம் முதலான நல்ல குணங்களை உடையவனாய், ஆற்றல் மிக்கு-பொறுமை அதிகமாய், ஆளும் - அந்த உலகங்களை ஆளும் ஸ்வபாவனாய், அம்மானை - எனக்கு ஸ்வாமியாய், வெம் மா வாய் பிளந்தான் தன்னை - க்ரூரமான குதிரை ரூபமாய் வந்த கேசியின் வாயைப் பிளந்தவனான கிருஷ்ணனை, போற்றி என்றே - வாழி வாழி என்றே சொல்லி, கைகள் ஆர தொழுது - கைகளுக்கு திருப்தி வரும்படி தொழுது, சொல் மாலைகள் - திருவாய்மொழிகளாகிற மாலைகளை, ஏற்ற - அவன் தலையாலே தரிக்கும்படி ஸமர்ப்பிக்க, நோற்றேற்கு-புண்ணியம் பண்ணின எனக்கு, இனி, எழுமையும்-ஏழு பிறப்புக்களிலும் (எப்போதும்), என்ன குறை - ஒரு குறையுமில்லை.

(கருத்து) எம்பெருமான் தன்னுடைய மேன்மை தோன்றும்படி வைகுந்தத்தில், திருவனந்தாழ்வான் மேலே இருந்து தன்னுடைய ஸங்கல்பத்தின் ஏகதேசத்தாலே இரண்டு விபூதிகளிலும் தன்னுடைய ஒப்பில்லாத ஆஜ்ஞை செல்லும்படி ஒரு விதத்தடையுமில்லாத, ஜ்ஞாநம் முதலான நல்ல குணங்களையுடையவனாய், மிகுந்த பொறுமையுடன, அந்த விபூதிகளை ஆளும் ஸ்வபாவனாய், ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காக கிருஷ்ணனாய் அவதாரம் செய்து, கேசி முதலான அவர்களுடைய விரோதிகளை நாசம் செய்தவனாயிருக்கிற என் ஸ்வாமியை வாழி வாழி என்றே நான் சொல்லி, என் கைகளின் விடாய் தீரும்படி தொழுது, திருவாய்மொழியாகிய மாலையை அவன் தலையாலே வாங்கிக்கொள்ளும்படி ஸமர்ப்பிக்கும்படியான பாக்கியத்தைப் பண்ணினேன். இனி எந்தக் காலத்திலும் எனக்கு ஒரு குறையுமில்லை.

குறிப்பு:—(1) வீறு - வேறுபாடு, இங்கே மேன்மையாலே மற்றவர்களைக் காட்டிலும் வேறுபட்டிருப்பது. மேன்மையாவது-எல்லாருக்கும் சேஷியாய், எல்லாரையும் நியமநம் பண்ணுவது.

(2) உலகம் என்பது வடமொழியில் லோகம் என்கிற சொல். அதற்கு பார்க்கப்பட்டது என்று பொருள். அதாவது, பிரமாணங்களாலே அறியப்பட்ட வஸ்துக்கள். அவைகள்—ஸத்துவம் முதலான மூன்று குணங்களுடைய பிரகிருதி, காலம், ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ள வைகுந்தலோகத்திலிருக்கும் திரவியம், ஆத்மாக்களுடைய தர்மமான ஜ்ஞாநம், கர்மங்களாலே கட்டுப்பட்ட ஆத்மாக்கள், கட்டிலிருந்து விடுபட்ட முக்தர்கள், ஒருபோதும் கட்டுப்படாத நித்தியர்கள். இவைகளில் முதல் நான்கும் அசேதநங்கள்; மற்ற மூன்றும் சேதநர்கள். ஆக ஏழு உலகங்கள்.

(3) 'ஏற்ற' என்பதற்கு ஏறும்படி செய்ய என்று பொருள். ஒரு பக்தன் பிரீதியுடன் ஒன்றை ஸமர்ப்பித்தால், அதை எம்பெருமான் தானே தன் தலையாலே வாங்கிக்கொள்ளுகிறான் என்று பிரமாணமிருக்கிறது.

(4) 'வீற்றிருந்து' என்று பொதுவாய்ச் சொன்னபோதிலும், எம்பெருமானுக்கே உள்ள வைகுந்தத்திலுள்ள இருப்பு இங்கே சொல்லப்படுகிறது.

(இ - ம்) நோற்றேற்கு - நோற்ற எனக்கு: வினையால் அணையும் பெயர். (1)

---

மையகண் ணாண்மலர் மேலுறை வாளுறை மார்பினன்
செய்யகோ லத்தடங் கண்ணன்விண் ணோர்பெரு மான்றன்னை
மொய்யசொல் லாலிசை மாலைக ளேத்தியுள் ளப்பெற்றேன்
வெய்யநோய் கண்முழு தும்வியன் ஞாலத்து வீயவே. (உ)

(ப - ரை) மைய கண்ணாள் - மையையுடைய (கறுப்பான) கண்களை உடையவளாய், மலர் மேல் உறைவாள் - தாமரைப்பூவின்மேலே வஸிக்கிறவளாயிருக்கிற பிராட்டி, உறை மார்பினன் - எப்போதும் வஸிக்கிற மார்பை உடையவனாய், செய்ய கோலம் தடம் கண்ணன - சிவந்த அழகான விசாலமான கண்களையுடையவனாய், விண்ணோர் பெருமான் தன்னை - நித்தியஸூரிகளின் தலைவனாயிருக்கிற எம்பெருமானை, வெய்ய - க்ரூரங்களான, நோய்கள் முழுவதும்-என்னுடைய வருத்தங்களெல்லாம், வியன் ஞாலத்து-ஆச்சரியமான பூமியிலேயிருக்கும்போதே, வீய - நாசமாகும்படி, மொய்ய - அழகான பதங்களுடன் நெருக்கமாய் சேர்க்கப்பட்ட, சொல்லால, இசை மாலைகள் - மாலைகள்போல் இனியதான கானத்துடன், ஏத்தி - ஸ்தோத்திரம் செய்து, உள்ளப்பெற்றேன் - தியானம் செய்யும்படியான பாக்கியத்தைப் பெற்றேன்.

(கருத்து) வைகுந்தத்தில் திருவனந்தாழ்வான்மேலே மலருகிற கருநெய்தல்போல் கறுத்த திருக்கண்களையுடைய பிராட்டியுடன்கூட எழுந்தருளி இருக்கிறவனாய், அவளுடன் சேர்ந்திருப்பதாலே உண்டான பிரீதியாலே சிவந்த அழகான விசாலமான கண்களை உடையவனாய், ஆதிசேஷன் முதலான நித்திய ஸூரிகளால் சூழப்பட்டவனாய் இருக்கிற எம்பெருமானை நான் திருவாய்மொழிகளால் கானம் பண்ணித் தியானம் பண்ணும்படியான பாக்கியத்தை அடைந்தேன். இதனால், நான் இந்தப் பூமியிலிருக்கும்போதே க்ரூரங்களான என்னுடைய எல்லா வருத்தங்களும் நாசமடைந்தன.

குறிப்பு:—வியன்ஞாலம்:. பூமிக்கு ஆச்சரியமாவது - ஸர்வேச்வரன் இங்கே அவதாரம் செய்தால் அவனையும் வருத்தப்

படுத்தும்படி இருப்பது. ராமாவதாரத்தில் அவன் ராஜ்யத்தை இழந்து, காட்டில் வஸித்து, மனைவியைவிட்டுப் பிரிந்து, அவளை ரக்ஷிக்கப் பாடுபட்ட ஜடாயுவையும் இழந்து இப்படி பாடுபட்டானல்லவா ? (2)

---

வீவிலின் பம்மிக வெல்லை நிகழ்ந்தநம் மச்சுதன்
வீவில்சீ ரன்மலர்க் கண்ணன்விண் ணோர்பெரு மான்றன்னை
வீவில்கா லம்மிசை மாலைக ளேத்திமே வப்பெற்றேன்
வீவிலின் பம்மிக வெல்லை நிகழ்ந்தனன் மேவியே. (௩)

(ப - ரை) வீவு இல் - நாசமில்லாத, இன்பம் - ஆநந்தத்தினுடைய, மிக எல்லை - மிகுந்த எல்லையிலே, நிகழ்ந்த - இருக்கிறவனாய், நம் அச்சுதன் - நம்முடைய ஆச்ரிதர்களைக் கைவிடாதவனாய், வீவு இல் சீரன் - நாசமில்லாத நல்ல குணங்களையுடையவனாய், மலர் கண்ணன் - தாமரைப்பூவின் இதழ்போன்ற திருக்கண்களையுடையவனாய், விண்ணோர் பெருமான்தன்னை - நித்தியஸூரிகளுக்குத் தலைவனாயிருக்கும் எம்பெருமானை, வீவு இல் காலம் - முடிவில்லாத காலமெல்லாம், இசை மாலைகள் ஏத்தி - மாலைகள்போலே இனியவைகளான கானங்களாலே ஸ்தோத்திரம் பண்ணி, மேவ பெற்றேன் - அவனைக் கிட்டும்படியான பாக்கியத்தைப் பெற்றேன, மேவி - அவனைக்கிட்டி, வீவு இல் இன்பம் - நாசமில்லாத ஆநந்தத்தினுடைய, மிக எல்லை - மிகுந்த எல்லையிலே, நிகழ்ந்தனன் - இருக்கிறேன்.

(கருத்து) அளவில்லாத ஆநந்தத்தை உடையவனாய், ஆச்ரிதர்களைக் கைவிடாதவனாய், தாமரைக்கண்ணனாய், நித்தியஸூரிகளால் எப்போதும் ஸேவிக்கப்பட்டவனாயிருக்கிற எம்பெருமானைக் கானத்தாலே எப்போதும் ஸ்தோத்திரம் பண்ணிக் கிட்டும்படியான பாக்கியத்தை அடைந்தேன். எனக்கு உண்டான ஆநந்தத்துக்கு அளவு இல்லை.

குறிப்பு :—(1) பாட்டின் முதல் அடியால், எம்பெருமான் வைகுந்தத்தில் பிராட்டியுடன்கூட இருந்து தன்னைத்தான் அநுபவிக்கிறான் ; அந்த ஆநந்தத்துக்கு அளவில்லையென்று சொல்லப்படுகிறது.

(2) எம்பெருமானைத் திருவாய்மொழியால் கானத்துடன் ஸ்தோத்திரம் செய்து அநுபவித்து உண்டான ஆழ்வாருடைய ஆநந்தத்துக்கும் அளவில்லை என்று நாலாவது அடியால் சொன்னதின் கருத்து—எம்பெருமானுடைய ஆநந்தத்தையும் ஆழ்வார் ஆநந்தத்தையும் நிருபணம் பண்ணினால், ஆழ்வார் ஆநந்தத்துக்கு ஆயிரத்தில் ஒருபாகமாகக்கூட அவனுடைய ஆநந்தம் இருக்குமோ? என்று.

(3) 'வீவில் சீர்' என்பது உபலக்ஷணமாய் வாத்ஸல்யத்தையும் ஸௌசீல்யத்தையும் ஐச்வரியத்தையும், 'மலர்க்கண்ணன்' என்பது அழகையும், முதலடி வைகுந்தத்தில் லக்ஷ்மீ பூமி நீளைகளுடன் இருப்பையும் காட்டுகின்றன 'விண்ணோர் தலைவன்' என்பது தனக்குக் கைங்கரியம் செய்வதையே போகமாக எண்ணுகிற திருவனந்தாழ்வான் முதலான நித்திய ஸூரிகளாலே இடைவிடாமல் ஸேவிக்கப்படுகிறவன் என்பதைக் காட்டுகிறது.

(3)

மேவி நின்றுதொழு வார்வினை போகமே வும்பிரான்
றூவியம் புள்ளுடை யானட லாழியம் மான்றன்னை
நாவிய லாலிசை மாலைக ளேத்திநண் ணப்பெற்றேன்
றாவியேன் றாவியை யானறி யேன்செய்த வாற்றையே. (௪)

(ப - ரை) தூவி அம் புள் உடையான - சிறகுகளையுடைய அழகான கருடபக்ஷியை வாஹநமாக உடையவனாய், அடல் ஆழி-பராக்கிரமத்தையுடைய சக்கராயுதத்தையுடையவனாய், அம்மான் தன்னை - ஸ்வாமியாய், மேவி நின்று - கிட்டி இருந்து, (ஒரு பிரயோஜநத்தை வேண்டி அது கிடைத்தவுடன் விலகுகிறவர்கள் போலில்லாமல் வேறு பிரயோஜநங்களை ஆசைப்படாமலிருந்து) தொழுவார் - ஸேவிக்கிற ஜநங்களுடைய, வினை போக - கர்மங்கள் நாசம் அடையும்படி, மேவும் பிரான் - சேரும்படியான ஆசை உடையவனாய் அவர்களுக்கு உபகாரம் பண்ணுகிறவனாயிருக்கும் எம்பெருமானை, நா இயலால் - நாக்கின் வியாபாரமான, இசை மாலைகள் - மாலைகள் போன்ற கானங்களாலே, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, நண்ணப் பெற்றேன் - கிட்டும்படியான பாக்கியம் பெற்றேன், ஆவி - (எல்லாருக்கும்) ஆத்மாவான ஸர்வேச்வரன்,

என் ஆவியை - என் ஆத்மாவை (என் ஸ்வரூபத்தை), செய்த ஆற்றை - செய்த பிரகாரத்தை, (தன்னை ஸ்தோத்திரம் பண்ணி அநுபவிக்கும்படி பண்ணின விதத்தை), யான அறியேன் - அதை இவ்வளவு என்று அளவிட சக்தியில்லாதவனாய் இருக்கிறேன.

(கருத்து) கருடன், திருவாழி முதலான நித்திய ஸூரிகளாலே எப்போதும் ஸேவிக்கப்பட்டவனாய், வேறு பிரயோஜனங்களை வேண்டாமல் தன்னைத் தொழுகிற ஜநங்களுடன் ஆசையுடன் சேர்ந்து அவர்களுக்கு உபகாரம் செய்கிறவனாய் இருக்கிற எம்பெருமானை நாக்கின வியாபாரமான கானங்களாலே ஸ்தோத்திரம் பண்ணி, அநுபவிக்குமபடியான பாக்கியத்தைப்பெற்றேன். மிகவும் தாழ்ந்த என்னைத தன்னை அநுபவிக்கும்படி செய்த ஸௌசீல்யமெனகிற குணத்தைப்பற்றி நான் எனனசொல்வேன்? அதற்கு ஓர் அளவுண்டோ?

குறிப்பு:—(1) முன் பாட்டுகளில் 'விண்ணோர்' என்று பொதுவாய்ச் சொன்னதை இதில் விரிவாய் சொல்லுகிறார். விண்ணோர் என்பது - கருடன் திருவாழியாழ்வான் முதலானவர்கள்.

(2) கருடன சிறகைச் சொன்னதின கருத்து - ஆச்ரிதர்களிடத்தில் எம்பெருமானைச் சீக்கிரம் கொணடுபோகும்படியான ஸாதநம் அவனுக்கு இருககிறது என்று. (4)

---

ஆற்ற நல்லவகை காட்டுமம் மானை யமரர்த
மேற்றையெல் லாப்பொரு ளும்விரித் தானையெம் மான்றன்னை
மாற்றமா லைபுனைந் தேத்திநா ளுமகிழ் வெய்தினேன்
காற்றின் முன்னங் கடுகிவினை நோய்கள் கரியவே. (ரு)

(ப - ரை) அமரர்தம் - நித்தியஸூரிகளுடைய, ஏற்றை - தலைவனாய், எல்லா பொருளும் - (அறியவேண்டிய) எல்லா அர்த்தங்களையும், விரித்தானை - விரிவாகச் சொன்னவனாய், எம்மான் தனனை - இந்தவிதமாய் எனக்கு உபகாரம் செய்தவனாய், ஆற்ற - பொறுக்க (அவனுடைய அநுபவத்தினால் எனக்கு உண்டாகும் ஸந்தோஷம் அடங்க அடங்க), நல்லவகை - தன்னுடைய நல்லுவகைகளை (குணங்களை), காட்டும் அம்மானை - காட்டினவனாயிருந்த

என் ஸ்வாமியை, வினை - பாபங்களும், நோய்கள் - வியாதி களும (ஆசை, த்வேஷம் முதலானவைகளும), காற்றின் முன்னம்- (வேகமாகப் போகிற) காற்றைக்காட்டிலும், கடுகி - அதிக வேக மாக ஓடி, கரிய - எரிந்து சாம்பலாகும்படி, மாற்றம் மாலை-சொற் களின் சேர்க்கையாகிய (திருவாய்மொழியாகிய) மாலைகளை, புனைந்து - தொடுதது, ஏத்தி - ஸ்தோத்திரம் பண்ணி, நாளும் - ஒவ்வொருநாளும், மகிழ்வு எய்தினேன் - ஸந்தோஷத்தை அடைந் தேன்.

(கருத்து) நித்திய ஸூரிகளுக்குத் தலைவனுயிருந்து கிருஷ் ணனாக அவதாரம் செய்து அர்ஜுநனுக்கு உபதேசம் செய்கிற வியாஜத்தாலே அறியவேண்டிய எல்லா வேதார்த்தங்களையும எல்லாருக்கும் விரிவாய் உபதேசித்தவனாய், தனனுடைய அநுப வத்தாலே எனக்கு உண்டான ஸந்தோஷம் அடங்க அடங்க, தன்னை எனக்குக காட்டினவனாயிருந்த என ஸ்வாமியை நான் திரு வாய்மொழிகளாலே ஸ்தோததிரம் பண்ணி ஒவ்வொருநாளும் ஸந்தோஷத்தை அடைந்தேன். இதனால் என்னுடைய பாபங்க ளும், அவைகளாலுண்டான ஆசை, த்வேஷம் முதலான வியாதிக ளும மிகவும் வேகமாக ஓடிப்போய் எரிந்து சாம்பலாய்விட்டன.

குறிப்பு:—ஏற்றை : ஏறு-ருஷபம், அதாவது சிலாக்கியமான வஸ்து. அதனால் தலைவன் என்கிற அர்த்தம் கிடைக்கிறது.

(இ - ம்) காற்றின் : இன் - ஐந்தாம் வேற்றுமை உருபு; காற் றைக் காட்டிலும் என்று பொருள். (5)

---

கரிய மேனிமிசை வெளிய நீறுசிறி தேயிடும்
பெரியகோ லத்தடங் கண்ணன்விண் ணோர்பெரு மான்றன்னை
யுரியசொல் லாலிசை மாலைக ளேத்தியுள் ளப்பெற்றேற்
கரியதுண் டோவெனக் கின்றுதொட் டும்மினி யென்றுமே. (௬)

(ப - ரை) கரிய மேனி மிசை - நீலமான திருமேனியின் மேலே, வெளிய நீறு - வெளுப்பான பொடியை (கர்ப்பூரப் பொடியை), சிறிதே இடும் - திருமேனிக்கு ஒரு அழகுண்டா கும்படி கொஞ்சம் சாத்திக்கொண்டிருக்குமவனாய், பெரிய -

விசாலமான, கோலம் - அழகான, தடம் கண்ணன் - குளம் போல விசாலமான திருக்கண்களை உடையவனாய், விண்ணோர் பெருமான் தன்னை - நித்திய ஸூரிகளுக்குத் தலைவனாயிருக்கும் எம்பெருமானை, உரிய - அவனுக்குத் தகுந்த, சொல்லால் - திருவாய்மொழிகளால், இசை மாலைகளால் - மாலைகள் போலிருக்கிற கானங்களால், ஏத்தி - ஸ்தோத்திரம் செய்து, உள்ள பெற்றேற்கு - தியானம் செய்யும்படியான பாக்கியம் பண்ணின எனக்கு, இன்று தொட்டும் - இந்த தினம் முதல், இனி என்றும் - இனி எப்போதும், அரியது உண்டோ - கிடைக்கமுடியாதது உண்டோ?

(கருத்து) நீலமான திருமேனிக்கு ஒரு அழகு உண்டாகும்படி கர்ப்பூரப் பொடியைக் கொண்டு சாத்திக்கொண்டவனாய், தாமரைத் தடாகம்போல விசாலமாயும், அழகாயுமுள்ள திருக்கண்களை உடையவனாய், இந்த அழகாலே நித்தியஸூரிகளுக்குத் தலைவனாய் இருந்த எம்பெருமானை அவனுக்குத் தகுந்த திருவாய்மொழிகளாலே பாடி ஸ்தோத்திரம் பண்ணும்படியான பாக்கியத்தை அடைந்த எனக்கு இந்தத் தினம் முதல் வரப்போகிற எல்லா காலத்திலும் கிடைக்க முடியாதது உண்டோ?

(இ - ட்) 'உண்டோ' என்பதில் ஓ என்பது எதிர்மறைப் பொருள்; இல்லையென்று கருத்து. (6)

---

என்றுமொன் றாகியொத் தாருமிக் கார்களுந் தன்றனக்
கின்றிநின் றானையெல் லாவுல கும்முடை யான்றன்னைக்
குன்றமொன் றான்மழை காத்த பிரானைச்சொன் மாலைக
ணன்றுசூட் டும்விதி யெய்தின மென்ன குறைநமக்கே. (௭)

(ப - ரை) என்றும் ஒன்றாகி - எப்போதும் ஏகவிதமாய், தன் தனக்கு - தனக்கே உள்ள ஆகாரத்தையுடைய (ஸௌலப்பியம், ஸௌசீலயம் என்கிற குணங்களை உடைய தனக்கு), ஒத்தாரும் - ஸமமானவரும், மிக்கார்களும் இன்றி நின்றானை - மேற்பட்டவரும் இல்லாமல் இருக்கிறவனாய், எல்லா உலகும் உடையான் தன்னை - எல்லா உலகங்களையும் தனக்கு சேஷமாக உடையவனாய், குன்றம் ஒன்றால் - கோவர்த்தனம் என்கிற ஒரு மலையாலே, மழை காத்தபிரானை - மழையைத் தடுத்து உபகாரம் செய்தவனாயிருந்த

எம்பெருமானை, சொல் மாலைகள் - சொற்களாகிய மாலைகளை, நன்றாய் சூட்டும் - அவன் தலையால் வாங்கிக்கொள்ளும்படி சூட்டும்படியான, விதி - (அவனுடைய கருணையாகிய) பாக்கியத்தை, எய்தினம் - அடைந்தோம் நமக்கு என்ன குறை?

(கருத்து) எப்போதும் ஒரேவிதமாய் தனக்கு ஸமமானவனும் மேற்பட்டவனும் இல்லாதவனாய் எல்லா உலகங்களுக்கும் யஜமானனாய் கருணையால் கோவர்த்தன மலையைத் தூக்கிப்பிடித்து, மழையைத் தடுத்து, கோகுலத்தை ரக்ஷித்து உபகாரம் செய்தவனாய் இருந்த எம்பெருமானைப்பற்றி பக்தியுடன் திருவாய்மொழி பாடும்படியான அவனுடைய கருணையாகிய பாக்கியத்தை நாம் அடைந்தோம். நமக்கு இனி என்ன குறை இருக்கிறது?

குறிப்பு :—(1) ஒரு ராஜாவுக்கு ஒரு காலத்தில் ஸமமானவனும் மேற்பட்டவனும் இல்லாமல் இருக்கலாம். வேறு காலத்தில் அவர்கள் உண்டாகலாம் எம்பெருமானுக்கு அப்படி இல்லை. அவனுக்கு ஒருநாளும் ஸமமானவரும் மேற்பட்டவரும் இல்லை.

(2) முதற்பாட்டில சொன்ன பாக்கியமானது ஸுக்ருதம். இந்தப் பாட்டில் சொல்லுகிற பாக்கியமானது எம்பெருமானுடைய கருணை. (7)

---

நமக்கும்பூ வின்மிசை நங்கைக்கு மின்பனை ஞாலத்தார்
தமக்கும்வா னத்தவாக் கும்பெரு மானைத்தண் டாமரை
சுமக்கும்பா தப்பெரு மானைசசொன் மாலைகள் சொல்லுமா
றமைக்கவல் லேற்கினி யாவர் நிகரகல் வானத்தே. (அ)

(ப - ரை) நமக்கும் - (இவரைக்கு ஆச்ரயித்த) நமக்கும், பூவின் மிசை நங்கைக்கும் - தாமரைப்பூவின் மேலே வஸிக்கிற குணங்கள் நிறைந்த பிராட்டிக்கும், இன்பனை - இனியவனாய், ஞாலத்தார் தமக்கும் - பூமியிலிருக்கிற மனிதர்களுக்கும், வானத்தவர்க்கும்-ஸ்வர்க்கலோகத்திலிருக்கிற தேவதைகளுக்கும், பெருமானை-அடையமுடியாதவனாய், தண் தாமரை-குளிர்ந்த தாமரைப் பூவாலே, சுமக்கும் பாதம் பெருமானை - சுமக்கப்படும் திருவடி

களை உடையவனாயிருக்கிற ஸர்வேசுவரனைப்பற்றி, சொல்லும் ஆறு - சொல்லும்படி, சொல் மாலைகள் - திருவாய்மொழிகளை, அமைக்க வலலேற்கு - பூர்ணமாகச் செய்யச் சகதியுள்ள எனக்கு, இனி, அகல் வானத்து - விசாலமான வைகுந்தத்தில், யாவர் நிகர் - எவர் ஸமமானவர்.

(கருத்து) பெரிய பிராட்டியிடத்தில் காட்டிலும் இன்று ஆச்ரயித்த நம்மிடத்தில் அதிக ஆசையுள்ளவனாய், தனனை ஆச்ரியிக்காமல் பூமியிலும ஸ்வர்க்கலோகததிலுமிருககிறவர்களாலே கிட்ட முடியாதவனாய், தனனுடைய திருவடிகளின அழகு முதலிய குணங்களுக்குத தோற்று ஆஸநமான தாமரைப்பூ அவைகளைச் சுமக்கிறதோ எனறு எண்ணும்படி அழகுள்ள திருவடிகளை உடையவனாய் இருக்கிற எம்பெருமானை, "என்னைக் கவிபாடு" என்று சொன்னால், அவன் ஸந்தோஷப்படும்படி திருவாய்மொழியைப் பாட சக்தியுள்ள எனக்கு இனிமேல் விசாலமான வைகுந்தத்திலும் ஸமமாய் இருப்பவர் யாவர்? ஒருவரும் இல்லை.

குறிப்பு:—(1) முதல் அடியில், 'நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பனாய்' என்று பொதுவாய்ச சொன்னபோதிலும், 'நமக்கும' என்று முதலில் சொன்னபடியால் பிராட்டியைக் காட்டிலும் நம்மிடததில் அதிக ஆசை எம்பெருமானுக்கு இருக்கிறது என்று காட்டப்படுகிறது.

(2) இரண்டாம் அடியால், ஆச்ரயிக்காதவர்களாலே எம்பெருமானைக் கிட்டமுடியாத விஷயததில் பூமியில் இருக்கிறவர்களுக்கும் ஸ்வர்க்கலோகத்திலிருக்கிறவர்களுக்கும் வாசியில்லை என்று காட்டப்படுகிறது. இந்த அடிக்கு வேறுவிதமாயும் பொருள்கொள்ளலாம்:—பூமியிலிருப்பவர்களுக்கும், வைகுந்தத்திலிருக்கும் நித்தியஸூரிகளுக்கும் ஸ்வாமியான—என்று. இந்த அர்த்தத்தை ஸ்ரீமத ரஹஸ்யத்ரயஸாரத்தில் உபோத்காதாதிகாரத்தில் ஸ்ரீ தேசிகன் திருவுள்ளம் பற்றியிருக்கிறார்.

(3) மூன்றாவது அடியில் உத்ப்ரேக்ஷை என்கிற அலங்காரம சொல்லப்படுகிறது. தோற்றவன ஜயித்தவனைத் தூக்குவது வழக்கம். ஆஸநமான தாமரைப்பூ திருவடிகளைச் சுமப்ப

தாலே, அவைகளின் அழகுக்குத தோற்றதோ என்று எண்ணும் படியாயிருக்கிறது. அதாவது—தாமரைப்பூவைக் காட்டிலும் திருவடிகள் அதிக அழகுள்ளவைகள் என்று ஏற்படுகிறது (8)

---

வானத்தும் வானத்துள் ளும்பரு மண்ணுள்ளு மண்ணின்கீழ்த்
தானத்து மெண்டிசை யுந்தவி ராதுநின் ருன்றன்னைக்
கூனற்சங் கத்தடக் கையவ னைக்குட மாடியை
வானக்கோ னைக்கவி சொல்லவல் லேற்கினி மாறுண்டே. (௯)

(ப - ரை) வானத்தும் - ஸ்வர்க்கத்திலும், வானத்துள் உம்பரும - அதற்குமேலுள்ள ஆகாசததிலிருக்கிற உலகங்களிலும், மணணுள்ளும-பூமியிலும், மண்ணின் கீழ் தானத்தும் - பூமிக்குக் கிழே இருக்கும் இடங்களிலும், எண் திசையும்-(அவைகளிலுள்ள) எட்டுவிதமான வஸ்துக்களிலும, தவிராது - ஒன்றும் விட்டுப் போகாமல், நின்றுன் தன்னை - ஆதமாவாய் வியாபித்திருக்கிற வனாய், கூனல் - வளைந்திருக்கிற, சங்கம் தடம் கையவனை - சங் கத்தை விசாலமான திருக்கையில் உடையவனாய், குடமாடியை, வானக்கோனை - நிததியஸூரிகளின தலைவனாயிருந்த எம்பெரு மானை, கவி சொல்ல வல்லேற்கு - பாட்டுக்களாலே ஸ்தோத்திரம் பண்ண சக்தியுள்ள எனக்கு, இனி மாறு உண்டே - இனிமேல் ஸமமானவரும் உண்டோ ?

(கருதது) எல்லா உலகங்களிலும் அவைகளிலுள்ள எட்டு விதமான வஸ்துக்களிலும் ஆதமாவாகி நிறைநதவனாய், விசால மான திருக்கையில சங்கததைஉடையவனாய், ஆச்ரிதர்களை ரக்ஷிப் பதற்காக கிருஷ்ணனாய் அவதாரம் செய்து குடககூதது முத லான ஆச்சரியமான வேலைகளைச் செய்தவனாய், நிததியஸூரி களின் தலைவனாய் இருந்த எமபெருமானைத் திருவாய்மொழியால் பாடச் சக்தியுள்ள எனக்கு ஸர்வேச்வரனுன அவனும ஸம மாவனோ ?

குறிப்பு :—(1) எட்டுவிதங்களான வஸ்துக்களாவன—தேவர் கள், மனிதர்கள், மிருகங்கள், ஸ்தாவரங்கள் எனகிற நாலுவிதங் களும் ; பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்கிற நாலு வர்ணங்களும்.

(2) 'கூனல் சங்கம' என்பதற்கு எம்பெருமானுடைய திருக்கையில் இருப்பதாலே ஸந்தோஷம் அடைந்து வளைந்து இருக்கிறது என்று கருத்து.

(3) 'மாறு' என்கிற சொல்லுக்கு இன்னார் ஸமம் என்று சொல்லாமல்போனபோதிலும், முன் பாட்டில், "யாவர் நிகர் அகல் வானத்தே" என்று சொன்னபடியால் ஸர்வேச்வரனும் ஸமம் அன்று என்று கருத்து.

(இ - ம்) எண்டிசை - இந்த சொல் ஆகுபெயராய் திக்குக் களில் இருக்கிற வஸ்துக்களைச் சொல்லுகிறது. (9)

---

உண்டு முமிழ்ந்துங் கடந்து மிடந்துங் கிடந்துநின்றுங்
கொண்டகோ லத்தொடு வீற்றிருந் தும்மணங் கூடியுங்
கண்டவாற் றற்றன தேயுல கெனாநின் றான்றன்னை
வண்டமிழ் நூற்கநோற் றேனடி யார்க்கின்ப மாரியே. (௧0)

(ப - ரை) (உலகத்தை) உண்டும், உமிழ்ந்தும் - ஸ்ருஷ்டி காலத்தில் அதை வெளிப்படுத்தியும், கடந்தும் - (திரிவிக்கிரமாவ தாரத்தில் அதை) அளந்தும், இடந்தும் - (வராஹமாய் அதைப பிரளய ஜலத்திலிருந்து மேலே) கொண்டுவந்தும், கிடந்தும் - படுத்துக்கொண்டும், நின்றும், கொண்ட கோலத்தொடு - தான் எடுத்துக்கொண்ட அழகோடு, வீற்றிருந்தும் - உட்கார்ந்திருந் தும், மணம் கூடியும் - சேர்க்கையை அடைந்தும், கண்ட ஆற் றால் - இப்படி பார்க்கப்பட்ட விதங்களாலே, உலகு தனதே என்று நின்றான் தன்னை - உலகம் தனக்கே சொந்தமானது என்று தோன்றும்படி இருந்த எம்பெருமானைக்குறித்து, வண் தமிழ் - சிலாக்கியங்களான தமிழ்ப் பாட்டுக்களை, நூற்க - உண்டுபண்ணு வதற்கு, நோற்றேன் - பாக்கியம்செய்தேன், அடியார்க்கு இன்பம் மாரி - இஃது அவனுடைய தாஸர்களுக்கு ஆநந்தத்தை வர்ஷிக்கும் மேகம் போலிருக்கும்.

(கருத்து) உலகத்தைப் பிரளய காலத்தில் வயிற்றில் வைத் துக்கொண்டும், ஸ்ருஷ்டி காலத்தில் அதை வெளிப்படுத்தியும், திரிவிக்கிரமனாய் அதை அளந்தும், வராஹமாய் பூமியைப் பிரளய

ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தும், அர்ச்சையாய் சில இடங்களில் படுத்தும், சில இடங்களில் நின்றும், சில இடங்களில் அழகிய திவ்யரூபத்தோடு உட்கார்ந்தும், பூமிப்பிராட்டியாரோடு சேர்ந்திருந்தும், இப்படி பலவிதமான வேலைகளாலே தனக்கேயுள்ள அழகாலும் திவ்யரூபத்தாலும் உலகமானது தனக்கே ஸொந்தமானது, வேறொருவருக்கும் ஸொந்தமன்று என்று காட்டிக்கொண்டு இருந்த எம்பெருமானைப்பற்றி சிலாக்கியங்களான தமிழ்ப் பாட்டுக்களைச் செய்யும்படியான பாக்கியத்தைப் பெற்றேன். இதை எம்பெருமானுக்கு வேண்டியவர்கள் கேட்டால் என்ன ஸந்தோஷத்தை அடையமாட்டார்கள்.

குறிப்பு —(1) பயிரிடுகிறவன் ஒரு நிலத்தை உழுது எருப் போட்டு அதில் பயிரை உண்டு பண்ணினால், அந்த அவனுடைய நிலம் என்று எல்லாருக்கும் தோன்றும். அப்படியே எம்பெருமான் உலகத்தில் செய்கிற வியாபாரங்களைப் பார்த்தால், அது அவனுக்கே ஸொந்தம் என்று எவனுக்கும் தோன்றும். இதைச் சாஸ்திரம் கொண்டு அறிய வேண்டுவதில்லை.

(2) வண் தமிழ் - பாட்டுக்கு வண்மையாவது எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் ரூபங்களையும் குணங்களையும் விபூதிகளையும் உள்ளபடி தெரிவிப்பதும், சொற்கள் நன்றாய்ச் சேர்க்கப்பட்டிருப்பதும், கானத்தோடு சொல்லும்படியாயிருப்பதும், அர்த்தத்தாலே மதுரமாயிருப்பதும்.

(3) 'அடியார்க்கு இன்ப மாரியே' என்றதற்குக் கருத்து- நான் எம்பெருமானைப்பற்றி பாடுவதுமாத்திரம் அன்று; அவனிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கும் ஆநந்தத்தை உண்டுபண்ணும்படி பாக்கியம் பண்ணினேன்—என்று. (10)

---

மாரிமா றாத தண்ணம்மலை வேங்கடத் தண்ணலை
வாரிமா றாதபைம் பொழில் சூழ்குரு கூர்நகர்க்
காரிமா றன்சட கோபன்சொல் லாயிரத் திப்பத்தால்
வேரிமா றாதபூ மேலிருப் பாள்வினை தீர்க்குமே (கக)

(ப - ரை) மாரி மாறாத - மழையானது ஓயாமல் பெய்து கொண்டிருக்கிற, தண் - குளுமையுள்ள, அம் - அழகான, வேங்

டத்து மலை - திருவேங்கட மலையில் எழுந்தருளியிருக்கும், அண்ணலை - ஸ்வாமியைப்பற்றி, வாரி மாறாத - ஜலம் மாறிப்போகாததான, பைம் - பசுமையான, பொழில சூழ் - சோலைகளால் சூழப்பட்ட, குருகூர் நகர்-குருகூர் எனகிற பட்டணததில் எழுந்தருளியிருந்த, காரி மாறன் சடகோபன் - காரியின் குமாரஞன ஆழ்வாரால், சொல் - சொல்லப்பட்ட, ஆயிரததுள் - ஆயிரம பாடடுக்களுக்குள்ளே, இப்பததால் - இந்தப் பத்துப்பாட்டுக்களை அடிக்கடி படிப்பதாலே, வேரி மாறாத - நல்லவாஸனை மாறிப்போகாத, பூமேல் இருப்பாள் - தாமரைப்பூவினமேல எழுந்தருளியிருக்கும் பிராட்டி, வினை தீர்க்கும - (எம்பெருமானுடைய அநுபவததுககு விரோதிகளான) பாபங்களைத தீர்ப்பள்

(கருத்து) திருவேங்கடமுடையானைப்பற்றி ஆழ்வார் சொன்ன இந்தப் பத்துப்பாட்டுக்களை அடிக்கடி படிக்கிறவர்களுடைய எம்பெருமானை அநுபவிப்பதற்கு விரோதிகளான பாபங்களைப் பிராட்டி தீரப்பள்.

குறிப்பு:—(1) 'மாரி மாறாத' என்பதற்கு—எப்படி ஓயாமல் பெய்துகொண்டிருக்கிற மழையானது காட்டுததீயை அணைக்குமோ, அப்படியே ஸமஸாரததில் உணடாகும எல்லாருடைய தாபங்களைத திருவேங்கடமலை நீக்கும என்று கருத்து.

(2) இந்த திருவாய்மொழி வைகுண்டநாதனைச் சொன்ன போதிலும் கருத்தாலே திருவேங்கிடமுடையானைச் சொன்னதாகக்கொள்ளலாம் அவன் வாதஸல்யம் என்கிற குணததுக்கு எல்லைநிலமாய் இருக்கிறுன் என்று 8-வது பாட்டில் 'நமக்கும் பூவின் மிசை நங்கைக்கு மின்பனே' என்பதால காட்டப்பட்டது.

(3) பிராட்டி, எம்பெருமானுடைய வாத்ஸல்யமாகிய குணத்தை அநுபவிக்கிறவளாகையாலே அந்தக் குணத்தைச் சொல்லுகிற இந்தத திருவாய்மொழியைப் படிக்கிறவர்களை ரக்ஷிப்பதைத் தன்னுடைய பொறுப்பாக எண்ணிக்கொண்டு, அவர்களுடைய - எம்பெருமானை அநுபவிப்பதற்கு விரோதிகளான பாபங்களை அவளே தீர்ப்பள் என்று கருத்து.

[illegible] ||௪௬||

---

எம்பெருமானைப் பாடுகிறவர்களைத் தங்கியர்களாகப் பண்ணும்படியான அவனுடைய குணங்கள் இத்திருவாய்மொழியில் சொல்லப்படுகின்றன. அவைகளாவன —(1) ஆபத்தை அடைந்தவர்களுக்கு பந்துவாயிருந்து அதைத் தீர்ப்பது ; (2) பிராட்டியின் கணவனாயிருப்பது ; (3) அளவில்லாத ஆநந்தமுள்ளவனாயிருப்பது; (4) பக்தர்களுடைய பாபத்தைப் போக்கும் தன்மை; (5) அதற்குத் தகுந்த ஸமயத்தில் ஆச்வாஸத்தைப் பண்ணும் ஸாமர்த்தியம், (6) காப்பூரப்பொடியைச் சாத்திகொண்டிருப்பதாலே உண்டான அழகு; (7) ஸமாநரும் மேற்பட்டவருமில்லாமை; (8) பிராட்டியைப்போலே நம்மையும் ஸந்தோஷப்படுத்துவது; (9) எங்கும் நிறைந்திருப்பது ; ச்லோகத்தில் தோஷகே என்கிற சொல்லால் 10-ம் பாட்டில் "இன்பமாரியே" என்கிறதின் அர்த்தமும் சொல்லப்பட்டது.

---

# ஆறும் திருவாய்மொழி.

அவ—இப்படி எம்பெருமானை அநுபவிக்கும்போது உண்டான அதிகப் பிரீதியினால் அப்போதே அவன் தனனைப் பார்க்க வேண்டும், தன்னுடன் பேசவேண்டும், தன்னைக் கட்டிக்கொள்ள வேண்டும் என்கிற ஆசைபிறந்து அது முடியாமையால் மனது கலங்கி மோஹத்தை அடைந்தார் ஆழ்வார். அவருடைய பந்துக்கள், மோஹத்தின் காரணத்தை அறியாமல் எப்படியாவது அவருக்குப் பிரஜ்ஞை வருவதற்காக வேறு தேவதைகளை ஸந்தோஷப்படுத்தும் வியாபாரங்களைச் செய்ய ஆரம்பித்தார்கள். அவருடைய ஸ்வபாவத்தை அறிந்த மதுரகவி முதலானவர்கள் அந்த வியாபாரங்களைச் செய்யக்கூடாது என்று இந்தத் திருவாய்மொழியில் விலக்கி, ஸரியான பரிஹாரத்தைச் சொல்லுகிறார்கள். இதை அந்யாபதேசத்தாலே ஆழ்வார் பேசுகிறார். அஃதாவது, தன்னை நாயகியாகவும், தனக்கு வந்திருக்கும் மோஹத்தைத் தன் தாயார் கட்டுவிச்சியைக்கொண்டு விலக்கப் பிரயத்நப்படுவதாகவும் அதைத் தன் தோழி விலக்குவதாயும் சொல்லுகிறார்.

(கலித்துறை.)

தீர்ப்பாரை யாமினி யெங்ஙன நாடுது மன்னைமீர்
ரோர்ப்பாலிவ் வொண்ணுத லுற்றநன் னோயிது தேறினோம்
போர்ப்பாகு தான்செய்தன் றைவரை வெல்வித்த மாயப்போர்த்
தேர்ப்பாக னார்க்கிவள் சிந்தை துழாய்த்திசைக் கின்றதே. (க)

(ப - ரை) அன்னைமீர் - தாய்மார்களே! இவ்வொள் நுதல் - அழகான நெற்றியை உடைய இந்தப் பெண், உற்ற - பலமாக அடைந்திருக்கிற, நல் நோய் - நல்ல வியாதியானது, இது - இன்னதென்று, ஓர்ப்பால - விசாரம் செய்து, தேறினோம - நாம் நிச்சயம் செய்தோம். (அஃது என்ன என்றால்) போர் பாகு செய்து - சண்டையில் அணிவகுத்து, அன்று - (துர்யோதநன் முதலானவர்கள் சண்டைக்கு வந்த) அந்தக் காலத்தில், ஐவரை - ஐந்து பாண்டவர்களை, வெல்வித்த - ஜயம் அடையும்படி செய்த, மாயம் போர் தேர் பாகனார்க்கு - ஆச்சரியமான சண்டையில் அர்ஜுனனுக்குத் தேர் ஓட்டிக்கொண்டிருந்த கிருஷ்ணனுடன் சேருவதற்கு, இவள் சிந்தை - இவள் மனது, துழாய் - சுழன்றுகொண்டு, திசைக்

கின்றது - மோஹத்தை அடைகின்றது. இனி - இப்படி நிச்சய மானபிறகு, யாம் - நாம், தீர்ப்பாரை - இந்த வியாதியைத் தீர்க்கிறவர்களை, எங்ஙனம் நாடுதும் - எப்படி தேடவேண்டியது ?

(கருத்து) தாய்மார்களே ! இந்தப் பெண்ணுக்கு வந்திருக்கிற பலமான வியாதியைப்பற்றி நாம விசாரித்தது, அஃது இன்னது என்று தீர்மானம பண்ணினோம் அது என்ன என்றால்—துர்யோதநன் முதலானவர்கள் சண்டைக்கு வந்த காலத்தில் அதற்குச் செய்யவேண்டிய § அணிவகுத்தல முதலான வேலைகளை, ஏழு உலகங்களிலும ஒப்பில்லாத செங்கோல் செலுத்திகொண்டிருக்கிறதானே செய்து, ஐந்து பாண்டவர்களுக்கு ஜயமவரும்படி செய்து கொண்டு, ஆச்சரியமான அந்தச் சண்டையில் அர்ஜுநனுக்குத் தேர் ஓட்டிக்கொண்டிருந்த கிருஷ்ணனுடன சேருவதற்காக இவள் மனம் கலங்கி மோஹத்தை அடைந்திருக்கிறது. இப்படி உண்மை தெரிந்தபிறகு, இவள் வியாதியைத திர்க்கிறவர்களை நாம எங்கே தேடவேண்டியது ? சில்லரை தேவதைகளை ஸந்தோஷப்படுத்த வேலைசெய்துகொண்டு இருக்கிறவர்களிடம அன்று. இவர்கள் இந்த வியாதியைப் போக்கமுடியாதவர்கள்.

குறிப்பு :—(1) பாட்டில் “நனோய்” என்பதற்கு கருத்து- இஃது எமபெருமானை ஆசைப்பட்டு வந்தபடியாலே அது நல்லது என்று. இது தோழியின அபிப்பிராயம.

(2) ‘ஓப்பால்’ என்பதற்கு கருத்து—இவளைக் கிருஷ்ணனுடன் சேரும்படி ஏன் விட்டாய் என்று தாய்மார்கள் தன்னிடத்தில் குற்றம சொல்லுவார்கள என்று எண்ணி, இது தனக்கு முன்னாலே தெரியாததாகவும், இப்போது விசாரித்ததாகவும் அதனால் தெரிந்துகொண்டதாகவும் தோழி சொல்லுகிறாள்.

(இ - ம்) நாடுதும் - தும் காலம் காட்டும் பன்மை விகுதி ; நாடுவோம் என்று பொருள். (1)

---

§ அணிவகுத்தல் - அணி - ஸேனை. வகுத்தல் - அதைப் பிரித்து ஒன்றை முன்பும், ஒன்றைப் பின்பும் மற்றவைகளைத் தகுந்த இடங்களிலும் வைப்பது.

அவ—தாழ்ந்த தேவதைகளை ஸந்தோஷப்படுத்துவதால் இவள் நோய தீராது என்று தகுந்த பரிஹாரத்தைச் சொல்லுகிறாள்—

திசைக்கின்ற தேயிவ ளுயிது மிக்க பெருந்தெய்வ
மிசைப்பின்றி நீரணங் காடு மிளநதெய்வ மன்றிது
திசைப்பின்றி யேசங்கு சககர மேன்றிவள் கேட்கநீ
ரிசைக்கிற்றி ராகினன் றேயில் பெறுமிது காண்மினே. (உ)

(ப - ரை) இவள் நோய் - இவளுடைய வியாதியை, திசைக்கின்றதே - நீங்கள் அறியவில்லையே, இது - இந்த நோயானது, மிக்க பெரும் தெய்வம - மிகவும உயர்ந்த தைவததினிடததின் ஆசையால் வந்தது. இசைபபு இன்றி - பொருநதுதலிலலாமல் (உங்கள்) நீர் அணங்கு ஆடும - நீங்கள் அணங்கு ஆடுகிற, (தேவதையின் ஆவேசததால கூததாடுகிற) இளந் தெய்வம் அன்று இது - சின்ன தைவததாலே வந்ததனறு இந்த வியாதி, திசைப்பு இன்றியே - மயங்காமல், சங்கு சக்கரம என்றும் - சங்கம் என்றும் சக்கரம என்றும், இவள கேட்க - இவள் காதில் படுமபடி, நீர், இசைக்கிற்றிராகில - கானநதேகாடு சொலலச சக்தியுள்ளவர்களாகில், நன்றே - நன்றாகவே, இல பெறும் - இருப்பை அடைவள். (மோஹம் தெளிந்து கணணைத் திறப்பள்.) இது காண்மின் - இதை இப்போதே நீங்கள் பார்க்கலாம்.

(கருத்து) நீங்கள் இவளுடைய வியாதியை இன்னதென்றே அறியவில்லை. அது மிகவும் உயர்ந்த தைவததினிடத்தில் ஆசையால் வந்திருக்கிறது. உங்களுக்கும், உங்களுடைய ஸ்வரூபததுக்கும், இவள் வியாதிக்கும் தகுந்தபடி இல்லாமல் நீங்கள் அணங்கு ஆடுகிற சின்ன தைவத்தால் வந்தது அன்று இந்த வியாதி. இதற்குப் பரிஹாரத்தைச் சொல்லுகிறேன். சின்ன தைவததால் வந்தது என்று சொல்லுகிறவர்கள் வார்த்தையைக் கேட்டு மயங்க வேண்டாம். இவள் காதில் படும்படி சங்கம் என்றும் சக்கரம் என்றும் கானம் செய்யுங்கள். அப்படிச் செய்தால் இவள் மோஹம் உடனே தீரும். இதை நீங்கள் பிரத்தியக்ஷமாகப் பார்க்கலாம்.

(இ - ம்) இல் - என்கிற சொல்லுக்கு வீடு என்று பொருள். அது ஆகுபெயராய் வீட்டின் இருப்பைச் சொல்லுகிறது. இது பெருந்தெய்வம்-காரியத்தையும் காரணத்தையும் ஒன்றாய்ச் சொன்னபடி; இது பெருந்தெய்வத்தின் காரியம் என்று பொருள். இது இளந்தெய்வமன்று என்கிறவிடத்திலும் இப்படியே. (2)

---

அவத்தகாததைச் செய்யவேண்டாம் என்று இதில் சொல்லுகிறாள்:—

இதுகாண்மி னன்னைமீ ரிக்கட்டு விச்சிசொற் கொண்டுநீ
ரெதுவானுஞ் செய்தங்கோர் கள்ளு மிறைச்சியுந் தூவேன்மின்
மதுவார் துழாயமுடி மாயப் பிரான்கழல் வாழ்த்தினா
லதுவே யிவளுற்ற நோய்க்கு மருமருந் தாகுமே (௩)

(ப - ரை) அன்னைமீர் - தாய்மார்களே! இ கட்டுவிச்சி - இந்தக் கட்டுவிச்சியினுடைய, சொல் கொண்டு - சொல்லை ஏற்றுக் கொண்டு, நீர் - நீங்கள், எதுவானும்-(தகாத) ஏதாவதை செய்து, அங்கு - அந்த இடத்திலே, ஓர் கள்ளும் - மிகவும் இளப்பமான கள்ளையும், இறைச்சியும் - மாம்ஸத்தையும், தூவேன்மின் - இறைக்கவேண்டாம். மது வார் துழாய் முடி - தேனைப் பெருக்குகிற திருத்துழாயைக் கிரீடத்தில் தரித்திருக்கிற, மாயப்பிரான்- ஆச்சரியமாய் உபகாரம் செய்கிறவனாய் இருக்கிற எம்பெருமானுடைய, கழல் வாழ்த்தினால் - திருவடிகளை ஸ்தோத்திரம் பண்ணினால், அதுவே, இவள் உற்ற நோய்க்கு - இவள் அடைந்திருக்கிற வியாதிக்கு, அரு மருந்தாம் ஆகும் - சிலாக்கியமான மருந்தாம் ஆகும், இது காண்மின் - இதைப் பாருங்கள்.

கட்டுவிச்சி - சகுனத்தின் அர்த்தத்தைத் தெரிந்து சொல்லுகிறவள்

(கருத்து) தாய்மார்களே! இந்தக் கட்டுவிச்சி சொல்லுவதை ஏற்றுக்கொண்டு தகாத காரியத்தைச் செய்து கள்ளையும் மாமஸத்தையும் இறைத்து அந்த இடத்தை அசுத்தமாகப் பண்ண வேண்டாம். தேனைப் பெருக்குகிற துளஸியைக் கிரீடத்தில் தரிக்கிற எம்பெருமானுடைய திருவடிகளை ஸ்தோத்திரம் பண்ணுங்

கள். அதுவே இவள் அடைந்திருக்கிற வியாதிக்கு சிலாக்கிய மான மருந்து. அதுவே நமமுடைய ஸ்வரூபத்திற்கும் தகுந்தது. இதைப் பாருங்கள்.

குறிப்பு :—(1) பாட்டில் "அங்கு" என்று சொல்வதற்குக் கருத்து—கள்ளையும மாமஸத்தையும் வைததிருக்கும் இடததைப் பார்க்கப் பிடிக்காமல் முகததைத திருப்பிக்கொண்டு 'அங்கு' என்று சொல்லுகிறுள்—என்று.

(2) அதுவே நம்முடைய ஸ்வரூபத்திற்குத் தகுந்ததும் என்பது 'மருந்தும் ஆகும' என்கிற உம்மையின் பொருள். இதற்கு ஆக்கப் பொருள்.

---

அவ—கட்டுவிச்சி வஞ்சனை செய்கிறவள் ; அவள் சொல்லைக் கேட்கவேண்டாம் என்று இதில் சொல்லுகிறுள் :—

மருந்தாகு மென்றங்கோர் மாய வலவைசொற் கொண்டுநீர்
கருஞ்சோறு மற்றைச்செஞ் சோறுங் களனிழைத் தென்பய
னொருங்காக வேயுல கேழும் விழுங்கி யுமிழ்ந்திட்ட
பெருந்தேவன் பேர்சொல்ல கிற்கி லிவளைப் பெறுதிரே. (௪)

(ப - ரை) நீர், அங்கு ஓர் - அங்கே யாரோ ஒரு, மாய அலவை - வஞ்சனைக்காரியான அதிகமாகப் பேசுகிற இவளு டைய, சொல் கொண்டு - சொல்லை ஏற்றுக்கொண்டு, மருந்தாகும் என்று - (அவள் சொல்லும் வேலையானது இவளுடைய வியா திக்கு) மருந்தாகும் என்று பிரமித்து, கரும் சோறும் - கருப் பான சோற்றையும், மற்றை செம் சோறும் - வேறு சிவப்பான சோற்றையும், களன் - களத்திலே (சின்ன தேவதைகள் இருக் கிற இடத்தில்) இழைதது - இடுவதானது, என் பயன் - என்ன பிரயோஜநத்தைக் கொடுக்கும்? ஒருங்காகவே - ஒரே காலத்தி லேயே, உலகு ஏழும் - ஏழு உலகங்களையும், விழுங்கி உமிழ்ந் திட்ட, பெரும் தேவன-பெரிய தேவனுன எம்பெருமானுடைய, பேர் சொல்ல கிற்கில் - திருநாமங்களைச் சொல்ல, சக்தியுள்ளவர் கள் ஆனுல், இவளை பெறுதிர் - இவளை நீங்கள் அடைவீர்கள்,

(கருத்து) இந்தக் கட்டுவிச்சி இந்த ஊர் இன்னாள் என்று தெரியுமா? அவள் வஞ்சனைக்காரி, இன்னது தகுந்தது, இன்னது தகாதது என்று விசாரியாமல் மனதில் தோன்றினதைச் சொல்லுகிறவள். அவள் சொல்லை ஏற்றுக்கொண்டு, அவள் சொல்லுவது இந்தப் பெண்ணின் வியாதிக்கு மருந்து என்று பிரமித்து, கரும் சோற்றையும் செஞ்சோற்றையும் சின்ன தேவதைகள் இருக்கும் இடங்களில் வைப்பதால் என்ன பிரயோஜநம் கிடைக்கும்? ஏழு உலகங்களையும் சேர்த்து பிரளயகாலத்தில் வயிற்றில் வைத்துக்கொண்டிருந்து, ஸிருஷ்டி காலத்தில் அவைகளை வெளிப்படுத்தின பெரிய தைவமான எம்பெருமானே ஆபத் காலத்தில் நம்மை ரக்ஷிக்கிறவன். அவனுடைய திருநாமங்களைச் சொல்ல முடியுமாகில் இவளைப் பெறலாம்.

(இ - ம்) களன் - களம் - போலி. (4)

---

அவ—நீங்கள் செய்யும் பரிஹாரம் இந்தப் பெண்ணின் வியாதியை அதிகப்படுத்துகிறது என்று இதில் சொல்லுகிறாள்:—

இவளைப் பெறும்பரி சிவ்வணங் காடே லன்றந்தோ
குவளைத் தடங்கண்ணுங் கோவைச்சேவ் வாயும் பயந்தனள்
கவளக் கடாக்களி றட்ட பிரான்றிரு நாமத்தா
றவளப் பொடிக்கொண்டு நீரிட் டிடுமின் றணியுமே. (ரு)

(ப - ரை) இ அணங்காடுதல் - இப்படி ஆவேசம் வந்தவள் போல் கூத்தாடுகிறது, இவளை பெறும் பரிசு அன்று - இவளை அடைவதற்கு பரிஹாரம் (உபாயம்) அன்று. அந்தோ - ஐயோ! குவளை தடம் கண்ணும் - குவளைப்பூப்போல் விசாலமான இந்தப் பெண்ணின் கண்களும், கோவை செவ்வாயும் - கோவைப்பழம் போல் சிவப்பான கீழ் உதடும், பயந்தனள் - தங்கள் வர்ணத்தை இழந்து வேறு வர்ணத்தை அடையும்படி ஆனாள். (ஆகையால்) கவளம் கடாம் - (பாகன் கொடுக்கும்) கபளங்களைச் சாப்பிட்டு மதம் பிடித்து மத ஜலத்தைப் பெருக்குகிற, களிறு - (குவலயாபீடம் என்கிற) யானையை, அட்ட - கொன்ற, பிரான் - உபகாரகனான கிருஷ்ணனுடைய, திருநாமத்தால் - திருநாமத்தைச் சொல்லி, தவளம் பொடி - பரிசுத்தமான (பாகவதர்களுடைய

கள். அதுவே இவள் அடைந்திருக்கிற வியாதிக்கு நிலாக்கிய மான மருந்து அதுவே நம்முடைய ஸ்வரூபத்திற்கும் தகுந்தது. இதைப் பாருங்கள்.

குறிப்பு :—(1) பாட்டில் "அங்கு" என்று சொல்வதற்குக் கருத்து—கள்ளையும் மாமஸத்தையும் வைத்திருக்கும் இடத்தைப் பார்க்கப் பிடிக்காமல் முகத்தைத் திருப்பிக்கொண்டு 'அங்கு' என்று சொல்லுகிருள்—என்று.

(2) அதுவே நம்முடைய ஸ்வரூபத்திற்குத் தகுந்ததும் என்பது 'மருந்தும் ஆகும்' என்கிற உம்மையின் பொருள். இதற்கு ஆக்கப் பொருள்.

---

ஆவ—கட்டுவிச்சி வஞ்சனை செய்கிறவள் ; அவள் சொல்லைக் கேட்கவேண்டாம் என்று இதில் சொல்லுகிருள் :—

மருந்தாகு மென்றங்கோர் மாய வலவைசொற் கொண்டுநீர்
கருஞ்சோறு மற்றைச்செஞ் சோறுங் களனிழைத் தென்பய
னொருங்காக வேயுல கேழும் விழுங்கி யுமிழ்ந்திட்ட
பெருந்தேவன் பேர்சொல்ல கிற்கி லிவளைப் பெறுதிரே. (ச)

(ப - ரை) நீர், அங்கு ஓர் - அங்கே யாரோ ஒரு, மாய அலவை - வஞ்சனைக்காரியான அதிகமாகப் பேசுகிற இவளு டைய, சொல் கொண்டு - சொல்லை ஏற்றுக்கொண்டு, மருந்தாகும் என்று - (அவள் சொல்லும் வேலையானது இவளுடைய வியா திக்கு) மருந்தாகும் என்று பிரமித்து, கரும் சோறும் - கருப் பான சோற்றையும், மற்றை செம் சோறும் - வேறு சிவப்பான சோற்றையும், களன் - களத்திலே (சின்ன தேவதைகள் இருக் கிற இடத்தில்) இழைத்து - இடுவதானது, என் பயன் - என்ன பிரயோஜனத்தைக் கொடுக்கும்? ஒருங்காகவே - ஒரே காலத்தி லேயே, உலகு ஏழும் - ஏழு உலகங்களையும், விழுங்கி உமிழ்ந் திட்ட, பெரும் தேவன்-பெரிய தேவனுன எம்பெருமானுடைய, பேர் சொல்ல கிற்கில் - திருநாமங்களைச் சொல்ல, சக்தியுள்ளவர் கள் ஆனுல், இவளை பெறுதிர் - இவளை நீங்கள் அடைவீர்கள்.

(கருத்து) இந்தக் கட்டுவிச்சி இந்த ஊர் இன்னாள் என்று தெரியுமா? அவள் வஞ்சனைக்காரி, இன்னது தகுந்தது, இன்னது தகாதது என்று விசாரியாமல் மனதில் தோன்றினதைச் சொல்லுகிறவள். அவள் சொல்லை ஏற்றுக்கொண்டு, அவள் சொல்லுவது இந்தப் பெண்ணின வியாதிக்கு மருந்து என்று பிரமித்து, கரும் சோற்றையும் செஞ்சோற்றையும் சின்ன தேவதைகள் இருக்கும இடங்களில வைப்பதால் என்ன பிரயோஜனம கிடைக்கும்? ஏழு உலகங்களையும சேர்த்து பிரளயகாலத்தில வயிற்றில் வைத்துக்கொண்டிருந்து, ஸிருஷ்டி காலத்தில் அவைகளை வெளிப்படுத்தின பெரிய தைவமான எம்பெருமானை ஆபத காலத்தில் நம்மை ரக்ஷிக்கிறவன. அவனுடைய திருநாமங்களைச் சொல்ல முடியுமாகில் இவளைப் பெறலாம்.

(இ - ம்) களன் - களம் - போலி. (4)

அவ — நீங்கள் செய்யும் பரிஹாரம் இந்தப் பெண்ணின் வியாதியை அதிகப்படுத்துகிறது என்று இதில் சொல்லுகிறாள்:—

இவளைப் பெறும்பரி சிவ்வணங் காடுத லன்றந்தோ
குவளைத் தடங்கண்ணுங் கோவைச்செவ் வாயும் பயந்தனள்
கவளக் கடாக்களி றட்ட பிரான்றிரு நாமத்தா
றவளப் பொடிக்கொண்டு நீரிட் டிடுமின் றணியுமே. (5)

(ப - ரை) இ அணங்காடுதல் - இப்படி ஆவேசம் வந்தவள் போல் கூத்தாடுகிறது, இவளை பெறும் பரிசு அன்று - இவளை அடைவதற்கு பரிஹாரம் (உபாயம) அன்று. அந்தோ - ஐயோ! குவளை தடம கண்ணும் - குவளைப்பூப்போல விசாலமான இந்தப் பெண்ணின் கண்களும், கோவை செவ்வாயும் - கோவைப்பழம் போல் சிவப்பான கீழ் உதடும, பயந்தனள் - தங்கள் வர்ணத்தை இழந்து வேறு வர்ணத்தை அடையும்படி ஆனாள். (ஆகையால்) கவளம் கடாம் - (பாகன் கொடுக்கும) கபளங்களைச் சாப்பிட்டு மதம் பிடித்து மத ஜலத்தைப் பெருக்குகிற, களிறு - (குவலயாபீடம் என்கிற) யானையை, அட்ட - கொன்ற, பிரான் - உபகாரகனான கிருஷ்ணனுடைய, திருநாமத்தால் - திருநாமத்தைச் சொல்லி, தவளம் பொடி - பரிசுத்தமான (பாகவதர்களுடைய

திருவடிகளின்) தூளிகளை, கொண்டு-ஸம்பாதித்து, நீர் - நீங்கள், இட்டிடுமின் - இவள்மேல் போடுங்கள், தணியும் - (இவளுடைய வியாதி) தணியும்.

(கருத்து) நீங்கள் அணங்காடுவது இவள் வியாதியைத் தீர்க்கும் உபாயம் அன்று. ஐயோ! குவளைப்பூப்போல் விசாலமான இவள் கண்களும் கோவைப்பழம்போல் சிவந்த கீழ் உதடும் வேறு வர்ணங்களை அடைந்தனவே. குவலயாபீடம் எனகிற யானையைக் கொன்ற கிருஷ்ணனுடைய திருநாமங்களைச் சொல்லுங்கள். பாகவதர்களுடைய பரிசுத்தமான திருவடித்தூள்களை ஸம்பாதித்து இவள்மேல் போடுங்கள். இவள் வியாதி தணியும்.

குறிப்பு.—அந்தோ என்று நல்ல பரிஹாரம் செய்யாமல் வியாதியை விருத்தி செய்தீர்களென்று தோழி துக்கப்படுகிறாள்.

---

அவ—கீழ்ப் பாட்டில் தவளப்பொடி என்று பொதுவாய்ச் சொன்னது பாகவதர்களின் பாததூளி என்று இந்தப் பாட்டில் சொல்லுகிறாள்:—

தணியும் பொழுதில்லை நீரணங் காடுதி ரன்னைமீர்
பிணியு மொழிகின்ற தில்லை பெருகு மிதுவல்லால்
மணியி லணிநிற மாயன் றமரடி நீறுகொண்
டணிய முயலின்மற் றில்லைகண் டீரிவ் வணங்குக்கே. (௬)

(ப - ரை) அன்னைமீர் - தாய்மார்களே! நீர் அணங்கு ஆடுதிர் - நீங்கள் ஆவேசம் வந்ததுபோல் கூத்தாடுகிறீர்கள். தணியும் பொழுது இல்லை - வியாதி தணியும் காலமும் வரவில்லை. பிணியும் - வியாதியும், பெருகும் இது அல்லால் - வளர்கிறது தவிர, ஒழிகின்றது இல்லை, மணியில் அணி நிறம மாயன - நீல ரத்னத்தைக் காட்டிலும் அழகான நிறத்தை உடையவனாய், ஆச்சரியமானவனாய் இருக்கிற எமபெருமானுடைய, தமர் - அடியார்களுடைய, அடி நீறு கொண்டு - திருவடிகளின் தூளிகளைக்கொண்டு, அணிய - இவளை அலங்காரம் செய்ய, முயல் இல்-பிரயத்தினம் பண்ணுவதைவிட, இ அணங்குக்கு - இந்த தெய்வப் பெண்ணுக்கு, மற்று இலலை கண்டீர் - வேறு (பரிஹாரம்) இல்லையே.

(கருத்து) தாய்மார்களே! நீங்கள் ஆவேசம் வந்தவர்கள் போல கூத்தாடுகிறீர்களே. இந்தப் பெண்ணின் வியாதி தணியும் காலம் வரவில்லை. அது அதிகமாக ஆகிறதேயல்லாமல் ஒழிகிறதில்லை. நீல ரதநத்தைக் காட்டிலும் அழகான நிறமுடைய எம்பெருமானுடைய அடியார்களுடைய திருவடி தூளிகளைக் கொண்டுவந்து இவளுக்கு அலங்காரம செய்ய பிரயததினம் பண்ணுங்கள். இதுதான் இவள் வியாதிக்குத தகுந்த பரிஹாரம். இதைவிட இவள் வியாதிக்குப் பரிஹாரம் வேறில்லை. இது நிச்சயம.

(இ - ம்) மணியில் - இல் ஐந்தாம் வேற்றுமை உருபு. (6)

---

அவ—தோழியான என் வார்த்தையை நீங்கள் நம்பாவிட்டால், வைதிகர்களான பாகவதர்களை ஆச்ரயியுங்கோள் என்று இதில் சொல்லுகிறாள் :—

அணங்குக் கருமருந் தென்றங்கோ ராடுங்கள் ளும்பராய்
சுணங்கை யெறிந்துநுந் தோள்குலைக் கப்படு மன்னைமீ
ருணங்கல் கெடக்கழு தையுத டாட்டங்கண் டென்பயன்
வணங்கீாகள் மாயப் பிரான்றமா வேதம்வல் லாரையே. (எ)

(ப - ரை) அணங்குக்கு - தைவப்பிருகிருதியான இந்தப் பெண்ணுக்கு, அருமருந்து என்று - கிடைக்கமுடியாத மருந்து எனறு நினைத்து, அங்கு - சின்ன தேவதைகள் விஷயத்தில், ஓர் ஆடும் - ஓர் ஆட்டையும, கள்ளும் - கள்ளையும், பராய் - (நிவேதநம் பண்ணுகிறோம் பெற்றுக்கொள்ளவேணும் என்று) பிரார்த்தித்து, சுணங்கை எறிந்து - கையைத் தட்டிக்கொண்டு கூத்தாடி, நும் தோள்கள்-உங்களுடைய தோள்கள், குலைக்கப்படும் அன்னைமீர் - நடுங்கும்படி ஆடுகிற தாய்மார்களே! உணங்கல் கெட - (வெய்யிலில் காயப்போட்டிருக்கிறதான) நெற்கள், கெட்டுப்போகையில், கழுதை உதடு ஆட்டம் கண்டு-கழுதையினுடைய உதடு ஆடுவதைப் பார்த்து, என் பயன் - என்ன பிரயோஜநம் கிடைக்கும்? வேதம் வல்லார் - வேதத்தை அறிந்தவர்களான, மாயப்பிரான் தமரை - ஆச்சரியமான எம்பெருமானுடைய அடியார்களை, வணங்கீர்கள் - வணங்குங்கள். (வணங்கி இவள் வியாதிக்கு என்ன பரிஹாரம் என்று கேளுங்கள்.)

(கருத்து) தைவப் பிரகிருதியான இந்தப் பெண் வியாதிக்கு அருமையான மருந்து என்று நினைத்து, "ஆட்டையும் கள்ளையும் நிவேதநம் பண்ணுகிறோம். அதைப்பெற்றுக்கொள்ள வேணும்" என்று சின்ன தேவதைகளைப் பிரார்த்தித்து, கைகளைத் தட்டிக்கொண்டு கூத்தாடி உங்கள் தோள்களுக்கு நடுக்கத்தை உண்டுபண்ணிக்கொண்டு இருக்கும் தாய்மார்களே! நீங்கள் செய்கிற வேலையானது, வெய்யிலில் காயப்போட்டிருக்கிற சாப்பாட்டு நெல்லை கழுதை சாப்பிட்டு நாசம் பண்ணுவதைக் கவனிக்காமல், அதன் உதடு ஆடுவதைப் பார்த்துக்கொண்டு இருப்பதுபோல் இருக்கிறது. வேதம் படித்த பாகவதர்களிடம் போய் அவர்களை வணங்கி இந்தப் பெண் வியாதி தீருவதற்கு என்ன செய்யவேண்டியது என்று கேளுங்கள். (7)

---

அவ—வேதம் படித்தவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு எம்பெருமானிடத்தில் பிரபத்தி பண்ணுங்கள் என்று இதில் சொல்லுகிறாள் :—

வேதம்வல் லார்களைக் கொண்டுவிண் ணோர்பெரு மான்றிருப்
பாதம் பணிந்திவ ளுநோயிது தீர்த்துக்கொள் ளாதுபோ
யேதம் பறைந்தல்ல செய்துகள் ளூடு கலாய்த்தூய்க்
கீத முழவிட்டு நீரணங் காடுதல் கீழ்மையே. (அ)

(ப - ரை) வேதம் வல்லார்களை கொண்டு - வேதத்தின் அர்த்தத்தை அறிந்தவர்களான (ஸ்ரீவைஷ்ணவர்களை) புருஷகாரமாக வைத்துக்கொண்டு, விண்ணோர் பெருமான - நித்தியஸூரிகளின் தலைவனை எம்பெருமானுடைய, திரு பாதம் பணிந்து - திருவடிகளை ஆச்ரயித்து, இவள் இது நோய் - இவளுடைய இந்த வியாதியை, தீர்த்துக்கொள்ளாது - தீரும்படி செய்யாமல், போய் (சின்ன தேவதைகளிடம்) போய், ஏதம் பறைந்து - குற்றமானதை (உங்களுடைய ஸ்வரூபத்துக்குத் தகாத சொற்களை)ச் சொல்லி, அல்ல செய்து - அல்லாதவைகளை (தகாதவைகளான அவர்களுக்கு நமஸ்காரங்களைச்) செய்து, ஊடு - இந்த வேலைகளுக்கு நடுவிலே, கள் - கள்ளை, கலாய் - கலாவி (மாம்ஸத்தோடு)

*கலந்து, தூய் - தூவி, கீத முழவு-பாட்டையும வாத்திய கோஷங் களையும், இட்டு - பண்ணி, நீர அணங்காடுதல் - நீங்கள் கூததாடு வது, கீழ்மை - மிகவும் தாழ்ந்த வேலைகள்*

*(கருதது) வேததததின் அர்த்ததததை அறிந்த ஸ்ரீவைஷ்ணவர் களை ஆச்ரயிததாவது, அவர்களைப் புருஷகாரமாககக்கொண்டு எம பெருமானுடைய திருவடிகளை ஆச்ரயிததாவது, இவள் வியா தியைத் தீர்க்கவேண்டியது. இதைச் செய்யாமல் சின்ன தேவ தைகளிடம் போய் உங்கள ஸ்வரூபததுக்குத தகாத அந்த தேவ தைகளின விஷயமான சொறகளைச் சொல்லி, தகாத நமஸ்காரம் முதலான வேலைகளைச் செய்து, அவைகளின நிவேவ கள்ளோடு சேர்நத மாமஸததைத தூவி, பாடுவதையும வாததியத்தை முழக் குவதையும் செய்து கூததாடுவது உங்களுக்குத தகாத கீழ்மை யான வேலைகள்.*

*(இ - ம்) கொள்ளாது - கொள்ளாமல், வினையெச்சம்.* (8)

---

*அவ—நீங்கள் செய்கிற வேலைகள் எனக்குப் பார்க்கப் பிடிக்க வில்லை என்று இதில் சொல்லுகிறாள் :—*

கீழ்மையி னலங்கோர் கீழ்மக னிட்ட முழவின்கீழ்
நாழ்மை பலசொல்லி நீரணங் காடும்பொய் காண்கிலே
னேழ்மைப் பிறப்புக்குஞ் சேமமிந நோய்க்குமீ தேமருந
தாழ்மையிற் கண்ண பிரான்கழல் வாழ்த்துமி னுன்னித்தே. (௯)

*(ப - ரை) கீழ்மையினால், அங்கு - சின்ன தேவதைகள் இருக்குமிடததில், ஓர் கீழ் மகன் இட்ட - ஒரு தாழ்ந்தவன் செய் கிற, முழவின்கீழ் - வாதயகோஷததினகீழ, நாழ்மை - அந்தத் தேவதைகளுக்கு இல்லாதிருக்கிற பெருமையை, பல சொல்லி, நீர் அணங்காடும் - நீங்கள் கூத்தாடும், பொய் - பிரயோஜநமில் லாத வியாபாரங்களை, காண்கிலேன - நான் பார்க்க சக்தியுள்ள வள் அல்ல. ஏழ்மை பிறப்புக்கும் - ஏழுவிதமான பிறப்புக்கும் (எல்லா காலத்துக்கும்) சேமம் - (மேல் சொல்லப்போவது) க்ஷே மத்தைச் செய்யும், இ நோய்க்கும் ஈதே மருந்தாம் - இந்த வியா திக்கும் இதுவே மருந்தாகும். (அது என்னவென்றால்,) உன்*

னித்து - நினைத்து (விசாரித்து), ஊழ்மையில் - முறையிலே, கண்ணனை கழல் வாழ்த்துமின் - அந்த கிருஷ்ணனுடைய திருவடிகளை ஸ்தோத்திரம் பண்ணுங்கள்.

(கருத்து) சின்ன தேவதை இருக்குமிடத்தில் ஒரு தாழ்ந்தவன் செய்யும் வாத்யகோஷத்தினகீழ் நீங்கள் அந்தத் தேவதைகளுக்கில்லாத பல பெருமைகளைச் சொல்லி கூத்தாடுகிறீர்கள். இவைகளால் ஒரு பிரயோஜநமும் கிடைக்காது. அவைகளை நான பார்க்கமாட்டேன. கண்ணனுடைய திருவடிகளை ஸ்தோத்திரம் பண்ணுங்கள், இதைப்பற்றி விசாரியுங்கள். அவன் ஸ்வாமியாய் இருப்பதாலே அதுவே தகுந்தது என்று உங்களுக்குத் தோன்றும். அதுவே எப்போதும் க்ஷேமத்தைச் செய்யும். அதுவே இவள் வியாதிக்கும் மருந்தாகும்.

குறிப்பு :—பாட்டில், கீழ்மை என்பது ரஜஸ்ஸு, தமஸ்ஸு மேலிடுவதாலே உண்டான விவேகக் குறைவு.

(இ - ம்) ஏழ்மை - எழுமை ; செய்யுளில் முதல் நீண்டது.

---

அவ—இந்தப் பெண்ணின் ஸ்வபாவத்துக்குத் தான் சொல்லுவதுதான தகுந்தது என்று இதில் சொல்லுகிறாள் :—

உன்னித்து மற்றொரு தெய்வந் தொழாளவ னையல்லா
னும்மிச்சை சொல்லிநுந் தோள்குலைக் கப்படு மன்னைமீர்
மன்னப் படுமறை வாணனை வண்டுவ ராபதி
மன்னனை யேத்துமி னேத்துத லுந்தொழு தாடுமே. (கO)

(ப - ரை) இவள், அவனை அல்லால் - அந்தக் கிருஷ்ணனை விட்டு, மற்று ஒரு தெய்வம் - வேறொரு தேவதையை, உன்னித்து - நினைத்து, தொழாள் - வணங்கமாட்டாள். நும் இச்சை சொல்லி - உங்களுடைய இச்சையினால் (ஏற்படும் ஸ்தோத்திரங்களை) சொல்லி, நும் தோள் - உங்களுடைய தோள்கள், குலைக்கப்படும் - நடுங்கும்படி பிரயாஸப்படுகிற, அன்னைமீர் - தாய்மார்களே! மன்னப்படும் - நிலையாய் படிக்கப்படும், மறை வாணனை - வேதத்தினால் பிரதானமாய் சொல்லப்படுமவனாய், வண் துவராபதி மன்னனை - சிலாக்கியையான துவாரகைக்கு ராஜாவான கிருஷ்

ணனை, ஏத்துமின்-ஸ்தோத்திரம் செய்யுங்கள். ஏத்தவே-ஸ்தோத்திரம் பண்ணவே, தொழுது -(இவளுக்கு பிரஜ்ஞைவந்து) அவனை வணங்கி, ஆடும் - ஒரு வேலை செய்யத் திறமையுள்ளவள் ஆவள்.

(கருத்து) இவள் ஸ்வபாவத்தை நீங்கள் அறியவில்லை. கிருஷ்ணனைவிட்டு வேறு ஒரு தேவதையை இவள் வணங்கமாட்டாள். அப்படியே அந்த தேவதையை மனதால் ஸ்வப்நத்திலும் நினைக்கமாட்டாள். வேதத்தினால் சொல்லப்படாத சின்னதேவதையை அதில் சொல்லப்படாமலும் பிரயோஜநமில்லாமலும் விரோதத்தைச் செய்வதாயும் இருக்கிறவிதமாய் ஸ்தோத்திரம் பண்ணி நீங்கள் கூத்தாடுகிறீர்கள். இதனால் உங்கள் தோள்களுக்கு நடுக்கமுண்டாவது தவிர வேறு பிரயோஜநம் கிடைக்காது. எல்லாராலும் சாஸ்திர விதிப்படி படிக்கப்பட்ட அங்கங்களோடு கூடின வேதத்தாலே ஸர்வேசுவரன் என்று சொல்லப்பட்டு தன்னை ஆச்ரயித்தவர்களுக்காக துவாரகையில் அவதாரம் செய்த கிருஷ்ணனை ஸ்தோத்திரம் பண்ணுங்கள். ஸ்தோத்திரம் பண்ணவே இந்தப் பெண்ணுக்குப் பிரஜ்ஞை திரும்பி வந்து ஒரு வேலை செய்யத் திறமையுள்ளவளாய் அவனை வணங்குவள்.

(இ - ம்) தொழாள் - எதிர்மறை வினைமுற்று.　　(10)

---

தொழுதாடித் தூமணி வண்ணனுக் காட்செய்து நோய்தீர்ந்த
வழுவாத தொல்புகழ் வண்குரு கூர்ச்சட கோபன்சொல்
வழுவாத வாயிரத் துள்ளிவை பத்து வெறிகளுந்
தொழுதாடிப் பாடவல் லாதுக்க சில மிலாகளே.　　(கக)

(ப - ரை) நோய் தீர்ந்து - ("வண் துவராபதி மன்னன்" என்கிற சொற்களைக்கேட்டு) வியாதி தீர்ந்து, தொழுது - (எம்பெருமானை) வணங்கி, ஆடி - நர்த்தநம் பண்ணி, தூ மணி வண்ணனுக்கு - சுத்தமான நீல ரத்நத்தினுடைய வாணத்தையுடைய கிருஷ்ணனுக்கு, ஆட் செய்த - வாசிகமான கைங்கரியம் செய்தவராய், வழுவாத - நழுவாத (அவனை விட்டு வேறு தைவத்தினுடைய ஸம்பந்தமில்லாத) தொல் - பழமையான (ஸ்வபாவமாயிருக்கிற), புகழ் - (எம்பெருமானுக்கே சேஷனாயிருக்கிறார் என்கிற) கீர்த்தியையுடையவராய் இருக்கிற, வண் குருகூர் சடகோபன்

சொல் - ஆழ்வாரால் சொல்லப்பட்ட, வழுவாத - தவறுதல் இல்லாத, ஆயிரத்துள் - ஆயிரம் பாட்டுக்களுக்குள்- வெறிகள் இவை பத்தும - வெறி விலக்கைச் சொல்லுகிற இந்தப பத்துப் பாட்டுக்களையும, தொழுது - வணங்கி, ஆடி - நர்த்தநம பண்ணி, பாட வல்லார் - பாட சக்தியுள்ளவர்கள், துக்க சீலம் இலர்-துக்கப்படும ஸ்வபாவம் இல்லாதவர்களாக ஆவர்கள்.

வெறி விலக்கு என்பது - நாயகனைவிட்டுப்பிரிந்த நாயகியின் துக்கத்தைப் போக்குவதற்காக தாய்மார்கள் மனது கலங்கி செய்யும் தகாத வேலைகளை விலக்குதல்.

(கருத்து) செத்தவனையும் பிழைப்பிக்கும்படியான "வண்டு வராபதி மன்னனை" என்ற சொற்களைக் கேட்டவுடன் வியாதி தீர்ந்து கண்ணனை வணங்கி, அதனாலுண்டான ஸந்தோஷத்தாலே நாத்தநம்பண்ணி, எமபெருமானைவிட்டு ஒரு தேவதையையும் ஒரு போதும நினைக்காத ஆழ்வார் வாசிகமான கைங்கரியமாகச்செய்த எமபெருமானுடைய ஸ்வரூபம், ரூபம், குணங்கள், விபூதிகள் எல்லாவற்றையும் சொல்லுகிற ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே வெறி விலக்கான இந்தப் பத்துப் பாட்டுககளை வணங்கி நர்த்தநம் பண்ணிப் பாட சக்தியுள்ளவர்களுக்கு எம்பெருமானைப் பிரியும் துக்கமும், அந்த துக்கத்தைப் போக்குவதற்காக மனது கலங்கி வேறு தேவதைகளை வணங்கும் துக்கமும் வராது. (11)

---

ஜ்ஞாஸாரஸ்யோமாகு ப்ரஹாரணநவநாஹீதஸஸ்யாஸ்யா
ஜௌரிஜை: ஸ்தாத்யாஜேப்யா: வாஞ்சயப்ஜய்யா ஸ்வஜநஹஜநத
த்வாஞ்சயப்ஜைநஜௌஷி: । தந்த்ரப்ஜவஸ்வாஹ்யீ நாத்யா தநிதர
ஹஜநத்யாமவப்ஜிவேப்ராவஸத்யா ஜேவம் ப்ராவிவ்யவகஸ்வப்ர
ணயிஷ்ட ஹிஷஜம் கேஸாரஸ்வஹிப்ஜஷ: ॥ ௫ ॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானைவிட்டுப் பிரிவதால் ஆச்ரிதர்களுக்கு உண்டாகும மோஹத்தைப் போக்குகிற வைத்தியன் அவனே என்று பத்துக் காரணங்களாலே சொல்லப் படுகிறது. அவைகளாவன :—(1) தன் இச்சையாலேயே பாரத

சண்டையில் அர்ஜுநனுக்கு ரதத்தை ஓட்டினது; (2) அவனுடைய ஆயுதங்களை ஸ்தோத்திரம் பண்ணுவது; (3) துளஸியைத் திருமுடியிலுடைய அவனுடைய திருவடிகளை ஸ்தோததிரம் பண்ணுவது; (4) அவனுடைய திருநாமங்களைச் சொல்வது; (5, 6) அவன் பக்தர்களுடைய திருவடிப்பொடிகளை இடுவது; (7) அவன் பக்தர்களை வணங்குவது; (8, 9) அவனை பக்தர்களைப் புருஷகாரமாகக்கொண்டு அவன் திருவடிகளை வணங்குவது; (10) சின்ன தேவதைகளைவிட்டு கண்ணனையே ஸ்தோத்திரம் பண்ணுவது.

---

# ஏழாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமானைப் பிரிந்து மோஹம் அடைந்த ஆழ்வார் அவனுடைய திருநாமங்களைக்கேட்டு மோஹம் தெளிந்தார். மோஹம் போகவே அவனைவிட்டுப் பிரிந்த துக்கமானது நன்றாய் தோன்றி அதைப் பொறுக்கமுடியாமல், இந்தத் திருவாய்மொழியில் அவனைக் கூப்பிடுகிறார். முன் திருவாய்மொழியில் கடைசிப் பாட்டில் "தொழுதாடி" என்று சொன்னதற்கு மோஹ தசையில் நடந்த வியாபாரத்தை அது தெளிந்தபிறகு பாட்டால் அருளிச் செய்தார் என்று கருதது.

( அறுசீராசிரிய விருத்தம்.)

சீல மில்லாச் சிறிய னேலுஞ் செய்வினை யோபெரிதால்
ஞால முண்டாய் ஞானமூர்த் தீநா ராயணா வென்றென்று
காலந் தோறும் யானிருந்து கைதலை பூச லிட்டால்
கோல மேனி காண வாராய் கூவியுங் கொள்ளாயே. (க)

(ப - ரை) ஞாலம் உண்டாய் - பூமியை உண்டவனே! ஞானமூர்த்தி - ஞானத்தை ஸ்வபாவமாக உடையவனே! நாராயணா - ஆச்ரிதர்களை ரக்ஷிக்கும சக்தி முதலான குணங்களையுடையவனே! என்று என்று - இப்படிச் சொல்லி சொல்லி, காலம் தோறும் - எப்போதும், யான் இருந்து - நான் (உயிருடன) இருந்து, கைதலை - கைகளைத் தலையில் வைத்துக்கொண்டு, பூசல் இட்டால் - உரக்கக் கூப்பிட்டால், கோலம் மேனி - அழகான திருமேனியை, காண - நான் பார்க்கும்படி, வாராய் - நீ வருகிறதில்லை, கூவியும் கொள்ளாய் - என்னை உன்னிடம் அழைத்துக் கொள்ளுவதுமில்லை. ஆகையால், சீலம் இல்லா - நல்ல நடவடிக்கை இல்லாத, சிறியனேலும் - மிகவும தாழ்ந்தவனாய் இருந்தபோதிலும், செய்வினையோ - நான செய்த பாபமோ, பெரிது - பெரிதாய் இருக்கிறது.

(கருத்து) பிரளய காலத்தில் பூமியை வயிற்றில் வைத்துக் கொண்டு வருத்தம் அடைகிறவர்களை நீ ரக்ஷிக்கிறாய், நீ ஞானத்தை ஸ்வபாவமாக உடையவனாகையாலே ரக்ஷிப்பதற்கு வேண்டிய அறிவு இருக்கிறது. நல்ல குணங்களுக்கு இருப்பிடமாகையால்

ரக்ஷிக்க உனக்கு சக்தி இருக்கிறது. இந்த உன்னுடைய வியாபாரத்தையும் இந்த உன்னுடைய குணங்களையும் சொல்லிச் சொல்லி, கைகளைத் தலையில் வைததுக்கொண்டு எப்போதும் உரக்கக் கூப்பிடுகிறேன். உன்னுடைய அழகான திருமேனியை நான் பார்க்கும்படி என்னிடம் நீ வருகிறதில்லை. என்னை உன்னிடம் அழைத்துக்கொள்ளுகிறதும் இல்லை ஆகையால் நான் அதிகமான பாபததைச் செய்திருக்கவேண்டியது. அறிவும் சக்தியுமில்லாமல் புழுவைக்காட்டிலும் தாழ்ந்த நான் எப்படி இவ்வளவு பாபத்தைச் செய்தேன்? பாபம் செய்வதற்கும் அறிவும் ஞானமும் வேண்டாமோ?

(இ - ம) உண்டாய் - உண்டவன் என்ற வினையால் அணையும் பெயரின்விளிவேற்றுமை; உண்டவனே. சிறியனேல் - வினையெச்சம். ஆல்-அசைநிலை. வாராய், கொள்ளாய்-எதிர்மறை முன்னிலை வினைமுற்று. (1)

---

அவ—உன்னை நான் அநுபவிக்கும்படி செய்து, பிறகு உன்னைக் காட்டாதிருப்பது தகுந்ததோ என்று இதில் சொல்லுகிறார்.

கொள்ள மாளா வின்ப வெள்ளங் கோதில தந்திடுமென்
வள்ள லேயோ வையங் கொண்ட வாமனாவோ வென்றென்று
நள்ளி ராவும் நன்பகலும் நானிருந் தோல மிட்டால்
கள்ள மாயா வுன்னை யென்கண் காணவந் தீயாயே. (உ)

(ப - ரை) கோது இல - தோஷமில்லாத, கொள்ள மாளா - அநுபவிக்க அநுபவிக்க முடிவை அடையாத, இன்பம் வெள்ளம்- ஆநந்தமாகிய பிரவாஹத்தை, தந்திடும் - கொடுக்கிற, என் வள்ளலே - என்னுடைய மஹோதாரனே! வையம் கொண்ட - பூமியை (மஹாபலியிடமிருந்து) வாங்கிக்கொண்ட, வாமனா என்று என்று, நள் இரவும் - நடு ராத்திரியிலும், நல் பகலும் - (உன்னுடன் சேருவதற்குத் தகுந்த) நல்ல பகலிலும், நான் இருந்து - நான் உயிருடனிருந்து, ஓலம் இட்டால் - கூப்பிட்டால், கள்ள - கண்ணுக்குத் தெரியாதவனே, மாயா - மனதிலிருந்து ஆச்சரியமான வேலைகளைச் செய்தவனே! வந்து - சீக்கிரமாக வந்து, உன்னை, என் கண் காண - என்னுடைய கண்கள் காணும்படி, ஈயாய் - கொடுக்கவேண்டும்.

(கருத்து) உன்னுடைய குணங்களை அனுபவிப்பதால் உண்டாகும் ஆநந்தப் பிரவாஹமானது எவ்வளவு அநுபவித்தாலும் முடிவை அடையாமல் வேறு ஸுகங்களில் வெறுப்பை உண்டு பண்ணுகிறது. வேறு விஷயங்களில் ஆசையில்லாமையை முதலில் கொடுதது, இவ்விதமான ஆநந்ததகைத எனக்குக் கொடுத்திருக்கிறவனே! எல்லாருக்கும் வேண்டியதைக் கொடுக்கிற நீ இந்தக் குணததை மாற்றி உன்னை ஆச்ரயித்த இந்திரனுக்காக வாமந ரூபத்தை எடுத்துக்கொண்டு கையை நீட்டி பூமியை வாங்கிககொண்டவனே என்று, உன்னை அநுபவிதது போக்கவேண்டிய எல்லா காலமும், உன்னை அடையாமல் நான் இருந்து கூப்பிடுகிறேன். மனதில் நன்ருகத தோன்றி உன்னை என் கண்ணுக்குக் காட்டாதிருக்கிறவனே! சீக்கிரம் வந்து உன்னை என் கண்கள் காணும்படி உன்னை எனக்குத் தந்து அருளவேண்டும்.

(இ - ம்) ஈயாய் - முன்னிலை வினைமுற்று. (2)

---

ஈவி லாத தீவினைக ளெத்தனை செய்த னன்கொல்
தாவி வையங் கொண்டவெந்தாய் தாமோத ராவென் றென்று
கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்பனி சோர நின்றுற்
பாவி நீயென் றென்று சொல்லாய் பாவியேன் காணவந்தே. (௩)

(ப - தை) தாவி - திருவடிகளைப் பரப்பி, வையம் கொண்ட - பூமியை (மஹாபலியிடமிருந்து) எடுத்துக்கொண்ட, எந்தாய் - என் ஸ்வாமியே! தாமோதரா - உரலில் கட்டப்பட்டு ஆச்ரிதர்க்கு உட்பட்டிருப்பதைக் காட்டித் தாமோதரன் என்று பேர் பெற்றிருப்பவனே! என்று என்று, கூவி கூவி - கூப்பிட்டுக் கூப்பிட்டு, நெஞ்சு உருகி, கண் பனி - கண்ணீர், சோர - சொரியும்படி, நின்றால், பாவியேன் காணவந்து - பாபியான நான் உன்னைப் பார்க்கும்படி வந்து, பாவி என்று ஒன்று சொல்லாய் - நீ பாபி என்று ஒரு வார்த்தையைச் சொல்லு. (உடனே எம்பெருமான் வரவில்லை. அதன்மேல் ஆழ்வார் அருளிச் செய்கிறார்.) ஈவு இலாத - நாசம் இல்லாத, (பலனை முழுவதும் கொடுத்து முடியாத) தீவினைகள் - பாபங்களை, எத்தனை செய்தனன் - எத்தனை செய்தேனே.

(கருத்து) வாமந ரூபத்தை எடுத்துக்கொண்டு உலகத்தை அளந்து மஹாபலியிடமிருந்து பூமியை எடுத்துக்கொண்டு இது போல் ஆச்ரிதர்களுக்காகக் கணக்கில்லாத வேலைகளைச்செய்த என் ஸ்வாமியே! ஆச்ரிதர்கள் இஷ்டப்படி நீ நடக்கிறவன் என்று காட்டுவதற்காக, உரலில் கட்டுப்பட்டு தாமோதரன் என்று பெயர் பெற்றவனே! இப்படிச் சொல்லி சொல்லி, கூப்பிட்டு கூப்பிட்டு, நெஞ்சுருகி கண்ணீர் சொரிய, நான் நிற்கிறேன. "நீ பாவி, என்னைப் பார்க்க முடியாது" என்று நான ஆசையை விட்டுவிட ஒரு வார்த்தை சொல்லுவதற்காகவாவது பாவியான நான் பார்க்கும்படி வந்து சொல்லு. (இதை எம்பெருமான் செய்யவில்லை. அப்போது சொல்லுகிறார்) இப்படி என்னை உபேக்ஷிப்பதற்குக் காரணமாய் எல்லா காலமும் அநுபவித்து முடியாத பாபங்களில் எத்தனை நான் செய்திருக்கிறேனோ.

(இ - ம்) சொல்லாய் - முன்னிலை வினைமுற்று : சொல்லு என்று பொருள். (3)

---

அவ—பிரம்மா முதலானவர்கள்கூட பார்க்க முடியாத எம்பெருமானை நான் பார்க்கமுடியாது என்று அறியாமல் வெட்கம் இல்லாமல் கூப்பிடுகிறேன் என்று இதில் சொல்லுகிறார் :—

காண வந்தேன் கண்மு கப்பே தாமரைக் கண்பிறழ
வாணி செம்பொன் மேனி யெந்தாய் நின்றருளா யென்றென்று
நாண மில்லாச் சிறுத கையேன் நானிங் கலற்றுவதென்
பேணி வானோர் காண மாட்டாப் பீடுடை யப்பனையே. (ச)

(ப - ரை) வானோர் - பிரம்மா முதலான தேவர்கள், பேணி - ஆதரம் செய்து, காண மாட்டா - பார்க்க முடியாத, பீடு உடை - பெருமையை உடைய, அப்பனை - ஸ்வாமியை, ஆணி - மேன்மை உள்ள, செம் பொன் மேனி - செம்பொன்போல் பிரகாசிக்கிற, திருமேனியையுடைய, எந்தாய் - என் ஸ்வாமியே! காண வந்து - நீ புறப்படுவதுமுதல் நான் பார்க்கும்படி வந்து, என் கண் முகப்பே - என் கண் முன்னே, தாமரைக் கண் பிறழ - உன்னுடைய தாமரைப்பூப் போன்ற திருக்கண்கள் விளங்கும்படி, நின்று அருளாய் - நின்று அருளவேண்டும், என்று என்று,

நாணம் இல்லா - வெட்கமில்லாதவனாய், சிறுதகையேன்-தாழ்ந்த தன்மையை உடையவனான நான், இங்கு - (உன்னை அநுபவிப்ப தற்கு விரோதியான) இடத்தில், அலற்றுவது என் - நான் கத்து வதால் என்ன பிரயோஜநம்?

(கருத்து) சிலாக்கியமாய் செம்பொன்போல் பிரகாசிக்கிற திருமேனியை உடைய என ஸ்வாமியே! என் கண் முன்னாலே உன் தாமரைப் பூப்போன்ற திருக்கண்கள் விளங்கும்படி வந்து நிற்கவேண்டும் என்று அலற்றுகிறேன். நீயோ பிரம்மா முத லான தேவர்கள் எவ்வளவு ஆசைப்பட்டும பார்க்க முடியாத பெருமையை உடையவன். இந்த இடமோ உன்னைப் பார்ப்ப தற்கு விரோதியானது. இப்படி இருக்க, நான அலற்றி என்ன பிரயோஜநம்? இதை அறியாமல் உன்னைக் கூப்பிடுவதற்குக் கார ணம் எனக்கு வெட்கமில்லாமையும், என்னுடைய தாழ்ந்த ஸ்வ பாவமும். (4)

---

அவ—கீழ்ப்பாட்டில் சொன்னதையே சொல்லி, தான் சபலனாயிருப்பதை இந்தப் பாட்டில் நிந்திக்கிறார்:—

அப்ப னேயட லாழி யானே யாழ்கட லைக்கடைந்த
துப்ப னேயுன் றோள்க ணான்குங் கண்டிடக்கூ டுங்கொலென்
றெப்பொழு துங்கண்ண நீர்கொண் டாவி துவர்ந்து துவாந்
திப்பொழு தேவந் திடாயென் றேழை யேனோக் குவனே. (ரு)

(ப - ரை) அப்பனே - ஸ்வாமியே! அடல் ஆழியானே - பராக்கிரமமுள்ள திருவாழியை உடையவனே! ஆழ் கடலை கடைந்த - ஆழமான திருப்பாற்கடலைக் கடைந்த, துப்பனே - ஸமர்த்தனே! உன் தோள்கள் நான்கும் - (அதைக் கடைந்த) உன்னுடைய நான்கு தோள்களை, கண்டிட - காண, கூடுங்கொல் என்று-கூடுமோ என்று, எப்பொழுதும், கண்ண நீர் கொண்டு - கண்ணீரை வைத்துக்கொண்டு, ஆவி - பிராணன், துவர்ந்து துவர்ந்து - உலர்ந்து உலர்ந்து, இப்பொழுதே, வந்திடாய் என்று-வரவேண்டும் என்று ஆசைப்பட்டு, ஏழையேன்-சபலனான நான், நோக்குவேன் - பார்த்துக்கொண்டிருப்பேன்.

(கருத்து) ஸ்வாமியே! ஆச்ரிதர்களுடைய விரோதிகளை நாசம் செய்யும் வல்லமையுள்ள திருவாழியை உடையவனே! ஆச்ரிதர்களான தேவர்களுக்காக திருப்பாற்கடலைக் கடைந்த ஸமர்த்தனே! உன் நானகு தோள்களாலும் அதைக் கடைந்த அழகை நான் பார்ககக்கூடுமோ என்று இப்படிச் சொல்லி எப்பொழுதும் கண்களில் நீர நிரம்ப, என ஆவி உலர உலர, இப்போதே வரவேண்டும் என்று வேண்டிகொண்டு நீ வருகிறாயோ என்று பார்க்கிறேன் நான். என்ன சபலன். முடியாத விஷயத்தை ஆசைப்படுகிறேன். (5)

---

அவ—உன்னை எனக்குக் காட்ட உனக்குத திருவுள்ளமில்லை என்று அறிந்தும், உன்னைப் பார்க்க ஆசைப்படுவது என் அறிவில்லாமையாலே என்கிறார் —

நோக்கி நோக்கி யுன்னைக் காண்பான் யானெனத தாவியுள்ளே
நாக்கு நீள்வன் ஞான மில்லை நாடோறு மென்னுடைய
வாக்கை யுள்ளு மாவி யுள்ளு மல்லப் புறத்தி னுள்ளு
நீக்க மின்றி யெங்கு நின்றாய் நின்னை யறிந்தறிந்தே. (சு)

(ப - ரை) நாள் தோறும் - ஒவ்வொரு நாளும், (எப்போதும்) என்னுடைய, ஆக்கையுள்ளும் - உடம்பிலும், ஆவியுள்ளும் - என் ஸ்வரூபததிலும், அல்ல - இவைகளைக்காட்டிலும் வேறான, புறத்தினுள்ளும் - வெளியிலிருக்கிறவைகளிலும், (இந்திரியங்களிலும்) நீக்கமின்றி - நீங்குதலில்லாமல், எங்கும் நின்றாய் - எல்லாவிடங்களிலும் ஆத்மாவாயிருக்கிறவனே! நின்னை அறிந்து அறிந்து - (நீ இப்படியிருந்தும்) உனனை எனக்கு காட்டத் திருவுள்ளமில்லாதிருப்பதை நான் நன்றாய் அறிந்தும், நோக்கி நோக்கி-நீ வருகிற திக்கைப் பார்த்துப் பார்த்து, உன்னைக் காண்பான்-உனனைக்காண, யான் - நான், எனது ஆவியுள்ளே - எனது மனதிலே, நாக்கு நீள்வன் - மிகவும் ஆசைப்படுகிறேன். ஞானமில்லை - எனக்கு அறிவில்லை.

(கருத்து) நீ என் உடம்பிலும் என் ஸ்வரூபத்திலும் என் இந்திரியங்களிலும் ஒன்றையும் விட்டு நீங்காமல் ஆத்மாவாக இருக்கிறாய். இப்படி ஸமீபத்தில் இருந்தபோதிலும் நான் பார்க்

கும்படி உன்னைக் காட்டுகிறதில்லை. இப்படிச்செய்வதில் உனக்குத் திருவுள்ளம் இல்லை என்பதை நான் நன்ருய் அறிந்திருந்தும், நீ வருகிற திக்கைப் பார்த்துப் பார்த்து, உன்னைப் பார்ப்பதற்காக என் மனதிலே மிகவும் ஆசைப்படுகிறேன். இது என்ன அறிவு வில்லாமை!

(இ - ம்) காண்பான - காண : வினையெச்சம். (6)

---

அவ—கீழ்ப்பாட்டுக்களினல் எம்பெருமானை ஆழ்வார் கூப்பிட்டார். எதற்காகக் கூப்பிடுகிறீர்? 'பிறப்பு, கிழத்தனம், மரணம் முதலானவைகளுக்குப் பயந்து கூப்பிடுகிறீரா?' என்று ஒரு கேள்வி உண்டாக, அதற்காக அன்று என்று இந்தப் பாட்டால் அருளிச்செய்கிருர் :—

அறிந்த றிந்து தேறித் தேறி யானென தாவியுள்ளே
நிறைந்த ஞான மூர்த்தி யாயை நின்மல மாகவைத்து
பிறந்துஞ் செத்து நின்றிடறும் பேதைமை தீர்ந்தொ ழிந்தே
னறுந்து ழாயின் கண்ணி யம்மா நானுன்னைக் கண்டுகொண்டே.(எ)

(ப - ரை) நறும் துழாயின் கண்ணி - வாஸனையை உடைய துளஸிமாலையை உடையவனே, அம்மா - ஸ்வாமியே! நான் உன்னை, கண்டுகொண்டு - அறிந்துகொண்டு, அறிந்து அறிந்து - தெளிவாய் அநுபவித்து, தேறி தேறி - இன்னும் அதிகத் தெளிவாய் அநுபவித்து, யான் - நான், நிறைந்த ஞானமூர்த்தியாயை - ஜ்ஞாநம் சக்தி முதலான குணங்கள் நிறைந்த உன்னை, எனது ஆவியுள்ளே - என் மனதிலே, நின்மலமாக வைத்து - இன்னும் தெளிவாய் அநுபவித்து, பிறந்தும், செத்தும் - மரணம் அடைந்தும், நின்று - இவைகளையே செய்துகொண்டு, இடறும் - வருத்தத்தை அடையும், பேதைமை - அறிவில்லாதவன் செய்யும் வேலையை, தீர்ந்தொழிந்தேன் - முழுவதும் விட்டுவிட்டேன்.

(கருத்து) உலகத்தில் ஜீவர்கள் அடிக்கடி பிறந்தும், மரணம் அடைந்தும், வருத்தப்பட்டுக்கொண்டு அறிவில்லாமல் பல வேலைகளைச் செய்துகொண்டிருக்கிருர்கள். இவ்விதமான இருப்பு என்னைவிட்டு நீங்கிவிட்டது. எதனலே என்ருல், அழகான திரு

மேனியை உடையவனாய், ஜ்ஞாநம் சக்தி முதலான நல்ல குணங்கள் நிறைந்தவனாய், ஸ்வாமியாய் இருக்கிற உன்னை அறிந்து, தெளிவாய் அநுபவித்து, பிறகு இன்னும் தெளிவாய் அநுபவித்து, பிறகு கண்ணாலே பார்ப்பதுபோல் மிகவும் தெளிவாய் அநுபவித்தேன். ஆகையால் ஸம்ஸாரத்தின் பயம் எனக்கில்லை.

---

அவ—இப்படியானால் எதற்காகக் கூப்பிடுகிறீர் என்பதற்கு இதில பதில் சொல்லுகிறார்:—

கண்டு கொண்டென் கைக ளார நின்றிருப்பா தங்கண் மே
லெண்டி சையு முள்ள பூக்கொண் டேத்தி யுகந்துகந்து
தொண்ட ரோங்கள் பாடி யாடச் சூழ்கடன்ஞா லத்துள்ளே
வண்டு ழாயின் கண்ணி வேந்தே வந்திட கில்லாயே. (அ)

(ப - ரை) வண் துழாயின் கண்ணி - விலக்ஷணமான துளஸி மாலையை உடைய, வேந்தே - நாயகனே, கண்டுகொண்டு - உன்னைக் கண்ணாலே பார்த்து, என கைகள் ஆர - என்னுடைய கைகள் திருப்தி அடையுமபடி, நின் திருப்பாதஙகள்மேல் - உன்னுடைய திருவடிகள்மேல், எண் திசையும் உள்ள பூ-எட்டுத் திக்குக்களிலுமுள்ள பூக்களை, கொண்டு - ஸம்பாதித்து, ஏத்தி - ஸ்தோத்திரததுடன் ஸமர்ப்பிதது, உகந்து உகந்து - அதனால் மேன்மேலும் ஸந்தோஷத்தை அடைந்து, தொண்டரோங்கள்-உனக்கு வேலைக்காரனாயிருப்பதில் ருசியுள்ள நாஙகள், பாடியாட - அந்த ஸந்தோஷம் உள் அடங்காமல், காநத்தையும் ந்ர்த்தநத்தையும் பண்ணி, கடல் சூழ் - ஸமுததிரததினால் சூழப்பட்ட, ஞாலத்துள்ளே - பூமியிலே, வந்திட - நீ வருவதற்கு, கில்லாய் -உனக்கு சக்தியில்லை.

(கருத்து) நான் கூப்பிடுகிறது எதற்காக என்றால்: விலக்ஷணமான துளஸிமாலையை உடைய நாயகனே! உன்னை என் கண்களாலே கண்டு, என் கைகளுக்குத் திருப்தி வரும்படி எட்டு திக்குக்களிலுமிருக்கிற புஷ்பங்களை ஸம்பாதித்து, உன் திருவடிகளில் ஸ்தோத்திரத்துடன் ஸமர்ப்பித்து, அதனால் மேன்மேலும் ஸந்தோஷத்தை அடைந்து, அந்த ஸந்தோஷம் உள்ளடங்காமல்

உனக்கு வேலை செய்வதில் ருசியுள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் கூட இருந்து ஆடவும் பாடவும் ஆசைப்படுகிறேன். அதற்காக உன்னைக் கூப்பிடுகிறேன். இப்படிக் கூப்பிட்டும் ஸமுத்திரத் தினால் சூழப்பட்ட இந்தப் பூமியில் நீ வருகிறதில்லை. என் பேர் சொன்னவுடனே உனக்கு இங்கே வருகிற சக்தியும் போய் விட்டதோ? (8)

---

அவ—எம்பெருமானைப் பார்ப்பதற்கு ஏற்பட்டிருக்கும் உபாயத்தைச் செய்தன்றோ அவனைப் பார்க்கவேண்டியது. அதையில்லாமல் ஏன் கூப்பிடுகிறீர் என்றால், அதற்குப் பதில் இதில் சொல்லுகிறார்.

இடகி லேனொன் றட்ட கில்லே னைம்புலன் வெல்லகில்லேன்
கடவ னாகிக் காலந் தோறும் பூப்பறித் தேத்தகில்லேன்
மடவன் னெஞ்சம் காதல் கூர வல்வினை யேனயர்ப்பாய்த்
தடவு கின்றே னெங்குக் காண்பன் சக்கரத் தண்ணலையே. (௯)

(ப-ரை) ஒன்று-ஒரு பிடி அந்நத்தை, இடகிலேன்-(பசியுள்ளவர்களுக்கு) கொடுக்க சக்தியில்லாதவனாய் இருக்கிறேன், ஒன்று அட்ட கில்லேன்-ஒருவாய் ஜலத்தை (தாஹம் எடுத்தவர்களுக்கு) வார்க்க சக்தியில்லாதவனாயிருக்கிறேன், ஐம் புலன்-ஐந்து இந்திரியங்களை, வெல்ல-ஜயிக்க, கில்லேன்-சக்தி இல்லாதவன், கடவனாகி-உன்னிடத்திலேயே வைக்கப்பட்ட மனதை உடையவனாய், பூ பறித்து-புஷ்பங்களைப் பறித்து, காலம் தோறும்-(ஆராதநம் செய்வதற்குத்த) காலங்கள்தோறும், ஏத்த-(ஆராதநம் பண்ணி) ஸ்தோத்திரம் பண்ண, கில்லேன்-சக்தியில்லாதவன், மடம்-உன்னிடத்தில் படிந்து, வன்-உன்னை விட்டுப் பிரிக்க முடியாதபடி இருக்கிற, நெஞ்சம்-என் மனதில், காதல் கூர-ஆசைமிகுந்து, அயர்ப்பாய்-மோஹமுண்டாகி, வல் வினையேன்-பலமான பாபங்களை உடையவனான நான், சக்கரத் தண்ணலை-திருவாழியை உடைய ஸ்வாமியான உன்னை, தடவு கின்றேன்-தேடிக்கொண்டு இருக்கிறேன். எங்கு காண்பன்-எங்கே பார்க்கப்போகிறேன்?

(கருத்து) பசித்தவனுக்கு ஒருபிடி அன்னத்தையும், தாஹமுள்ளவனுக்கு ஒருவாய் ஜலத்தையும் கொடுப்பதாகிய கர்மயோகத்தைச் செய்ய எனக்குச் சக்தியில்லை. ஐந்து இந்திரியங்களை ஜயித்து, ஆத்ம ஸ்வரூபத்தை நினைத்துக்கொண்டிருப்பதாகிய ஜ்ஞாந யோகத்தைச் செய்யச் சக்தியில்லை. உன்னிடத்திலேயே மனதை வைத்து தியாநம் செய்து அதினாலுண்டாகும் ஸந்தோஷத்தினால் புஷ்பங்களைப் பறித்து, ஆராதநம் செய்யவேண்டிய காலங்களில் ஸ்தோத்திரத்துடன் ஆராதநம்பண்ணுவதாகிய பக்தி யோகத்தையும் செய்யச் சக்தியில்லை. (பக்தியோகமுண்டாவதற்குக் காரணமான கர்மயோகத்தையும் ஞான யோகத்தையும் என்னைப் பார்ப்பதற்கு நேரே உபாயமான பக்தியோகத்தையும் செய்ய முடியாமலிருந்து என்னைப் பார்க்க ஆசைப்படலாமா என்று எம்பெருமான் சொல்லுவதாகநினைத்துச் சொல்லுகிறார்). நான் என்ன பண்ணுகிறது. என் மனது உன்னிடம் படிந்து இருக்கிறது. உன்னைவிட்டு அதைப் பிரிக்கமுடியவில்லை. இப்படி அதிக ஆசையினால் அறிவில்லாமல் இருக்கிறேன். உன்னை ஆசைப்படுவதற்கு இடைஞ்சல்களான பலமான பாபங்களை உடைய நான் உன்னைத் தேடுகிறேன். இப்படித் தேடி உன்னை எப்படிப் பார்க்கக்கூடும்?

குறிப்பு:—சிலர் மோக்ஷம் அடைவதற்கு பக்தியோகத்தைச் செய்யவேண்டியதில்லை என்றும், எம்பெருமான் உபாயம் என்கிற அறிவே போதும் என்றும் சொல்லுகிறார்கள். இந்தப் பாட்டினால் பக்தியோகம் உபாயம் என்றும், அஃதில்லாத நான் எம்பெருமானை எப்படிப் பார்க்கப்போகிறேன் என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியாலும், ஏழாம் பாட்டுக்கு வியாக்கியாநம் செய்திருக்கிற திருக்குருகைப்பிரான் பிள்ளான் "நிரதிசய பக்தி ரூப ஜ்ஞாநத்தாலே" என்று அருளிச் செய்கையாலும் ஆளவந்தார் அருளிச்செய்த ஒரு ச்லோகத்துக்கும் பிரமாண வசநங்களுக்கும் விருத்தமாகையாலும் இஃது அதிவாதம். (9)

—

*அவ—பார்க்கமுடியாவிட்டால், என்னை மறந்து பிழைக்க முடியாதோ என்றால், இதில் பதில் சொல்லுகிறார்.—*

சக்கரத் தண்ணலே யென்று தாழ்ந்து கண்ணீர தகும்பப்
பக்க நோக்கி நின்ற லர்ந்தேன் பாவியேன்காண் கின்றிலேன்
மிக்க ஞான மூர்த்தி யாய வேத விளக்கி னையென்
றக்க ஞானக் கண்க ளாலே கண்டு தழுவுவனே. (கo)

*(ப - ரை) சக்கரத்து அண்ணலே என்று-திருவாழியையுடைய ஸ்வாமியே என்று, தாழ்ந்து - துக்கததாலே கீழே விழுந்து, கண்ணீர் ததும்ப - கண்ணீர் பெருக, பக்கம நோக்கி நின்று - நீ வருவாய் என்று இங்குமங்கும பார்த்து நின்று, அலர்ந்தேன் - வருத்தப்பட்டேன், பாவியேன் - பாபியான நான, காண்கின்றிலேன் - உன்னைக் கண்ணாலே பார்க்கச் சக்தியில்லாதவனாயிருக்கிறேன். மிக்க ஞாந மூர்த்தியாய் - மிகுந்த ஞாநஸ்வரூபனாய், வேதவிளக்கினை - வேதமாகிய விளக்கினால் காட்டப்பட்டவனாய் இருக்கிற உன்னை, என் தக்க - எனக்குத் தகுந்தவையான, ஞானக் கண்களாலே - ஞானமாகிய கண்களாலே, கண்டு தழுவுவன் - நன்றாக அநுபவிக்கிறேன்.*

*(கருத்து) கையும் திருவாழியுமாய் இருந்த உன் அழகை எனக்குக் காட்டி என்னை அடிமையாகச் செய்துகொண்ட ஸ்வாமியே! என்று சொல்லி துக்கததினாலே கீழே விழுந்து, கண்ணீர் பெருக மிகவும் வருத்தப்படுகிறேன். பாவியான நான உன்னை இந்தக் கண்களால் பார்க்க சக்தியில்லாதவனாய் இருக்கிறேன். என்னை மறந்துபோகலாமே என்றால், அது முடியவில்லை. மிகுந்த ஜ்ஞாநஸ்வரூபனாய் வேதமாகிய விளக்கினால் காட்டப்பட்டவனாய் இருக்கிற உன்னை எனக்குத் தகுந்த ஞானமாகிய கண்ணாலே பார்த்து திருடமாய் அநுபவிக்கிறேன். எப்படி மறந்து தரித்திருக்கக்கூடும ?* (10)

---

தழுவி நின்ற காத றன்னாற் றாமரைக்கண் ணன்றன்னைக்
குழுவு மாடத் தேன்குருகூர் மாறன் சடகோ பன்சொல்
வழுவி லாத வொண்ட மிழ்க ளாயிரத்து ளிப்பத்துந்
தழுவப் பாடி யாட வல்லார் வைகுந்த மேறுவரே. (கக)

(ப - ரை) தாமரைக்கண்ணன் தன்னை, தழுவி நின்ற - (தாம் உயிரை விடமுடியாதபடி) தழுவிக்கொண்டிருக்கிற, காதல் தன்னால் - ஆசையால், குழுவு மாடம் - ஒன்றோடொன்று சேர்ந்து இருக்கிற வீடுகளையுடைய, தென குருகூர் - தென் குருகூரில வஸிக்கிற, மாறன சடகோபன் சொல் - ஆழ்வாராலே சொல்லப் பட்ட, வழுவு இலாத - (எம்பெருமானுடைய ஸ்வரூபம் ரூபம் முதலானவைகளில் ஒன்றையும) தவறுதலில்லாமல் சொல்லுகிற, ஒண் - விலக்ஷணமான, தமிழகள் ஆயிரததுள் - தமிழ்ப் பாட்டுக் கள் ஆயிரத்துள், இ பததும் - இந்தப் பததுப் பாட்டுக்களையும், தழுவ - மனதும பக்தியும் திரடமாய் சேர்ந்து, பாடி ஆட வல்லார் - பாடி ஆட சகதியுள்ளவர்கள், வைகுந்தம் ஏறுவர் - வைகுந்தத்திற்கு ஏறிப் போவர்கள்.

(கருத்து) எம்பெருமானை விட்டு முடிந்துபோவோம் என்றும் முடியாதபடி செய்கிற ஆசையினால் ஆழ்வார் அருளிச் செய்த ஆயிரம் பாட்டுக்களில் இந்தப் பத்துப் பாட்டுக்களைப் பக்தி நிறைந்த மனதுடன் பாடியாட சக்தியுள்ளவர்கள் வைகுந்தத திற்கு ஏறிப் போவர்.

குறிப்பு:—உடம்பில் ஒரு நோவு தாங்காமல் குளத்தில் விழுந்து மரணம் அடைவோம் என்று எண்ணிப் போகிறவனை, ஒருவன போகவொட்டாதபடி கட்டிக்கொண்டிருப்பதுபோல, ஆழவாருடைய ஆசையானது முடியவொட்டாமல், இன்னும வருவனோ என்று ஆசைப்பட்டு ஜீவிக்கும்படி செய்கிறது— என்று கருதது. (11)

---

ஸ்வவ்யக்த்யாஸக்தீஸ்த்வம் நிரவதிகமஹாநந்தம் த்ராணமேகம்
தாத்ருத்வம் தைவதாநாம் விதரணவிஷயம் ஸர்வஸாக்ஷாத்கராணாம்
ரஸ்யம் । பக்தப்ரேமப்ரதேஸக்திம் யதஸ்ஸஹிதாங்ஸம்
வக்த்ராநாஸம் ப்ராப்தீநாம் விஶ்ராந்திஸ்தாநமீஶம் விஶதவஹாஸ
ணம் வ்யாஹ விஶ்வஸாரி:॥ ॥௧௧॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தமக்குத் தெளிவாய் தோன்றுகிற அநேக குணங்களை உடையவனாக இருக்கிறான் என்று பத்துக் காரணங்களாலே அருளிச்செய்கிறார். அவைகளாவன :—(1) ஆபத் காலத்தில் பந்துவாக விளங்குகை ; (2) அளவில்லாத ஆநந்தத்தைக் கொடுப்பது ; (3) உலகத்தை அளந்தது ; (4) தேவர்களுக்குக் காணமுடியாமலிருப்பது ; (5) ஒரு காரணத்தால் அல்லாமல் ஸ்வபாவமாய் தகப்பனாயிருப்பது; (6) எல்லாருக்குமுள்ளே ஆத்மாவாயிருப்பது; (7) நிறைந்த ஞானமூர்த்தியாயிருப்பது ; (8) நல்ல துளஸிமாலையை அணிந்திருப்பது ; (9) திருவாழியை உடையவனாயிருப்பது ; (10) வேதத்திலுள்ள இந்திரன் அக்கினி முதலான சொற்களாலே சொல்லப்படுவது. (51)

---

தௌஶ்ஶீல்யோ மாம்ஸசக்ஷுர்நிருபதிதுரிதீ வீதலஜ்ஜோ
விலோல: ப்ரேக்ஷாஹீநோ [illegible] ஶ்ரீஶ
[illegible] | கஷ்டஜ்ஞாநாதி [illegible] நிரவதிவிஹிதாம்
ஜ்ஞாநத்ருஷ்டிம் விநிந்தந் [illegible] ஸ்வதோஷாந் வததி
[illegible] ||௫௨||

---

ஆழ்வார் எம்பெருமானுடைய குணங்களில் ஆசையுள்ளவராய், தன் தோஷங்களைச் சொல்லிக்கொண்டு அவனைப் பார்க்க விரும்புகிறார் :–(1) சீலமில்லாமை ; (2) மாம்ஸமாகிய கண்ணாலே எம்பெருமானைப் பார்க்க ஆசைப்படுவது ; (3) அளவில்லாத பாபங்களுள்ளவராய் இருப்பது ; (4) வெட்கமில்லாமலிருப்பது ; (5) சபலனாயிருப்பது ; (6) அறிவில்லாதிருப்பது ; (7) எம்பெருமானைக் கண்ணாலே பார்ப்பது முதலானவைகளில் ஆசையாலே கிடைத்திருந்த மாநஸாநுபவத்தையும் பொருளாக எண்ணாமை ; (8) எம்பெருமானுக்கு ஸௌசீல்யமில்லாமல் போய்விட்டதோ என்று எண்ணுவது ; (9) கர்மயோகம் முதலானவை இல்லாமை; (10) எம்பெருமானை மறக்காதபடி செய்கிற தம்முடைய மாநஸாநுபவத்தை நிந்திப்பது. (52)

---

# எட்டாம் திருவாய்மொழி.

அவ—எம்பெருமானைப் பார்க்கவேண்டுமென்று அவனைக் கூப்பிட்டும் அவன் வரவில்லை. ஆழ்வார் அவன் தம்மை உபேக்ஷித்தான் என்று பிரமித்தது, அவனால் உபேக்ஷிக்கப்பட்ட தம் ஆத்மாவாலும் அதைச் சேர்ந்தவைகளாலும் தமக்கு ஒரு பிரயோஜநமுமில்லை. அவைகள் முடிந்துபோகலாம் என்று ஒரு நாயகனை விட்டுப் பிரிந்த நாயகி வார்த்தையாலே அருளிச் செய்கிறார் :—

( தரவுக்கொச்சகக் கலிப்பா.)

ஏறாளு மிறையோனுந் திசைமுகனுந் திருமகளுங்
கூறாளுந் தனியுடம்பன் குலங்குலமா வசுரர்களை
நீறாகும் படியாக நிருமித்துப் படைதொட்ட
மாறாளன் கவராத மணிமாமை குறைவிலமே. (க)

(ப - ரை) ஏறு ஆளும் இறையோனும் - காளைமாட்டை (வாஹநமாக) ஆளும் ருத்திரனும், திசை முகனும் - நாலு திக்குக்களிலும் முகமுடைய பிரம்மாவும், திருமகளும் - பிராட்டியும், கூறு ஆளும் - தங்கள் தங்கள் பாகமாகப் பிரித்துக்கொண்டு ஆளும், தனி உடம்பன் - ஒப்பில்லாத திருமேனியை உடையவனாய், குலம் குலம் ஆ-கூட்டம் கூட்டமாய், அசுரர்களை, நீறாகும் படியாக, நிருமித்து-(ஸங்கல்பத்தினாலே) ஏற்பாடு செய்து, படை தொட்ட - ஆயுதங்களை எடுத்துக்கொண்டவனாய், மாறாளன் - (ஆச்ரிதர்களின் விரோதிகளைத் தன்) விரோதிகளாக எண்ணுகிறவனாய் இருக்கிற எம்பெருமான், கவராத - ஆசைப்படாத, மணி மாமை - உயர்ந்த அழகால், குறைவிலம் - குறையையுடையவர்கள் அல்லோம்.

(கருத்து) எம்பெருமானுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தினால், அவனது வலது பாகத்தில் ருத்திரனும், நாபியில் பிரம்மாவும், மார்பில் பிராட்டியும் இருந்துகொண்டு அவனுடைய திருமேனியைத் தங்கள் தங்களுடைய பாகங்களாக ஆளுகிறார்கள். ஆச்ரிதர்களின் விரோதிகளைத் தன் விரோதிகளாய் எண்ணி

அஸுரர்கள் நிருகும்படி திருவாழி முதலான ஆயுதங்களைத் தொடுகிறான். இவ்விதமான குணங்களை உடைய எம்பெருமான் ஆசைப்படாத என்னுடைய உயர்ந்த அழகானது போய் விட்டால் எனக்கு ஒரு குறைவுமில்லை இது முடிந்து போகலாம்.

---

மணிமாமை குறைவில்லா மலர்மாத ருறைமார்வ
னணிமானத் தடவரைத்தோ ளடலாழித் தடக்கையன்
பணிமானம் பிழையாமே யடியேனைப் பணிகொண்ட
மணிமாயன் கவராத மடநெஞ்சாற் குறைவிலமே. (உ)

(ப - ரை) அணி மானம் - அழகில் பெருமையை உடைய, தடம்வரை தோள்-பெரிய மலைபோலிருக்கிற தோள்களையுடையவனாய், அடல் ஆழி தடம் கையன - பராக்கிரமத்தை உடைய திருவாழியை விசாலமான திருக்கைகளில் உடையவனாய், மணி மாமை குறைவில்லா - உயர்ந்த அழகுக்கு ஒருநாளும் குறைவு இல்லாத, மலர் மாதர் - தாமரைப் பூவிலிருக்கிற பிராட்டி, உறை மார்வன - இருக்கிற திருமார்பை உடையவனாய், பணி மானம் பிழையாமே - கைங்கரியத்தில் அளவு குறையாமல், அடியேனை, பணி கொண்ட - கைங்கரியம் செய்யும்படி பண்ணின, மணி மாயன் - இந்திர நீல ரத்தினத்தின் நிறத்தையுடைய எம்பெருமான், கவராத - ஆசைப்படாத, மட நெஞ்சால் - எனக்கு உட்பட்ட மனதால், குறைவிலமே.

(கருத்து) அழகு நிறைந்து மலைபோலிருக்கும் தோள்களை உடையவனாய், பராக்கிரமமுள்ள திருவாழி முதலான ஆயுதங்களைக் கையிலுடையவனாய் இருக்கிற எம்பெருமான் பிராட்டியுடன சேர்ந்திருப்பதுபோல் முன்னாலே என்னோடு சேர்ந்தான். இவ்விதமான ஸௌலப்ய குணத்தை உடைய அவன் ஆசைப்படாத என் மனது இல்லாமற்போனால் எனக்கு என்ன குறைவு உண்டாகும்?

(இ - ம்) மணி மாயன்-மாய் + அன் : மாயன்-மாயையுடையவன்; மாய், மாயம்—நீல வர்ணம். பிழையாமே—பிழையாமல், வினையெச்சம். (2)

---

மடநெஞ்சாற் குறைவில்லா மகட்டாய்செய் தொருபேய்ச்சி
விடநஞ்ச முலைசுவைத்த மிகுஞானச் சிறுகுழவி
படநாகத் தணைக்கிடந்த பருவரைத்தோட் பரம்புருடன்
நெடுமாயன் கவராத நிறைவினாற் குறைவிலமே. (ரு)

(ப - ரை) பட நாகத்து - படங்களை உடைய ஆதிசேஷனாகிய, அணை - படுக்கையில், கிடந்த - படுத்துக்கொண்டிருக்கிறவனாய், பரு வரை தோள் - (அதினால் உண்டான ஸுகத்தால்) பெரிய மலைபோல் வளர்ந்த தோள்களை உடையவனாய், பரம் புருடன் - பரம புருஷனாய், மட நெஞ்சால் குறைவில்லா - யசோதையைப் போல் பிள்ளையிடத்தில் பதிந்த மனதால் குறைவில்லாதவளாயும், தாய் மகள் செய்து-தனைத் தாயான மநுஷ்ய ஸ்திரீயினுடைய ரூபமுள்ளவளாயும் செய்துவந்த, ஒரு - (கெட்ட எண்ணத்தில்) ஒப்பில்லாதவளான, பேய்ச்சி - (பூதனை என்கிற) பேய்ச்சியான வள், விட - நாசத்தையடையும்படி, நஞ்ச முலை-விஷத்தையுடைய அவள் முலையை, சுவைத்த - சாப்பிட்ட, மிகு ஞானம் - (அவளை உள்ளபடி அறிந்த) மிகுந்த ஞானத்தையுடைய, சிறு குழவி-சின்ன குழந்தையாய் இருந்த கண்ணன, கவராத, நிறைவினால் - ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய அடக்கமில்லாவிட்டால், குறைவிலம்.

(கருத்து) ஆதிசேஷன்மேல் படுத்திருந்து அதினாலுண்டான எல்லையில்லாத ஸுகத்தால் பெரிய மலைபோல் வளர்ந்த தோள்களையுடையவனாய் பரமபுருஷனாய் தாயான யசோதையைப் போல அவள் பிள்ளையான தனனிடத்தில படிந்த மனதை உடையவளாகவும், அவளைப்போன்ற ரூபமுள்ளவளாகவும் தன்னைச் செய்துகொண்டு வந்து விஷங்கலந்த முலையைக் கொடுத்த பூதனை என்கிற பேய்ச்சியை உள்ளபடி நன்றாய் அறிந்தும், அவள் நாசம் அடையும்படி அவள் விஷப்பாலைச் சாபபிட்ட சின்ன குழந்தை யாயிருந்த கண்ணன் ஆசைப்படாத ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய அடக்கம் எனக்கு இல்லாவிட்டால் என்ன குறை உண்டு ?

---

நிறைவினாற் குறைவில்லா நெடும்பணைத்தோள் மடப்பின்னைப்
பொறையினான் முலையணைவான் பொருவிடையே ழடர்த்துகந்த
கறையினார் துவருடுக்கைக் கடையாவின் கழிகோற்கைச்
சறையினா ரவராத தளிர்நிறத்தாற் குறைவிலமே. (ச)

(ப - ரை) நிறைவினால் குறைவில்லா - குணங்களின் நிறைவினால் குறைவில்லாதவளாய், நெடும் பணைதோள் - நீண்ட மூங்கில்போல், பசுமையுள்ளதாயும் நீண்டதாயும் உருண்டையாயும இருக்கிற தோள்களை உடையவளாய், மடப்பினனை - மிருதுவான ஸ்வபாவதநதை உடையவளாய் இருந்த நப்பின்னையினுடைய, முலை அணைவான் - ஸ்தநங்களைக் கட்டிக்கொள்ள, பொருவிடை ஏழு - சண்டையிலே நோக்குள்ள ஏழு காளைமாடுகளை, பொறையினால் - ஸாமர்த்தியத்தினால், அடர்தது - அடக்கி, உகந்த - ஸந்தோஷப்பட்டவனாய், கறையினார் - (பழங்களைப் பறித்த) கறைகள் நிறைந்த, துவர் - சிவப்புச் சாயம் ஏற்றின, உடுக்கை - (தோலால் செய்யப்பட்ட) வஸ்திரத்தை உடையவனாய், கடையா இன கழி கோல் கை - பால் கறக்கிற மூங்கில் படியோடு மாட்டை ஓட்டும் கோலைக் கையிலுடையவனாய், சறையினார் - அரையில் கட்டின மணியை உடையவனாய் இருந்த கண்ணன், கவராத, தளிர் நிறத்தால் - தளிர்போல் அழகான காந்தியில்லாவிட்டால், குறைவிலம.

(கருத்து) நீண்ட மூங்கில்போல் அழகான தோள்களையும், மிருதுவான ஸ்வபாவத்தையும் உடையவளாகையால் ரூபகுணமும் ஆத்மகுணமும் நிறைந்த இடையர் குலத்தில் பிறந்த நப்பின்னையைக் கட்டிகொள்வதற்காக சண்டையில் நோக்குள்ள ஏழு காளைமாடுகளை வருத்ததகதைப் பொறுத்துக்கொண்டு அடக்கி, இனி நப்பின்னையை அடைந்துவிட்டோம் என்று ஸந்தோஷப் பட்டவனாய், அதே காரணததினால், சிவப்புச் சாயம் ஏற்றப்பட்டு பழம் பறிப்பதனாலுண்டான கறைகள் நிறைந்த தோலை அரையிலும மாடு கறக்கிற பாத்திரததையும் கோலையும் கையிலும், மாடுகளை அழைக்கும்படியான மணிகளை இடுப்பிலும் உள்ளவனாய் இப்படி நப்பின்னைக்குத தகுந்த இடையன் வேஷததை உடையவனாய் இருந்த கண்ணன் ஆசைப்படாத காந்தி இல்லாவிட்டால் எனக்கு என்ன குறை உண்டு?

*குறிப்பு:—முதல் பாட்டில் "மணிமாமை" என்பது அழகையும், இந்தப் பாட்டில் "நிறத்தினால்" என்பது காந்தியையும் சொல்லுகின்றன.*

*(இ - ம்) அணைவான் - அணைய; வினையெச்சம்.* (4)

---

தளிர்நிறத்தாற் குறைவில்லாத் தனிச்சிறையில் விளப்புற்றக்
கிளிமொழியாள் காரணமாக் கிளரரக்க னகரெரித்த
களிமலர்த்து ழாயலங்கற் கமழ்முடியன் கடன்ஞாலத்
தளிமிக்கான் கவராத வறிவினாற் குறைவிலமே. (ரு)

*(ப - ரை) தளிர் நிறத்தால் குறைவில்லா - தளிர்போன்ற காந்தி நிறைந்திருப்பதனாலே அந்த விஷயத்தில் குறைவில்லாதவளாய், தனி சிறையில் - ஒண்டியாய் (ராக்ஷஸிகளுக்கு நடுவிலே இருப்பதாகிய) சிறையிலிருக்கிறாள் என்று, விளப்புற்ற - (சக்ரவர்த்தி திருமகனிடத்தில் ஹநுமாரால்) சொல்லப்பட்டவளாய், கிளி மொழியாள் - கிளிபோல் இனிமையாகப் பேசுகிறவளாய் இருந்த ஸீதையின், காரணம் ஆ - காரணமாக, கிளர் அரக்கன் - (தனனிடத்தில் விரோதம) அதிகப்பட்டுவந்த ராவணனாகிய ராக்ஷஸனுடைய, நகர் - பட்டணத்தை, எரித்த - எரித்தவனாய், கடல் ஞாலதது - ஸமுத்திரததாலே சூழப்பட்ட பூமியிலே, அளியில - லக்ஷணததில, மிககான் - உயர்ந்தவனாய், களி மலர் துழாய் அலங்கல் - தேன் நிறைந்த மலர்ந்த துளஸிமாலைகளாலே, கமழ் முடியான் - வாஸிக்கிற கிரீடததை உடையவனாயிருக்கிற சக்கிரவர்ததி திருமகன, கவராத, அறிவினால்-அறிவு இல்லாவிட்டால், குறைவிலம்—எனக்கு என்ன குறையுண்டு?*

*(கருத்து) தளிர்போன்ற காந்தி நிறைந்தவளாய், கிளிபோல் இனிமையாய்ப் பேசுகிறவளாயிருந்த ஸீதை ஒண்டியாய் ராக்ஷஸிகளுக்கு நடுவில் இருப்பதை ஹநுமார் விண்ணப்பம் செய்ய, அதைக் கேட்டவுடனே, அவளுடன் சேருவதற்கு விரோதியான ராவணனாகிய ராக்ஷஸனையும் அவன் பட்டணத்தையும் அதில் இருந்த அவன் பந்துக்களையும் நீறாக்கி, அவளுடன் திரும்பிவந்து ஸமுத்திரத்தால் சூழப்பட்ட பூமியை ரக்ஷிப்பதற்காக அபிஷே*

கம் செய்துகொண்டு, தேன் நிறைந்து மலர்ந்த துளஸிமாலையையும், கிரீடம் முதலான ஆபரணங்களையும் உடையவனாய் இருக்கிற சக்கிரவர்த்தி திருமகன் பிரீதி பண்ணாத அறிவு இல்லாவிட்டால் எனக்கு என்ன குறை?

(இ - ம்) விளப்பு உற்ற - விளப்பு, விளம்பு என்பதின் தொழிற்பெயர்; விளப்புறுதல் - சொல்லுதல். (5)

---

அறிவினாற் குறைவில்லா வகன்ஞாலத் தவரறிய
நெறியெல்லா மெடுத்துரைத்த நிறைஞானத் தொருமூர்த்தி
குறியமா ணுருவாகிக் கொடுங்கோளா னிலங்கொண்ட
கிறியம்மான் கவராத கிளரொளியாற் குறைவிலமே. (௬)

(ப - ரை) அறிவினால் குறைவில்லா - அறிவினால் குறைவில்லாதவர்களாகத் தங்களை எண்ணுகிற, அகல் ஞாலத்தவர் - விசாலமான பூமியிலிருக்கிறவர், அறிய-அறியும்படி, நெறி எல்லாம் - (தன்னை அடையும்படியான) உபாயங்கள் எல்லாவற்றையும், எடுத்து உரைத்த தானே நிரூபணம் பண்ணிச் சொன்ன, நிறை ஞானத்து - நிறைந்த ஞானத்தை உடைய, ஒரு மூர்த்தி - ஒருவன, குறிய மாண் உருவாகி - வாமந ப்ரம்மசாரி ரூபமுடையவனாய், கொடும் கோளால - க்ரூரமாய் வாங்கிக்கொள்வதாலே, நிலம் கொண்ட - பூமியை (மஹாபலியிடமிருந்து) எடுத்துக் கொண்ட, கிறி அம்மான் - உபாயத்தை அறிந்தவனான ஸ்வாமி, கவராத, கிளிர் ஒளியால் குறைவிலம் - மேனமேல அதிகமாகிற லாவண்யமில்லாவிட்டால் எனக்கு என்ன குறையுண்டு?

(கருத்து) தங்களை உள்ளபடி அறியவேண்டுமென்கிற ஆசையில்லாமல தங்களை எல்லாம் தெரிந்தவர்களாக எண்ணுகிற உலகத்தார் அறியும்படி ஸ்ரீகீதையில தன்னை அடையும்படியான கர்மயோகம முதலான உபாயங்கள் எல்லாவற்றையும் நிரூபணம் பண்ணி அவர்கள் அதிகாரத்துக்குத் தகுந்தபடி சொல்லி, அந்த உபாயங்களை அவர்கள் செய்து தன்னை அடைவதில் உண்டாகும தாமதத்தைப் பொறுக்காதவனாய், அவர்களுக்குத் தன்னைக்காட்டுவதற்கு ஒரு வியாஜத்தை வைத்துக்கொண்டு, வாமந ப்ரம்மசாரியாக அவதாரம செய்து, சிறிய திருவடியைக்

காட்டி பெரிய திருவடியால் அளந்து, மஹாபலியை வஞ்சித்து, அவனிடமிருந்து பூமியை எடுத்துக்கொண்டு, இப்படித் தன்னை எல்லாருக்கும் காட்டின நிறைந்த ஞானமுடைய எம்பெருமான் பிரிந்து பண்ணுத லாவண்யமில்லாவிட்டால் எனக்கு என்ன குறை உண்டு?

குறிப்பு:—முதல் பாட்டில் சொன்னது ஸௌந்தரியம். அதாவது அவயவங்களின் அழகு. இதில் சொன்னது லாவண்ணியம் அதாவது முழு உடம்பின் அழகு. (6)

---

கிளரொளியாற் குறைவில்லா வரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து
கிளரொளிய விரணியன தகன்மார்பங் கிழித்துகந்த
வளரொளிய கனலாழி வலம்புரியன் மணிநீல
வளரொளியான் கவராத வரிவளையாற் குறைவிலமே (எ)

(ப - ரை) கிளர் ஒளியால் குறைவில்லா - மேன்மேலும் வளருகிற காந்தியில் குறைவில்லாத, அரி உருவாய் - ஸிம்மரூபத்தை உடையவனாய், கிளர்ந்து - அதிககோபமுள்ளவனாய் எழுந்து-(கம்பத்திலிருந்து) வெளியில் வந்து, கிளர் ஒளிய-மிகுந்த தேஜஸ்ஸை உடைய, இரணியனது-ஹிரண்யகசிபுவினுடைய, அகல் மார்பம்-அகலமான மார்பை, கிழித்து - (நகங்களாலே) கிழித்து, உகந்த - ஸந்தோஷப்பட்ட, மணி நீலம் - (கோபம் தணிந்தபடியாலே,) நீல ரத்நம்போல் மிகவும் குளுமையுள்ள, வளர் ஒளியான - வளருகிற காந்தியை உடையவனாய, வளர் ஒளிய-விருத்தியடைந்த காந்தியை உடைய, கனல் - அக்னிபோன்ற, ஆழி வலம்புரியன் - திருவாழி திருச்சங்கை உடையவன, கவராத, வரிவளையால் குறைவிலமே - கோடுகளாலே அலங்கிருதமான வளைகள் இல்லாவிட்டால் எனக்கு என்ன குறையுண்டு?

(கருத்து) மிகுந்த காந்தியுள்ள நரஸிம்ம ரூபத்தை எடுத்துக்கொண்டு, தன்னை ஆச்ரயித்த ப்ரஹ்லாதனுக்கு விரோதம் செய்த பலமும் பராக்ரமமுமுள்ள ஹிரண்யகசிபுவினிடத்தில் கோபமுள்ளவனாய், கம்பத்திலிருந்து கிளம்பி, அவனுடைய அகலமான மார்பை நகங்களாலே கிழித்து, ஆச்ரித விரோதியானவன் அழிந்

*தான் என்று ஸந்தோஷப்பட்டு, கோபம் போய் நீலமணிபோல் குளுமையுள்ளவனாய், தாங்கள் செய்யவேண்டிய வேலையை நகங்கள் செய்து தங்களுக்கு வேலையில்லாதபடி பண்ணினபடியால் கோபித்துக்கொண்டிருந்த திருவாழி முதலான ஆயுதங்களை உடைய எம்பெருமானை பிரீதி பண்ணாத வரிவளை இல்லாவிட்டால் எனக்கு என்ன குறைவுண்டு ?*

*குறிப்பு :—"கிளர் ஒளியால் குறைவில்லா" என்பதற்குக் கருத்து—ஹிரண்ய கசிபுவினிடம் கோபததாலே லக்ஷம் ஸூரியன்கள் ஒரேகாலத்தில் உதயமானாற்போலே அளவில்லாத தேஜஸ்ஸையுடையவனாயும், ஒருவனும் கிட்டமுடியாதபடியும் இருந்த—என்று.* (7)

---

வரிவளையாற் குறைவில்லாப் பெருமுழக்கா லடங்காரை
யெரியழலம் புகவூதி யிருநிலமுன் றுயாதவிர்த்த
தெரிவரிய சிவன்பிரம னமராகோன் பணிந்தேத்தும்
விரிபுகழான் கவராத மேகலையாற் குறைவிலமே. (அ)

*(ப - ரை) அடங்காரை - அடங்காதவர்களை (துர்யோதநன் முதலானவர்களை,) எரி அழலம் - எரிகிற அக்கினி, (பயமாகிய நெருப்பானது,) புக - புகும்படி, குறைவில்லா - எல்லா சப்தங்களைக்காட்டிலும் மேற்பட்ட, பெரு முழக்கால் - பெரிய சப்தத்தையுடைய, வரிவளையால் - கோடுகளையுடைய சங்கத்தால், ஊதி, இரு நிலம் - பெரிய பூமிக்கு, முன் துயர்-முன இருந்த (அஸுரராஜாக்களைச் சுமப்பதாகிய) துக்கத்தை, தவிர்த்த - போக்கினவனாய், தெரிவரிய - (இவர்கள் ஜீவன்கள் என்று அறியமுடியாமல்) ஈசுவரன் என்று சந்தேகத்துக்கு இடமான, சிவன், பிரமன்-பிரம்மா, அமரர் கோன் - இந்திரன், பணிந்து ஏத்தும்-வணங்கி ஸ்தோத்திரம் பண்ணப்படுகிற, விரி புகழான்-விரிந்த கீர்த்தியை உடையவனாயிருக்கிற கிருஷ்ணன், கவராத, மேகலையால் குறைவிலம் - ஒட்டியாணம் இல்லாவிட்டால் எனக்கு என்ன குறைவுண்டு ?*

*(கருத்து) அடங்காதவர்களான துர்யோதநன் முதலானவர்களுடைய மனதில் பயம் புகும்படி, உயர்ந்த சப்தத்தையுடைய*

தன்னுடைய சங்கை ஊதி, பூமிக்கு அஸுர ராஜாக்களைச் சுமப்ப தால் முன் உண்டான துக்கத்தைப் போக்கினவனாய், ஜீவனைகள் எனறு அறியமுடியாமல் ஈசுவரன என்று ஸந்தேஹத்துக்கு இட மான சிவனும் பிரம்மாவும இந்திரனும் வணங்கி ஸ்தோத்திரம் பண்ணுகிற பெரிய கீர்த்தியை உடையவனாயிருக்கிற கண்ணன் பிரீதி பண்ணாத, ஒட்டியாணமில்லாவிட்டால எனக்கு என்ன குறைவு உண்டு ?

(இ - ம) அடங்கார்—எதிர்மறை வினைமுற்று பெயர்ச்சொல் லாய் வந்திருக்கிறது ; அடங்காதவர்கள் என்று பொருள். (8)

---

மேகலையாற் குறைவில்லா மேலிவுற்ற வகலல்குற்
போகமகட் புகழ்தந்தை விறல்வாணன் புயந்துணித்து
நாகமிசைத் துயில்வான்போ லுலகெல்லா நன்கொடுங்க
யோகணைவான் கவராத வுடம்பினாற் குறைவிலமே. (௯)

(ப - ரை) மேகலையால் குறைவிலலா - ஒட்டியாணமுள்ள வளாகையால் அழகில் குறைவில்லாதவளாய், மெலிவு உற்ற - ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய மிருதுவான ஸ்வபாவமுள்ள வளாய், அகல் அல்குல் - விசாலமான நிதமபங்களையுடையவளாய், போக மகள் - அநிருத்தன் போகததில் ஆசையுடையவளாய் இருநத, உஷையினுடைய, புகழ் தந்தை - கீர்த்தியை உடைய தகப்பனாய், விறல்-பராக்கிரமததை உடையவனாயிருந்த, வாணன்- பாணாஸுரனுடைய, புயம் துணித்து - புஜங்களை அறுத்து, துயிலவான்போல் - துயிலுகிறவன்போல், உலகெலலாம் - எல்லா உலகங்களும், நன்கு-நன்மையை (தன் ஸங்கல்பததிலே) ஒடுங்க - அடங்குமபடி செய்துகொண்டு, நாகமிசை - ஆதிசேஷனாகிற படுக்கையின மேலே, யோகு - (தன்னை அநுபவிப்பதாகிய) யோகத்தை, அணைவான் - செய்கிறவனாயிருக்கிற கண்ணன், கவராத, உடம்பினால குறைவிலம் — உடம்பு இல்லாவிட்டால் எனக்கு என்ன குறைவு ?

(கருத்து) ஒட்டியாணததால் நிறைந்த அழகையும், ஸ்திரீ களுக்கு இருக்கவேண்டிய மிருதுவான ஸ்வபாவத்தையும், அக லங்களான நிதம்பங்களையும், அநிருத்தனுடைய போகத்தில்

ஆசையையும உடைய உஷையின தகப்பனை கிர்த்தியையும் பராக்கிரமத்தையும உடைய பாணாஸுரனுடைய தோள்களை அறுததது, இதனாலும இதுபோனற செயலகளாலும ஆசரிதர்கள் தனனிடததில வைததிருக்கும ஆசைக்குப பங்கம வருமோ எனகிற பயம் தீாந்தவனாய், எல்லா உலகங்களையும தன் ஸங்கலபத்துக்கு அதீநமாகப் பண்ணிக்கொணடு ஆதிசேஷனாகிய படுக்கையில் படுத்து, தன்னை அநுபவித்துககொணடிருக்கிற கண்ணன பிரிதி பண்ணாத உடமபு இலலாவிட்டால் எனக்கு என்ன குறைவு உண்டு?

குறிப்பு :—சுபமான வஸ்துவைச் சொல்லுகிற 'நன்கு' என்கிற சொல், இங்கு ஆகுபெயராய் சுபரூபமான ஸங்கல்பததைச் சொல்லுகிறது.

(இ - ம) துயில்வான, அணைவரன - வினையால் அணையும் பெயர்கள். துயிலுகிறவன், அணைகிறவன என்று பொருள். (9)

---

உடம்பினாற் குறைவில்லா வுயிரபிரிந்த மலைத்துண்டங்
கிடந்தனபோற் றுணிபலவா வசுராகுழாந் துணித்துகந்த
தடம்புனல சடைமுடியன் றனியொருகூ றமாந்துறையு
முடம்புடையான் கவராத வுயிரினாற் குறைவிலமே. (கo)

(ப - ரை) உடம்பினால குறைவில்லா-(உடம்பைப் போஷிப்பதிலேயே ருசியுள்ளவர்கள் ஆகையாலே) பெரிய உடம்பை உடையவர்களான, அசுரர் குழாம - அஸுரர்களுடைய கூட்டத்தை, உயிர் பிரிந்த - உயிரை விட்டுப் பிரிந்த, மலை துண்டம் கிடந்தனபோல், பல துணியாக - பல துண்டுகளாக, துணிதது, உகந்த - ஸந்தோஷப்பட்ட, தடம்புனல் - விசாலமான ஜலமுள்ள கங்கையை உடைய, சடைமுடியன் - சடையைத் தலையிலுள்ள ருததிரன், தனி ஒரு கூறு - தனியே (மற்றவர்க்கில்லாமல் தனக்கேயுள்ள ஒரு பாகமாக எண்ணிக்கொண்டு,) அமர்ந்து உறையும்- தனது வலது பக்கததில் நிலையாய் வஸிக்கும், உடம்புடையான் - உடம்பை உடையவனாயிருக்கும் எம்பெருமான், கவராத, உயிரினால் குறைவிலம் - ஆத்ம ஸ்வரூபம் இல்லாமல் முடிந்துபோனால் எனக்கு என்ன குறைவு உண்டு?

(கருத்து) இந்திரனுடைய வஜ்ராயுதத்தாலே அடிபட்டு உயிரைவிட்டு கீழே விழுந்துகிடந்த மலைகள்போல் காணும்படி பெரிய உடம்புகளை உடைய காலநேமி முதலான அஸுரர்கள் கூட்டத்தைத் திருவாழியால் துணித்து, கீழே தள்ளி, ஆச்ரித விரோதிகள் போனார்கள் என்று ஸந்தோஷப்படுகிறவனாய், கங்கையைத் தரித்துக்கொண்டிருக்கிற சடை நிறைந்த தலையை உடைய சிவன், தனக்கே உள்ளது : வேறொருவருக்கும் இல்லை, என்று நினைத்துக்கொண்டு நிலையாய எம்பெருமானுடைய உடம்பில் வலது பக்கத்தில் இருக்கிறான். இப்படி ஆச்ரயிக்கிறவர்களுடைய தாழ்மையையும் பெருமையையும் பாராமல் எல்லாருடனும் சேரும்படியான அவனுடைய ஸ்வபாவத்தாலும், அழகு ஸௌசீல்யம் முதலான குணங்களாலும், மனிதர்களாலும் தேவர்களாலும் செய்யமுடியாத அவனுடைய வேலைகளாலும், என்னுடன் கலந்த கலவியாலும் அபஹரிக்கப்படாத ஆத்மஸ்வரூபம் இல்லாமல் முடிந்துபோகலாம் அதனால் ஒரு குறையுமில்லை.

குறிப்பு :—இந்தப் பாட்டு இந்தத் திருவாய்மொழியின் கடைசிப் பாட்டாகையால், கீழ்ப் பாட்டில் சொன்ன விஷயங்களைச் சேர்த்துச் சொல்லுகிறது. ஆகையால் சொன்னதையே சொல்லுகிறது என்கிற குற்றமில்லை (10)

---

உயிரினாற் குறைவில்லா வுலகேழ்தன் னுள்ளொடுக்கித்
தயிர்வெண்ணெ யுண்டானைத் தடங்குருகூர்ச் சடகோபன்
செயிரில்சொல் லிசைமாலை யாயிரத்து ளிப்பத்தால்
வயிரஞ்சேர் பிறப்பறுத்து வைகுந்தம் நண்ணுவரே. (கக)

(ப - ரை) உயிரினால் குறைவில்லா - (தேவர்கள், மனிதர்கள், மிருகங்கள், ஸ்தாவரங்கள் ஆகிய) ஆத்மாக்கள் நிறைந்த, உலகு ஏழ் - ஏழு உலகங்களையும், தன்னுள் - தன் ஸங்கல்பத்திலே, ஒடுக்கி - இருக்கும்படி செய்து, தயிர் வெண்ணெய் உண்டானை (குறித்து) தடங் குருகூர் சடகோபன் - ஆழ்வாருடைய, செயிர் இல் - குற்றமில்லாத, சொல் - சொல்லான, இசை மாலை ஆயிரத்துள் - ராகத்தோடுகூடிய பாட்டுக்கள் ஆயிரத்துள் அடங்கிய, இ பத்தால் - இந்தப் பத்துப் பாட்டுக்களாலே, (இவைகளை

படிப்பதினால்,) வயிரம் சேர் - (அநாதிகாலமாய் வந்துகொண்டு இருப்பதாலே) கெட்டியாய் அறுக்கமுடியாததாய் இருக்கிற, பிறப்பு - ஸம்ஸாரத்தை, அறுத்து, வைகுந்தம் நண்ணுவர் - வைகுந்தத்தை அடைவர்கள்.

(கருத்து) ஆத்மாக்கள் நிறைந்த ஏழு உலகங்களையும் தன் ஸங்கல்பத்துக்கு உட்பட்டதாய்ப் பண்ணிக்கொண்டிருந்தும், ஆச்ரிதரிடத்தில ஆசையால் மனிதருபத்துடன பிறந்து வெண்ணெயையும் தயிரையும சாப்பிட்ட கண்ணனைக் குறித்து, ஆழ்வார் அருளிச்செய்த குற்றமில்லாத இந்தப் பத்துப் பாட்டுக்களைப் படிக்கிறவர்கள், அநாதிகாலமாயிருந்து திடமாயிருக்கிற ஸம்ஸாரத்தைப் போக்கி, வைகுந்தத்தைச் சேருவர்கள் (11)

---

ஸௌந்தர்யாத்யா ஸ்வகீய ஹ்ருதி வஸதிக்ருத ஸத்குணாட்யாஸ்
தாயாம்ச காந்தா ஸ்த்ரீஸம்ஜ்ஞார்த்தே ப்ரகாசே வயஸ்யஸ்ய
பாவஸ்யத்வம் ஸ்வஸ்வஸ்தே । ஸ்வாத்மீயத்வேந யுக்த்யா
தத்ஸ்வீயத்வேந ந்யஸ்தம் ததீயம் தத்பரித்யக்தவ்யம் காமிலாத்
நாஸ்த்யாத்மீயம் ஸமஸ்தம் பரிவாத்ஸ்யாஸ்ரிதாத் ॥ ௪௰ ॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய திருமேனியைச் சிவன் முதலானவர்கள் ஆச்ரயித்திருக்கிறார்கள் என்று சொல்லி, அவனால் பிரீதி பண்ணப்படாதவைகளை அவனைச் சேர்ந்தவர்கள் விட்டுவிடவேண்டியதென்று ஆழ்வார் அருளிச்செய்கிறார். இப்படிச் சொல்லப்பட்டவைகளாவன :—(1) அவயவங்களின் அழகு ; (2) மனதும் இந்திரியங்களும் ; (3) ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய அடக்கம் ; (4) தேஹ காந்தி ; (5) நல்ல அறிவு ; (6) முழு உடம்பின அழகு ; (7) வளை ; (8) ஒட்டியாணம் ; (9) உடம்பு ; (10) ஆத்மஸ்வரூபம்.

---

# ஒன்பதாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த திருவாய்மொழியில், தன்னை எம்பெருமான் உபேக்ஷித்தான் என்று எண்ணி, ஆழ்வார் வருததப்பட்டார். இந்த அவஸ்தையில் தமக்குத் துணையாக யாராவது இருப்பரோ என்று உலகததைப் பார்க்கும்போது, எல்லாரும் விஷயங்களில் மனதைச் செலுததி, அவைகள் கிடைத்தால ஸந்தோஷததையும், கிடைககாவிட்டால துக்கததையும் அடைநதிருப்பதைப் பார்த தார். அவருடைய துககம இரட்டிததது. அவர்களுடன்கூட இருக்காமல தமமை அழைததுககொள்ளவேண்டும் என்று எம்பெருமானை வேணடுகிறார். துக்கம அதிகப்பட்டதனால அவன் தம்மை உபேக்ஷிக்க மாட்டான் எனபது அவர் கருதது :—

( தரவுகொச்சகக் கலிப்பா.)

நண்ணுதாா முறுவலிப்ப நல்லுற்றாா கரைந்தேங்க
எண்ணாாத் துயாவிளைக்கு மிவையென்ன வுலகியற்கை
கண்ணாளா கடல்கடைந்தா யுனகழறகே வரும்பரிசு
தண்ணவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே. (க)

(ப - ரை) நணணுதார் - சேராதவர்கள், (த்வேஷம் பண்ணுகிறவர்கள்) முறுவலிப்ப - (ஸந்தோஷபபடடு) சிரிக்கும்படியாகவும், நல் உற்றார் - நல்ல (பிரீதியுள்ள) பந்துக்கள், கரைந்து ஏங்க - கரைந்து வருத்தப்படும்படியாகவும், எண் ஆரா - கணக்கில்லாத, துயர் விளைக்கும் - துன்பங்களை உண்டுபண்ணுகிற, இவை உலகியற்கை - இந்த உலகத்தின ஸ்வபாவமானது, என்ன ? கண்ணாளா - நல்ல திருக்கண்களை உடையவனே ! (நிறைந்த கருணையும், குளிர்ந்த பார்வையும் உடையவனே !) கடல் கடைந்தாய் - திருப்பாற்கடலைக் கடைந்தவனே ! உன கழற்கே வரும் பரிசு - உன் திருவடிகளின கீழே நான் வந்து சேரும் பிரகாரததை, பணிகண்டாய் - சொல், (இப்படிச் செய்யத் திருவுள்ளமில்லாவிட்டால்), தண் ஆவாது - தாமதமில்லாமல், சாம் ஆறு - நான் மரணம் அடையும் வழியை, (அருளிச்செய்ய வேண்டும்.)

(கருத்து) இந்த உலகத்தில் ஒருவன மற்றொருவனுடைய, வீடு, நிலம், பணம் முதலானவைகளைப் பிடுங்கிக்கொண்டு அவனுக்குக் கணக்கில்லாத துக்கங்களை உண்டுபண்ணுகிறான். இழந்தவனிடத்தில் த்வேஷம் பண்ணுகிறவர்கள், நமமுடைய விரோதிக்குக் கெடுதி வந்ததென்று ஸந்தோஷப்பட்டு சிரிக்கிறார்கள். அவனுக்கு வேண்டியவர்களான பந்துக்கள் நமக்கு வேண்டியவனுக்குத் துக்கம் வந்ததே என்று கரைந்து வருத்தப்படுகிறார்கள. இப்படி ஒருவன் மற்றொருவனுக்குக் கெடுதி செய்வது உலகத்துக்கு ஸ்வபாவமாயிருக்கிறது இதை நான பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை .ஆகையால் இவர்களுடனகூட இருக்காமல என்னை உன திருவடிகளின்கீழ வந்து சேருமபடி செய்தருளவேணடும. இது செய்யத் திருவுள்ளமில்லாவிட்டால், தாமதமில்லாமல எனக்கு மரணம வரும வழியைச் செய்தருள வேண்டும். நீ ஆச்ரிதர்களுக்கு வேண்டிய வேலைகளைத தேவர்களுக்குத திருப்பாற்கடலைக் கடைந்ததுபோல செய்கிறவன் அல்லவா ? கருணை நிறைந்தவன் அல்லவா ? ஆகையால் என்னைக் குளிரக் கடாக்ஷித்து நான் விண்ணப்பம் செய்ததைச் செய்து அருளவேண்டும்.

(இ - ம்) ஆவாது - ஆகாமல்: வினையெச்சம். சாம் - சாகும்: இடைக்குறை. (1)

---

சாமாறுங் கெடுமாறுந் தமருற்றார் தலைத்தலைப்பெய்
தேமாறிக் கிடந்தலற்று மிவையென்ன வுலகியற்கை
யாமாறொன் றறியேனு னரவணையா யம்மானே
கூமாறே விரைகண்டா யடியேனைக் குறிக்கொண்டே. (உ)

(ப - ரை) சாம்ஆறும் - மரணம் அடைகிற விதமும், கெடும் ஆறும்-கெட்டுப்போகிற விதமும், (அவைகளைக் குறித்து) தமர் - தன்னைச் சேர்ந்தவர்கள் (தாயாதிகளும்), உற்றார்-ஸம்பந்திகளும, தலைத்தலைப் பெய்து - ஒருவர்மேல் ஒருவர் விழுந்து, கிடந்து-பூமியில் விழுந்து, அலற்றும் - கதறும் ஆகிய, இவை உலகு இயற்கை - இந்த உலகத்தின் வியாபாரங்கள், என்ன ! நான, ஆம் ஆறு-ஆகும் வழியை, ஒன்று அறியேன் - ஒன்றையும் அறி

யவில்லை. அரவு அணையாய் - ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனே! அம்மானே - ஸ்வாமியே! அடியேனை, குறிக்கொண்டு - லக்ஷியமாக எடுத்துக்கொண்டு, கூம் ஆறு - அழைத்துக்கொள்ளும் விதத்தை, விரை - சீக்கிரம் செய்யவேண்டும், கண்டாய் - இதைக் கட்டாயம் செய்யவேண்டும்.

(கருத்து) உலகத்திலே சிலர் அதிக காலம் இருக்கவேண்டும் என்று ஆசைப்பட்டும் அது முடியாமல் நடுவில் மரணம் அடைவதும், இஷ்டமான வஸ்துக்கள் கெட்டுப்போவதும் இவைகளைப் பற்றி, மரணம் அடைந்தவர்களுடைய தாயாதிகளும் பந்துக்களும் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து பூமியில் கிடந்து கதறுகிறதும் ஆகிய இந்த உலக வியாபாரங்களைச் சொல்ல முடியாது. அவர்களைப்போல் நானும் உன்னை நினைக்காமல் துக்கப்படத்தகாதவைகளுக்குத் துக்கப்படுவேனோ, அல்லது அப்படி ஆகாமல் தப்பி இருப்பேனோ இதை நான் அறியவில்லை. ஆதிசேஷன்மேல் படுத்துக்கொண்டிருக்கிற என் ஸ்வாமியே! நம் அடியான் இவன் என்று உன்னுடைய திருவுள்ளத்தில் வைத்து என்னை உன்னிடம் அழைத்துக்கொள்ளுகிற வேலையைச் சீக்கிரம் செய்ய வேண்டும்.

குறிப்பு :—(1) கண்டாய் என்கிற சொல்லுக்குப் பாராய் என்று பொருளாகி, தன் உடம்பைக் காட்டி இதைப் பார் என்று ஆழ்வார் சொல்லுகிறார் என்றும் பொருள்கொள்ளலாம்.

(2) ஒருவன் எம்பெருமானைக் காணவில்லையே என்று கதறவேண்டியதாயிருக்க, வேறு விஷயங்களுக்காக கதறுவது என்ன வியாபாரம் என்று கருத்து.

(இ - ம்) சாம் - சாகும், ஆம் - ஆகும், கூம் - கூவும். இவைகளின் இடைக்குறை. (2)

---

கொண்டாட்டுங் குலம்புனைவுந் தமருற்றார் விழுநிதியும்
வண்டாரூங் குழலாளும் மனையொழிய வுயிர்மாய்தல்
கண்டாற்றே னுலகியற்கை கடல்வண்ணா வடியேனைப்
பண்டேபோற் கருதாதுன் னடிக்கேகூய்ப் பணிகொள்ளே. (௩)

(ப - ரை) கொண்டாட்டும் - எல்லாரும் ஸ்தோத்திரம் பண்ணுவதும், குலம புனைவும - (இல்லாத) குலத்தைத தன்னிடத்தில் ஏறிட்டுக்கொள்வதும், தமர் - தாயாதிகளும, உற்றார் - ஸம்பந்திகளும, விழு-சிலாக்கியமான, நிதியும - பணமும், வண்டு ஆர் பூ குழலகளும் - வண்டுகள் நிறைந்த பூக்களைத தலையிலுடைய ஸ்திரிகளும, மனை - வீடும், ஒழிய-ஒழிந்திருக்க (இவைகள் எல்லாம மரணம் அடைகிற தன்னைவிட்டு முன்போலவே இருக்க.) உயிர் மாய்தல் - பிராணன நசிக்கிறதாகிற, உலகு - இயற்கை - உலகத்தின வியாபாரத்தை, கண்டு ஆற்றேன - பொறுக்கமுடியவில்லை கடல வண்ணா - ஸமுத்திரத்தின ஸ்வபாவத்தை உடையவனே! பண்டேபோல - முன்போல, கருதாது - எண்ணாமல், அடியேனை, உனனடிக்கே - உன திருவடிகளினகிழே, கூவி - அழைதது, பணி கொள் - கைங்கரியத்தைப் பெற்றுககொள்

(கருத்து) ஒருவன் மரணம அடையும்போது உன்னிடத்தில் மனம் வைக்காமல, ஐயோ! எல்லாரும தன்னைக் கொண்டாடினதையும, தன குலத்தையும், தாயாதிகளையும, பந்துக்களையும், பணத்தையும், மனைவியையும, வீட்டையும விட்டுப் போகிறேனே என்று அழுகிறான். இந்த உலக வியாபாரத்தை என்னால் பார்க்க முடியவில்லை. ஸமுத்திரமபோல அளவிடமுடியாத பெருமையை உடையவனே! உன்னைப் பிரிந்த துக்கத்தை நான பொறுக்கக்கூடும் என்று எண்ணி இதுவரையில் வராதிருந்தாய். இந்தத் துக்கம் அதைக்காட்டிலும அதிகமாக இருக்கிறது. இதையும் நான் பொறுக்கக்கூடும என்று எண்ணாமல, என்னைக் கூப்பிட்டு உன் திருவடிகளினகீழ வைதது்க்கொண்டு நான செய்யும் கைங்கரியத்தைப் பெற்றுக்கொள்ளவேண்டும (3)

---

கொள்ளேன்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வ நெருப்பாகக்
கொள்ளேன்று தமமுடு மிவையென்ன வுலகியற்கை
வள்ளலே மணிவண்ணா வுனகழற்கே வரும்பரிசு
வள்ளல்செய் தடியேனை யுனதருளால் வாங்காயே. (ச)

(ப - ரை) கொள் என்று - என்னை எடுத்துக்கொள் என்னை எடுத்துக்கொள் என்று, கிளர்ந்து எழுந்த - விருத்தி அடைகிற,

பெரும் செல்வம் - பெரிய தனமானது, நெருப்பாக - நெருப்பைப்போல துக்கத்தை உண்டுபண்ணுகையில், கொள் என்று - பின்னையும் அதையே எடுத்துக்கொள் என்று, தமம் - தமஸ்ஸு என்கிற குணமானது, மூடும் - மூடிக்கொண்டிருக்கிற, இவை உலகு இயற்கை என்ன, வள்ளலே - வேண்டியதைக் கொடுக்கிறவனே! மணி வண்ணா - முந்தானியில் முடிந்துவைக்கக்கூடிய ரத்னம்போல ஸுலபனானவனே! வள்ளல் செய்து - உன் ஔதார்யத்தைப் பண்ணி, உனது அருளால் - உன்னுடைய கருணையினால், உன கழற்கே-உன திருவடிகளின்கீழே, வரும் பரிசு - நான் வரும் பிரகாரத்தை, அடியேனை, வாங்கிப்பருள் - உலகத்தார் இடமிருந்து எடுத்து அருளவேண்டும்.

(கருத்து) பலவிதங்களான தனங்கள், என்னை எடுத்துக் கொள், என்னை எடுத்துக்கொள் என்று போட்டி போட்டுக் கொண்டு வந்தாலும், அவைகள் தங்களுடைய நாசத்தாலும் இருக்கும்போது விரோதிகளை உண்டுபண்ணுவதாலும் நெருப்பைப் போல் துக்கத்தை விளைவிக்கின்றன. இப்படியிருந்தபோதிலும், அறிவில்லாமையை உண்டுபண்ணுகிற தமஸ்ஸு என்கிற குணத்தாலே மூடப்பட்டு இன்னும் தனங்கள் வேண்டும் என்று உலகத்தார்கள் பாடுபடுகிறார்கள். இதென்ன ஸ்வபாவம்! வேண்டியதைக் கொடுக்கிறவனே! ஸுலபனானவனே! உன்னுடைய ஔதார்யத்தாலும் கிருபையினாலும் உன் திருவடிகளின்கீழ் வந்து சேரும்படி இவர்கள் நடுவிலிருந்து என்னை எடுத்து அருள வேண்டும். (4)

---

வாங்குநீர் மலருலகில் நிற்பனவுந் திரிவனவு
மாங்குயிர்கள் பிறப்பிறப்புப் பிணிமூப்பாற் றகர்ப்புண்ணு
மீங்கிதன்மேல் வெந்நரக மிவையென்ன வுலகியற்கை
வாங்கெனைநீ மணிவண்ணா வடியேனை மறுக்கேலே (௫)

(ப - ரை) வாங்கும் நீர் - ஸ்ருஷ்டிகாலத்தில் (உண்டுபண்ணப்பட்டவைகளைப் பிரளயகாலத்தில் வாங்கிக்கொள்ளும்) பிரளய ஜலத்தில், மலர் - உண்டாகிற, உலகில் - பூலோகத்தில் இருக்கிற, நிற்பனவும் திரிவனவும் - ஸ்தாவரங்களும், ஜங்கமங்களுமான,

உயிர்கள் - பிராணிகள், ஈங்கு - இவ்விடத்தில், பிறப்பு - பிறப்பினாலும், இறப்பு - மரணத்தாலும், பிணி - வியாதியாலும், மூப்பால - கிழத்தனத்தாலும், தகர்ப்பு - துன்பத்தை, உண்ணும் - அநுபவிக்கிறார்கள். இதன்மேல், வெம் நரகும் - கொடுமையான நரகமும் வரும். இவை உலகியற்கை என்ன - இவைகளை அநுபவித்துக்கொண்டிருப்பது என்ன உலக ஸ்வபாவம்! மணிவண்ணா - ரத்நம்போல் ஸௌலப்யனானவனே! அடியேனை, மறுக்கேல - மோஹத்தை அடையும்படி செய்யாதே. ஆங்கு - அந்த இடத்தில், (வைகுண்டத்தில்). நீ, என்னை - எனனை, வாங்கு - எடுத்து அருளவேண்டும்.

(கருத்து) அநித்யமான இந்த உலகத்தில் ஸ்தாவரமாயும் ஜங்கமமாயும் இருக்கிற பிராணிகள் உன்னைவிட்டுப் பிரிந்திருக்கிறோமே என்று துக்கப்படவேண்டியிருக்க, பிறப்பு, மரணம், வியாதி, கிழத்தனம் இவைகளால் துன்பத்தையடைந்துகொண்டு இருக்கிறார்கள். மரணம் அடைந்தபிறகு நரகத்தில் துக்காநுபவமும் வருகிறது இவைகளைப் பொறுத்துக்கொண்டிருக்கிற உலகத்தின் ஸ்வபாவம் என்ன? மணிபோல் ஸௌலப்யனானவனே! வைகுந்தத்திற்கு நான் வந்துசேரும்படி என்னை எடுத்து அருளவேண்டும்.

(இ - ம்) மறுக்கேல் - பிறவினை. எதிர்மறை ஏவல் வினைமுற்று. ஆங்கு, ஈங்கு ' ஆதிநீளல். (5)

---

மறுக்கிவல் வலைப்படுத்திக் குமைத்திட்டுக் கொன்றுண்ப
ரறப்பொருளை யறிந்தோரா ரிவையென்ன வுலகியற்கை
வெறித்துளவ முடியானே வினையேனை யுனக்கடிமை
யறக்கொண்டா யினியென்னா ரமுதேகூ யருளாயே. (௬)

(ப-ரை) மறுக்கி-மனதைக் கலக்கி, வல்வலைப்படுத்தி-பலமான வலையில் அகப்படுத்தி, குமைத்திட்டு-துன்பப்படுத்தி, கொன்று, உண்பர் - தங்கள் வயிற்றை நிரப்பிக்கொள்வார்கள் (துர்ஜனங்களான இந்த உலகத்தார்.) அறம் பொருளை - எப்போதுமிருக்கிற உபாயமாகச் சொல்லப்பட்ட உன்னுடைய உண்மையான இருப்பை, அறிந்து, ஓரார் - நிரூபணத்தைச் செய்கிறார்களில்லை,

இவை உலகியற்கை என்ன, வெறி துளவம் முடியானே - நல்ல வாஸனையுள்ள துளஸிமாலையைக் கிரீடத்தில் தரித்திருப்பவனே! என் ஆர் அமுதே - என்னுடைய நிறைந்த அமுதமே! வினையேனை - பாபியான என்னை, அற - வேறு ஒருவனுக்காக இருக்கத் தகாதபடி, உனக்கு அடிமை கொண்டாய் - உனக்குக் கைங்கர்யம் செய்கிறவனாய் எடுத்துக்கொண்டாய். இனி - (இப்படி ஸம்ஸாரத்தில் மிகுந்த வெறுப்பு உண்டான) பின்பு, கூய் அருளாய்-உன்னிடம் அழைத்துக்கொள்ளவேண்டும்.

(கருத்து) உலகத்தில் துர்ஜநங்கள் ஸாதுக்களுக்குப் பயத்தை உண்டுபண்ணி, அந்தப் பயத்தைத் தாங்களே போக்கத் தகுந்தவர்கள் என்று அவர்கள் நம்பும்படிசெய்து அவர்களை வசப்படுத்திக்கொண்டு, அவர்கள் தங்கள் பொருளைத் தாங்களே கொடுக்கும்படி துன்பப்படுத்தி, அவர்கள் இருந்தால் ஏதாவது கெடுதல் செய்வார்களோ என்று நினைத்து அவர்களைக் கொன்று, தங்களுடைய வயிற்றை நிரப்பிக்கொள்ளுகிறார்கள். எப்போதுமிருக்கிற உபாயமாகச் சொல்லப்படுகிற உன்னுடைய உண்மையைச் சாஸ்திரத்தைக்கொண்டு அறிந்து, உன்னை அடைவதே பிழைக்கும் வழி என்று நிரூபணம் செய்கிறதில்லை. நல்ல வாசனையுள்ள துளஸி மாலையைக் கிரீடத்தில் தரித்திருக்கிறவனே! என்னுடைய நிறைந்த அமுதமே! பாபியாயிருக்கிற என்னை உன்னை விட்டுப் பிரிந்திருக்கும்படியான தோஷங்களுக்கு இருப்பிடமாய் நான இருப்பதைப் பார்க்காமல் உன்னுடைய அளவில்லாத அழகைக் காட்டி வேறொருவனுக்கும் சேஷனாக இருக்கத் தகுந்தவன் என்கிற எண்ணத்தை மாற்றி உன் கைங்கரியத்திலேயே ஆசையுள்ளவனாக என்னைப் பண்ணி இருக்கிறாய். இப்படி ஸம்ஸாரத்தில் மிகுந்த வெறுப்புண்டான பின்பு என்னை அழைத்துக் கொள்ளவேண்டும். (6)

---

ஆயேயிவ் வுலகத்து நிற்பனவுந் திரிவனவு
நீயேமற் றேருபொருளு மின்றிநீ நின்றமையால்
நோயேமூப் பிறப்பிறப்புப் பிணியேயென் றிவையொழியக்
கூயேகோள் ளடியேனைக் கோடுவுலகங் காட்டேலே· (எ)

(ப - ரை) இ உலகத்து - இந்த உலகத்தில் இருக்கும், நிற்பனவும் - ஸ்தாவரங்களும், திரிவனவும் - ஜங்கமங்களும், நீயே ஆயே - நீயாகவே இருக்கையில், (இவைகள் எல்லாம் உனக்காகவே இருக்கையில), நோய் - வியாதியும், மூப்பு - கிழத்தனமும, பிறப்பு - பிறவியும், இறப்பு - மரணமும், பிணி - மன வருத்தமும், என்று, இவையொழிய - என்கிற இவைகளாலே துக்கப்படுகிறார்களே அல்லாமல், மற்று ஒரு பொருளும் இன்றி- வேறு ஒரு பிரயோஜநமுமில்லாமல், நின்றமையால்-இருக்கிறபடியால், கொடு உலகம் - கொடுமையான இந்த உலகத்தை, நீ காட்டேல் - நீ எனக்குக் காட்டாதொழியவேண்டும். அடியேனை, கூயே கொள் - அவச்யமாக அழைத்துக்கொள்ளவேண்டும்.

(கருத்து) இந்த உலகத்திலிருக்கிற ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் ஆகிய எல்லாம உனக்காகவே இருக்கின்றன. இதை அறிந்து உனக்குக் கைங்கரியம் செய்துகொண்டில்லாமல் உன்னை விட்டுப் பிரிந்திருக்கிறோமே என்று துக்கப்படாமல் வியாதியாலும், பிறப்பாலும், மரணத்தாலும், கிழத்தனத்தாலும், மன வருத்ததாலும் துக்கப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் இந்த உலகம கொடுமையானது. அதை நான பார்த்துகொண்டு இருக்காமல் என்னை உனனிடம் அழைததுககொள்ளவேண்டும்.

(இ - ம்) கூய் ஏ : கூவி ஏ. ஏகாரததிற்குத் தேற்றப் பொருள். இதைக் கட்டாயம செய்யவேணடுமென்று கருத்து. ஆய்-ஏ : ஆ-ஆகி : ஏ - இசைநிறை. நீ ஏ - ஏகாரம் பிரிநிலைப் பொருள். மூப்பிறப்பிறப்பு . மூப்பு - பிறப்பு—இறப்பு; முதற் சொல்லில் 'பு' குறைந்திருக்கிறது ; கடைக்குறை. (7)

---

அவ—கீழ் ஏழு பாட்டுக்களில இந்த உலகத்தின க்லேசங்களைப் பொறுக்கமுடியாதெனறு சொன்னார். இதில் ஸ்வர்க்க லோகம் முதலானவைகளின க்லேசங்களும பொறுக்கமுடியாது என்று காட்டுகிறார் :—

காட்டிநீ கரந்துமிழு நிலநீர்தீ விசும்புகா
லீட்டிநீ வைத்தமைத்த விமையோர்வாழ் தனிமுட்டைக்
கோட்டையினைக் கழித்தென்னையுன் கொழுஞ்சோதி யுயரத்துக்
கூட்டரிய திருவடிக்க ளேஞ்ஞான்று கூட்டுதியே. (அ)

(ப - ரை) காட்டி-ஸிருஷ்டிகாலத்திலே காணும்படி செய்து, கரந்து - பிரளயகாலத்தில் அதை மறையும்படி செய்து, நீ உமிழும் - மறுபடியும் ஸிருஷ்டிகாலத்தில் அதை வெளிப்படுத்தும், நிலம் - பூமி, நீர் - ஜலம், தீ - தேஜஸ், விசும்பு - ஆகாசம், கால் - வாயு, (ஆகிய பஞ்ச பூதங்களின் சில பாகத்தை), ஈட்டி - ஒன்ருய் சேர்த்து, வைத்து - மற்ற பாகத்தை ஆவரணங்களாகச் செய்து அவைகளின் நடுவில் அவைகளை வைதது, நீ அமைத்த-நீ செய்த, இமையோர் வாழ் - தேவர்கள் இருக்கிற, தனி - விலக்ஷணமான, முட்டை கோட்டையினை - முட்டைபோல் இருக்கிற (அண்டமாகிய) கோட்டையை, கழிதது-நான கழியும்படி (தாண்டும்படி) செய்து, உன் - உன்னுடைய, கொழும் சோதி - அதிக தேஜோ ரூபமான, உயரதது - உயரத்தில் (மேலே இருக்கிற ஸ்ரீ வைகுண்டம் என்கிற இடததிலே,) கூட்டு அரிய-(என் பிரயத்தநத்தினுலே) சேருதல் முடியாத, திருவடிகள் - திருவடிகளில், என்னை, எஞ்ஞான்று - எப்போது, கூட்டுதி - சேர்ப்பாய்.

(கருத்து) உன்னுடைய விளையாட்டுக்கு ஸாதநமான பஞ்ச பூதங்களில சில பாகததைச் சேர்தது, மற்ற பாகத்தை ஆவரணங்களாகச் செய்து, அவைகளின் நடுவிலே நீ உண்டுபண்ணின அண்டமாகிய கோட்டையை நான் தாண்டும்படி செய்து அதிக தேஜோரூபமாயும் ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ளதாயும் பிரகிருதி மண்டலத்திற்கு மேலே இருப்பதாயும் இருக்கிற வைகுந்தத்தில் உன திருவடிகளில் என்னை எப்போது சேர்ப்பாய்.

குறிப்பு :—(1) உலகத்தில் கோட்டைகளுக்கு வாசல் உண்டு இந்த அண்டமாகிய கோட்டைக்கு இது கிடையாது. இது பாட்டில் "தனி" என்கிற சொல்லால் சொல்லப்படுகிறது.

(2) என்னை அழைத்துக்கொள்ளுவதற்கு ஒரு காலத்தைக் குறித்தால் இந்த க்லேசங்களைப் பொறுத்திருக்கலாம் என்று "எஞ்ஞான்று" என்பதற்குக் கருத்து.

(3) "இமையோர் வாழ்" என்பதற்கு பிரகிருதியிலிருந்து உண்டான வஸ்துக்களையே போக்கியங்களாக எண்ணிக்கொண்டு

இருக்கும் பிரம்மா முதலான ஜீவன்கள் வாழுகிற என்று கருத்து. இதுவும் எம்பெருமானுடைய அநுபவத்துக்கு விரோதமாய் இருப்பதாலே ஆழ்வாருக்கு க்லேசமாய் தோன்றுகிறது. (8)

---

அவ—கீழ்ப் பாட்டுக்களில் உலகத்தாருடைய வருத்தங்களை எம்பெருமானுக்குக் காட்டி, அவர்களையும் தம்மைப்போலே உன்னுடைய அநுபவத்திலேயே ருசியுள்ளவர்களாகச் செய்ய வேண்டும் என்று தம்முடைய கருணையாலே எம்பெருமானைப் பிரார்த்திக்கிறார் :—

கூட்டுதிநின் குரைகழல்க ளிமையோருந் தொழாவகைசெய்
தாட்டுதிநீ யரவணையா யடியேனு மஃதறிவன்
வேட்கையெல்லாம் விடுத்தென்னையுன் றிருவடியே சுமந்துழலக்
கூட்டரிய திருவடிக்கட் கூட்டினைநான் கண்டேனே. (௯)

(ப-ரை) அரவணையாய் - ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனே! இமையோரும் - பிரம்மா முதலான தேவர்களும், தொழாவகை செய்து - ஸேவியாதபடி பண்ணி, ஆட்டுதி - ஆடும்படி (அலையும்படியாகச்) செய்கிறாய். (ஆனால்,) நின - உன்னுடைய, குரைகழல் - (ஆபரணத்தின்) சப்தத்தை உடைய திருவடிகளை, கூட்டுதி - (எவ்வளவு தாழ்ந்தவர்களான ஆச்ரிதர்களையும்) சேரும்படி செய்கிறாய், அடியேனும், அது அறிவன் - இந்த விஷயத்தை அறிகிறேன், வேட்கை எல்லாம்-எல்லா ஆசைகளையும், விடுத்து - என்னை விடும்படி செய்து, உன திருவடியே - உன்னுடைய திருவடிகளையே, சுமந்து - (தலையால்) வஹித்து, உழல - திரியும்படி, கூட்டு அரிய - (ஒருவன் தன் பிரயத்தனத்தாலே) சேருதல் முடியாத, திருவடிக்கள்-திருவடிகளிலே, என்னை, கூட்டினை - சேர்த்தாய், நான கண்டேனே - இதை நான் பார்த்தேனே.

(கருத்து) எவ்வளவு தெளிவான ஜ்ஞானமுள்ள பிரம்மா முதலான தேவர்களும், தங்கள் பிரயத்நத்தினாலே உன்னை ஸேவிக்காதபடி செய்து அலையும்படி செய்கிறாய். ஆதிசேஷனைப் படுக்கையாக உடையவனே! ஆனால் உன்னை ஆச்ரயித்தவன் எவ்வளவு தாழ்ந்தவனாய் இருந்தாலும், அவனை உன் திருவடி

ளில் சேர்க்கிறாய், இந்த விஷயத்தை நான் அறிந்துகொண்டேன். எப்படியென்றால், மிகுந்த தாழ்ந்தவனான என்னையும் பிரகிருதியி லிருந்து உண்டான வஸ்துக்களைப்பற்றின ஆசைகளை எல்லாம் விடும்படி செய்து உனக்குக் கைங்கரியம் செய்துகொண்டு திரிய, உன் திருவடிகளின அநுபவத்தில் ஆசையுள்ள ஸ்வபாவமுடைய வனாய் செய்திருக்கிறாய். இது நிச்சயம். ஆகையால், இந்த உலகத் தார்களையும இப்படியே செய்தருளவேணடும்.

குறிப்பு:—(1) வேட்கை எல்லாம் விடுத்து என்பதற்கு, உன் திருவடிகளை அநுபவிக்கும்போது பிராகிருதவஸ்துக்கள் தோன்றுகிறதில்லை என்று கருதது.

(2) பிராகிருதவஸ்துக்களைச் சொன்னதினால், ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதாகிய கைவல்லியமும சொல்லப்படுகிறது. எமபெருமானுடைய அநுபவத்துக்கு இரண்டும் விரோதிகளே.

(3) இந்தப் பாட்டுக்கு வேறுவிதமாயும் ஸங்கதி சொல்ல லாம்:—எம்பெருமானைப் பிரிந்ததாலும், உலகததாருடன் நடுவில் இருப்பதாலும் உண்டான துக்கமெல்லாம் போகும்படி எம் பெருமான் வைகுந்தத்திலிருக்கும் இருப்பைக் காடட, அதைப் பாாதது ஆழ்வார் ஸந்தோஷப்படுகிறார் - என்று. (9)

(இ - ம்) கூட்டுதி, ஆட்டுதி - முன்னிலை வினைமுற்றுக்கள்.

---

அவ—கீழ்ப் பாட்டில் வேட்கையெல்லாம் விடுத்து என்று தமக்கு வைராக்கியம பிறந்ததற்குக் காரணத்தை இந்தப் பாட் டில் அருளிச்செய்கிறார்:—

கண்டுகேட் டுற்றுமோந் துண்டுழலு மைங்கருவி
கண்டவின்பந் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்ப
மொண்டொடியா டிருமகளு நீயுமே நிலாநிற்பக்
கண்டசதிர் கண்டொழிந்தே னடைந்தேனுன் றிருவடியே. (கo)

(ப - ரை) கண்டு - கண்ணால் ரூபத்தைப் பார்த்து, கேட்டு- காதால் சப்தத்தைக் கேட்டு, உற்று - த்வக்கால் சூடு குளிர்ச்சி முதலான ஸ்பரிசத்தை அறிந்து, மோந்து - மூக்காலே வாஸனை யை மோந்து, உண்டு - நாக்காலே ரஸத்தை அநுபவித்து, உழ

லும் - உழன்றுகொண்டிருக்கிற, ஐங்கருவி - ஐந்து இந்திரியங்களால், கண்ட - அநுபவிக்கப்பட்ட, இன்பம் - ஸுகத்தையும், தெரிவு அரிய - (இந்திரியங்களால்) அறியமுடியாத, அளவில்லா - அளவு இல்லாததான, (கீழ்ச்சொன்ன ஸுகத்தைக் காட்டிலும் அதிகமான), சிற்றின்பம் - (எம்பெருமானுடைய அநுபவத்தைக் காட்டிலும்) குறைந்ததான ஆத்மாவின அநுபவத்தினலுண்டாகும் ஸுகத்தையும், ஒழிந்தேன் - விட்டுவிட்டேன், (இஃது எதனலே என்றால்,) ஒண் - விளங்குகிற, தொடியாள் - கைவளைகளை உடைய, திருமகளும் - பிராட்டியும், நீயுமே, நிலா நின்று - நிலையாயிருந்து, நிற்ப - நிற்க, கண்ட சதிர் - நீ பார்த்த ஸாமர்த்தியத்தை, கண்டொழிந்தேன் - (உன்னுடைய அநுக்கிரஹத்தாலே) பார்த்துவிட்டேன். உன் திருவடியையே அடைந்தேன்.

(கருத்து) விஷயங்களை அநுபவித்து ஆசை தீராமல் அவைகளையே தேடிக்கொண்டு அலையும் ஐந்து இந்திரியங்களாலுண்டாகும் ஸுகத்தையும், அவைகளால் அறியமுடியாததும் அவைகள் கொடுக்கும் ஸுகத்தைக்காட்டிலும் பெரிதாயும், உன் அநுபவத்தைக்காட்டிலும் சிறியதாயுமிருக்கிற ஆத்மாநுபவ ஸுகத்தையும் விட்டுவிட்டேன். இஃது அந்த ஸுகங்களின தோஷங்களைப் பார்த்து வந்ததன்று. வைகுந்தத்தில் பிராட்டியும் நீயுமே இருக்கிற இருப்பையும் நீங்கள் இருவரும் சேஷியாய் மற்றவர்கள் உங்களுக்கு சேஷமாய் இருக்கும்படி உன் ஸங்கல்பத்தாலே செய்திருப்பதையும் பார்த்து, வைராக்கியத்தை அடைந்தேன. அவைகள் எல்லாவற்றையும்விட்டு உன் திருவடிகளையே அடைய வேண்டியவைகளாக நிச்சயித்து நான் பிடித்துக்கொண்டேன்.

குறிப்பு :—(1) நீயுமே என்கிற இடத்தில் ஏகாரத்தாலே விலக்கப்படுகிறவர்கள் ஸம்ஸாரிகள்; ஆகையால் மற்ற மஹிஷிகளும், ஆதிசேஷன் முதலான பரிஜநங்களும் இருக்கிறார்கள். அவர்களுடன்கூட எம்பெருமான் இருக்கும் அழகை ஆழ்வார் கண்டு வைராக்கியத்தை அடைந்தார்.

(2) எம்பெருமானுடைய பரிஜநங்கள் தம்மைப்போல் அவனுக்குச் சேஷமாயும், அவனுக்கு உட்பட்டவர்களாயும் இருக்க, அவர்கள் எப்போதும் தோஷமில்லாமலும் நல்ல குணங்களுக்கே

இருப்பிடமாயும் இருப்பதைப் பார்த்தபோது, எம்பெருமானுடைய அநுபவ ஸுகத்தைக்காட்டிலும் வேறு ஸுகங்களில் ஆழ்வாருக்கு வெறுப்பு உண்டாயிற்று.

(3) 'நீயுமே' எனகிற இடத்தில், நீங்கள் இருவருமே முக்கியமான பிராப்யர்களாய் இருக்கிறீர்கள் என்றும பொருள் கொள்ளலாம். (10)

---

திருவடியை நாரணனைக் கேசவனைப் பரஞ்சுடரைத்
திருவடிசேர் வதுகருதிச் செழுங்குருகூர்ச் சடகோபன்
திருவடிமே லுரைத்ததமி ழாயிரத்து ளிப்பத்துந்
திருவடியே யடைவிக்குந் திருவடிசேர்ந் தொன்றுமினே. (கக)

(ப - ரை) திருவடியை - பிராட்டியோடுகூடிய ஸ்வாமியாய், நாரணனை - நாராயணனாய், கேசவனை-கேசவனாய், பரம் சுடரை-பரஞ்ஜ்யோதிஸ்ஸாயிருக்கிறவனுடைய, திருவடி - திருவடிகளை, சேருவது - சேருகையை, கருதி - ஆசைப்பட்டு, செழுங்குருகூர்ச் சடகோபன், திருவடிமேல் அவன திருவடிகளைக் குறிதது, உரைத்த - சொன்ன, தமிழ் ஆயிரததுள் - ஆயிரம் தமிழ்ப் பாட்டுக்களுக்குள், இ பத்து - இந்தப் பத்துப் பாட்டும், திருவடியே அடைவிககும் - அவன் திருவடிகளையே சேரும்படி செய்யும். திருவடிகளை சேர்ந்து-அவன திருவடிகளைக் கிட்டி, ஒன்றுமின்- அவற்றுடன ஒன்றாய் இருங்கள்.

(கருத்து) ஸ்ரீய: பதியாய், ஸ்வாமியாய், வாத்ஸல்யம் ஸௌசீல்யம் முதலான நல்ல குணங்களுக்கு இருப்பிடமாய், ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் செய்கிறவனாய், அவைகளால் மிகவும் நன்றாய் விளங்குகிற கண்ணன் திருவடிகளைச் சேருவதை ஆசைப்பட்டு, அவன் ஸ்வரூபம், ரூபம, குணங்கள், விபூதிகள் விஷயமாக ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்கள், அவைகளை அடிக்கடி படிக்கிறவர்களை அவன் திருவடிகளைச் சேரும்படி செய்யும். ஆகையால் அவைகளைப் படித்து, அந்தத் திருவடிகளின் ரேகைகள்போல் அவைகளைவிட்டுப் பிரியாமல்

இருப்பதற்குப் பாருங்கள். அதாவது அவன் திருவடிகளை விட்டுப் பிரியாமல் சேர்ந்திருப்பதற்காக இந்தப் பாட்டுக்களை அடிக்கடி படியுங்கள்.

குறிப்பு:—பாட்டின் மூன்றும் அடியில் திருவடி என்பது எம்பெருமானுடைய ஸ்வரூபம், ரூபம், குணங்கள், விபூதிகள் ஆகிய இவைகளுக்கு உபலக்ஷணம். (11)

---

[illegible] ||௫௪||

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய திருவடிகளில் ஆசையுள்ளவர்களுக்கு பத்துக் காரணங்களால் அவன் மிகவும் போக்கியனுவான் என்று சொல்லப்படுகிறது. அவைகளாவன:—(1) கருணையினுல் கடலைக் கடைந்தது; (2) அதின் மேல படுத்திருப்பது; (3) அதுபோன்ற நிறமுள்ளவனுயிருப்பது; (4) தன்னை ஆச்ரிதர்களுக்குக் கொடுப்பதில் உதாரன் என்று பிரஸித்தமாயிருப்பது; (5) இன்பமான நீல ரத்னம் போன்ற காந்தியுள்ளவனுய் இருப்பது; (6) துளஸி மாலையை அணிந்திருப்பதாகிய வேஷத்தாலே மிகவும் போக்கியனுயிருப்பது; (7) ஆத்மாவாக அநுபவிக்கத் தகுந்தவனுய் இருப்பது; (8) ஒருவன் தன்னுடைய பிரயத்தினத்தாலே அடையமுடியாத திருவடிகளை உடையவனுயிருப்பது; (9) தன்னை உபேக்ஷித்தவர்களைக் கட்டுவதற்கும், தன்னை ஆசரயித்தவர்களை விடுவிப்பதற்கும் சக்தனுயிருப்பது; (10) தன்னைக்காட்டிலும் வேறானவைகளில ஆசையுண்டாவதைத் தடுப்பது. (54)

---

தாபை: ஸம்பந்தி து:கை: ஸ்வவிபவவிரஹேண [illegible]
[illegible]
[illegible] ॥ ௫௫ ॥

---

உலகத்தார்கள், பத்துக்காரணங்களால் மிகவும் இரக்கப் படத்தகுந்தவர்களாய் இருப்பதைப் பார்க்க முடியாதவராய், தம்மை எம்பெருமான் தன் திருவடிகளில் அழைத்துக்கொள்ள வேண்டுமென்று ஆழ்வார் அவனை வேண்டுகிறார். அவைகளாவன :—(1) தாபங்களை அநுபவிப்பது, (2) தங்களைச் சேர்ந்தவர்களுடைய துக்கத்தைக்கண்டு துக்கப்படுவது; (3) தங்களுடைய விபவங்களைவிட்டு வருத்தத்துடன் மரணத்தை அடைவது; (4) தாபத்தைச் செய்யும் செல்வத்தில் பிடிப்புள்ளவர்களாய் இருப்பது; (5) மரணத்துக்கு மேல் நரகத்தை அடைவது; (6) பிறரை ஹிம்ஸித்து தங்கள் வயிற்றை நிரப்பி எம்பெருமானுடைய ஆக்ஞையை மீறுவது; (7) எம்பெருமானுக்குச் சேஷமாயிருப்பதிலேயே இருக்கவேண்டிய ஆசையை விட்டுவிட்டு ஸம்ஸாரத்தில் படிந்திருப்பது, (8) அண்டமாகிய சிறையில் வைக்கப்பட்டிருப்பது; (9) எம்பெருமான் திருவடிகளை வணங்குவதை விட்டுவிடுவது; (10) மிகவும் அற்பமான ஸுகத்தையே பற்றியிருப்பது (55)

---

ஸ்வாநாம் [illegible]
[illegible]
[illegible] ॥ ௫௬ ॥

---

எம்பெருமான் தன்னை அடைந்தவர்களுக்கு ஒப்பில்லாத புருஷார்த்தமாயிருக்கிறான் என்று பத்துக் காரணங்களால் இந்த திருவாய்மொழியில் அருளிச்செய்கிறார். அவைகளாவன :— (1) தன்னை ஆச்ரயித்தவர்களின வேலையைச் செய்து முடிப்பது ; (2) ஆதிசேஷனமேல் மிருந்த அழகுடன் படுத்திருப்பது ; (3) ஸமுத்திரம்போல் சிரமத்தைப் போக்கும் ஸ்வபாவமுள்ளவனாயிருப்பது ; (4) மிகுந்த ஔதார்யமுள்ளவனாய் இருப்பது ; (5) இந்திர நீலம்போல் அழகாய பார்க்கத்தகுந்தவனாயிருப்பது ; (6) துளஸியாலே அழகான கிரீடத்தைத் தரித்து இருப்பது, (7) தாய்போல் பிரியங்களைச் செய்வது, (8) அண்டத்தை உண்டு பண்ணுவதில் ஸமர்த்தனாயிருப்பது ; (9) ஆச்ரிதர்களாலே ஸுலபமாய் அடையப்படும்படியாயிருப்பது ; (10) பிராட்டியுடன கூடியிருப்பது. (56)

# பத்தாம் திருவாய்மொழி.

அவ—ஆழ்வார், தம்மை எமபெருமான் கூப்பிட்டுக்கொள்ள வேண்டுமென்று அவனை வேண்டினுர். அவன் அதைச் செய்ய வில்லை. இனி உலகத்தாரிடம் சேர்ந்திருப்பதை விலக்க முடியாது என்று நினைதது, அவர்களை வைஷ்ணவர்களாகப் பண்ணிக் கொண்டு, அவர்களுடன் கூட இருப்போம் என்று அவர்களுக்கு அவன ஸர்வேசுவரனுய் இருப்பதையும், ஆச்ரிதர்களுக்கு ஸுலப னுய் இருப்பதையும் நன்ருக எடுததுக்காட்டி அவனை ஆச்ரயி யுங்கோள் என்று இந்தத் திருவாய்மொழியில் உபதேசிககிருர். எம்பெருமான் ஸர்வேசுவரனுய் இருப்பதை ‘உயர்வற’ என்கிற முதற்பத்து முதல திருவாய்மொழியிலும், ‘திண்ணன் வீடு’ என்கிற இரண்டாம்பதது இரண்டாம் திருவாய்மொழியிலும் சொலலப்படடது இவைகளில் முதல் திருவாய்மொழியில் பர ரூபததிலும், இரண்டாம் திருவாய்மொழியில அவதார ரூபத்தி லும் அந்தப் பரத்வம் சொல்லபபட்டது. இங்கே அஃது அர்ச்சா ரூபத்தில் சொல்லப்படுகிறது. மேலும் உயாவறவில் தாம் அவனை ஸர்வேசுவரனுக அநுபவித்தார். இங்கே அதைப் பிறருக்கு உப தேசிக்கிருர். இதற்கு வேறுவிதமாயும் ஸங்கதி சொல்லலாம்— எமபெருமானைத தாம் பார்த்தபோது ஆழ்வாருக்குப் பிரீதி உண்டாயிற்று. இவனை அநுபவிக்காமல் உலகததார் இருக்கிருர் களே என்று அவர்களிடத்தில் கருணையினுல் அதை உபதேசிக் கிருர்—என்று.

( அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

ஒன்றுந் தேவு முலகு முயிரு மற்றும் யாதுமில்லா
வன்று நான்முகன் றன்ஞெடு தேவ ருலகோ டுயிர்படைத்தான்
குன்றம் போன்மணி மாட நீடு திருக்குரு கூரதனு
ணின்ற வாதிப் பிரானிற்க மற்றைத் தெய்வ நாடுதிரே. (க)

(ப - ரை) தேவும் - தேவஜாதியும், உலகும் - உலகங்களும், உயிரும் - பிராணிகளும், மற்றும் யாதும் - இன்னும் உண்டான எல்லா வஸ்துக்களும் ஆகிய, ஒன்றுமில்லா-இவைகளில் ஒன்றும் இல்லாத, அன்று-ஸிருஷ்டிக்கு முந்தின காலத்தில், நான்முகன்-

தன்னோடு - பிரமமாவோடு, தேவர் - தேவர்களையும், உலகோடு - உலகங்களோடு, உயிர் - பிராணிகளையும், படைத்தான் - உண்டு பண்ணினவனாய், குன்றம்போல-மலைகள்போல், மணிமாடம் நீடு-ரத்நமயமான வீடுகள் உயர்ந்திருக்கிற, திருக்குருகூர் அதனுள் - திருக்குருகூர் என்கிற பட்டணத்தில், நின்ற - எல்லாருக்கும் ஸுலபனாய், ஆதிப்பிரான-உலகத்துக்குக் காரணமாய் உபகாரம் செய்கிறவனாய் இருக்கிற எம்பெருமான், நிற்க - கிட்ட இருக்கையில், மற்று-வேறு, எ தெய்வம்-எந்த தேவதையை, நாடுதிர் - தேடுகிறீர்கள்.

(கருத்து) ஸிருஷ்டிக்கு முன் ஒன்றுமில்லாத காலத்தில் உலகங்களையும் பிரமமா முதலான தேவர்களையும் மற்ற பிராணிகளையும் உண்டுபண்ணின ஆதிப்பிரான் எல்லாருக்கும் ஸுலபனாய் திருக்குருகூரில் கிட்ட நிற்கிறான். அவனை விட்டுவிட்டு, எந்தத் தெய்வத்தைத் தேடுகிறீர்கள்?

(இ - ம) நாடுதிர் - முன்னிலைப் பன்மை வினைமுற்று. (1)

---

அவ—கீழ்ப் பாட்டில் ஆதிப்பிரான் எல்லாவற்றுக்கும் காரணம் என்று சொல்லப்பட்டது. இந்தப் பாட்டில், அதை அநுவாதம் செய்து, திருநகரியை ஆசரயிங்கள் என்று உபதேசம் செய்கிறார்.—

நாடிநீர் வணங்குந் தெய்வமு மும்மையு முன்ப டைத்தான்
வீடில் சீர்ப்புக ழாதிப் பிரானவன் மேவி யுறைகோயின்
மாட மாளிகை சூழ்ந்தழ காய திருக்குரு கூரதனைப்
பாடி யாடிப் பரவிச்சென் மின்கள் பல்லுல கீர்பரந்தே. (உ)

(ப - ரை) பல்லுலகீர் - பலவகைப்பட்ட உலகத்தார்களே! நாடி நீர் வணங்கும் - நீங்கள் தேடி வணங்குகிற, தெய்வமும் - தெய்வங்களையும், உம்மையும் - உங்களையும், முன - முன் காலத்தில், படைத்தான் உண்டுபண்ணினவனாய், வீடு இல் - விடுதல் நடுவில் இல்லாத (எப்போதுமிருக்கிற), சீர் - நல்ல குணங்களையும், புகழ் - கீர்த்தியையும் உடையவனாய், அவன் - பிரஸித்தனாய் இருக்கிற ஆதிப்பிரான, மேவி - ஆசைப்பட்டு, உறை கோயில் - வஸிக்கிற கோயிலான, மாட மாளிகை - மாடங்களாலும் (மாடி

வீடுகளாலும்) வீடுகளாலும், சூழ்ந்து - சூழப்பட்டு, அழகாய் - அழகாய் இருக்கிற, திருக்குருகூரதனை - திருக்குருகூரை, பாடி, ஆடி - கூத்தாடி, பரவி - ஸ்தோத்திரம் பண்ணி, பரந்து செல்மின்கள் - அதில் எங்கும் ஸஞ்சரியுங்கள்.

(கருத்து) வெவ்வேறு ஆசைகளோடு வெவ்வேறு தேவதைகளை ஆச்ரயிக்கிற உலகத்தார்களே! நீங்கள் தேடி வணங்குகிற தேவதைகளையும், உங்களையும் ஆதிபிரானே முன் காலத்தில் உண்டுபண்ணினன். அவனுடைய நல்ல குணங்களும் கீர்த்தியும் எப்போதும் இருக்கின்றன. ஆகையால் அவன் ஆசைப்பட்டு வஸிக்கிற கோயிலாகிய அழகான திருநகரியைப் பாடி, கூத்தாடி, ஸ்தோத்திரம் செய்து அதில் ஸந்தோஷத்தால் அங்குமிங்கும் திரிந்து ஆச்ரயியுங்கள்.

குறிப்பு —உலகத்தில் தாயாருக்கு நல்ல படுக்கை இருக்கையில் தன் குழந்தையிடம் ஆசையால் அதின் தொட்டிலின் கீழே படுக்கிறாள். அதுபோல ஆதிப்பிரானுக்கு மிகவும் உயர்ந்த வைகுந்தம் இருக்கையில் ஆச்ரிதர்களிடத்தில் ஆசையினால், அவர்களை ரக்ஷிப்பதற்காக அவர்கள் இருக்கும் இடத்தில் வந்து நிற்கிறான் என்று "மேவி" என்பதின் கருத்து. (2)

---

அவ—வேறு தெய்வத்தைப் பரதேவதை என்று எண்ணுகிறவர்களை அதற்குப் பிரமாணத்தைச் சொல்லுங்கள் என்று இந்தப் பாட்டில் கூப்பிடுகிறார் :—

பரந்த தெய்வமும் பல்லுலகும் படைத்தன் றுடனே விழுங்கிக்
கரந்து மிழ்ந்து கடந்தி டந்தது கண்டுந் தெளியகில்லீர்
சிரங்க ளால மரர்வ ணங்குந் திருக்குரு கூரதனுள்
பரன்றிற மன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை பேசுமினே. (௩)

(ப - ரை) பல் உலகீர்! பரந்த - ஜ்ஞானமும் சக்தியும் அதிகமாய் இருக்கிற, தெய்வமும் - தேவர்களையும், பல் உலகும்-எல்லா உலகங்களையும், படைத்து - ஸிருஷ்டிகாலத்தில் உண்டுபண்ணி, அன்று - பிரளயகாலத்தில், உடனே விழுங்கி - ஒரே காலத்தில் வயிற்றில் சேர்த்து, கரந்து - ஸிருஷ்டி காலம் வரை வயிற்றில்

அதை மறைத்து வைத்திருந்து, உமிழ்ந்து - ஸிருஷ்டி காலத்தில மறுபடியும் வெளிப்படுத்தி, கடந்து - த்ரிவிக்கிரமனாய அவதாரம் செய்து அதை அளந்து, இடந்தது - வராஹமாய் அவதாரம செய்து அதைப் பிரளய ஜலத்திலிருந்து எடுத்தது முதலான வியாபாரங்களை, கண்டும் - சாஸ்திரங்களாலே நீங்கள் அறிந்த போதிலும், தெளியகில்லீர் - (நாராயணனே எல்லாருக்கும மேற்பட்ட தெய்வமென்று) நீங்கள் அறியசக்தியில்லாதவர்கள், அமரர் - (பிரம்மா முதலான) தேவர்கள், சிரங்களால்-தலைகளால் வணங்கும, திருக்குருகூரதனுள் - திருக்குருகூரிலிருக்கிற, பரன் திறமின்றி - பரதேவதையாகிய ஆதிப்பிரானுடைய ரூபங்களேயன்றி, மற்று - வேறான, (ஸ்வதந்திரமாய் இருக்கிற), தெய்வமில்லை, பேசுமினே - (அப்படி இருந்தால் அதற்குப் பிரமாணங்களைச) சொல்லுங்கள்.

(கருத்து) பலவிதமாய் உலகத்திலிருக்கிறவர்களே! நாராயணனே உலகத்தை உண்டுபண்ணி, பிரளயகாலத்தில் தன வயிற்றில் சேர்த்து, ஸிருஷ்டிகாலம் வரையில் அதை மறைத்துவைத்து ஸிருஷ்டி காலத்தில் அதை வெளிப்படுத்தித் திரிவிக்கிரமனாய அவதாரம்செய்து அதை அளந்து, வராஹமாக அவதாரமபண்ணி அதைப் பிரளய ஜலத்திலிருந்து எடுத்தான என்று சாஸ்திரங்களாலே ஏற்படுகிறது. இதை நீங்கள் அறிந்தும் நாராயணனே மிகவும் உயர்ந்த தெய்வமென்று உங்களுக்குத் தெளிவு வரவில்லை. அவனைத் தவிர மற்ற தெய்வங்களெல்லாம் அவனுடைய ரூபங்கள். இப்படி இல்லாமல் தானாகவே, ஒரு வேலையைச் செய்ய சக்தியுள்ள தெய்வம் கிடையாது. அப்படி இருக்கிறதாக நீங்கள் எண்ணினால அதற்குப் பிரமாணத்தைச் சொல்லுங்கள்.

(இ - ம்) தெளியகில்லீர்-முன்னிலைப்பன்மை வினைமுற்று. (3)

---

அவ—கீழ்ப் பாட்டுக்களில் நாராயணனே எல்லாருக்கும் மேலான தெய்வம் என்று சொன்னார். இதில் பிரம்மாவையும் ருத்திரனையும் பரதேவதை என்று சொல்லுகிற அநுமானங்களைத் தூஷிக்கிறார் :—

பேச நின்ற சிவனுக்கும் பிரமன் றனக்கும் பிறர்க்கும்
நாயக னவனே கபால நன்மோக் கத்துக் கண்டுகொண்மின்
றேச மாமதிள் சூழ்ந்தழ காய திருக்குரு கூரதனு
ளீசன் பாலோ ரவம்பறைத லென்னு வதிலிங் கியார்க்கே. (௪)

(ப - ரை) பேச நின்ற - (நன்றாய்த் தெரியாத நீங்கள்) ஈசுவரன் என்று சொல்லும்படி நிற்கிற, சிவனுக்கும், பிரமன் தனக்கும் - பிரமமாவுக்கும், பிறர்க்கும் - மற்ற தேவர்களுக்கும், அவனே - உபநிஷத்துக்களால் சொல்லப்பட்ட நாராயணனே, நாயகன - தலைவன, கபால நல் மோக்கத்து - கபாலத்திலிருந்து தலை விடுதலையில், கண்டுகொண்மின்கள் - பார்த்துக்கொள்ளுங்கள், தேசம மா மதிள் சூழ்ந்து - பிரகாசமான பெரிய மதிள்களாலே சூழப்பட்டு, அழகாய - அழகான, திருக்குருகூரதனுள் - திருக்குருகூரிலிருக்கிற, ஈசன்பால் - ஸர்வேசுவரன இடத்தில், ஓர் அவம - குற்றமான வார்த்தையை, பறைதல்-சொல்லுதல், இலிங்கியர்க்கு - லிங்கம (ஹேது) அதைக்கொண்டு அநுமாநம் சொல்லுகிறவர்களுக்கு, என ஆவது - என்ன பிரயோஜநத்தைக் கொடுக்கும ?

(கருத்து) ஒரு ஹேதுவைக்கொண்டு அநுமாநத்தால் சிவனும், பிரமமாவும் பரதேவதை என்று அறிவில்லாமல் சொல்லுகிறீர்கள். அவர்களுக்கும மற்ற இந்திரன் முதலான தேவர்களுக்கும் நாராயணனே நாயகன என்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன பிரமமாவின தலையைக் கிள்ளி அவன மண்டையோடு கையில் ஒட்டிக்கொண்டு அங்குமிங்கும் திரிந்த சிவனை நாராயணனே அதிலிருந்து விடுவித்தான் என்கிற கதையில் இந்த விஷயத்தை நீங்கள் பார்க்கலாம். இப்படியிருக்க, திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கும் ஸர்வேசுவரன் விஷயத்தில், அவன ஸர்வேசுவரன் அன்று என்கிற இந்த சொல்லத்தகாத சொல்லாலே உங்களுக்கு என்ன பிரயோஜநம கிடைக்கும ?

குறிப்பு.—உலகத்தார் சொல்லும் அநுமாநங்களாவன :— பிரம்மா ஸர்வேசுவரன், உலகத்தை உண்டுபண்ணினதாலே, எவன் ஸர்வேசுவரன் அன்றோ அவனால் அதை உண்டுபண்ண முடியாது என்று பிரம்மா விஷயமாயும், சிவன் ஸர்வேசுவரன் உலகத்தை அழிப்பதினால், எவன் ஸர்வேசுவரன் அன்றோ, அவ

ஞல் அதை அழிக்க முடியாதென்று சிவன் விஷயமாயும் அநுமா நங்கள். இவைகள் உபநிஷத்துக்களில் நாராயணனே உலகத்தை உண்டுபண்ணுகிருன, அதை அழிக்கிருன என்று சொல்லப்படு வதற்கு விருத்தமாகையால அந்த அநுமாநங்கள் பிரமாணங்களாக மாட்டா. ஆகையால இந்த அநுமாநங்களைச் சொல்லிக்கொண்டே இருப்பதால் என்ன பிரயோஜநம ?

(இ - ம) அவனே-ஏகாரத்திற்குப் பிரிநிலைப் பொருள், வேறு ஒருவன் அன்று என்று கருத்து. ஈசன்பால் - ஏழாம் வேற் றுமை உருபு. (4)

---

அவ—அநுமாநங்கள் உபநிஷத்துக்களுக்கு விரோதமாகை யால் தள்ளப்படவேண்டியவைகள் என்று சொல்லப்பட்டது. ஆனாலும் லிங்கபுராணம் சிவனைப் பரதேவதையாகச் சொல்ல வில்லையா என்றால், இந்தப் பாட்டில் பதில சொல்லுகிருர் —

இலிங்கத் திட்ட புராணத் தீருஞ் சமணருஞ் சாக்கியரு
மலிந்து வாதுசெய வீர்களு மற்றுநுந் தெய்வமு மாகிநின்ருன்
மலிநது செந்நெற் கவரி வீசுந் திருக்குரு கூரதனுட்
பொலிந்து நின்ற பிரான்கண்டீ ரொன்றும் பொய்யில்லை போற்று
மினே. (ரு)

(ப - ரை) செம் நெல் - சிவந்த நெல், மலிநது - அதிகமாகி கவரி வீசும - சாமரங்களை வீசுகிற, திருககுருகூரதனுள், பொ லிந்து நின்ற பிரான், இலிங்கதது இட்ட - லிங்கத்தின பெருமை யைச் சொல்லுகிற, புராணத்தீரும - புராணத்தைப் பிரமாணமாக எண்ணுகிற நீங்களும, சமணரும - ஜைநர்களும், சாக்கியரும் - பௌத்தர்களும், மலிந்து-நிலைக்கு நிற்காத தர்க்கங்களை அதிக மாகச் சொல்லிக்கொண்டு, மற்றும வாது செய்வீர்களும-வாதஞ் செய்கிற மற்றவர்களுமான நீங்களும், நும் தெய்வமும் - உங்க ளுடைய தெய்வங்களும், ஆகி நின்ருன கண்டீர் - உங்களுக்கும் உங்கள் தெய்வங்களுககும் ஆத்மாவாக இருக்கிருன், ஒன்றும் பொய் இல்லை போற்றுமின் - (ஆகையாலே) அவனையே ஸ்தோத் திரம் பண்ணி ஆச்ரயிங்கள்

(கருத்து) லிங்கபுராணத்தைப் பிரமாணமாகக் கொண்டவர் களே! ஜைநர்களே! பௌத்தர்களே! வீண் தர்க்கங்களைக்

கொண்டு வாதம் செய்கிறவர்களே! திருக்குருகூரில் எழுந்தருளி இருக்கிற பொலிந்து நின்ற பிரான், எப்படி உங்களுக்கு ஆத்மா வாக இருக்கிறானோ, அப்படியே உங்களுடைய தெய்வங்களுக்கும் அவனே ஆத்மா. இந்த அர்த்தம் பிரமாணங்களாலே ஏற்பட்டது. ஆகையால் அந்த தெய்வங்களைவிட்டு இவனையே ஆச்ர யிங்கள்.

குறிப்பு —(1) நெற்பயிரில் நெல் உண்டாகி பாரத்தினால் அது வணங்கியும் நிமிர்ந்தும் இருப்பதை ஆதிப்பிரானுக்கு சாமரம வீசுவதாக உத்ப்ரேக்ஷிக்கிறார்.

(2) பொலிந்து நின்ற பிரான் என்பது அந்த ஊரில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானின் திருநாமம். அதின் பொருள்-பூர்ணனாயிருந்து உபகாரம் செய்கிறவன்—என்று.

(3) 'மற்றும வாது செய்வீர்களும' என்பதால் வைசேஷிகர் களும, ஸாங்கியனும, யோகஸூத்திரத்தை நம்புகிறவர்களும் சொல்லப்படுகிறார்கள்.

(4) 'பொலிந்து நின்ற பிரான் ஆகி நின்றான்' என்பதற்கு, அவன் ஆத்மாவாகவும், மற்றவர்கள் அவனுக்கு உடம்புகளாகவும் இருக்கிறார்கள் என்று கருத்து. ஆத்மாவையும் உடம்பையும் ஒன்றாகச சொல்லுவது உலக வழக்கம். (5)

---

அவ—ஆதிப்பிரான் பரதேவதையாக இருந்தால், ஏன் ஜனங்கள் மற்ற தெய்வங்களை ஆச்ரயிக்கும்படி அவன் செய்திருக்கிறான் என்றால், இந்தப் பாட்டில் பதில் சொல்லுகிறார் :—

போற்றி மற்றோர் தெய்வம் பேணப் புறத்திட் டும்மையின்னே
தேற்றி வைத்த தெல்லீரும் வீடுபெற் றாலுல கில்லையென்றே
சேற்றிற் செந்நெல் கமல மோங்கு திருக்குரு கூரதனு
ளாற்றவல் லவன்மா யங்கண் டீரத றிந்தறிந் தோடுமினே. (சு)

(ப - ரை) மற்று ஓர் தெய்வம் - வேறு ஒரு தெய்வத்தை, போற்றி - ஸ்தோத்திரம் பண்ணி, பேண - பக்தி பண்ணும்படி யாகவும், புறத்து இட்டு - தன்னிடததில் முகம் காட்டாதபடி

யாகவும், உம்மை - கெட்ட கர்மங்களைச் செய்துகொண்டிருக்கிற, உங்களை, இனனே - இப்படியே, தேற்றி வைத்தது - தேறும்படி (நம்பும்படி) வைத்தது, எல்லீரும - (கெட்ட காமங்களைச் செய்கிற) நீங்கள் எல்லாரும், வீடு பெற்றால - மோக்ஷத்தை அடைந்தால், உலகு இல்லை என்றே - உலகமரியாதை கெடும் என்று நினைத்தே, அது - இப்படி உலகஙகளைப் பண்ணினது, சேற்றில், செம் நெல் - செந நெல்லும், கமலம் - தாமரைகளும, ஓங்கு - உயர்ந்து வளரும்படியான, திருக்குருகூர் அதனுள் - திருக்குருகூரிலிருக்கிற, ஆற்ற வல்லவன மாயம் கண்டீர் - மிகுந்த சக்தியுள்ள அவனுடைய ஆச்சரியமான வேலை, அறிந்து - இப்படி அவன செய்வதை அறிந்து, அறிநது - பிரபத்தியாகிற அறிவை அடைந்து, ஓடுமின் - (ஸம்ஸாரத்தை விட்டு) ஓடுங்கள்

(கருதது) திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கிற, ஆதிப்பிரானுக்கு முகம கொடாமல் வேறு தெய்வத்தை ஸ்தோததிரம் பண்ணி, அதினிடததில் பக்தி பணணும்படி ஒரு நமபிக்கையை உங்களுக்கு உண்டுபண்ணினதற்குக் காரணம, பாபங்களைச் செய்கிற உங்களுக்கு மோக்ஷம் கொடுத்தால், புண்ணியததால் ஸ்வர்கமும், பாபததாலே துக்கமும உண்டாகவேணடியது என்கிற ஏற்பாடானது கெடடுபபோகும என்பதுதான. இதுவும் அவனுடைய ஆச்சரியமான வேலைதான். இந்த விஷயததை அறிந்து ஸம்ஸாரம போவதற்காக அவனிடத்தில சீக்கிரம பிரபததி பண்ணுங்கள்.

குறிப்பு :—(1) உங்களை வேறு தெய்வமிடம் போகும்படி செய்தது எம்பெருமான்தான். ஆனால் அவனாக அதைச் செய்யவில்லை. உங்களுடைய பாபகர்மஙகளைப் பார்தது, அவைகளின பலமாக இதைச் செய்கிறான். இஃது அவன் குற்றமன்று. உங்களுடைய குற்றமே.

(2) எவன் ஒருவனைக் கட்டிவைக்கிறானோ அவனே அவனை விடுவிக்கவேண்டியது. ஆகையால் உங்களை வேறு தெய்வததினிடம் போகும்படி செய்தவனே, அதைவிட்டுத் தன்னிடம் வரும்படி செய்யவேண்டியது. இதற்கு உபாயம் பிரபத்தி செய்வது.

(3) பாட்டில் இரண்டாவது 'அறிந்து' என்பதற்குப் பிர பத்தி செய்து என்று பொருள். பிரபத்தியும் ஒருவித அறிவு.

---

அவ—வேறு தெய்வத்தை ஆச்ரயித்தால் மோக்ஷம் கிடைக் காதோ என்றால், அதற்கு இந்தப்பாட்டில் பதில் சொல்லுகிறார்:—

ஓடி யோடிப் பலபிறப்பும் பிறந்து மற்றோர் தெய்வம்
பாடி யாடிப் பணிந்துபல் படிகால் வழியே றிக்கண்டீர்
கூடி வானவ ரேத்த நின்ற திருக்குரு கூரதனு
ளாடு புட்கொடி யாதி மூர்த்திக் கடிமை புகுவதுவே. (எ)

(ப - ரை) ஓடி ஓடி - நின்றவிடம் நிற்காமல் ஓடி, பல பிறப் பும் பிறந்து, மற்று ஓர், தெய்வம் - தெய்வத்தை, பாடி, ஆடி- கூத்தாடி, பணிந்து வணங்கி, பலபடிகால் பலவிதங்களாக, வழி - அந்த தெய்வத்தை ஆராதனம் செய்கிற வழியைச் சொல்லுகிற புஸ்தகங்களை, ஏறி - அடிக்கடி படித்து, கண்டீர் - (ஸாரமான பலத்தை அடையாததை) நீங்களே பார்த்திருக்கிறீர்கள். (ஆகை யால் அதை விட்டுவிடுங்கள்), வானவர் - உங்களுக்குத் தெய்வங்க ளான இந்திரன் முதலான தேவர்கள், கூடி-கூட்டமாய்ச் சேர்ந்து ஏத்த - ஸ்தோத்திரம் பண்ணும்படி, திருக்குருகூர் அதனுள் நின்ற, ஆடு புள் கொடி-கூத்தாடுகிற கருடனை தவஜமாக உடைய, ஆதிமூர்த்திக்கு - ஆதிப்பிரானுக்கு, அடிமை புகுவது - அடிமை யைச் செய்யவேண்டியது.

(கருத்து) இதுவரையில் நின்ற இடத்தில் நிற்காமல் ஸுவ ர்க்கத்துக்கும் நரகத்துக்கும் போய்ப் போய் திரும்பித்திரும்பி வந்து பல பிறப்பும் பிறந்து எம்பெருமானைக்காட்டிலும் வேறு யும் பெயர் சொல்லத்தகாததாயும் இருக்கிற தெய்வத்துக்கு ஆரா தனம் பண்ணும் வழியைச் சொல்லும் புஸ்தகங்களைப் படித்து அந்த தெய்வத்தைப் பாடிக் கூத்தாடி வணங்கி என்ன பலனை அடைந்திருக்கிறீர்கள்? மோக்ஷம் கிடைக்கவில்லையே? நீங்கள் அடைந்த பலன்கள் ஸாரமில்லாதவைகள் என்று உங்களுக்கே தோன்றவில்லையா? நீங்கள் வணங்குகிற இந்திரன் முதலான தேவர்கள் கூட்டம் கூட்டமாய் வந்து திருக்குருகூரில் எழுந்

தருளியிருக்கிற ஆதிப்பிரானை ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களே. அதைப் பார்த்தாகிலும், நீங்களும அவனுக்கு அடிமை செய்வதை ஆரம்பியுங்கள்.

குறிப்பு :—“ ஆடு புட் கொடி ” என்கிற இடத்தில் காற்றில் கொடி ஆடுவதைப் பார்த்து, அதிலிருக்கும் கருடன எம்பெருமானை அனுபவிதது அதினால் பிறந்த பிரீதியினால் கூததாடுகிறான என்று உத்ப்ரேக்ஷிக்கிறார்.

(இ - ம்) புகுவது - புகுதல் : இதற்கு ஏவல் பொருள். புகுங்கள் என்று. (7)

---

அவ—சிவனை வணங்கி, ஸாரமில்லாத பலன்களைப் பெற்றீர்கள் என்று சொனனீரே, அவன் மார்க்கண்டேயனை ரக்ஷிக்கவில்லையா ? என்றால், இதற்குப் பதில் சொல்லுகிறார் —

புக்கடி மையினு றன்னைக் கண்டமாாக் கண்டேய னவனை
நக்க பிரானு மன்றுய்யக் கோண்டது நாரா யணனருளே
கோக்க லாதடந் தாழை வேலித் திருக்குரு கூரதனுண்
மிக்க வாதிப் பிரானிற்க மற்றைத் தேயவம் விளம்புதிரே. (அ)

(ப - தை) நக்க பிரான் - இடுப்பில் வஸ்திரமில்லாதவனாய் தன்னைச் சேர்ந்திருககிறவர்களுக்கு உபகாரம செய்கிற சிவன, அடிமையினால், புக்கு - அவனுடன் சேர்ந்து, தன்னை கணட - தனனைப் பார்தத, மார்க்கண்டேயன் அவனை-இந்தப் பெயருள்ள ருஷியை, அன்று - அவருக்கு மரணம் வரவேணடிய காலத்தில், உய்யக் கொணடது - அது வராமல் பிழைக்கும்படி செய்ததும, நாராயணன அருளே - நாராயணனுடைய கிருபையாலதான், கொக்கு அலர் - கொக்கைப்போல் வெளுப்பான புஷ்பங்களை உடைய, தடம் - விசாலமான, தாழை வேலி - தாழை வேலிகளை உடைய, திருக்குருகூர் அதனுள், மிக்க - எல்லாருக்கும் மேற்பட்டவனாய் இருந்த ஆதிப்பிரான், நிற்க - இருக்கையில், மற்று எ தெய்வம் - வேறு எந்தத் தெய்வங்களை, விளம்புதிர் - சொல்லுகிறீர்கள். (கொண்டாடுகிறீர்கள்.)

(கருத்து) சிவன், தனக்கு அடிமை செய்து, தன்னைப் பார்த்த மார்க்கண்டேயனுக்கு மரணம் வரவேண்டிய காலத்தில்

அதைத் தடுத்து அவனை ரக்ஷித்தது, திருக்குருகூரில் எழுந்தருளி இருக்கிற நாராயணனுடைய கிருபையினால்தான். சிவன் அதைத் தானாகச் செய்யவில்லை. அவன் மார்க்கணடேயனை நாராயண னிடம் கொண்டுபோய் சிபாரசு மாத்திரம் செய்தான. ஆகை யால் அந்த ஆதிப்பிரான இருக்கையில், வேறு தெய்வங்களை எதற்காகக் கொண்டாடுகிறீர்கள். (8)

---

அவ—வேதத்துக்கு விரோதிகளான மதங்கள் எம்பெரு மானை உள்ளபடி அறியமுடியாமல் என்ன கெட்ட யுக்திகள் சொன்னபோதிலும் அவனுடைய ஸ்வரூபம் முதலியவைகளை மறைக்க முடியாது என்று அருளிச் செய்கிறார்:—

விளம்பு மாறு சமயமு மவைபா கியுமற் றுந்தன்பா
லளந்து காண்டற கரிய ஞகிய வாதிப் பிரா னமரும்
வளங்கோ டண்பணை சூழ்ந்தழ காய திருக்குரு கூரதனை
யுளங்கொண் ஞானத்து வைம்மினும்மை யுயயக் கொண்டு
[போகுறிலே. (கூ)

(ப - ரை) விளம்பும் - சொல்லுகிற, (சொல்லே ஸாரமாய் அர்த்தம இல்லாமலிருக்கிற), ஆறு சமயம் - ஆறு மதங்களாலும், மற்றும அவையாகியும் - அவைகளைப் போல் இருக்கிற வேறு மதஙகளாலும, தன் பால்-தன விஷயததில், அளந்து காண்டற்கு- இவ்வளவு என்று அளந்து பாரப்பதற்கு, அரியனுகிய - முடியாத வனன, ஆதிப்பிரான், அமரும் - நிலையாய் எழுநதருளியிருக்கும், வளம் கொள் - வளததைக கொண்ட, பணை சூழ்ந்து - வயல் களாலே சூழப்படட, அழகாய - அழகிய, திருககுருகூர் அதனை, உமமை - உங்களை, உய்யக்கொண்டு போகு - உஜ்ஜீவித் துக்கொண்டு (காலம்) போவதை, உறில் - அடைய வேணடினால், உளம கொள் ஞானதது - மனதால் கொள்ளப்பட்ட அறிவிலே, வைமமின் - வையுங்கள்.

(கருத்து) வேதத்துக்கு விரோதிகளான ஆறு மதங்களாலும், வேததததை ஒப்புக்கொண்டும் அந்த மதங்களைப்போல் உண்மை யை அறியமுடியாத மதங்களாலும் திருக்குருகூரில் எழுந்தருளி இருக்கிற, ஆதிப்பிரானுடைய பெருமை இவ்வளவென்று பார்க்க

முடியாது. உங்களுக்கு உஜ்ஜீவிக்கவேண்டுமானல், அவன் நிலையாய் எழுந்தருளியிருக்கிற அந்த ஊரை மனதால த்யானம் செய்யுங்கள்.

குறிப்பு :—(1) ஆறு சமயமாவன .—ஸாங்கியம், யோகம், வைசேஷிகமதம், பௌத்தமதம், ஜைனமதம், பசுபதிமதம்.

(2) அவைகளைப்போல் இருக்கிறவைகளாவன :—உலகம் இல்லை, அதை இருப்பதாக எண்ணுவது அவித்தையினுல் என்கிற மதமும், ஈசுவரன் இல்லை என்று சொல்லுகிற மீமாம்ஸக மதமும.

(இ - ம) போகு - தொழிற்பெயர். (9)

---

உறுவ தாவதேத் தேவுமெவ் வுலகங் களுமற் றுந்தன்பான்
மறுவின் மூர்த்தியோ டொத்தித் தனையுநின்றவண்ணம் நிற்கவே
செறுவிற் செந்நெற் கரும்போ டோங்கு திருக்குரு கூரதனுட்
குறிய மாணுரு வாகியநீள் குடக்கூத் தனுக்காட் செயவதே (௧0)

(ப - ரை) மறு இல் மூர்த்தியோடு-தோஷமில்லாத தனக்கே உள்ள திருமேனியுடன, ஒத்து - அதுபோல் தனக்கு உட்பட்டு, எ தேவும - எல்லாத் தெய்வங்களும, எ உலகங்களும - எல்லா உலகங்களும, மற்றும் - வேறு இருக்கிற எல்லா வஸ்துக்களும், இத்தனை - இவை எல்லாம், தன்பால் - தன்னிடத்தில், நின்ற வண்ணம் நிற்கவே - தனக்கு விதேயமாய இருக்கிறபடியே இருக்கும்படி, செறுவில - நன்கு விளையத்தகுந்த நிலங்களிலே, செந்நெல், கரும்பொடு, ஓங்கு - உயர்ந்து வளருகிற, திருக்குருகூர் அதனுள், குறிய மாணுருவாகிய - வாமந பிரமமசாரி ரூபத்தை எடுத்துக்கொண்ட, நீள் குடக்கூத்தனுக்கு - நீண்ட குடக்கூத்தனுக்கு, ஆட் செய்வதே - அடிமை செய்வதே, உறுவது - தகுந்தது, ஆவது - லகுவாயச் செய்யக்கூடியது.

(கருத்து) தோஷமில்லாமல் தனக்கே உள்ள திருமேனி எப்படித் தனக்கு உட்பட்டிருக்கிறதோ, அப்படியே, எல்லா தெய்வங்களும் எல்லா உலகங்களும், மற்ற எல்லாம் தனக்கு உட்பட்டே எப்போதும் இருக்கும்படி தன் ஸ்வபாவத்தைக்

கொஞ்சமும் விடாமல் திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கும் ஆதிப்பிரானுக்கு அடிமை செய்வதே தகுந்தது. அதையே ஸாதகமாகச் செய்யலாம்.

குறிப்பு:—நீள் குடக்கூத்தனுக்கு-கண்ணனாயிருந்து குடத்தை வைத்துக்கொண்டு கூத்தாடினது அப்போது இருந்தவர்களுக்கு மாத்திரம் ஸந்தோஷத்தை உண்டுபண்ணினதன்று; இதைக் கேட்கும் எல்லாருக்கும் ஸந்தோஷத்தைக் கொடுக்கும் என்று கருத்து (10)

---

ஆட்செய் தாழிப் பிரானைச் சேர்ந்தவன் வண்குரு கூர்நகரா
னாட்க மழ்மகிழ் மாலை மார்பினன் மாறன் சடகோபன்
வேட்கையால் சொன்ன பாடலா யிரத்து ளிப்பத் தும்வல்லார்
மீட்சி யின்றி வைகுந்த மாநகா மற்றது கையதுவே (௧௧)

(ப - ரை) ஆட்செய்து - கைங்கரியத்தைச் செய்து, ஆழிப் பிரானைச் சேர்ந்தவன - சக்கிராயுதத்தை உடைய உபகாரகனை எம்பெருமானைச் சேர்ந்தவன், (அவனைப்போலே ஆநந்தத்தை அடைந்தவராய்), நாள் - நாளில், (அந்த நாளில் அப்போது பலர்ந்த), கமழ்-வாஸிக்கிற, மகிழமாலை மார்பினன- மகிழம்பூ மாலையை மார்பில் தரித்தவராயிருக்கிற, மாறன் சடகோபன, வேட்கையால சொன்ன - அவனிடத்தில் ஆசையால் சொன்ன, பாடல் ஆயிரத்துள்-ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, இ பத்தும் வல்லார் - இந்தப் பத்துப் பாட்டுக்களை அடிககடிப் படிக்க சக்தியுள்ளவர்களுக்கு, மற்றது - இதைக காட்டிலும் வேறான, மீட்சியின்றி - திரும்பி வருவதில்லாமல் இருக்கிற, வைகுந்தமா நகர் - வைகுந்தம என்கிற பெரிய பட்டணமானது, கையதுவே - கையில் இருக்கிறது.

(கருத்து) எம்பெருமான் பரதேவதை என்று நிரூபணம் செய்ததாகிய கைங்கரியததைச் செய்து, அவனைப்போல் மிகுந்த ஆநந்ததததை அடைந்த மகிழம்பூ மாலையைத தரித்த, ஆழ்வார் அவனிடத்தில் மிகுந்த ஆசையால் சொன்ன ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே இந்தப் பத்துப் பாட்டுக்களையும் அடிக்கடி படிக்கிறவர்களுக்கு இதைப் படிப்பதே பிரயோஜநம். வேறு பிரயோ

ஜநம் வேண்டுமானால், திரும்பி வருவதில்லாமல், வைகுந்தத்தில் இருந்து எம்பெருமானை அநுபவிப்பதாகிய பிரயோஜநமும் அவர்கள் கையில் இருக்கிறது.

குறிப்பு :—ஒரு குளிர்ந்த குளத்தில் ஸ்நாநம் செய்தவனுக்கு ஆத்மாவும் உடம்பும தெளிவை அடைவதுபோல், ஆழ்வார் இந்தத் திருவாய்மொழியைப் பாடினதாலே அவர் மனதுக்கு ஆநந்தமும் உடம்புக்கு ஒரு சோபையும் கிடைத்தது என்று காட்டுவதற்காக மகிழ்மாலையை அவர் அணிந்திருப்பது சொல்லப்பட்டது. இப்படியே பொருள்கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் விரக்தரான அவர் தாம் மாலை சூட்டிக்கொண்டிருப்பதைச் சொல்ல வேண்டியதில்லை. (11)

---

கல்பாந்தே(அ)பி ஸ்தி²தத்வாத் ஸகலஸுரக³ணஸ்ரஷ்ட்ருபா⁴வாஜ்ஜ
நாநாம் ரக்ஷாத்³யத்வாத³ஜஶிவவிஹரணாத் ஸர்வதே³வா
த்மபா⁴வாத் । தத்தத்கர்மாநுரூபம் ப²லவிதரணதோ வை
நதேயத்⁴வஜத்வாந்மார்கண்டே³யாவநாதே³: ப்ருது²மஹிமதயா ஶ்சர்யக்ருத்யா
ஹ ஸர்வாதி⁴கத்வம் ॥ ||௪௧||

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் எல்லாத் தேவதைகளுக்கும் மேற்பட்டவன் என்று பதறுக் காரணங்களாலே அருளிச்செய்கிறார். அந்தக் காரணங்களாவன .—(1) கல்பத்தின் முடிவில்கூட இருப்பது : (2) எல்லாத் தேவக் கூட்டங்களையும் உண்டுபண்ணுவது ; (3) அவர்களை ரக்ஷிப்பது ; (4) சிவனையும் பிரம்மாவையும் திருமேனியில் வைத்துக்கொண்டிருப்பது ; (5) எல்லாத் தேவதைகளுககும ஆத்மாவாக இருப்பது ; (6) அவன் அவன் கர்மத்துக்குத தகுந்தபடி பலன்களைக் கொடுப்பது ; (7) கருடனைக் கொடியாக வைத்துக்கொண்டிருப்பது ; (8) மார்க்கண்டேயனை ரக்ஷித்தது ; (9) அளக்க முடியாத பெருமையோடு இருப்பது ; (10) ஆச்சரியமான வேலைகளைச் செய்தது.

---

[illegible] ॥ ௬௮ ॥

---

இந்தப் பத்தில் எம்பெருமான் எல்லாப் போக்கிய வஸ்துக் களைக் காட்டிலும அதிக போக்கியன் என்று பததுக் காரணங் களால் சொலலப்பபடுகிறது அவைகளாவன :—(1) நிலையான ஐசுவரியமுள்ளவனாய் இருப்பது ; (2) இயற்கையாய்ப் பலவித போக்கியவஸ்துக்களுள்ளவனாய் இருப்பது; (3) ஆச்ரிதர்களுடன் பிரியாமல் இருப்பது ; (4) பிரிவில ஆச்ரிதர்களுக்கு துக்கததை உணடுபண்ணுமபடியான தன்னைப்போனற வஸ்துககளை உடைய வனாய் இருப்பது ; (5) தனனைச் சேர்ந்தவர்களைக் கிருதார்ததர் களாகப் பண்ணுவது ; (6) தனனிடம ஸ்நேஹமுள்ளவர்களுக்குத் தானே வைத்தியனாய் இருப்பது ; (7) நலலகுணக கூட்டங்க ளோடு நன்றாய்ச் சேர்ந்திருப்பது ; (8) தனனாலே உபேக்ஷிக்கப் பட்டதைத தன்னைச் சேர்நதவர்கள் விடும்படி இருப்பது ; (9) ஆச்ரிதர்கள் ஆசைப்படும்படியான புருஷார்ததமாய் இருப்பது ; (10) எல்லாத் தேவதைகளுக்கும் தலைவனாய் இருப்பது.

[illegible] ॥

[illegible]

[illegible] ॥

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

நான்காம்பத்து முற்றிற்று.

---

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:

திருக்குருகைப்பிரான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஐந்தாம்பத்து.

---

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥சக॥

முதல் பததில் ஸர்வேசுவரன் உபாயமாயிருப்பது என்கிற எது எண்ணப்பட்டதோ ; அதை, அவனைததவிர வேறு உபாயம் இல்லாத ஆழ்வார், ஐந்தாவது முதலான பததுக்களால் உறுதிப் படுத்துகிறார். அவைகளுள் முதலில் அதாவது ஐந்தாவது பத்தில் வேறு பிரயோஜனங்களில் ஆசையில்லாதவராய் அளவில்லாத இயற்கையாகஉள்ள தயையாகிய ஆற்றின் வெள்ளத்தில் உண்டான தாமரைப்பூவாகிய அவன் திருவடியைச் சரணமாகப் பற்றுகிறார்.

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥சஉ॥

ஐந்தாம்பததில் எம்பெருமானுடைய பததுக் குணங்களைச் சொல்லி, ஒருவனுக்குக் கிடைக்கவேண்டிய சிரேயஸ்ஸையும், அதற்கு உபாயததையும அவனே கொடுககிறவன் என்று அருளிச்செய்கிறார். அந்தக குணங்களாவன :—(1) தயைக்கு உட்பட்டவனாயிருப்பது ; (2) பக்தர்களைக்கொண்டு பாபததை நாசம் பண்ணுவது ; (3) தன்னிடததில் ஆசையை உண்டுபண்ணுவது ; (4) ஜகததை ரக்ஷிப்பதையே விருதமாகக்கொண்டு இருப்பது ; (5) ஆச்ரிதர்களுடைய மனதில் தானே வந்து மறக்கமுடியா

திருப்பது, (6) கோபிகளைப்போலே தன்னை எம்பெருமானாகவே நினைத்து அவன் செய்த வேலைகளைத் தாம் செய்ததாக எண்ணும்படி செய்வது, (7) பக்தியோகம் பண்ண சக்தி இல்லாதவர்களுக்கு அதின் ஸ்தானத்திலிருந்து அவர்களை ரக்ஷிப்பது, (8) ஆச்ரிதர்களுக்கு இயற்கையாய் உண்டாகும் தன் கைங்கரியத்தைப் பெற்றுக்கொள்வது; (9) ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காகத் திருவல்லவாழில் எழுந்தருளியிருப்பது, (10) தன்னுடைய வேலைகளை நினைப்பதற்குச் சக்தியைக் கொடுப்பது. (12)

---

## முதல் திருவாய்மொழி.

---

அவதாரிகை—இரண்டாவது பத்தில் எம்பெருமான் போக்கியனுகையால் பிராப்யன் என்று சொன்னதை நாலாம்பத்தில் உறுதிப்படுத்தி, முதற்பத்தில் அவன் உபாயமாய் இருக்கிறுன் என்று சொன்னதை ஐந்தாவது முதல் மேல் ஆறு பத்துக்களால் விரிவாய் அருளிச்செய்கிறுர்.

கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் பரதேவதையாயிருப்பதால் அவனை ஆச்ரயிங்கள் என்று உபதேசித்தபோது அவன் தனக்குச் செய்த உபகாரங்கள் நினைவுக்கு வந்தன. அதைச் சொல்லி ஆழ்வார் இந்தத் திருவாய்மொழியில் ஸந்தோஷப்படுகிறுர். அந்த உபகாரங்களாவன:—பிறருக்கு உபதேசம் பண்ணும்படியான தன் விஷயமான ஜ்ஞானத்தைக் கொடுத்ததும், தனக்குக் கைங்கரியமே பிராப்யம் என்று எண்ணும்படி செய்ததும் அவன் அநுபவமே தமக்கு ஆஹாரம்போல் தாரகமாயும், நீர் பால் தயிர்போல் போஷகமாயும், சந்தனம் புஷ்பம் வெற்றிலைபோல் போக்கியமாயுமிருப்பதாக எண்ணும்படி செய்ததும், தம்மிடத்தில் ஆசை உள்ளவனுய் இருப்பதும் தம்மோடு கலந்திருப்பதும.

( கலித்துறை )

கையார்சக் கரத்தேன் கருமா ணிக்கமே யென்றென்று
பொய்யே கைம்மைசொல் லிப்புற மேபுற மேயாடி
மெய்யே பெற்றெழிந் தேன்விதி வாய்க்கின்று காப்பாரா
ரையோ கண்ண பிரானறை யோவினிப் போனுலே. (க)

(பதவுரை) புறமே புறமே ஆடி - (எம்பெருமானைத் தவிர) வேறு விஷயங்களிலே திரிந்து, கை ஆர் சக்கரத்து - திருக்கைக்குத் தகுந்ததாய் அதில் நிறைந்திருக்கிற திருவாழியை உடையவனை, என் கருமாணிக்கமே - என்னுடைய நீலரத்நம்போன்ற வர்ணமுள்ளவனே! என்று என்று - இப்படி அடிக்கடி, பொய்யே கைமை சொல்லி - மிகுந்த பொய்களைச் சொல்லி, மெய்யே - உண்மையில் அவன் எனக்குப் பிரியமாய் இருப்பதை, பெற்று ஒழிந்தேன் - அடைந்துவிட்டேன், விதி - (அவனுடைய கருணையாகிற) பாக்கியமானது, வாய்க்கின்று - பலனைக் கொடுக்கும்போது, காப்பார் ஆர் - அதைத் தடைசெய்ய சக்தியுள்ளவன் எவன், ஐயோ! கண்ணபிரான் - கண்ணனாகிய உபகாரகன், இனி போனால் - இனி என்னைவிட்டுப் போனால், அறையோ - அதை நான் பார்ப்பேனோ?

(கருத்து) நான் விஷயங்களில் திரிந்துகொண்டு அவனிடத்தில் ஆசையில்லாமல் பொய்யாக அவனிடத்தில் ஆசையுள்ளவன் போலவும், அவனைவிட்டுப் பிரிந்து தரித்திருக்கமாட்டாதவன் போலவும் "கையார் சக்கரத்து என் கருமாணிக்கமே" என்று அடிக்கடி, சொன்னேன். அவன் பொறுக்கமுடியாத இந்த என்னுடைய ப்ராதிகூல்யத்தை ஒன்றும் பாராமல் உண்மையில் எனக்குப் பிரியமாக ஆகிவிட்டான். இது அவனுடைய கருணையின் வேலை அது ஆறுபோல் கரைபுரண்டு பெருகினால், அதை எவன் தடுக்கமுடியும்? அவன் ஸர்வேச்வரன் அல்லவா? அதைத் தடுக்க அவனால் முடியாதா? என்றால், ஐயோ! அதைச் செய்து பார்க்கட்டுமே. அவன் இனிமேல் என்னைவிட்டுப் போவனோ என்னில், போகமுடியுமோ? அதையும் நான் பார்ப்பேன்.

குறிப்பு:—(1) பொய், கைமை என்கிற இரண்டு சொற்களுக்கும் ஒரே பொருள்; ஆகையால் அவைகளுக்கு மிகுந்த பொய்கள் என்று அர்த்தம் எழுதியிருக்கிறது.

(2) கரைபுரண்டு வருகிற கருணையை எம்பெருமானும் தடுக்கமுடியாதென்கிற ஸந்தோஷத்தைக் காட்டுகிறது 'ஐயோ' என்கிற சொல்.

(3) "அறையோ" என்பது தோற்றவன் முன்னால் ஜயித்த வன் சொல்லுகிற சொல். இதனால், தம்மைவிட்டுப் போக வேண்டும் என்று எம்பெருமான் எண்ணினாலும், அது முடியா மல் அவன் தோல்வி அடைவன் என்று காட்டப்படுகிறது.

(இ - ம) வாய்க்கின்று-வினையெச்சம் ; வாய்க்கையில் என்று பொருள். (1)

---

போனாய் மாமரு தின்னடுவே யென்பொல் லாமணியே
தேனே யின்னமு தேயென்றென் றேசிலகூத் துச்சொல்லத்
தானே லெம்பெரு மானவ னென்னா கியொழிந்தான்
வானே மாநில மேமற்று முற்றுமென் னுள்ளனவே. (௨)

(ப - ரை) மா மருதின் நடுவே போனாய் - பெரிய மருத மரங்களின் நடுவே போனவனே! என் பொல்லா மணியே-என்னுடைய துளையிடப்படாத நீலரத்னம் போன்றவனே! தேனே - தேனைப்போல் இனியவனாயிருப்பவனே! இன் அமுதே - இனிமையுள்ள அமிருதமே! என்று என்றே - என்று என்று, சில கூற்று - சில கூற்றுக்களை, (மனதில் ஆசையில்லாமல் ஆசையிருப்பதுபோல், காண்பிக்கும் சொற்களை), சொல்ல - நான் சொல்லவே, எம்பெருமான் அவன் தான் - எல்லாருக்கும் ஸ்வாமியான அவனே! என் ஆகி ஒழிந்தான் - நானே அவன் என்று எண்ணும்படி செய்துவிட்டான், வானே - ஆகாசமும், மா நிலமே - பெரிய பூமியும், மற்றும் - பாக்கியிருக்கும் மூன்று பூதங்களும், முற்றும் - எல்லாம், என் உள்ளனவே-என் உள்ளேயிருக்கின்றன.

(கருத்து) உண்மையில் எனக்கு எம்பெருமானிடத்தில் கொஞ்சங்கூட ஆசையில்லை. அப்படியிருக்க, மிகுந்த ஆசையுள்ளவர்கள்போல் "மாமருதின் நடுவே போனாய்! என் பொல்லா மணியே! தேனே! இன் அமுதே!" என்று அடிக்கடி சொன்னேன். இதை உண்மையாகச் சொன்னதாக வைத்துக்கொண்டு, நான் வேறு அவன் வேறு என்று எண்ணமுடியாதபடி மிகவும் தாழ்ந்தவனான என்னுடன் சேர்ந்தான். அவன் தனியாக வந்தானா என்றால் இல்லை. ஆகாசம், பூமி, வாயு, அக்னி, ஜலம் ஆகிய பூதங்களும், நித்ய விபூதியுள்பட மற்ற எல்லாம் ஆகிய இவைகளுடன் வந்து என்னுள்ளே இருக்கிறான்.

குறிப்பு :—'பொல்லாமணி' என்பதற்கு துளையிடப்படாத மணி என்று பொருள். இதை ஒருவனும் அநுபவிக்கமாட்டான். ஆகையால் அதனுடைய தேஜஸ்ஸு குறையாமல் இருக்கும். ஆகையால் குறைவில்லாத தேஜஸ்ஸை உடைய ரத்நம்போல் அழகாய் இருப்பவனே என்று பொருள்.

(இ - ம்) போனாய் - போயினை என்னும் வினையாலணையும் பெயரின் விளிவேற்றுமை. வானே முதலான சொற்களிலுள்ள ஏகாரத்திற்கு எண் பொருள். பொல்லா - எதிர்மறைப் பெய ரெச்சம் ; பொல்லாத. (2)

---

உள்ளன மற்றுள வாயப்புற மேசிலமா யஞ்சொல்லி
வள்ளன்மணி வண்ணனே யென்றேன்றே யுன்னையும் வஞ்சிக்குங்
கள்ள மனந்தவிர்ந் தேயுன்னைக் கண்டுகொண் டேயொழிந்தேன்
வெள்ளத் தணைக்கிடந்தா யினியுன்னை விட்டென் கொள்வனே.(௩)

(ப - ரை) உள்ளன - என் மனதிலிருக்கிறவைகள், மற்று உளவாய் - உன்னைத் தவிர வேறான பிரகிருதியில் உண்டானவை கள் விஷயங்களாயிருக்க, வள்ளல் - உதாரன் ஆனவனே! மணி வண்ணனே - ரத்நம்போல ஸ்வரூபனானவனே! என்று - என்றே சில மாயம் - சில கபடமான வார்த்தைகளை, புறமே - வெளியிலே சொல்லி, உன்னையும் வஞ்சிக்கும், கள்ளம் மனம் - திருட்டுத்தன முள்ள மனது, தவிர்ந்து - போய், உய்ந்து - பிழைத்து, (அளவில் லாத பக்தியை உடையவனாய்,) உன்னை, கண்டு கொண்டொழிந் தேன் - கண்டுகொண்டுவிட்டேன். வெள்ளத்து அணை - திருப் பாற் கடலாகிய படுக்கையில், கிடந்தாய் - படுத்திருப்பவனே! உன்னை விட்டு, என் கொள்வன் - எதை அடையவேண்டியதாக நான் பிடித்துக்கொள்வேன்?

(கருத்து) பிரகிருதியிலிருந்து உண்டான விஷயங்கள் என் மனதிலிருக்க, வள்ளலே! மணிவண்ணா! என்று சில கபட வார்த் தைகளை கழுத்துக்குமேல் அடிக்கடி சொல்லி, எல்லாம் அறிந்த உன்னையும் வஞ்சித்தேன். இப்படிச் செய்த என் கள்ளத்தன்மை உன்னுடைய அநுக்கிரஹத்தினாலே போய், உன்னிடத்தில் உண் மையான அளவில்லாத பக்தி உண்டாகி, உன்னைக் கண்டுகொண்டு

விட்டேன். திருப்பாற்கடலில் படுத்திருப்பவனே! உன்னைத் தவிர வேறு எதை நான் உள்ளவரையில் அடையவேண்டியதாக எண்ணிப் பற்றுவேன்? எனக்கு உன்னைவிட்டு வேறு ஒன்றிலும் ஆசையில்லை.

(இ - ம) கிடந்தாய் - கிடந்தனை என்னும் வினையாலணையும் பெயரின் விளிவேற்றுமை. (3)

---

அவ—'கண்டுகொண்டொழிந்தேன்' என்று சொல்லவே, எம்பெருமானைக் கண்ணாலே பார்த்துக் கட்டிக்கொள்ள வேண்டும் என்கிற ஆசை பிறக்க, அதைப் பெறுவதற்கு ஆழ்வார் அவனை வேண்டுகிறார் —

என்கொள்வ னுன்னை விட்டென்னும் வாசகங்கள் சொல்லியும்
வன்கள்வ னேன்மனத் தைவலித்துக் கண்ணநீர் கரந்து
நின்க ணெருங்க வைத்தென தாவியை நீக்ககில்லே
னென்கண் மலினமறுத் தென்னைக் கூவியருளாய கண்ணனே.

(ப - ரை) வன் கள்வனேன் - பலமான திருடனான நான், உன்னை விட்டு, என் கொள்வன் - எதை அடைவேன், என்னும் வாசகங்கள் சொல்லியும் - என்கிற சொற்களைச் சொல்லியும், மனத்தை வலித்து - (உன் குணங்களை நினைப்பதால் தளர்ந்திருக்கிற) மனதை ஒரு வேலை செய்யத்தக்கதாய்ப் பண்ணி, கண்ண நீர் கரந்து-கண்ணீர் ஒளிந்து (மறையும்படி), நின் கண் நெருங்க வைத்து-உன்னிடத்தில் மனதை நெருங்கியிருக்கும்படி வைத்து, எனது ஆவியை - என் ஆத்மாவை, நீக்ககில்லேன் - ஸம்ஸாரத்திலிருந்து பிரிக்க சக்தியில்லாதவனாய் இருக்கிறேன், கண்ணனே! என்கண் - என்னிடத்தில், மலினம் அறுத்து - தோஷத்தை (உன்னை அடைவதற்கு இடைஞ்சலானதை)ப் போக்கி, என்னை கூவி அருளாய - என்னை உன்னிடம் அழைத்துக்கொள்ள வேண்டும்.

(கருத்து) நான் பலமான திருடன். உன்னதான ஆத்மாவை என்னதாக எண்ணிக்கொண்டிருந்தேன். இப்போது உன்னிடத்தில் ஆசை பிறந்து, உன்னைத் தவிர வேறு எதை அடைய

வேண்டியது என்கிற பேச்சைச் சொல்கிறேன். நீ இப்போது உன்னுடைய அளவில்லாத கிருபையினால் வேறு எல்லா விஷயங்களைப் பார்க்கமுடியாமலும், உன்னையே தாரகமாக எண்ணும்படியும், உன்னைவிட்டுப் பிரிந்திருக்கமுடியாமலும் செய்திருக்கிறாய். உன் குணங்களை நினைத்து என மனது தளர்கிறது. கண்களில் நீர் நிறைகிறது ஆனால், மனதைத திடப்படுத்திக்கொண்டு கண்ணீரைப் போக்கவும் உன்னிடத்தில் என் மனதை நெருங்க வைக்கவும, ஸம்ஸாரத்திலிருந்து என்னைப் பிரிக்கவும் எனக்குச் சக்தியில்லை. ஆகையால், கண்ணனே! உன்னை அடைவதற்கு இடைஞ்சல்களாய் இருப்பவைகளைப் போக்கி உன்னிடத்தில் என்னை நீயே அழைத்துக்கொள்ளவேண்டும்.

குறிப்பு.—ஆழ்வார் தான் கண்ணால் பார்த்துக் கட்டிக் கொள்ளவேண்டுமென்று ஆசைப்பட்டது கிடைக்காததினால் 'வன் கள்வன' என்று தன்னை நிந்திக்கிறார். (4)

---

அவ—கீழ்ப் பாட்டில் 'மலினமறுத்து' என்று சொன்னது இன்னது என்று இந்தப் பாட்டில் அருளிச்செய்கிறார்.—

கண்ணபிரானைவிண்ணோர் கருமா ணிக்கத் தையமுதை
நண்ணியு நண்ணகில் லேனடு வேயோ ருடம்பிலிட்டுத்
திண்ண மழுந்தக் கட்டிப்பல செய்வினை வன்கயிற்றாற்
புண்ணை மறைய வரிந்தென்னைப் போரவைத் தாய்புறமே. (ரு)

(ப - ரை) விண்ணோர் கருமாணிக்கத்தை - நித்தியஸூரிகளால் நீலரத்நத்தைப்போல் அநுபவிக்கப்பட்டவனாய், அமுதை - அமுதம்போலிருப்பவனாய், அவதாரம் செய்த கண்ணபிரானை - கண்ணனை, நண்ணியும் - கிட்டியும், நண்ணகில்லேன் - கிட்ட சக்தியில்லாதவனாய் இருக்கிறேன். (எதனாலே என்றால்), நடுவே ஓர் உடம்பில் இட்டு - நடுவில் வந்த (ஸ்வபாவமாயில்லாமல் கர்மங்களாலுண்டான) ஓர் உடம்பில் வைத்து, பல செய்வினை - என்னால் செய்யப்பட்ட பலவிதமான கர்மங்களாகிற, வன் கயிற்றால் - உறுதியுள்ள கயிற்றால், திண்ணம் அழுந்த - இடமாய்க் கட்டி, புண்ணை - அந்த உடம்புக்குள் இருக்கிற மாம்

ஸம் முதலானவைகளை, மறைய - கண்ணுகருக் தெரியாதபடி இருக்க, வரிந்து - தோலால் மூடி, எனனை, புறமே - உனனிடம் வராமல் ஸம்ஸாரததில் இருக்கும்படி, போர வைததாய் - மிகவும் வைததாய்.

(கருதது) நிததியஸூரிகளால் நிலாத்நம்போல் அநுபவிக் கப்பட்ட நீ இங்கிருககும எலலாரும அநுபவிக்கும்படி கண்ண ஞய் அவதாரம் செயதாய் இப்படி நீ கிட்ட இருந்தபோதிலும் உன்னைக கணகளால பார்த்துக கட்டிககொள்ள எனக்குச் சக்தி இல்லை. இதற்கு நீயே காரணம். ஸ்வபாவமாயில்லாமல் நடுவே உண்டான ஒரு உடம்பில் எனனை வைத்து நான முன் செய்த பல கர்மங்களாகிய திடமான கயிற்றுல ஆதமாவாகிய எனனை உடம்பிலிருந்து பிரிக்கமுடியாதபடி திடமாய்க் கட்டி, அந்த உடம்புக்குள் இருககிற மாமஸம் ரததம முதலானவைகள் கண் ணுக்குத் தெரியாதபடி தோலால் மூடி உன்னைவிட்டு ஸம்ஸாரத திலிருந்து வேறு விஷயங்களைத் தேடும்படி செய்திருக்கிருய. இந்த இடைஞ்சலை நீயே போக்கவேண்டும்.

(இ - ம்) வரிந்து - ஆவரணம் எனபதிலிருக்கும் 'வ்ரு' எனகிற பகுதியிலிருந்து வந்த சொல. (5)

---

அவ—இப்படி ஆழ்வார் பிரார்த்திக்க, சொன்ன இடைஞ்சல் போய்விட்டது என்று அவர் எண்ணி ஸந்தோஷப்படும்படி தன்னை எம்பெருமான காட்ட, தாம கணடபடி அதைப் பேசு கிருர்.

புறமறக் கட்டிக் கொண்டிரு வல்வினை யாற்குமைக்கு
முறைமுறை யாக்கை புகலொழி யக்கண்டு கொண்டொழிந்தே
னிறமுடை நாற்றடந் தோட்செய்ய வாய்செய்ய தாமரைக்க
ணறமுய லாழியங் கைக்கரு மேனியம் மான்றன்னையே. (சு)

(ப - ரை) புறம் அற - கட்டிக்கொள்ளாத இடம் வெளியே இல்லாதபடி, கட்டிக்கொண்டு, இரு வல் வினையால் - புண்ணியம் பாபம் என்கிற இரண்டு விதமான பலமான கர்மங்களாலே, குமைக்கும் - பிடிக்கும், முறை முறை ஆக்கை - ஒன்றின்பின்

ஒன்றாய் வருகிற உடம்புகளில், புகல் ஒழிய - நுழைந்திருப்பது போகும்படி, கண்டு கொண்டு ஒழிந்தேன் - உன்னைக் கண்டு விட்டேன், (நீ உன்னை எப்படிக் காட்டினாய் என்றால்,) நிறம் உடை-காந்தியையுடைய, நான்கு தடம் தோள்-நான்கு விசாலங்களான தோள்கள், செய்ய வாய - செவப்பான திருப்பவளம், செய்ய தாமரை கண் - செந்தாமரை இதழ்போன்ற கணகள், அறம் முயல் ஆழி - (ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதாகிய) தர்மத்திலே முயற்சியுள்ள திருவாழியை ஏந்திய, அம் கை - அழகான திருக்கை, கரு மேனி - நீலமான திருமேனி, இவைகளை உடையவனாய், அம்மான் - ஸ்வாமியான நீ (உன்னைக் காட்டினாய், நானும் கண்டு கொண்டேன்)

(கருத்து) உடம்புகள் ஒன்றின் பின்னால் ஒன்று வந்து என்னைத் திருடமாய்க் கட்டிக்கொண்டு நான் முன் செய்த புண்ணியம் பாபம் என்கிற பலமான கர்மங்களால் என்னைத் துன்பப்படுத்திக்கொண்டிருந்தன. அவைகளில் நான் புகுந்திருப்பது ஒழியும்படி, காந்தியுள்ள நான்கு தோள்களையும் சிவந்த திருப்பவளத்தையும் செந்தாமரைப்பூவின் இதழ்போன்ற திருக்கண்களையும் ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதாகிய தர்மத்தில் முயற்சி செய்து கொண்டிருக்கிற, திருவாழியை ஏந்திய திருக்கையையும் உடைய ஸ்வாமியாய் உன்னை எனக்குக் காட்டினாய். நான் அதைக் கண்டு கொண்டுவிட்டேன் (6)

---

அம்மா னாழிப் பிரானவ னெவ்விடத் தான்யானா
ரெம்மா பாவியர்க் கும்விதி வாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்
கைம்மா துன்பொழித் தாயென்று கைதலை பூசலிட்டே
மெய்ம்மா லாயொழிந் தேனெம் பிரானுமென் மேலானே. (எ)

(ப - ரை) ஆழிப்பிரான் - திருவாழியை உடைய உபகாரகனான, அம்மான் அவன் - ஸ்வாமியான அவன், எவ்விடத்தான் - எங்கே இருக்கிறவன் (எவ்விதமான பெருமையை உடையவன்), யான் ஆர் - மிகவும் தாழ்ந்தவனான நான் எங்கே இருக்கிறேன். கைம்மா - கஜேந்திரனுடைய, துன்பு - துன்பத்தை, ஒழித்தாய் - போக்கினவனே! என்று, கை தலை பூசலிட்டே - கைகளைத் தலை

யில் வைத்துக்கொண்டு கூப்பிட்டே (வேறொன்றும் செய்யாமல் இதைமாத்திரம் செய்து), மெய் மாலா யொழிந்தேன் - உண்மையான பக்தியுள்ளவனாக ஆகிவிட்டேன். எம்பிரானும்-என் ஸ்வாமியும், என மேலானே - என்னிடத்தில் ஆசை உள்ளவனாக ஆனான். ஆகையால், எ மா பாவியர்க்கும் - எப்படிப்பட்ட பெரிய பாபிகளுக்கும், விதி - அவனுடைய கிருபையாகிய பாக்கியம், வாய்க்கின்று - வரும்போது, வாய்க்கும் கண்டீர் - வந்தே விடும்.

(கருத்து) திருவாழியைக் கையில் ஏந்திக்கொண்டிருக்கிற ஸ்வாமியினுடைய பெருமை எங்கே; என்னுடைய தாழ்மை எங்கே: இப்படியிருந்தும் கைகளைத் தலையில் வைத்துக்கொண்டு "கைம்மா துன்பொழித்தாய்" என்று கூப்பிட்டேன். வேறு ஒன்றையும் செய்யவில்லை. இப்படி இருந்தும், பொய்யைச் சொன்ன எனக்கு அவனுடைய அளவில்லாத கிருபையினால் அவனிடத்தில் உண்மையான அளவில்லாத பக்தி உண்டாயிற்று. அவனுக்கும் என்னிடத்தில் மிகுந்த ஆசை உண்டாயிற்று. ஆகையால் ஒருவன் எவ்வளவு பெரிய பாபங்களைச் செய்திருந்தாலும் அவனுடைய கிருபையாகிய பாக்கியம் வரும்போது வந்தேவிடும்.

குறிப்பு —ஆழ்வார் தமக்கும் எம்பெருமானுக்கும் இருக்கிற வாசியையும் அவன் தமக்குச் செய்த உபகாரத்தையும் பார்த்து ஆச்சரியம் அடைந்து அவன் கிருபை செய்யும் வேலையை வெளியிடுகிறார்.

(இ - ம்) ஒழித்தாய் - ஒழித்தனை என்னும் வினையாலணையும்பெயரின் விளிவேற்றுமை. (7)

---

மேலாத் தேவர்க ளுநிலத் தேவரு மேவித்தொழு
மாலாா வந்தின நாளடி யேன்மனத் தேமன்னினா
சேலேய் கண்ணிய ரும்பெருஞ் செல்வமு நன்மக்களு
மேலாத் தாய்தந் தையுமவ ரேயினி யாவாரே. (அ)

(ப - ரை) மேலா தேவர்களும்-மேலான நித்தியஸூரிகளாலும், நிலத்தேவரும் - பூமியிலிருக்கிற பாகவதர்களாலும், மேவி தொழும் - பக்தியுடன் ஸேவிக்கப்படுகிற, மாலார் - எல்லாருக்

-கும் மேற்பட்டவனுன எம்பெருமான், வந்து - வந்து, இனநாள் - இப்போது, அடியேன் மனத்தே - அடியேனுடைய மனதில், மன்னினுர் - நிலையாயிருக்கிருன், இனி - இனிமேல், சேல் ஏய் கண்ணியரும் - மீனைப்போலிருக்கிற கண்களை உடைய ஸ்திரீ களும், செல்வமும் - தனமும், நன்மக்களும் - நல்ல பிள்ளைகளும், மேலா தாய் தந்தையும் - மேலாயிருக்கிற தாயும் தகப்பனும் ஆகிய இவைகள் எல்லாம், அவரே ஆவார் - அவனே ஆவான்.

(கருத்து) எல்லாரிலும் எல்லாவிததத்தாலும் உயர்ந்தவர்க ளான நித்தியஸூரிகளாலும், பூமியிலிருக்கிற பாகவதர்களாலும் பக்தியுடன் ஸேவிக்கப்படுகிற எம்பெருமான் பெரிய யோகி களால் தேடப்படுகிறவனுய் இருந்தபோதிலும் தானுய் என் னிடம் வந்து என மனதில் நிலையாயிருக்கிருன. இனிமேல் அவனே எனக்கு அழகான மனைவிகளும், தனமும், நல்ல குண முள்ள பிள்ளைகளும, பிரியத்தைச் செய்கிற தாயாரும், ஹிதத் தைச் செய்கிற தகப்பனும. அதாவது அவர்களால் உண்டாகும் பிரிதி எல்லாம் அவனை அநுபவிப்பதால் உண்டாகும்.

குறிப்பு:—பிரகிருதியோடு கூடியிருக்கிறவர்களுக்கு எம் பெருமானிடம் பக்தி வருவதில் அருமையை நினைதது, அவர் களை "தேவர்" என்று கௌரவத்துடன ஆழ்வார் அருளிச்செய் கிருர்.

(இ - ம்) மேலா - மேலான, கடைக்குறை. (8)

---

ஆவா ரார்துணை யென்றலை நீர்க்க டலுளழுந்து
நாவாய் போற்பிற விக்கட லுண்ணின்று நான்துளங்கத்
தேவார் கோலத் தொடேந்திருச் சக்கரஞ் சங்கினேடு
மாவா வென்றருள் செய்தடி யேனேடு மானனே. (௯)

(ப - ரை) துணை ஆவார் ஆர் என்று - ஸஹாயம் (ரக்ஷகர்) யாரென்று சொல்லிக்கொண்டு, அலை நீர் - அலைகளாகக் கிளம்பிக் கொண்டிருக்கிற, ஜலததையுடைய, கடலுள் - ஸமுத்திரத்தில், அழுந்தும் - முழுகுகிற, நாவாய் போல்-கப்பல்போல், (கப்பலில் இருக்கிற ஜநங்கள்போல்), பிறவி கடலுள்-ஸம்ஸாரமாகிய ஸமுத் திரத்தில், நின்று - (அகப்பட்டு) நின்று, நான் துளங்க - நடுங்கிக்

கொண்டிருக்கையில், (எம்பெருமான,) தேவு ஆர் - தான் ஸர்வே சுவரனுயிருப்பது நிறைந்த, (அதைக் காட்டும்படியான,) கோலத தோடும - அழகுடனும், சக்கரம சங்கினெடும - சக்கரம சங்கம் முதலான ஆயுதங்களுடனும கூடவந்து, ஆ ஆ என்று - (என இருப்பைப் பார்த்து) ஆ! ஆ!' என்று, அருள்செய்து - கிருபை பண்ணி, அடியேனெடும ஆனை - வேலைக்காரனுன என்னுடனும் சேர்ந்தான.

(கருத்து) நம்மை யார் ரக்ஷிப்பார்கள் என்று கதறிக் கொண்டு, கப்பலில் இருப்பவர்கள் ஸமுத்திரத்தில் முழுகுவது போல, ஸம்ஸாரத்தில் அகப்பட்டுக்கொண்டு, என் பிரயத்தனத தினுல் கரையேற முடியாமல் நடுங்கிக்கொண்டிருந்தேன். இப்படி இருக்கையில், எம்பெருமான தன்னுடைய அளவில்லாத கருணை யினுல் ஆ! ஆ! என்று இரக்கப்பட்டு தான ஸர்வேச்வரனுயிருப் பதைக் காட்டும் அழகுடனும் திருவாழி திருச்சங்கு முதலான ஆயுதங்களுடனும என்னிடம வந்து அவைகளோடு சேருவது போல என்னுடனும சேர்ந்தான (9)

ஆளு ளுடை யானென்றஃதே கொண் டுகந்துவந்து
தானே யின்னருள் செய்தென்னை முற்றவுந் தானானான்
மீனா யாமையு மாய்நர சிங்கமு மாய்க்குறளாய்க்
கானா ரேனமு மாய்க்கற்கி யாமின்னங் கார்வண்ணனே (௧0)

(ப - ரை) மீனய, ஆமையுமாய், நரசிங்கமுமாய், குறளாய் - வாமனனாய், கான ஆர்-காட்டில் பொருந்திருக்கிற (ஸஞ்சரிக்கும), ஏனமுமாய் - வராஹமுமாய, (அவதாரம செய்து), இன்னம - இனிமேல், கற்கியாம - கல்கி என்கிற அவதாரம செய்பவனுன, கார் வண்ணன - மேகம்போன்ற வர்ணமுள்ள எம்பெருமான், ஆள் உடையான் ஆனை - என்னை வேலைக்காரனுக உடையவனுக ஆனேன், என்று அஃதே கொண்டு - இப்படி அவன செய்த உபகாரத்தை நான நினைத்துக்கொண்டு இருப்பதை வியாஜமாகக் கொண்டு, உகந்து வந்து - ஸந்தோஷப்பட்டு வந்து, தானே - (நான கேட்காமலிருக்கையில) தானே, இன அருள் செய்து-இனிமையான கிருபையைச் செய்து (என்னோடு நன்றாய்ச சேர்ந்து), என்னை முற்றவும் தான ஆனான-என்னைக்குறித்து அவன் எல்லா அவதாரங்களோடு கூடினவன் ஆனான.

(கருத்து) இதுவரையில் மீனாகவும், ஆமையாகவும், வராஹமாகவும், நரசிங்கமாகவும், வாமனனாகவும், அவதாரங்களைச்செய்து இந்த யுகம் முடியும்போது கற்கியாக அவதாரம் செய்யப்போகிற மேகம்போன்ற வர்ணமுள்ள எம்பெருமான், என்னைத் தனக்கு வேலைக்காரனாகச் செய்துகொண்டு என்னோடு சேர்ந்தான். இதற்குமுன் என்னுடன் சேராதவன்போல் அவனுடன் நான் வேறு அவன் வேறு என்று தோன்றும்படி என்னுடன் சேர்ந்தான். இப்படி அவன் செய்த உபகாரத்தை நான் நினைத்துக்கொண்டு இருப்பதை வியாஜமாக வைத்துக்கொண்டு, என்னோடும் நன்றாய்ச் சேர்ந்து, நான் ஸந்தோஷத்துடன் அநுபவிக்கும்படி தான் செய்த எல்லா அவதாரங்களையும் எனக்குக் காட்டினான். என்னிடம் இருக்கும் அளவில்லாத ஸ்நேஹத்தாலே இப்படி அவதாரங்களைச்செய்தான். இனிமேலும் அவன் செய்யப்போகிறவைகளுக்கு முடிவுண்டோ? (10)

---

காரவண்ணன் கண்ண பிரான்கம லத்தடங் கண்ணன்றன்னை
யேரவள வொண்கழ னிக்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
சீரவண்ண வொண்டமிழ் களிவையா யிரத்து ளிப்பத்து
மாரவண்ணத் தாலுரைப் பாரடிக் கீழ்புகு வார்பொலிந்தே. (கக)

(ப - ரை) கார் வண்ணன் - மேகம்போன்ற வர்ணத்தை உடையவனாய், கமலம் தடம் கண்ணன் - தாமரைப்பூவின் இதழ்போல விசாலமான திருக்கண்களை உடையவனாய், கண்ணபிரான் தன்னை - ஆச்ரிதர்களுக்காக கண்ணனாக அவதாரம்செய்து அவர்களுக்கு உபகாரம் செய்த எம்பெருமானைக் குறித்து, ஏர் வளம்- உழவு மாடுகள் நிறைந்திருப்பதையுடைய, ஒண் கழனி - விளங்குகிற வயல்களையுடைய, குருகூர் சடகோபன் சொன்ன - ஆழ்வாரால் சொல்லப்பட்ட, சீர் வண்ணம்-சிலாக்கியமான பிரகாரத்தை உடைய, ஒண் - அழகான, தமிழ்கள் இவை ஆயிரத்துள் - இந்த தமிழ் ஆயிரம் பாட்டுக்குள்ளே, இ பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், ஆர் வண்ணத்தால் - பாரம் பண்ணுவதுபோல் மிகவும் பிரீதியுடன், உரைப்பார் - படிக்கிறவர்கள், பொலிந்து - விருத்தியடைந்து (எம்பெருமானுக்குச் சேஷன் என்று நினைப்பதில் ஆசையுள்ளவர்களாய்), அடி கீழ் - அவனுடைய திருவடிகளின்கீழ், புகுவர் - புகுந்திருப்பார்கள்.

(கருத்து) நீலமேகம் போன்றவனாய், தாமரைக்கண்ணனாய், ஆச்ரிதர்களுக்கு ஸுலபனாய் இருக்கிற எம்பெருமானைப்பற்றி ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பதத்துப் பாட்டுக்களை அதிக ப்ரீதியுடன் படிப்பவர்கள் அவனுக்குத் தாங்கள் சேஷமென்று நினைப்பதில் ருசியுள்ளவர்களாய், அவன திருவடிகளின்கீழ் புகுந்திருப்பார்கள். (11)

---

சக்ரஸ்பாயத்கரத்வாத் ஸுஜநவசதயா ரக்ஷணோத்யுக்த-
பாவாத் ஸவ்யத்வாத் ஸ்வாத்மதாநாத் அதோஷதநுதயா ஸ்ரீகஜேந்த்ரா-
வநாச்ச । நாநாபந்துத்வயோகாத் விபதி ஸகிதயா வ்யாஜமா-
த்ராபிலாஷாத் காருண்யாதீநவ்ருத்திம் [illegible]
[illegible]॥ ॥௫௧॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தயைக்கு வசப் பட்டவன் என்று பத்துக் காரணங்களால் அருளிச்செய்கிறார். அவைகளாவன :—(1) சக்கராயுதத்தாலே அழகாய் விளங்குகிற திருக்கையை உடையவனாயிருப்பது ; (2) ஆச்ரிதர்களுககுத் தான் வசப்பட்டிருப்பது ; (3) அவர்களை ரக்ஷிப்பதில் நோக்க முள்ளவனாயிருப்பது ; (4) இதைச செய் இதைச் செய்யவேண் டாமென்று சொல்லும்படி ஆச்ரிதர்களுக்கு உட்பட்டிருப்பது ; (5) ஆச்ரிதர்களுக்குத் தன்னைக் கொடுப்பது ; (6) குற்றமில்லாத திருமேனியை உடையவனாயிருப்பது ; (7) கஜேந்திரனை ரக்ஷித் தது ; (8) பலவித பந்துக்களாயிருப்பது , (9) ஆபத்தில் துணை யாய் இருப்பது ; (10) ஒருவனை ரக்ஷிப்பதறகு வியாஜம் ஒன் றையே தேடுவது.

---

# இரண்டாம் திருவாய்மொழி.

அவ—ஒன்றும் தேவில் (4–10) எம்பெருமானைப்பற்றி உப தேசம செய்தார். அதினாலே சிலர் அவனிடததில் பக்தியுள்ள வர்களானதைக் கண்டு ஸந்தோஷப்பட்டு இந்தத் திருவாய்மொழி யில் அவர்களைக கொண்டாடுகிறார் :—

( அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங் கியாதொன்று மில்லை [மேல்
கலியுங் கெடுங்கண்டு கொண்மின் கடல்வண்ணன் பூதங்கள் மண்
மலியப் புகுந்திசை பாடி யாடி யுழிதரக் கண்டோம். (க)

(ப - ரை) வல் உயிர் சாபம் - பலமான ஆதமாக்களுடைய பாபமானது, போயிற்று, நலியும் - வருத்ததைதை உண்டாக்கும், நரகும் நைந்த - நரகமும் தளர்ந்தது. (பாபங்களின் பலன்களைக் கொடுப்பதை விட்டது). நமனுக்கு - யமனுக்கு, இங்கு - இந்தப் பூமியில், யாதொன்றுமில்லை-ஒரு வேலையுமிலலை, கலியும் - கலியுகமும் கெடும், கண்டுகொணமின் - இதை நீங்களே பார்க்க லாம், கடல் வண்ணன் - ஸமுத்திரததின ஸ்வபாவத்தையுடைய எமபெருமானுடைய, பூதங்கள் - பக்தர்கள், மண்மேல்-பூமியிலே, மலிய புகுந்து - நிறைநதிருக்கும்படி வந்து, இசை - பாட்டுக்களை பாடி, ஆடி, உழிதரக கணடோம் - இங்குமங்கும் போவதைப் பார்தடுதாம். பொலிக பொலிக பொலிக - வளர்க வளர்க வளர்க (இந்த ஸமிருததி எப்போதும் இருக்கவேண்டும்).

(கருதது) ஆத்மாக்களுடைய பலமான பாபங்கள் போய் விட்டன. அதினால பாபிகளுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் நரகங்களும் பாபங்களின் பலனைக் கொடுப்பது இல்லை. பாபி களை நரகத்தில் போட்டுத் துன்பப்படுத்தும் யமனுக்கும் இங்கே செய்யவேண்டிய வேலை ஒன்றுமில்லை. கலியுகமும் கெடும். இவை களை நான் சொல்லவேண்டியதில்லை, நீங்களே பார்க்கலாம். இவைகள் எதினாலே உண்டாயிற்று என்றால், ஸமுத்திரத்தின் ஸ்வபாவத்தையுடைய எம்பெருமானிடத்தில் சிலர் பக்தியுள்ளவர்

களாய் அவனுடைய ஸ்வரூபம் முதலானவைகளைப்பற்றிய பாட்டுக்களைப் பாடிக்கொண்டும், அதினாலுண்டான ஸந்தோஷத்தால் கூத்தாடிக்கொண்டும், பூமியில் எங்கும் திரிகிறார்கள். இதுதான் காரணம். இதை நான் பார்த்தேன். இப்படி அவர்கள் நிறைந்திருப்பது எப்போதும் இருக்கவேண்டும்.

குறிப்பு :—(1) சாபத்தின் பலனை எப்படி விலக்கமுடியாதோ, அப்படியே பாபத்தின் பலனையும் ஒருவன் விலக்க முடியாது. ஆகையால் பாபத்தைச் சாபம் என்று பாட்டுச் சொல்லுகிறது.

(2) பூதம் என்கிற சொல்லுக்கு, இருக்கிறவன் என்று பொருள். எம்பெருமான் விஷயமான அறிவுள்ளவனை இருக்கிறவன் என்றும், அஃதில்லாதவனை இல்லாதவன் என்றும் வேதம் சொல்லுகிறபடியால், அவன் விஷயமான அறிவுண்டாய் அவனிடத்தில் பக்தியுள்ளவர்களை 'பூதங்கள்' என்று பாட்டுச் சொல்லுகிறது.

(3) 'கடல் வண்ணன்' என்பதற்கு ஸமுத்திரத்தின் ஆழத்தைப் பார்க்கமுடியாதது போல், எம்பெருமானுடைய குணங்கள் முதலானவைகளை இவ்வளவுதான் என்று நினைக்கவும் சொல்லவும் முடியாதென்றும், அது உயர்ந்த ரத்தினங்களையும், முத்துக்களையும், அமிருதத்தையும் கொடுப்பது போல், அவன் கேட்கும் எதையும் கொடுப்பவன் என்றும் கருத்து.

(இ - ம்) நைந்த - நைந்தது : கடைக்குறை. (1)

---

அவ—இந்த பாகவத ஸம்ருத்தியை ஸேவிப்பதற்கு எல்லாரையும் கூப்பிடுகிறார் :—

**கண்டோங் கண்டோங் கண்டோங் கண்ணுக் கினியன கண்டோந்**
**தொண்டீ ரெல்லீரும் வாரீர் தொழுது தொழுதுநின் றார்த்தும்**
**வண்டார் தண்ணந் துழாயான் மாதவன் பூதங்கள் மண்மேற்**
**பண்டான் பாடிநின் றாடிப் பரந்து திரிகின் றனவே.** (உ)

(ப - ரை) **வண்டு ஆர் - வண்டுகள் நிறைந்த, தண் அம் துழாயான்-குளிர்ந்த அழகான துளசிமாலையையுடைய, மாதவன்-**

மாதவனுடைய, பூதங்கள் - பக்தர்கள், மண்மேல் - பூமியிலே, தான் - தாங்களாகவே, பண் - பாட்டுக்களை, நின்று பாடி-நீண்ட காலம் பாடி, ஆடி, பரந்து - எங்கும் பரவி, திரிகின்றன. கண்ணுக்கு, இனியன - இனியவைகளை, கண்டோம் - பார்த்தோம். தொண்டீர் எம்பெருமானுக்கு வேலை செய்கிறவர்களே! எல்லீரும் வாரீர் - எல்லாரும் வாருங்கள், நின்று - நிலையாயிருந்து, தொழுது தொழுது-அவர்களை ஸேவித்து ஸேவித்து, ஆர்தும் - ஸந்தோஷத்தால் கத்துவோம்.

(கருத்து) வண்டுகள் நிறைந்து குளிர்ந்து அழகாயிருக்கிற துளஸிமாலையையுடைய மாதவனிடத்தில் பக்தியுள்ளவர்கள் நிலையாயிருந்து அவன் விஷயமான பாட்டுக்களைப் பாடி, ஸந்தோஷத்தாலே கூததாடி எங்குமிருந்துகொண்டு திரிகிறார்கள். இதுவரையில் பூமியில் விஷ்ணுபக்தர்கள் இல்லாமல் இருந்ததைப் பார்தது நாம் பட்ட வருததம எல்லாம் திரும்படி கண்ணுக்கு இனிமையுள்ள இதைப் பார்த்தோம். எமபெருமானுடைய தாஸர்களே! எல்லாரும் வாருங்கள் நடுவில் விட்டுப் போகாமல் அவர்களை ஸேவிதது ஸேவித்து ஸந்தோஷததால் கத்துவோம்.

(இ - ம்) ஆர்த்தும் - தும் எதிர் காலம் காட்டும் தன்மைப் பன்மை விகுதி. (2)

---

திரியுங் கலியுகம் நீங்கித் தேவர்கள் தாமும் புகுந்து
பெரிய கிதயுகம் பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருக
கரிய முகில்வண்ண னெம்மான் கடல்வண்ணன் பூதங்கள் மண்மே
லிரியப் புகுந்திசை பாடி யெங்கு மிடங்கொண் டனவே. (௩)

(ப - ரை) திரியும் கலியுகம் - தர்மங்கள் எல்லாம் அதர்மங்களாக ஆகும்படியான கலியுகம், நீங்கி - போய், பெரிய - பெரிதான, கிதயுகம் பற்றி - கிருதயுகம் வந்து சேர்ந்து, தேவர்களும் - நிததியஸூரிகளும், தாமும் - தாங்களாகவே, புகுந்து, பேரின்ப வெள்ளம் பெருக - பெரிய ஆநந்தப் பிரவாஹம் பெருகும்படியாக, கரிய முகில் வண்ணன் - நீலமேகம்போன்ற வர்ணமுள்ளவனாய், எம்மான் - ஸ்வாமியாய், கடல் வண்ணன் - ஸமுத்திரத்தின் ஸ்வபாவத்தை உடையவனாய் இருக்கிற எம்பெருமா

னுடைய, பூதங்கள் - பக்தர்கள், மண்மேல் - பூமியிலே, இரிய - ஸந்தோஷ த்வநி யுண்டாகும்படி, புகுந்து, இசை பாடி - கானத்தைப் பாடி, எங்கும் - எல்லா இடத்தையும், இடங்கொண்டன - தங்களுக்கு இருப்பிடமாகக் கொண்டார்கள்.

(கருத்து) நல்லதைக் கெட்டதாகச் செய்யும் கலியுகம் நம்மை விட்டுப்போயிற்று. மற்ற யுகங்கள் நடுவில் வராதபடி கிருதயுகமாகவே இருக்கும்படியும், நித்தியஸூரிகள் தாமாகவே வந்து மிகுந்த ஆநந்தத்தை அடையும்படியாகவும், நீலமேகம்போன்றவனாய் ஸ்வாமியாய் ஸமுத்திரத்தின் ஸ்வபாவத்தை உடையவனாய் இருக்கிற எம்பெருமானுடைய பக்தர்கள், ஸந்தோஷ தவநி எங்கும் உண்டாகும்படி எங்கும் வந்து புகுந்து, பூமி முழுவதையும் தங்களுக்கு இருப்பிடமாகச் செய்துகொண்டார்கள். அவனுடைய தாஸர்களே! எல்லாரும் வாருங்கள். (3)

---

இடங்கோள் சமயத்தை யெல்லா மெடுத்துக் களைவன போலே
தடங்கடற் பள்ளிப் பெருமான் றன்னுடைப் பூதங்க ளேயாயக்
கிடந்து மிருந்து மெழுந்துங் கீதம் பலபல பாடி
நடந்தும் பறந்துங் குனித்து நாடகஞ் செய்கின் றனவே. (ச)

(ப - ரை) இடம் கொள் - பூமி முழுவதையும் எடுத்துக் கொண்ட, சமயத்தை எல்லாம் - வேதத்துக்கு விரோதமான எல்லா மதங்களையும், எடுத்துக் களைவனபோல - பிடுங்கி எறிவதுபோல, (கண்டித்து அவைகளை ஒருவரும் நம்பாதபடி செய்வார்கள் என்று எணணுமபடி), தடம கடல் பள்ளி - விசாலமான திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கிற, பெருமான் தன்னுடை - ஸ்வாமியினுடைய, பூதங்களே ஆய் - பக்தர்களே எங்கும் இருக்கிறவர்களாய், கிடந்தும் இருந்தும் எழுந்தும் - படுத்துக்கொண்டும் உட்கார்ந்துகொண்டும் நினறுகொணடும், பலபல கீதம பாடி நடந்தும், பறந்தும் குனித்தும - கூத்தாடியும், நாடகம் - நாடகத்தை (இவ்விதமான வேலைகளை), செய்கின்றன - செய்கிறார்கள்.

(கருத்து) பூமி எங்கும் வியாபித்து இருக்கும் வேதத்துக்கு விரோதமுள்ள மதங்களைப் பிடுங்கி எறிந்துவிடுவார்கள்

*என்று என்னும்படி விசாலமான திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கிற எம்பெருமானுடைய பக்தர்கள், எங்கே பார்த்தாலும் காணும்படி இருந்து அவனுடைய குணங்களை அநுபவித்து, அதினாலுண்டான ஸந்தோஷத்தினால் தலை கால் தெரியாமல் படுத்துக்கொண்டும், உட்கார்ந்துகொண்டும், நின்றுகொண்டும் பலபல கானங்களைப் பாடிக்கொண்டு நின்றும கூத்தாடியும் இப்படிப் பார்க்கத்தகுந்த பல வேலைகளைச் செய்கிறார்கள். தொண்டா! எல்லாரும் வாருங்கள்.* (4)

---

செய்கின்ற தென்கண்ணுக் கொன்றே யொக்கின்ற திவ்வுல கத்து
வைகுந்தன் பூதங்க ளேயாய் மாயத்தி னாலெங்கும் மன்னி
யையமொன் றில்லை யரக்க ரசுரா பிறந்தீருள் ளீரே
லுய்யும் வகையில்லை தொண்டீ ரூழி பெயர்த்திடுங் கொன்றே. (ரு)

*(ப - ரை) செய்கின்றது - (விஷ்ணு பக்தர்கள்) செய்கிற வேலையானது, என கண்ணுக்கு, ஒன்றே ஒக்குகின்றது - ஒரே வேலைபோல விளங்குகிறது, (அது எது என்றால்), இ உலகத்து - இந்த உலகத்திலே, மாயத்தினால் - ஆச்சரியமான வேலைகளாலே, (வேலைகள் உண்டாவதற்காக) வைகுந்தன் பூதங்களேயாய் - எம்பெருமானுடைய பக்தர்களே எங்கும் நிறைந்து, எங்கும் மன்னி- எங்கும் நிலையாய் நின்று, அரக்கர் அசுரர் - ராக்ஷஸர்களாகவும் அஸுரர்களாகவும், பிறந்தீர் உள்ளீரேல் - பிறந்த நீங்கள் இருந்தால, உய்யும் வகையில்லை - உங்களுக்குப் பிழைக்கும் வழியில்லை, தொண்டர்கள்- சபலமுள்ளவர்களே! (எம்பெருமானையும் அவன் பக்தர்களையும் தவிர வேறு விஷயங்களில ஆசை உள்ளவர்களே!) கொன்று - உங்களைக் கொன்று, ஊழி - கலியுகத்தை, பெயர்த்திடும் - மாற்றி கிருதயுகமாகச் செய்வார்கள், ஐயம் ஒன்று இல்லை - இதில் ஸம்சயமில்லை.*

*(கருத்து) விஷ்ணு பக்தர்கள் செய்கிற வேலையைப் பார்த்தால் அவர்கள் ஒரே வேலையைச் செய்வதாக எனக்குத் தோன்றுகிறது. அது எது என்றால், அவர்கள் இந்த உலகத்தில் நிறைந்து எங்கும் நிலையாயிருந்து ரஜோகுணத்துடனும் தமோகுணத்துடனும் பிறந்தவர்களைக் கொன்று இந்தக் கலியுகத்தைக் கிருதயுக*

மாக மாற்றிவிடப்போகிறார்கள். இதில் ஸந்தேஹமில்லை. ஆகை யால் இந்தக் குணங்களுடன் பிறந்திருக்கிறவர்களே! உங்களுக் குப் பிழைப்பதற்கு வழியில்லை.

(இ - ம்) மாயத்தினால் - ஆல் என்கிற மூன்றாம் வேற்றுமை உருபு - பிரயோஜநத்தைச் சொல்லுகிறது; மாயம் உண்டாவதற் காக என்று பொருள். (5)

---

கொன்றுயி ருண்ணும் விசாதி பகைபசி தீயன வெல்லா
நின்றிவ் வுலகிற் கடிவா னேமிப் பிரான்றமர் போந்தார்
நன்றிசை பாடியுந் துள்ளி யாடியு ஞாலம் பரந்தார்
சென்று தொழுதுய்மின் தொண்டீர் சிந்தை யைச்செந் நிறுத்தியே.

(ப - ரை) நேமி பிரான் தமர் போந்தார் - சக்ராயுதத்தை உடைய உபகாரகனான எம்பெருமானுடைய தாஸர்களாக ஆன வர்கள், கொன்று - (உடம்பைக்) கொன்று, உயிர் உண்ணும் - பிராணனைச் சாப்பிடுகிற, விசாதி - வியாதிகள், பகை -(மனதைத் துன்பப்படுத்துகிற) பகை முதலானவைகள், பசி, தீயன எல்லாம்- இவ்விதங்களான எல்லாக் கெடுதல்களையும், இ உலகில் நின்று - இந்த உலகத்திலிருந்து, கடிவான் - போக்குவதற்காக, நன்று இசை பாடியும் - நல்ல கானங்களைப் பாடியும், துள்ளி ஆடியும், ஞாலம் பரந்தார் - பூமியில் எங்கும் நிறைந்திருக்கிறார்கள். தொண்டீர் - வேறு பலன்களிலும், அதற்காக வேறு தேவதை களிடத்திலும் ஆசையுள்ளவர்களே! சிந்தையை - உங்களுடைய மனதை, செம்மை நிறுத்தி - செவ்வையாய் நிறுத்தி, சென்று - விஷ்ணுபக்தர்களோடு கூடப்போய், தொழுது - எம்பெருமானை ஸேவித்து, உய்மின் - பிழைத்திருங்கள்.

(கருத்து) எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவர்கள், வியாதி களையும், மனதைத் துன்பப்படுத்துகிற பகை முதலானவைகளை யும், பசியையும், இவ்விதமான வேறு கெடுதல்களையும் இந்த உல கத்திலிருந்து போக்குவதற்காக கானங்களைப் பாடிக்கொண்டும், ஸந்தோஷத்தால் துள்ளிக் கூத்தாடிக்கொண்டும், எங்கும் நிறைந் திருக்கிறார்கள். வேறு பிரயோஜநங்களிலும், அதற்காக வேறு

தேவதைகளிடத்திலும் ஆசையுள்ளவர்களே! உங்கள் மனதை அவைகளிடம் இருந்து திருப்பி, அதை எம்பெருமானிடத்தில் நிற்கும்படி செய்து விஷ்ணு பக்தர்களுடன் கூடப்போய், வேறு பிரயோஜநங்களில் ஆசையில்லாமல எம்பெருமானை ஸேவித்துப் பிழைத்திருங்கள்.

(இ - ம்) கடிவான் - கடிய . வினையெச்சம். (6)

---

அவ—வேறு தேவதைகளை விடவேண்டும்படி சொல்லுகிறீரே, அவர்கள் எங்களை ரக்ஷிக்கவில்லையா என்றால், இதில் பதில் சொல்லுகிறார்:—

நிறுத்திநும் முள்ளத்துக் கொள்ளுந் தெய்வங்க ளும்மையுய் யக்கொ
மறுத்து மவனோடே கண்டீர் மார்க்கண் டேயனுங் கரியே [ண்
கறுத்த மனமொன் றும் வேண்டா கண்ணனல் லாற்றெய்வ மில்லை
யிறுப்பதெல் லாமவன் மூர்த்தி யாய வர்க்கே யிறுமினே. (எ)

(ப - ரை) நும் உள்ளத்து - உங்களுடைய மனதில், நிறுத்திக்கொள்ளும் - (ரக்ஷிக்கிறவர்களாக உங்களால் எண்ணப்படுகிற) தெய்வங்கள், உம்மை, உய்யக்கொள் - ரக்ஷிக்கிறது, மறுத்தும் அவனோடே - மறுபடியும் அவனோடே, (எம்பெருமானுடன் கூடவே இருந்து தான்) கண்டீர் - இது நிச்சயம், மார்க்கண்டேயனும் கரியே - இந்த விஷயத்தில் மார்க்கண்டேயனும் ஸாக்ஷி, கறுதத மனம் ஒன்றும் வேண்டாம் - (ஸந்தேஹத்தால்) கலங்கிய மனதுடன் கொஞ்சமும் இருக்கவேண்டாம். கண்ணன் அல்லால் தெய்வம் இல்லை, இருப்பது எலலாம் - கடமையாகக் கொடுப்பது எல்லாவற்றையும், அவர் மூர்ததியாயவர்க்கே - உங்கள் தெய்வங்களை உடம்புகளாகக் கொண்டிருக்கிற எம்பெருமானுக்கே, இறுமின் - ஸமர்ப்பியுங்கள்.

(கருத்து) உங்கள் மனதில் உங்களை ரக்ஷிக்கிறவராக எண்ணப்பட்ட தெய்வங்கள் உங்களை எம்பெருமானிடம் சிபார்சு செய்து அவனைக்கொண்டு ரக்ஷிக்கிறார்கள். இது நிச்சயம். இதை மார்க்கண்டேயனிடத்தில் பார்க்கலாம். அவனை ருத்திரன் ரக்ஷிக்கவில்லை. அவன் சிபார்சு செய்ய, எம்பெருமான் அவனை ரக்ஷித்தான். இந்த விஷயத்தில் உங்களுக்குக் கொஞ்சங்கூட

ஸந்தேஹம் வேண்டாம். கண்ணனைத் தவிர மேலான தெய்வம் கிடையாது. நீங்கள் கொண்டாடுகிற தெய்வங்கள் எம்பெருமானுக்கு உடம்புகள். ஆகையால், நித்தியமென்றும், நைமித்திகம் என்றும் காம்யமென்றும் சொல்லப்படுகிற எல்லா கர்மங்களிலும் நீங்கள் தேவர்களுக்கும் பிதருக்களுக்கும் கொடுப்பவைகளை எல்லாம் அவர்களுக்கு ஆத்மாவான எம்பெருமானுக்கே ஸமர்ப்பியுங்கோள்.

குறிப்பு:—இந்த உலகத்தார் செய்யும் ஆராதனத்தைப் பெற்றுக்கொண்டு அவர்கள் வேண்டினதைக் கொடுக்கிறவர்கள் இந்திரன், அக்கினி முதலான தேவர்கள் அல்லவா? இப்படி வேதம் சொல்லவில்லையா? என்றால், இது வேதத்தின் கருத்து அல்ல. இந்திரன், அக்கினி முதலான சொற்கள் உலக வழக்கப்படி இந்தப் பெயர்களாகச் சொல்லப்பட்ட தேவதைகளுக்கு ஆத்மாவான எம்பெருமானையே சொல்லுகின்றன. ஏனென்றால், அவனே அவர்களுக்குள்ளே இருக்கிறவன். மனிதன் தேவர்கள் என்கிற சொற்கள் உடம்புகளைச் சொல்லி அவைகளுக்குள்ளே இருக்கும் ஆத்மாக்களைச் சொல்லுவதுபோல, அந்த ஆத்மாக்களும் அவனுக்கு உடம்புகளாகவும் அவைகளுக்கு அவன் ஆத்மாவாகவும் இருப்பதால், ஆத்மாக்களுக்கும் ஆத்மாவான எம்பெருமானையே சொல்லுகின்றன. தேவதைகளைமாத்திரம் அந்த சொற்கள் சொல்லுவதாக எண்ணுகிறவர்கள் எம்பெருமான் என்று ஒருவன் இருப்பதாக அறியாதவர்கள்.

(இ - ம்) 'உய்யக்கொள் - உய்யக்கொள்ளுகிறது என்று பொருள். கொள் என்ற பகுதியே தொழிற்பெயராய் வந்திருக்கிறது. (7)

---

அவ—வேறு தேவதைகளே இந்த உலகத்தார் செய்யும் ஆராதநத்தைப் பெற்றுக்கொண்டு, அவர்களுக்கு வேண்டியதைக் கொடுக்கிறார்களே என்றால், இதில் பதில் அருளிச்செய்கிறார் :—

இறுக்கு மிறையிறுத் துண்ண வெவ்வுல குக்குந்தன் மூர்த்தி
நிறுத்தினான் றெய்வங்க ளாக வத்தெய்வ நாயகன் றானே
மறுத்திரு மாறவ னவன்றன் பூதங்கள் கீதங்கள் பாடி
வெறுப்பின்றி ஞாலத்து மிக்கார் மேவித் தொழுதுய்ம்மி னீரே. (அ)

(ப - ரை) இறுக்கும - உங்களால கொடுக்கக்கூடியதான, இறை - ஹவிஸ்ஸுக்களை, இறுதது - அந்தந்த தேவதைகளுக்குக் கொடுத்து, உணா - அநதந்த பலன்களை அநுபவிப்பதற்காகப் அ தெய்வம் நாயகன் தானே - அந்த தேவதைகளுக்கு யஜமான னை எம்பெருமானை, தன் மூர்த்தி-தன்னுடைய உடம்புகளான இந்திரன் முதலானவர்களை, எவ்வுலகங்களுக்கும் - எல்லா உலகங் களுக்கும், தெய்வங்களாக, நிறுததினான் - இருக்கும்படி செய் திருக்கிறான, மறு திரு மார்பன் அவன தன் - ஸ்ரீவத்ஸம் என் கிற மறுவைத திருமார்பிலே உடைய எம்பெருமானுடைய, பூதங்கள் - பக்தர்கள், கீதங்கள் பாடி, வெறுப்பு இன்றி - வெறுப் பில்லாமல, ஞாலதது - பூமியில், மிக்கார் - அதிகமாயிருக்கிறார் கள், நீா - நீங்கள, மேவி தொழுது - அவனிடத்தில பக்தி பணணி அவனை ஸேவிதது, உய்மின - பிழைததிருங்கள்.

(கருத்து) எமபெருமானே தன உடம்புகளாகிய தேவதை களை - நீங்கள் செய்யும ஆராதநததைப் பெற்றுக்கொண்டு உங்க ளுக்கு வேண்டியதைக் கொடுக்கும்படி - ஏற்பாடு செய்திருக் கிறான். ஸ்ரீவதஸம் என்கிற மறுவைத் திருமார்பினுடைய அவ னுடைய பக்தர்கள் காநங்கள் பாடிக்கொண்டு ஸம்ஸாரத்தில் இருக்கும்போதே அவனுடைய அநுபவமாகிய லாபம் கிடைத் திருப்பதாலே ஸம்ஸாரததில் வெறுப்பில்லாதவர்களாய் எங்கும் நிறைந்திருக்கிறார்கள். நீங்களும் வேறு பிரயோஜநங்களில் ஆசை இல்லாமல் அவனிடததிலேயே பக்தியைச் செய்து அவனை ஸேவிததுப் பிழையுங்கள்.

குறிப்பு :-(1) எம்பெருமானே இந்த ஏற்பாட்டைச் செய்து இருந்தால் அதை நாங்கள் விட்டுவிடலாமோ என்றால், இதற்குப் பதில் "மேவித தொழுது" என்கிற சொற்களால் ஆழ்வார் அருளிச் செய்கிறார். வேறு தேவதைகளை தேவதைகளாக ஏற்பாடு செய்தது மோக்ஷம் தவிர வேறு பிரயோஜநங்களைப் பெறுவதற்காக. மோக்ஷம் எனகிற பலனை எம்பெருமானே கொடுக்கவேண்டியது. வேறு பலன்களில் பல குற்றங்களிருப்ப தால் அவைகளை விட்டுவிட்டு அவனிடத்திலேயே பக்தி செய்து அவனையே ஸேவிக்கவேண்டுமெனறு சொல்லுகிறார். இதைச்

செய்தால்தான் பிழைப்புக் கிடைக்கும். இந்தப் பிழைப்பாவது ஒருபோதும் முடிவில்லாமல் எம்பெருமானை அநுபவித்து அவனுக்கு வேலை செய்வது.

(2) பாகவதர்கள் ஸம்ஸாரத்திலுள்ள தோஷங்களைப் பார்த்து, இதில் இருக்கிறோமே என்று துக்கப்படவேண்டுமே : அப்படித் துக்கப்படாமலிருப்பதற்குக் காரணம் ஸம்ஸாரததில் இருக்கும்போதே எமபெருமானுடைய அனுபவம் கிடைத்திருப்பது. இதை "வெறுப்பின்றி" என்று சொல்லியிருக்கிறது. (8)

---

மேவித் தொழுதுய்ம்மி னீர்கள் வேதப் புனித விருக்கை
நாவிற்கொண் டச்சுதன் றன்னை ஞான விதிபிழை யாமே
பூவிற் புகையும் விளக்குஞ் சாந்தமு நீரு மலிந்து
மேவித் தொழுமடி யாரும் பகவரும் மிக்க துலகே. (௯)

(ப - ரை) வேதம் - வேதங்களிலிருக்கிற, புனிதம் - பரிசுத்தங்களான, இருக்கை - (புருஷஸூக்தம் முதலான) மந்திரங்களை, நாவில்கொண்டு - நாக்காலே சொல்லி, ஞான விதி - பக்தி யோகத்தைச் செய்யும்படி விதிக்கிற சாஸ்திரத்தின் ஏற்பாட்டை, பிழையாமே - தப்பாமல், பூவில் புகையும் - பூவையுடைய தூபமும், விளக்கும் - தீபமும், சாந்தமும் - சந்தனமும், நீரும் - தீர்த்தமும், மலிந்து - அதிகமாயிருக்கும்படி ஸம்பாதித்து, அச்சுதன தன்னை மேவி - பிரீதியுடன் அவனையே வேண்டி, தொழும் - அவனை ஸேவிக்கும், அடியாரும் - தாஸர்களும், பகவரும் - பாகவதர்களும், (அவனுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டு இருக்கிறவர்களும) ஆகிய இவர்களாலே, உலகு மிக்கது - உலகம் நிறைந்திருக்கிறது. நீர்கள் - நீங்களும், மேவி - அவர்களைப்போல் பிரீதியுடன, தொழுது - அவனை ஸேவிதது, உய்ம்மின் - பிழையுங்கள்.

(கருத்து) எம்பெருமானுடைய பக்தர்களில் சிலர், புஷ்பம், தூபம், தீபம், சந்தனம், திருமஞ்ஜந தீர்த்தம் ஆகிய இவைகளை ஏராளமாக ஸம்பாதித்துக்கொண்டு, எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலானவைகளைச் சொல்லுகிற வேதத்தில் எம்பெருமானையே சொல்லுகிற சுத்தமான மந்திரங்களை வாயால் சொல்லிப்

பக்தியோகத்தை விதிக்கிற சாஸ்திரம் சொன்னபடி அவனையே ஸேவிக்கிறார்கள். வேறு சிலர் அவனுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டு இருக்கிறார்கள். இந்த இரண்டுவிதமான பக்தர்களாலே உலகம் நிறைந்திருக்கிறது. அவர்களைப்போல் நீங்களும் வேறு பிரயோஜநங்களில் ஆசையில்லாமல் அவனை ஸேவித்துப் பிழைத்திருங்கள்.

(இ - ம்) பூவில்-இல் என்பதற்கு உடைய என்று பொருள் பூவில் புகை - பூவுடன் கூடின புகை என்று பொருள். (9)

---

மிக்க வுலகுக டோறும் மேவிக்கண் ணன்றிரு மூர்த்தி
நக்க பிரானோ டயனு மிந்திர னும்முத லாகத்
தொக்க வமரர் குழாங்க ளெங்கும் பரந்தன தொண்டீ
ரொக்கத் தொழகிற்றி ராகிற் கலியுக மொன்று மில்லையே. (௧0)

(ப - ரை) நக்க பிரானோடு - அரையில் துணியில்லாமல், தன்னையடுத்தவர்களுக்கு உபகாரம் செய்கிற சிவனுடன், அயனும் - பிரம்மாவும், இந்திரனும், முதலாக - இவர்கள் முதலான, தொக்க - கூட்டமாய்ச் சேர்ந்த, அமரர் குழாங்கள் - தேவக்கூட்டங்கள், கண்ணன் திருமூர்த்தி - கண்ணனுடைய திருமேனியை, மேவி - பக்திபண்ணி, மிக்க உலகுகள் தோறும் - ஸமிருத்தியுள்ள எல்லா உலகங்களிலும், எங்கும், பரந்தன - விஸ்தாரமான ஐசுவரியத்தை அடைந்திருக்கிறார்கள். தொண்டீர் - வேறு பிரயோஜநங்களில் ஆசையுள்ளவர்களே! ஒக்க தொழ - அவர்களுடன்கூட எம்பெருமானை ஸேவிக்க, கிற்றிராகில் - சக்தியுள்ளவர்கள் ஆனால், கலியுகம் ஒன்றும் இல்லையே - கலியுகம் கொஞ்சமுமிருக்காது.

(கருத்து) சிவன், பிரம்மா, இந்திரன் முதலான தேவக்கூட்டங்கள் எம்பெருமானிடத்தில் பக்திபண்ணி, அவனுடைய அநுக்கிரஹத்தால் தங்கள் தங்கள் ஐசுவரியத்தை அடைந்திருக்கிறார்கள். வேறு பிரயோஜநங்களில் ஆசையுள்ளவர்களே! நீங்களும் அந்த ஆசையை விட்டு அவர்களைப்போல் எம்பெருமானை ஸேவித்தால், கலியுகமானது கொஞ்சமும் இராது. (10)

---

கலியுக மொன்றுமின் றிக்கே தன்னடி யார்க்கருள் செய்யு
மலியுஞ் சுடரொளி மூர்த்தி மாயப் பிரான்கண்ணன் றன்னைக்
கலிவயற் றென்னங் குருகூர்க் காரிமா றன்சட கோப
னொலிபுக ழாயிரத் திப்பத் துள்ளத்தை மாசறுக்குமே. (கக)

*(ப - ரை) தன் அடியார்க்கு - தன் தாஸர்களுக்கு, (அவர்கள் கேட்டுக்கொண்டால்) கலியுகம் ஒன்றும் இன்றிக்கே - கலியுகத்தின் தோஷம் கொஞ்சமுமில்லாதபடி, அருள் செய்யும் - கிருபை செய்யுமவனாய், மலியும் சுடர் - மேன்மேல் வளாகிற காந்தியையுடைய, ஒளி மூர்த்தி - தேஜஸ் நிறைந்த திருமேனியை உடையவனாய், மாயம் பிரான் - ஆச்சரியமாய் இருக்கிறவனாய், உபகாரங்களைச் செய்கிறவனாயிருக்கும், கண்ணன தன்னை, கலி வயல் - ஸந்தோஷத்தால் உண்டாகும் சப்தங்கள் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட, தென் அம் குருகூர் - தெற்கு தேசத்தில் இருக்கிற அழகான குருகூரில் அவதரித்த, காரிமாறன சடகோபன் சொல் - ஆழ்வாருடைய சொல்லான, ஒலி புகழ் - விளங்குகிற கீர்த்தியையுடைய, ஆயிரதது - ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, இ பத்து - இந்தப் பத்துப் பாட்டுககள், உள்ளத்தை - மனதை, மாசு அறுக்கும - தோஷங்களைப் போகும்படி செய்யும்.*

*(கருத்து) தன் தாஸர்கள் வேண்டினால், அவர்களிடததில் கலியின் தோஷமில்லாதபடி கிருபை செய்கிறவனாய் மிகுந்த காந்தியோடுகூடிய திருமேனியை உடையவனாய், ஆச்சரியமாய் இருக்கிறவனாய், உபகாரம் செய்கிறவனாய் இருக்கிற கண்ணனைப் பற்றி ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே இந்தப் பத்துப் பாட்டுக்கள் எம்பெருமானிடததில் பக்தியுண்டாவதற்கு விரோதிகளாய் மனதிலிருக்கும் தோஷங்களைப் போகும்படி செய்யும். (11)*

[illegible] ॥௯௦॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய பத்து விதமான குணங்களிலும் லீலைகளிலும் ஈடுபட்ட பக்தர்களைக் கொண்டு இந்த உலகத்தின் பாபத்தை அவன் போக்குகிறான் என்று ஆழ்வார் அருளிச்செய்கிறார். அந்தக் குணங்களும் லீலைகளுமாவன :—(1) மரகதம்போல அழகான காந்தியுள்ளவனாய் இருப்பது ; (2) தேனுள்ள துளசிமாலையால் அலங்கரிக்கப்பட்டு இருப்பது ; (3) வேண்டியதைக் கொடுப்பவனாய் இருப்பது ; (4) வைகுந்தத்திலும் திருப்பாற்கடலிலுமிருப்பது ; (5) சக்கராயுதமுள்ளவனாயிருப்பது ; (6) எல்லாரையும் தன் வசப்படுத்திக் கொண்டிருப்பது ; (7) தேவதைகளை வேறு பலன்களைக் கொடுப்பதற்காக ஏற்பாடு செய்திருப்பது ; பிராட்டியுடன் கூடியிருப்பது ; (8) தன்னை ஆச்ரயித்தவர்களைக் கைவிடாமலிருப்பது ; (9) எல்லாரையும் ரக்ஷிப்பது ; (10) எல்லாக் கர்மங்களாலும் ஆராதிக்கப்படுமவனாயிருப்பது.

குறிப்பு :—இந்தச் சுலோகத்தின்படி, எட்டாம் பாட்டில் "மறுதிருமார்பன்" என்பதற்கு மறுவையும் பிராட்டியையும் மார்பிலுடையவன் என்று பொருள்.

---

# மூன்றும் திருவாய்மொழி.

அவ—மண்ணையிருந்தில் (4–4) எம்பெருமானைக் கண்களாலே பார்த்து கைகளாலே கட்டிக்கொள்ள முடியாமல் ஆழ்வார் புத்தி கலங்கி வருத்தப்பட்டார். வீற்றிருந்தில் (4–5) வைகுந்தத்தில் எம்பெருமான் தான இருந்த இருப்பைக்காட்ட அதைக்கொண்டு ஸந்தோஷப்பட்டு, தனக்கு என்ன குறைவு உண்டு என்று பெருமைப்பட்டார். தீரபபாரையில் (4–6) இப்படி அவனை அநுபவிக்கும்போது அப்போதே * பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமையால் மோஹம் அடைந்தார். பிறகு எம்பெருமானுடைய திருநாமங்களைச் சொல்லக் கேட்டு அவருக்கு நினைவு திரும்பி வந்தது; உடனே எம்பெருமானைவிட்டுப் பிரிந்த துக்கம் நன்றாய்த தோன்றி அதைப் பொறுக்கமுடியாமல் அவனைச் சீலமில்லாவில் (4–7) கூப்பிட்டார். அவன் வரவில்லை. ஏறாளுமில் (4–8) அவன் தம்மை உபேக்ஷித்ததாக எண்ணி, அவனால் உபேக்ஷிக்கப்பட்டவைகள் தமக்கு வேண்டாமென்று சொன்னார். இந்த அவஸ்தையில் இந்த உலகத்தில துணையாக யாராவது இருப்பாரோ என்று பார்த்தார். இந்த உலகத்தார் விஷயங்களில் மனதைச் செலுத்தி அவைகள் கிடைத்தால் ஸந்தோஷமும், அவைகள் கிடைககாவிட்டால் துக்கமும் அடைந்திருப்பதைப் பார்த்தார். அவர் துக்கம் இரட்டித்தது. அவர்களுடன்கூட இருக்காமல் தம்மை அழைத்துக்கொள்ளவேண்டும் என்று நண்ணாதாரில் (4–9) எம்பெருமானை வேண்டினார். எம்பெருமான் இதை உடனே செய்யவில்லை. இனி அவர்களுடன் சேர்ந்திருப்பதை விலக்கமுடியாது என்று நினைத்து, அவர்களை வைஷ்ணவர்களாகப் பண்ணிக்கொண்டு அவர்களுடன்கூட இருப்போம் என்று, அவர்களுக்கு எம்பெருமான் ஸர்வேசுவரனாய் இருந்து, ஸுலபனாயிருப்பதை, ஒன்றுந்தேவில் (4–10) உபதேசம் செய்தார். இதைச் செய்கையில், எம்பெருமான் தமக்குச் செய்த உபகாரங்கள் நினைவுக்கு வந்தன. அதைச் சொல்லி,

---

* பாஹ்யஸம்ச்லேஷம் என்பது—கண்களாலே பார்த்துப்பேசி, கைகளாலே கட்டிக்கொள்வது.

கையார்சக்கரத்தில் (5–1) ஸந்தோஷப்பட்டார். ஒன்றுந்தேவில் (4–10) தாம் செய்த உபதேசத்தால் சிலர் வைஷ்ணவர்களானதைப் பார்த்து அவர்களைப் பொலிக பொலிக வில (5–2) கொண்டாடினார். இப்படி வேறு வியாபாரத்தாலே தம்முடைய துக்கத்தை மறந்திருந்தார். அந்தத் துக்கம் திரும்பி வந்து இந்தத் திருவாய்மொழியில் வருத்தப்படுகிறார்.

இதில் எம்பெருமானுக்குத் தயையில்லை என்று காட்டி, அவனுக்குப் பழியை உண்டுபண்ணி, அவனைத் தம்மிடம் வரவழைத்து, அவனோடு சேருவோம் என்று நினைத்துத் தன்னை நாயகியாகப் பாவித்து மடலூர்ந்தாகிலும் எம்பெருமானை அடையவேண்டுமென்று எண்ணி, அதற்கு ஆரம்பத்தைச் செய்ய, தோழியானவள் இதைச் செய்யத்தகுந்த குணங்கள் அவனிடம் இருக்கிறதா? இதை நீ செய்யலாமா? இதை நீ செய்தால் உலகத்தார் பழிக்கமாட்டார்களா? என்று சொல்ல, அதற்குப் பதில் இதில் அருளிச்செய்கிறார்.

மடலூருகையாவது—ஒரு ஸ்திரீயும் ஒரு புருஷனும் தற்செயலாய் ஸந்தித்து, ஒருவர்மேல் ஒருவருக்கு ஆசையுண்டாய் அவர்கள் சேரமுடியாமல் துக்கம் மேலிட்டபோது புருஷன் ஸ்திரியை ஒரு படத்தில் எழுதி, அதையே பார்த்துக்கொண்டு திரிகை. அப்போது ராஜா ஸ்திரீகளைச் சேர்ந்தவர்களைக் கூப்பிட்டு விசாரித்து அந்த ஸ்திரியை அவனுடன் சேர்ப்பது; அல்லது, பந்துக்களை விட்டுவிட்டு அவள் தானாக வந்து சேருவது; அல்லது தோழி இருவரையும் கூட்டுவது. ஒன்றும் முடியாமல் போனால் உயிரைவிட்டுத் துக்கத்தைப் போக்குவது இப்படி ஏதாவது ஒருவழியாய் பரிஹாரம் கிடைக்கும். இந்த மடலூருகையைப் புருஷனே செய்யவேண்டியது, ஸ்திரீ செய்யக்கூடாது என்று தமிழ் வித்வான்களின் தீர்மானம். இங்கே ஆழ்வார் தன்னை ஸ்திரீயாகப் பாவித்து மடலூருகையை ஆரம்பிக்கையால் அந்த வித்வான்களின் ஆக்ஷேபத்தைக் கவனிக்க வேண்டியதில்லை என்று பட்டர் அருளிச்செய்தாராம்.

(கலித்துறை.)

மாசறு சோதி யென்செய்ய வாய்மணிக் குன்றத்தை
யாசறு சீலனை யாதி மூர்த்தியை நாடியே
பாசற வெய்தி யறிவி ழந்தெனை நாளைய
மேசறு மூரவர் கவ்வை தோழீ யென்செய்யுமே. (க)

(ப - ரை) தோழி! மாசு அறு சோதி - குற்றமில்லாத தேஜஸ்ஸை உடையவனாய், என் செய்ய வாய் - என்னுடைய சிவந்த திருப்பவளத்தை உடையவனாய், மணி குன்றத்தை - ரத்ந பர்வதம்போல் எனக்கு இனியனாய், ஆசு அறு சீலனை - குற்றமில்லாத ஸௌசீல்யம் என்கிற குணமுடையவனாய, ஆதி - முந்தினவனாய் (என்னிடத்தில் மிகுந்த ஆசையால் தானே முன்னால் வந்து சேர்ந்தவனாய் இருக்கிற), மூர்த்தியை - ஸ்வாமியை, நாடியே - (இடைவிடாது) தேடி, பாசு அற எய்தி - அவனிடத்தில் அதிகப் பற்றுதலை மிகவும் அடைந்து, அறிவு இழந்து - அறிவை இழந்து, எனை நாளையம் - எத்தனைக காலத்தை நாம் உடையவர்கள், ஏசு அறும் - எனக்குப் பழியைச் சொல்லுவதில் துணிந்தவர்களான, ஊரவர் - ஊரிலிருக்கிறவர்களுடைய, கவ்வை - பழியைச் சொல்லும் கூச்சலானது, என் செய்யும் - எதைச் செய்யும்?

(கருத்து) குற்றமில்லாத தேஜஸ்ஸையுடையவனாய், சிவந்த திருப்பவளத்தையுடையவனாய், ரத்நத்தினால் ஒரு பர்வதம் செய்யப்பட்டிருந்தால் எவ்வளவு இனியதாயிருக்குமோ, அதுபோல் இனியவனாய், தோஷமில்லாத ஸௌசீல்யம் என்கிற குணத்தை உடையவனாய், தானே முன்னாலே வந்து என்னுடன் சேர்ந்தவனாய் இருக்கிற என் ஸ்வாமியை இடைவிடாமல் தேடியும், அவனை அடையாமல் இன்னதைச் செய்யலாம், இன்னதைச் செய்யக்கூடாது என்கிற அறிவு போய் எத்தனை காலமாயிற்று? தோழி! ஊரிலிருக்கிறவர்கள் எம்பெருமானிடத்தில் ரஸமறியாதவர்கள். அவர்கள் எனக்குப் பழி சொல்லுவதில் துணிந்தவர்கள். அவர்கள் எனக்குப் பழி சொல்லிக் கூச்சல் போட்டால் அது எனக்கு என்ன செய்யும்.?

குறிப்பு :—(1) எம்பெருமான் தாழ்ந்த என்னுடன் சேர்ந்திருப்பது என் பிரயோஜநத்துக்காக அன்று; அது தனக்கே லாபமாக எண்ணிக்கொண்டு வந்து சேர்ந்தான் என்று கருத்து.

(2) உலகத்தார் எம்பெருமான் விஷயத்தில் ரஸமறிந்தவராயிருந்து, எனக்கும் அறிவிருந்தால், அவர்கள் சொல்லும் பழியைக் கேட்டு நான் வருத்தப்படவேண்டியது. அவர்களோ அவனிடத்தில் ரஸமறியாதவர்கள். எனக்கோ அறிவில்லை. ஆகையால் பழி சொல்லுவது எனக்கு என் செய்யும்? இது கெடுதலாகுமோ? எனக்குக் கீர்த்தியை யன்றோ உண்டு பண்ணும்?

(இ - ம) நானையம் - நாணமுடையவர்கள் ஆகிறோம். குறிப்பு வினைமுற்று (1)

---

அவ—'நீ என்ன சொன்னாலும், உலகத்தார் சொல்லும் பழியை விலக்கவேண்டும்' என்று தோழி சொல்ல, அதை விலக்கவேண்டிய காலம் போய்விட்டது என்று இதில் பதில் சொல்லுகிறாள்.—

என்செய்யு மூரவர் கவ்வை தோழீ யினிநம்மை
யென்செய்ய தாமரைக் கண்ண னென்னை நிறைகொண்டான்
முன்செய்ய மாமை யிழந்து மேனி மெலிவெய்தி
யென்செய்ய வாயுங் கருங்கண் ணும்பயப் பூர்ந்தவே (உ)

(ப - ரை) என் செய்ய தாமரை கண்ணன் - என்னுடைய செந்தாமரை இதழ்போன்ற திருக்கண்களையுடைய எம்பெருமான், என்னை நிறைகொண்டான் - என்னுடைய பூர்த்தியை அபஹரித்துக்கொண்டான். (அதாவது மனதிலிருப்பதை ஒருவரும் அறியாதபடி இருக்கிற அடக்கம் போய்விட்டது.) முன் - முன்பு (அவன் என்னுடன் சேர்ந்த காலத்தில் உண்டாயிருந்த), செய்ய மாமை - நல்ல காந்தியை, இழந்து, மேனி மெலிவு எய்தி - உடம்பு இளைப்பை அடைந்து, என் செய்ய வாயும் - என் சிவந்த வாயையும், கரும் கண்ணும் - கறுத்த கண்களையும், பயப்பு - வேறு வர்ணமானது, ஊர்ந்த - பரவிற்று, தோழி, இனி - இப்படியான பின்பு, ஊரவர் கவ்வை - ஊரிலிருக்குமவர்கள் சொல்லும் பழியானது, நம்மை என் செய்யும்?

(கருத்து) செந்தாமரைப்பூப்போன்ற கண்களின் அழகால் என்னைத் தோற்பித்து என் அடக்கத்தை அபஹரித்துக்கொண் டான். முன்னால் அவனுடன் சேர்ந்த காலத்தில் உண்டாயிருந்த என்னுடைய காந்தி போய்விட்டது என்னுடைய உடம்பும் இளைத்துவிட்டது. என்னுடைய சிவந்த கீழுதடும் கறுப்பான கண்களும் வெளுத்துப்போய்விட்டன. ஆகையால், பழியை விலக்கும் காலம் போய்விட்டது. தோழி! இப்படியான பின்பு ஊரார் சொல்லும் பழி நம்மை என்ன செய்யும்?

குறிப்பு:—தம்மைப்போல் தோழிக்கும் துக்கம் உண்டானதாக நினைத்து 'நம்மை' என்று பாட்டில் பன்மைச்சொல் சேர்க்கப்பட்டிருக்கிறது.

(இ - ம்) ஊர்ந்த - ஊர்ந்தது ˙ கடைக்குறை (2)

---

அவ—ஆனபோதிலும் மடலூருகை நமக்குத் தகாது என்று தோழி சொல்ல, இதில பதில் சொல்லுகிறார்:—

ஊர்ந்த சகட முதைத்தபா தத்தன் பேய்முலை
சாாந்து சுவைத்த செவ்வாய னென்னை நிறைகொண்டான்
பேர்ந்தும் பெயர்ந்து மவனோ டன்றியோா சொல்லிலேன்
தீா்ந்தவென் தோழீ யென்செய்யு மூரவா கவ்வையே, (௩)

(ப - ரை) ஊர்ந்த சகடம் - (அஸுரன் உள்ளே புகுந்து இருந்ததினாலே) ஊர்ந்து வந்த வண்டியை, உதைத்த பாதத்தன் - அதை உதைத்து முறித்த திருவடிகளை உடையவனாய், பேய் முலை - பூதனை என்கிற பேயின் ஸ்தநத்தை, சார்ந்து - தாயார் ஸ்தநத்திலே சாருமாப்போலே சார்ந்து, சுவைத்த - ருசியுடன் சாப்பிட்ட, செவ்வாயன்-சிவந்த திருப்பவளத்தை உடையவனாய் இருக்கிற எம்பெருமான், என்னை நிறைகொண்டான் - என்னுடைய அடக்கத்தை அபஹரித்துக்கொண்டான், பேர்ந்தும்பெயர்ந்தும் - போயும் வந்தும், (அவனை விட்டுப் பிரிந்தாலும பிரியாதிருந்தாலும்), அவனோடு அன்றி - அவன் விஷயமான வார்த்தையைத் தவிர, ஓர் சொல்லிலேன் - வேறு ஒரு வார்த்தையையும் கேட்க

மாட்டேன், தீர்ந்த - நான் நினைத்த வேலையைச் செய்ய எனக்கு முன்னாலே செய்யத் துணிந்த, என் தோழீ! ஊரவர் கவ்வை - ஊரார் பழியானது, என் செய்யும்?

(கருத்து) எம்பெருமான் வண்டியைக் காலால் உதைத்து முறித்து, பூதனையின் முலையைச் சாப்பிட்டு அவளைக் கொன்றது முதலான தான் செயத லீலைகளை எனக்குக் காட்டி என் அடக்கத்தை அபஹரித்துக்கொண்டான். இனி அவனை விட்டுப் பிரிந்தாலும் அவனை விட்டுப் பிரியாதிருந்தாலும் அவன் விஷயமான வார்தை தவிர, வேறு வார்த்தை என் காதில் படாது. நான் நினைத்ததை எனக்கு முன்னாலே செய்யத் துணிந்தவளல்லவா நீ? தோழீ! நீ என்னை இப்படித் தடுக்கலாமா? ஊரார் சொல்லும் பழி என்ன செய்யும்?

குறிப்பு :—நான் நினைத்ததைச் செய்ய சக்தியுள்ளவளாய் இருந்தால், நீ சொன்னபடி மடலூருவதை விட்டுவிடலாம். நானோ அவன்செய்த லீலைகளையும், அவைகளால் அவன் காட்டும் குணங்களையும் பார்தது அவனுக்கு உட்பட்டுவிட்டேன். என்னால் என்ன செய்யமுடியும்? (3)

---

அவ—நீ மிகவும் வருத்தமடைந்திருக்கையில், தன்னுடைய *லோபதனத்தாலே தன்னையுனக்குக் காட்டாமலிருக்க, அவனை ஆசைப்படலாமா? என்று தோழி சொல்ல, அதற்குப் பதில் சொல்லுகிறாள்.—

ஊரவர் கவ்வை யெருவிட் டன்னைசொல் னீர்படுத்தி
யீரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல்பு ரைய விளைவித்த
காரமர் மேனிநங் கண்ணன் தோழீ கடியனே. (ச)

---

*லோபம் என்பது — பொருளைக் கொடுக்கவேண்டியவர்கள் விஷயத்தில் அதில் ஆசையினால் கொடுக்காதிருக்கும் தன்மை.

(ப - ரை) ஊரவர் கவ்வை - ஊரார் பழியாகிய, எரு இட்டு - எருவைப் போட்டு, அன்னை சொல் - தாயார் சொல்லாகிய, நீர் படுத்து - ஜலத்தைப் பாய்ச்சி, ஈரம நெல் வித்தி - பற்று ஆகிய நெல்லுகளை விதைத்து, முளைத்த - அதிலிருந்து முளைத்த, நெஞ்சம் பெரும் செய்யுள் - என் மனதாகிற பெரிய வயலில், பேர் - பெரிதான, அமர் - நிலையாயிருக்கும்படியான, காதல் - ஆசையை, கடல் புரைய - ஸமுத்திரத்தை ஒததிருக்க, விளைவித்த - விளையும்படி செய்தவனான, கார் அமர் மேனி - மேகமபோல் நீல நிறமுள்ள திருமேனியை உடைய, நம் கண்ணன் - நம்முடைய கணணன், தோழீ! கடியனே - லோபத்தை உடையவனோ ?

(கருத்து) ஒரு வயலில் எருவைப் போட்டு ஜலத்தைப் பாய்ச்சி, நெல்லை விதைத்து, விளைவை உண்டுபண்ணுவதுபோல், கண்ணன் என நெஞ்சிலே தன்னிடத்தில் ஒரு பிடிப்பை உணடு பண்ணி, ஊரார் சொல்லும் பழியாலும் என தாயார் 'நீ செய்வது தகுந்ததனறு' என்று அடிக்கடி சொல்லுகிற வார்தகையாலும அதை வளர்த்து, ஸமுத்திரமபோல் பெரிதாகவும் நிலையாய் இருப்பதாகவும் இருக்கிற ஆசையை உண்டுபணணியிருக்கிறான. இப்படிச் செய்த அவனையா லோபமுள்ளவன எனறு சொல்லுகிறது ?

குறிப்பு:—(1) எருவைப் போடுவதுபோல் ஊரார் பழி, ஜலத்தைப் பாய்ச்சுவதுபோல தாயார் சொல், நெல் விதை எம்பெருமானிடததில் ஸங்கம் (பிடிப்பு), அதிலிருந்து உண்டாகும் நெல்லைப்போல ஆழ்வாருக்கு உண்டான ஆசை, ஸமுததிரம போல் பெரிதாயும் அசைக்கமுடியாததாயும ஆகிவிட்டது. எருவினாலும் ஜலததினாலும் பயிர் வளர்கிறது. அதுபோல் ஊரார் பழியும் தாயார் சொலலும் ஸங்கததை அதிகப்படுத்தின. மழை இல்லாவிட்டால், பயிர் முளைத்து வளராது. மழைபோல் எம்பெருமான் தன் திருமேனி அழகைக் காட்டி ஆசையை வளர்தது பெரிதாக ஆகுமபடி பண்ணினான.

(2) 'கண்ணன்' என்பதற்கு அவன் கோபிகளுக்கு வசப்பட்டிருந்ததுபோல் தன்னை ஆச்ரயிததவர்களுக்கு வசப்பட்டிருக்கிறான் என்று கருத்து.

(3) ஏருவை ஒருதடவை போட்டால் போதும்; ஜலத்தை அடிக்கடி பாய்ச்சவேண்டும். அதுபோல ஊரார் பழி ஒரு தடவை சொல்லப்படுகிறது. தாயார் இது தகாது என்று அடிக்கடி சொல்லுகிறாள் என்று கருத்து.

(4) எம்பெருமான், ஊரார் பழி சொல்லுவதையும் தாயார் அடிக்கடி தடுப்பதையும் சிறியதாயிருந்த ஸங்கத்தைப் பெரிய தாகப் பண்ணுவதற்குக் காரணமாக வைத்துக்கொண்டு, அதைப் பெரிதாய்ப் பண்ணினது தன் கிருபையாலே; இவனை லோப முடையவன் என்று சொல்லலாமா? என்று பாட்டின் முழுக் கருத்து.

(5) ஊரார் பழி சொல்லுவதும், தாயார் அடிக்கடி தடுப்பதுமாகிய இடைஞ்சல்களை ஆழ்வாருடைய காதலை விருத்தி பண்ணின என்று கருத்து.

(இ - ம்) கடியனே - ஏகாரத்திற்கு எதிர்மறைப் பொருள் கடியன் அல்லன் என்று கருத்து. (4)

---

கடியன் கொடிய னெடிய மாலுல கங்கொண்ட
வடிய னறிவரு மேனி மாயத்த னாகிலுங்
கொடியவென் னெஞ்ச மவனென்றே கிடக்கு மெல்லே!
துடிகொ ளிடைமடத் தோழீ யன்னையென் செய்யுமே. (௫)

(ப - ரை) கடியன் - லோபமுள்ளவன், கொடியன் - இரக்க மில்லாதவன், நெடியமால் - வெகுதூரத்திலிருக்கிற பெரியவன், (அடையமுடியாதவன்), உலகம் கொண்ட அடியன் - (சிறிய அடியைக் காட்டி பெரிய அடியால்) உலகத்தை அபஹரித்த திரு வடிகளை உடையவன், அறிவு அருமேனி மாயத்தன் - அறிய முடியாத திருமேனியால் மயக்குகிறவன், ஆகிலும் - அவன் இவ் வளவு குற்றமுள்ளவனாயிருந்தாலும், கொடிய - க்ரூரமான (அவ னிடமிருந்து திருப்பமுடியாததான), என் நெஞ்சம் - என் மனஸ்ஸு, அவன் என்றே கிடக்கும் - அவனிடத்திலேயே பிடிப்

புள்ளதாயிருக்கும், எல்லே - என்ன ஆச்சரியம்! துடி கொள் இடை - உடுக்கையின் அழகைக்கொண்ட ஸூக்ஷ்மமான இடுப்பையுடைய, மடம் தோழீ - * மடமையை உடைய தோழீ, அன்னை - தாயார், என் செய்யுமே - என்ன கெடுதல்கள் செய்ய முடியும்?

(கருத்து) எம்பெருமான் நீ சொல்லுகிறபடி லோபமுடையவனாக இருக்கட்டும்; இரக்கமில்லாதவனாகவும், வஞ்சனை செய்கிறவனாகவும், அடையமுடியாதவனாகவும், தன்னை இன்னாரென்று அறியாதபடி தன் அழகைக் காட்டி மயக்குகிறவனாகவும் இருக்கட்டும். இப்படியே லக்ஷம் குற்றம் அவனிடமிருக்கட்டும். ஆனபோதிலும் என் மனது அவனிடத்திலேயே பிடிப்புள்ளதாய் இருக்கிறது. அவனிடமிருந்து அதைத திருப்ப முடியாது. இஃதென்ன ஆச்சரியம்! இவ்வளவு ஆசையிருந்தால் தாயார் கோபித்துக்கொள்வள் என்று சொல்லுகிறாயோ, அதினால் நமக்கு என்ன கெடுதி உண்டாகும்?

குறிப்பு :—தோழி எம்பெருமானிடம் ஒரு குற்றம் சொன்னாள். ஆழ்வார் இன்னும் மூன்று குற்றமிருப்பதாகச் சொல்லி அவனை விடமுடியாது என்கிறார். (5)

---

அவ—எப்படியாவது ஆழ்வாருடைய மனதை எம்பெருமானிடமிருந்து திருப்பவேண்டுமென்று தோழியும் மற்ற எல்லாரும் சேர்ந்து வர, அவர்களைக் குறிதது இதில் சொல்லுகிறார்.—

அன்னை யென்செய்யி லெனூரென் சொல்லிலென் தோழிமீ
ரென்னை யினியுமக் காசை யில்லை யகப்பட்டேன்
முன்னை யமரர் முதல்வன் வண்டுவே ராபதி
மன்னன் மணிவண் ணன்வாசு தேவன் வலையுளே. (௬)

(ப - ரை) அன்னை - என் தாயார், என் செய்யில் என் - எனக்குப் பிடித்ததையோ பிடிக்காததையோ செய்தால்தான்

* மடமை - ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய லக்ஷணம்.

என்ன, ஊர் - ஊரிலுள்ள ஜநங்கள், என் சொல்லில் என் - குணத்தையோ தோஷத்தையோ சொன்னால் என்ன, தோழிமீர்-தோழிகளே! இனி - இனிமேல், உமக்கு - உங்களுக்கு, ஆசையில்லை - என்னைத் திருப்பலாம் என்கிற ஆசை வேண்டாம் (ஏனென்றால்), முன்னை - அநாதியாய் எல்லாம் அறிந்த, அமரர் முதல்வன் - நித்தியஸூரிகளுக்கு தலைவனாக இருந்தும், வண் துவராபதி மன்னன் - ஆச்ரிதர்களிடத்தில் ஆசையாலே அழகான துவாரகை என்னும் பட்டினத்துக்கு, ராஜாவாகப் பிறந்தவனாய், மணிவண்ணன் - ரத்நம்போல் ஸுலபனானவனாய், வாசுதேவன்-வஸுதேவன் மகனாய் இருக்கிறவனுடைய, வலையுள் - குணங்களாகிய வலைக்குள்ளே, அகப்பட்டேன.

(கருத்து) என தாயார் எனக்குப் பிடித்ததையோ பிடிக்காததையோ செய்தால் என்ன? அவை இரண்டும இப்போது எனக்கு ஸமம். ஊரிலுள்ளவர்கள் குணததையோ தோஷததையோ சொன்னால் என்ன? அவைகள் இரண்டும் இப்போது எனக்கு ஸமம்தான். தோழிகளே! என்னைத் திருப்பலாம் என்கிற ஆசை உங்களுக்கு இனிமேல் வேண்டாம். அநாதியாய் எல்லாம் அறிந்த நித்தியஸூரிகளுக்குத் தலைவனாக இருந்தும், ஆச்ரிதர்களிடத்தில் ஆசையால் துவாரகைககு ராஜாவாகவும், வஸுதேவருக்குப் பிள்ளையாகவும ரத்நத்தைப்போல் ஸுலபனாகவும் அவதாரம் செய்த எம்பெருமானுடைய திருமேனியின் அழகையும் ஔதார்யம் முதலான குணங்களையும பார்தது அவனுக்கு உட்பட்டவளாக ஆய்விட்டேன். அவனிடமிருந்து என் மனம் திரும்பாது.

குறிப்பு:—வலையுள் சிக்கிக்கொணடவன் அதைவிட்டு வெளியே வரமுடியாது. எமபெருமானுடைய திருமேனி குணங்களையும் ஆதம குணங்களையும் பார்ததபிறகு அவனை விடமுடியாது. ஆகையால் அந்த குணங்களைப் பாட்டு 'வலை' என்று சொல்லுகிறது. (6)

---

அவ—இப்படி ஆழ்வார் தம்முடைய உண்மையான இருப்பைச் சொன்னபோது, அவரால் ஒன்றும் செய்யமுடியாது

என்று அறிந்து அவர் அபிப்பிராயத்தைத் தோழி ஒப்புக்கொண்டாள். அவளைக் கொண்டாடி அவளைப் பார்த்து இதைச் சொல்லுகிறாள்.—

வலையு ளகப்படுத் தென்னைநன் னெஞ்சங் கூவிக்கொண்
டலைகடற் பள்ளியம் மானை யாழிப் பிரான்றன்னைக்
கலைகொ ளகலல்குற் றோழிநங் கண்க ளாற்கண்டு
தலையில் வணங்கவு மாங்கொ லோதைய லார்முன்பே. (எ)

(ப - ரை) கலை கொள் - நல்ல வஸ்திரத்தைக் கொண்ட, அகல் அல்குல் - விசாலமான நிதம்பங்களையுடைய, தோழி! வலையுள் - தன்னுடைய குணங்களாகிற வலையிலே, என்னை - பெண்ணான என்னை, அகப்படுத்தி - அகப்படும்படி செய்து, நல் நெஞ்சம் - என்னுடைய நல்ல மனதை, கூவிக்கொண்டு - கூப்பிட்டுக்கொண்டு, (இழுத்துக்கொண்டு), அலை கடல் பள்ளி - அலைகளையுடைய திருப்பாற் கடலில் படுத்திருக்கிற, அம்மானை, ஸ்வாமியாய், ஆழி பிரான் தன்னை - திருவாழியை உடைய பிரானை, தையலார் முன்பு - (அவனிடத்தில் குற்றங்குறைவைச் சொல்லுகிற) ஸ்திரீகளுக்கு முன்னாலே, நம் கண்களால் கண்டு, தலையில் - தலையால், வணங்கவும் ஆம் கொலோ - வணங்கும்படி ஆகுமோ?

(கருத்து) தோழியே! எம்பெருமான் தன் குணங்களாகிய வலையில் நான் அகப்படும்படி செய்து என்னுடைய நல்ல மனதை தன்னிடம் இழுத்துக்கொண்டு இங்கே இருந்தால் கோபிகைகளுக்கு உட்பட்டிருந்ததுபோல் எனக்கும் உட்பட்டிருக்கும்படியாக ஆகும் என்று நினைத்து, நான் கிட்டமுடியாதபடி திருப்பாற் கடலில் பள்ளிகொண்டிருக்கிறான். திருவாழியும் கையுமாய் இருக்கிற தன் அழகைக் காட்டி என்னைத் தன்வசப்படுத்தினவன்; அவனுக்குக் குணங்கள் இல்லையென்று சொன்ன ஸ்திரீகளுக்கு முன்னாலே அவன் வந்து நாமிருவரும் கண்களால அவனைப் பார்ப்போமா? அப்படி அவர்களுக்கு முன்னால் அவன் வந்தான என்கிற ஸந்தோஷத்தாலே அவனைத் தலையால் வணங்குவோமா? இவைகளைச் செய்யும் காலம் வருமா?

குறிப்பு :—மனதுக்கு நன்மையாவது—ஆழ்வாருக்கு முன்னாலேயே எம்பெருமானிடம் போனது

(இ - ம்) தலையில் - இல் ஏழாம்வேற்றுமைக்கு மூன்றாம் வேற்றுமைப்பொருள், உருபு மயக்கம, தலையால் என்று கருத்து. ஆம-ஆகும் : இடைக்குறை (7)

---

பேய்முலை யுண்டு சகடம் பாய்ந்து மருதிடைப்
போய்முதல் சாயத்துப புள்வாய் பிளந்து களிறட்ட
தூமுறு வற்றொண் டைவாய்ப் பிரானையெந் நாள்கொலோ
யாமுறு கின்றது தோழீ யன்னையர் நாணவே. (அ)

(ப - ரை) பேய் முலை உண்டு - பூதனை எனகிற பேய்ச்சியின ஸ்தநங்களைச் சாப்பிட்டு, சகடம பாய்ந்து - வணடி ரூபமாய் வந்த அஸுரனைக் காலால உதைத்து, மருது இடை போய் - இரட்டையான மருத மரங்களின நடுவிறபோய், முதல் சாய்த்து - (தப்பிப்போய்) அவைகளைக் கீழே விழும்படி செய்து, புள் வாய் பிளந்து - கொக்கு ரூபமாய் வந்த அஸுரனுடைய வாயைப் பிளந்து, களிறு அட்ட - குவலயாபீடம் எனகிற யானையைக் கொன்ற, தூ முறுவல் - பரிசுத்தமான புன்சிரிப்பையும், தொண்டை வாய் - கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையுமுடைய, பிரானை-உபகாரம் செய்த கண்ணனை, தோழி ! அன்னையர் நாண- (அவனுககுக் குணககுறைவு சொன்ன) தாய்மார்கள் வெட்கப் படுமபடி, எந்நாள் கொலோ - எப்போது, யாம உறுகின்றது - நாம அடைவது ?

(கருத்து) தனனைக் கொல்லவந்த பூதனையையும், சகடாஸுரனையும், கொக்கு ரூபமாய வந்த அஸுரனையும, தன்னைக் கொல்லுவதற்காக வைக்கப்பட்ட குவலயாபீடம் என்கிற யானையையும் கொன்று, தனனை நெருககிககொல்ல நினைத்த இரட்டை மருத மரங்களைக் கீழே சாய்த்து, தனனுடைய பராக்கிரமத்துக்கு இவைகள் எவ்வளவு என்று புனசிரிப்புக்கொண்ட அதனாலே இரட்டித்த அழகையுடைய கோவைப்பழம்போல் சிவந்த திருப்பவளத்தையுடைய பிரானை, அவனுக்கு வாதஸல்யம் முதலான குணங்கள் இல்லையென்று குணக்குறைவு சொன்ன தாய்

மார்கள், இவனுக்கா நாம் குணக்குறைவு சொன்னோம் என்று வெட்கப்பட்டுத் தலைகுனிந்து நிற்கும்படி நாம் எப்போது அடைவோம்? இப்படி அவர்கள் வெட்கப்படுவதே நமக்கு முதற் பிரயோஜநம்.

குறிப்பு :—பாட்டில் 'பிரான்' என்றதற்கு, எம்பெருமான் சொன்ன ஆபத்துக்களிலிருந்து தப்பினது தமக்குச் செய்த உபகாரம் என்று ஆழ்வார் நினைக்கிறார் என்று கருத்து. அவனுக்குக்கெடுதல் வந்தால், அவனையே உயிராக வைத்துக்கொண்டிருக்கிற ஆழ்வாருக்கும் கெடுதி வரமாட்டாதோ? (8)

---

நாணு நிறையுங் கவர்ந்தென்னை நன்னெஞ்சங் கூவிக்கொண்டு
சேணுயர் வானத் திருக்குந் தேவ பிரான்றன்னை
யாணையென் றோழீ யுலகு தோறலா தூற்றியாங்
கோணைகள் செய்து குதிரி யாய்மட லூர்துமே. (௯)

(ப - ரை) என்னை - என்னிடமிருந்து, நாணும் - வெட்கத்தையும், நிறையும் - அடக்கத்தையும், கவர்ந்து - அபஹரித்துக்கொண்டு, நல் நெஞ்சம் - என்னுடைய நல்ல மனதை, கூவிக்கொண்டு - இழுத்துக்கொண்டு, சேண் உயர் - மிகவும் உயர்ந்த, வானத்து - வைகுந்தத்தில், இருக்கும், தேவ பிரான் தன்னை - நித்தியஸூரிகளின் தலைவனைக் குறித்து, என் தோழீ - என் தோழியே! உலகு தோறு - எல்லா உலகங்களிலும், அலர் - பழிகளை, தூற்றி - சொல்லி, ஆம் கோணைகள் செய்து - நம்மால் செய்யக்கூடியகோணல்களைச் செய்து, குதிரியாய் - ஒருவருக்கும் அடங்காதவளாய், மடல் ஊர்தும் - மடல் ஊருவேன், ஆணை - உன் மேல் ஆணை. (இதை நிச்சயமாய்ச் செய்வேன்.)

(கருத்து) என்னுடைய வெட்கத்தையும் அடக்கத்தையும் அபஹரித்துக்கொண்டு என்னுடைய நல்ல மனதைத் தன்னிடம் இழுத்துக்கொண்டு தான் திருப்பாற்கடலிலிருந்தால் இவள் மடலூர்ந்து தன்னிடம் வருவள் என்று நினைத்து, நான் போகக் கூடாத மிகவும் உயர்ந்த வைகுந்தத்தில் எம்பெருமான் இருக்கிறான். அவனைப்பற்றி நித்தியஸூரிகள் முதலான எல்லாரும்

நம்பும்படி. எல்லா உலகங்களிலும் பழி சொல்லி என்றால் செய்யக்கூடிய கோணலைச் செய்து ஒருவருக்கும் அடங்காதவளாய் மடலூர்வேன். இது நிச்சயம்.

குறிப்பு.—(1) சேண் உயர்—என்கிற இரண்டு சொற்களுக்கும் ஒரே பொருள். ஆகையால் மிகவும் உயர்ந்த என்று உரையில் பொருள் எழுதியிருக்கிறது.

(2) கோணல் என்பது மடலூரப் புறப்பட்டபோது அவன் அநுகூலனாய்க் கிட்ட வந்தாலும் மடலூர்ந்து திருவது.

(3) ஆழ்வார் மடலூருவர் என்று அவர் இருப்பைப் பார்த்து, தோழி அறிந்தாள். இப்போது அதை அவளுக்கு வெளிப்படையாய் ஆழ்வார் அருளிச்செய்கிறார்.

(4) தாம் செய்யப்போவதைத் தோழி ஒப்புக்கொண்டபடியால் அவளை 'என தோழி' என்று கட்டிக்கொள்ளுகிறாள் என்று கருத்து.

(இ - ம்) ஊர்தும் - தும்: காலம் காட்டும் பன்மை விகுதி; ஊருவோம என்று பொருள். உளப்பாட்டுத் தன்மைப்பன்மை.

---

யாமட லூர்ந்து மெம்மாழி யங்கைப் பிரானுடை
தூமடற் றண்ணந் துழாய்மலர் கொண்டு சூடுவோம்
யாமட மின்றித் தெருவு தோறயற் றையலார்
நாமடங் காப்பழி தூற்றி நாடு மிரைக்கவே. (௧0)

(ப-ரை) யாம் மடம் இன்றி-ஸ்திரிகளுக்கு இருக்கவேண்டிய ஏதாவது ஒரு ஸ்வபாவமுமில்லாமல, தெருவு தோறு - ஒவ்வொரு தெருவிலும, அயல தையலார் - அயலாரான ஸ்திரிகளுடைய, நா - நாக்கானது, மடங்கா - சொல்லுதற்காக, பழி - பழிகளை, தூற்றி - சொல்லி, நாடும் இரைக்க - எல்லா உலகங்களும அவன் இரக்கமிலலாமலிருப்பதை இரைந்து சொலலும்படி, யாம் - நாம், மடலூர்ந்தும் - மடலூருவதைச் செய்தாகிலும், எம்-நம்முடைய, ஆழி அம் கை பிரானுடை - திருவாழியை அழகான திருக்

கையிலுடைய பிரானுடைய, தூ மடல் - பரிசுத்தமான இதழ்களையுடைய, தண் அம துழாய் மலர் - குளிர்ந்த அழகான துளஸிதளத்தை, கொண்டு - அவனிடமிருந்து வாங்கிக்கொண்டு, சூடுவோம்.

(கருத்து) ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய அடக்கம் முதலிய ஸ்வபாவம் ஒன்றுமில்லாமல் ஒவ்வொரு ஊரிலும் பழி சொல்லுவது போதாமல், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வீதியிலும், அயலாரான ஸ்திரீகளின நாகருக்கூட சொல்லுவதற்குக் கூசமபடியான பழிகளைச் சொல்லி, எல்லா உலகத்தாரும "இவனுக்குக் கொஞ்சங்கூட இரக்கமில்லையே" என்று இரைந்து சொல்லும்படி செய்து, மடலூருவதற்குத் தகாத ஸ்திரீத்தனமையை உடைய நாம், மடலூருவதைச் செயதாகிலும ஆழிப்பிரானுடைய தூ மடல் தணணம் துழாய் மலர்களை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டு சூட்டிக்கொள்வோம்.

(இ - ம) மடங்கா - மடங்காத : எதிர்மறைப் பெயரெச்சம்.

---

இரைக்குங் கருங்கடல் வண்ணன் கண்ணபி ரான்றன்னை
விரைக்கொள் பொழிற்குரு கூர்ச்சட கோபன் சொன்ன
நிரைக்கொளந் தாதியோரா யிரத்து ளிப்பத்து
முரைக்கவல் லார்க்கு வைகுந்த மாகுந்தம் மூரெல்லாம். (கக)

(ப - ரை) இரைக்கும் - அலைகள் எழுவதாலே சப்தம் செய்கிற, கருமை கடல வண்ணன் - கறுப்பான ஸமுத்திரமபோன்ற வர்ணமுடைய, கண்ணபிரான தன்னை - கண்ணனாய் அவதரித்து உபகாரம் செய்த எம்பெருமானைப்பற்றி, விரைகொள் பொழில் - வாஸனைகளையுடைய சோலைகளால் சூழப்பட்ட, குருகூர் சட கோபன் சொன்ன, நிரை கொள் அந்தாதி - சொற்களுடையவும அர்த்தங்களுடையவும் குணங்களால நிறைவைக்கொண்ட அந்தாதி ரூபமாயிருக்கிற, ஆயிரத்துள - ஆயிரம பாட்டுக்களுக்குள்ளே, இ பத்தும - இப்பத்துப் பாட்டுக்களையும், உரைக்க வல்லார்க்கு - சொல்ல சக்தியுள்ளவர்களுக்கு, தம் ஊரெல்லாம் - அவர்கள் இருக்கிற ஊர்கள் எவ்வளவு தாழ்ந்தவைகளாக இருந்தாலும், வைகுந்தம் ஆகும - வைகுந்தம்போல் ஆநந்தத்தைக் கொடுக்கும்.

(கருத்து) கண்ணபிரானைப்பற்றி ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே இந்தப் பத்துப் பாட்டுக்களையும் சொல்லச் சக்தியுள்ளவர்களுக்கு அவர்கள் இருக்கும் ஊர் எவ்வளவு தாழ்ந்ததாயிருந்தாலும் வைகுந்தம்போல் ஆநந்தத்தைக் கொடுக்கும். (11)

---

ஜ்யோதீரூபாங்ககத்வாத் ஸ்வருசிஜநநயநாநிஷ்டவித்⁴வம்ஸக
த்வாத் காளமேகஶ்யாமலத்வாத் ததுபஸதயோக்³யஸௌ
ஶீல்யயோகாத் | ரக்ஷாயாம் ஸாவதா⁴நாத் ஸகலமதநுதயா
ஸோபகாராஸ்த்ரவத்த்வாத் ஸ்வாநாம் ஶௌரிரஸ்ரம் ஜநயதி
ஸமதநித்யவாஞ்சாராஶி: ||௬௧||

---

இந்தத் திருவாய்மொழியில் தன்னை ஆச்ரயித்தவர்களுக்குத் தன்னிடத்தில் எம்பெருமான் அதிக ஆசையைப் பத்துக காரணங்களாலே உண்டுபண்ணுகிறான் என்று சொல்லப்படுகிறது. அந்தக் காரணங்களாவன:—(1) காந்தியுள்ள திருமேனியை உடையவனாயிருப்பது; (2) தாமரை இதழ்போன்ற திருக்கண்களையுடையவனாயிருப்பது; (3) ஆச்ரிதர்களுடைய விரோதியை நாசம் பண்ணுவது; (4) மேகம்போல் நீலமான திருமேனியை உடையவனாயிருப்பது; (5) ஆச்ரிதர்களிடத்தில் பிரீதியுள்ளவனாயிருப்பது; (6) உயர்ந்த ஸௌலப்யம் என்கிற குணமுள்ளவனாயிருப்பது; (7) ஆச்ரிதர்களைக் காப்பாற்றுவதில் கவனமுள்ளவனாயிருப்பது; (8) அழகான திருமேனியை உடையவனாயிருப்பது; (9) உபகாரம் செய்வது; (10) திருவாழி முதலான ஆயுதங்களையுடையவனாயிருப்பது. (61)

---

# நான்காம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் மடலூர ப்ரயத்தினம் செய்தார் அதைச் செய்ய சக்தியில்லாமல் மிகுந்த வருத்தத்தை அடைந்து அந்த வருத்தத்தை இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார். நாயகனை விட்டுப் பிரிந்த நாயகி தன் வருத்தத்தைத் தான் சொல்லவும் அதைக்கேட்கவும் முடியாதபடி எல்லாரும் தூங்கும்போது தன் வருத்தத்தைச் சொல்லி அழுவதுபோல், அவர் தம் வருத்தத்தைச் சொல்லுகிறார் :—

(தரவுகொச்சகக் கலிப்பா.)

ஊரெல்லாந் துஞ்சி யுலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாந் தேறியோ ரீளிரவாய் நீண்டதால்
பாரெல்லா முண்டநம் பாம்பணையான் வாரானா
லாரெல்லே! வல்வினையே னாவிகாப் பாரினியே. (க)

(ப - ரை) ஊர் எல்லாம் துஞ்சி - ஊர் முழுவதும் தூங்கி, உலகு எல்லாம், நள் இருளாய் - நிறைந்த இருட்டாய், நீர் எல்லாம் தேறி-ஜலம் எல்லாம் தெளிந்து, ஓர் நீள் இரவாய் நீண்டது- ஒரே ராத்திரியாய் நீண்டது, பார் எல்லாம் - பூமி முழுவதையும், உண்ட, நம பாம்பு அணையான் - நம்முடைய ஆதிசேஷன்மேல் படுத்துக்கொண்டிருக்கிற எம்பெருமான், வாரான் - வரவில்லை, எல்லே இனி - இப்படியான பின்பு, வல் வினையேன் - பலமான பாபத்தையுடைய என்னுடைய, ஆவி - ஆத்மாவை, காப்பார் ஆர் - ரக்ஷிப்பவர் யார்?

(கருத்து) என் வருத்தத்தை யாருடனாவது சொல்லிப் பொறுக்கலாமோ என்றால், ஊரில் இருக்கிறவர்கள் எல்லாரும் தூங்குகிறார்கள். எதையாவது பார்த்து ஆறுதலை அடையலாமோ என்றால், உலகம் முழுவதிலும் இருட்டு நிறைந்திருக்கிறது. எந்த சப்தத்தையாவது கேட்டு வருத்தத்தைக் கொஞ்சம் மறந்திருக்கலாமோ என்றால், ஆறு குளமெல்லாம் அலை அடங்கி ஜலம் தெளிந்து அதிலிருக்கிற ஜந்துக்கள் எல்லாம் தூங்கி அது நிச்சப்தமாயிருக்கிறது. இந்த ராத்திரி போய் பகல் வருமோ என்று பார்த்தால், அதுவும் வரவில்லை. ராத்திரி

முடிவதாகவும் தோன்றவில்லை. நம்மை ரக்ஷிக்கிற எம்பெருமான் வருவனோ என்றால், அவனையும் காணேன். பிரளயகாலத்தில் உலகத்தைத் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷிப்பது போல், என்னை வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷிக்கவேண்டாம்; ஆதிசேஷன்மேல் தான அணைந்திருப்பதுபோல் என் உடம்போடு தான் அணையவேண்டாம். வந்து முகங்காட்டக்கூடாதோ? அதையும் செய்கிறதில்லை. ஐயோ! தோழீ! இப்படி ஆனபின்பு மிகுந்த பாபம் பண்ணின என்னுடைய ஆத்மாவை யார் ரக்ஷிப்பார்?

(இ - ம்) வாரான் - எதிர்மறை வினைமுற்று. ஆல் அசை நிலை. (1)

---

ஆவிகாப் பாரினியா ராழ்கடல்மண் விண்மூடி
மாவிகா ரமாயோர் வல்லிரவாய் நீண்டதால்
காவிசோ வண்ணனேன் கண்ணனும் வாரானால்
பாவியே னெஞ்சமே நீயும்பாங் கல்லையே. (உ)

(ப - ரை) ஆழ் கடல்-ஆழமான ஸமுத்திரத்தையும், மண் - பூமியையும், விண் - ஆகாசத்தையும், மூடி - மூடிக்கொண்டு, மா விகாரமாய் - மிகவும விகாரமாய், ஓர் வல் இரவாய் - ஒரு பலமான இராத்திரியாய், நீண்டது, காவி சேர் - கருநெய்தல்போல் நீலமான, வண்ணன - காந்தியை உடையவனான, என கண்ணனும்-என்னுடைய கண்ணனும, வாரான், பாவியேன் நெஞ்சமே-பாபம் செய்த என்னுடைய மனமே! நீயும் பாங்கு அல்லையே - நீயும் என்னுடன ஒத்திருக்கவில்லை. இனி இனிமேல், ஆவி காப்பார் ஆர - ஆத்மாவைக காப்பவர் யார்?

(கருத்து) இருட்டானது ஸமுத்திரத்தையும் பூமியையும் ஆகாசத்தையும் மூடிக்கொண்டு மிகவும் விகாரமாயிருக்கிறது. ஆயிரம் ஸூரியன் உதயமானாலும் அதைப் போக்க முடியாது போலிருக்கிறது. இராத்திரியும் நீண்டு முடிகிறதாயில்லை; என் கண்ணனும் வரவில்லை. வேறு ஸ்திரீகள் பார்த்துக்கொண்டிருக்க, எப்படி வரக்கூடும் என்றால், அவனுடைய திருமேனி கருநெய்தல்போல் நீல நிறமுள்ளதல்லவா? ஆகையால் இருட்டோடு

இருட்டாக மறைந்து அவன் வரலாமே; அப்படியும் வரவில்லை. மனமே! எனக்கு முன் உட்பட்டு என்னுடனே ஒத்திருந்த நீயும் விட்டுவிடுகிறாய். எனக்கு முன் உட்பட்டிருந்த எம்பெருமான் எனக்கு உட்படாமலும், என்னுடன் சேர்ந்திருந்த மனது என்னை விடும்படியும் நான் பலமான பாபம் செய்திருக்கிறேன். இனி என் ஆத்மாவை யார் ரக்ஷிப்பார்?

குறிப்பு:—ஆழ்வார் தம்முடைய வருத்தத்தினாலே ராத்திரியையும் இருட்டையும் வேறு என்று அறியமுடியாமல் அவைகளைப் பாட்டில் ஒன்றாக அருளிச்செய்கிறார். (2)

---

நீயும்பாங் கல்லைகா ணெஞ்சமே நீளிரவு
மோயும் பொழுதின்றி யூழியாய் நீண்டதால்
காயுங் கடுஞ்சிலையேன் காகுத்தன் வாரானல்
மாயும் வகையறியேன் வல்வினையேன் பெண்பிறந்தே. (௩)

(ப - ரை) நெஞ்சமே - மனமே! நீயும், பாங்கு அல்லை காண் - அநுகூலமாக இருக்கவில்லை, நீள் இரவும் - நீண்ட ராத்திரியும், ஓயும் பொழுது இன்றி - முடிகிற காலமில்லாமல், ஊழியாய் நீண்டது - கல்ப காலம்போல் நீண்டது, காயும் - (ஆச்ரிதர்களுடைய விரோதிகளை) கொளுத்தும் தன்மையுள்ள, கடுமை சிலை-கடினமான வில்லையுடைய, என் காகுத்தன் - என்னுடைய ககுத்ஸ்த வம்சத்தில் பிறந்த எம்பெருமான், வாரான், வல்வினையேன் - பலமான பாபத்தையுடைய நான், பெண் பிறந்தே - பெண்ணாய்ப் பிறந்து, மாயும் வகை-முடியும் விதத்தை, அறியேன்.

(கருத்து) மனமே! நீ எனக்கு அநுகூலமாயிருந்து என்னுடைய எல்லா வேலைகளையும் செய்ய உதவவேண்டியது. நீ இப்படிச் செய்யாமல் என்னை விட்டுவிட்டாய். இந்த ராத்திரிக்கும் ஒரு முடிவைக் காணவில்லை. அது ஒரு கல்ப காலம்போல் நீண்டது. ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காகவே ஏற்பட்ட ககுத்ஸ்தன் வம்சத்தில் எம்பெருமான் பிறந்து, அவர்கள் விரோதிகளை நாசம் பண்ணுவதற்காக கடுமையான வில்லை வைத்துக்கொண்டு இருக்கவில்லையா? அவன் என்னை ரக்ஷித்து, என் வருத்தத்தைப் போக்கவேண்டாமா? அவனும் வரவில்லை. அவன் வராவிட்டால்

நான் முடிந்துபோகலாமே என்றால், முடியும் விதம் எனக்குத் தெரியவில்லை. ஏன் என்றால் நான் பலமான பாபத்தினால் பெண்ணாய்ப் பிறந்திருக்கிறேனே, ஒருவனுக்கு உட்பட்டிருப்பதே பெண்ணாய்ப் பிறந்தவர்களுக்கு ஸ்வபாவமல்லவா? நினைத்தபடி அவள் செய்ய முடியுமா?

குறிப்பு —கல்பம் என்பது பிரம்மாவின் ஓர் பகல். அதில் ஆயிரம சதுர்யுகமிருக்கிறது. (3)

---

பெண்பிறந்தா ரெய்தும் பெருந்துயர் காண்கிலேனேன்
றொண்சுடரோன் வாரா தொளித்தானிம் மண்ணளந்த
கண்பெரிய செவ்வாயெங் காரேறு வாரானா
லெண்பெரிய சிந்தைநோய் தீர்ப்பாரா ரென்னையே. (ச)

(ப - ரை) பெண பிறந்தார் - பெண்ணாகப் பிறந்தவர்கள், எய்தும் - (நாயகனை விட்டுப் பிரிந்து) அடையும், பெரும் துயர் - பெரிய துக்கத்தை, காண்கிலேன என்று - நான் பார்க்க சக்தி இல்லாதவன என்று, ஒண் சுடரோன-பிரகாசமுள்ள ஸூரியன், வாராது - (உதய காலத்திலும) வாராமல, ஒளிததான - ஒளிந்து கொண்டான், இ மண - இநதப பூமியை, அளந்த - (திரிவிக்கிரமனாய அவதாரம் செய்து) அளந்த, பெரிய கண் - பெரிய கணகளையும, செவ்வாய்-சிவந்த திருப்பவளத்தையுமுடைய, எம கார் ஏறு- என்னுடைய நிலவர்ணமுள்ள எருதுபோல் கொழுத்தவனான எமபெருமான, வாரான, என்னை - என்னுடைய, எண் பெரிய சிந்தை நோய் - எணணுக்கும மேலாகும பெரிய ஆசையாகிற வியாதியால் உணடான வருததததை, தீர்ப்பார் ஆர்?

(கருதது) "பெண்களாகப் பிறந்தவர்கள் நாயகனை விட்டுப் பிரிந்து படும துக்கமானது மிகவும் பெரிது. அவர்கள் மிருது ஸ்வபாவமுளளவாகளாகையால் அதை அவாகள் பொறுக்க முடியாது. முடிந்துபோகலாமோ எனறால அவர்கள் ஒருவருக்கு உட்பட்டவாகளாகையால் நினைத்ததைச் செய்ய முடியாது இந்தத துக்கததை என்னால் பார்ககமுடியாது" எனறு நினைததுத்தான உதய காலததில் ஸூரியன வரவில்லை. எம்பெருமான் இட்ட வேலையைச் செய்யவில்லை என்று தன்னைத் தண்டிப்பனோ என்று

அவன் ஒளிந்துகொண்டிருக்கிறான். எம்பெருமான் திரிவிக்கிரம ஞய் அவதாரம் செய்து உயர்ந்தவன் தாழ்ந்தவன என்று பார்க் காமல் பூமியை அளந்து எல்லாருடைய தலையிலும் தன் திருவடியை வைத்தான. அப்படி எல்லாரோடும் கலந்த பிரீதியால் அவன் திருக்கண்கள் நீண்டு திருப்பவளம சிவந்தது. இப்படி தன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தையும், தன் அழகையும காட்டி, என்னை அடிமையாக்கினவன் வரவில்லை. எனககு அவனிடததில் ஆசை மிகுதியாலுண்டான வருததததை அளக்க முடியாது. அதை யார் தீர்ப்பார்? (4)

---

ஆரென்னை யாராய்வா ரன்னையருந் தோழியரு
நீரென்னே யென்ஞதே நீளிரவுந் துஞ்சுவரால்
காரன்ன மேனிநங் கண்ணனும் வாராஞல்
பேரென்னை மாயாதால் வல்வினையேன் பின்னின்றே. (௫)

(ப - ரை) அன்னையரும் - தாய்மார்களும், தோழியரும், நீர் - இவள் ஸ்வபாவம், எனனே என்ஞதே - என்னமாயிருக்கிறது என்று சொல்லாமல், நீள் இரவும - நீண்ட ராததிரி எல்லாம், துஞசுவர் - தூங்குகிறாகள். என்னை ஆராய்வார் ஆர் - என்னைப்பற்றி எவர் விசாரிப்பா? கார் அனன மேனி - மேகம் போன்ற திருமேனியை உடைய, நம கண்ணனும் வாரான், பேர் - என்னுடைய பிரஸித்தியானது, (இவவளவு வருததமடைந்தும் இவள் முடியவில்லை என்கிற பிரஸிததியானது), வல் வினையேன் - பலமான பாபத்தைப் பண்ணின எனக்கு, பின் நின்று - பின்ஞலே இருந்து, என்னை மாயாது - என்னை இறந்தேதஞகப் பண்ஞது.

(கருத்து) என் தாய்மார்கள் எனக்கு ஆபத்து வந்தபோது உதவவேண்டியவர்கள். என் தோழிமார்கள் என்னைப்போல் வருத்தப்படவேண்டியவர்கள். அவர்கள் நான் வருத்தப்படுவதைப் பார்தது, "எம்பெருமான் இவளை விட்டுப் பிரிந்து வேறு விஷயத்தில் போது போக்கிக்கொண்டு இருக்கிறானே, இவளும் அவனை விட்டுப் பிரிந்து வேறு விஷயமாய்ப போதுபோக்கலாமே அப்படிச் செய்யாமல் அவனையே நினைத்துக்கொண்டிருக்கிறளே!

இதென்ன ஆச்சரியம்!" என்று சொல்லாமல் நீண்ட ராத்திரி முழுவதும் தூங்குகிறார்களே! என்னைப்பற்றி யார் விசாரிப்பர் கள்? எம்பெருமான் கண்ணனைப் பிறந்து கோபிகைகள் சொன்னபடி செய்துகொண்டிருந்தானே. என்னிடத்தில் பிரீதியுள்ள அவன் என்னிடம் வரவில்லையே! நான் முடிந்துபோனாலும் நீங்கள் "இவள் வருத்தப்பட்டும் இன்னும் முடியவில்லையே" என்று சொல்லிக்கொண்டிருப்பார்களே! நான்போயும் என் பேர் பின்னால இருந்து என்னை மறக்காதபடி செய்யும்.

குறிப்பு:—எம்பெருமான்தான் எனக்கு விரோதத்தைச் செய்கிறானே, என் பெயரும் அப்படிச் செய்யவேண்டுமோ? என்று கருதது.

(இ - ம்) என்றே - என்றமல், வினையெச்சம். (5)

பின்னின்ற காதனோய் நெஞ்சம் பெரிதடுமோன்
முன்னின் றிராவூழி கண்புதைய மூடிற்றுன்
மன்னின்ற சக்கரத்தெம் மாயவனும் வாரானா
லின்னின்ற நீளாவி காப்பாரா ரிவ்விடத்தே. (கூ)

(ப - ரை) பின் நின்ற - நான் முடிந்த பினபும் இருப்ப தாகிய, காதல் நோய் - ஆசையாகிய வியாதியானது, நெஞ்சம் - மனதை, பெரிது - மிகவும், அடும் - ஹிம்சை செய்கிறது, இரா ஊழி-ராத்திரியாகிய கல்பமானது, முன நின்று - எனக்கு முன னாலே நின்று, கண் புதைய மூடிற்று - கணணின் தேஜஸ்ஸு வெளியே போகாதபடி அதை மூடிற்று, மன - நிலையாக, நின்ற- திருக்கையிலிருக்கிற, சக்கரத்து - திருவாழியை உடைய, எம் மாயவனும் - ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற என்னுடைய எம்பெருமானும, வாரான், இவ்விடத்தே - இந்த இருப்பில், நின்ற - (இவ்வளவு வருத்தப்பட்டும் முடியாமல்) இருக்கிற, நீள் இ ஆவி - நித்யமான இந்த ஆத்மாவை, காப்பார் ஆர் - ரக்ஷிப் பவர் யார்?

(கருத்து) என்னுடைய ஆசையாகிய வியாதியானது நான் முடிந்தபின்பும் இருக்கும்போல் தோன்றுகிறது. நெருப்பு தன க்கு ஆச்ரயமான விறகைக் கொளுத்துவதுபோல் என் மனதுக்கு

அது ஹிம்ஸையைச் செய்கிறது. ராத்திரியோ கல்பம்போல் நீண்டுகொண்டிருக்கிறது. இது மாத்திரமன்று. எம்பெருமான் வந்தாலும் அவனைப் பார்க்கமுடியாதபடி என் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறது. எம்பெருமான் தன் கையில் இருக்கும் திருவாழியால் இருட்டைப் போக்கமுடியாதா? ஆச்ரிதர்களை ரக்ஷிக்கும் ஸமயம் வரும்போது அதைத் தேடாமல் அதை எப்போதும் திருக்கையில் வைத்துக்கொண்டிருக்கவில்லையா? அவன் பாரத யுத்தத்தில் ஜயத்ரதனைக் கொல்லுவதற்கு பகலில் ஸூர்யனை மறைத்துப் பகலை ராத்திரியாகச் செய்தானே. இந்த ஆச்சரியமான வேலையைச் செய்தவனுக்கு இந்த ராத்திரியைப் பகலாகப் பண்ணமுடியாதா? அவனும் வந்து என்னை ரக்ஷிக்கவில்லை. அவன் வராவிட்டால் என் ஆத்மா முடியலாமே! அஃது ஆத்மாவுக்கு நாசமில்லை என்று ஸ்ரீகீதையில் சொன்னதைச் சொல்லி நான் முடியமாட்டேன் என்று வருத்துப் போடுகிறது. இப்படியான பின்பு என்னைக் காப்பவர் யார்?

குறிப்பு.—(1) வெளிக் கண்ணை இருள் மூடிற்று; உட் கண்ணை ஆசை மூடிற்று என்று கருத்து.

(2) இருட்டைப் போக்கும் தன்மையுள்ள திருவாழியாலே இருட்டைப் பாரத யுத்தத்திலே உண்டுபண்ணினானே, அதைக் கொண்டு இருட்டைப் போக்கமுடியாதா என்று கருத்து.

(3) இந்த ஆத்மா முடிந்தால்தான் ஸுகம், இதுவோ முடியப்போகிறதில்லை. அது நித்தியமாயிருப்பது. எப்போதும் துக்கத்தை அநுபவிப்பதற்காகத்தான் என்று கருத்து.

(4) இப்படி சத்துருவாயிருக்கிற ஆத்மாவை முடித்து என்னை ரக்ஷிப்பார் யார்? அவன் வராவிட்டால் ஆத்மா முடிவதே ஸுகம் என்றும் பொருள் கொள்ளலாம். (6)

---

காப்பாரா ரிவ்விடத்துக் கங்கிருளி னுண்டுளியாய்ச்
சேட்பால தூழியாய்ச் செல்கின்ற கங்குல்வாய்த்
தூப்பால வெண்சங்கு சக்கரத்தன் றோன்றானால்
றீப்பால வல்வினையேன் றெய்வங்காளென் செய்கேனோ. (எ)

(ப - ரை) கங்கு இருளும் - எல்லையான இருளும், (இதற்கு மேல் இல்லை என்று சொல்லும்படி மிகவும் அதிகமான இருட்டானது), நுண் துளியாய் - ஸூக்ஷ்மமான துளிகளுள்ளதாய், சேண் பாலது - நீண்டதாய் இருப்பதையே ஸ்வபாவமாகவுடைய, ஊழியாய் செல்கின்ற - கல்பம்போல் நீண்டுகொண்டிருக்கிற, கங்குல்வாய் - ராத்திரியில், தூ பால - சுத்தமாய் இருப்பதையே ஸ்வபாவமாகவுடைய, வெண் சங்கு - வெளுப்பான சங்கத்தையும், சக்கரத்தன் - சக்கரத்தையுமுடைய எம்பெருமான், தோன்றுன், இவ்விடத்து - இந்த இருப்பில், காப்பார் ஆர் - என்னை ரக்ஷிக்கிறவர் எவர், தீப்பால் - நெருப்பின் ஸ்வபாவத்தையுடைய, வல வினையேன் - பலமான பாபங்களையுடைய நான், தெய்வங்காள் - தெய்வங்களே! என் செய்கேன் - என்ன செய்வேன.

(கருத்து) இந்த ராத்திரியில் அதிக இருட்டும் வந்து மழைபோல் ஸூக்ஷ்மமான துளிகளாய்ப் பெய்துகொண்டிருக்கிறது. ராத்திரியும் கல்பம்போல் நீண்டுகொண்டிருக்கிறது. திருவாழி திருச்சங்கையுடைய ஆச்ரிதர்களை ரக்ஷிக்கும் எம்பெருமானும் வரவில்லை. தோழி தூங்கினபோதிலும் என்னை ரக்ஷிப்பதற்காகத் தூங்காமலிருக்கிற தெய்வஙகளே! என்னை ரக்ஷிப்பவர் யார்? நான் என்ன செய்வேன்!

குறிப்பு :—தேவர்களுக்குத் தூக்கம் கிடையாது. அவர்கள் தன்னை ரக்ஷிப்பதற்காகவே தூங்கவில்லை என்று உத்ப்ரேக்ஷித்து அவர்களைக் கூப்பிடுகிருர். (7)

---

தெய்வங்கா ளென்செய்கே னோரிரவே ழூழியாய்
மெய்வந்து நின்றென தாவி மெலிவிக்குங்
கைவந்த சக்கரத்தென் கண்ணனும் வாரானாற்
றைவந்த தண்டென்றல் வெஞ்சுடரிற் றனடுமே. (அ)

(ப - ரை) ஓர் இரவு - ஒரு ராத்திரி, ஏழ் ஊழியாய் - ஏழு கல்பங்களாக, மெய் வந்து நின்று - உண்மையாக எனக்கு முன்னுலே வந்து நின்று, எனது ஆவி - என்னுடைய பிராணனை, மெலிவிக்கும் - இளைக்கும்படி செய்கிறது. கை வந்த - நினைத்தபடி வேலை செய்கிற, சக்கரத்து - சக்கரத்தையுடைய, என் கண்

ணனும், வாரான் - வரவில்லை. கை வந்த - தை மாதத்தில் அடிக்கிற, தண் தென்றல் - குளுமையான தென்றல் காற்றானது, வெம் சுடரில்-உஷ்ணமான அக்கினியிறகாட்டிலும், தான - தானாகவே, அடும் - சுடுகிறது, தெய்வங்காள் - தெய்வங்களே! என் செய்கேன் - என்ன செய்வேன்.

(கருத்து) ஒரே ராத்திரி ஏழு கல்பங்கள்போல் நீளுகிறது. பகலுக்குப்பிறகு ராத்திரி வருகிறதென்று சொல்லுவது பொய்; என்னை ஹிம்ஸை செய்வதற்காகவே அது வந்து என் முன்னாலே இருந்து என்னை மெலியும்படி செய்கிறது. இதுதான் உண்மை. சொன்னபடி கேட்கிற திருவாழியையுடைய என் கண்ணனும் வரவில்லை. பனிக்காலமாகிய தை மாதத்தில் அடிக்கும் தென்றலானது குளிர்ந்ததாயிருக்கவேண்டியது. ஆனபோதிலும் நெருப்பைக்காட்டிலும் அதிகமாக என்னைச் சுடுகிறது. தெய்வங்களே! நான் என்ன செய்வேன்.

(இ - ம்) வெஞ்சுடரில் - இல் ஐந்தாம் வேற்றுமையுருபு; வெஞ்சுடரைக்காட்டிலும் என்று பொருள். (8)

---

வெஞ்சுடரிற் றானடுமால் வீங்கிருளி னுண்டுளியா
யஞ்சுடர வெய்யோ னணிநெடுந்தேர் தோன்றாதால்
செஞ்சுடர்த் தாமரைக்கட் செல்வனும் வாரானால்
நெஞ்சிடர்தீர்ப் பாரினியா ரின்றுருகு கின்றேனே. (௯)

(ப - ரை) தான் - (கீழே சொன்ன) ராத்திரியானது, வீங்கு இருளின் - பருத்திருக்கிற இருட்டோடு கூடினதாய், நுண் துளியாய் - ஸூக்ஷ்மமான துளிகளை உடைத்தானதாய், வெம் சுடரில் - உஷ்ணமான நெருப்பைக்காட்டிலும், அடும்-சுடுகிறது. அம் சுடர் - அழகான காந்தியையுடைய, வெய்யோன் - ஸூர்யனுடைய, அணி - அழகான, நெடும் தேர் - உயரமான தேரானது, தோன்றாது - தோன்றவில்லை, செம் சுடர் தாமரை கண் - சிவந்த காந்தியுடைய தாமரை இதழ் போன்ற கண்களையுடைய, செல்வனும் - ஸ்ரீமானான எம்பெருமானும், வாரான் - வரவில்லை, இனி - இப்படியானபோது, நெஞ்சு இடர் - மனதின் துக்கத்தை, தீர்ப்பார் ஆர் - தீர்ப்பவர் எவர்? இன்று - என்று துக்கப்பட்டுக் கொண்டு, உருகுகின்றேன்.

(கருத்து) இந்த ராத்திரியானது மிகுந்த இருட்டோடு கூடினதாய் நெருப்பைக்காட்டிலும் அதிகமாக என்னைச் சுடுகிறது. இருட்டைப் போக்கி, என் வருத்தத்தைப் போக்கக் கூடிய ஸூரியனும் உதயமாகிறதில்லை தாமரைக் கண்ணனான எம்பெருமானும் வருகிறதில்லை. இப்படியிருக்கையில் என் மனதிலிருக்கும் துக்கதனைதத தீர்ப்பார் எவர்? உயிரை விடமுடியாமல் எப்பொழுதும் துக்கப்பட்டுக்கொண்டு உருகுகிறேன்.

(இ - ம்) வெஞ்சுடரில் - கீழ்ப்பாட்டில் இலக்கணத்தைப் பார்க்க. (9)

---

நின்றுருகு கின்றேனே போல நெடுவானஞ்
சென்றுருகி நுண்டுளியாய்ச் செல்கின்ற கங்குல்வா
யன்றொருகால் வைய மளந்தபிரான் வாரானென்
றொன்றொருகாற் சொல்லா துலகோ வுறங்குமே. (கo)

(ப - ரை) நின்று - துக்கப்பட்டுக்கொண்டேயிருந்து, உருகுகின்றேனே போல - உருகிற என்னைப்போல, நெடு வானம்-பெரிதான ஆகாசம், சென்று - முன் இருப்பைவிட்டு, உருகி, நுண் துளியாய் - ஸூக்ஷ்மமான துளிகளாக, செல்கின்ற - பெய்து கொண்டிருக்கிற, கங்குல்வாய் - ராததிரியிலே, அன்று ஒருகால் - (மஹாபலியிடமிருந்து உலகங்களை அபஹரித்த) அந்தக் காலத்தில், வையம் அளந்த - அந்த உலகங்களை அளந்த, பிரான், வாரான் - வரமாட்டான், என்று, ஒன்று - ஒரு வார்த்தையை, ஒருகால் - ஒருதடவையாவது, உலகு - உலகத்தார்கள், சொல்லாது - சொல்லாமல், உறங்கும் - தூங்குகிறார்கள். ஓ - ஐயோ!

(கருத்து) துக்கப்பட்டுக்கொண்டேயிருந்து உருகுகிற என்னைப்போல, இந்தப் பெரிய ஆகாசமானது உருகி ஸூக்ஷ்மமான துளிகளாய் பெய்கிறது. இந்த ராத்திரியில் உலகை அளந்த எம்பெருமான் வருகிறதில்லை. "உலகை அளந்து குணங்களையும் தோஷங்களையும் பார்க்காமல் எல்லாருடைய தலைகளைத் தன் திருவடிகளால் தொட்டவன் வரமாட்டானு என்று எண்ண வேண்டாம். அந்த வேலையை ஏதோ ஒரு தடவை செய்தான்.

அது அவனுக்கு ஸ்வபாவமன்று. அவன் வரமாட்டான்.'' என்கிற ஒரு சொல்லை ஒருதடவையாவது சொல்லாமல் உலகத்தார் தூங்குகிறார்களே! ஐயோ! என்ன கஷ்டம.

குறிப்பு —(1) தாம் உருகுவதுபோல் ஆகாசமும் உருகி துளிகளாய் பெய்கிறது என்று மழைத்துளிகளைப் பார்த்து ஆழ்வார் பிரமிக்கிறார்.

(2) ஒருகால்—ஒரு தடவை சொன்னால் போதும் இரண்டு தடவை சொல்லவேண்டாம. வருவன என்று ஆசையால பிழைத்திருக்கிறவர்களுக்கன்றோ வருவன் என்று இரண்டு தடவை சொல்லவேண்டும என்று கருத்து.

(இ - ம்) உருகுகின்றேனே - வினையாலணையும் பெயர். (10)

---

உறங்குவான் போல்யோகு செய்த பெருமானைச்
சிறந்தபொழில் சூழ்குரு கூர்ச்சட கோபன்சொ
னிறங்கிளர்ந்த வந்தாதி யாயிரத்து ளிப்பத்தா
லிறந்துபோய் வைகுந்தஞ் சேராவா ரெங்ஙனேயோ. (கக)

(ப - ரை) உறங்குவான்போல் - தூங்குகிறவனைப்போல் அசையாமல், யோகு செய்த - (தனனை அநுபவித்துக்கொண்டு இருப்பதாகிய) யோகத்தைச் செய்துகொண்டிருக்கும், பெருமானை - ஸ்வாமியைப்பற்றி, சிறந்த பொழில் சூழ் - சிலாக்கியமான தோட்டங்களாலே சூழப்பட்ட, குருகூர்ச் சடகோபன், ஆழ்வார் அருளிச்செய்ததான நிறம் கிளர்ந்த - காந்தியோடுகூடிய, அந்தாதி ஆயிரத்து-அந்தாதியான ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, இ பத்தால் - இந்தப் பத்துப் பாட்டுக்களில் சொன்ன ஆழ்வாருடைய மிகுந்த வருத்தத்தை நினைப்பதால், இறந்து - மரணம் அடைந்து, போய் - (தேவயானம் என்கிற வழியாய்) போய், வைகுந்தம் - வைகுந்தத்தை, எங்ஙனேயோ-எப்படி, சேராவார்- சேராதவர்கள், சேராதிருப்பர்கள்.

(கருத்து) தன்னை அநுபவித்துக்கொண்டு அதினால் உண்டான ஸந்தோஷத்தினால் தூங்குகிறவன்போல், அசையாமலிருக்கிற எம்பெருமானைப்பற்றி ஆழ்வார் அருளிச் செய்த இந்தப் பத்துப்பாட்டுக்களை அவைகளில் சொல்லப்பட்ட ஆழ்வாருடைய

மிகுந்த துக்கத்தை அறிந்து வாசிக்கிறவர்களுக்கு உடனே உடம்பு போய் தேவயானம் வழியாக அவர்கள் வைகுந்தத்தைச் சேருவார்கள். இப்படி சேராதிருக்கமுடியுமோ?

குறிப்பு :—எம்பெருமான் வராதபோது, அவன் தன்னை அநுபவித்துக்கொண்டு தம்மை அவன் கவனிக்கவில்லை என்று ஆழ்வார் எண்ணுகிறார் 'திறம்' எனகிற சொல்லுக்கு காந்தி என்று பொருள் பாட்டுக்குக் காந்தியாவது காநம். (11)

---

ஆபத்பந்துத்வகீர்த்யா ப்ரணதஜநஜநாத் தைர்யவீர்யக்யா
த்யா லோகாக்ராந்த்யா விக்ராந்த்யா ஶ்ரிதஜநதாபஹ்ருத்கேதரூ
பைஸ்சேஷ்டிதைஸ்ச । சக்ராத்யைர்ஹஸ்தகாந்த்யா ஸுபகநயநதா
ஸம்பதா வாமநத்வாத் க்ஷீராப்தௌ ஶேஷஶாயீ ஜகதவநம
ஹாதீக்ஷிதோऽஜ்ஞாயி தேந ॥ ௧௨ ॥

---

இந்தத் திருவாய்மொழியில் திருப்பாற்கடலில் தூங்குகிற எம்பெருமான உலகத்தை ரக்ஷிப்பதாகிய பெரிய விரததைக் கைக்கொண்டிருக்கிறுன என்று பததுக காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) ஆபததாலததில் உதவுகிறவன என்கிற கீர்த்தியையுடையவனுய் இருப்பது; (2) ஆச்ரிதாகளை ரக்ஷிப்பதற்காகவே யதுவம்சத்தில் பிறந்தது; (3) தைரியததையும வீரயததையும் உடையவன் என்கிற பிரஸித்தியுள்ளவனுயிருப்பது; (4) குணங்களையும தோஷங்களையும் பாராமல் உலகங்களை அளந்த தன திருவடியால் எல்லா தலைகளிலும் திருவடியை வைத்தது; (5) மேகம மழைபெய்து தாபததைப் போக்குவதுபோல் ஆச்ரிதர்களுடைய துககஙகளைப போககுவது; (6) பகலை ராததிரியாகப் பண்ணினது முதலான ஆச்சரியமான வேலைகளைச் செய்வது; (7–8) திருவாழியையும சங்கையும் வேண்டிய வேளையில் தேடாமல் எப்போதும் திருக்கைகளில் வைத்துக் கொண்டு இருப்பது; (9) ஆச்ரிதர்களைக குளிரப்பாாககும் தாமரைக் கணணுகிய ஸம்பததை உடையவனுயிருப்பது; (10) ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காக வாமநனுய் அவதாரம் செய்து மஹாபலியிடம் யாசகனுய்ப் போனது.

# ஐந்தாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில், ராத்திரியில் மிகுந்த இருட்டாலும், தமக்கு அநுகூலமாக இருக்கவேண்டியவர்கள் தூங்கினபடியாலும் ஆழ்வார் தனியாயிருந்து மிகுந்த வருத்தத்தை அடைந்து எம்பெருமானுடைய குணங்களை நினைக்கவும் முடியாதபடி இருந்தார். பொழுது விடிந்து, அநுகூலமாயிருக்கிறவர்கள் கிட்ட இருக்கையில் அந்த வருத்தம் போய், எம்பெருமானை மனதால் அநுபவிக்கும்படி சக்தியுள்ளவர் ஆனார். அதனால் ஸந்தோஷமும் பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமையால் துக்கமும் இருந்தன.

(2) இப்படியிருக்கையில் வேண்டியவர்கள் "நீ எம்பெருமானை ஆசைப்படுவது, அவனைவிட்டுப் பிரிந்த துக்கம் பிறருக்குத் தோன்றும்படி இருப்பது, அவன் எழுந்தருளியிருக்கும் திருக்குறுங்குடிக்குப் போக ஆரம்பிப்பது ஆகிய இவைகளைப் பார்த்து உலகத்தார், அவன் இரக்கமில்லாதவன் என்று எண்ணுவர்கள். இதுவே நமக்குப் பழியாகும். ஆகையால் அவன் வருகிறவரையில் பொறுத்திரு." என்று சொல்ல, ஆழ்வார் நம்பியின் அழகையும் அவனுடைய நகைகள் ஆயுதங்கள் சேர்க்கையையுமே என் மனது நினைத்துக்கொண்டிருக்கிறது. அவைகளைத் தவிர வேறொன்றையும் நினைக்காது இதை நீங்கள் அறியவில்லை என்று ஆழ்வார், ஒரு பிராட்டி தாயாரையும் வேண்டியவர்களையும் பார்த்து சொல்லுவதுபோல் அருளிச்செய்கிறார் :—

( அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்.)

எங்ஙனேயோ வன்னை மீர்கா ளென்னை முனிவதுநீர்
நங்கள் கோலத் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
சங்கி னோடும் நேமி யோடுந் தாமரைக் கண்களோடுஞ்
செங்கனிவா யொன்றி னோடுஞ் செல்கின் றதென் னெஞ்சமே.

(ப - ரை) அன்னைமீர்காள்! நீர், என்னை, முனிவது-கோபிப்பது, எங்ஙனேயோ - எப்படியோ, நங்கள் - நம்முடைய, கோலம்-அழகான, திருக்குறுங்குடி நம்பியை - திருக்குறுங்குடியில் எழுந்தருளியிருக்கும் குணங்கள் நிறைந்த, எம்பெருமானை, நான் கண்ட

பின் - நான் பார்த்தபிறகு, என் நெஞ்சம் - என் மனது, சங்கினோடும்-சங்குடனும், நேமியுடனும் - திருவாழியுடனும், தாமரை கண்களோடும், செம் கனி வாய் ஒன்றினோடும் - சிவந்த கோவைப் பழம்போன்ற திருப்பவளம் ஒன்றோடும், செல்கின்றது—அவைகளையே பற்றி இருக்கிறது.

(கருத்து) என்னுடைய ஸ்வபாவத்தை அறிந்த தாய்மார்களே! நான் திருக்குறுங்குடி நம்பியின் திருமேனி அழகில் அகப்பட்டிருப்பது உங்களுக்குத் தெரியாதா? அந்த அழகை யன்றோ நீங்கள் கோபிக்கவேண்டியது? என்னை எப்படி கோபிக்கலாம்? அழகான திருக்குறுங்குடியில் நமக்காக அவதாரம் செய்திருக்கிற நம்பியை நான் பார்த்தபின், அவனுடைய திருச்சங்கத்தையும், திருவாழியையும், செந்தாமரைக் கண்களையும், செங்கனிவாயையும் என் மனது நினைத்துக்கொண்டு அவைகளில் நன்றாகப் படிந்து இருக்கிறது. செங்கனிவாயை நினைக்கும்போது அந்த ஒன்றையே என் மனது நினைக்கிறது. (1)

---

அவ—தாய்மார்கள் "திருக்குறுங்குடி நம்பியின் அழகை நாங்கள் பார்க்கவில்லையா? நாங்கள் பேசாதிருக்க, நீ ஏன் இந்தப் பாடு படுகிறாய்" என்று கோபித்துச் சொல்ல, ஆழ்வார் இதில் பதில் சொல்லுகிறார் :—

என்னெஞ் சினூடேக் கிக்கா ணீரேன் னைமுனி யாதே
தென்னஞ் சோலைத் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
மின்னு நூலுங் குண்ட லமுமார் விற்றிரு மறுவு
மன்னு பூணும் நான்கு தோளும் வந்தெங்கு நின்றிடுமே. (௨)

(ப - ரை) என்னை முனியாதே - என்னிடத்தில் கோபத்தைச் செய்யாமல், என் நெஞ்சினால் நோக்கி - என் நெஞ்சை இரவலாக வாங்கிக்கொண்டு பார்த்து, காணீர் - (அவன் அழகைப்) பாருங்கள், தென்னம் சோலை - தெற்கு தேசத்திலிருக்கிற அழகான சோலைகளால் சூழப்பட்ட, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், மின்னு நூலும் - (திருமேனிக்கு ஒரு புதிய அழகை உண்டாக்கும்படி) மின்னுகிற திரு யஜ்ஞோபவீதமும், குண்டல

முடும், மார்வில் திரு மறுவும் - மார்பில் இருக்கிற ஸ்ரீவத்ஸம் என்கிற மறுவும், மன்னு பூணும் - (திருமேனிக்கு) பொருந்தியிருக்கிற நகைகளும், நான்கு தோளும், எங்கும் - நான் போகுமிடமெல்லாம், வந்து, நின்றிடும் - நிற்கின்றன.

(கருத்து) என்னைக் கோபிக்கவேண்டாம். என்னைப்போல ப்ரீதியுள்ள நெஞ்சால் அவன அழகைப் பாருங்கள். திருக்குறுங்குடி நம்பியை நான கண்டபின்பு அவனுடைய யஜ்ஞோபவீதமும், குண்டலங்களும், திருமார்பிலிருக்கும் ஸ்ரீவத்ஸமும, திருமேனிக்குப் பொருந்தின நகைகளும், நானகு தோள்களும் நான் எங்கே போனாலும என்னுடன கூடவே வந்து நிற்கின்றன.

(இ - ம்) முனியாதே - எதிர்மறை வினையெச்சம். (௨)

---

நின்றி டுந்தி கைக்கு நையுமென் றன்னைய ரும்முனிதிர்
குன்ற மாடத் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
வென்றி வில்லுந் தண்டும் வாளுஞ் சக்கரமுஞ் சங்கமு
நின்று தோன்றிக் கண்ணு ணீங்கா நெஞ்சுள்ளு நீங்காவே (௩)

(ப - ரை) அன்னையரும, நின்றிடும் - நிற்கிறாள், திகைக்கும் - மோஹத்தை அடைந்திருக்கிறாள், நையும - தளர்ச்சியை அடைகிறாள், என்று - என்று சொல்லி, முனிதிர் - என்னிடத்தில் கோபிக்கிறீர்கள், குன்றம் மாடம் - மலைகள் போல் உயர்ந்த வீடுகளையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின, வென்றி வில்லும் - ஜயத்தைக் கொடுக்கும் வில்லும், தண்டும - கதையும், வாளும் - கத்தியும், சக்கரமும் - திருவாழியும், சங்கமும், கண்ணுள் - என்னுடைய கண்களுக்குள்ளே, நின்று தோன்றி - நிலையாகத் தோன்றி, நீங்கா - (அவைகளை விட்டுப்) போகின்றனவில்லை, நெஞ்சுள்ளும நீங்கா - (என் மனதிலுமிருந்து கொண்டு அதைவிட்டு) போகின்றன இல்லை.

(கருத்து) திருக்குறுங்குடி நம்பியின் சௌரியம் முதலான குணங்களில் நான் அகப்பட்டிருப்பதை அறியும்படி கிட்டின பந்துக்களான தாய்மார்களே! "இவள் ஒன்றும் செய்ய முடியாதபடி அசையாமல் இருக்கிறாள். சொன்னதைச் செய்ய முடியாதபடி மோஹத்தை அடைந்திருக்கிறாள். தளர்ச்சியுள்ள

வளாயிருக்கிறாள்" என்று சொல்லி எனனிடம கோபிக்கிறீர்களே, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்பு அவனுடைய ஐந்து ஆயுதங்களும என் கண்களிலும என மனதிலும் நிலையாய் நிற்கின்றன. அவைகளைவிட்டுப் போகிறவைகள் அல்ல.

(இ - ம்) நீங்கா - எதிர்மறை வினைமுற்று. (3)

---

நீங்க நில்லாக் கண்ண நீரகளேன் றன்னைய ரும்முனிதிர்
தேங்கொள் சோலைத் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
பூந்தண் மாலைத் தண்டு ழாயும் பொன்முடி யும்வடிவும்
பாங்கு தோன்றும் பட்டும் நாணும் பாவியேன் பக்கத்தவே. (ச)

(ப - ரை) அன்னையரும், கண்ண நீர்கள் - இவளுடைய கண்களுடைய நீர்கள், நீங்க நில்லா-போய நிற்கிறவைகள் அல்ல, என்று முனிதிர் - என்று கோபிக்கிறீர்கள், தேம் கொள் - தேனைப் பெருக்குகிற, சோலை - சோலைகளையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், பூ தண் மாலை - அழகான பெருத்த மாலையாகத் தொடுக்கப்பட்ட, தண் துழாயும்-குளிர்ந்த துளஸியும, பொன் முடியும் - தங்கத்தால செய்யப்பட்ட கிரீடமும், வடிவும் - திருமேனியும், பட்டும் - பீதாம்பரமும், நாணும்- * விடுநாணும், பாவியேன் - பாவம் செய்த எனனுடைய, பக்கத்தவே - பக்கங்களிலிருக்கின்றன.

(கருத்து) நான் நமபியைவிட்டுப் பிரிந்து உயிரோடு இருக்க முடியாதென்று உங்களுக்குத தெரியாதா? தாயமார்களே! நீங்களும் இப்படியறியாதவர்கள்போல் "இவள் கண்ணீரைப் பெருக்குகிறாளே அது நிற்கிறதாயில்லை." என்று கோபிக்கிறீர்களே. தேங்கொள் சோலைத் திருககுறுங்குடி நமபியைக் கண்டபின, அவனுடைய துளஸிமாலையும், தங்க கிரிடமும், திருமேனியும், அவன் இடுப்புக்குத தகுதியாகத் தோன்றுகிற பட்டும், விடு

---

* விடுநாண் என்பது அரைஞாணிலிருந்து கீழே தொங்குகிற ஒரு சின்ன சங்கிலி.

நானும் என் பக்கத்திலேயே இருந்து துக்கப்படுகின்றன. நான் அவனைக்கண்டும் அவனை அநுபவிக்க முடியாதபடி பாவம் செய்திருக்கிறேன். (4)

---

பக்கம் நோக்கி நிற்கு நையுமென் றன்னையரும் முனிதிர
தக்க கீர்த்தித் திருக்குறுங்குடி நம்பியைநான் கண்டபின்
தொக்க சோதித் தொண்டை வாயும் நீண்ட புருவங்களும்
தக்க தாமரைக் கண்ணும் பாவியே னாவியின் மேலனவே (5)

(ப-ரை) பக்கம் நோக்கி நிற்கும் - நம்பி வரக்கூடிய பக்கத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறாள், நையும் - (அவன் வராதபோது) தளர்ச்சியை அடைகிறாள், என்று - இப்படிச் சொல்லி, அன்னையரும், முனிதிர் - கோபிக்கிறீர்கள், தக்க கீர்த்தி - தகுந்த கீர்த்தியையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், தொக்க சோதி - கூட்டமாகச் சேர்ந்திருக்கிற காந்தியையுடைய, தொண்டை வாயும் - கோவைப்பழம்போன்ற திருப்பவளமும், நீண்ட புருவங்களும், தக்க தாமரைக் கண்ணும் - அவைகளுக்குத் தகுந்த தாமரைக் கண்களும், பாவியேன் - பாவம் செய்த என்னுடைய, ஆவியின் மேலன - ஸ்வரூபத்தின் மேலே இருக்கின்றன.

(கருத்து) என்னோடு பழகின தாய்மார்களான நீங்களும், "நம்பி இந்தப்பக்கம் வருவன் என்று எண்ணிக்கொண்டு இவள் அங்கேயே பார்த்துக்கொண்டிருக்கிறாள்; அவன் வராதபோது தளர்ச்சியை அடைகிறாள்." என்று கோபிக்கிறீர்கள். திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், அந்த ஊருக்குத் தக்கத் தகுந்ததாயிருப்பதுபோல் ஒன்றுகொன்று தகுந்ததாயிருக்கிற அவனுடைய மிகுந்த காந்தியுள்ள, செங்கனிவாயும், நீண்ட புருவங்களும், அவைகளைப்போல காதுவரையில் நீண்டிருக்கிற தாமரைக் கண்களும் என்னுடைய ஸ்வரூபத்தில் இருந்துகொண்டு அவைகளை நான் மறக்க முடியாதபடி இருந்துகொண்டு என்னை ஹிம்ஸை செய்கின்றன. அவன் அழகைக்கண்டு வருத்தப்படும்படியான பாபத்தை நான் பண்ணியிருக்கிறேன். (5)

---

மேலும் வன்பழி நங்குடிக் கிவளென் றன்னைகா ணக்கொடாள்
சோலை சூழ்தண் டிருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
கோல நீள்கொடி மூக்குந் தாமரைக் கண்ணுங் கனிவாயும்
நீல மேனியு நான்கு தோளுமென் னெஞ்ச நிறைந்தனவே (௬)

(ப - ரை) நம் குடிக்கு - நம்முடைய குலத்துக்கு, இவள், மேலும் வன் பழி-(இப்போதுமாத்திரமன்று), வருங்காலத்திலும பலமான பழியாக இருக்கிறாள், என்று - என்று நினைத்து, அன்னை, காண கொடாள் - (அவனை நான்) பார்க்க இடங்கொடுக்காதபடி பார்த்துக்கொண்டிருக்கிறாள் சோலை சூழ் தண் திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், கோலம் நீள் கொடி மூக்கும்-அழகிய நீண்ட கொடிபோல வந்திருக்கிறதோ என்று சொலலும்படியான மூக்கும், தாமரைக்கண்ணும - (அந்தக் கொடியின் பூவோ என்று சொல்லும்படியிருக்கிற) தாமரைக்கண்களும, கனி வாயும-(அந்தப் பூவின் பழமோ என்று சொல்லும்படியான) திருப்பவளமும், நீல மேனியும் - (இவைகளுக்கு ஒரு அழகைச் செய்கிற) நீலமான திருமேனியும், நான்கு தோளும - (பச்சிலை மரம் கிளைத்தாற்போல இருக்கிற) நான்கு தோள்களும், என் நெஞ்சம நிறைந்தன - என்னுடைய மனதில் நிறைந்து இருக்கின்றன.

(கருத்து) நம்பி தானுகவே வருவதை எதிர்பார்த்துக் கொண்டு அடங்கியிருக்கவேண்டியது நம்முடைய குலம். அப்படி இல்லாமல இவள் படுகிற பாடானது நம்முடைய குலத்துக்கு எந்நாளுமிருக்கும்படியான பழியை உண்டுபண்ணும் என்று நினைத்து, அவனை நான பார்ப்பதற்கு இடங்கொடுக்காதபடி தாயார் பார்த்துக்கொண்டிருக்கிறாள். திருக்குறுங்குடி நம்பியை நான கண்டபின, அவனுடைய அழகான நீண்ட கொடிபோல் இருக்கிற மூக்கும, தாமரைக்கண்களும், செங்கனிவாயும், நீலமான திருமேனியும், நான்கு தோள்களும என நெஞ்சில் வேறு விஷயங்களுக்கு இடமிலலாதபடி நிறைந்திருக்கின்றன.

(இ - ம்) கொடாள் - எதிாமறை வினைமுற்று. (6)

நிறைந்த வன்பழி நங்குடிக் கிவளென் றன்னைகா ணககொடாள்
சிறந்த கீர்த்தித் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
நிறைந்த சோதி வெள்ளஞ் சூழ்ந்த நீண்டபோன் மேனியோடும்
நிறைந்தென் னுள்ளே நின்றொ ழிந்தா னேமியங் கையுளதே. (எ)

(ப-ரை) நம குடிக்கு - நம்முடைய குலத்துக்கு, இவள், நிறைந்த - ஒருவராலும் விலக்கமுடியாத, வன் பழி-(எப்பொழுதும் இருக்கக்கூடியதாய்) பலமான பழியை உண்டுபண்ணுகிறாள், என்று - என்று நினைத்து, அன்னை, காண கொடாள் - அவனைப் பார்க்க இடங்கொடுக்கிறவளில்லை, சிறந்த கீர்த்தி - சிலாக்கியமான கீர்த்தியையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான கண்ட பின், நிறைந்த, சோதி வெள்ளம் - காந்திப் பிரவாஹத்தால், சூழ்ந்த - சூழப்பட்ட, நீண்ட - மிகவும் இனியதான, பொன் மேனியோடும், என் உள்ளே நிறைந்து - என் மனதிலே நிறைந்து, நின்றொழிந்தான - அதில் நிலையாய் (போகவேண்டிய வேறு இடமில்லாதபடி) இருக்கிறான, நேமி - திருவாழியானது, அம் கை உளது - அழகான திருக்கையிலிருக்கிறது.

(கருத்து) நம்முடைய குலத்துக்கு ஒருவராலும் ஒரு காலத்திலும் விலக்கமுடியாதபடியான பழியை உண்டுபண்ணுகிறாள் என்று என்னை தாயார் அவனை நான காணும்படி இடங்கொடுக்கிறவளில்லை. திருக்குறுங்குடி நம்பியை நான கண்டபின்பு நிறைந்த காந்திப்பிரவாஹத்தின் நடுவிலிருக்கிற பொன்மேனியுடன் அவன் என் மனதில் நிறையப் புகுந்து நிலையாயிருக்கிறான. அவனுக்குப் போக வேறு இடமில்லை போல் தோன்றுகிறது. இந்த திருமேனி அழகு ஒரு தட்டு, அவனை கையுமாய் திருவாழியுமாய் இருக்கும் அழகு மாத்திரம் ஒரு தட்டாயிருக்கிறது. ஆகையால அந்த அழகு என மனதில் வேர் ஊன்றியிருக்கிறது. அவன் கையில் திருவாழியில்லாவிட்டால் நான பழிக்குப் பயப்பட்டு மீளலாம். அதைத் நான் பார்த்தபிறகு மீளமுடியுமோ?

குறிப்பு:—பொன்மேனி என்பதற்குப் பொன்னால் செய்யப்பட்ட திருமேனி என்று பொருள் அல்ல. திருமேனி நீலமாயிருப்பதால் பொன்போல் மஞ்சள் வர்ணமாய் ஆயிருக்கவில்லை. ஆகையால், ஸத்துவம் என்கிற தூய குணமுள்ள திரவியத்தால் செய்யப்பட்ட திருமேனி என்றுதான் பொருள் (7)

கையு ணன்முகம் வைக்கு நையுமென் றன்னைய ரும்முனிதிர்
மைகொண் மாடத் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
செய்ய தாமரைக் கண்ணு மல்குலுஞ் சிற்றிடை யும்வடிவு
மொய்கோ ணீள்குழற் றாழ்ந்த தோள்களும் பாவியேன்
[முன்னிற்குமே. (அ)

(ப - ரை) நல் முகம் - நல்ல முகத்தை, கையுள் வைக்கும் - கையில் வைத்துக்கொண்டு இருக்கிறாள், நையும் - தளர்ச்சியை அடைகிறாள், என்று - என்று சொல்லி, அன்னையரும் - தாயாரான நீங்களும், முனிதிர் - கோபிக்கிறீர்கள், மை கொள் மாடம் - (நம்பியின் திருமேனியின் காந்தியால்) நீலவர்ணத்தையடைந்த வீடுகளையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், செய்ய தாமரைக்கண்ணும் - சிவந்த தாமரைக்கண்ணும், அல்குலும் - நிதம்பமும், சிறு இடையும் - சிறிதான இடுப்பும், வடிவும் - திருமேனியும், மொய் கொள் - நெருங்கியிருப்பதைக் கொண்ட, நீள் குழல் - நீண்ட தலைமயிர்கள், தாழ்ந்த - தொங்குகிற, தோள்களும், பாவியேன் - பாபம் பண்ணின என்னுடைய, முன் நிற்கும் - முன்னாலே நிற்கின்றன.

(கருத்து) கை தொடப் பொறுக்க முடியாதபடி மிருதுவான முகத்தை இவள் வருத்தத்தினால் கையில் வைத்துக்கொண்டிருக்கிறாள். அதுவும் பொறுக்க முடியாமையால் தளர்ச்சியை அடைகிறாள் என்று சொல்லி, தாயார் கோபிக்கிறாள். நம்பியின் அழகின் ரஸத்தை அறிந்த அவளும் அதையறியாதவளைப்போலே இருக்கவேண்டுமோ? திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்பு, அவனுடைய செந்தாமரைக்கண்களும், விசாலமான நிதம்பங்களும், சிறிதான இடுப்பும், இந்த அவயவங்களின் அழகுக்கு ஆதாரமான திருமேனியும், நெருங்கி நீண்டிருக்கிற தலைமயிர் தொங்குகிற தோள்களும், எனக்கு முன்னாலே இருக்கின்றன. நான் அவனை அநுபவித்துப் பிறகு அவனைவிட்டுப் பிரியும்படியான பாபத்தைப் பண்ணியிருக்கிறேன். (8)

முன்னின் றாயென்று தோழி மார்களு மன்னைய ரும்முனிதிர்
மன்னு மாடத் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
சென்னி நீண்முடி யாதி யாய வுலப்பி லணிகலத்தன்
கன்னல் பாலமு தாகி வந்தென் னெஞ்சங் கழியானே (௯)

*(ப - ரை) முன் நின்றாய் என்று - (எல்லாருடைய கண்களுக்கு) முன்னாலே நிற்கிறாய் என்று சொல்லி, தோழிமார்களும் அன்னையரும், முனிதிர் - கோபிக்கிறீர்கள், மன்னு மாடம் - நிலையாய் இருக்கும் மாடங்களையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின், சென்னி - தலையிலிருக்கிற, நீள் - நீண்ட, முடி ஆதியாய - கிரீடம் முதலான, உலப்பு இல் - கணக்கு இல்லாத, அணிகலத்தன் - நகைகளையுடையவன், கன்னல் பால அமுது ஆகி - கற்கண்டும் பாலும் சேர்த்தது போல் இனியவனாகி, வந்து - என் மனதில் வந்து, என் நெஞ்சம் கழியான் - அதிலிருந்துகொண்டு அதை விடுகிறதில்லை*

*(கருத்து) ஒருவராலும் பார்க்க முடியாதபடி அடக்கமுள்ள நீ எல்லாருக்கும் முன்னாலே வந்து நிற்கிறாய் என்று சொல்லி, எனக்கு ஹிதத்தைச் செய்கிற தாய்மார்களும், எனக்குப் பிடித்ததைச் செய்கிற தோழிமார்களுமான நீங்கள் ஒரே விதமாய் என்னைக் கோபித்துக்கொள்ளுகிறீர்கள். திருக்குறுங்குடி நம்பியை நான் கண்டபின்பு, திருமுடியிலிருக்கிற நீண்ட கிரீடம் முதலான கணக்கில்லாத நகைகளையுடைய நம்பி கற்கண்டும் பாலும் சேர்த்ததுபோல் இனியவனாகி, என் நெஞ்சில் வந்து என்னால் மறக்க முடியாதபடி அதில் நிலையாயிருக்கிறான். அதைவிட்டுப் போகிறானில்லை.* (9)

---

கழிய மிக்கதோர் காதல ளிவளென் றன்னைகா ணக்கொடாள்
வழுவில் கீர்த்தித் திருக்கு றுங்குடி நம்பியைநான் கண்டபின்
குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதிவெள் ளத்தினுள்ளே
எழுவ தோருரு வென்னெஞ் சுள்ளெழு மார்க்கு மறிவரிதே. (௧0)

*(ப - ரை) இவள், கழிய - நாளாக நாளாக, மிக்கது - வளருகிற, ஓர் - ஒப்பில்லாத, காதலள் - ஆசையையுடையவள், என்று - என்று நினைத்து, அன்னை, காண கொடாள் - (அவனை நினைக்கவும்*

கூட) இடம் கொடுக்கிறவளில்லை, வழுவில் கீர்த்தி-குற்றம் இல்லாத கீர்த்தியையுடைய, திருக்குறுங்குடி நம்பியை நான கண்டபின், தேவர் குழாங்கள் - நித்தியஸூரிகளின் கூட்டங்கள், குழுமி - சேர்ந்து, கை தொழ - கைங்கரியம் பண்ணும்படி, சோதி வெள்ளத்தினுள்ளே - காந்தியின் பிரவாஹத்துக்குள்ளே, எழுவது - பிரகாசிக்கிற, ஓர் - ஒப்பில்லாத, உருவு-திருமேனியானது, என் நெஞ்சுள் - என மனதுள், எழும் - பிரகாசிக்கிறது, ஆர்க்கும் - எவர்க்கும, அறிவு அரிது - அதை அறிவது முடியாததாயிருக்கிறது.

(கருதது) உலகததில் வேண்டிய ஒருவனைப் பார்த்து நாளாகிவிட்டால் அவனிடததில ஆசை வரவரக் குறையும, இவள் ஆசையானது விலக்ஷணமாயிருக்கிறது. நம்பியைக் காணுதபோதிலும், அது வரவர அதிகமாக ஆகிறது எனறு எண்ணி தாயாா அவனை நினைககவும்கூட இடங்கொடுக்கிறவளில்லை. திருககுறுங்குடி நம்பியை நான கண்டபின்பு, நித்தியஸூரிகள் கூட்டமாய் வந்து ஸேவிக்கிறதாய் காநதியின் பிரவாஹததின நடுவில் பிரகாசிக்கிறதாய் இருக்கிற அவன் திருமேனி என மனதில விளங்குகிறது. அதை எப்படி நான் மறக்கமுடியாதோ, அப்படியே மற்றவர்களுக்கு அதை நினைக்கவும் முடியாது.

குறிப்பு :—ஒரு பிரவாஹத்தில் இறங்குகிறவர்கள் ஒருவரோடு ஒருவர் சேர்ந்து அதில இறங்குவதுபோல் நித்தியஸூரிகள் கூட்டமாய வந்து காந்திப் பிரவாஹத்தின் நடுவில் விளங்கும் நம்பியின திருமேனியை ஸேவிக்கிறார்கள் எனறு ஆழ்வார் உதப்ரேக்ஷிக்கிறார். (10)

---

அறிவ ரியபி ரானை யாழியங் கையனை யேயலற்றி
நறிய நன்மலர் நாடிநன் குருகூர்ச் சடகோ பன்சொன்ன
குறிகோ ளாயிரத் துள்ளிவை பத்துந் திருக்குறுங் குடியதன்மே
லறியக் கற்றுவல் லார்வைட் ணவராழ் கடன்ஞா லத்துள்ளே.

(பரை) ஆழி அம் கையனை - திருவாழியை அழகான திருக்கையிலுடையவனாய், அறிவு அரிய பிரானை - எல்லாராலும் அறியமுடியாதவனாய், உபகாரம் செய்தவனாயிருக்கிற எம்பெரு

மானை, அலற்றி-(அவனுடைய குணங்களைப்) பலதடவை சொல்லி, நறிய - வாஸனையையுடைய, நல் மலர் நாடி - நல்ல புஷ்பங்களைத் தேடி, நல் குருகூர் சடகோபன் சொன்ன - நல்லவரான ஆழ்வாரால் சொல்லப்பட்ட, குறி கொள் - அவனுடைய நகைகள் ஆயுதங்கள் முதலான அடையாளங்களைக்கொண்டு (சொல்லுகிற), ஆயிரத்துள் - ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, திருக்குறுங்குடி அதனமேல் - திருக்குறுங்குடியைப்பற்றிச் சொன்ன, இவை பத்தும - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், அறியக் கற்று - நன்றாய் அறியும்படி அடிக்கடி படிக்க, வல்லார் - சக்தியுள்ளவர்கள், ஆழ் கடல் ஞாலத்துள்-ஆழமான ஸமுத்திரத்தினால் சூழப்பட்ட பூமிக்குள்ளே இருக்கும்போதே, வைட்ணவர் - எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதில் ருசியுள்ளவர்களாயிருப்பார்கள்.

(கருத்து) திருவாழியும் கையுமாயிருந்தும, எல்லாராலும் அறியமுடியாதவனாய் தமக்கு உபகாரம செய்கிறவனாயிருக்கிற எம்பெருமானுடைய ஒவ்வொரு குணங்களைப் பிரீதியின் மிகுதியால் பலதடவை சொல்லி, எமபெருமானை ஆராதிப்பதற்கு வாஸனையுள்ள நல்ல பூக்களைத் தேடுவதுபோல அவனைச் சொல்லுவதற்கு நல்ல சொற்களைத தேடி, நமபியின அழகைப் பூர்ணமாய்ப் பார்க்கும்படியான பெருமையையுடைய ஆழ்வார், அவனுடைய திருவாழி முதலான ஆயுதங்களையும் நகைகளையும் அழகையும் விஸ்தாரமாய்ச் சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களையும நன்றாய் அறியும்படி அடிக்கடி படிக்கிறவர்கள் ஸம்ஸாரத்திலிருக்கும்போதே விஷ்ணுவின் கைங்கரியத்தில் ஆசையுள்ளவர்களாக ஆவர்கள்.

குறிப்பு:—நம்பி திருவாழியும கையுமாயிருக்கும் அழகை ஆழ்வார் அநுபவித்தார். மற்றவர்கள் அநுபவிக்கவில்லை. இதைப் பார்த்து, ஒரு நிதியை மற்றவர்கள் பார்க்காதபடி மறைத்து வைப்பதுபோல், எம்பெருமான் தன் அழகைத் தமக்குமாத்திரம் காட்டி, மற்றவர்கள் அதைப் பார்க்காதபடி செய்து, இவ்விதமாக அவன் தமக்கு உபகாரம் செய்தானென்று ஆழ்வார் நினைக்கிறார். இது "பிரானை" என்கிற சொல்லால் ஏற்படுகிறது.

(2) ஆழ்வார் பாட்டுக்கள் பிரீதியின் மிகுதியால் நீர் நிறைந்த ஏரியிலிருந்து நீர் வழிந்து ஓடுவதுபோல் தானாக வரு

கின்றன என்று சொல்லப்பட்டது. இப்படியிருக்க, அவனை வர்ணிப்பதற்காக நல்ல சொற்களைத் தேடுகிறார் என்று சொல்வது எப்படிக்கூடும் என்றால், மேல் மேல் வரப்போகிற பாட்டுக்கள் ஒவ்வொரு க்ஷணத்திலும் எம்பெருமானுக்குத் தகுந்தவைகளாய் நல்ல சொற்களுடன் வரவேண்டும் என்று அவர் ஆசைப்பட்டார். இதனால் விரோதமில்லை.

(3) "திருக்குறுங்குடியதன்மேல்" என்பதற்கு, அழகாலும் ஸௌசீல்யம் என்கிற குணத்தாலும் வைகுந்தத்திலிருக்கும் பரரூபத்தைக்காட்டிலும் விபவ அவதாரங்களில் எடுத்துக்கொள்ளும் ரூபங்களிற்காட்டிலும் அர்ச்சையாய் திருக்குறுங்குடியில் எழுந்தருளியிருக்கும் ரூபத்தில், பரத்வம் அதிகமாகத் தோன்றுகிறது என்று கருத்து.

(4) இந்தத் திருவாய்மொழி நம்பி விஷயமாயிருக்க, 'திருக்குறுங்குடியதன்மேல' என்று சொன்னது ஆழ்வாருக்கு அவன் இருக்கும் ஊரிலிருக்கும் பிரீதியின் மிகுதியாலே. (11)

---

ஶங்காத்யைர்யஜ்ஞஸூத்ராதிபிரபி ச ததா ஶார்ங்கமுக்யைர்
வ்யக்தைரைஶ்வர்யபிம்போஷ்டாத்யைஸ்ஸுநாஸாத்யதிநிர
வதிஜ்யோதிர்மத்யவர்திமூர்த்யா | நேத்ராப்ஜாத்யைரஶே
ஷாஹரணஸுஷமயா ஸேவ்யஸத்கைங்கர்யநாஜ்ஞா தைவ:
ஸ்வாநுபூஜ்யம் ஸ்ம்ருதிவிஷயதயா ஹார்திவைசித்ர்யயாயி ||௧௧||

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானிடத்தில் பக்தி உள்ளவர்களுக்கு அவனை மறக்கமுடியாதபடி அவர்கள் மனதில் அவன் தன்னுடைய பத்து அடையாளங்களால் எப்போதும் விளங்குகிறான் என்று சொல்லப்படுகிறது. அவைகளாவன :—
(1) சங்கம் முதலானவைகள்; (2) யஜ்ஞோபவீதம் முதலானவைகள்; (3) வில்லு முதலானவைகள்; (4) துளஸீ; (5) கோவைப் பழம்போன்ற திருப்பவளம் முதலானவைகள்; (6) கொடிபோன்ற மூக்கு முதலானவைகள், (7) அளவில்லாத காந்தி வெள்ளத்தின் நடுவிலிருக்கும் திருமேனி; (8) தாமரைக்கண் முதலானவைகள்; (9) கணக்கில்லாத நகைகளின் காந்தி; (10) தன் பக்தர்களினால ஸேவிக்கப்பட்டு, அதினால் இனியவனாயிருப்பது.

---

# ஆறாம் திருவாய்மொழி.

அவ—இந்தப் பத்து மூன்றாம் திருவாய்மொழியான மாசறு சோதியில் பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமையால், ஆழ்வார் மிகுந்த வருத்தப்பட்டு மடலூர ஆரம்பித்தார். அது முடியாமல் ஊரெல்லாம் (5—4) என்கிற திருவாய்மொழியில் எல்லாரும் தூங்குகையில், தாம் தனியாயிருந்து போதுகளை அடைந்து என்னை ரக்ஷிக்கவேண்டிய எம்பெருமானை யாரில்லையே என்று பிரலாபித்துக்கொண்டிருந்தார். பொழுது விடிந்த பிறகு திருக்குறுங்குடி நம்பியின் நினைவு வந்து, அதினால் ஸந்தோஷமும், பாஹ்யஸம்ச்லேஷம் இல்லாமையால் துக்கமும் இருந்தன. அப்போது எம்பெருமான் தானாக வருகிறவரையில் பொறுத்திருக்கக் கூடாதா என்று சொன்னவர்களுக்கு அவனை எப்படி மறக்கக் கூடும் என்று, எங்ஙனேயோவில் (5—5) அருளிச்செய்தார். நம்பியினுடைய மானஸாநுபவத்தால் வந்த ஸந்தோஷம் அடங்கவே, பாஹ்யஸம்ச்லேஷம் இல்லாத வருத்தம் மேலிட்டது. அதைப் போக்குவதற்காகத் தம்மை எம்பெருமானாக நினைத்து, அவன் கிருஷ்ணனாய் அவதரித்த காலத்தில் செய்த லீலைகளையும், அவனே செய்த உலகத்தின் ஸ்ருஷ்டி முதலானவைகளையும் தாம் செய்ததாகச் சொல்லுகிறார். இப்படியே பிருந்தாவனத்தில் ராத்திரியில் கிருஷ்ணனைவிட்டுப் பிரிந்த கோபிகைகள் அநுகாரம் பண்ணிப் போது போக்கினார்கள்.

(2) எம்பெருமானை நினைப்பதுபோலில்லாமல் அநுகாரம் பண்ணுகையில் தாமும் எம்பெருமானும் ஒன்றாகத் தோன்றுகையில் பாஹ்யஸம்ச்லேஷத்தைப்போல அதுவும் ப்ரீதியைக் கொடுக்கும். ஆகையால், அதினால் பிரிவினாலுண்டான துக்கத்தைக் கொஞ்சம் பொறுத்துக்கொள்ளலாம்.

(3) இதை ஆழ்வாரைப்பற்றிக் கேட்கவந்த பந்துக்களுக்குத் தாயார் சொல்லுகிற வார்த்தையாக அருளிச்செய்கிறார். அவள் ஆழ்வார் அநுகாரம் பண்ணுவதை அறியாமல், அவருடைய பேச்சு ஆச்சரியமாயிருந்ததால் எம்பெருமானுடைய ஆவேசம் உண்டாயிருக்கிறதோ என்று சொல்லுகிறாள்.

(எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

கடல்ஞாலஞ் செய்தேனும் யானே யென்னுங்
கடல்ஞால மாவேனும் யானே யென்னுங்
கடல்ஞாலங் கொண்டேனும் யானே யென்னுங்
கடல்ஞாலங் கீண்டேனும் யானே யென்னுங்
கடல்ஞால முண்டேனும் யானே யென்னுங்
கடல்ஞாலத் தீசன்வந் தேறக் கொலோ
கடல்ஞா லத்தீர்க் கிவையென் சொல்லுகேன்
கடல்ஞா லத்தென் மகள்கற் கின்றவே. (க)

(ப-ரை) கடல் ஞாலம் - ஸமுத்திரத்தாலே சூழப்பட்ட பூமியை, செய்தேனும் - உண்டுபண்ணினவனும், யானே என்னும் - நானே என்று சொல்லுகிறாள், கடல் ஞாலம், ஆவேனும் - அதில் உள்ளே நுழைந்து அதற்கு ஆத்மாவாய் அந்த ரூபமாய்த் தோன்றுகிறவனும், யானே என்னும், கடல்ஞாலம், கொண்டேனும் மஹாபலியிடமிருந்து வாங்கிக்கொண்டவனும், யானே என்னும், கடல் ஞாலம் கீண்டேனும் - பிரளய ஜலத்திலிருந்து பிரித்து மேலே கொண்டுவந்தவனும், யானே என்னும், கடல் ஞாலம் உண்டேனும் - பிரளய காலத்தில் வயிற்றில் வைத்து ரக்ஷித்தவனும், யானே என்னும், கடல் ஞாலத்தீசன் - கடல் ஞாலத்தையுடையவனான ஸர்வேசுவரன், வந்து ஏறக்கொலோ - வந்து இவளுக்குள்ளே ஆவேசித்திருக்கிறானோ, கடல் ஞாலத்து - பூமியில், என் மகள், கற்கின்ற - அடிக்கடி சொல்லுகின்ற, இவை - இந்த வார்த்தைகளை, கடல் ஞாலத்தீர்க்கு - பூமியிலிருக்கிற உங்களுக்கு, என் சொல்லுகேன் - எப்படிச் சொல்லுவேன்?

(கருத்து) ஸமுத்திரத்தால் சூழப்பட்ட பூமியை உண்டுபண்ணினவனும், அதுவாகத் தோன்றுகிறவனும், அதை மஹாபலியிடமிருந்து எடுத்துக்கொண்டவனும், அதைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தவனும், அதைப் பிரளய காலத்தில் வயிற்றில் வைத்து ரக்ஷித்தவனும் நானே. வேறு உதவியில்லாமல் இவை எல்லாவற்றையும் நானே செய்தேன் என்று இந்தப் பெண் சொல்லுகிறாள். பூமிக்குச் சொந்தக்காரனான எம்பெருமான் இவளுக்குள் ஆவேசித்திருக்கிறானோ, அதை நானறியேன். இவள் அடிக்கடி சொல்லுவது ஆச்சரியமாயிருக்கிறது. பூமியி

விருந்து ஸம்ஸாரத்தில் மூழ்கி எம்பெருமானைக் கொஞ்சமும் தெரியாத உங்களுக்கு இதை எப்படிச் சொல்லுவேன்? சொன்னால்தான் உங்களுக்குத் தெரியுமோ?

குறிப்பு:- எம்பெருமான உலகமாக ஆகமுடியாது. ஏனெனால் அவன் எல்லாம அறிந்தவன. ஆத்மாக்களுக்கு நல்ல அறிவு இல்லை. அவனுக்கு ஸ்வரூபத்தில் வேறுபாடில்லை. உலகமானது அடிக்கடி வேறுபாட்டையடைந்து வேறுவேறாகவே அடைகிறது. ஆகையால், எம்பெருமானையும் உலகத்தையும் ஒன்றாகச் சொன்னதற்குப் பொருள் உரையில் சொன்னபடியே கொள்ளவேண்டும். உலகத்தில் காணப்பட்டவெல்லாம் அந்தர்யாமியான எம்பெருமானேதான. அப்படியில்லாத தொன்றுமில்லை. இது 'யானே' எனகிற சொல்லில் ஏகாரத்தின் கருத்து.

(இ-ம) செய்தேனும் முதலான சொற்கள் வினையாலணையும் பெயர்கள், செய்தேன் - செய்தவன், நான. என - வினையெச்சம. 'எனனும்' என்கிற சொற்களோடு முடிகிறது. (1)

---

கற்குங்கல் விக்கெல்லை யிலனே யென்னும்
கற்குங்கல்வி யாவேனும் யானே யென்னும்
கற்குங்கல்வி செய்வேனும் யானே யென்னும்
கற்குங்கல்வி தீர்ப்பேனும் யானே யென்னும்
கற்குங்கல்விச் சாரமும் யானே யென்னும்
கற்குங் கல்வி நாதன்வந் தேறக்கொலோ
கற்குங் கல்வியீர்க் கிவையென் சொல்லுகேன்
கற்குங் கல்வியென் மகள்காண் கின்றவே (உ)

(ப-ரை) கற்கும் கல்வி - நான் படிக்கத் வித்யைகளுக்கு, எல்லையிலனே என்னும் - ஒரு முடிவில்லாதவன் என்று சொல்லுகிறாள், கற்கும் கல்வி ஆவேனும் - (எல்லாரும்) படிக்கிற வித்யைகளாக இருக்கிறவனும், யானே என்னும், கற்கும கல்வி, செய்வேனும - அவற்றை உண்டுபண்ணினவனும், யானே என்னும், கற்கும கல்வி தீர்ப்பேனும் - இவைகளுக்கு இன்னது கருத்து என்று நிச்சயிக்கிறவனும, யானே எனனும், கற்கும் கல்வி, சாரமும் - அவைகளுக்குப் பலனும், யானே என்னும், கற்கும் கல்வி,

நாதன் - இவைகளுக்கு யஜமானனை எம்பெருமான், வந்து ஏற கொலோ, கற்கும கல்வி - இனிமேல் படிக்கவேண்டிய வித்யை களையுடையவளாய்ச் சிறு பெண்ணாயிருக்கிற, என மகள், காண் கின்ற - பார்த்துச் சொல்லுகிற, இவை - இந்த வார்த்தைகளை, கற்கும கல்வியீர்க்கு - இனிமேல படிக்கவேண்டிய வித்யைகளை யுடைய உங்களுக்கு, என்ன சொல்லுகேன - எப்படிச் சொல்லு வேன்'

(கருத்து) ஸாந்தீபினி என்னும் குருவினிடத்தில் நான் படித்த வித்யைகளுக்கு ஒரு முடிவில்லை; உலகத்தார் பிரீதியுடன் படிக்கும வித்யைகள் எல்லாம நானிட்ட வழக்காயிருக்கின்றன. மறந்துபோன வேதத்தை அநதந்தக காலத்தில் வெளிப்படுத்தின வனும புராணம முதலானவைகளைச செய்தவனும், இவைகளுக்கு இன்னதுதான கருத்து என்று நிச்சயம செய்கிறவனும், இவை களுக்குப் பலனாயிருக்கிறவனும நானே; இப்படி இந்தப் பெண் சொல்லுகிறாள். எல்லா வித்யைகளுக்கும யஜமானனை ஸர்வேச வரன வந்து இவளுக்குள்ளே ஆவேசித்திருக்கிறானோ? இதை நான அறியேன. இவளோ சிறு பெண. வித்யைகளை இனிமேல படிக்க வேண்டியவள. இவள் சொல்லும வார்த்தைகள் ஆச்சரியமாய் இருக்கின்றன. இனிமேல் வித்யைகளைப் படிக்கவேண்டியவர் களாய், இப்பொழுது எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைக் கொஞ்சமும அறியாதவர்களான உங்களுக்கு இவைகளை எப் படிச சொல்லுவேன. சொன்னால்தான உங்களுக்குத தெரி யுமோ? (2)

காண்கின்ற நிலமெல்லாம் யானே யென்னுங்
 காண்கின்ற விசும்பெல்லாம் யானே யென்னுங்
காண்கின்ற வெந்தீயெல்லாம் யானே யென்னுங்
 காண்கின்ற விக்காற்றெல்லாம் யானே யென்னுங்
காண்கின்ற கடலெல்லாம் யானே யென்னுங்
 காண்கின் றகடல் வண்ண னேறக்கொலோ
காண்கின்ற வுலகத் தீர்க்கென் சொல்லுகேன்
 காணகின்ற வென்கா ரிகைசெய் கின்றவே. (௬)

(ப - ரை) காண்கின்ற - காணப்படுகிற, நிலம் எல்லாம் - பூமி முழுவதும், யானே என்னும், காண்கின்ற, விசும்பு எல்லாம்,

ஆகாசம் எல்லாம், யானே என்னும், காண்கின்ற, வெம் - உஷ்ணத்துக்கு இருப்பிடமான, தீ எல்லாம் - நெருப்பெல்லாம், யானே என்னும், காண்கின்ற, இ காற்று எல்லாம் - இந்தக் காற்று எல்லாம், யானே என்னும், காண்கின்ற, கடல் எல்லாம் - ஸமுத்திரத்திலுள்ள ஜலம் எல்லாம், யானே என்னும், காண்கின்ற - எப்போதும் பார்க்கும்படி அழகான, கடல் வண்ணன் - ஸமுத்திரம்போன்ற நிறத்தையுடைய எம்பெருமான், வந்து ஏறக்கொலோ. காண்கின்ற - (நமக்குத் தெரியாத எம்பெருமானைச் சேர்ந்தவைகளைப்) பார்க்கிற. என் காரிகை - என் பெண், செய்கின்ற - செய்கிறவைகளை, காண்கின்ற உலகத்தீர்க்கு - பார்க்கிற உலகத்திலிருக்கிற உங்களுக்கு. என் சொல்லுகேன் - எப்படிச் சொல்லுவேன்?

(கருத்து) பார்க்கப்படுகிற பூமி, ஆகாசம், நெருப்பு, காற்று, ஜலம் ஆகிய இந்த ஐந்து பூதங்கள் எல்லாம் என்னுடைய உடம்புகள் என்று இவள் சொல்லுகிறாள். எப்போதும் பார்க்கத் தகுந்ததாய் அழகான ஸமுத்திரம்போன்ற நிறத்தையுடைய எம்பெருமான் வந்து இவளுக்குள்ளே ஆவேசித்திருக்கிறானோ, இதை நான் அறியேன். இவள் எம்பெருமானைச் சேர்ந்தவைகளைப் பார்க்கிறாள். அவைகள் நமக்குத் தெரியவில்லை. அவைகளை உலகத்திலிருக்கிறவர்களே! உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்? நீங்கள் பார்ப்பதற்கு ஏற்பட்டு என்னால் சொல்லக்கூடியதாய் வகை இருக்கிறதா?

குறிப்பு:—(1) 'காண்கின்ற' என்கிற நிகழ்காலச் சொல்லாலே நாம் பார்த்துக்கொண்டே இருக்கிறோம். பார்த்து முடியவில்லை. அப்படி அவைகள் அளவில்லாதவைகளாக இருக்கின்றன என்று காட்டப்படுகிறது.

(2) எம்பெருமானையும் ஐந்து பூதங்களையும் ஒன்றாகச் சொன்னதற்கு பொருள் உரையில் சொன்னபடியே கொள்ள வேண்டும். முதற்பாட்டின் குறிப்பைப் பார்க்க. (3)

செய்கின்ற கிதியெல்லாம் யானே யென்னுஞ்
செய்வானின் றனகளும் யானே யென்னுஞ்
செய்துமுன் னிறந்தவும் யானே யென்னுஞ்
செய்கைப்பய னுண்பேனும் யானே யென்னுஞ்
செய்வார்களைச் செய்வேனும் யானே யென்னுஞ்
செய்ய கமலக் கண்ணனே றக்கொலோ
செய்ய வுலகத்தீர்க் கிவையென் சொல்லுகேன்
செய்ய கனிவா யிளமான் றிறத்தே. (௪)

(ப-ரை) செய்கின்ற - செய்யப்படுகிற, கிதி எல்லாம் - வேலைகள் எல்லாம், யானே என்னும், செய்வானின்றனகளும் - இனிமேல் செய்யவேண்டியவைகளாயிருக்கிறவைகளும், யானே என்னும், முன் செய்து இறந்தவும் - முன்பு செய்யப்பட்டுப் போனவைகளும், யானே என்னும், செய்கை பயன் - செய்கைகளின் பலன்களை, உண்பேனும் - அநுபவிக்கிறவனும், யானே என்னும், செய்வார்களை - அந்த வேலைகளைச் செய்கிறவர்களை, செய்வேனும் - அவைகளைச் செய்யும்படி செய்கிறவனும், யானே என்னும், செய்ய கமலக்கண்ணன் வந்தேறக்கொலோ, செய்ய கனிவாய் - சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தை உடைய, இள மான் திறத்து - இளமான்போல் அறியாதவளான இந்தப் பெண்விஷயத்தில், செய்ய உலகத்தீர்க்கு -(விஷயங்களைத் தோன்றுகிறபடியே) பார்க்கிற உலகத்திலிருக்கிற உங்களுக்கு. இவை - இவளுடைய இந்த வேலைகளை, என்ன சொல்லுகேன் - எப்படி சொல்லுவேன?

(கருத்து) உலகத்தில் இப்போது செய்யப்படுகிற வேலைகள் இனிமேல் செய்யவேண்டிய வேலைகள் முன்னால் செய்யப்பட்டுப் போன வேலைகள் ஆகிய இவைகளெல்லாம் எனக்கு உட்பட்டவைகள். இந்த எல்லா வேலைகளின் பலன்களை அநுபவிக்கிறவனும் நானே, அவைகளைச் செய்கிறவர்களைச் செய்யும்படி செய்கிறவனும் நானே, இப்படி இவள் சொல்லுகிறாள். செந்தாமரைக் கண்ணனான எம்பெருமான் வந்து இவளுக்குள்ளே ஆவேசித்திருக்கிறானோ? இதை நான் அறியேன். உலகத்திலிருக்கிறவர்களே! விஷயங்கள் எப்படித் தோன்றுகின்றனவோ அப்படியே நீங்கள் பார்க்கிறீர்கள். இவள் ஸ்வபாவத்தை இன்னதென்று நீங்கள் அறி

யவில்லை. இப்படிப்பட்ட உங்களுக்கு செங்கனிவாயையுடைய இளமான்போலிருக்கிற இந்தப் பெண் சொல்லுகிறவைகளை எப்படிச் சொல்லுவேன்? சொன்னால்தான் உங்களுக்குத் தெரியுமோ?

குறிப்பு:—(1) எம்பெருமான் ஸர்வேச்வரனுகையாலே எல்லாரையும் அந்தந்த வேலைகளைச் செய்யும்படி செய்கிறான். அந்த வேலைகளெல்லாம் அவனுடைய வேலைகள். அவைகளின் பலன்களும் அவனுடையவைகளே. இதுதான் உண்மையான இருப்பு. இதை அறிந்து ஒவ்வொருவனும் தன் வேலைகளைச் செய்யவேண்டியது. அதற்கு ஸாத்துவிகத்தியாகம் என்று பெயர்.

(2) ஆழ்வார் எம்பெருமானைவிட்டுப் பிரிந்த வருத்தத்தினால் திருப்பவளம் வெளுத்திருந்தபோதிலும், இந்த அநுகரணத்தினால் உண்டான ஸந்தோஷத்தால் சேர்ந்த ஸமயத்தில்போல் சிவந்துவிட்டது என்று "செங்கனிவாய்"எனபதால் காட்டப் படுகிறது.

(3) எம்பெருமானை 'செய்யக்கமலக் கண்ணன்' என்று சொன்னதற்குக் கருத்து—இந்தப் பெண்ணுக்குக் கண்ணில் ஓர் அழகு உண்டாயிருக்கிறது. கண்ணழகையுடைய எம்பெருமான் இவளிடத்தில் வந்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் இவ்வளவு அழகு இவளுக்கு உண்டாயிருக்காது—என்று.

(இ - ம்) செய்வான் - செய்ய: வினையெச்சம். செய்வேன்- பிறவினை; செய்விப்பேன் என்பது பொருள். (4)

---

திறம்பாமன் மண்காக்கின் றேன்யானே யென்னும்
திறம்பாமன் மலையெடுத் தேனே யென்னும்
திறம்பாம லசுரரைக்கொன் றேனே யென்னும்
திறங்காட்டி யன்றைவரைக் காத்தேனே யென்னும்
திறம்பாமற் கடல்கடைந் தேனே யென்னும்
திறம்பா தகடல் வண்ணனே றக்கோலோ
திறம்பாத வுலகத் தீர்க்கென் சொல்லுகேன்
திறம்பா தென்றிரு மகளேய் தினவே. (௫)

(ப - ரை) திறம்பாமல் - தப்பாமல், (என்னுடைய கட்டளையை ஒருவரும் மீறாதபடி), மண் - பூமி முதலான உலகங்களை, யானே, காக்கின்றேன் - ரக்ஷிக்கிறேன், என்னும் - என்கிறாள், திறம்பாமல் - (மாடுகளின்மேலாவது, கோபர்கள்மேலாவது ஒரு மழைத்துளியும்) விழாதபடி, மலை எடுத்தேனே என்னும் - கோவர்த்தநம் என்கிற மலையை நானே எடுத்தேன் என்கிறாள். திறம்பாமல் - ஒருவரும் தப்பிப் போகாதபடி, அஸுரரை கொன்றேனே என்னும் - அஸுரர்களை நானே கொன்றேன் என்கிறாள், அன்று - அந்தக் காலத்தில், (பாரதயுத்தம் நடந்த காலத்தில்), திறம் - என் பெருமையை, காட்டி-காட்டி, ஐவரை - ஐந்து பாண்டவர்களை, காத்தேனே என்னும் - நானே ரக்ஷித்தேன் என்கிறாள், திறம்பாமல் - (மந்தர மலையாகிய மத்து) கீழே அழுந்தாமலும், மேலே போகாமலும், கடல் - திருப்பாற்கடலை, கடைந்தேனே என்னும் - நானே கடைந்தேன் என்கிறாள், திறம்பாத - தன் கட்டளையை ஒருவரும் மீற ஒண்ணாதபடியிருக்கிற, கடல் வண்ணன் - ஸமுத்திரம்போல் அளவிடமுடியாத பெருமையையுடைய எம்பெருமான், வந்தேறக்கொலோ, என் திருமகள் - லக்ஷ்மிக்கு ஒப்பான என்னுடைய பெண், திறம்பாத - (அவனுடைய குணங்களில்) ஒன்றையும் விடாமல், எய்தின-அநுபவித்து அடைந்த விதங்களை, திறம்பாத-சொன்னதைக் கேட்காமல் போகோம் என்று இருக்கிற, உலகத்தீர்க்கு - உலகத்திலுள்ள உங்களுக்கு, என சொல்லுகேன் - எப்படிச் சொல்லுவேன் ?

(கருத்து) "என் கட்டளையை, ஒருவரும் மீறாதபடி எல்லா உலகங்களையும், நானே ரக்ஷிக்கிறேன். இந்திரன் பிருந்தாவநத்தில் மழை பெய்தபோது, மாடுகளின் மேலாவது, கோபர்களின் மேலாவது ஒரு மழைத்துளியும் விழாதபடி நானே கோவர்த்தநம் என்கிற மலையை எடுத்துப் பிடித்தேன். ஓர் அஸுரனும் தப்பாதபடி தேநுகன் முதலான அஸுரர்களை நானே கொன்றேன். பாரத யுததம் நடந்த காலத்தில் ஸ்ரீகீதையை உபதேசம் பண்ணினது முதலான வேலைகளால், என் பெருமையைக் காட்டி, ஐந்து பாண்டவர்களையும் நானே ரக்ஷித்தேன். மந்தர மலையை மத்தாக வைத்துக்கொண்டு திருப்பாற்கடலைக் கடையும்போது, அதைக் கீழே அழுந்தாமல் தாங்கியும், மேலே போகாமல் அதைப் பிடித்துக்கொண்டும் நானே கடைந்தேன்" என்று இவள் சொல்

லுகிறாள். ஒருவனும் தன்னுடைய கட்டளையை மீறுதபடி ஸமுத்திரம்போல் அளக்கமுடியாத பெருமையையுடைய எம்பெருமான் வந்து இவளிடத்தில் ஆவேசித்திருக்கிறானோ? இதை நான் அறியேன். அவனுடைய குணங்களை ஒன்றையும் விடாமல் அநுபவித்து லக்ஷ்மீபோலிருக்கிற இந்தப் பெண் அடைந்த விதங்களைக் கேட்காமல் போகோம் என்று பிடிவாதம் செய்கிற உலகத்திலிருக்கிறவர்களே! உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்? இவள் ஸ்வபாவம் விலக்ஷணமானது. அதை நான் சொன்னாலும் நீங்கள் அதை அறியமுடியுமோ? (5)

---

இனவேய் மலையேந்தி னேன்யானே யென்னு
மினவேறு கள்செற்றே னும்யானே யென்னு
மினவான் கன்று மேய்த்தேனும் யானே யென்னு
மினவா நிரைகாத்தே னும்யானே யென்னு
மினவாயர் தலைவனும் யானே யென்னு
மினத்தேவர் தலைவன் வந்தே றக்கொலோ
வினவேற்க ணல்லீர்க் கிவையென் சொல்லுகே
னினவேற் கண்ணியென் மகளுற் றனவே. (சு)

(ப - ரை) இனம் வேய் - கூட்டமான மூங்கில்களையுடைய, மலை ஏந்தினேன் - (கோவர்த்தநம் என்கிற) மலையை எடுத்தவன், யானே என்னும், இனம் ஏறுகள் - கூட்டமான காளைமாடுகளைப் பின்னைக்காக, செற்றேனும் - கொன்றவனும், யானே என்னும், இனம் - வயதில் எனக்கு ஒத்த, வான் - பெரிய (புஷ்டியுள்ள), கன்று-கன்றுகளை, மேய்த்தேனும் - மேய்த்தவனும், யானே என்னும், இனம் - கூட்டங்களான, ஆ நிரை - மாடுகளின் வரிசைகளை, காத்தேனும் - ரக்ஷித்தவனும், யானே என்னும், இனம் - என்னோடு ஒத்த வயதுள்ள, ஆயர் - இடையர்களுக்கு, தலைவனும் யானே என்னும், இனத்தேவர் - கூட்டமாய் எம்பெருமானை அநுபவிக்கிற நித்யஸூரிகளுக்கு, தலைவன் - தலைவனான எம்பெருமான், வந்தேறக்கொலோ, வேல் இனம் கண்ணி - வேலாயுதத்தைப்போலிருக்கிற கண்களையுடைய என் மகள், உற்றன இவை - அடைந்த இவைகளை, வேல் இன கண் - வேல் ஆயுதத்தைப்போன்ற கண்களையுடைய, நல்லீர்க்கு - நல்லவர்களான உங்களுக்கு, என் சொல்லுகேன் - எப்படிச் சொல்லுவேன்?

(கருத்து) கூட்டமான மூங்கில்களையுடைய கோவர்த்தநம் என்கிற மலையை எடுத்துப் பிடித்தவனும், கூட்டமாயிருந்த ஏழு காளைமாடுகளைப் பின்னைக்காகக் கொன்றவனும், என் வயதுள்ள கன்றுகளை மேய்த்தவனும், கூட்டங் கூட்டங்களான மாடுகளை ரக்ஷித்தவனும், என் வயதுபோன்ற வயதுள்ள இடையர்களுக்குத் தலைவனுயிருந்தவனும் நானே என்று இவள் சொல்லுகிறாள். தனித்தனியாக அநுபவித்து திருப்தி வாராமல் கூட்டமாய் நித்தியஸூரிகளால் அநுபவிக்கப்பட்ட எம்பெருமான் வந்து இவளிடம் ஆவேசித்திருக்கிறானோ? இதை நான் அறியேன், தன்னைவிட்டுப் பிரிந்த நாயகனுக்கு வேலாயுதத்தைப்போல் வருத்தத்தை உண்டுபண்ணுகிற கண்களையுடைய என் பெண் அடைந்த இவைகளை வேல்போன்ற கண்களையுடைய நல்லவர்களான உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்?

குறிப்பு :—ஒருவன் பிரம்மசாரியாயிருந்து வேதத்தைப் படித்துப் பிறகு, விவாஹம் செய்துகொண்டு யாகங்களைச் செய்வதுபோல், கண்ணன் சிறு குழந்தையாய் இருந்து கன்றுகளை மேய்த்து, கொஞ்சம் பெரியவனானபோது மாடுகளை ரக்ஷித்தான் என்று காட்டுவதற்காகக் கன்று மேய்த்ததையும், ஆநிரை காத்ததையும் பிரித்துச் சொல்லுகிறது.

(இ - ம்) ஆன் - என்பதில் னகர ஒற்று சாரியை. (6)

---

உற்றார்க ளெனக்கில்லை யாரு மென்னு
  முற்றார்க ளெனக்கிங்கெல் லாரு மென்னு
முற்றார்களைச் செய்வேனும் யானே யென்னு
  முற்றார்களை யழிப்பேனும் யானே யென்னு
முற்றார் களுக்குற்றே னும்யானே யென்னு
  முற்று ரிலிமாயன் வந்தே றக்கொலோ
உற்றீர்கட் கென்சொல்லிச் சொல்லு கேன்யா
  னுற்றென் னுடைப்பே தையுரைக் கின்றவே. (எ)

(ப - ரை) இங்கு - இந்த உலகத்தில், எனக்கு உற்றார்கள் - என்னுடைய ஸம்பந்தத்தில் ஆசையுள்ளவர்கள், யாரும் இல்லை - ஒருவரும் இல்லை, என்னும், இங்கு, எல்லாரும் - என்னை அறி

யாதவர்களும், எனக்கு உற்றார்கள் - என்னோடு சேர்ந்தவர்கள் என்று நான நினைக்கிறேன், எனனும, உற்றார்களைச் செய்வேனும் - சிலர் என்னை வந்து அடையும்படி செய்கிறவனும், யானே என்னும், உற்றார்களை - வேறு பிரயோஜநங்களுக்காக என்னிடம் வந்தவர்களை, அழிப்பேனும் - அவைகளைக் கொடுத்து என்னை விட்டுப் போகும்படி செய்கிறவனும், யானே எனனும், உற்றார்களுக்கு - (என்னையே பிரயோஜநமாக எண்ணி என்னை) அடைய வந்தவர்களுக்கு, உற்றேனும் - எல்லாவிதமான பந்துக்கள் செயய வேண்டிய வேலைகளைச் செய்கிறவனும், யானே எனனும, உற்றார் இலி - தன்னுடைய ஸ்வரூபம் ரூபம் முதலானவைகளை அறிந்தவனில்லாதவனான, மாயன் - ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற எமபெருமான், வந்தேறக்கொலோ, எனனுடைய பேதை - என னுடைய சிறு பெண், உற்று-(அவனுடைய குணங்களை உள்ளபடி) கண்டு, உரைக்கின்ற - சொல்லுகிற வார்த்தைகளை, யான - நான், உற்றீர்கட்கு - பந்துக்களான உங்களுக்கு, என் சொல்லி-என்ன சொற்களைச் சொல்லி, சொல்லுகேன் - சொல்லுவேன் ?

(கருத்து) இந்த உலகத்தில் என் ஸம்பந்தத்தில் ஆசையுள்ளவர்கள் எவருமில்லை. ஆனபோதிலும் அவர்களெல்லாரையும என்னைச் சேர்ந்தவர்களாக நான் எண்ணுகிறேன். சிலரை என்னை வந்து அடையும்படி நானே செய்கிறேன. வேறு பிரயோஜநங்களுக்காக என்னிடம் வருகிறவர்களுக்கு அவைகளைக் கொடுத்து, என்னைவிட்டுப் போகும்படி நானே செய்கிறேன். என்னையே பிரயோஜநமாக எண்ணுகிறவர்களுக்கு அந்தந்த பந்துக்கள் செய்ய வேண்டிய வேலைகளெல்லாவற்றையும் நானே செய்கிறேன். இப்படி இவள் சொல்லுகிறாள். தன்னுடைய ஸ்வரூபம் முதலானவைகளை முழுதுமறிந்தவர்களில்லாத எம்பெருமான் இவளிடம் வந்து ஆவேசித்திருக்கிறானோ ? இதை நான் அறியேன். அவனுடைய குணங்களை உள்ளபடி அநுபவித்துக்கொண்டு இந்த என்னுடைய பெண் சொல்லுகிற வார்த்தைகளைப் பந்துக்களான உங்களுக்கு எந்த சொற்களைக்கொண்டு சொல்லுவேன்? அவைகள் இன்னவைகள் என்று உங்களுக்கு என்னால் எடுத்துக் காட்ட முடியுமோ ?

உரைக்கின்ற முக்கட்பிரான் யானே யென்னு
முரைக்கின்ற திசைமுகன் யானே யென்னு
முரைக்கின்ற வமரரும் யானே யென்னு
முரைக்கின்ற வமரர்கோன் யானே யென்னு
முரைக்கின்ற முனிவரும் யானே யென்னு
முரைக்கின் றமுகில் வண்ணனே றக்கொலோ
வுரைக்கின்ற வுலகத் தீர்க்கென் சொல்லுகே
னுரைக்கின்ற வெண்கோ மளவொண் கொடிக்கே. (அ)

(ப - ரை) உரைக்கின்ற - உலகத்தில் முக்கியமானவராகச் சாஸ்திரத்தில் சொல்லப்படுகிற, முக்கண் பிரான் - மூன்று கண்களையுடைய தன்னைச் சேர்ந்தவர்களுக்கு உபகாரம் செய்கிற சிவனும், யானே என்னும், உரைக்கின்ற, திசைமுகன் - ஒவ்வொரு திக்கிலும் ஒவ்வொரு முகத்தையுடையவனாகச் சொல்லப்பட்ட பிரம்மாவும், யானே என்னும், உரைக்கின்ற அமரரும் - மனிதர்களால் ஆராதிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிற அக்கினி முதலான தேவர்களும், யானே என்னும், உரைக்கின்ற - வேத வாக்கியங்களாலே ஸ்தோத்திரம் பண்ணப்பட்ட, அமரர்கோன் - தேவர்களின் தலைவனான இந்திரனும், யானே என்னும், உரைக்கின்ற - (ஸ்ரீகீதையில பிரம்மருஷிகளுக்குள்ளே நான் நாரதன் என்று) சொல்லப்பட்ட, முனிவரும்-அவர் முதலான ருஷிகளும், யானே என்னும், உரைக்கின்ற - சொல்லிக்கொண்டு இருந்தும் சொல்ல முடியாத, முகில் வண்ணன்-மேகநிறம்போன்ற நிறமுள்ள எம்பெருமான், வந்து ஏறக்கொலோ, உரைக்கின்ற-(லோக விலக்ஷணமான வார்த்தைகளைச்) சொல்லுகிற, கோமளம் ஒண் கொடி - மிருதுவான அழகுள்ள கொடிபோலிருக்கிற இந்தப் பெண்ணுக்கு வந்திருக்கும் வருத்தத்தை, உரைக்கின்ற - சொல் சொல் என்று சொல்லுகிற, உலகத்தீர்க்கு - உலகத்திலிருக்கிறவர்களுக்கு, என் சொல்லுகேன - எப்படிச் சொல்லுவேன ?

(கருத்து) உலகத்தில் முக்கியமானவர்களாகச் சாஸ்திரத்தில் சொல்லப்படுகிற மூன்று கண்களையுடைய சிவனும, நான்கு முகமுள்ள பிரம்மாவும, மனிதர்களால ஆராதிக்கப்படுகிறவர்களாக சாஸ்திரத்தில் சொல்லப்படுகிற அக்கினி முதலான தேவதைகளும், வேத வாக்கியங்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட

தேவர்களுக்கு தலைவனை இந்திரனும், ஸ்ரீகீதையில் சொல்லப் படுகிற நாரதர் முதலான ருஷிகளும் நானே என்று இவள் சொல் லுகிறாள். எவ்வளவு சொன்னாலும் சொல்லி முடிவை அடையாத ஸ்வரூபம் குணம் முதலானவைகளையுடைய மேகம்போன்ற வர்ணமுள்ள எம்பெருமான் வந்து இவளுக்குள் ஆவேசித்திருக் கிறானோ? இதை நான் அறியேன். லோகவிலக்ஷணமான பேச் சுக்களைப் பேசுகிற இந்த வருத்தத்தைப் பொறுக்க முடியாதபடி அழகுள்ள கொடிபோலிருக்கிற மிருதுவான இந்தப் பெண் ணுக்கு உண்டாகி இருக்கும் வருத்தத்தைச் சொல்லு சொல்லு என்று சொல்லுகிற உலகத்திலுள்ள உங்களுக்கு எது என்று சொல்லுவேன்?

குறிப்பு.—(1) எம்பெருமானையும் மற்றவர்களையும் ஒன்றாகப் பாட்டு சொன்னதற்குக் கருத்து—அவன் ஆத்மாவாகவும், உலகம் உடம்பாகவும் இருப்பதாலே அவர்கள் ரூபமாய் அவன் காணப் படுகிறான்—என்று.

(2) 'உரைக்கின்ற அமரர்' என்பதற்கு உலகத்தில் பிர ஜைகளை விருத்தி பண்ணுவதற்காக உண்டுபண்ணப்பட்ட தக்ஷன் முதலான பிரஜாபதிகள் என்றும் பொருள்கொள்ளலாம்.

---

கொடிய வினையாது மிலனே யென்னுங்
கொடியவினை யாவேனும் யானே யென்னுங்
கொடியவினை செய்வேனும் யானே யென்னுங்
கொடியவினை தீர்ப்பேனும் யானே யென்னுங்
கொடியா னிலங்கைசெற் றேனே யென்னுங்
கொடிய புள்ளுடை யவனே றக்கோலோ
கொடிய வுலகத்தீர்க் கிவையென் சொல்லுகேன்
கொடியேன் கொடியேன் மகள்கோ லங்களே. (௩)

(ப - ரை) கொடிய - (கர்மத்துக்கு உட்பட்டவர்களுக்கு), வருத்தத்தை உண்டுபண்ணுகிற, வினை - கர்மங்கள், யாதும் இலனே என்னும்-ஒன்றுமில்லாதவன் நான் என்கிறாள், கொடிய வினையாவேனும் - கொடிய கர்மங்களை உடையவனும், யானே

என்னும், கொடிய வினை செய்வேனும் - கொடுமையுள்ள பாபங்களைச் செய்யும்படி செய்கிறவனும், யானே என்னும், கொடிய வினை தீர்ப்பேனும் - ஒருவனுடைய கொடிய வினைகள் அவனை விட்டுப் போகும்படி செய்கிறவனும், யானே என்னும், கொடியான் - க்ரூரமான செயல்களையுடைய ராவணனுடைய, இலங்கை - இலங்கையை, (அதிலிருக்கிற துஷ்ட ராக்ஷஸர்களை) செற்றேனே - கொன்றேனே என்னும், கொடிய புள் உடையவன் - விரோதிகளுக்குக் க்ரூரனான கருடனை வாஹநமாகவுடைய எம்பெருமான், வந்தேறக்கொலோ, கொடியேன் - பாபம் பண்ணின என்னுடைய, கொடி - கொடிபோலிருக்கிற, என் மகள் - என் பெண்ணுடைய, கோலங்கள் இவை - ஒரே விதமான வேலைகளை, கொடிய - இவள் ஸ்வபாவத்தை அறியாமல் சொல்லு சொல்லு என்று பிடிவாதம் பண்ணுகிற, உலகத்தீர்கட்கு - உலகத்திலுள்ள உங்களுக்கு, என் சொல்லுகேன் - என்னவாகச் சொல்லுவேன்?

(கருத்து) கர்மத்துக்கு உட்பட்டவர்களுக்கு வருத்தத்தை உண்டுபண்ணுகிற, கர்மங்கள் ஒன்றுமில்லாதவனும், அவைகளைச் செய்கிறவர்களும், அவைகளைப் பிரதிகூல ஜனங்கள் செய்யும்படி செய்கிறவனும், அவைகளை அநுகூலர்களிடமிருந்து போக்குகிறவனும், கொடுமையான செயல்களையுடைய ராவணன் பட்டணத்திலிருந்த கெட்ட ராக்ஷஸர்களைக் கொன்றவனும் நானே என்று இவள் சொல்லுகிறாள். விரோதிகளுக்குக் கெடுதியைச் செய்யும் கருடனை வாஹநமாக உடைய எம்பெருமான் வந்து இவளிடம் ஆவேசித்திருக்கிறானோ? இதை நான் அறியேன். ம்ருதுவான கொடிபோன்ற என் பெண் இப்படி வருத்தப்படுவதைப் பார்த்துக்கொண்டிருக்கும்படியான பாபத்தைச் செய்திருக்கிறேன். அவள் வேறொன்றையும் அறியாமல் ஸர்வேச்வரன் செய்த வேலைகளை தானே செய்ததாகச் சொல்லிக்கொண்டிருக்கிறாள். அவள் ஸ்வபாவத்தை அறியாமல் சொல்லு சொல்லு என்று நிர்ப்பந்திக்கிற உலகத்திலிருக்கிற உங்களுக்கு அவள் வார்த்தைகளை எவைகளாகச் சொல்லுவேன்?

குறிப்பு — 'கொடிய வினையாவேன்' என்பதற்கு கொடிய வினையைச் செய்கிறவர்களும் என்று உரையில் எழுதியிருக்கிறது. எம்பெருமான் ஆத்மாவாகவும் கர்மங்களைச் செய்கிறவர்கள் அவ

னுக்கு உடம்புகளாகவும் இருப்பதால், அவைகளை அவர்களின் வழியாக எம்பெருமானை செய்கிறான். அவன் நேராகச் செய்கிறதில்லை என்று கருத்து. (9)

---

கோலங்கோள் சுவர்க்கமும் யானே யென்னுங்
கோலமி னரகமும் யானே யென்னுங்
கோலந்திகழ் மோக்கமும் யானே யென்னுங்
கோலங்கோ ளுயிர்களும் யானே யென்னுங்
கோலங்கோ டனிமுதல் யானே யென்னுங்
கோலங் கோண்முகில் வண்ண னேறக்கோலோ
கோலங்கோ ளுலகத் தீர்க்கேன் சொல்லுகேன்
கோலந் திகழ்கோதை யென்கூந் தலுக்கே. (௧0)

(ப - ரை) கோலம் கொள் - அழகைக்கொண்ட, (துக்கம் கலக்காத ஸுகத்தைக் கொடுக்கிற), சுவர்க்கமும் யானே என்னும், கோலம் இல்-ஸுகமேயில்லாத, நரகமும் யானே என்னும், கோலம் திகழ் மோக்கமும் - முடிவில்லாத ஸுகமான மோக்ஷமும், யானே என்னும், கோலம் கொள் - வேஷத்தைக்கொள்ளுகிற, (தங்கள் தங்கள் கர்மத்துக்குத் தகுந்தபடி தேவன் மனிதன் முதலான வடிவுகளை எடுத்துக்கொள்ளுகிற), உயிர்களும்-ஆத்மாக்களும், யானே என்னும், கோலம் கொள் - (மஹத் அஹங்காரம் முதலான) ரூபங்களை எடுத்துக்கொள்ளுகிற, தனி-த்ரவ்யங்களும் பெயர்களுமில்லாத அவஸ்தையிலிருந்த, முதல - மூலப்ரக்ருதி, யானே என்னும், கோலம் கொள் முகில் வண்ணன் - (இந்திர தனுஸ்ஸோடு கூடி) அழகைக்கொண்ட மேகம்போல் விளங்குகிற எம்பெருமான், வந்தேறக்கொலோ, என - என்னுடைய, கோலம் திகழ் - அழகு விளங்குகிற, கோதை கூந்தலுக்கு - மாலையையும் மயிர் முடியையும் உடைய பெண்ணுக்கு உண்டான அவஸ்தைகளை, கோலம் கொள் - இவள் செயல்களை அறிவதாகிய ஒரே வேலையில் மனதை வைத்திருக்கிற, உலகத்தீர்க்கு என் சொல்லுகேன்?

(கருத்து) துக்கம் கலக்காத ஸுகத்தையுடைய சுவர்க்கமும், ஸுகமேயில்லாத நரகமும், அளவும் முடிவுமில்லாத ஸுகமான

மோக்ஷமும, தங்கள் தங்கள் கர்மத்துக்குத் தகுந்தபடி தேவன், மனிதன் முதலான உடம்புகளோடு பிறக்கிற ஆத்மாக்களும், மஹத அஹங்காரம் முதலாகத் தோனறுகிற ஒரே ரூபமுள்ள மூலப்பிரகிருதியும், நானே என்று இவள் சொல்லுகிறாள். இந்திர தநுஸ்ஸோடுகூடிய மேகத்தின் நிறமுடைய எல்லாக் குணங்களா லும நிறைநத எமபெருமானை இவளிடம் வந்து ஆவேசித்திருக்கிறானோ? இதை யான் அறியேன். அழகான மாலேயும் மயிர் முடியும உடைய இந்த என் பெண்ணுடைய அவஸ்தைகளை அதைக் கேட்பதிலேயே மனதை வைததிருக்கிற உலகத்திலுள்ள உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன்?

குறிப்பு :--(1) எம்பெருமானை ஸ்வர்க்கமாகவும் நரகமாக வும் மோக்ஷமாகவும் சொல்லுகிறதற்குக் கருதது—அறிவுள்ளவ ரால் துக்கப்படுவது அவனுககு உடமபு. அவன் அதற்கு ஆத்மா. ஆகையால, எமபெருமானே அவரவர்களுக்குத் தகுந்தபடி அவை களைக் கொடுக்கிறான்—என்பது.

(2) எம்பெருமானை ஆத்மாக்களாகவும் பிரகிருதியாகவும் பாட்டு சொல்லுவதற்குப் பொருள்—அவன் ஆத்மா, அவைகள் அவனுக்கு உடம்புகள்—என்று.

(3) 'கோலம்' என்கிற சொல்லுக்கு வேஷம் என்றும் பொருள். உயிர்களுக்கு வேஷம் உடம்புகள். அவைகள் அவரவர்கள் கர்மத்துக்குத் தகுந்தபடி வரும். அசேதநமான ப்ரகிருதிக்கு வேஷம் மஹத அஹங்காரம் முதலியன.

(இ - ம) 'கூந்தல' என்கிற சொல் ஆகுபெயராய் அதை யுடைய பெண்ணைச் சொல்லுகிறது. "கூநதலுக்கு" எனபதற்கு இந்தப் பெண்ணினுடைய செயல்களை என்று இங்கே பொருள். (10)

தையடைந்து எம்பெருமானுடைய தாஸர்களுக்குப் பிரியமான கைங்கரியம் செய்து, அவர்களை ஸந்தோஷப்படுத்தும்படியான பாக்கியம் பண்ணினவர்கள்.

குறிப்பு:—கூந்தல் மலர்மங்கை - கூந்தலையுடைய மலர்மங்கையுடைய என்று பொருள். எல்லா ஸ்திரீகளுக்கும் கூந்தலிருப்பதால் அதை இங்கு சொன்னதின் கருத்து—உயர்ந்த கூந்தலையுடையவள் என்பது. கூந்தலுக்கு உயர்வு நல்ல வாஸனையையுடையதாயிருத்தல். பொருந்தின—பொருத்தின—அதாவது பிடித்திருப்பதினால் எல்லாராலும் கொண்டாடப்பட்ட—என்பது. (11)

ஸ்ருஷ்டிஸ்வாவிஷ்க்ருத்யாத்ம ப்ரஸங்கவிஷயகதா ஸந்ததிக்ஷேப
ஸ்தித்தாஸ்யப்ராப்திக்ஷேப க்ருஷ்ணாவரணமாதயா ஸம்ஹாரபா
க்ருதேஷு । ஸௌஸைந்யஸாரணாதீந் ஸ்வஜநஸுகதயா
ஸம்ஹாரசக்த்யுத்தரண தாஸ்யக்ஷேபநாதீந் ஸ்வஜந
ரதிஸமஹம் வைஷ்ணவாதிஷ்யாஜமாவி । ||௯௬||

இந்த திருவாய்மொழியில், ஆழ்வார் தம்மை எம்பெருமானாக நினைத்து, அவன் செய்த வேலைகளைத் தான் செய்ததாகச் சொல்லி அநுபவிக்கிறார். அந்த வேலைகளாவன:—(1) உலகத்தைப் படைப்பதானது முதலானவைகள், (2) எல்லாவித கலைகளை வெளியிட்டது, (3) ஸர்வ பூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருப்பது; (4) எல்லாரையும் எல்லா வேலைகளையும் செய்விப்பது, (5) பூமியின் பாரத்தை இறக்கினது, (6) கோவர்த்தனத்தைத் தூக்கிப் பிடித்தது முதலானவைகள், (7) தன்னையடுத்தவர்களுக்கு ஹிதத்தைச் செய்வது, (8) பிரமனாகவும் ருத்திரனாகவும் இந்திரனாகவும் மற்றவர்களாகவும் தோன்றுவது; (9) பாபத்தைப் போக்குவது; (10) கர்மங்களின் பலத்தைக் கொடுப்பது.

# ஏழாம் திருவாய்மொழி.

---

அவ—கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் எம்பெருமானை அநுகாரம் பண்ண, அதனால் அந்தக் காலத்திலமாத்திரம் அவருக்குக் கொஞ்சம் ஸந்தோஷம் கிடைத்தது. ஆனால், அதனால் நிலையாயிருக்கும் ஆநந்தம் கிடைக்கவில்லை அவர் வருத்தம் அதிகப்பட்டது தாம் எம்பெருமானைவிட்டுப் பிரிந்து இப்படி வருந்தப்பட்டும் அவன் தம்மைக் கவனிக்காமலிருப்பதற்குக் காரணம் அவனை அடைவதற்குக் காரணமாகச் சொல்லப்பட்ட கர்மயோகம் முதலானவைகளைத் தாம் செய்யவில்லை என்று நினைந்து, ஆழ்வார், ஸ்ரீவரமங்கலநகர் என்கிற வானமாமலையில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை இந்தத் திருவாய்மொழியில் கூப்பிடுகிறார் :—

(ஆசிரியத்துறை.)

நோற்ற நோன்பிலே னுண்ணறிவிலே னாகிலு மினியுன்னை
ஆற்ற கிற்கின்றிலே னரவினணை யம்மானே! [ விட்டொன்றும்
சேற்றுத் தாமரை செந்நெலூடு மலர்சிரீவர மங்கலநகர்
வீற்றிருந்த வெந்தா யுனக்கு மிகையல்லே னங்கே. (க)

(ப - ரை) நோற்ற - செய்யப்பட்ட, நோன்பு - விரதங்கள், (கர்மங்கள்) இலேன் - நான் இல்லாதவன், நுண் அறிவு இலேன் - ஸூக்ஷ்மமான ஆத்மாவின் அறிவு இல்லாதவன், ஆகிலும் - ஆனபோதிலும், இனி - உன்னுடைய குணங்களை நான் அறிந்தபின்பு, உன்னைவிட்டு, ஒன்றும் - கொஞ்சமும், ஆற்ற - பொறுத்திருக்க, கிற்கின்றிலேன் - சக்தியில்லாதவனாய் இருக்கிறேன், அரவின் அணை அம்மானே - ஆதிசேஷனாகிய படுக்கையில் படுத்துக் கொண்டிருக்கிற ஸ்வாமியே! சேறு - சேறு உள்ள நிலத்தில், தாமரை - தாமரைப் பூக்கள், செந்நெலோடு - நல்ல சிவந்த நெற்பயிர்களின் நடுவில், மலர் - மலருகிற, சிரீவரமங்கல நகர் - சிரீவரமங்கலம் என்கிற நகரில், வீற்றிருந்த - பெருமையுடன் எழுந்தருளியிருக்கிற, எந்தாய் - என் ஸ்வாமியே! அங்கே - ரக்ஷிப்பதற்காக வந்திருக்கிற அந்த இடத்தில், உனக்கு மிகையல்லேன் - உன்னால் ரக்ஷிக்கத் தகுந்தவர்களுக்கு நான் வெளிப்பட்டவன் அல்ல.

(கருத்து) நல்ல கர்மங்களைப் பலன் கிடைக்கிறவரையில் விடாமல் செய்வதாகிய கர்மயோகம் நான் செய்யவில்லை. ஸூக்ஷ்மமான ஆத்மாவை விடாமல் நினைப்பதாகிய ஜ்ஞாநயோகமும் செய்யவில்லை. உன்னைப் ப்ரீதியுடன் வேறு எண்ணம் கலப்பில்லாமல் நினைப்பதாகிய பக்தியோகமும் செய்யவில்லையென்று சொல்லவேண்டுமோ? உன்னை அடைவதற்கு உபாயமாகச் சொல்லப்பட்ட இவைகள் ஒன்றும் இல்லாவிட்டாலும், உன் குணங்களை அறிந்தபின்பு அளவில்லாமல் இனியவனான உன்னைவிட்டுப் பிரிந்து இருக்கக் கொஞ்சமும் எனக்குச் சக்தியில்லை. ஆதிசேஷனாகிய படுக்கையில் இருக்கிற என் ஸ்வாமியே! ஜலம் நிறைந்த நிலங்களில் செந்நெற்பயிர் நடுவில் தாமரைப்பூ மலருகிற ஸ்ரீவரமங்கல நகர் என்கிற நகரத்தில் உன் பெருமை தோன்றும்படி என்னை ரக்ஷிப்பதற்காகவே எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியே! உன்னால் ரக்ஷிக்கத் தகுந்தவர்களுக்குள் நான் அடங்கியிருக்கவில்லையா? என்னை நீ விட்டுவிட்டால், அந்தக்குறைவு உனக்குத்தானே! ஆகையாலே என்னிடத்தில் கிருபை செய்யவேண்டும். (1)

---

அவ—உமக்குக் கிருபை செய்ய இடைஞ்சல் இருக்கிறதே என்றால், அதையும் நீயே போக்கவேண்டும் என்று இதில் சொல்லுகிறார் :—

அங்குற்றே னல்லே னிங்குற்றே னல்லே னுன்னைக்காணு மவாவில்
எங்குற்றே னுமல்லே னிலங்கை செற்ற வம்மானே! [வீழ்ந்துநான்
திங்கள்சேர் மணிமாட நீடுசிரீவர மங்கல நகருறை
சங்குசக் கரத்தாய தமியேனுக் கருளாயே. (௨)

(ப-ரை) அங்குற்றேன் அல்லேன் - அங்கே இருக்கிறவனாக இல்லை, இங்குற்றேன் அல்லேன் - இங்கே இருக்கிறவனும் அல்லை, உன்னை - மிகவும் இனியவனான உன்னை, காணும் அவாவில் - பார்க்கவேண்டும் என்கிற ஆசையில், வீழ்ந்து - விழுந்து (முழுகி), நான், எங்குற்றேனும் அல்லேன் - எங்கே இருக்கிறவனுமல்லை, இலங்கை செற்ற - இலங்கைமாநகரத்தை நாசம் செய்தவனான, அம்மானே - ஸ்வாமியே! திங்கள் சேர் மணிமாடம் நீடு - சந்திரன் வந்து சேரும்படி ரத்நங்களிழைத்த வீடுகள் உயர்ந்

கொண்டாய்-உனக்குக் கைங்கரியம் செய்வதிலேயே ஆசையுள்ள வனைச் செய்தாய், தெருள் கொள் - ஞானத்தைக் கொண்டவர் களாய், நானகு மறை வல்லவர் - நானகு வேதங்களையும் நன்றாய் அறிந்தவர்களான, பலர் வாழ்-பல ஸ்ரீவைஷ்ணவர்கள் வஸிக்கிற, சிரீவரமங்கலநகர்க்கு அருள்செய்து, அங்கு - அந்த ஊரிலே, இருந்தாய் - இருக்கிறவனே! ஒரு கைம்மாறு - நீ செய்த உபகா ரஙகளுக்குப் பதில உபகாரத்தை, அறியேன்-நான் அறியவில்லை.

(கருதது) உனக்குக் கைங்கரியம் செய்வதிலேயே ஆசை யுள்ள நிததியஸூரிகளையும், சக்கரம் முதலான ஆயுதங்களையும் ஒரு குற்றமுமில்லாமல் எப்போதும் ஸுகமாயிருக்கும் வைகுந் தத்தையும் உடையவனே! நீலமேகம்போல, அவரவர்களுக்கு வேண்டியவைகளை வர்ஷிக்கிறவனே! உன்னை அறியாமல் ஒரு வஸ்துவாக இராத என்னை உன்னுடைய அறிவை உண்டுபண்ணி, ஒரு வஸ்துவாகச் செய்து உனக்குக் கைங்கரியம் செய்வதிலேயே ஆசையுள்ளவனைச் செய்திருக்கிறாயே. நான்கு வேதங்களையும் நன்றாய்ப் படிதது நல்ல ஞானம அடைந்திருககிற பல ஸ்ரீவைஷ் ணவர்கள் வாழுகிற சிரீவரமங்கலநகருக்குக் கிருபை செய்த வனே! நீ எனக்குச் செய்திருக்கிற உபகாரங்களுக்கு நான் என்ன பதில் உபகாரம் செய்திருக்கிறேன். எனனிடததில் ஒரு பிரயோஜநத்தையும் எதிர்பார்க்காமல் உன் கிருபையினு லேயே அவைகளைச் செய்யவில்லையா? இப்போதும் நான் கேட் பதையும் அப்படியே செய்யவேண்டும். (3)

---

அவ—பிரயோஜநத்தை எதிர்பார்க்காமல் நீ உனக்கு உப காரம செய்ததுபோல, மற்றவர்களுக்கும் நீ உபகாரம் செய்திருக் கிறாய் எனறு இந்தப் பாட்டில் அருளிச்செய்கிறார்:—

மாறு சேரபடை நூற்றுவர் மங்க வோரைவர்க் காயன்று மாயப்போர்
நீறு செய்த வெந்தாய்! நிலங்கீண்ட வம்மானே! [பண்ணி
தேறு ஞானத்தா வேத வேள்வியறாச் சிரீவர மங்கலநகா
ஏறி வீற்றிருந்தா யுன்னை யெங்கெய்தக் கூவுவனே. (ச)

(ப - ரை) மாறு சேர் படை - (பாண்டவர்களுக்கு) விரோ திகளாகத் தங்களிடம் வந்து சேர்ந்த சேனைகளையுடைய, நூற்

றுவர் -(துர்யோதநன் முதலான) நூறுபேர்கள், மங்க - நாசம அடையும்படி, ஓர் - பிரபல ஸஹாயமில்லாத, ஐவர்கட்கு ஆய் - ஐந்து பாண்டவர்களுக்கு வேலைக்காரனாயிருந்து, அன்று - பாரதச் சண்டை நடந்த காலத்தில, மாயப் போர் பண்ணி - ஆச்சரியமான சண்டையைச் செய்து, நீறு செய்த - (சத்ருக்கள் எல்லாரையும) சாம்பலாகப் பண்ணின. எந்தாய - என் ஸ்வாமியே! நிலம் கீண்ட அம்மானே - பூமியைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்த ஸ்வாமியே! தேறு ஞானத்தர் - ஸம்சயமில்லாமல் தெளிவான ஜ்ஞானத்தை உடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, வேத வேள்வி - வேதத்தினால் சொல்லப்பட்ட ஆராதநங்கள், அறா - நிற்காமல் எப்போதும நடக்கிற, சிரீவரமங்கல நகர் - சிரீவரமங்கல நகரியில, ஏறி - அவர்களுடன கூடச் சேர்ந்து, வீற்றிருந்தாய் - பெருமையுடன் எழுந்தருளியிருக்கிறவனே! உன்னை, எய்த - அடையும்படி, எங்கே, கூவுவன - கூப்பிடுவேன் ?

(கருத்து) பாரத யுத்தம் நடந்த காலத்தில பலமான ஸஹாயமில்லாத ஐந்து பாண்டவர்களுக்கு வேலைக்காரனாயிருந்து, அவர்களுக்கு விரோதியாய் வந்து சேர்ந்த சேனைகளையுடைய துரியோதநன் முதலான நூறுபேர்கள நாசம் அடையும்படி பகலை ராத்திரியாக்கியும் ஆயுதம எடுக்கவில்லையென்று சொல்லி ஆயுதத்தை எடுத்தும அவர்களைக் கொல்ல உபாயங்களைச் சொல்லிக்கொடுத்தும இப்படி ஆச்சரியமான வேலைகளைச் செய்து சத்ருக்கள் எல்லாரும் நாசமாகும்படி அந்த சண்டையைச் செய்தாய். பிரளய ஜலத்தில் மூழ்கிக்கிடந்த பூமியை மேலே வராஹரூபியாய் எடுத்துக்கொண்டு வந்தாய. பாண்டவர்களும பூமியும் உனக்கு என்ன பதில் உபகாரத்தைச் செய்தார்கள். உன் கிருபையாலேயே இவைகளை நீ செய்யவில்லையா? தெளிந்த ஞானமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள வேதத்தில் சொல்லப்பட்ட உன்னுடைய ஆராதநங்களை நிற்காமல எப்போதும செய்துகொண்டிருக்கிற சிரீவரமங்கல நகரத்தை அவர்களுடனகூட வந்துசேர்ந்து அவர்கள் நடுவில இருப்பதையே கிடைக்கக்கூடாத லாபமாக எண்ணிக்கொண்டு இருக்கிறவனே! உன்னை அடைவதற்காக உன்னைக் கூப்பிடுகிறேன். இதைத் தவிர வேறொன்றும் என்னால் செய்ய முடி

யாது. நீயாகவே கிருபையால் நான் வேண்டினதைச் செய்ய வேண்டும்.

(இ - ம) அறு - அறாத, பெயரெச்சம். (4)

---

அவ—சிரிவரமங்கல நகரத்தில் நான் இருப்பதை நீர் பார்க்க வில்லையா? ஏன கூப்பிடுகிறீர்? என்றால், முன பாட்டில் சொன்னதை அநுவாதம் பணணிப் பதில சொல்லுகிறார் :—

எயதக் கூவுத லாவ தேயெனக் கெவ்வ தெவ்வத்து ளாயுமாய்
கைத வங்கள் செய்யுங் கருமேனி யம்மானே! [நின்று
செய்த வேளவியா வையததேவ ரறாச் சிரீவர மங்கலநகா
கைதொழ விருந்தா யதுநானுங் கண்டேனே. (ரு)

(ப - ரை) எவ்வ - எவ்வகைப்பட்ட, தெவ்வததுளாயும் ஆய் நின்று - விரோதிகளின் கூடடததிலே புகுந்தவனாயிருந்து, கைதவங்கள் - கபடங்களை, செய்யும் - செய்கிற, கருமேனி அம்மானே - நீலமான திருமேனியை உடைய ஸ்வாமியே! எனக்கு, எய்த - உன்னை அடையும்படி, கூவுதல - கூப்பிடுவது, ஆவதே - ஆமோ, செய்த வேள்வியர்-உனனுடைய ஆராதநததைச் செய்து அதினால் செய்யவேண்டியதைச் செய்தவர்களாய், வையத்தேவர்-பூமியிலுள்ள நித்தியஸூரிகள், அறா - விடாமல் வஸிக்கிற (தேசமான) சிரிவரமங்கலநகர், கைதொழ - உனனை ஸேவிக்கும்படி, இருந்தாய் - எழுந்தருளியிருககிறாய், அது நானும் கண்டேன் - அதை நானும் பார்ததேன.

(கருத்து) பல விதங்களான விரோதிகளின் கூட்டங்களில் புகுந்து, அவாகள் உனனைப பார்க்காதபடி கபடயுக்திகளைச் செய்து, அவர்களை வேதமார்க்கததைவிட்டு வேறு மதங்களில் புகும்படி செய்கிறாய். நீலமான திருமேனியையுடைய ஸ்வாமியே! உன்னை ஆசைப்பட்டவர்களுக்கு நீ அறியமுடியாமல் இருக்கலாமோ? ஆகையால், நான வேண்டினதைச் செய்ய வேண்டும். உம்மிடம் நான வந்து சேருவதற்கு வேண்டிய உபாயத்தை நீர் செய்யவேண்டாமா என்றால், அந்த உபாயத்தை என்னால் செய்யமுடியாது. உன்னைக் கூப்பிடுவதைமாத்திரம்

செய்யமுடியும். அதினால் உன்னை அடையமுடியுமோ? "என்னை அநுபவிப்பதே புருஷார்த்தமென்று எண்ணிக்கொண்டிருக்கிறவர்கள் எல்லாரும் என்னை ஸேவிக்கும்படியாக நான் சிரீவரமங்கலநகரத்தில் இருக்கவில்லையா" என்றால், நானும் அதைப் பார்த்தேன். ஆனால் அஃது எனக்குப் போதாது. நித்தியஸூரிகளைப்போல எல்லாவிதமான கைங்கரியங்களையும் நான் செய்யவேண்டும்.

குறிப்பு:—எம்பெருமான் விரோதிகளின் கூட்டத்தில் இருந்து அவர்கள் தன்னைக் காணாதபடி எங்கே செய்தான் என்றால், புத்தர் முதலானவர்களுக்குள்ளே பிரவேசித்து, அவர்களைக்கொண்டு தன்னிடத்தில் பக்தியில்லாதவர்களை மோஹம் அடையும்படி செய்தது புராணங்களில் பிரஸித்தம். (5)

---

அவ—கீழ்ப்பாட்டில் "அது நானும் கண்டேனே" என்று சொன்னதின் கருத்தை இதில் வெளியிடுகிறார்:—

ஏன மாய்நிலங் கீண்டவென் னப்பனே கண்ணா வென்று மென்னை
வான நாயகனே! மணிமாணிக்கச் சுடரே! [யாளுடை
தேன மாம்பொழிற் றண்சிரீ வரமங்க லத்தவா கைதொழவுறை
வானமா மலையே யடியேன்றொழ வந்தருளே. (சு)

(ப - ரை) ஏனமாய் - வராஹமாய் அவதாரம் செய்து, நிலம் கீண்ட - பிரளய ஸமுத்திரத்திலிருந்து பூமியை மேலே கொண்டுவந்த, என் அப்பனே - எனக்கு உபகாரம் செய்தவனே! கண்ணா - கிருஷ்ணனே! என்றும் - எப்போதும், என்னை ஆளுடை - என்னைத் தாஸனாக உடையவனான, வான நாயகனே - வைகுந்தத்துக்குத் தலைவனாயிருக்கிறவனே! மணி - சிலாக்கியமான, மாணிக்க சுடரே - மாணிக்கத்தின் காந்தியை உடையவனே! தேன - தேனையுடைய, மா பொழில் - மாமரச் சோலைகளை உடையதாய், தண் - குளிர்ந்த, சிரீவரமங்கலத்தவர் - ஸ்ரீவரமங்கலத்தில் இருக்கிறவர்கள், கைதொழ-ஸேவிக்கும்படி, உறை - வாஸம் செய்கிற, வானமாமலையே! அடியேன் தொழ - அடியேன் எல்லாவிதமான கைங்கரியங்களையும் பண்ணும்படி, வந்து அருள் - வந்து அருளவேண்டும்.

(கருத்து) 'அது நானும் கண்டேன்' என்று சொல்லுகிறீரே, இதைத்தவிர நான உமக்குச் செய்யவேண்டியதென்ன ? என்றால், நான் எல்லாவிதமான கைங்கரியங்களும் செய்யும்படி எழுந்தருளவேண்டும். இதை நான் நீர் ஓர் உபாயமும் செய்யாமல் செய்யக்கூடுமோ என்றால், நீ வராஹமாக அவதாரம் செய்து பிரளய ஜலத்தில முழுகியிருந்த பூமியை மேலே கொண்டுவந்ததை நிர்ஹேதுகமாகச் செய்யவில்லையா ? அப்படியே நிர்ஹேதுகமாக நான் வேண்டுவதையும் செய்யவேண்டும். பூமியை மேலே கொண்டுவந்ததுபோல் என்னை எடுப்பதற்காக அன்றோ நீ கிருஷ்ணனாய் அவதாரம் செய்தது. நீ வைகுந்தத்துக்குத் தலைவனாய் இருந்தும், என்னை உனக்கு அந்தரங்கனாக எண்ணிக்கொண்டிருக்கிறாய் மாணிக்கத்தின் காந்தியை உடையவனே ! தேனை உடைய மாமரச்சோலைகள் நிறைந்த ஸ்ரீவரமங்கல நகரத்திலிருக்கிறவர்கள் ஸேவிக்கும்படி அதில் வாஸம் செய்கிறவனே ! உன நடையழகை நான் பார்த்து உனக்குக் கைங்கரியம செய்யும்படி எழுந்தருள வேண்டும.

குறிப்பு :—(1) 'என்னப்பனே' என்பதற்கு எனக்கு உபகாரம செய்தவனே என்று பொருள். மற்றவர்கள் நன்றாயிருப்பதையே தன் பிரயோஜநமாக ஆழ்வார் எண்ணியிருந்தபடியால், எம்பெருமான் பூமியை மேலே கொண்டுவந்ததைத் தமக்குச் செய்த உபகாரமாக அவர் எண்ணுகிறார்.

(2) 'வானமாமலை' என்பதற்குப் பொருள் : வானத்தில் - வைகுந்தத்தில், மா - பெரிய, மலை - மலைபோலிருக்கிறவனே என்று. இதற்கு வேறு விதமாயும் பொருள் கொள்ளலாம்— ஆகாசத்தைக் கிட்டும்படியாகப் பெரிய மலைபோல் உயர்ந்த திருமேனியையுடையவன்—என்று. (6)

---

அவ—கீழ்ப்பாட்டில் 'வந்தருளே' என்று ஆழ்வார் கூப்பிட்டும் எம்பெருமான் வாராமையால், தம்மை அவன் உபேக்ஷித்தான் என்று நினைத்து, 'என்னை அகற்றேலே' என்று இதில் வேண்டுகிறார் :—

வந்தருளி யென்னெஞ் சிடங்கொண்ட வானவா கொழுந்தே
[வுலகுக்கோர்
முந்தைத் தாய்தந்தையே! முழுவேழுலகு முண்டாய்!
செந்தொழி லவர்வேத வேள்வியறாச் சிரீவர மங்கலநகர்
அந்தமில் புகழா யடியேனை யகற்றேலே (எ)

(ப - ரை) வந்து அருளி - நீயாய் என்னிடம் வந்து, என நெஞ்சு - என மனதை, இடம் - இருப்பிடமாக, கொண்ட, வானவா - நித்தியஸூரிகளுக்கு, கொழுந்தே - தலைவனாயிருக்கிறவனே! உலகுக்கு - உலகங்களுக்கு, ஓர் - ஒப்பில்லாத, முந்தை - அநாதிகளான, தாய் தந்தை - தாயும தகப்பனுமானவனே! முழு ஏழு உலகும் - ஏழு லோகங்கள முழுவதையும, உண்டாய்-உணடவனே! செம தொழில அவர் - நலல வியாபாரங்களையுடையவர்களுடைய, வேத வேள்வி - வேதத்தில் சொல்லப்பட்ட ஆராதநங்கள், அறா - விடாமல் நடக்கிற, சிரீவரமங்கல நகர் - சிரீவரமங்கல நகரத்தில், இருக்கிற, அந்தமில புகழாய் - முடிவில்லாத நல்ல குணங்களையுடையவனே! அடியேனை, அகற்றேலே-உன்னை விட்டுப பிரிந்திருக்கும்படி செய்யாதே

(கருத்து) நானுக உன்னிடம் வரவேணடியிருக்க, நீயாய் என்னிடம வந்து, உன்னைத் தேடாமல விஷயங்களில் படிந்து இருந்த என் மனதை உனக்கு இருப்பிடமாகக் கொண்டாய். நித்தியஸூரிகளுக்குத் தலைவனே! எல்லாருக்கும் எல்லாப் பிறப்புகளிலும தாயைப போல பிரியத்தையும தகப்பனைப்போல் ஹிதத்தையும செய்கிறவனே! ஏழு உலகங்கள் முழுவதையும பிரளய காலத்தில் உன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தவனே! 'எனக்கு இதைக் கொடு, அதைக் கொடு' என்று வேறு பலன்களைக் கேளாமல நல்ல கைங்கரியங்களைச் செய்கிறவர்கள் உன்னை விடாமல் வேதம் சொன்னபடி ஆராதித்துக்கொணடிருக்கிற சிரீவரமங்கலத்தில் இருக்கிறவனே! முடிவில்லாத நலல குணங்களை உடையவனே! என்னை உன்னைவிட்டுப் பிரிந்திருக்கும்படி செய்யாதே.

(இ - ம்) அகற்றேல் - எதிர்மறை ஏவல் வினைமுற்று. (7)

அவ—நான் உண்மை அகற்றினனே என்றால், அதற்கு இதில் பதில் சொல்லுகிறார்:—

அகற்ற நீவைத்த மாயவல் லைம்புலன் களாமவை நன்கறிந்தனன்
அகற்றி யென்னையுநீ யருஞ்சேற்றில் வீழ்த்தி கண்டாய்
பகற்கதிர்மணிமாடநீடு சிரீவரமங்கைவாணனே யென்றும்
புகற்கரிய வெந்தாய்! புள்ளின்வாய் பிளந்தானே! (௮)

(ப - ரை) பகற் கதிர் - பிரகாசிக்கிற கிரணங்களையுடைய, மணிமாடம் - ரத்நங்கள் நிறைந்த வீடுகள், நீடு - உயரமாயிருக்கிற, சிரீவரமங்கை வாணனே - சிரீவரமங்கல நகரத்துக்குத் தலைவனே! என்றும் - எப்போதும், புகற்கு அரிய-(பிரதிகூலர்) உன்னிடம் வந்து சேருவதற்கு முடியாத, எந்தாய் - என் ஸ்வாமியே! புள்ளின் வாய் பிளந்தானே - கொக்கு ரூபமாய் வந்த அஸுரனுடைய வாயைப் பிளந்தவனே! அகற்ற - (குற்றம் பண்ணினவர்கள்) உன்கிட்ட வாராதபடி பண்ணுவதற்காக, நீ வைத்த, மாயம் - (ஞானமுள்ளவர்களையும்) மயக்கும்படியான ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற, வல் - பலமுள்ள (ஜயிக்க முடியாத), ஐம்புலன்களாம் அவை - ஐந்து இந்திரியங்களை, நன்கு - நன்றாக (அவைகள் செய்யும் கெடுதல்களில் ஒன்றும் தப்பாதபடி), அறிந்தனன்- அறிந்தேன், என்னையும் - (உன்னைத் தவிர வேறு கதியில்லாத) என்னையும், அகற்றி - உன்னைவிட்டுப் பிரியும்படி செய்து, அரும் சேற்றில் - வைத்தகாலை எடுக்க முடியாதபடியிருக்கிற சேற்றில், (விஷயங்களில்), வீழ்த்தி கண்டாய் - விழும்படி செய்தாய். இது நிச்சயம்.

(கருத்து) கிரணங்களை வீசுகிற ரத்நங்கள் நிறைந்த உயரமான வீடுகளுள்ள சிரீவரமங்கலம் என்கிற நகரத்துக்குத் தலைவனே! பிரதிகூலர்கள் எப்போதும் உன்னிடம் வர முடியாதபடி இருக்கிற ஸ்வாமியே! கொக்கு ரூபமாய்வந்த அஸுரன் வாயைப் பிளந்தவனே! ஞானிகளும் மயங்கும்படி ஆச்சரியமான வேலைகளைச் செய்கிற ஜயிக்க முடியாத ஐந்து இந்திரியங்களைக் குற்றம் பண்ணினவர்கள் உன் கிட்ட வாராதபடி நீ வைத்திருக்கிறாய். அவைகள் செய்கிற கெடுதல்களை எல்லாம் ஒன்றும் விடாமல் நான் அறிந்திருக்கிறேன். அவைகளின் விஷயங்களான

சப்தம் முதலானவைகள் வைத்த காலை எடுக்கமுடியாத சேறு போல் அவைகளை ஒருதடவை அநுபவிக்கிறவனை அவைகளை விட்டு விலகாதபடி செய்கின்றன. உன்னைத் தவிர வேறு கதியில்லாத என்னை அவைகளில் எப்போது விழும்படி செய்தாயோ, அப்போது உன்னைவிட்டு என்னை அகற்றவில்லையோ? இதை விரோதிகளுக்கு அன்றோ செய்யவேண்டுவது? அநுகூலனான எனக்குமா இதைச் செய்யலாமோ?

(இ - ம்) வீழ்த்தி - பிறவினை முன்னிலை வினைமுற்று. விழும்படி செய்தாய். (8)

---

அவ—"அருஞ்சேற்றில் வீழ்த்தி கண்டாய்" என்று பயப்படுகிறீரே, "உமக்கு நான் என்ன செய்யவேண்டும்" என்று எம்பெருமான் கேட்க, ஆழ்வார் இதில் பதில் சொல்லுகிறார்:—

புள்ளின் வாய்பிளந்தாய் மருதிடை போயினா யெருதே
கள்ள மாயவனே! கருமாணிக்கச் சுடரே! [ழடர்த்தவென்
தெள்ளியார் திருநான் மறைகள் வல்லார் மலிதண் சிரீவர மங்கை
யுள்ளிருந்த வெந்தா யருளா யுய்யுமா றெனக்கே. (௯)

(ப - ரை) புள்ளின் வாய் பிளந்தாய் - கொக்கு ரூபமாய் வந்த அஸுரனுடைய வாயைப் பிளந்தவனே! மருது இடை போயினாய் - இரட்டையான மருத மரங்களின் நடுவே போய் அவைகளைக் கீழே தள்ளினவனே! எருது ஏழு அடர்த்த - ஏழு காளைமாடுகளைக் கொன்ற, என் - என்னுடைய, கள்ள - ஒருவருக்கும் அறியமுடியாத, மாயவனே - ஆச்சரியமானவனே! கருமாணிக்க சுடரே - நீல மணியின் காந்தியையுடையவனே! தெள்ளியார் - தெளிந்தவர்களான, திரு நான் மறை - ஸம்பத்தை உடைய நாலு வேதங்களை, வல்லார் - உள்ளபடி அறிந்தவர்கள், மலி - நிறைந்திருக்கிற, தண் - குளிர்ந்த, சிரிவரமங்கையுள், இருந்த - என்னை அநுபவிப்பதற்காக எழுந்தருளியிருக்கிற, எந்தாய் - உபகாரகனே! உய்யுமாறு-நான் பிழைக்கும் வழியை, அருளாய் - கிருபை செய்யவேண்டும்.

(கருத்து) கொக்கு ரூபமாய் வந்த அஸுரன் வாயைப் பிளந்தது, இரட்டையான மருத மரங்களின் நடுவேபோய், அவை

களைக் கிழே தள்ளினது, ஏழு காளைமாடுகளை நப்பின்னைக்காகக் கொன்றது ஆகிய இந்த ஆச்சரியமான வேலைகளைச் செய்தவனே! உன்னை ஒருவரும் உள்ளபடி அறியமுடியாதபடி இருக்கிறவனே! ஆச்சரியமானவனே! இவைகளையும், நீல ரத்தினத்தின் காந்தியையுடைய திருமேனியின் அழகையும் காட்டி, என்னைத் தோற்பித்தது, என்னை உனக்கு அடிமையாகச் செய்துகொண்டவனே! நான்கு வேதங்களை உள்ளபடி அறிந்து உன் திருவடிகளே உபாயம் என்கிற நிச்சயமுள்ளவர்கள் நிறைந்திருக்கிற ஸம்ஸார தாபத்தைப் போக்குகிற சிரீவரமங்கலத்தில் என்னை அநுபவிப்பதற்காக எழுந்தருளியிருக்கிற என் ஸ்வாமியே! நான் பிழைக்கும் வழியைச் செய்தருளவேண்டும். (9)

---

அவ—இப்படி எம்பெருமானைக் கூப்பிட்டும், அவன் வரவில்லை. அவனே அடையவேண்டிய வஸ்து, அடைவதற்கு அவனே உபாயம் என்கிற நிச்சயம் ஆழ்வார் மனதில் தோன்ற, அதனால் ஸந்தோஷத்தையடைந்து, அதை இந்தப் பாட்டில் சொல்லுகிறார் :—

ஆறெனக்குநின் பாதமேசர ணாகத்தந்தொழிந் தாயுனக் கோர்கைம்
மாறுநானொன் றிலேனெனதாவியு முனதே
சேறுகொள்கரும் புப்பெருஞ் செந்நெலும் மலிதண் சிரீவர மங்கை
நாறுபூந்தண் டுழாயமுடியாய்! தெய்வ நாயகனே! (௧௦)

(ப - ரை) சேறு கொள் - சேற்று நிலங்களை இடமாகக் கொண்டிருக்கிற, கரும்பும், பெரும செந்நெலும் - ஓங்கி வளருகிற செந்நெற்பயிரும், மலி - நிறைந்திருக்கிற, தண் - குளிர்ந்த (சிரமத்தைப் போக்கும்படியான), சிரீவரமங்கை - சிரீவரமங்கையிலிருக்கிற, நாறு பூம் தண் துழாய் முடியாய் - வாஸனையுள்ள அழகான குளிர்ந்த துளஸிமாலையைக் கிரீடத்திலுடையவனே! தெய்வ நாயகனே - நித்தியஸூரிகளின் தலைவனே! எனக்கு - (வேறு கதியில்லாத) எனக்கு, நின் பாதமே - உன் திருவடிகளையே, ஆறு - உபாயமாகவும், சரண் - அடையவேண்டிய வஸ்துவாகவும், தந்தொழிந்தாய் - கொடுத்துவிட்டாய்,

*உனக்கு* - இப்படி பெரிய உபகாரத்தைச் செய்த உனக்கு, *ஓர் கைமாறு* - ஒரு பதில் உபகாரம், *நான், ஒன்றிலேன்* - ஒன்றுமில்லாதவனாயிருக்கிறேன், *எனது ஆவியும் உனதே* - என்னுடைய ஆத்மாவும் உன்னுடையது.

(கருத்து) கரும்பும் செந்நெலும் நிறைந்திருக்கிற சிரீவரமங்கலத்தில் துளஸிமாலையைக் கிரீடத்திலுடையவனாய், எழுந்தருளியிருக்கிற நித்தியஸூரிகளின் தலைவனே! உன திருவடிகளை நான் அடையவேண்டிய வஸ்து என்றும், அங்ஙனம் எனக்கு அவைகளே உபாயமென்றும் நான் நிர்மானம் பண்ணும்படி செய்திருக்கிறாய். இந்தப் பெரிய உபகாரத்துக்கு நான் என்ன பதில் உபகாரம் செய்யமுடியும்? அநேக உபகாரங்கள் வேண்டாம். ஓர் உபகாரத்தையாவது செய்யலாகாதோ என்றால் அதுவும் முடியாது. உம்முடைய ஆத்மாவைக் கொடுமென்றால், அதுவும் அநாதிகாலமாக உன்னுடைய சொத்து. எல்லாவிதத்தாலும் நிறைந்திருக்கிற உனக்கு என்ன வேண்டியது?

குறிப்பு:-பாட்டில் 'ஆறு' என்று உபாயத்தைச் சொன்னபடியால், உபாயத்தைப் பொருளாக உடைய 'சரண' என்கிற சொலலுக்கு இங்கே அடையவேண்டிய வஸ்து என்று பொருள் கொள்ளவேண்டும். (10)

---

தெய்வ நாயக னாரண னன்றிரி விக்கி ரமனடி யிணைமிசை
கோய்கொள் பூம்பொழில்சூழ் குருகூர்ச் சடகோபன்
செய்த வாயிரத் துள்ளிவை தண்சிரீ வரமங்கை மேய பத்துடன்
வைகல் பாடவல்லார் வானோர்க் காராவமுதே. (கக)

(ப - ரை) *திரிவிக்கிரமன்* - உலகங்களை மூன்று அடிகளால் அளந்தவனாயும், *தெய்வநாயகன்* - நித்தியஸூரிகளுக்குத் தலைவனுமிருக்கிற, *நாரணன்* - நாராயணனுடைய, *அடியிணை மிசை* - இரண்டு திருவடிகளின் மேல், *கொய் கொள் பூம் பொழில் சூழ்* - வருத்தமில்லாமல் பறிக்கக்கூடிய புஷ்பங்களையுடைய சோலைகளால் சூழப்பட்ட, *குருகூர் சடகோபன் செய்த ஆயிரத்துள்,*

---

(N. B) இந்த ஆசிரியத்துறைச் செய்யுள் முதலடியும் மூன்றாம் அடியும் எழுசீர்கள்; அயலடியும் ஈற்றடியும் நாற்சீர்கள்.

தண்-குளிர்ந்த (ஸம்ஸாரத்தின் தாபத்தைப் போக்கும்படியான), சிரீவரமங்கை மேய-சிரீவரமங்கலத்தை ஆதரித்த (ஸ்தோத்திரம் பண்ணினவைகளான), இவை பத்து - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், உடன் - இவைகளின் கருத்துடன், வைகல் - எப்போதும், பாட வல்லார் - பாட சக்தியுள்ளவர்கள், வானோர்க்கு - நித்தியஸூரிகளுக்கு, ஆரா அமுதே - எவ்வளவு அநுபவித்தாலும் திருப்தி வராத அமுதம்போல இனியவர்களாயிருப்பர்கள்.

(கருத்து) உலகங்களை மூன்று அடிகளால் அளந்தவனும் நித்தியஸூரிகளுக்குத் தலைவனும் இருக்கிற நாராயணனுடைய திருவடிகளின்மேல், ஆழ்வார் ஸ்ரீவரமங்கலத்தை ஸ்தோத்திரம் பண்ணிச் சொன்ன, இந்தப் பத்துப் பாட்டுக்களை இவைகளின் கருத்தையறிந்து எப்போதும் பாடச் சக்தியுள்ளவர்கள் நித்திய ஸூரிகளுக்கு ஆராத அமுதம்போலிருப்பார்கள்.

குறிப்பு :—(1) 'திரிவிக்கிரமன்' என்பதால் எம்பெருமான் தன் ஸொத்தைப் பிறர் கொண்டுபோகாதபடி மீட்டுக்கொண்டவன் என்றும், 'தெய்வநாயகன்' என்பதால் இந்த வேலையைச் செய்தவன் பிரம்மாவுக்கும் ருத்திரனுக்கும் தலைவன் என்றும் காட்டப்படுகிறது. ஆகாசத்துக்குப் போன திருவடிக்கு பிரம்மா திருமஞ்சனம் பண்ணினான். அந்த தீர்த்தத்தைப் பின்னால் ருத்திரன் தலையால் வஹித்தான். ஆகையால், எம்பெருமானே அவ்விருவருக்கும் தலைவன்.

(2) 'வைகல்' என்பதற்கு, இந்தப் பாட்டுக்களை இன்ன காலத்தில் பாடலாம் இன்ன காலத்தில் பாடக்கூடாது என்று ஒரு நியமமில்லை. அவைகளை எப்போதும் பாடலாம் என்று கருத்து. (11)

---

[illegible] ||௪௫||

---

இந்தத் திருவாய்மொழியில் தேவதைகள் எல்லாருக்கும் தலைவனான எம்பெருமான் தங்களை ரக்ஷித்துக்கொள்ளுகிற உபாயமில்லாமல் வருத்தப்படுகிறவர்களை ரக்ஷிக்கத்தகுந்தவன் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன. - (1) பாம்புகளின் தலைவனான ஆதிசேஷன்மேல் படுத்திருப்பது; (2) சக்கரம் சங்கு இவைகளைத் தரித்துக்கொண்டிருப்பது; (3) இரக்கமுள்ளவனாயிருப்பது; (4) பக்தர்களுக்குத் துணையாய் இருந்து உபகாரம் செய்தது. (5) எல்லாருக்கும் அந்தர்யாமியாயிருப்பது? (6) பூமியைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தது; (7) எல்லாருக்கும் தகப்பனைப்போல் ஹிதத்தைச் செய்வது; (8) வேறு ஜநங்களால் கலக்க முடியாமலிருப்பது; (9) ஆச்சரியமான வேலைகளைச் செய்வது, (10) பதில் உபகாரத்தை எதிர்பார்க்காமல் உபகாரம் செய்வது. (65)



# எட்டாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த்திருவாய்மொழியில பததாவது பாட்டில் எம்பெருமானை பிராப்யனை உபாயம என்கிற எண்ணத்தைக் கொடுதத உபகாரத்தை நினைதது, ஆழ்வாா ஸந்தோஷப்பட்டார் என்று சொல்லப்பட்டது. அந்த ஸந்தோஷம் அநதக் காலத்துக்குக் கொஞ்சம் ஆறுதலைச் செய்தது. அவனுடைய பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமல் வருததப்படட வருததம் நீங்காமல் இருக்கும்போது, எல்லாச் செல்வததுடனும் திருக்குடந்தையில் தான் எழுந்தருளியிருப்பதை அவன் ஆழவாருக்குக் காட்டினான். இதனால் அவன ஆபத் காலத்தில உதவுகிறவன என்று நினைதது, தமமுடைய இஷ்டங்களையெல்லாம கொடுப்பன என்று அவனைக் கூப்பிடுகிறார்.

(2) ஆழ்வார் அவதாரம் செய்ததுமுதல, திருப்புளி அடியின்கீழ் எப்போதும இருந்தபடியால, மற்ற ஆழ்வார்களைப்போல் திருக்குடந்தைக்கு வரவில்லை. மனதாலே எம்பெருமானைக் கண்டு பேசுகிறார்.

(3) அர்ச்சையாக எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் கணகளால் ஒருவனைப் பார்ப்பதும சோதி வாய் திறந்து ஒரு பேச்சுப் பேசுவதும், கண்ணன அக்ரூரரைக கைகளால் கட்டிக் கொண்டதுபோல் திருக்கைகளால கட்டிக்கொள்வதும முடியாதே. இஃது ஆழ்வாருக்குத தெரியாதா? பாஹ்யஸம்ச்லேஷம் எனகிற இந்த வியாபாரங்களை எபபடி ஆசைப்படக்கூடும் என்றால், பதில—தாயார் பாலைத தேடுகிற குழந்தை, அவள் அவசியம் செய்யவேண்டிய வேலையைச் செய்துகொண்டிருந்து அதை எடுக்காமலிருப்பதை அறியாமல அழுவதுபோல, ஆழ்வாரும் தம்முடைய வருத்தத்தினால் அர்ச்சாவதாரததின் ஏற்பாட்டை மறந்து, பாஹ்யஸம்ச்லேஷத்தை வேண்டுகிறார்— என்பது.

( அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.)

ஆரா வமுதே யடியே னுடலம் நின்பா லன்பாயே
நீரா யலைந்து கரைய வுருக்கு கின்ற நெடுமாலே
சீரார் செந்நெல் கவரி வீசுஞ் செழுநீர்த் திருக்குடந்தை
ஏரார் கோலந் திகழக் கிடந்தாய் கண்டே னெம்மானே (க)

(ப - ரை) எம்மானே - (கூலியைக் கொடுத்து ஒருவனுக்கு ஸ்வாமியாய் இருப்பதுபோலில்லாமல்), எப்போதும் எல்லாருக்கும் ஸ்வாமியானவனே! ஆரா அமுதே - உன்னை அநுபவித்துக்கொண்டிருக்கிற உனக்கும் மற்றவர்களுக்கும் ஒரேவிதமாய் எவ்வளவு காலம் அநுபவித்தாலும், திருப்தி வாராதபடி இனியனானவனே! அடியேன் - தாஸனான என்னுடைய, உடலம் - உடம்பானது, நின்பால் உன்னிடத்தில், அன்பாயே - பிரீதியாகவே மாறி, நீராய், அலைந்து -(ஒரு இடத்தில் நிற்கமுடியாமல்) அலைந்துகொண்டு, கரைய - கரையும்படி, உருக்குகின்ற - உன்னுடைய அழகு முதலானவைகளைக் காட்டி உருக்குகிற, நெடுமாலே-(என்னாலே கிட்டமுடியாதபடி) தூரவிருக்கிற ஸ்வாமியே! சீர் ஆர் - அழகு நிறைந்த, செந்நெல் - கதிர்வாங்கின செந்நெல் பயிர்கள், கவரி வீசும் - உனக்குச் சாமரம் போடுவதுபோல் அசைந்துகொண்டிருக்கிற, செழுநீர் - செழுமையுள்ள நீரையுடைய, திருக்குடந்தை - திருக்குடந்தையிலே, ஏர் ஆர் - அழகு நிறைந்த, கோலம் - நகைகள் வஸ்திரம் முதலான அலங்காரங்கள், திகழ - விளங்கும்படி, (நீலமான உன் திருமேனி அழகாலே அவைகளுக்கு ஒரு புதிய அழகு உண்டாகி விளங்க) கிடந்தாய் - படுத்துக்கொண்டு இருக்கிறாய், கண்டேன் - நான் உன்னைப் பார்த்தேன்.

(கருத்து) அம்மானே! ஆராவமுதே! ஞானமும் ஆநந்தமுமுள்ளவனை உருகுவதற்கு யோக்கியமாயிருக்கிற என்னைப் போல அறிவில்லாத என் உடம்பும், பிரீதியாக மாறிவிட்டது. அதுவும் கெட்டியாக இல்லாமல் நீராய் ஆகிவிட்டது; ஜலத்தைக் குடத்தில் வைத்தால் ஒரே இடத்தில் நிலைத்திருக்கும். அது போல நிலையாயில்லாமல் அலைந்துகொண்டிருக்கிறது. அதற்கு மேல் ஜலமும் கெட்டியான வஸ்துவாயிருக்கிறது என்று சொல்லும்படி, அதைக்காட்டிலும் அதிகமாய் கரையும்படி, உன்னு

டைய அழகு முதலான குணங்களைக் காட்டி, அந்த உடம்பை உரு க்குகிறாய் நீ இப்படிச்செய்தும் நான கிட்டவராதபடி தூரத்திலி ருக்கிறாய். அழகு நிறைந்த கதிர் வாங்கின செந்நெல் பயிர்கள், நீ படுத்துக்கொண்டிருக்கிற அழகைப் பார்த்து, உனக்குச் சாமரம் வீசுகிறதோ என்று எண்ணும்படி அசைந்துகொண்டிருக்கிற நீர் நிறைந்த திருக்குடந்தையில அழகு நிறைந்த நகைகளும் பீதாம் பரமும, மற்ற அலங்காரங்களும், நீலமான உன திருமேனியின் அழகால ஒரு புதிய அழகைப் பெற்று விளங்கும்படி படுத்துக் கொண்டிருக்கிறாய். இப்படியிருக்கிற உன்னை நான் பார்த்தேன. ஆனால், நீ கண்களைத திறந்து குளிரப்பார்த்து ஒரு பேச்சுப் பேசிக கைகளால என்னைக கட்டிக்கொள்ளவில்லை.

குறிப்பு.—(1) 'அடியேன்' என்பதற்கு, எம்பெருமான் ஆழ்வாருக்குத தன் விஷயத்தில் ஞானத்தையும பக்தியையும் கொடுத்த உபகாரத்தை நினைத்து, இப்படித் தம்மைச் சொல்ல வில்லை. அவன அளவில்லாமல் இனியவனாயிருப்பதை நினைத்து, அதினாலுண்டான ஸந்தோஷத்தால் தன்னை அவனுக்கு அடிமை என்று சொல்லுகிறார் என்பது கருத்து.

(2) "கிடந்தாய்" என்பதற்கு எம்பெருமான அங்குமிங் கும் போய்க்கொண்டிருந்தால் அவன் திருமேனியில் அலங்காரங் கள் அலைந்துகொண்டிருப்பதால அவைகளுக்கு உண்டாகும் அழகு நன்றாய்விளங்காது. அவன் படுத்துக்கொண்டிருப்பதினால், அவைகள் அசையாமலிருந்து அழகு நன்றாய் விளங்குகிறது என் றும, அவன தூங்குகிற காலத்தில அழகின் மிகுதியால இவன் எழுந்திருந்தால இந்த அழகு போய்விடுமோ என்று நினைக்கும் படி இருந்தது என்றும் கருத்து.

(3) 'கண்டேன் அம்மானே' என்பதற்கு, ஆழ்வார் எம் பெருமான் அழகைப் பார்க்காவிட்டாலும, பார்த்தும, அவன் யாரோ நான யாரோ என்று எண்ணினாலும், ஆறியிருக்கலாம். அப்படி இல்லாமல், அவன் அழகைப் பார்த்து, அவனும் தன்னு டைய ஸ்வாமி என்று அறிந்தபின்பும ஆறியிருக்கமுடியுமோ என்பது கருத்து. (1)

அவ—கீழ்ப் பாட்டில் ஆழ்வார் எம்பெருமானைக் கூப்பிட்டும் அவன் பதில் சொல்லவில்லை. அதினால், உமக்கு வேண்டினதை நீரே செய்துகொள்ளும் என்று அவன் எண்ணியிருந்ததாக அவர் நினைத்து, அவன் தமக்கு இதுவரையில் செய்த உபகாரங்களை இதில் சொல்லுகிறார்.—

எம்மா னேயென் வெள்ளை மூர்த்தி யென்னை யாள்வானே
எம்மா வுருவும் வேண்டு மாற்று லாவா யெழிலேறே
செம்மா கமலஞ் செழுநீா மிசைகண் மலருந் திருக்குடந்தை
அம்மா மலர்க்கண் வளாகின் றானே யென்றான் செயகேனே. (உ)

(ப - ரை) என் - எனக்கு இனியவனான, வெள்ளை மூர்த்தி - (எல்லாவிதங்களான தோஷங்களையும் போக்கும்படி) சுத்தமான திருமேனியை உடையவனே! எம்மானே -(உனனுடைய அழகு முதலான குணங்களால்) என்னை உனக்கு அடிமையாகச் செய்து கொண்டவனே! என்னை ஆள்வானே-(மேன்மேலும் உன குணங் களைக் காட்டி அதினால் என்னை வசப்படுத்தி உனககுக் கைங்கரி யம செய்வதில்) ஆசையுள்ளவனாய் செய்கிறவனே! வேண்டும ஆற்றால் - நீ நினைககிறபடி, எம்மா உருவம் ஆவாய் - எவ்வித மான அழகு மிகுந்த ரூபங்களையும் எடுத்துக்கொள்ளுகிறவனே! எழில் - அழகையுடைய (பரரூபததைக் காட்டிலும் அவதார தசையில் அதிக அழகையுடையவனாய்), ஏறே - விருஷபம்போல் இருக்கிறவனே! செம - சிவந்த, மா- பெரிய, கமலம - தாமரைப் பூககள், நீர் மிசை கண் - ஜலத்தின மேல், அலரும் - மலருகிற, திருக்குடந்தை - திருக்குடந்தையிலே, அ மா மலர் - அந்த பெரிய தாமரைப் பூக்களபோல் இருக்கிற, கண் - கண்களை, வளர் கின்றானே - மூடிக்கொண்டிருக்கிறவனே! நான் என் செய் கேன் - நான் எதைச் செய்வேன்?

(கருத்து) எனக்கு இனியவனாயும் எல்லாவிதமான தோஷங் களைப் போக்கும்படி சுத்தமான திருமேனியை உடையவனாயும் இருக்கிறவனே! உன அழகைப் பார்த்து என்னை வசப்படுத்தி உனக்கு அடிமையாகப் பண்ணிக்கொண்டவனே! மேன்மேலும் உனக்குக் கைங்கரியம பண்ணுவதில் ஆசையுள்ளவனாய் என்னைச் செய்கிறவனே! கர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்கள் அதன் பலனை

அநுபவிப்பதற்காக உடம்பை எடுத்துக்கொள்வதுபோல் இல்லாமல் உன் ஸங்கல்பத்தினாலேயே எந்த விதமான அழகு நிறைந்த அவதார ரூபங்களையும் எனக்காகவும ஆச்ரிதர்களுக்காகவும் எடுத்துக்கொள்ளுகிறவனே! இப்படி உபகாரங்களைச் செய்த நீயே இன்னும் எனக்கு வேண்டியவைகளைச செய்யவேண்டாமோ? பரரூபத்தைக் காட்டிலும் அவதார ரூபத்தில் அதிக அழகுள்ளவனாய் ஆச்ரிதர்களுக்காக அவதாரம் செய்த பெருமையாலே கொழுத்த விருஷபம்போல விளங்குகிறவனே! சிவந்த பெரிய தாமரைப்பூக்கள் திருக்குடந்தையில் ஜலத்தின்மேல் மலர்ந்திருக்கின்றனவே, அவைகளிலுள்ள தேன் துளிகளை வண்டுகள் குடித்துக்கொண்டு ஸந்தோஷம அடைகின்றனவே, ஆச்ரிதர்களைக் குளிரக்கடாக்ஷிக்கிறவைகளாகப் பிரஸித்தமான, அழகு நிறைந்த உன் திருக்கண்களாகிய தாமரைப்பூக்கள் மலராமல் மூடிக்கொண்டிருக்கின்றனவே, மலர்ந்த அவைகளை நான் பார்த்து அவைகளை அநுபவிக்காமல் நான் பட்டினியாய் இருக்கலாமோ? நான என்ன செய்வேன்.

குறிப்பு:—(1) பூஜ்யர்கள் கண்ணை மூடிக்கொண்டிருப்பதை "கண்வளர்கிறார்" என்று சொல்லுவது உலக வழக்கம். அப்படியே ஆழ்வாரும் எம்பெருமான் கண்களை மூடிக்கொண்டு இருப்பதை "கண்வளர்கின்றானே" என்று சொல்லுகிறார்.

(2) அவதாரம்செய்தகாலத்திலும் எம்பெருமானை ஸேவிக்காதவர்கள் அவனை ஸேவித்துப் பிழைப்பதற்காக அன்றோ இங்கே கண்வளர்கிறது. என்னைக் கண்ணாலே பார்க்கவேண்டாமோ என்பது கருத்து. (2)

---

அவ—இரண்டு பாட்டுக்களாலும் எம்பெருமானை ஆழ்வார் கூப்பிட்டும் அவன் வரவில்லை. ஒரு பலனை வேண்டினால் அதற்காக ஏதாவது பிரயத்தினம் செய்யவேண்டுமென்று அவன் எண்ணியிருப்பதாக நினைத்து, "அந்தப் பிரயத்தினத்தை நான் செய்யவேண்டியதா? அல்லது வேறு ஏதாவது செய்யவேண்டியதா?" என்று ஆழ்வார் தனக்குள்ளே சங்கித்துப் பதில் சொல்லுகிறார்:—

என்னான் செய்கேன் யாரே களைக ணென்னையென் செய்கின்றா
யுன்னா லல்லால் யாவ ராலு மொன்றுங் குறைவேண்டேன்
கன்னார் மதிள்சூழ் குடந்தைக் கிடந்தா யடியே னருவாணாள்
சென்னா ளெந்நா ளந்நா ளுனதாள் பிடித்தே செலக்காணே (௩)

(ப - ரை) கன் ஆர் - உறுதியாயிருப்பது நிறைந்த, மதிள் சூழ் - மதில்களாலே சூழப்பட்ட, குடந்தை-திருக்குடந்தையில், கிடந்தாய் - படுத்திருப்பவனே! நான், என் செய்கேன் - எந்த உபாயத்தைச் செய்வேன்? யாரே - உன்னைத் தவிர யார், களைகண் - ரக்ஷிக்கிறவர் உண்டு, என்னை என செய்கின்றாய் - என்னை எதைச் செய்விக்க எண்ணுகிறாய்? உன்னால் அல்லால், யாவராலும் - எந்த உபாயத்தாலும், ஒன்றும் குறை-குறையைத் தீர்க்கிற ஒன்றையும், வேண்டேன, அடியேன் - தாஸனான என் னுடைய, அரு - ஸ்வரூபமானது, வாழ் நாள் - இருக்கிற காலத்தில், செல் நாள் - செல்லும் (நடக்கப்போகும்) நாள், எந்நாள் - எத்தனை நாள் இருக்குமோ, அ நாள் - அந்த நாள்களெல்லாம், உன தாள் - உன்னுடைய திருவடிகளை, பிடித்தே செல - நான் பிடித்துக்கொண்டே போகும்படி, காண் - கடாக்ஷித்து அருள வேண்டும்.

(கருத்து) திடமான மதில்களாலே சூழப்பட்ட திருக் குடந்தையில் படுத்திருப்பவனே! என்னால் செய்யக்கூடிய உபாயம் ஒன்றுமில்லை. உன்னைத் தவிர ரக்ஷிக்கிறவன் எவன் இருக்கிறான்? என்னை எதைச் செய்விக்க நினைக்கிறாய்? என்னைப் பக்தியோகம் செய்யும்படி செய்து கைவிடப் பார்க்கிறாயா? என்னை ரக்ஷிப்பதை உன்னுடைய பொறுப்பாக எண்ணிக் கொண்டு நீ துக்கப்படாதே என்று என்னைப் பார்த்துச் சொல்ல நினைக்கிறாயா? உம்மால் பக்தியோகம் செய்ய இப்போது சக்தி இல்லாவிட்டாலும், அதைச் செய்ய சக்தியைக் கொடுத்து அதை நீர் செய்யும்படி செய்கிறேன் என்று நினைக்கிறாயா? ஓர் உபாயத்தையும் செய்ய சக்தியில்லாதவர்களுக்கு நீயே உபாயமாய் இருக்கிறாய். ஆகையால், உன்னைத் தவிர. வேறு உபாயத்தாலே எனக்கும் ஒன்றும் வேண்டாம். வேறு உபாயத்தாலே உன் திருவடிகளை நான் அடைவதானால் அதையும் வேண்டேன். அதற்கும் வேறு புருஷார்த்தத்துக்கும் வாசியிருப்பதாக நான் எண்ணா

வில்லை. ஆகையால், நான் எவ்வளவுகாலம் இருப்பேனே அவ்வளவு காலம் உன் திருவடிகளைப் பிரியாதே நான் பிடித்துக் கொண்டேயிருக்கும்படி கடாக்ஷித்தருளவேண்டும்.

குறிப்பு :—(1) ஒருநாயகத்தில் (4—1) ஆழ்வார் எம்பெருமானுடைய திருவடிகளைத் தவிர வேறொன்றும் அடையத் தகுந்ததில்லை என்று சொன்னார். ஆகையால், அவருடைய திருவடிகளை அடையவேண்டியது என்று மறுபடியும் இங்கு சொல்ல வேண்டியதில்லை. அதையும் பக்தியோகத்தாலே அவர் அடைய வேண்டியதாக இருந்தால் அதுவும வேண்டாமென்று ஆழ்வாருடைய கருத்து. ஆகையால், "யாவராலும்" என்பதற்கு எந்த உபாயததாலும் என்பது பொருள். 'யாவையாலும்' என்று சொல்லவேணடாவோ எனறால், பக்தியோகமானது அறிவில்லாதது, தமக்குச் செய்யவேண்டியது, அறிவுள்ள எம்பெருமானாலேயே எனறு காட்டுவதற்காகவும், அசக்தனை தன்னதிகாரத்திற்குத் தகாத பக்தியோகத்தை அநாதரம் செய்வதற்காகவும் 'யாவராலும்' என்று சொல்லுகிறார்.

(2) பாட்டில் 'அரு' என்கிற சொல்லுக்கு ரூபமில்லாத வஸ்து என்று பொருள். அது இங்கே ரூபமில்லாத ஆத்மவஸ்துவைச் சொல்லுகிறது. (3)

---

அவ—ஆச்ரிதர்களுக்காக நான் திருக்குடந்தையில் வந்திருக்கவில்லையா? நீர் ஏன வருத்தப்படுகிறீர் என்றால் இதில் பதில் சொல்லுகிறார்.—

சேலக்காண் கிற்பார் காணு மளவுஞ் செல்லும் கீர்த்தியா
யுலப்பி லானே யெல்லா வுலகு முடைய வொருமூர்த்தி
நலத்தான் மிக்கார் குடந்தைக் கிடந்தா யுன்னைக் காண்பானன்
அலப்பா யாகா சத்தை நோக்கி யழுவன் தொழுவனே. (ச)

(ப - ரை) செல - செல்லும்படி, (மேன்மேலும் போகிற உன்னுடைய கீர்த்தியின் பெருமையை அதுடன் கூடப் போய்), காண்கிற்பார் - அறியும்படியான சக்தியுள்ளவர்கள், (எல்லாம் அறிந்த பிரம்மா முதலானவர்களும், அவர்களுக்கும்

மேற்பட்ட நித்தியஸூரிகளும்), காணும் அளவும் - எவ்வளவு பார்க்கக்கூடுமோ அதற்கும் மேலும், செல்லும கீர்த்தியாய் - போகிற கீர்த்தியையுடையவனே! உலப்பு இலானே - (குணங் களுக்கும் விபூதிகளுக்கும) முடிவில்லாதவனே! எல்லா உலகும உடைய - எல்லா லோகங்களையும் உன ஸொத்தாக உடைய, ஒரு - (அழகிறுலே) ஒப்பில்லாத, மூர்த்தி-திருமேனியையுடைய வனே! நலத்தால் - உன்னிடததில பக்தியால், மிக்கார் - உயர் ந்தவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடையதான, குடந்தை - திருக் குடந்தையில், கிடந்தாய் - படுத்திருப்பவனே! உன்னை-இப்படி இருக்கிற உன்னை, காண்பான் - பார்ப்பதற்கு ஆசைப்பட்டு, நான், அலப்பாய் - கலங்கினவனுய், ஆகாசத்தை நோக்கி - நீ வரு கிற ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு, அழுவன - அழுகிறேன், தொழுவன் - தொழுகிறேன்.

(கருத்து) எல்லாம அறிந்த பிரம்மா முதலானவர்களும் நித்தியஸூரிகளும் எவ்வளவு பார்க்ககூடுமோ, அதறகு மேலும் போகிற கீர்த்தியையுடையவனே! உன் குணங்களுக் கும விபூதிகளுக்கும முடிவில்லாதவனே! எல்லா ஆதமாக்களும உன் அழகுக்கு வசப்பட்டு அடிமையாகும்படியான ஒப்பில்லாத அழகுள்ள திருமேனியையுடையவனே! உன்னிடததில் கரை புரண்ட பக்தியுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுடையதான திருக்குடந் தையில் படுததிருப்பவனே! இப்படிப்பட்ட உன்னுடைய பாஹ் யஸம்ச்லேஷம கிடைப்பதற்காக ஸ்ரீகஜேந்திராழ்வானிடம் நீ வந்ததுபோல் நீ வருவாய் என்று நினைத்து, நீ வருகிற ஆகா சததைப் பார்த்து குழந்தைபோல் அழுதுகொண்டும தொழுது கொண்டும் இருக்கிறேன்.

குறிப்பு :—(1) 'வானவர் நாடு' என்று வைகுந்தத்தை நித்தியஸூரிகளுடைய நாடு என்று சொல்லுவதுபோல் திருக் குடந்தையைத் தனனிடம் பக்தியுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுடைய நாடாகவும், அதில் தான் வந்திருப்பதாகவும் எம்பெருமான் எண்ணமென்று ஆழ்வார் நினைக்கிறார். ஆகையால்தான், பிராட்டி பிறந்த இடமென்று திருப்பாற்கடலில் அவன் படுத்திருப்பது போல், அவன் தன் பக்தர்களுடைய ஊராகையால் அதில் படுத் திருக்கிறுன் என்பது கருத்து.

(2) அலைப்பு ஆய்—மிகவும் அலைப்புள்ளவன் என்று காட்டு வதற்காக, அலைப்பு ஆகவே ஆய் என்று சொல்லுகிறார்.

(இ - ம) காண்பான - காணா : வினையெச்சம். அலைப்பு என்பது யதுகைக்காக அலப்பு என்று என்றாயிற்று. (4)

---

அவ—எம்பெருமானுடைய பாஹ்யஸம்ச்லேஷம் கிடைப்ப தற்காகப் பலவிதமான *கிருபணாவிருத்திகளைச் செய்தும, அவன் வரவில்லை. ஆகையால், அவன திருவடிகளைப் பெறும் வழியை அவனே செய்யவேண்டும என்று இந்தப் பாட்டில அருளிச் செயகிறார் :—

அழுவன் றொழுவ னாடிக் காண்பன் பாடி யலற்றுவன்
தழுவல் வினையாற் பக்கம் நோக்கி நாணிக் கவிழ்ந்திருப்பன்
செழுவொண் பழனக் குடந்தைக் கிடந்தாய செந்தா மரைக்கண்ணா
தொழுவ னேனை யுனதாள் சேரும் வகையே சூழ்கண்டாய். (ரு)

(ப - ரை) அழுவன் - குழந்தைகளைப்போலே அழுதுபார்க் கிறேன், தொழுவன - (வேதாந்தம் அறிந்தவர்களைப்போலே) தொழுகிறேன், ஆடி காண்பன் - (எதைச் செய்தால் உன்னை அடையலாம் என்று அறியாமல) கூததாடிப் பார்க்கிறேன், பாடி- (உன்னுடைய குணங்களைப்) பாடிக்கொண்டு, அலற்றுவன் - பிர லாபம் பண்ணுகிறேன், தழு - என்னைக் கட்டிக்கொண்டிருக் கிற (என்னை விடாமலிருக்கிற), வல் - பலமான, வினையால் - கர்மததாலே, பக்கம் நோக்கி - (பக்கததிலிருப்பவர்கள் உனக்கு இரக்கமில்லை என்று சொல்லுவார்களோ என்று பயந்து) அவர் களைப் பார்த்துக்கொண்டு, நாணி - வெட்கப்பட்டு, கவிழ்ந்து இருப்பன - தலைகுனிந்திருக்கிறேன், செழு ஒண் பழனம - செழிப்பையுடைய விளங்குகிற வயல்களையுடைததான, குடந்தை கிடந்தாய் - திருக்குடந்தையில படுததிருப்பவனே! செந்தா மரைக்கண்ணா! தொழுவனேனை - கிருபணனான என்னை, உன தாள் - உன்னுடைய திருவடிகளை, சேரும் வகை - அடையும்படி, சூழ் கண்டாய் - நீயே உபாயத்தைச் செய்யவேண்டும்.

---

* கிருபணாவிருத்தியாவது—துக்கப்படுகிறவன் தன் துக்கத் தை மற்றவர்களுக்குக் காட்டும்படியான வியாபாரங்கள்.

(கருத்து) உன்னுடைய ஸம்ச்லேஷம் கிடைக்கவேண்டும் என்கிற ஆசையால் குழந்தைகளைப்போலே அழுகிறேன். அறிவுள்ளவர்களைப்போலத் தொழுகிறேன். எதைச் செய்தால் என ஆசை நிறைவேறும் என்று அறியாமல் கூத்தாடிப் பார்க்கிறேன். உன் குணங்களைப் பாடிக்கொண்டு பிரலாபம் செய்கிறேன். இந்தக் கிருபண விருத்திகளாலே நான் ஆசைப்படுவது கிடைக்கவில்லை. பக்கத்திலிருப்பவர்கள் இவ்வளவு நான் செய்தும் நீ வரவில்லையென்று உனக்கு இரக்கமில்லையென்று சொல்லுவார்களோ என்று தலை குனிந்தே நிற்கிறேன். இப்படி நிறகும்படி உன்னாலும் போக்கமுடியாத பலமான பாபங்களைச் செய்திருக்கிறேன். செழிப்புள்ள வயல்களால் சூழப்பட்ட திருக்குடந்தையில் படுத்திருப்பவனே! உன் தாமரைக் கண்களால் என்னைக் குளிரக் கடாக்ஷிக்கவேண்டும். என ஆசை நிறைவேறுவதற்கு என்ன உபாயம் செய்யவேண்டுமோ, அதை நீயே பார்த்தருளவேண்டும். இதை அவசியம் செய்தருளவேண்டும். (5)

---

அவ—கீழ்ப் பாட்டில் 'சூழ்கண்டாய்' என்று ஆழ்வார் எம்பெருமானை உபாயத்தை ஸங்கல்பிக்கவேண்டும் என்று சொன்னார். அதை எப்படிச் செய்யவேண்டும் என்பதை இதில் அருளிச்செய்கிறார் :—

சூழ்கண் டாயென் றொல்லை வினைய றுத்துன் னடிசேரு
மூழ்கண் டிருந்தே தூராக் குழிதூர்த் தெனைநா ளகன்றிருப்பன்
வாழ்தொல் புகழார் குடந்தைக் கிடந்தாய் வானோர் கோமானே
யாழி னிசையே யமுதே யறிவின் பயனே யரியேறே. (௬)

(ப - ரை) வாழ்-வாழ்க்கையாலே, (உன்னையே அநுபவித்துக் கொண்டு ஸுகமாயிருப்பதாலே உண்டாகி) தொல்புகழார் - பழைய (ஸ்வபாவமாகவேயிருக்கிற) கீர்த்தியையுடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, குடந்தை கிடந்தாய் - திருக்குடந்தையில் படுத்திருக்கிறவனே! வானோர் கோமானே - நித்தியஸூரிகளின் தலைவனே! யாழின் இசையே-வீணையின் காநத்தைப்போலே காதுக்கு இனியவனானவனே! அமுதே-அமிருதத்தைப்போலே சொல்லும்போது இனியவனானவனே! அறிவின் பயனே,

உன்னை நினைக்கும்போது இனியவனாயிருக்கிறவனே! அரி ஏறே- ஸிம்மம்போலே கம்பீரமாயிருக்கிறவனே! என் - என்னுடைய தொல்லை - அநாதியான, வினை - கர்மங்களை, அறுத்து, சூழ் கண்டாய் - நீ உபாயத்தைச் செய்யவேண்டும் உன் அடி - உன் திருவடிகளை, சேரும் ஊழ் - சேருவதே எனக்கு ஸ்வபாவமாயிருப்பதை, கண்டிருந்தே - நான பார்த்திருந்தும், தூரா - நிரப்ப முடியாத (விஷயங்களை அநுபவிப்பதால் திருப்தி உண்டாக்கமுடியாத), குழி - இந்திரியங்களை, தூர்த்து - விஷயங்களாலே நிரப்பிக்கொண்டு, எனை நாள் - எத்தனை நாள், அகன்று இருப்பன் - உன்னைவிட்டுப் பிரிந்திருப்பேன்.

(கருத்து) அநாதிகாலமாக வந்திருக்கிற என்னுடைய கர்மங்களை நாசம் செய்து, நான் உன்னைவந்து சேரும்படியான ஓர் உபாயத்தைச் செயயவேணடும். அப்படிச்செய்யும்போது, அதை நான் அறிந்தால், ஒருவேளை தப்பிப்போவேன; அதை நான் அறியாதபடியே செய்யவேண்டும. (என வேண்டியும் அவன் அதை உடனே செய்யாமையால்) உன்னையே அநுபவித்துக்கொண்டு ஸுகமாயிருப்பதாகிய கீர்த்தியையுடைய ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஊரான திருக்குடந்தையில் உன்னுடைய வாத்ஸல்யத்தையும் ஸௌசீல்யத்தையும் ஸௌலப்யத்தையும் காட்டிக்கொண்டு படுத்திருக்கிறவனே! உன்னைப்பற்றிக் கேட்கும்போதும் உன் குணங்களைச் சொல்லும்போதும் உன்னையும் உன் குணங்களையும் நினைக்கும்போதும் மிகவும இனியவனாய் இருக்கிறவனே! சிங்கம்போல் கம்பீரமாயிருக்கிறவனே! இப்படி உன குணங்களையும், நீ இனியவனாய் இருப்பதையும் உன் திருவடிகளைச் சேருவதே ஸ்வபாவமாயிருப்பதையும அறிந்தும் இந்திரியங்களைத திருப்திசெய்துகொண்டு உன்னைவிட்டுப் பிரிந்து எத்தனை நாள் இருப்பேன்?" என்கிறார்.

குறிப்பு:-கீழ்ப் பாட்டில் 'சூழகண்டாய்' என்று சொன்னதை இந்தப் பாட்டில் மறுபடியும் சொல்லுவதற்குக் கருத்து கீழே சொன்னபடி கொள்ளவேணடும்.

(இ - ம்) தூரா - தூராத : எதிர்மறைப் பெயரெச்சம். (6)

அவ—உன் திருவடிகளைவிட்டுப் பிரிந்து ஒரு க்ஷணமும் என்றால் இருக்கமுடியாது. இப்போதே அவைகளைக் கொடுக்க வேண்டுமென்று இதில் அருளிச்செய்கிறார் —

அரியே றேயேன் னம்பொற் சுடரே செங்கட் கருமுகிலே
எரியே பவளக் குன்றே நாற்றோ ளெந்தா யுனதருளே
பிரியா வடிமை யென்னைக் கொண்டாய் குடந்தைத் திருமாலே
தரியே னினியுன் சரணந் தந்தென் சன்மங் களையாயே (எ)

(ப - ரை) அரி ஏறே - ஸிம்ம ச்ரேஷ்டமே! என - என்னுடைய, அம் பொன சுடரே - அழகான பொன்னைப்போல் ஆசைப்படககூடிய காந்தியையுடையவனே! செம் கண் - சிவந்த திருக்கண்களையும், கருமுகிலே - நீலமேகம்போன்ற திருமேனியையுமுடையவனே! எரியே-அக்கினியைப்போலிருக்கிற, பவளம் குன்றே-பவளமலையைப்போலிருப்பவனே! நால் தோள் எந்தாய்-நாலு தோள்களின் அழகாலே என்னை அடிமையாக்கிக்கொண்டு ஸ்வாமியாயிருக்கிறவனே! உனது அருளே - உன கிருபையாலேயே, என்னை பிரியா அடிமை கொணடாய் - உன்னைவிட்டுப் பிரியாமல் அடிமையாயிருககும்படி என்னைச் செய்துகொண்டவனே! குடந்தை திருமாலே - திருக்குடந்தையில் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கிறவனே! இனி தரியேன் - இப்படியானபிறகு உன்னைவிட்டுப பிரிந்திருக்கப் பொறுததிருக்கமாட்டேன், உன் சரணம் தந்து - முன்னாலே உன திருவடிகளைக் கொடுத்து, என சன்மம - என பிறப்பை (ஸம்ஸாரதசையை), களையாய் - போக்கவேண்டும்.

(கருத்து) ஸிம்மம்போலே ஒருவருக்கும் உட்படாதபடி ஸ்வதந்திரனாய் இருக்கிறவனே! அழகான பொன்னைப்போல் பார்க்க ஆசைப்படும்படியிருக்கிற காந்தியையுடையவனே! சிவந்த திருக்கண்களையும் நீலமேகமபோன்ற திருமேனியையுமுடையவனே! நெருப்பைப்போலே காந்தியுள்ளவனே! பவளமலைபோல் இனியவனாயிருப்பவனே! கல்பக விருக்ஷம் கிளைத்திருப்பது போல் நான்கு தோள்களையுடையவனே! இவ்விதமான அழகைக் காட்டி என்னை அடிமையாக்கிக்கொண்ட என் ஸ்வாமியே! உன் கிருபையாலேயே உன்னைவிட்டுப் பிரியாமல் அடிமையாயிருக்

கும்படி என்னைச் செய்துகொண்டவனே! எனக்காகவே திருக் குடந்தையில் பிராட்டியுடன் எழுந்தருளியிருக்கிறவனே! இப்படி நான் தாஸனானபின்பு உன்னைவிட்டுப் பிரிந்திருக்க எனக்குப் பொறுக்காது. ஆகையால், தாய் தன் குழந்தைக்கு முன்னாலே ஸ்தநத்தைக் கொடுத்து, பின்னால் அதற்கு ஒரு சிகிச்சையைச் செய்வதுபோல, முன்னாலே உன் திருவடிகளை எனக்குக் கொடுத்துப் பின்னாலே என் ஸம்ஸாரத்தைப் போக்கவேண்டும்.

குறிப்பு:—முன் பாட்டுகளில், 'கிடந்தாய்' என்று சூலவரையும், இந்தப் பாட்டில் "நாறமேழ்' என்று உதலவரையும் ஆழ்வார் சொல்லுகிறாரென்பர் பெரியோர்.

(இ - ம) கொண்டாய் - வினையாலணையும் பெயரின் விளி வேற்றுமை. களையாய் - ஏவல் வினைமுற்று. (7)

---

அவ—கிழ்ப் பாட்டில உடனே வருமபடி ஆழ்வார் எம்பெருமானைக் கூப்பிட்டார். அவன் வரவில்லை. இதில் பலவிதமாக அலற்றுகிறார் —

களைவாய் துன்பங் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன்
வளைவாய் நேமிப் படையாய் குடந்தைக் கிடந்த மாமாயா
தளரா வுடல மெனதாவி சரிந்து போம்போது
இளையா துனதா ளொருங்கப் பிடித்துப் போத விசைநீயே. (அ)

(ப - ரை) துன்பம் - என் துக்கங்களை, களைவாய் - நீ போக்கினாலும் போக்கு; களையாது ஒழிவாய்-அதைப் போக்காமலிருந்தாலும் இரு; மற்று - உன்னைககாட்டிலும், வேறான, களைகண் இலேன - உபாயமுடையேனல்லேன, வளை வாய் - வளைவிலும் வாயை (கூர்மையான பாகத்தை) யுடைய, நேமி படையாய் - சக்ரம் என்கிற ஆயுதத்தையுடையவனே! குடந்தை கிடந்த - திருக்குடந்தையில் படுத்துக்கொண்டிருக்கிற, மா மாயா - மிகவும் ஆச்சரியமானவனே! உடலம் - என்னுடைய உடம்பானது, தளரா - தளர்ச்சியை அடைந்து, எனது ஆவி - என்னுடைய ஆதம ஸ்வரூபமானது, சரிந்து போம்போது - கெடுதியடையும் காலம் வந்திருக்கிறது, இளையாது - என் ஆத்மா இளைப்பதற்கு முன்னாலே, ஒருங்க - அவைகளிலேயே மனதிருக்கும்படி, உன தாள் - உன்னுடைய திருவடிகளை, பிடித்து போத - பிடித்துக்கொண்டே போகும்படி, நீ இசை - நீ ஒப்புக்கொள்ளவேண்டும்.

(கருத்து) உன்னை அநுபவிக்கப் பெறாமையாலே வந்த என்னுடைய துக்கங்களை நீ போக்கினாலும் போக்கு. அதைப் போக்காமலிருந்தாலுமிரு. இதை உன இஷ்டப்படி செய். ஆனால், உனனைத்தவிர வேறு எனக்கு உபாயமில்லை. என்னை ரக்ஷிப்பதினால் லாபமும், அதைச் செய்யாமையால் நஷ்டமும் உன்னுடையவைகள. கூரான முனையையுடைய சக்ரம எனகிற ஆயுதத்தை நீ வைததுக்கொண்டிருப்பது என பாபத்தைப் போககி என்னை ரக்ஷிப்பதற்காகத்தானே. திருக்குடந்தையில் ஆச்சரியமான அழகுடன் நீ படுத்திருப்பது ஆச்ரிதர்களுக்காகவன்றோ. என் உடமபு தளர்ந்தது. என ஆதமஸ்வரூபததுக்குக் கெடுதியுண்டாகும் காலம் வந்திருக்கிறது. அதற்கு முன்னாலேயே உன் திருவடிகளை நான பிடித்து அவைகளினிலேயே மனதை வைத்துக்கொண்டுபோகும்படி நீ கிருபை செய்ய வேண்டும்.

குறிப்பு :—பதவுரையில் "போது வந்திருக்கிறது" என்று "வந்திருக்கிறது" என்கிற சொல் வருவிக்கப்பட்டது. அதை வருவிக்காமலும், வரும்போது-வருங்காலத்தில் என்றும் பொருள்கொள்ளலாம்.

(இ - ம்) தளரா - தளர்ந்து : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (8)

---

இசைவித் தென்னை யுன்றா ளிணைக்கீ ழிருத்து மம்மானே
அசைவி லமரர் தலைவர் தலைவா வாதிப் பெருமூர்த்தி
திசைவில் வீசுஞ் செழுமா மணிகள் சேருந் திருக்குடந்தை
அசைவி லுலகம் பரவக் கிடந்தாய் காண வாராயே. (௯)

(ப - ரை) என்னை, இசைவித்து - (நான் உன்னுடைய தாஸன்) என்று ஒப்புக்கொள்ளும்படி செய்து, உன் தாளிணை கீழ் - உன்னுடைய இரண்டு திருவடிகளின் கீழே, இருத்தும் - நிலையாயிருக்கும்படி செய்த, அம்மானே - ஸ்வாமியே! அசைவு இல்-சலநமில்லாத (ஒரு க்ஷணமும உன் அநுபவத்தை விட்டிருக்காத), அமரர் - நித்தியஸூரிகளுக்கு, தலைவர் - தலைவர்களான ஆதிசேஷன் முதலானவர்களுக்கும், தலைவா - தலைவனே! ஆதி - உலகத்துக்குக் காரணமான, பெரு மூர்த்தி - பெரிதான திரு

மேனியை உடையவனுயிருக்கிறவனே! திசை - திக்குக்களில், வில - பிரகாசத்தை, வீசும் - பரவச் செய்கிற, செழு - அழகான மா - பெரிய, மணிகள்-இரத்தினங்கள், சேரும், திருக்குடந்தை - திருக்குடந்தையில், அசைவு இல்-சலநமில்லாமல், உலகம்-எல்லா ஜநங்களும், பரவ - ஸ்தோத்திரம் பண்ண (பண்ணி உன்னை அடைய), கிடந்தாய் - படுத்திருப்பவனே! காண - நான் பார்க்கும்படி, வாராய் - வந்து அருளவேண்டும்.

(கருத்து) அநாதிகாலமாக உன்னுடையதான என் ஆத்ம ஸ்வரூபத்தை எனனுடையதாக எண்ணிக்கொண்டு, நீ "என தாஸன்" என்று சொன்னால் நான் இல்லையென்று சொல்லிக் கொண்டிருந்த என்னை உனக்குத் தாஸன் என்பதை நான் ஒப்புக் கொள்ளும்படி செய்தாய். உன திருவடிகளைச் சேருவதையே ஸுகமென்றும், அதைவிட்டுப் பிரிவதே துக்கமென்றும் எண்ணும்படி அவைகளில் அளவில்லாத பிரீதியையுண்டாக்கினவனே! ஒருக்ஷணமும்கூட உனனைவிட்டுப் பிரியாமல் எப்போதும் உன்னை அநுபவித்துக்கொண்டிருக்கிற ஆதிசேஷன் முதலான நித்திய ஸூரிகளுக்கும் தலைவனுயிருக்கிறவனே! இப்படியிருந்தும் எல்லாத்திக்குக்களிலும் காந்தியைப் பரவச்செய்கிற அழகான பெரிய ரத்தினங்கள் தாமாக வந்து சேருகிற திருக்குடந்தையில், ஸர்வேசுவரனான உன்னை அடையமுடியுமோ என்று ஸந்தேஹப் படாதபடி உலகத்தார் எல்லாரும் ஸ்தோத்திரம் பண்ணி அடையும்படி படுத்திருப்பவனே! நீ படுத்திருக்கும் அழகைப் பார்த்தேன். நீ நடந்துவருகிற அழகை நான் பார்க்கும்படி வந்து அருளவேண்டும்.

குறிப்பு :— 'மணிகள்' என்பதற்கு எங்கும் பரவும்படியான பெருமையையுடைய திருமழிசைப்பிரான் முதலான பெரியோர்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

(இ - ம்) வாராய் - முன்னிலை ஏவல் வினைமுற்று. (9)

---

வாரா வருவாய் வருமென் மாயா மாயா மூர்த்தியாய்
ஆரா வமுதா யடியே னாவி யகமே தித்திப்பாய்
தீரா வினைக ளூர வென்னை யாண்டாய் திருக்குடந்தை
ஊரா வுனக்காட் பட்டு மடியே னின்ன முழல்வேனோ. (கo)

(ப - ரை) வாரா-(நான் கண்களாலே பார்த்து, உன் அழகை அநுபவிக்கும்படி நடந்து) வாராமல், அருவாய - (பாஹ்யஸம்ச்லேஷத்துக்குத் தகுந்த) ரூபமில்லாமல், (மனதால் மாத்திரம் காணும்படியாய்) வரும் - வருகிற, என் மாயா - என் ஆச்சரியமானவனே! மாயா மூர்த்தியாய் - நாசத்தை அடையாத திருமேனியையுடையவனே! ஆரா அமுதாய் -(எத்தனைகாலம் அநுபவித்தாலும்) திருப்தி வாராதபடி அமுதம்போல இனியவனாயிருக்கிறவனே! அடியேன - அடியேனுடைய, ஆவி அகமே - மனதில், தித்திப்பாய் - இனியவனாயிருப்பவனே! தீரா - உன்னைத் தவிர வேறொருவராலும் தீர்க்கமுடியாத, வினைகள் - உன் அநுபவத்துக்கு இடைஞ்சல்களான கர்மங்கள், தீர - தீரும்படி, என்னை ஆண்டாய் - என்னை ரக்ஷித்தவனே! திருக்குடந்தை ஊரா - திருக்குடந்தையை உனக்கு இருப்பிடமாகக் கொண்டவனே! உனக்கு ஆட்பட்டும் - உனக்கு அடிமையான பிறகும், நான், இன்னம், உழல்வேனோ - வருத்தப்படத் தகுந்தவனோ?

(கருத்து) கண்களாலே உன்னைப் பார்த்து அநுபவிக்கும்படி வாராமல், மனதுக்கு மாத்திரம் தோன்றுகிறவனே! ஆச்சரியமான உன் அழகால் என்னை அடிமையாக்கிக்கொண்டவனே! ஒருபோதும் வேறுபாடில்லாமல் ஒரேவிதமாயிருக்கிற அப்பிராகிருதமான திருமேனியையுடையவனே! எவ்வளவுகாலம் அநுபவித்தாலும் திருப்திவாராதபடி அமுதம்போல இனியவனாயிருக்கிறவனே! என் மனதில் இனியவனாகத் தோன்றுகிறவனே! உன்னைத்தவிர, வேறு ஒருவராலும் தீர்க்கமுடியாமல் உன்னை அநுபவிப்பதற்கு இடைஞ்சல்களாயிருந்த என்னுடைய பாபங்கள் தீரும்படி என்னைக் கிருபையால் ரக்ஷித்தவனே! திருக்குடந்தையை இருப்பிடமாக உடையவனே! திருக்குடந்தைக்கு வந்தால் எனக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கும் என்று வந்த நான் இவ்வளவு அலற்றியும் நீ வரவில்லையே இன்னம் எத்தனை திருப்பதிகளுக்குப்போய் அலையவேண்டுமோ? உனக்கு அடிமையானபிறகும், நான் அலையத்தகுந்தவனோ?

(இ - ம்) வாரா - வாராமே: ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம்.

(10)

---

உழலை யென்பிற் பேய்ச்சி முலையூ டவளை யுயிருண்டான்
கழல்க ளவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்
குழலின் மலியச் சொன்ன வோரா யிரத்து ளிப்பத்து
மழலை தீர வல்லார் காமர் மானேய் நோக்கியர்க்கே. (கக)

(ப - ரை) உழலை என்பில் - உழலைத் தடியைப்போலிருந்த எலும்புகளையுடைய, பேய்ச்சி - (பூதனை என்கிற) பேய்ச்சியினுடைய, முலையூடு - ஸ்தநங்களின் வழியாக, அவளை, உயிர் உண்டான் - அவள் உயிரைச் சாப்பிட்ட கிருஷ்ணனுடைய, கழல்கள் அவையே - திருவடிகளையே, சரணாகக்கொண்ட - உபாயமாகக் கொண்ட, குருகூர் சடகோபன், குழலின் மலிய - அவனுடைய வேணுகானத்தைக்காட்டிலும் (இனிமை) மிக, சொன்ன, ஓர் ஆயிரத்துள், இ பத்து - இந்தப் பத்துப் பாட்டுக்களை, மழலை- இளமை, (இளமைப்பருவத்தால் மூழ்க்கருத்தை அறியாமை) தீர-போகும்படி. வல்லவர் - படிக்க சக்தியுள்ளவர்கள், மான் ஏய் நோக்கியர்க்கு - மான் பார்வைபோன்ற பார்வையுள்ள ஸ்திரீகளுக்கு, காமர் - காமுகர் (அவர்களிடத்தில் ப்ரீதியுள்ள கணவன்மார்கள்போல் எம்பெருமானுக்கு இனியவர்களாக ஆவர்கள்.)

(கருத்து) ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காக அவர்களின் விரோதியான பூதனை என்கிற பேய்ச்சியினுடைய ஸ்தந்யத்தோடு அவள் உயிரைச் சாப்பிட்டு அவளை நாசம் செய்த கண்ணன் திருவடிகளை ப்ராப்யமும் உபாயமுமாகக்கொண்ட ஆழ்வார் அவனுடைய வேணுகானத்தைக்காட்டிலும் மிகவுமினியவைகளாயிருக்கும்படி சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களை, அவைகளின் கருத்தை அறிந்து, அடிக்கடி படிக்கச் சக்தியுள்ளவர்கள் எம்பெருமானுக்கு இனியவராக ஆவர்கள்.

(இ - ம்) குழலின் - இன்-ஐந்தாம் வேற்றுமை உருபு. குழலைக்காட்டிலும் என்பது பொருள். (11)

நிஸ்ஸீமாஹ்லாத த்ருப்த்யகரகஸுக ஸ்வவஶஜநித யதேஷ்டாவதார
ஸ்வார்த்தாநந்யார்ஹதாதீதகீர்த்யா நம்புஜநயநதோ நாயக
த்வாத்ஸூரீணாம் | ஸிம்ஹச்ரேஷ்ட்யாதியோகாத் அநந்யோபாய
தாத்ருத்வஹாஸஸஹஸ்ராவதாரஸ்ய ஸ்வ ஸ்வாவயஸ்வாது ஹரி
ரிதி ஶார்ங்கிஸ் ஸ்வாவயாஸ்ரஸ க்ருஷ்ட்ய ॥ ||௫௫||

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களைத் தனக்கு அடிமையாயிருப்பதில் நிலையாய் வைக்கிறான் என்பதைப் பத்துக் காரணங்களாலே ஆழ்வார் அருளிச்செய்கிறார். அந்தக் காரணங்களாவன.—(1) திருப்திவாராதபடி இனியனாயிருப்பது; (2) தன் இஷ்டப்படி அவதரிப்பது; (3) தன்னைத்தவிர வேறு விஷயத்தில் மனது போகாதபடி செய்வது; (4) அளவில்லாத கீர்த்தியுள்ளவனாயிருப்பது; (5) செந்தாமரைக் கண்ணனாயிருப்பது; (6) நித்தியஸூரிகளுக்குத் தலைவனாயிருப்பது; (7) ஸிம்மத்தைப்போலே எல்லாருக்கும் மேற்பட்டிருப்பது முதலானவைகள்; (8-10) தன்னைத்தவிர வேறு உபாயமும், வேறு பிரயோஜநமும் இல்லாதபடி பண்ணுவதற்காகத் திருக்குடந்தையாகிய கிட்டின இடத்தில் எழுந்தருளியிருப்பது.

---

## ஒன்பதாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார் ஆராவமுதனைக் கூப்பிட்டும், அவன் வரவில்லை. அவருக்கு வேண்டியதும் கிடைக்கவில்லை. அவர் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கையில், திருவல்லவாழில எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் தன்னைக் காட்டி அருள, அந்த ஊருக்குப் போனால், எல்லாம் கிடைக்கும் என்று நினைத்து அங்கே போக ஆரம்பித்தார். பலக்குறைவினால் அதைச செய்யமுடியவில்லை. மிகுந்த வருத்தத்தையடைந்து தன் தசையை இந்தத திருவாய்மொழியில் வெளியிடுகிறார்.

(2) பலமில்லாத ஒரு மிருதுவான ஒரு ஸ்திரீ, திருவல்லவாழிக்குப்போக ஆரமபிக்க, அவள் தோழிமார்கள் "உன்னால் போகமுடியாது" என்று சொல்லித தடுக்க, அவர்களைப் பார்த்து "நான எப்போது போகப்போகிறேனோ" எனறு நல்ல வார்த்தை சொல்லுவதுபோல் ஆழ்வார் தம்முடைய ஆசையையும் வருததத்தையும் பேசுகிறார்.

( கலித்துறை.)

மானேய் நோக்குநல் லீர்வைக லும்வினை யேன்மெலிய
வானார் வண்கமு கும்மது மல்லி கைகமழுந்
தேனா சோலைகள் சூழ்திரு வல்ல வாழுறையுங்
கோனா ரையடி யேனடி கூடுவ தென்றுகொலோ. (க)

(ப - ரை) மான் ஏய் நோக்கு - மான்போன்ற பார்வையையுடைய, நல்லீர்-நல்ல தோழிகளே! வினையேன்-பாபம்பண்ணின நான், வைகலும் - எப்போதும், மெலிய-இளைக்கும்படி, வான் ஆர் வண் கமுகும்-ஆகாசததில் நிறைந்திருக்கிற உதாரங்களான பாக்கு மரங்களும, மது மல்லிகை - தேனைப்பெருக்குகிற மல்லிகைக் கொடிகளும், கமழும் - வாஸிக்கும்படியானதும், தேன் ஆர்-தேன் நிறைந்த, சோலைகள் சூழ் - சோலைகளாலே சூழப்பட்டதுமான, திருவல்லவாழ் - திருவல்லவாழில், உறையும் - எப்போதும் வஸிக்கிற, கோனாரை - ஸ்வாமியை, அடியேன, கூடுவது - சேருவது, என்றுகொலோ - எப்போதோ ?

(கருத்து) மானைப்போன்ற பார்வையையுடைய என்னிடம் ஸ்நேஹமுள்ள தோழிகளே! எம்பெருமானை விட்டுப்பிரிந்து வருத்தப்படும்படி பாபஞ்செய்த என்னை, திருவல்லவாழ் சோலைகளிலிருக்கும் பாக்குமரங்களும் அவைகளைச் சுற்றிக்கொண்டிருக்கிற மல்லிகைக் கொடிகளும், தங்கள் பூக்களின் வாஸனையாலே என்னை இன்னும் அதிகமாக வருத்தப்படுத்துகின்றன. இவ்விதமான சோலைகளாலே சூழப்பட்ட திருவல்லவாழில் அதை ஒரு க்ஷணமும் விடாமல் வஸிக்கிற ஸ்வாமியை அடியேன் போய்ச் சேருவது எத்தனைநாளைக்குப் பிறகோ?

குறிப்பு:—(1) "மானேய் நோக்கு" என்பதற்கு, நான் அந்த ஊருக்குப்போகும்படி நீங்கள் என்னைக் குளிரக் கடாக்ஷிக்கவேண்டும் என்று ஆழ்வார் அவர்களை வேண்டுகிறார் என்பது கருத்து. இதற்கு-ஏற்கனவே வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற இவளை நாம் போகவேண்டாம் என்று சொன்னால், இவள் வருத்தம் அதிகமாக ஆகும் என்று பயப்படுகிறார்கள் என்றும், இவளைத் தடுக்கவேண்டும் என்கிற அவர்களின் எண்ணம் கண்ணால் தோன்றுகிறது என்றும் வேறுவிதமாயும் கருத்துச்சொல்லலாம்.

(2) "வண் கமுகு" என்று கமுகமரங்களை உதாரங்களாகச் சொன்னதின் கருத்து—மல்லிகைக்கொடிகள் தங்களைச் சுற்றிக்கொண்டிருக்கும்படி தங்கள் உடம்புகளை அவைகளுக்குக் கொடுத்துக்கொண்டிருக்கின்றன-என்பது. இதனால் அவைகளைப் போல, திருவல்லவாழ் எம்பெருமானுடைய திருமேனியைத் தாம் கட்டிக்கொள்ளும்படி தன்னைத் தமக்குக் கொடுக்கவேண்டும் என்று ஆழ்வார் ஆசைப்படுகிறார் என்பது காட்டப்படுகிறது.

(3) 'மது மல்லிகை' என்பதற்கு, கமுகுடன் சேர்ந்த மல்லிகைக்கொடி ஸந்தோஷப்பட்டுத் தேனைப்பெருக்குகிறது என்பது கருத்து. இப்படி எம்பெருமானைச் சேர்ந்து நாமும் ஸந்தோஷப்படவில்லையே என்று ஆழ்வார் எண்ணுகிறார்.

(4) இப்படி ஸ்திரீயும் புருஷனுமாய்ச் சேர்ந்து அவ்விடத்தில் ஸந்தோஷப்பட்டால் அல்லது தனித்திருக்கமுடியாத அழகான ஊரிலிருந்தும் என்னைவிட்டுப் பிரிந்தும் எம்பெருமான் தனியாயிருக்கத் துணிந்திருக்கிறானே என்று ஆழ்வார் வருந்தப்படுகிறார். (1)

என்றுகொல் தோழிமீர் காணெம்மை நீர்நலிந் தென்செய்தீரோ
பொன்றிகழ் புன்னை மகிழ்புது மாதவி மீதணவித்
தென்றன் மணங்கம ழுந்திரு வல்ல வாழ்நகருள்
நின்ற பிரானடி நீறடி யோங்கொண்டு சூடுவதே. (உ)

(ப - ரை) தோழிமீர்காள்! எம்மை - என்னை, நீர் - நீங்கள், நலிந்து-(திருவல்லவாழுக்கு என்னைப் போகவிடாமல்) வருத்தப்படுத்தி, என் செய்தீரோ - என்ன செய்கிறீர்கள், பொன் திகழ் - பொன்னைப்போலே விளங்குகிற, புன்னை, மகிழ், புது - அப்போது மலர்ந்த, மாதவி - குருக்கத்தி, மீது - (இந்தப் புஷ்பங்களின்) மேலே, அணவி - சேர்ந்து, தென்றல் - தென்னல் காற்றானது, மணம் கமழும் - வாஸனையைவீசும், திருவல்லவாழ் நகருள், நின்ற பிரான - எழுந்தருளியிருக்கிற பிரானுடைய, அடி நீறு - திருவடித் தூளிகளை, கொண்டு - பெற்றுக்கொண்டு, அடியோம் - தாஸர்களான நானும் நீங்களும், சூடுவது - தலையில் வஹிப்பது, என்றுகொல் - எப்போதோ?

(கருத்து) தோழிகளே! எம்பெருமானைவிட்டு நான் பிரிந்திருக்கமுடியாதென்று என் ஸ்வபாவம் உங்களுக்குத் தெரியாதா? தெரிந்த நீங்கள் என்னைத் திருவல்லவாழுக்குப் போகக் கூடாது என்று தடுக்கிறீர்களே. எனக்குப் பிரியத்தைச் செய்கிற உங்களுக்கு இது தகுந்ததோ. தென்னல்காற்றுகூட புன்னைப்பூ மகிழம்பூ அப்போது மலர்ந்த குருக்கத்திப்பூ இவைகளுக்குள்ளே புகுந்தால், பூக்களின் வேகமை தனக்கும் உண்டாகும் என்று நினைத்ததுபோல், புஷ்பங்களின்மேலேயே பட்டுக்கொண்டு வந்து வாஸனையை வீசுகிறது. இப்படிப்பட்ட திருவல்லவாழில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய திருவடித் தூளிகளை அடியார்களான நானும் நீங்களும் பெற்று தலையால் வஹிப்பது என்றைக்குக் கிடைக்கப்போகிறதோ? (2)

---

சூடு மலர்க்குழ லீர்துய ராட்டியேன் மெலிவுப்
பாடேல் வேத வொலிபர வைத்திரை போன்முழங்க
மாடேய்ந் தோமப் புகைகம ழுந்தண் டிருவல்லவாழ்
நீடுறை கின்ற பிரான்கழல் காண்டுங்கொ னிச்சலுமே. (ங)

(ப - ரை) சூடு மலர் குழலீர் - சூட்டப்பட்ட புஷ்பங்களை யுடைய கூந்தலையுடைய தோழிகளே! துயராட்டியேன் - துக்கத்தையுடைய நான், மெலிய - இளைக்கும்படி, பாடும் நல்வேதம் ஒலி - பாடப்பட்ட நல்ல ஸாமவேதத்தின் சப்தமானது, பரவை திரை போல் - ஸமுத்திரத்தின் அலைகள்போல, முழங்க - முழங்கும்படியாயும், ஓமப்புகை - யாகங்களில் செய்யப்படும் ஹோமங்களினுடைய புகையானது, மாடு உயர்ந்து - பக்கங்களில் மேல்போய், கமழும் - வாஸிக்கும்படியாயுமிருக்கிற, தண் - குளிர்ந்த, திருவல்லவாழ் - திருவல்லவாழில், நீடு உறைகின்ற பிரான் - நித்தியமாக வஸிக்கிற உபகாரகனுடைய, கழல் - திருவடிகளை, நிச்சலும் - எப்போதும், காண்டுமெகொல் - பார்த்துக்கொண்டிருப்போமா ?

(கருத்து) தோழிகளே! என்னைப்போல் வருத்தப்படுகிற நீங்கள் உங்கள் வருத்தத்தைக் காட்டினால் என்னால் பொறுக்கமுடியாது என்று புஷ்பங்களைத் தலையிற் சூடிக்கொண்டு ஸந்தோஷமுள்ளவர்கள்போலத் தோன்றுகிறீர்கள். அதுவும் என்னை வருத்தப்படுத்துகிறது. திருவல்லவாழில் பிராமணர்கள் யாகம் செய்யும்போது காநம்செய்யும் ஸாமவேதத்தின் சப்தமானது ஸமுத்திரத்தின் அலைகள்போல் மேனமேலும் வந்துகொண்டிருக்கிறது. அவர்கள் செய்யும் ஹோமங்களின் புகையும் மேலே எழுந்து வாஸிக்கிறது. இந்தச் சப்தமும் இந்த வாஸனையும் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற என்னை நலியும்படி செய்கின்றன. இப்படிப்பட்ட ஊரில் நித்தியமாய் வாஸம் செய்கிற எம்பெருமானுடைய திருவடிகளை அடைந்து அவைகளை எப்போதும் பார்த்துக்கொண்டு அநுபவிக்கப்பெறுவோமா ?

குறிப்பு.—(1) ஸ்ரீ கீதையில், வேதங்களுக்குள்ளே நான் ஸாமவேதம் என்று சொல்லப்பட்டதை நினைத்து, அதை 'நல் வேதம்' என்று பாட்டு சொல்லுகிறது.

(2) 'தண்' என்பதற்கு அந்த ஊருக்குப் போகிறவர்களுடைய மூன்றுவிதமான தாபங்கள் போகும் என்பது கருத்து.

(3) 'பிரான்' என்கிற சொல்லுக்கு அவதாரங்களில் போலில்லாமல் இப்போதிருக்கிறவர்களும் எப்போதும் ஸேவிக்

குப்படி அர்ச்சையாக எழுந்தருளியிருந்து எம்பெருமான் உபகாரம் செய்கிறான் என்பது கருதது.

(இ - ம்) காண்டுமே : தும் : காலங்காட்டும் விகுதி. இங்கே வருங்காலத்தைக் காட்டுகிறது. (3)

---

அவ—இப்படி நீ ஆசைப்படுவது தகுந்தது அன்று என்று தடுக்கிற தோழிகளைப்பார்த்து, என் பிராணன் எம்பெருமான் அதீநம். ஆகையால், நான அவனைவிட்டுப் பிரிந்திருக்கமுடியாது. ஆகையால், உங்கள் பேச்சுக்கள் வீண் என்று இதில் அருளிச்செய்கிறார் :—

நிச்சலுந் தோழிமீர் காளெம்மை நீர்நலிந் தென்செய்தீரோ
பச்சிலை நீள்கமு கும்பல வுந்தெங்கும் வாழைகளும்
மச்சணி மாடங்கண் மீதணவுந் தண்டிரு வல்லவாழ்
நச்ச ரவினணை மேனம்பி ரானது நன்னலமே. (ச)

(ப - ரை) பச்சிலை - பச்சையான இலைகளை எப்போதுமுடைய, நீள் கமுகும் - உயரமான பாக்குமரங்களும், பலவும் - பலாமரங்களும், தெங்கும் - தென்னைமரங்களும், வாழைகளும், மச்சு அணி - மாடிகளின் வரிசைகளையுடைய, மாடங்கள்மீது - வீடுகளின்மேலே, அணவும் - சேரும்படியான, தண் - குளிர்ந்த திருவல்லவாழ் - திருவல்லவாழிலே, நச்சு அரவு - விஷத்தையுடைய பாம்பான ஆதிசேஷனாகிய, அணைமேல் - படுக்கைமேல் படுத்துக்கொண்டிருக்கிற, நமபிரானது - நம்பிரானுடையது, நல் நலம் - ஆநந்தம் முதலான குணங்களையுடைய என் ஸ்வரூபம். தோழிமீர்காள் ! நீர் - நீங்கள், எம்மை - என்னை, நிச்சலும் - எப்போதும், நலிந்து - (அந்த ஊருக்கு 'உன்னைப்போகவிடோம்' என்று) வருத்தப்படுத்தி, என செய்தீரோ - என்ன வேலை செய்கிறீர்கள் ?

(கருத்து) திருவல்லவாழில் வீடுகளில் மாடிகள் ஒன்றின்மேல் ஒன்றாயிருக்கின்றன. அவைகளின்மேலே எப்போதும் பசுமையுள்ள இலைகளையுடைய பாக்குமரங்களும், பலாமரங்களும், தென்னைமரங்களும், வாழைகளும் பட்டுக்கொண்டிருந்து நிழலை

உண்டென்றுகிறபடியால் அந்த ஊர் குறைமையுள்ளதாய் இருக்கிறது. அப்படிப்பட்ட ஊரில் ஆதிசேஷன்மேல் படுத்திருக்கிற எம்பெருமானுக்கு என் ஸ்வரூபம அதீநமாயிருக்கிறது. அவனை விட்டு நான் பிரிந்திருக்க முடியுமோ? இப்படியிருக்க, எனக்குப் பிரியதத்தைச் செய்யவேண்டிய தோழிகளே! உங்கள் வார்த்தையையும் கேட்காமல் விருப்போன என்னை 'உன்னை அந்த ஊருக்குப் போகவிடோம்' என்று தடுக்கிறீர்களே, என்ன வேலை செய்கிறீர்கள். இதனால ஒரு பிரயோஜநமுண்டோ? இல்லையே.

குறிப்பு —(1) சக்கிரவர்த்தித திருமகன சிருங்கிபேரபுரத்தில் ஸீதையுடன் படுத்திருக்கும்போது, அவனுக்கு ஒரு குறையும் வராதபடி அவன தம்பி காத்துக்கொண்டிருந்ததுபோல ஆதிசேஷனும் தன்மேல் படுத்திருக்கும் எம்பெருமானைக காத்துக்கொண்டிருக்கிறான் என்பது 'நச்சரவு' என்பதின் கருத்து.

(2) தோழிகள் வார்த்தையைக் கேளாமல் மீறித் தாம் நடப்பவர் என்று காட்டுவதற்காக ஆழ்வார தமமை "எம்மை" என்கிற பன்மைச் சொல்லாலே சொல்லுகிறார். (4)

---

நன்னலத் தோழிமீர் காணல்ல வந்தணர் வேள்விப்புகை
மைந்நலங் கொண்டுயா விண்மறைக் குந்தண் டிருவல்லவாழ்
கன்னலங் கட்டிதன் னைக்கனி யையின் னமுதந்தன்னை
யென்னலங் கொள்சுட ரையென்று கொல்கண்கள் காண்பதுவே

(ப - ரை) நல் நலம் தோழிமீர்காள் - மிருந்த நல்ல ஸ்வபாவமுள்ள தோழிகளே! நல்ல அந்தணர - நல்லவர்களான (எம்பெருமானைத்தவிர வேறு பிரயோஜநத்தை வேண்டாத) பிராமணர்களுடைய, வேள்வி - யாகங்களிலே, மை நலம்கொண்டு - மையினுடைய நன்மையை (நல்ல நிறத்தை)க்கொண்டு, (கறுப்பாய்) உயர் - மேலே கிளம்புகிற, புகை-புகையானது, விண் மறைக்கும்-ஆகாசத்தை மறைக்கும், தண் - குளிர்ந்த, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே, கன்னல் அம் கட்டி தனனை - கருப்பஞ்சாற்றினுடைய அழகான கட்டியை, கனியை - (கண்டபோது சாப்பிடும்படி பழுத்திருக்கிற) பழத்தை, இன் அமுதம் தன்னை - இனியதான

அமிர்தத்தை, (இவைகள்போலினியவனுயிருக்கிறவனாய்), என் நலம் கொள் சுடரை - என்னுடைய ஸ்வரூபத்தை அபஹரிக்கும் காந்தியையுடையவனாயிருக்கிற எம்பெருமானை, கண்கள்-என்னுடைய கண்கள், காண்பது என்றுகொல் - பார்ப்பது எப்போதோ?

(கருத்து) தோழிகளே! நான் ஒன்றை ஆசைப்பட்டால் அதை முடித்துக்கொடுக்கும் ஸ்வபாவமுள்ளவர்களல்லவா? நீங்கள். எம்பெருமானைத்தவிர, வேறு பிரயோஜநத்தை அபேக்ஷியாமையாகிய நல்ல குணத்தையுடைய பிராம்மணர்கள் செய்யும் யாகங்களில் ஹோமங்களின் புகையானது கறுப்பாய் மேலே கிளம்பி, ஸ்வர்க்கத்தை ஆசைப்பட்டு யாகங்களைச்செய்து அங்கேபோய் அப்ஸரஸ்ஸுக்களுடன் விமானங்களில் போகிறவர்கள் ஒருவரையொருவர் பார்க்கமுடியாதபடி அவர்கள் முகங்களை மறைக்கும்படியான திருவல்லவாழில் கரும்பின் சாற்றின் அழகான கட்டியைப்போலவும், அப்போதே சாய்பிடும்படி பழுத்திருக்கிற பழத்தைப்போலவும், இனியதான அமிருதத்தைப் போலவும் இனியவனாய், தன் காந்தியினால் என் ஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு என்னை அடிமையாக்கிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற எம்பெருமானை என்னைக்காட்டிலும் அதிகம் விடாய்த்த என் கண்கள் பார்க்கும் காலம் எப்போதோ?

குறிப்பு.—(1) பாட்டில் "நன்னலம்" என்று ஒரே பொருளுள்ள இரண்டு சொற்களைச் சேர்த்துச் சொல்லியது அதின் மிகுதியைக் காட்டுவதற்காக.

(2) கருப்பஞ்சாறு கட்டியாகும்போது தித்திப்பு ஓர் இடத்தில் அதிகமாகவும் ஓர் இடத்தில் குறைந்துமிருப்பதில்லை, எம்பெருமானுடைய ஸ்வரூபமும் திருமேனியும் அப்படியேயிருக்கிறது என்பது 'அம் கட்டி' என்பதால் காட்டப்படுகிறது.

(3) எம்பெருமானுடைய இனிமையைப் பார்த்தால், அமிருதம் புளிக்கும் என்று சொல்லலாம். அப்படியிருப்பதை "இன்" என்கிற சொல் காட்டுகிறது.

(4) நான் பொறுத்திருப்பேன், என் கண்களுக்கு அப்படி இருக்கமுடியவில்லையே என்பது கருத்து.

(5) 'மனறக்கும்' என்பதனால், ஆணும் பெண்ணுமாக ஸஞ்சாரம் பண்ணுகிறவர்கள், ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்காதபடி அவர்கள் முகங்களை மறைப்பது அந்த ஊராருடைய ஸ்வபாவம் என்பது விளங்குகிறது.

(இ-ம்) நலம் என்கிற சொல்லுக்கு ஆநந்தமென்று பொருள். இஃது ஆகுபெயராய், இந்தக் குணத்தையுடைய ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. (5)

---

காண்பதெஞ் ஞான்றுகொ லோவினை யேன்கனி வாய்மடவீர்
பாண்குரல் வண்டி னொடுபசுந் தென்றலு மாகியெங்குஞ்
சேண்சினை யோங்கு மரச்செழுங் கானற் றிருவல்லவாழ்
மாண்குறட் கோலப் பிரான்மலர்த் தாமரைப் பாதங்களே. (௬)

(ப-ரை) கனிவாய் மடவீர் - கோவைப்பழம்போன்ற கிழுதட்டையுடைய தோழியான பெண்களே! பாண் குரல் - கானமாகிய குரலையுடைய, வண்டினொடு - வண்டுகளோடு, பசும் தென்றலும் - இளந் தென்றலும், எங்கும் ஆகி - எல்லாவிடங்களிலும் வீசும்படி, சேண் சினை - வெகுதூரம் போகிற கிளைகளையுடையவைகளாய், ஓங்கு - உயர்ந்து வளருகிற, மரம் செழுங் கானல் - மரங்களையுடைய அழகான தோட்டங்களையுடைய, திருவல்லவாழ் - திருவல்லவாழில், மாண் குறள் - வாமநப்பிரம்மசாரியான, கோலம் பிரான் - அழகையுடையவனான எம்பெருமானுடைய, மலர் தாமரை பாதங்கள் - மலர்ந்திருக்கிற தாமரைப்பூப் போலிருக்கிற திருவடிகளை, வினையேன் - அவனைப் பார்க்கமுடியாதபடி செய்கிற பாபத்தைப் பண்ணின நான், காண்பது - அநுபவிப்பது, எஞ்ஞான்றுகொலோ - எப்பொழுதோ?

(கருத்து) தோழிகளே! உங்கள் கிழுதடு கோவைப்பழம் போல் சிவந்திருக்கிறதே; நான் இப்படி வருத்தப்பட்டுக்கொண்டு இருக்கும்போது நீங்கள் ஸந்தோஷமாயிருப்பது தகுந்ததோ? என்னைப்போல் நீங்களும் வருத்தப்படவேண்டாமா? தேனைக் குடித்து களித்த வண்டுகள் கானத்துடன் பாடிக்கொண்டும் இளந் தென்றல் எங்கும் வீசிக்கொண்டுமிருக்கிற நீண்ட கிளைகளுள்ளவைகளாய் உயர்ந்து வளருகிற மரங்களுள்ள சோலைகளால் சூழப்

பட்ட திருவல்லவாழில், வாமநப் பிரம்மசாரியாய், அழகுடன் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய மலர்ந்த தாமரைப் பூப்போலிருக்கிற திருவடிகளை நான் கண்டு அநுபவிப்பது எப்போது?

குறிப்பு:—(1) ஆழ்வார் வருத்தப்படாமலிருப்பதற்காகத் தங்களுக்கு உண்மையில் வருத்தமிருந்தும் அதை வெளிக் காட்டாமல் ஸந்தோஷமுள்ளவர்கள்போல தங்களைக் காட்டிக்கொண்டிருப்பதை அவர் அறியாமல் 'கனிவாய் மடவீர்" என்று சொன்னபடி.

(2) பஞ்சத்தில் அகப்பட்டுக்கொண்டிருந்த தாய், தன் பிள்ளை எப்படிவேண்டுமானாலும் ஆகட்டும், எனக்கு எப்போது ஆஹாரம் கிடைக்கப்போகிறது என்று சொல்லுவதுபோல், ஆழ்வாரும் தன் கண்கள் வருந்தப்பட்டாலும் படட்டும். தான் எம்பெருமான் திருவடிகளைக்கொண்டு அநுபவிக்கும் காலம் எப்போதோ என்கிறார். (6)

---

பாதங்கண் மேலணி பூந்தொழக் கூடுங்கொல் பாவைநல்லீர்
ஓத நெடுந்தடத் துளுயர் தாமரை செங்கழுநீர்
மாதர்கள் வாண்முக முங்கண்ணு மேந்துந் திருவல்லவாழ்
நாதனிஞ் ஞால முண்டநம் பிரான்றன்னை நாடோறுமே. (எ)

(ப - ரை) பாவை - பொம்மைகள்போன்றவர்களும், நல்லீர் - நல்ல குணங்களையுடையவர்களுமான பெண்களே! ஓதம் நெடும் தடத்துள் - ஸமுத்திரம்போல விசாலமான தடாகங்களிலே, உயர் தாமரை - உயர்ந்து வளருகிற தாமரைப்பூவும், செங்கழுநீர் - செங்கழுநீர்ப்பூவும், மாதர்கள் - அந்த ஊரிலிருக்கும் ஸ்திரீகளுடைய, வாள்முகமும் - காந்தியுள்ள முகங்களையும், (முகங்களின் அழகையும்) கண்ணும் - கண்களையும், (அவைகளின் அழகையும்) ஏந்தும், திருவல்லவாழ் நாதன் - திருவல்லவாழின தலைவனை, இ ஞாலம் உண்ட - இந்த உலகத்தை உண்ட, நம பிரான் தன்னை - என் ஸ்வாமியை, நாள்தோறும் - ஒவ்வொரு நாளும், பாதங்கள் மேல் - அவனுடைய திருவடிகளின் மேலே, பூ - பூக்களை, அணி - ஸமர்ப்பித்து, தொழ கூடும் கொல் — ஸேவிக்கக் கூடுமோ?

(கருத்து) படத்தில் எழுதியிருக்கிற பதுமைபோல் அழகாயும், முன்போல என்னைத் தடுக்காமல் அசைவில்லாமலும் இருக்கிற என் தோழிகளாகிய பெண்களே! ஸமுத்திரம் போல விசாலமான தடாகங்களில் ஓங்கி வளருகிற தாமரைப் பூவும், செங்கழுநீர்ப்பூவும் அந்த ஊர் ஸ்திரீகளுடைய முகங்களின் அழகையும், கண்களின் அழகையும் வைத்துக்கொண்டு விளங்குகிற திருவல்லவாழுக்குத் தலைவனும், பிரளயகாலத்தில் இந்த உலகங்களைத் தன் வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷித்தவனும் நமக்கு உபகாரகனுமான எம்பெருமானுடைய திருவடிகளின்மேலே பூக்களை ஸமர்ப்பித்து அவனை நான் ஸேவிக்கக் கூடுமோ?

குறிப்பு:—(1) தோழிகள் இவளை இனிமேல் திருப்பமுடியாதென்று நினைத்து ஒன்றும் செய்யாமலிருக்க, அவர்களைப் பார்த்து ஆழ்வார் ஸந்தோஷப்பட்டு "பாவை நல்லீர்" என்று சொல்லுகிறார்.

(2) தாமரைப்பூ ஸ்திரீகள் முகம்போலவும், வயலில் நடுவில் தோன்றும் செங்கழுநீர்ப்பூக்கள் கண்கள்போலவுமிருக்கின்றன என்பது கருத்து.

(இ - ம்) அணி - ஈறுகெட்ட பிறவினை வினையெச்சம், அணிவித்து என்பது பொருள். (7)

---

நாடோறும் வீடின்றி யேதொழக் கூடுங்கொ லென்னுதலீர்
ஆடுறு தீங்கரும் பும்விளை செந்நெலு மாகியெங்கும்
மாடுறு பூந்தடஞ் சேர்வயல் சூழ்தண் டிருவல்லவாழ்
நீடுறை கின்ற பிரானிலங் காவிய நீள்கழலே. (8)

(ப - ரை) நல் நுதலீர் - நல்ல (அழகான) நெற்றியையுடைய பெண்களே! எங்கும் - எல்லாவிடங்களிலும், ஆடு உறும் - ஆடுதலையுடையும், (ஆலையில் போட்டு ஆடப்படும்) தீம் கரும்பும் - தித்திப்புள்ள கரும்பும், விளை செந்நெலும் - விளைந்த (பழுத்துக் கிடக்கிற) செந்நெலும், ஆகி - நிறைந்து, மாடு உறு - பக்கங்களை அடைந்திருக்கிற, பூ தடம் - புஷ்பங்களையுடைய தடாகங்கள்,

சேர் - சேர்ந்திருக்கிற, வயல் சூழ் - வயல்களாலே சூழப்பட்ட, திருவல்லவாழ் - திருவல்லவாழில், நின்ற உறைகின்ற பிரான - இடைவிடாமல் வஸிக்கிற ஸ்வாமியினுடைய, நிலம் தாவிய-உலகங்களை அளந்த, கழல் - திருவடிகளை, நாள்தோறும - ஒவ்வொருநாளும், வீடு இன்றியே - (நடுவில) விடுகையில்லாமல், தொழக்கூடுங்கொல்-ஸேவித்துக்கொண்டிருக்கக்கூடுமோ ?

(கருத்து) எம்பெருமானை ஸேவிக்கும்போது பட்ட தூளிகளாலே பெருமைவாய்ந்து அழகாயிருக்கும் நெற்றியையுடைய தோழிகளே ! திருவல்லவாழைச் சுற்றி தாமரைக்குளங்களும் அவைகளைச் சூழ்ந்து வயல்களும அவைகளின பக்கங்களின் ஆலையில் போட்டு ஆடும்படி பழுத்திருக்கிற கரும்பும, விளைந்து கிடக்கிற செந்நெலும் விளங்குகிற திருவல்லவாழில் அநுக்கிரஹம் செய்வதையே ஸ்வபாவமாகக்கொண்டு இடைவிடாது வஸிக்கிறதும் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று பாராமல எல்லாரையும அங்கீகரிப்பதற்காகப் பூமியை அளந்ததும் ஆச்ரிதர்களிருக்குமிடத்தைத் தேடிக்கொண்டு போகிறதுமான எம்பெருமானுடைய திருவடிகளை நான நாள்தோறும் க்ஷணப்பொழுதுகூட தவறாமல் ஸேவித்துக்கொண்டிருக்கக் கிடைக்குமோ ?

குறிப்பு :—“நாளதோறும் வீடின்றியே” என்பதற்கு ஒவ்வொரு பிரதமையில் செய்யப்படுகிற தர்சத்தையும் பூர்ண மாசத்தையும, ஒவ்வொருநாளும் காலைவேளையிலும் ஸாயங்காலத்திலும் செய்யப்படுகிற அக்கினிஹோத்திரத்தையும்போல இல்லாமல் எப்போதும கைங்கர்யத்தைச் செய்யவேண்டுமென்றும், அவைகளைப்போல் ஒரு பிரயோஜநத்துக்காக இல்லாமல், அதையே பிரயோஜநமாக எண்ணி அதைச் செய்யவேண்டும என்றும் ஆழ்வார் ஆசைப்படுகிறார் என்பது கருத்து. (8)

---

கழல்வளை பூரிப்ப யாங்கண்டு கைதொழக் கூடுங்கொலோ
குழலென்ன யாழு மென்னக்குளிர் சோலையுட் டேனருந்தி
மழலை வரிவண்டுகளிசை பாடுந் திருவல்லவாழ்
சுழலின் மலிசக் கரப்பெரு மானது தொல்லருளே. (கூ)

(ப - ரை) குளிர் சோலையுள் - குளிர்ந்த சோலைகளில், தேன் அருந்தி - தேனைக் குடித்து, குழல் என்ன - வேணுகானமோ என்று சொல்லும்படியாகவும், யாழின் என்ன - வீணையின் கானமோ என்று சொல்லும்படியாகவும், மழலை - இளமையான, வரி வண்டுகள் - கோடுகளை உடம்பில் உள்ள வண்டுகள், இசை பாடும் - காநம் பண்ணும், திருவல்லவாழ் - திருவல்லவாழியிலே, கழலின் மலி - கழல்வதில் அதிகமாயிருக்கிற, சக்கரப்பெருமானது - சக்கரத்தையுடைய ஸ்வாமியினுடைய, தொல் - பழமையான, (ஸ்வபாவமாயிருக்கிற), அருள் - கிருபையானது, கழல் வளை - (கைகளை விட்டு) கழலுகிற வளைகள், பூரிப்ப - பூரிக்கும்படி, (அவனைக் கண்ட ஸந்தோஷத்தினால் உடம்பு பருத்து, கையைப் பிடித்துக்கொண்டிருக்கும்படி) யாம் கண்டு, கை தொழ - கைகளாலே ஸேவிக்கும்படி, கூடுங்கொலோ - கூடுமோ? (என்னிடம் வந்து சேருமோ?)

(கருத்து) குளிர்ந்த சோலைகளில் தேனைக் குடித்து வீணையையும் வேணுவையும்போல் இனிமையாய் வண்டுகள் பாடிக் கொண்டிருக்கும் திருவல்லவாழியிலே எழுந்தருளியிருக்கிற, விரோதிகளை நாசம்பண்ணுவதில் பரபரப்பாலே தானாகவே சுழன்று கொண்டிருக்கிற சக்கரத்தையுடைய எம்பெருமானுடைய ஸ்வபாவமாயுள்ள கிருபை நம்மிடம் வந்துசேர்ந்து, அவனை நாம் கண்டு ஸந்தோஷத்தினால் உடம்பு பூரித்து, இப்போது கையை விட்டு கழன்றுகொண்டிருக்கிற வளைகள் கைகளை நெருக்கிப் பிடித்திருக்கும்படியாகி, அவனை நாம் கைகளாலே ஸேவிக்கும்படியாகக் கிடைக்குமோ?

குறிப்பு:—எம்பெருமானுடைய கிருபையில்லாமல் ஒன்றும் முடியாமையால் அவனை நாம் ஸேவிக்கும்படி அவன் கிருபை நம்மிடம் வருமோ என்பது கருத்து. (9)

---

தொல்லரு ணல்வினை யாற்சொலக் கூடுங்கொல் தோழிமீர்காள்
தொல்லருண் மண்ணும்விண் ணுந்தொழ நின்ற திருநகரம்
நல்லரு ளாயிர வர்நல னேந்துந் திருவல்லவாழ்
நல்லரு ணம்பெரு மானா ராயண னாமங்களே. (௧0)

(ப - ரை) தோழியீர்காள் - தோழிகளே! தொல் - ஸ்வபாவமாயுள்ள, (பூர்ணமாயுள்ள), அருள் - கிருபையை, மண்ணும்- பூமியிலிருக்கிறவர்களும், விண்ணும் - பரமபதத்திலிருக்கிறவர்களும், தொழ - ஸேவிக்கும்படி, நின்ற - அவன் வந்து நிலையாய் இருக்கிற, திருநகரம் - செல்வமுள்ள பட்டணமாயும், நல் அருள்- நல்ல கிருபையை உடையவர்களான, ஆயிரவர்கள்- அநேகமாயிரம் பேர்கள் (பக்தர்கள்), நலன் - அவனுடைய நல்ல குணங்களை, ஏந்தும் - உயரவெடுக்கும்படியாயும் (கொண்டாடிக்கொண்டிருக்கும் படியாயுமான), திருவல்லவாழ் - திருவல்லவாழிலிருக்கிறவனும், நல அருள் - நல்ல அருளை (வாத்ஸல்யத்தை) உடையவனும், நம் பெருமான - நமக்கு ஸ்வாமியுமான, நாராயணன் - நாராயணனுடைய, நாமங்களே - திருநாமங்களை, தொல் அருளால் - அவனுடைய நல்ல கிருபையால், (உண்டாகும்) நலவினையால் - நல்ல கர்மத்தாலே, (மனதிலுண்டாகும் பிரீதியோடு), சொல கூடுங்கொலோ - சொல்லும்படி நேரிடுமோ?

(கருத்து) தோழிகளே! தன்னுடைய பூர்ணமான கிருபையினாலே பூமியிலுள்ளவர்களும், வைகுந்தத்திலுள்ளவர்களும் ஸேவிக்கும்படி எம்பெருமான் வந்து நிலையாயிருக்கும்படியான செல்வத்தையுடையது திருவல்லவாழ் என்கிற நகரம். அதில் நல்ல கிருபையையுடைய அநேகமாயிரம் பக்தர்கள் அவனுடைய நல்ல குணங்களைக் கொண்டாடிக்கொண்டிருக்கிறார்கள். இப்படிப்பட்ட நகரத்தில் எழுந்தருளியிருக்கிற, வாத்ஸல்யத்தையுடைய நம்முடைய ஸ்வாமியான நாராயணனுடைய திருநாமங்களை அவனுடைய கிருபையினாலே மனதில் பிரீதியோடு நாம் சொல்லும்படி நேரிடுமோ?

குறிப்பு:—(1) 'நல்லருளாயிரவர்' என்கிற இடத்தில், அருளின் நன்மையாவது—நிக்கிரஹம் செய்யவேண்டுமென்கிற எண்ணமில்லாமலிருப்பது. எம்பெருமானுடைய கிருபை அப்படியன்று; அவன் அநுக்கிரஹத்தையும் செய்கிறான், நிக்ரஹத்தையும் செய்கிறான். இவர்கள் அநுக்கிரஹத்தையே செய்கிறார்கள் என்பது. (10)

நாமங்க ளாயி ரமுடைய நம்பெரு மானடிமேற்
சேமங்கோ டென்குரு கூர்ச்சட கோபன் தெரிந் துரைத்த
நாமங்க ளாயிரத் துள்ளிவை பத்துந் திருவல்லவாழ்ச்
சேமங்கோ டென்னகா மேற்செப்பு வார்சிறந் தார்பிறந்தே. (௧௧)

(பதவுரை) ஆயிரம் நாமங்களுடைய - (குணங்களையும் செயல்களையும்) காட்டுகிற ஆயிரம் திருநாமங்களையுடைய, பெருமான - நம்முடைய ஸ்வாமியினுடைய, அடிமேல் - திருவடிகளில், சேமம் கொள் - க்ஷேமத்தைக்கொண்ட, (காக்கும் இடமானதையடைவதற்கு திருவடிகளை உபாயமென்று நிர்ணயம் செய்த) தென்குருகூர்ச் சடகோபன், தெரிந்து உரைத்த - (அவனுடைய குணங்களை) நன்றாக நிருபணம் செய்து சொன்ன, நாமங்கள் ஆயிரத்துள் - திருநாமங்களைப்போல அவனுடைய குணங்களைக் காட்டுகிற ஆயிரம் பாட்டுக்களில், இவை பத்தும் - இந்தப்பத்துப் பாட்டுக்களையும், திருவல்லவாழ் - திருவல்லவாழ் என்கிற, தென் நகர் மேல் - அழகான நகர விஷயமாக, செப்புவார் - படிக்கிறவர்கள், பிறந்தே - ஸம்ஸாரத்திலிருக்கும்போதே, சிறந்தார் - எல்லாரைக்காட்டிலும் மேற்பட்டவர்கள்.

(கருத்து) குணங்களையும் செய்கைகளையும் காட்டுகிற ஆயிரம் திருநாமங்களையுடையவனாய் ஸர்வேச்வரன் என்று பிரஸித்தியுடைய எம்பெருமான் திருவடிகளை அவனை அடைவதற்கு உபாயமென்று நிர்ணயம் செய்த ஆழ்வார், அவனுடைய குணங்களை நன்றாக நிருபணம் செய்து சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களையும் திருவல்லவாழ் விஷயமாகப் படிக்கிறவர்கள், ஸம்ஸாரத்திலிருக்கும்போதே எல்லாரைக்காட்டிலும் மேற்பட்டவர்கள். (11)

---

ஸ்வாஸ்திக்யாத் ஸம்ருத்தி [illegible] ஸ்ரேஷ்டகத்வாத் ஸ்வஸ்ருஷ்டஸ்வ [illegible] ணாவஸ்த்வகத்வாத் | திவ்யஸ்தானாவஸ்த்யா [illegible] வி நாராயணத்வாத் க்ருபாவசஶ் ஸ்ரீதாம் ஸமஶீ ஸுபிபிசி பூர்ண காமேஷுரிஜ: ॥ ॥௧௭॥

இந்தத் திருவாய்மொழியில எம்பெருமான் தன்னை ஆச்ர யித்தவர்களுக்கு மிகவும் கிட்ட இருக்கிறான என்று பத்துக் கார ணங்களால் அருளிச்செய்கிறார். அவைகளாவன :—(1) எல்லா ருக்கும் ஸ்வாமியாயிருப்பது ; (2, 3) தன்னை அடைந்தவர்களு க்குப் பலவிதமான உபகாரங்களைச் செய்வதில் ஆசையுள்ளவனா யிருப்பது ; (4) தனக்கு இஷ்டமான ஆதிசேஷனோடு சேர்ந் திருப்பது : (5) எல்லாவித இனிய வஸ்துக்கள் சேர்ந்து இருப் பதுபோலினியவனாயிருப்பது ; (6) மஹாபலியை மோசம் பண் ணுவதற்காகப் பிரம்மசாரி வேஷத்தை எடுத்துக்கொண்டது ; (7) கொடுமையான ஆபத்தில் கூட இருந்து இரக்ஷிப்பது ; (8) சிலாக்கியமான இடமாகிய திருவல்லவாழிலே வந்திருப்பது ; (9) திருக்கையில் சுழன்று கொண்டிருக்கிற திருவாழியை ஏந் திகொண்டிருப்பது ; (10) நாராயணனாயிருப்பது. (எல்லாருக் கும் அடையவேணடியவனாகவும், அதற்கு உபாயமாயுமிருப் பது.) (67)

# பத்தாம் திருவாய்மொழி.

அவ—ஸ்ரீவைகுண்டநாதனை, திருக்குருகையில் நம்மாழ்வார் ஆசைப்பட்டபடி பார்க்க பரமபதத்தை அடையவில்லை. அந்தவிடங்களில் எம்பெருமான் அர்ச்சையாக எழுந்தருளியிருப்பதாலே அது கிடைக்கவில்லையென்றும், திருவவதாரமும் அப்படியே இருப்பதால் அங்கேயும் அது கிடைக்கமுடியாதென்றும் அவர் அர்ச்சாவதாரத்தில் கிடைக்காததை விபவாவதாரத்தில் அடையலாம் என்று நினைத்து ஸம்பத்தில் அவதாரத்தைச் செய்த ஸ்ரீக்ருஷ்ணனிடம் போகவேண்டுமென்று ஆரம்பித்தார். அந்த அவதாரத்தின் லீலைகள் புகுந்து அவன் திருநாட்டிற்கு எழுந்தருளிவிட்டான் என்று கேட்டு, கீழே விழுந்து புரண்டு அழுதார். அப்போது அவனுடைய குணங்களும் அவன் செய்த லீலைகளும் நினைவுக்கு வந்தன. அதனாலே, மனதுக்கும் தளர்ச்சி உண்டாயிற்று. அதிலில்லாமல் அவைகளை நினைக்கும்படி தமக்குச் சக்தியைக் கொடுக்கவேண்டுமென்று இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானைப் பிரார்த்திக்கிறார்:—

(ஆசிரியத்துறை.)

பிறந்த வாறும் வளர்ந்த வாறும் பெரிய பாரதங் கைசெய்தை
திறங்கள் காட்டியிட்டுச் செய்து போனமாயங்களும் [வர்க்குத்
நிறந்த னூடு புக்கென தாவியை நின்று நின்று ருக்கியுண் கின்றவிச்
சிறந்த வான்சுடரே யுன்னை யென்றுகொல் சேர்வதுவே. (௧)

(பரை) பிறந்தவாறும் - மதுரையில் பிறந்தவிதமும், வளர்ந்தவாறும் - திருவாய்ப்பாடியிற்போய் வளர்ந்த விதமும், ஐவர்க்கு - ஐந்து பாண்டவர்களுக்காக, பெரிய, பாரதம்-பாரதச் சண்டையைச் செய்யவந்த சேனையிலே, கை செய்து - தானே வியாபரித்து, திறங்கள் - (ஆச்ரிதர்களிடத்தில் தான் இருந்த) பிரகாரங்களை, காட்டியிட்டு, செய்து, போனமாயங்களும்-போன ஆச்சரியமான லீலைகளும், நிறம் தன் - மர்மமான (மார்பினுடைய), ஊடு புக்கு-நடுவிலே புகுந்து, நின்று நின்று-என்னுடைய நினைவில் நிலையாயிருந்து, என் ஆவியை - என் ஆத்மாவை, உருக்கி - உருகும்படி செய்து, உண்கின்ற - சாப்பிடுகிற, இ

சிறந்த வான் சுடரே - இந்த மேன்மையான பெரிய (அளக்கமுடியாத), காந்தியையுடையவனே! உன்னை சேர்வது - உன்னை நான் வந்து சேருவது, என்றுகொல் - எப்போதோ?

(கருத்து) எம்பெருமானே! உனக்குக் கர்மத்தினால் பிறப்பில்லாவிட்டாலும், ஆச்ரிதர்களுடன் சேருவதற்காகவே உனக்கேயுள்ள அப்பிராகிருதமான திருமேனியுடன் பிறந்தாய். திருவாய்ப்பாடிக்குப் போய், பூதனை முதலான விரோதிகளை நாசம் செய்து, வெண்ணெய் திருடினது முதலான வேலைகளாலே ஆச்ரிதர்களுக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணிக்கொண்டு வளர்ந்தாய். பிறகு, ஐந்து பாண்டவர்களுக்கு ஸஹாயமாயிருந்து பெரிய பாரதச்சண்டையில் நீயே வியாபரித்தாய். நீ ஆச்ரிதரிடமிருக்கும் விசேஷ அபிமானத்தை, அவர்களுக்காகத் தூதுபோயும், அர்ஜுனனுக்குத் தேரை ஓட்டியும், ஆயுதம் எடுக்கமாட்டேன் என்று பிரதிக்ஞை பண்ணி பிறகு சக்ரத்தை எடுத்ததும், சக்ரத்தாலே ஸூர்யனை மறைத்துப் பகலை இராத்திரியாக ஆக்கியும் காட்டினாய். கடைசியில் உன் பெருமையை அறியமுடியாத இந்தக் கெட்ட தேசத்தில் இராமல் உன்னுடைய திருநாட்டுக்கு எழுந்தருளினாய். இவைகளெல்லாம் என் ஹ்ருதயத்தின் நடுவே புகுந்து, என் நினைவில் நிலையாயிருந்து, என்னை உருகும்படி செய்து என்னை விழுங்குகின்றன. இப்படியிருந்த சிலாக்கியமான அளவில்லாத காந்தியை உடையவனே! நான் உன்னைச் சேருவது எப்போதோ?

குறிப்பு :—(1) எம்பெருமான் தானாகவே தோன்றுகிற்க அவனைப் பிறந்ததாகச் சொல்லுவதற்குக் காரணம்—தாய்மார்களின் கர்ப்பத்தில் இருந்ததும், அவர்களின் ஸ்தனங்களில் பால் பருகினதும், அதைத் தான் சாப்பிடாவிட்டால் தான் நோவுபட்டதும், தன்னைப் பிடிக்கும்படியாகவும் கட்டும்படியாகவும் அவர்களுக்கு ஸுலபனாயிருந்ததும், அவர்களுக்குப் புத்திரனுடைய அநுபவம் குறைவில்லாமல் இருந்ததும்.

(2) 'பிறந்தவாறும்' என்பதை நினைக்கும்போது ஆழ்வார் ஆறு மாதம் மோஹத்தையடைந்திருந்தார் என்று பிரஸித்தி. இப்படியே பூதற்பத்து மூன்றும் திருவாய்மொழியின் ஆதியிலும் மோஹத்தை அடைந்திருந்தார்.

(கருத்து) நப்பின்னைப் பிராட்டியைக் கல்யாணம் செய்து கொள்ளுகிறது என்கிற பேச்சு உண்டானபோது, ஏழு காளை மாடுகளின்மேல் விழுந்து, அவைகளைக் கொன்றாய். குதிரை ரூபத்தை எடுத்துக்கொண்டு வந்த கேசி என்கிற அஸுரனுடைய வாயைப் பிளந்தாய். தேனைப் பெருக்குகிற பூக்களைத் தலைமயிர்களில் சூட்டிக்கொண்டிருந்த கோபிகைகளுடன் ராஸக்கிரீடையைச் செய்தாய். இப்படி விரோதிகளை நாசம் செய்ததாகிய அந்த வேலைகளும், ஆச்ரிதர்களை ஸந்தோஷப்படுத்தினதாகிய இந்த வேலைகளும், இரண்டுமில்லாத நடுத்தரமான வேலைகளும் ஆகிய உன் செய்கைகள் ஒரேவிதமாய், உன் குணங்கள் நினைவுக்கு வரும்போது தளரும் ஸ்வபாவமுள்ள என்னைத் தளரும்படி செய்கின்றன. பிரளய ஜலத்தில் அழுந்திக் கிடந்த பூமியை மேலே கொண்டுவந்து இந்த உலகமாக நீ பண்ணினதுபோல், என்னுடைய தளர்ச்சியைப் போக்கி, மிகவுமினியனான உன்னை நான் அநுபவிக்கும்படி செய்யவேண்டும். இது எப்போது நேரிடுமோ ?

குறிப்பு :—(1) 'அது' என்பதற்கு தூர இருக்கிற வேலைகள் என்பது பொருள். இதனால் பாட்டின் முதலடியில் சொன்ன விரோதிகளின் நாசம் சொல்லப்படுகிறது. 'இது' என்பதற்கு கிட்ட இருப்பதெனபது பொருள். அதனால் இரண்டாம் அடியில் சொன்ன ஆச்ரிதரை ஸந்தோஷப்படுத்தினது சொல்லப்படுகிறது. 'உது' என்பதற்கு, இரண்டுக்கும் நடுவிலிருப்பது என்பது பொருள். அதனால் விரோதிகளுக்கும் ஆச்ரிதர்களுக்கும் அவர்களைக்காட்டிலும் வேறான நடுத்தர ஜநங்களுக்கும் பொதுவாய் இருப்பிடமான இந்த உலகத்தைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தது சொல்லப்படுகிறது.

(2) ராஸக்ரீடை என்பது—கண்ணன் இரண்டு இரண்டு கோபிகைகளுக்கு நடுவிலிருந்து அவர்களுடன் பெண்கள் கோலாட்டம் போடுவதுபோல் கூத்தாடினது. எத்தனை கோபிகைகள் இருந்தார்களோ அத்தனை ரூபங்களை எடுத்துக்கொண்டு அவன் இந்த லீலையைச் செய்தான். ஒவ்வொரு கோபிகையும் தன் பக்கத்திலிருந்த அவனுடைய ரூபத்தையே பார்த்தார்கள். வேறு ரூபத்தைப் பார்க்கவில்லை. (2)

அதைக்கண்டு உன் தாமரைக்கண்களிலிருந்து கண்ணீர் பெருகப் பயந்து ஒடுங்கினபடியே இருந்ததுவும் ஆகிய இவைகள் வெகு நாளைக்கு முன்னே நடந்தவைகளாயிருந்தாலும் இப்போது என் மனதில் வந்து அதை உருக்குகின்றன.

குறிப்பு:—(1) இந்தப் பாட்டில், இரண்டு அடிகளால் முன் பாட்டில் 'அது' என்று சொல்லப்பட்ட விரோதிகளின நாசமும், மூன்றாவது அடியில 'இது' என்று சொல்லப்பட்ட ஆசிரிதர்களை ஸந்தோஷப்படுத்தின லீலைகளும் சொல்லப் பட்டன.

(2) கண்ணனை அடிக்க வந்தவள் தன்னிடத்தில் ஆசையுள்ள தாயார்; எடுத்துக்கொண்டதோ ஒரு சின்ன கோல்; அவனோ எல்லாரும் நடுங்கி வேலைசெய்யும்படி ஆக்ஞைசெய்கிறவன். இப்படி இருந்தும அவன் இப்படி நடுங்கியிருக்கவேண்டுமோ? என்று நினைத்துக் கண்ணனுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தை நினைத்து ஆழ்வார் வருத்தப்படுகிறார்

(இ - ம்) சாடு - சகடு என்பதன் திரிபு. (3)

---

கள்ள வேடத்தைக் கொண்டு போய்ப்புறம் புக்க வாறுங் கலந்த
யுள்ளம் பேதஞ்செய் திட்டுயி ருண்ட வுபாயங்களும் [சுரரை
வெள்ள நீர்ச்சடை யானும் நின்னிடை வேற லாமை விளங்க
நின்றது
முள்ள முட்குடைந்தென் னுயிரை யுருக்கி யுண்ணுமே. (௪)

(ப - ரை) கள்ளம் வேடத்தை - (எல்லாருடைய மனதை) அபஹரிக்கும்படியான வேஷத்தை, கொண்டு - எடுத்துக்கொண்டு, போய், புறம் புக்கவாறும் - (அஸுரர்களுடைய மூன்று) பட்டணங்களுக்குள்ளே புகுந்த விதமும், அசுரரை உள்ளம் கலந்து - அஸுரர்களுடைய மனதில் புகுந்து, பேதம் செய்திட்டு - அவர்களுக்கு புத்தி பேதத்தை உண்டுபண்ணி, உயிர் உண்ட - அவர்களை நாசம் செய்த, உபாயங்களும், வெள்ளம் நீர் சடையானும் - மிகப் பெருகுகிற ஜலத்தை (கங்கையை)ச் சடையில் வைத்துக் கொண்டிருக்கிற ருத்திரனையும், நின்னிடை - உன்னிடத்தில்

வைத்துக்கொண்டு, வேறு அல்லாமை - அவன் வேறு நீ வேறு என்று சொல்லக்கூடாதபடி, விளங்க - அவனை விளங்க, நினைந்தும், உள்ளம் - என் மனத்தை, உள் குடைந்து - உள்ளே குடைந்து, (நினைக்கும்போதெல்லாமிருந்து), என் உயிரை - என் ஸ்வரூபத்தை, உருக்கி, உண்ணும் - விழுங்குகின்றன.

(கருத்து) எல்லாருடைய மனத்தையும் அபஹரிக்கும்படியான வேஷத்தை எடுத்துக்கொண்டு வேகமாய்ப் போனால், காலடியில் இருக்கும் ஜந்துக்களுக்கு நாசமுண்டாகும் என்று மெல்ல மெல்ல நடந்துபோய், அஸுரர்களுடைய மூன்று பட்டணங்களுக்குள்ளே புகுந்த விதமும், அஸுரர்களின் மனத்தில் புகுந்து வேதத்தில் சொல்லப்பட்ட யாகங்களில் பிராணிகளுக்கு நாசம் உண்டாகிறது, ஆகையால் அவைகளைச் செய்யக்கூடாது என்று சொல்லி வைதிக கர்மங்களில் சிரத்தையைப் போக்கிக் கெட்ட மதத்தை உபதேசித்து அவர்கள் மனத்தைக் கலக்கி இந்த வியாஜத்தைக்கொண்டு அவர்களை நாசம் செய்த விதமும், உன் திருவடியிலிருந்து பெருகின கங்கையைத் தன்னுடைய ஜடையில் வைத்துக்கொண்டிருக்கிற ருத்திரனை உன்னிடத்தில் வைத்துக்கொண்டு நீ வேறு அவன் வேறு என்று தோன்றாதபடி உனக்கு உட்பட்டவனாக அவன் விளங்கும்படி நிற்பதுவும், நான் நினைக்கும்போதெல்லாம் என் மனதுக்குள் வந்து என் ஸ்வரூபத்தை உருக்கி விழுங்குகின்றன.

குறிப்பு :—(1) ஒரு பிராணியையும் கொல்லக்கூடாது என்று வேதம் சொல்லுவது அஸுரர்கள் நெஞ்சில் நன்றாய்ப் படும்படி காலடியிலிருக்கும் ஜந்துக்கள் நாசமாகாதபடி மெல்ல நடந்துபோய் எம்பெருமான் அவர்களுடைய புத்தியை மாற்றினான். இஃது அவன் புத்தனாய் அவதாரம்பண்ணிச் செய்தவேலை.

(2) இதனால் கிருஷ்ணனாய் அவதாரம் பண்ணிச் செய்த வேலைகளைமாத்திரம் அன்று, வேறு அவதாரங்களில் செய்த வேலைகளையும் ஆழ்வார் இந்தத் திருவாய்மொழியில் நினைக்கிறார் என்பது விளங்குகிறது. (4)

உண்ண வானவர் கோனுக் காய ரோருப்ப டுத்த வடிசி லுண்டதும்
வண்ண மால்வ ரையை யெடுத்து மழைகாத்ததும்
மண்ணை முன்படைத் துண்டு மிழ்ந்து கடந்தி டந்து மணந்த
மாயங்க
ளெண்ணுந் தோறுமென்னெஞ் செரிவாய்மெழு கொக்கும் நின்றே.

(ப - ரை) வானவர் கோனுக்கு-தேவேந்திரனுக்கு, உண்ண-சாப்பிட, ஆயர் - கோபாலர்கள், ஒருப்படுத்த - சேர்த்துவைத்த, அடிசில் - அன்னத்தை, உண்டதும்-(நீ கோவர்த்தனரூபமாயிருந்து) சாப்பிட்டதும், வண்ணம - (தாதுக்களாலே) பல வர்ணமுள்ள, மால் வரை - (கோவர்த்தனமென்கிற) பெரிய மலையை, எடுத்து, மழை - (இந்திரனால் பெய்யப்பட்ட) மழையிலிருந்து, காத்ததும் - ரக்ஷித்ததும், மண்ணை - பூமியை, படைத்து - உண்டுபண்ணி, உண்டு, உமிழ்ந்து, கடந்து - அளந்து, இடந்து - அதைப பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்து, மணந்த - அவளோடே சேர்ந்த, மாயங்கள் - ஆச்சரியமான வேலைகளும், எண்ணும் தோறும் - நான் நினைக்கும்போதெல்லாம், என் நெஞ்சு - என் மனதானது, நின்று - நிலையாயிருந்து, எரிவாய் மெழுகு-நெருப்பில் வைக்கப்பட்ட மெழுகை, ஒக்கும் - ஒத்திருக்கிறது.

(கருத்து) தேவர்களும் அவர்களின் தலைவனான இந்திரனும் சாப்பிடும்படி கோபர்கள் சேர்த்துவைத்த அன்னத்தை ஒரு பெரிய உருவத்தை எடுத்துக்கொண்டு கோவர்த்தநம் என்கிற மலையின் உச்சியிலிருந்து சாப்பிட்டதும், இதைக்கண்டு கோபம் அடைந்த இந்திரனால் பெய்யப்பட்ட மழையிலிருந்து, ஒரு கோபாலன்மேலும் ஒரு மாட்டின்மேலும் ஒரு மழைத்துளியும் விழாதபடி அந்த மலையை எடுத்துப் பிடித்து அவர்களை ரக்ஷித்ததும், பூமியை உண்டுபண்ணி பிரளயகாலம் வந்தபோது அதை வயிற்றில்வைத்து ரக்ஷித்து, ஸிருஷ்டி காலம் வந்தபோது அதை வெளிப்படுத்தி, திரிவிக்கிரமனாய் அவதாரம்செய்து அதைத் திருவடியால் அளந்து, மஹாபலியிடமிருந்து அதை எடுத்துக்கொண்டு, வராஹமாக அவதாரம்செய்து பிரளய ஜலத்தில் அழுந்திக் கிடந்த அதை மேலே எடுத்து, அதற்கு அபிமானியான பூமிப் பிராட்டியோடு சேர்ந்து இப்படி நீ செய்த ஆச்சரியமான வேலைகளும், அவைகளை நினைக்கும்போதெல்லாம் நெருப்பில் போட்ட

டதுபோல் படுத்துக்கொண்டிருந்ததும், அவைகளை நினைப்பதால் தளர்ச்சியை அடைகிற என மனதாலே நினைக்கமுடியாதவைகளாயும் பலவிதங்களாயும் ஸூக்ஷ்மங்களாயும் இருக்கிற மற்ற உன்னுடைய ஆச்சரியமான வேலைகளும் ஆகிய இவைகளை என் சக்திக் குறைவாலே மெல்ல மெல்ல நினைக்கிறேன் மிகவும் இனியவைகளான வேலைகளைச்செய்த உன்னை எப்படி நான் நினைப்பதற்குச் சக்தியுடையவன்? பிரளயகாலத்தில் உலகத்துக்குவந்த ஆபத்தை நீக்கி ஸந்தோஷப்பட்டுக் காந்தியோடுவிளங்குகின்ற உன்னை, உன்னுடைய குணங்களை நினைக்கும்போது தளரும்படி செய்கிற பாபத்தைப்பண்ணின நான், அத்தளர்ச்சி நீங்கி நினைத்துக்கொண்டிருப்பதற்கு வேண்டிய உபாயத்தை நீ சொல்லியருளவேண்டும்.

குறிப்பு:—(1) திருவவதாரத்தைச் சொல்லும்போது அவன் குருந்தமரமாய்த் தோட்டத்திலிருக்கும்போது அதைப் பிடித்துக்கொண்டு நின்றதும், பிறகு அதைவிட்டு அதில் உட்கார்ந்ததும், அதில் படுத்துக்கொண்டிருந்ததும் சொல்லப்படுகின்றன. இதை வேறுவிதமாயும் திருவரங்கப்பெருமாள் அரையர்—கோவர்த்தனத்தைப் பிடித்துக்கொண்டு நின்றதும், ராஸக்ரீடைக்கு முன்னாலே கோபிகைகளின் நடுவில் யமுனையின் மணல் குன்றின் மேல் நிலாவில் உட்கார்ந்திருந்ததும், ராஸக்ரீடை முடிந்தபோது களைப்படைந்து ஒரு கோபிகையின் மடியில் தலையை வைத்துக்கொண்டு படுத்திருந்ததும்—என்று சொல்லுவர்.

(2) ஆழ்வார் எம்பெருமானுடைய குணங்களை மனது கலங்காமல் தரித்து நின்று கண்டகாலம் அநுபவிக்கமுடியாமல் அடிக்கடி மனது தளரும்படி பாபம்செய்தவன் என்று தம்மை “பாவியேற்கு” என்பதால் சொல்லுகிறார்.

(3) ‘நின்றவாறும்’ என்பதற்கு அர்ச்சையாய் ஒரு ஊரில நின்றும், ஒரு ஊரில் உட்கார்ந்தும், ஒரு ஊரிற் படுத்தும் இருப்பதைச்சொன்னதாகப் பொருள் சொல்லலாம். ஆனால், இந்தத் திருவாய்மொழியில் விபவ அவதாரங்களைச் சொல்லுகிறபடியால் அந்தப்பொருளுக்கு இங்கு பொருத்தமில்லை. (6)

அவ—இப்பாட்டில் தம்முடைய தளர்ச்சிபோய் எம்பெருமானை நினைப்பதற்கு உபாயத்தைச் சொல்லவேண்டும் என்று வேண்டினார் இதில் கண்களால் பார்க்கும்படி வரவேண்டுமென்கிறார் —

ஒண்சுடரோ டிருளுமாய் நின்ற வாறு முண்மை யோடின்
[மையாய் வந்தென்
கண்கோ ளாவகை நீ கரந்தென் னைச்செய் கின்றன
எண்கொள் சிந்தையு ணைகின் றேனென் கரிய மாணிக்கமேயென்
[கண்கட்குத்
திண்கொள்ள வொருநா ளருளா யுன்றிரு வுருவே. (எ)

(ப - ரை) உண்மையோடு, இன்மையாய் - உண்மையில்லாதவனாய், (ஆச்ரிதர்களுக்கு அவர்கள் வேண்டினதைச் செய்கிறவனாயும், மற்றவர்களுக்கு அதைச் செய்யாதவனாயும்,) ஒண்சுடரோடு - மிகவும் தெளிவான பிரகாசத்தோடு, (மனதிலேமாத்திரம் தோன்றி) இருளுமாய் - பிரகாசமில்லாதவனாய், நின்றவாறும் - இருந்த விதத்தையும், என் கண்கள், கொளாவகை - பார்க்கமுடியாத விதமாய், கரந்து - மறைந்து, நீ, என்னை, செய்கின்றன - நீ பண்ணும் வேலைகளையும், எண்கொள் சிந்தையுள் - எண்ண வேண்டுமென்கிற ஆசையாகிய சித்தத்திலே, நைகின்றேன் - தளருகிறேன், என் கரிய மாணிக்கமே - என்னுடைய நீலரத்னம்போலிருக்கிறவனே! திண் - நன்றாக, கொள்ள - அனுபவிக்கும்படி, என் கண்கட்கு - என்னுடைய கண்களுக்கு, உன் திருவுரு - உன்னுடைய அழகான திருமேனியை ஒருநாள், அருளாய் - காட்டியருளாய்.

(கருத்து) ஆச்ரிதர்கள் வேண்டினதைச் செய்கிறவனாயும் மற்றவர்களுக்கு வேண்டினதைச் செய்யாதவனாயும், என் மனதில் மாத்திரம் தோன்றி என் கண்களால் காணமுடியாதபடி மறைந்திருக்கிறாய். இப்படி நீ செய்கிற வேலைகளை நான் கண்ணாலே காணவேண்டுமென்று ஆசைப்படுகிறேன். அந்த ஆசை நிறைவேறாமல் தளர்ச்சியை அடைகிறேன். நீலரத்னம்போன்ற திருமேனியையுடைய ஸ்வாமியே! உன்னுடைய அழகை நான் மனதாலே

கண்டு அநுபவிப்பதுபோல் கண்களாலும் திடமாக அநுபவிக்கும்படி அந்தத்திருமேனியைக் காட்டியருளவேண்டும். இது பல நாள்கள் செய்யவேண்டாம, ஒருநாள் செய்தால் போதும்.

குறிப்பு.—'உண்மை' என்பதற்கு உண்மையாயிருக்கும் வஸ்து என்பது பொருள். அஃது ஒரு வேலையைச் செய்யும். இல்லாத வஸ்து ஒன்றையும் செய்யாது. இங்கே வேலையைச் செய்வதாவது, ஆச்ரிதர்கள் வேண்டினதைச்செய்வது. இன்மையாவது மற்றவர்கள் வேண்டினதைச் செய்யாமை.

(2) ரத்நமானது ஒருவனுக்குத் தனமாயும், நகையாயும், இனியதாயுமிருக்கும், அதுபோல் எமபெருமான் இருக்கிறான் எனபது கருத்து.

(3) "திண்கொள்ள" என்பதற்கு யோகம் செய்யும்போது பார்ப்பதுபோலில்லாமல் கண்களாலே பார்க்கவேண்டுமென்பது கருத்து. இங்கே யோகமாவது எம்பெருமானையே கண்ணால் பார்ப்பதுபோலத் தெளிவாய் வேறு எண்ணம் கலப்பில்லாமல் ப்ரீதியுடன் மனதாலே பார்த்துக்கொண்டிருப்பது. (7)

---

திருவு ருவுகி டந்த வாறுங் கொப்பூழ்ச் செந்தா மரைமேற்
கருவுள் வீற்றி ருந்து படைத்திட்ட கருமங்களும் [றிசைமுகன்
பொருவி லுன்றனி நாயக மவை கேட்குந் தோறுமென் னெஞ்ச
[நின்றுநெக்கு
அருவி சோருங் கண்ணீ ரென்செய்கே னடியேனே. (அ)

(ப-ரை) திரு உருவு - உன்னுடைய அழகான திருமேனி, கிடந்த ஆறும் - பிரளயகாலத்தில் படுத்திருந்ததும், கொப்பூழ் - உன் நாபியில், செம் தாமரைமேல் - (உண்டான) செந்தாமரைப்பூவின்மேலிருக்கிற, திசைமுகன் - பிரம்மாவாகிற, கருவுள் - கருவில் (உடம்புக்குள்ளே) வீற்று இருந்து - நீ அவனுக்கு ஆத்மாவாக இருந்தும் உன் பெருமை தோன்றும்படியிருந்து, படைத்திட்ட - உலகங்களை உண்டுபண்ணின, கருமங்களும் (ஆகிய) பொருவு இல் - ஒப்பில்லாத, உன் - உன்னுடைய, தனி - விலக்ஷணமான, நாயகம் அவை - ஸர்வேசுவரனாயிருப்பதைக்காட்டுகிற

உன்வேலைகளை, கேட்குந்தோறும் - நான் கேட்கும்போதெல்லாம், என நெஞ்சம் - என் மனது, நின்று - நிலையாயிருந்து, நெக்கு - உருகி, கண்ணீர், அருவி சோரும் - அருவிபோல் ஓடுகிறது, அடியேன், எனசெய்கேன் - என்னசெய்வேன் ?

(கருத்து) பிரளயகாலத்தில் எங்கும் ஜலமயமாயிருக்கும் போது, அந்த ஜலத்தில் அழகான உன் திருமேனியோடு படுத்திருந்தாய். பிறகு, உன் நாபியிலுண்டான தாமரைப்பூவிலிருக்கிற பிரம்மாவின் உடம்புக்குள் அவனுக்கு ஆத்மாவாக இருந்து உலகங்களை உண்டுபண்ணினாய். ஸர்வேசுவரனான உன்னுடைய இந்தவேலைகள் விசித்திரமாய் ஒப்பில்லாதவைகளாய் இருக்கின்றன. அவைகளை நான் நினைக்கும்போதெல்லாம் என்னுடைய மனது உருகி கண்ணீர் அருவிபோல் ஓடுகிறது. உருகின மனது உடனே கெட்டியாகாமல் உருகியேயிருக்கிறது. இந்த வருத்தத்தை நீயாகவே தீர்த்துக்கொள்ளக்கூடாதோவென்றால், நான் உனக்கு உட்பட்டவனல்லவா ? உன் உதவியில்லாமல் என்னால் என்ன செய்யமுடியும். (8)

---

அடியை மூன்றை யிரந்த வாறு மங்கே நின்றாழ் கடலு மண்ணும்
முடிய வீரடியால் முடித்துக் கொண்ட முக்கியமும் விண்ணும்
நொடியு மாறவை கேட்குந் தோறு மென்னெஞ்ச நின்றனக்கே
கரைந்துகும்
கொடிய வல்வினையே னுன்னை யென்றுகொல் கூடுவதே. (10)

(ப - ரை) அடியை மூன்றை - மூன்று அடிகளை, இரந்த ஆறும் - (மஹாபலியினிடம் நீ) யாசித்த விதமும், அங்கே நின்று - அவனுடைய யஜ்ஞசாலையிலிருந்து, ஆழ் கடலும் - ஆழமான ஸமுத்திரமும், மண்ணும் - பூமியும், விண்ணும் - (பிரம்மாவின் லோகம் வரையிலுள்ள) ஆகாசமும், ஈர் அடியால் - இரண்டு அடிகளில், முடிய - அடங்கும்படி அளந்து, முடித்துக்கொண்ட - (உன் ஆச்ரிதனான இந்திரன் வேலையை) முடித்துக்கொண்ட, முக்கியமும் - முக்கியங்களான, அவை - அந்த வேலைகளை, நொடியும் ஆறு - (புராணங்களில்) சொல்லும் விதங்களை, கேட்கும் தோறும் - கேட்கும்போதெல்லாம் என் நெஞ்சம், நின் தனக்கே -

உன்னிடத்திலேயே, கரைந்து, உகும் - உருகி ஓடுகிறது, கொடிய - கொடுமையான, வல் - பலமான, வினையேன் - பாபங்களைச்செய்த நான், உன்னைக்கூடுவது, தளர்ச்சியில்லாமலிருந்து உன்னை அனுபவிப்பது, என்றுகொல் - எப்போதோ?

(கருத்து) நீ மஹாபலி யஜ்ஞசாலைக்குப்போய், மூன்று அடிகளாலே அளக்கப்படும் பூமியைக்கேட்டு திரிவிக்கிரமரூபத்தை எடுத்துக்கொண்டு ஓர் அடியில் ஆழமான ஸமுத்திரங்களும் அவைகளில் நடுவேயிருக்கும் ஏழு த்வீபங்களுள்பட பூமியும், மற்றோர் அடியில பிரமமாவின் லோகம்வரையிலுள்ள ஆகாசமும் அடங்குமபடி அளந்து, உன்னை ஆச்ரயித்த இந்திரனுடைய வேலையைச்செய்துமுடித்தாய். இந்த முக்கியமான உன்வேலையைப் புராணங்கள் சொல்லும்போது கேட்டு என்னுடைய மனது உருகி அருவிபோல் ஓடுகிறது. உன்னை நான் பார்க்கமுடியாதபடி பாபம்பண்ணியிருக்கிறேன். அவைகளைப் பிராயச்சித்தத்தாலே போக்கவும முடியாது. அவைகள் அநுபவித்தும் கழியாது. இப்படியிருக்கிற நான் தளர்ச்சி நீங்கி உன்னை அநுபவிப்பது எப்போது?

குறிப்பு:—இரண்டடிகளை கேட்டால், எல்லா உலகங்களையும் மாத்திரம் கைப்பற்றிக்கொள்ளலாம். ஆனால் மஹாபலியை வசப்படுத்தமுடியாது; அவனை வசப்படுத்த மூன்று அடிகளைக் கேட்டது. (9)

---

கூடி நீரைக் கடைந்த வாறு மமுதந் தேவ ருண்ண வசுரரை
வீடும் வண்ணங்களே செய்து போன வித்தகமும்
ஊடு புக்கென தாவி யையு ருக்கி யுண்டிடு கின்ற நின்றன்னை
நாடும் வண்ணஞ் சொல்லாய் நச்சு நாகணையானே. (௧௦)

(ப - ரை) கூடி - (அஸுரர்களுடன்) சேர்ந்து, நீரை - ஜலத்தை (திருப்பாற்கடலை), கடைந்தவாறும் - நீ கடைந்த விதமும, அமுதம் - அமிருதத்தை, தேவர் உண்ண, அசுரரை - அசுரர்கள், வீடும் வண்ணங்களே செய்து - அதைவிடும் விதங்களைச் செய்து, போன வித்தகமும் - (அஸுரர்கள் உன்பின்னால் வரும்படி மோஹினீ ரூபத்தை எடுத்துக்கொண்டு) போன ஆச்சரியமான வேலை

(கருத்து) ஆதிசேஷன்மேல் படுத்துக்கொண்டிருக்கிற நம்முடைய ஸ்வாமியினுடைய திருவடிகளை வேறு உபாயமில்லாத நமக்கு உபாயம் என்றும், வேறொன்றும் உபாயமன்று என்றும், ஒரே நிலையுள்ளவராய் ஆழ்வார் தன ஆத்மா தரிப்பதற்காக அந்தாதியான ஆயிரம பாட்டுக்களைப் பாடினார். அவைகளுக்குள்ளே இருக்கும இந்தப் பதது பாட்டுக்களை அடிக்கடி படிக்க சக்தியுள்ளவர்கள் வைகுந்தத்துக்குப்போய் எப்போதும் ஆநந்ததததை அடைவாாகள்.

குறிப்பு (1) —'நாகணைமிசை நம்பிரான்' என்பதற்குக் கருத்து—எம்பெருமான் ஒருவனை உபேக்ஷித்தாலும அப்படி உபேக்ஷிக்காமல் அவனை ரக்ஷிக்கும்படி ஆதிசேஷன் செய்கிறான். இதுவே அவனுக்கு ஸ்வபாவம்—எனபது.

(2) 'இவையும்' என்பதில உம்மையாலே இப்படியும் ஓர் விலக்ஷணமான திருவாய்மொழி இருக்குமோ என்று ஆச்சரியப்படுகிறார் என்பது காட்டப்படுகிறது. (11)

---

ஸ்ரீமாந் ஸ்வாமிவத்ஸ்வஸமஸ்த வ்ருஷகணத்ரணாத் த்ரிதநாமாதநாத் ஸர்வலோகப்ரேவ்யாத் ஸ்வதேஷுகர்மஸு பரிவாரஸு ஸ்வாமிபாவாதிர்யாத்ம ஸ்ரீவேங்கடாத்ரிநாதரிநாதாஜ்ஞம் நிர்ய ப்ரஜாபதிக்ஷணாத்தீர்த்தார்த்ஹ ஸ்ரீயஷ்டஸ்வநாத் பிரியமதிஹார்ஸ்ர்யஹ்ருதயாத் ॥ ॥கூஅ॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னுடையவர்களின் மனததைத தன்னுடைய செயல்களாலே தளரும்படி செய்கிறான் என்பது சொல்லப்படுகிறது. அந்த வேலைகளாவன:— (1) கிருஷ்ணனாய் அவதாரம் செய்து திருவாய்ப்பாடியில் செய்த வேலைகள்; (2) நப்பின்னைக்காக ஏழு காளைமாடுகளைக் கொன்றது; (3) பூதனையைக் கொன்றது முதலான வேலைகள்; (4) அஸுரர்களை மோஹிக்கும்படி புத்தனாய் அவதாரம் செய்தது; (5) கோவர்த்தநமலைக்குப் படைத்த அந்நத்தைச் சாப்பிட்டது; (6) நின்றது, இருந்தது, கிடந்தது ஆகிய வேலைகள்; (7) ஆச்ரி

தர்களுக்கு மனதில்மாத்திரம் தோன்றிக் கண்களால் பார்க்கமுடியாமலிருப்பது ; (8) பிரளய ஜலத்தில் படுத்திருந்தது ; (9) மஹாபலியிடம் மூன்று அடி கேட்டது முதலானவைகள் ; (10) அமுதத்தைத் தேவர்களுக்குக் கொடுத்தது முதலானவைகள். (68)

---

[illegible] ॥ [illegible]

---

இந்தப் பத்தில் எம்பெருமான் ஒருவனே ஆச்ரிதர்கள் வேண்டுகிற ச்ரேயஸ்ஸுகளுக்கு உபாயமென்பது பத்துக்காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) கருணைக்கு உட்பட்டிருப்பது ; (2) தன்னைச் சேர்ந்தவர்களின் பாபத்தைப் போக்குவது ; (3) தீவ்ரமான ஆசையை உண்டுபண்ணுவது ; (4) லோகங்களை ரக்ஷிப்பது ; (5) மறக்கமுடியாதபடி நினைவில் தோன்றுவது ; (6) அநுகரணம் பண்ணுவதற்கு விஷயமாயிருப்பது ; (7) வேறு கதியில்லாதவர்களுக்கு உயர்ந்த கதியாயிருப்பது ; (8) ஆச்ரிதர்களுக்கு ஸ்வாமியாய் தாஸ்யரஸத்தை உண்டுபண்ணுவது ; (9) கிட்ட இருப்பது ; (10) மனத்தளர்ச்சியைப் போக்கிப் ப்ரீதியுடன் நினைக்கச் சக்தியைக் கொடுப்பது.

---

[illegible] ॥

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.
திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஐந்தாம்பத்து முற்றிற்று.

---

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.
திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# ஆரம்பத்து.



அநாத்³யஜ்ஞாநநுந்நஸ்வவஶகரணாநுஜ்ஜிதஃ
ப்ரணேத்ரா வக்த்ராவாஸ: ப்ரவேநவிஶாகாஹத்ருஷித: ।
தத்ராஸாமௌக்தவஜ்ஞம் ஶிஶிரஹிதஸ்வாத்வட்டந
ஸத்வாங்க³ம் ஷட்³யே ஶ்ரிதஶரண்யதி ஶரணம் ॥ ॥௧௩॥

ஆதியும் முடிவுமில்லாமல் ஆநந்தமாயிருக்கிற ஸர்வேச்வர னுடைய இயற்கையாயிருக்கிற கிருபையென்னும் கிழங்கிலிருந்து உண்டுபண்ணப்பட்ட வியாபாரமானது ஒருவனைப் பிரபத்தி ஆகிய விபாகம் வரையில் கொண்டுசேர்க்கும் என்பது ஐந்தாம பத்தில் சொல்லப்பட்டது. ஆழ்வார், ஆறும்பத்தில், வெகு நாளாய்ப் பிரிந்திருந்த தம்மைத் தன்னுடன் சேர்ப்பதில் காட்டப் பட்ட சக்தியுடைய ஸர்வேச்வரனை வேறு உபாயமில்லாதவராய், ஆசாரியனை முன்னிட்டுக்கொண்டு சரணமாக அடைகிறார். (13)

ப்ராப்தௌ ஸ்வேச்சயாமும் ஸ்வயஶமிதா தேஶிவக்த்ரம்
ஸ்ம்ருதிஷு கடாக்ஷம் ப்ரவிஶ்யநம் ஸ்வாநிதஹாரம் ।
நிர்தோஷம் ஸ்வைக்யாதேவோபகவஶ்ரீதிதயாகா
உந்நதஸ்வைதேவ்யம் க்ஷவிக்ஷணஶரண்யஸ்வத்ருஷிஹ ॥ ॥௧௪॥

இந்தப் பத்தில் பிராப்தியிலே எம்பெருமான் வருத்த மில்லாமல் அடையத்தக்கவன் என்பது பத்துக் காரணங்களாலே காட்டப்படுகிறது. அந்தக் காரணங்களாவன :—(1) ஆசாரியன் வழியாகவே கிட்டத்தக்கவனாக இருப்பது ; (2) தானும் ஆசரி தர்களிடம் வருவது ; (3) ஒன்றுக்கொன்று விரோதிகளானவை களை ஒன்றாகச் சேர்க்கும் சக்தி ; (4) தன் வேலைகளாலே ஆச்ரி

அங்கிருக்கும் உப்புக்கழியிலிருந்த பக்ஷிகளைத் தூதுபோகும்படி வேண்டுகிறாள் பக்ஷிகள் நாம் சொல்லுவதைக்கேட்டு அதை எம்பெருமானிடம் போய்த் தெரிவிக்கும்படியான அறிவில்லாதவைகள் என்பதைத் தம்முடைய வருத்தத்தாலே மறந்து பேசுகிறாள்.

(கலித்துறை.)

**வைகல் பூங்கழி வாய்வந்து மேயுங் குருகினங்காள்**
**செய்கொள் செந்நெ லுயர்திரு வண்வண் டூருறையுங்**
**கைகொள் சக்கரத் தென்கனி வாய்ப்பெரு மானைக்கண்டு**
**கைகள் கூப்பிச்சொல் லீர்வினை யாட்டியேன் காதன்மையே. (க)**

(பதவுரை) பூ கழிவாய் - புஷ்பங்களையுடைய நீர்க்கழியில், வைகல் - எப்போதும், வந்து, மேயும் - ஆஹாரத்தைத் தின்று சொண்டு நசகிற, குருகு இனங்காள் - குருகுகளின் கூட்டங்களே! செய்கொள் - வயலைக்கொண்ட, (வயல் முழுவதிலும் பரவுகிற) செந்நெல் - நல்ல நெற்பயிர்கள், உயர் - ஓங்கி வளரும், திருவண்வண்டூர் - செல்வம் நிறைந்த அழகான வண்டூரில், உறையும் - வஸிக்கும், கை கொள் சக்கரத்து - கையைக்கொண்ட, (கை முழுவதுக்கும் தானே நகையாகத் தோன்றுகிற) சக்கரத்தையும் கனி வாய்-கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையும் உடைய, என் பெருமானை - என் ஸ்வாமியை, கண்டு, கைகூப்பி - கைகளைக் கூப்பிக்கொண்டு, வினையாட்டியேன் - பாபம் பண்ணின என்னுடைய, காதன்மை - ஆசையின மிகுதியை, சொல்லீர் - சொல்லுங்கள்.

(கருத்து) புஷ்பங்கள் நிறைந்த நீர்க்கழியில் நீங்களாகவே வந்து இரையைத் தின்கிற குருகின கூட்டங்களே! வயல்களின் செழுமையாலே அவைகள் முழுவதிலும் பரந்து செந்நெல் ஓங்கி வளரும் திருவண்வண்டூரில், தான் கையும் திருவாழியுமாயிருக்கும் அழகையும், தன்னுடைய கனிவாயையும காட்டி. என்னை அடிமையாக்கின எம்பெருமான் வஸிக்கிறான். அவனிடம் நீங்கள் போய்க் கைகளைக் கூப்பிக்கொண்டு அவனைவிட்டுப் பிரியும்படியான பாபத்தைப் பண்ணின என்னுடைய ஆசையின் மிகுதியைச் சொல்லுங்கள்.

அவ—முன்பு தூதுஅனுப்பின பக்ஷிகள் எம்பெருமானை அழைத்துக்கொண்டு வரும் என்று பாராது பொறுத்திருக்காமல மேன்மேலும் தூதுவிடுகிறாள் கீழ்ப்பாட்டில் குருகுகளை அனுப்பினாள்; இதில நாரையை அனுப்புகிறாள்.—

காதன் மென்பெடை யோடுடன் மேயுங் கருநாராய்
வேத வேள்வியொலி முழங்குந் தண்டிரு வண்வண்டூர்
நாதன் ஞாலமெல் லாமுண்ட நம்பெரு மானைக்கண்டு
பாதங் கைதொ ழுதுபணி யீரடி யேன்றிறமே. (உ)

(பத - உரை) காதல் மென்பெடையோடு - ஆசையே வடிவு கொண்டது போலவும் மிருதுவாயுமிருக்கிற பெண் பக்ஷியோடு, உடன் மேயும் - கூட இரையைத் தின்னும், கரு நாராய் - கறுப்பான நாரைப் பக்ஷியே! வேத வேள்வி ஒலி - வேதத்தைப் படிக்கிறவர்களின் குரலும், யாகங்களில் தேவதைகளைக் கூப்பிடுகிற குரலும், முழங்கும், தண் - குளிர்ந்த, திருவண்வண்டூர் நாதன் - திருவண்வண்டூருக்குத் தலைவனை, ஞாலம் எல்லாம் - உலகங்கள் எல்லாவற்றையும், உண்ட, நம்பெருமானை - நம்முடைய ஸ்வாமியை, கண்டு, பாதம் - அவன் திருவடிகளை, கை தொழுது - கைகளை நீட்டி நமஸ்காரம் செய்து, அடியேன் திறம் - என் விஷயத்தை, பணியீர் - சொல்லுங்கள்.

(கருத்து) ஆசையே வடிவுகொண்டதுபோல் மிருதுவாயிருக்கிற பெண் பக்ஷியோடு இரையைத்தின்னும் கறுத்த நாரையே! வேதத்தைப் படிக்கிறவர்களின் குரலும், யாகங்களில் தேவதைகளைக் கூப்பிடுகிறவர்களின் குரலும் முழங்குகிற, ஸம்ஸார தாபத்தைப் போக்குகிற திருவண்வண்டூரில அதற்கு நாதனாய், பிரளயகாலத்தில் உலகங்களை வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷித்துத் தன்னுடைய மிருந்த இரக்கத்தையும், ஆச்ரிதர்களிடத்தில் தனக்கு இருக்கும் ஆசையையும் காட்டின நம்முடைய ஸ்வாமி அங்கே வஸிக்கிறான. அவனைக் கண்டு அவன் திருவடிகளில் கைகளை நீட்டிக்கொண்டு நமஸ்காரஞ்செய்து என் இருப்பை அவனுக்குச் சொல்லுங்கள்.

குறிப்பு:—(1) 'காதல் மென்பெடையோடு' என்பதற்கு தன்னிடம் ஆசையுள்ள தன்னைவிட்டுப் பிரியமுடியாதபடி மிருது

வஸிக்கிற, கறங்கு சக்கரம் கை - சுழன்றுகொண்டிருக்கிற சக்ரத்தையுடைய கையையும், கனிவாய் - கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தையுமுடைய, பெருமானை - ஸ்வாமியை, கண்டு, நீர் - நீங்கள், இறங்கி - கீழ்ப்படிந்து (அபிமானத்தைவிட்டு), தொழுது - நன்றாக நமஸ்காரம் செய்து, அடியேன இடர் - அடியேனுடைய வருத்தத்தை, பணியீர் - சொல்லுங்கள்.

(சுருக்கம்) கூட்டங்களாக இருந்து, வயல்களின் நடுவிலே எங்கும் திரிந்துகொண்டிருக்கிற பக்ஷிக்கூட்டங்களே! தனக்குத் தகுந்த செல்வம் வளர்கிற திருவண்வண்டூரில் எம்பெருமான் திருக்கையில் ஆச்ரித விரோதிகளைக் கொல்ல வேகமாக சுழன்றுகொண்டிருக்கிற சக்ரத்தையும் கனிவாயையுமுடையவனாய் வஸிக்கிறான். அவனைக்கண்டு அபிமானத்தைவிட்டு, நன்றாக நமஸ்காரம் செய்து, என்னுடைய வருத்தத்தை அவனுக்குச் சொல்லுங்கள். நான் உங்களுக்கு உட்பட்டவள் அல்லவா? என் வேலையைச் செய்துமுடிப்பது உங்கள் அதிகாரமல்லவா?

குறிப்பு (1):—பக்ஷிகள் கூட்டங்களாய் எங்கும்போவது பிராட்டியை விட்டுப் பிரிந்து வருந்தப்படுகிற சக்கரவர்த்தித் திருமகனுக்காக வாநரக்கூட்டங்கள் ஸீதை எங்கே இருக்கிறாள் என்று பார்ப்பதற்காக நாலுதிக்குகளிலும் போனதுபோலிருக்கிறது என்பது கருத்து.

(2) 'கறங்கு சக்கரக்கை' என்பதற்கு ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம்பண்ணுவதற்கு எம்பெருமான் எப்போது என்னை அனுப்புவன் என்று பரபரப்பாலே சக்ரம் அவன் திருக்கையில் சுழன்றுகொண்டிருக்கிறது என்பது கருத்து. (3)

---

இடரில் போகம் மூழ்கி யிணைந்தாடும் மடவன்னங்காள்
விடலில் வேத வொலிமுழங்குந் தண்டிரு வண்வண்டூர்
கடல்மே னிப்பிரான் கண்ணனை நெடுமா லைக்கண்டு
உடலம் நைந்தொ ருத்தி யுருகுமென் றுணர்த்துமினே. (ச)

(ப - ரை) இடர் இல் - இடையூறு இல்லாத, (பிரிவு கொஞ்சமுமில்லாத), போகம் - அநுபவத்திலே, மூழ்கி - முழுகி, இணைந்து - ஆணும் பெண்ணுமாய்ச் சேர்ந்து, ஆடும் - அங்குமிங்கும்

(ப - ரை) ஊடல் - ஊடலையும (பிரிந்திருந்துண்டான கோபத்தையும்,) உணர்த்தல் - அந்த கோபத்தைத் தீர்ப்பதையும், உணர்ந்து - அறிந்து, உடன்மேயும் - (மறுபடியும ஊடல் வராதபடி) சேர்ந்து இரை மேய்க்கின்றும், மட அன்னங்காள், திணர்த்த - நெருக்கமான, வண்டல்கள்போல், சங்கு சேரும் - (அலையாலே அலைக்கப்பட்டு) சங்குகள் வந்துசேருமு, திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலிருக்கிற, புணர்த்த - தொடுக்கப்பட்ட, பூம் - அழகான, தண் - குளிர்ந்த, துழாய் முடி - துளஸியையுடைய கிரீடத்தையுடையவனுன, நம்பெருமானை - நம்முடைய ஸ்வாமியை, கண்டு, புணர்த்த - சேர்க்கப்பட்ட, கையினராய் - கைகளையுடையவர்களாய், அடியேனுக்கும - அடியேனுக்காகவும், போற்றுமினை - ஸ்தோத்திரம் பண்ணுங்கள்.

(கருத்து) ஹம்ஸங்களே! உங்களிடத்தில் ஸ்நேஹித்துக் கொண்டிருக்கும் பெண் பக்ஷிகளுடைய கோபத்தின் பயன்களை அநுபவித்து, அந்தக் கோபத்தைத் தீர்க்கும் வழியையறிந்து, இனிமேல் அவைகளை விட்டுப்பிரிந்து இருக்கப் பாடுபடக்கூடாது என்று அவைகளுடன் சேர்ந்தே இரை தின்னுகிறவர்களே! ஆற்றின் கரையில் வந்து நெருங்கியிருக்கிற வண்டல்போல் அலைகளால் கொண்டுவரப்பட்ட சங்குகளையுடைய திருவண்வண்டூரில், எம்பெருமான் தன்னுடைய கிரீடத்தில் அழகான குளிர்ந்த துளஸீமாலையைச் சூடிக்கொண்டு வஸிக்கிறான். அவனைக் கண்டு நீங்கள் பெண் பக்ஷிகளை ஊடல் தீர்க்கும்போது கௌரவம் பண்ணிப் போகவிடுவீர்கள், அவனிடத்தில் எனக்காகக் கௌரவம் செய்து, நான் சொன்னதை அவனிடம் சொல்லுங்கள்.

குறிப்பு —(1) ஒரு ஸ்திரீயைப் பிரிந்து வெளியேபோன புருஷன் அவளிடம் திரும்பி வரும்போது அவன் சூட்டிக்கொண்டிருந்த பூமாலையும், அவன் உடம்பிலிருந்த வாஸனையையும் கண்டு நீ எங்கே போய்விட்டாய், என்னிடம் வரவேண்டாமென்று ஸ்திரீ கோபிப்பது ஊடல். அவன் 'உனக்காகவே இந்தப் புஷ்பங்களைச் சூட்டிக்கொண்டிருக்கிறேன். வாஸனை உனக்காகவே உண்டாயிருக்கிறது.' என் றிசால்லி அவள் கோபத்தைத் தீர்ப்பது உணர்த்தல்.

(2) உன் பெண்பக்ஷியிடம் சௌரம்செய்து அவள் கோபத்தைத் தீர்க்கும்வழியையறிந்த உன்னுடைய பெருமான் உன் சொல்லைக் கேட்காவிட்டாலும் அதைக் கேட்கும்படி செய்யமுடியாதோ? ஆகையால், அவனைக் கேட்கும்படி செய்து என் இருப்பை அவனுக்குத் தெரிவியுங்கள் என்பது கருத்து.

(3) 'துழாய்முடி' என்பதற்கு, நீங்கள் இவ்வளவு பெருக்கப் படவேண்டுவதில்லை. அவன் என்னிடம் வருவதற்காக கிரீடத்தில் துளவமாலையைச் சூடிக்கொண்டிருக்கிறான். நீங்கள் இதைச்சொல்லுவதுமாத்திரம் வேண்டும் என்பது கருத்து.

---

போற்றி யானிரந் தேன்புன்னை மேலுறை பூங்குயில்காள்
சேற்றில் வாளை துள்ளுந் திருவண்வண் டூருறையும்
ஆற்றலாழி யங்கை யமரர் பெருமானைக் கண்டு
மாற்றங் கொண்டருளீர் மையல் தீர்வ தொருவண்ணமே. (௩)

(ப - ரை) புன்னைமேல் உறை - புன்னைமரத்தின்மேலே வசிக்கிற, பூங்குயில்காள் - அழகான குயில்களே! சேற்றில், வாளை - வாளைமீன்கள், துள்ளும், திருவண்வண்டூர் உறையும் - திருவண்வண்டூரில் வசிக்கும், ஆற்றல் - ஆற்றலையுடைய [illegible]த்தை உடையவனும், ஆழி அங்கை - சக்கரத்தால் அழகான திருக்கைகளை உடையவனுமான, அமரர் பெருமானை - நித்திய சூரிகளின் தலைவனை, கண்டு, மையல் - என்னுடைய மயக்கமானது, தீர்வது ஒருவண்ணம் - தீரும்படியான ஒருவிதத்தாலே, மாற்றம் கொண்டு - (பதில்) வார்த்தையைக்கொண்டுவந்து, அருளீர் - கிருபைபண்ணவேண்டும், போற்றி - உங்களைக் கொண்டாடித் தோத்திரம்பண்ணி, யான் இரந்தேன் - நான் பிரார்த்திக்கிறேன்.

(கருத்து) புன்னைமரத்தின்மேல் வாசமாக வசிக்கிற அழகான குயில்களே! சேற்றின்மேல் வாளைகள் துள்ளும் திருவண்வண்டூரில் நித்தியசூரிகளின் தலைவனாய் இருப்பதனால் ஆச்ரிதர்களுடன் சேர்ந்திருப்பதையே போகமாக என்னுகிறவனும் ஆச்ரிதர்களுக்குத் தன்னை அநுபவிக்கும்படி கொடுத்தும், இவர்களுக்கு என்ன கொடுத்தோம் என்று குறைபா

தாகம் பண்ணும்படி வருத்தப்படுகிறவனும், ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம பண்ணுவதற்காக எப்போதும் திருச்சக்ரத்தை அழகிய கைகளிலுடையவனுமான எம்பெருமான் வஸிக்கிறான் அவனைக் கண்டு அவனைவிட்டுப் பிரிந்ததினால் எனக்கு உண்டாயிருக்கும் மயச்சம் எப்படித் தீருமோ அப்படிச்சொல்லி பதில் ஸமாசாரத்தைக் கொண்டுவந்து அருளவேண்டும். உங்களுக்கு நான் கட்டளையிடவில்லை. உங்களை ஸ்தோத்திரம் பண்ணிப் பிரார்த்திக்கிறேன்.

குறிப்பு :—(1) புன்னைமரத்தின்மேல் ஸுகமாயிருக்கிற உங்களைத் தூது போகச்சொன்னது, உங்கள் ஸுகாநுபவத்துக்கு இடையூறுதான். நாட்டைவிட்டுக் காட்டிற்குப் போய் ஏகாந்தத்தில் சக்கிரவர்த்தி திருமகனை அநுபவித்துக்கொண்டிருந்த ஸீதையை ராவணன் பிரித்துக்கொண்டு போனதுபோல் இருக்கிறது. ஆனபோதிலும் இதை நீங்கள் எனக்காகப் பொறுத்துக்கொள்ளவேண்டும் என்று ஆழ்வார் வேண்டுகிறார்.

(2) அந்த ஊரின் செழுமையாலே மீன்கள் யானைகள்போல் படுத்துத் துள்ளித்துள்ளி விழுந்து ஆழமான ஜலத்தையும் சேறாகப்பண்ணுகிறது என்பது 'சேற்றில் வாளை துள்ளும்' என்பதின் கருத்து.

(3) ஆற்றலாழி—பராக்ரமத்தையுடைய திருவாழி என்றும் பொருள்கொள்ளலாம். (6)

---

அவ—கிளியைத் தூது அனுப்பும்போது, எம்பெருமானுக்கு என்ன அடையாளம் என்று அது கேட்டதாக நினைத்து ஆழ்வார் இதில் பதில் சொல்லுகிறார் :—

ஒருவண்ணஞ் சென்று புக்கெனக் கொன்றுரை யொண்கிளியே
செருவொண் பூம்பொழில் சூழ்செக்கா வேலைத் திருவண்வண்டூர்
கருவண்ணஞ் செய்ய வாய்செய்ய கண்செய்ய கைசெய்யகால்
செருவொண் சக்கரஞ் சங்கடை யாளந் திருந்தக்கண்டே. (எ)

(ப - ரை) ஒண் கிளியே - விலக்ஷணமான (உடம்பின் வர்ணத்தாலும் வாயின் சிவப்பாலும் அவனைப்போல் இருக்கிற)

திருந்தக் கண்டெனக் கொன்றுரை யாயொண் சிறுபூவாய்
செருந்தி ஞாழல் மகிழ்புன்னை சூழ்தண் டிருவண்வண்டூர்
பெருந்தண் டாமரைக் கண்பெரு நீண்முடி நாற்றடந்தோள்
கருந்திண் மாமுகில் போற்றிரு மேனி யடிகளையே. (அ)

(ப - ரை) ஒண் சிறுபூவாய்—அழகான (தூதுபோகத் தக்க) சின்ன உடம்மையுடைய பூவையே! செருந்தி - செருந்தி என்கிற மரம், ஞாழல் - ஞாழல் என்கிற கொடி, மகிழ் - மகிழ மரம், புன்னை - புன்னைமரம், (இவைகளால்) சூழ் - சூழப்பட்ட, தண் - குளிர்ந்த, திருவண்வண்டூர் - திருவண்வண்டூரில் எழுந்தருளியிருக்கிற. பெரு - பெரிய, தண் - குளிர்ந்த, தாமரைக் கண் - தாமரைக்கண்களையும், பெரு நீள் முடி - (ஸர்வேச்வரன் என்று காட்டுகிற) மிகவும் நீண்ட கிரீடத்தையும், நால் தட தோள் - நீண்ட நான்கு தோள்களையும், கரு - நீலவர்ணமான, திண் - திடமான, மா முகில் போல் - கரிய மேகத்தைப் போன்ற, திருமேனி - திருமேனியையும் உடைய, அடிகளை - ஸ்வாமியை, திருந்த கண்டு - நன்றாக (நீ பார்த்ததை மற்றவர்க்குச் சொல்லும்படி) பார்த்து, எனக்கு, ஒன்று - அவன் சொல்லும் ஒரு வார்த்தையை, உரையாய் - சொல்லு.

(கருத்து) அழகான சிறு பூவையே! செருந்தி, ஞாழல், மகிழ், புன்னை ஆகியவைகளால் சூழப்பட்ட ஸம்ஸாரதாபத்தைப் போக்கத்தக்கதான திருவண்வண்டூரில் என்னுடன் சேர்ந்த பிரிவாலே ஒரு புதிய அழகையுடையவனாய், எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான். அந்த அழகை அவனுடைய பெரிய தாமரைக் கண்களிலும், மிகவும் நீண்ட கிரீடத்திலும், நான்கு விசாலமான திருத்தோள்களிலும், மேகம் போன்ற திருமேனியிலும் பார்க்கலாம். அவனை நன்றாகக்கண்டு அவன் அபிப்பிராயத்தை அறிய ஆசைப்படுகிற எனக்கு அவன் சொல்லுகிற ஒருவார்த்தையை நீ வந்து சொல்.

குறிப்பு.—(1) ‘எனக்கு ஒன்று உரையாய்’ என்பதற்கு எனக்காக அவனிடம் ஒரு வார்த்தையை நீ சொல்லு என்றும் பொருள் கொள்ளலாம்.

(கருத்து) புஷ்பங்களின்மேல் அசைந்துகொண்டிருக்கிற அன்னங்களே! நீங்கள் திருவண்வண்டூருக்குப்போகும் காலத்தில் விடியற்காலமாய், அதை அறிவிக்க சங்குகளை ஊதிக்கொண்டிருப்பார்கள். அந்த ஊரில் ஆச்ரிதர்களின் எல்லாத் துக்கங்களையும் ஒரு க்ஷணத்திலே போக்கும் ஸ்வபாவமுள்ளவனும், அவர்களுடைய விரோதிகளிடத்தில் கொஞ்சமும் தாக்ஷிண்யமில்லாதவனும் ஆச்ரிதர்களுக்கு மிகுந்த ஸுலபனும், ஆசையுள்ளவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான் அவன் தனியாய் இருக்கும் காலத்தைப் பார்த்து அவனிடம் போய் அவன் திருவடிகளைக் கைகளாலே ஸேவித்து, மிகுந்த தாபத்தையுண்டாக்கும்படியாயும் பலமாயுமுள்ள பாபங்களைச் செய்த என்னுடைய இருப்பை அவனிடம் சொல்லுங்கள்.

குறிப்பு.—'அலர்மேல் அசையும்' என்பதற்கு, "நான் புஷ்பங்களைக் கண்டு தாபத்தை அடைகிறேன் நீங்களோ அதில் ஸுகமாயிருக்கிறீர்களே? இஃது எப்படி" என்று ஆழ்வார் ஆச்சரியப்படுகிறார். (9)

---

வேறுகொண் டும்மை யானிரந் தேன்வெறி வண்டினங்காள்
தேறுநீர்ப் பம்பை வடபா லைத்திரு வண்வண்டூர்
மாறில்போரரக் கன்மதி ணீறெழச் செற்றுகந்த
ஏறு சேவக ஞாக்கேன் னையுமுள ளென்மின்களே. (கO)

(ப - ரை) வெறி வண்டு இனங்காள் - வாஸனையையுடைய வண்டுக் கூட்டங்களே! உம்மை வேறுகொண்டு - பிரித்து (மற்ற பக்ஷிகளைக்காட்டிலும் உயர்ந்தவைகளாக எண்ணி), யான் இரந்தேன் - நான் வேண்டுகிறேன், தேறுநீர் - தெளிந்த ஜலத்தையுடைய, பம்பை - பம்பையென்னும் ஆற்றின், வடபாலை - வடபாகத்திலிருக்கிற, திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலிருக்கிற, மாறு இல் - எதிரியில்லாத, போர் - சண்டையைச் செய்யும், அரக்கன் - ராக்ஷஸனான ராவணனையும், மதில் - (அவன் பட்டணத்தின்) மதில்களையும், நீறு எழ - சாம்பலாக மேலே கிளம்பும்படி, செற்று - நாசம்செய்து, உகந்த - ஸந்தோஷப்பட்ட, ஏறு சேவகனார்க்கு - (வேண்டினவனோ வேண்டாதவனோ எல்லார் மனதிலும்)

களாய், இன் கொள் பாடல் - இனிமையைக்கொண்ட பாட்டுக் களாயிருக்கிற, இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், வல்லார்-படிக்கச் சக்தியுள்ளவர்கள், மின இடையார்க்கு மதனர்-மின்னலைப்போல ஸூக்ஷ்மமான இடுப்பையுடைய ஸ்திரிகளுக்கு, (அவர்கள் கணவர்கள் எப்படிப் பிரியமாயிருப்பார்களோ அப்படியே எம்பெருமானுக்கும் அவன் பக்தர்களுக்கும் இனியவர் களாயிருப்பார்கள்.)

(கருத்து) வாமனனாய் அவதாரம் செய்து இந்தப் பெரிய பூமியை மஹாபலியிடமிருந்து எடுத்துக்கொண்ட பெரிய வஞ்சகனான எம்பெருமானுடைய திருவடிகளின்மேல ஆழ்வார் அருளிச்செய்த திருவண்வண்டூரைச் சேர்ந்தவைகளாய் இனிமையான இந்தப் பாட்டுக்களை, அடிக்கடி படிக்கச் சக்தியுள்ளவர்கள் எம்பெருமானுக்கும் அவனிடத்தில் பக்தியுள்ளவர்களுக்கும், மிகவும் இனியவராயிருப்பார்கள்.

குறிப்பு —ஆழ்வார் தாம் வருத்தப்பட்டுக்கொண்டிருந்தும், எம்பெருமான் திருவண்வண்டூரில் இருந்துகொண்டு வராமையால், கொஞ்சம் கோபத்துடன பக்ஷிகளைத் தூது விட்டார். இந்தக் கோபம் தெரியும்படி வாமனனாய் மஹாபலியை வஞ்சித்ததைச் சொல்லி அவனை 'வண் கள்வன' என்று அருளிச்செய்கிறார். இதனாலேதான், இந்தத் திருவாய்மொழிக்குத் திருவண்வண்டூர் எம்பெருமான் விஷயமாயிருந்தபோதிலும வாமனன் விஷயமாயிருப்பதாகப் பாட்டு சொல்லுகிறது. (11)

---

[illegible]

||௭௦||

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுடைய பத்துக் குணங்களைச் சொல்லி அவன் ஒருவன் ஆசாரியனைக்கொண்டே அடையவேண்டியவன் என்று ஆழ்வார் அருளிச்செய்கிறார். அந்தக் குணங்களாவன :—(1) கையில் சக்கரத்தைத் தரித்துக் கொண்டிருப்பது ; (2) ஆபத்தில் துணையாய் இருப்பது ; (3) கோவைப்பழம்போல் அழகான திருப்பவளத்தையுடையவனாய் இருப்பது ; (4) ஸமுத்திரத்தைப்போல் நீலவர்ணமுள்ள திருமேனியை உடையவனாயிருப்பது ; (5) துளவமாலையைக் கிரீடத்தில் தரித்திருப்பது ; (6) நித்தியஸூரிகளின் தலைவனாய் இருப்பது ; (7) சிவந்த திருப்பவளத்தையும் திருவடிகளையும் உடையவனாயிருப்பது ; (8) பெரிய கீர்த்தியுள்ளவனாயிருப்பது ; (9) ஆச்சரியமான லீலைகளைச் செய்வது ; (10) அசுரர்களின் சேனாதியான ராவணனுடைய லங்கையை அழித்தது.

---

# இரண்டாம் திருவாய்மொழி.

அவ—ஆழ்வார் மாசறுசோதி (5–3) முதல் வருத்தப்பட்டுக்கொண்டிருந்து, கீழ்த் திருவாய்மொழியில் பக்ஷிகளைத் தூது விட்டார். எம்பெருமான் எழுந்தருளவில்லை. அப்போது ஆழ்வார் கோபித்துக்கொண்டு 'இனிமேல் எம்பெருமான் வந்தாலும், அவனுடன பேசுகிறதில்லை' என்று எண்ணியிருந்தார். ஆழ்வார் 'வேறுகொண்டு' என்று கீழ்த் திருவாய்மொழியின் (10)-வது பாட்டில் மிகுந்த வருத்தத்துடன் சொன்னதை அவன் அறிந்து கொண்டான. திரௌபதீ ராஜஸபையில் மிகுந்த வருத்தத்துடன் கூப்பிட்டபோதும், பீஷ்மர் சரதல்பத்தில் (பாணங்களால் உண்டுபண்ணப்பட்ட படுக்கையில்) படுத்திருந்து நினைக்கும்போதும், எப்படி அவன அவர்கள் காரியத்தைச் செய்தானே, அப்படியே ஆழ்வார் மிகுந்த வருத்தப்படுகிறபோது அவர் இருந்தவிடம் அவன் காரியத்தைச் செய்ய மிகுந்த வேகத்துடன் வந்தான. ஆழ்வார் கோபத்துடன் சில பேச்சுக்களைப் பேசினதையும், அவன் தன்னுடைய அழகையும் தம்மைவிட்டுப் பிரிந்ததினாலுண்டான தன வருத்தத்தையும் காட்டி, தம்மை அவன் ஸமாதாநம் பண்ணி தம்முடன் சேர்ந்ததையும் கிருஷ்ணனை விட்டுப் பிரிந்த ஒரு கோபிகையின் வார்த்தையாக அருளிச் செய்கிறார்.

(2) ஆழ்வார் தாம் எம்பெருமானுக்குச் சேஷன் என்று எண்ணிக்கொண்டு அதிலேயே ஆசையுள்ளவராயிருந்தவர் அன்றோ? அவர் அவனிடத்தில் கோபித்ததும், கோபத்தோடு சில பேச்சுகளைப் பேசினதும் எப்படிக்கூடும் என்றால், சக்கிரவர்த்தித் திருமகன் ஸீதையைக் காட்டிற்கு அழைத்துக் கொண்டு போகமாட்டேன் என்று சொன்னபோது, அவள் கோபித்துக்கொண்டு கடுமையாகப் பேசவில்லையா? அவள், "புருஷ வேஷம்கொண்ட ஸ்திரீயாகிய உன்னை மாப்பிள்ளையாக அடைந்து விதேஹராஜாவான என் தகப்பனார் உன்னை என்ன வாக எண்ணினார்" என்றாள்; அதுபோல ஆழ்வாரும் கோபித்துக்கொண்டு பேசக்கூடும். அதற்குக் காரணம் எம்பெருமானிடத்தில் பக்தியும், அவன் தம்மைச் சேர்ந்தவன் என்கிற அபிமானமுமாம்.

(3) முதல்பாட்டில் "மின்னிடைமடவார்" என்று வேறு ஸ்திரிகளைச் சொல்லியிருக்கிறதே. ஆழ்வார் கோபித்துக்கொண்டிருக்கிற ஒரு கோபஸ்த்ரீ; மற்றப் பாகவதர்கள் மற்ற கோபஸ்த்ரீகள்; இப்படியிருக்க, எம்பெருமானை அவர்களுடன் சேர்ந்திருந்து தம்மிடம் வரவில்லை என்று கோபிக்கக் கூடுமோ? அவர்களிடத்திலும் பிரியமுள்ளவரல்லவா? அவர்களிடத்திலும் பொறாமையில்லாதவரல்லவா? என்றால், ஆழ்வாருக்கு மற்ற பாகவதர்களிடத்தில் பொறாமையில்லை. அவர்களிடத்தில் எம்பெருமானுக்கு எவ்வளவு ஆசையிருக்கிறதோ அவ்வளவு தம்மிடத்திலும் அவன் ஆசையுள்ளவனாயிருக்கும்படியான பாக்கியத்தைத் தாம் பெறவில்லையே யென்றும், ஆகையினால்தான் அவன் தம்மைக் கவனிக்கவில்லையென்றும் வருத்தப்படுகிறார். வேறுவிதமாயும் பதில் சொல்லலாம்:—'இனிமேல் எம்பெருமான் தம்மிடம் வந்தாலும் தம்முடனே எப்பொழுதும் இராமல் தம்மைவிட்டுப் போய்விடுவான். இப்பொழுதுபோல மறுபடியும் துக்கப்படவேண்டும். ஆகையால், சேருவதும் துக்கப்படுவதுமா யில்லாமல் முடிந்துபோவதே நல்லது. அப்பொழுது துக்கமில்லாமலிருக்கும்' என்றும் அவர் நினைக்கிறார்.

(4) நாயகனைவிட்டுப் பிரிந்து வருத்தப்பட்டுக்கொண்டும் தூது அனுப்பியும் நாயகன் வாராமையால், "அவன் என்னைத் தாழ்ந்தவள் என்று எண்ணுகிறான். வேறு கோபிகைகளிடத்தில் அவனுக்குப் பிரியமிருக்கிறது. அவர்களைவிட்டு அவனுக்குப் பிரியமுடியவில்லை. ஆகையால்தான், அவன் வரவில்லை. இனிமேல் அவன் வந்தாலும் அவனுடன் பேசுவதில்லை" என்று தீர்மானித்து, அவன் வந்தாலும் அவனிடம் பேசக்கூடாது என்று தோழிகளையும் கட்டுப்பாடு செய்து, தன்னுடைய கிளிகளும் பூவைகளும் அவன் பெயரைச் சொல்லாதிருக்கும்படியும் செய்திருக்கையில், நாயகனும் இவளைவிட்டு இவ்வளவு காலம் பிரிந்திருந்தோமே என்று வருத்தப்பட்டுக்கொண்டு இவளிடம் வந்தான். இவள் முகம் கொடுக்கவில்லை. தோழிகளைக்கொண்டு சிபார்சு செய்யப்பட்டு இவளுடன் சேருவோம் என்று பார்த்தான்: அவர்களும் பேசவில்லை. கிளிகளையும் பூவைகளையும் கொண்டு தன் பெயரைச் சொல்லும்படி செய்து ஆறுதலை அடையலாம் என்று எண்ணினான். அதுவும் முடியவில்லை. தன்னுடைய

ஆத்மதாரணத்திற்காக அவளுடைய அறிவில்லாத பந்தையும் கழற்காய்களையும் எடுத்து, ராமனைப்பிரிந்து அசோக வநிகையில் துக்கப்பட்ட சீதை, ஹநுமான் கொடுத்த ராமனுடைய மோதிரத்தை வாங்கிக் கையில்வைத்து பார்த்துக்கொண்டு ஸந்தோஷித்ததுபோல் கண்களிலும் உடம்பிலும் ஒத்திக்கொண்டும் பார்த்துக்கொண்டிருந்தான். அதைக் கண்டக்கண்ணுல் பார்த்த நாயகி பேசுகிறுள் :—

( ஆசிரியத்துறை )

மின்னிடை மடவார்கள் நின்னருள் சூடுவார் முன்புநான தஞ்சுவன்
மன்னுடை யிலங்கை யரண்காய்ந்த மாயவனே
உன்னுடைய சுண்டாயம் நானறிவ னினியது கொண்டு
என்னுடைய பந்துங்கழலுந் தந்து போகுநம்பி. [செய்வதேன்

(ப - ரை) மின் இடை - மின்னலைப்போல (ஸூக்ஷமமாயும் காந்தியுள்ளதாயுமிருக்கிற) இடுப்பை உடையவர்களும், நின் அருள் சூடுவார் - உன்னுடைய கிருபையைத் தலையால் வஹிக்கத் தகுந்தவர்களுமான, மடவார் முன்பு - ஸ்திரிகளுக்கு முன்னுலே, அது - நீ செய்கிற வேலையை (ப்பார்த்து), நான், அஞ்சுவன் - (உனக்கு என்ன வருமோ என்று) பயப்படுகிறேன், மன் உடை - ஸ்திரமாயிருப்பதையுடைய, இலங்கை அரண் - இலங்கையாகிய கோட்டையை, காய்ந்த - எரித்த, மாயவனே - வஞ்சனையுள்ளவனே! உன்னுடைய, சுண்டாயம் - (உன் பிரயோஜநத்துக்காக செய்யும்) லீலையை, நான், அறிவன - அறிவேன், இனி - இதை நான் அறிந்தபின்பு, அதுகொண்டு செய்வது என - அதைக் கொண்டு செய்யத்தகுந்தது எது? என்னுடைய, பந்தும் கழலும் - பந்தையும் கழற்காயையும், நம்பி!, தந்து போகு - கொடுத்துவிட்டுப் போ.

(கருத்து) நீ எடுத்துக்கொண்டிருக்கிற பந்தும் கழலும் அழகுள்ளவர்களும் உன்னுடைய கிருபைக்கு விஷயமானவர்களுமான கோபிகைகளுடைய பந்தும் கழலுமன்று; என்னுடையவைகள்.

கண்ணன் :—ஆனுல் என்ன ?

கோபி.—அதுவும் பொய்.

கண்ணன்—அவளிடத்தில் நான் செய்த ப்ரீதி பொய்யானால், அவளை அடைவதற்காக நான் லங்கையை அழிக்கத்துணிந்தேனோ?

கோபி:—அதுவும், என்னை உன் வசப்படுத்திக்கொள்வதற்காக நீ செய்த வஞ்சகமான வேலை. அதை நான் அறியமாட்டேனோ?

ஆகையால், நம்பி! என்னுடைய பந்தையும் கழலையும் கொடுத்துவிட்டு அவர்களிடம் போம்.

குறிப்பு (1):—"இவன் இவ்வளவு காலம் வரவில்லை. ஆகையால், என்னிடத்தில ப்ரீதி இல்லை. இவன் வேறு கோபிகளுடன் சேர்ந்து, பிறகு பிரிந்து, அந்த வருத்தம் தாங்காமல், என்னுடைய பந்தையும் கழலையும் அவர்களுடையனவாக எண்ணி, அவைகளைக் கண்ணில் ஒத்திக்கொள்ளுகிறான்" என்று நினைத்து, இவனுக்கு அப்படிப் ப்ரியம் போவதற்காக "இவைகள் அவர்களுடையவைகள் அல்ல; என்னுடையவைகள்." என்று சொல்லுகிறாள்.

(2) 'மின்னிடை' என்பதால், அவர்களுடைய அழகும், "மடவார்" என்பதால் அவர்கள் பவ்யர்களாய் (அவனுக்கு உட்பட்டவர்களாய்) இருக்கும் குணமும் சொல்லப்படுகின்றன. இவனை அவர்கள் தம் வசமாக்கிக்கொண்டதற்குக் காரணம், அளவில்லாத அவர்களுடைய அழகும் குணங்களும் என்பது கருத்து.

(3) பந்தையும் கழல்களையும் உன்னிடத்தில் ப்ரீதியினாலேயே எடுக்கிறேன் என்றன்றோ அவன் பதில் சொல்லவேண்டியது? அப்படிச் சொல்லாமல், அவள் சொன்னதை ஒப்புக்கொண்டதுபோல் பேசினதற்குக் கருத்து—அவள் மேன்மேல் சொல்லும் வார்த்தைகளைக் கேட்கவேண்டுமென்கிற ஆசையாலே அப்படிச்சொன்னான் என்பது.

(4) பந்தையும் கழலையும் எடுத்த வேலையை "இது" என்று சொல்லவேண்டுமே, "அது" என்று சொல்லலாமா? என்றால், அவனைப் பார்க்காமல், முகத்தைத் திருப்பிக்கொண்டு சொன்னபடி.

(5) "நான் அறிவன்" என்பதற்கு நான் ஸீதையைப் போலல்ல, உன் வஞ்சனையை அறிந்தவள் என்பது கருத்து.

(6) "நம்பி" என்பதற்கு குணங்கள் நிறைந்தவன் என்பது பொருள். இந்தச் சொல்லால், மூன்றால் பார்க்கப்படாதவனும், கௌரவம் பண்ணத்தகுந்தவனுமானவனைச் சொல்லுவது வழக்கம். இந்தச் சொல்லை இங்கே சொல்லுவதாலே அவனிடத்தில் தனக்கு உறவில்லை என்பது காட்டப்படுகிறது இந்த அர்த்தமானது "என்னுடைய" என்கிற சொல்லாலும் கிடைக்கிறது. உறவுள்ளவனிடத்தில் 'என்னது உன்னது' என்று பிரித்துச் சொல்லுகிறதில்லை. பிரித்துச் சொல்லுவதாலே உறவில்லை என்பது விளங்குகிறது.

(7) 'பந்தும் கழலும்' என்கிற சொற்கள் ஆழ்வாருடைய உயிரையும், ஐந்து இந்திரியங்களையும் காட்டுகின்றன. 'அவைகளைத் தந்து போ' என்பதற்கு உன்னை அடையாவிட்டால் பயனற்ற உடம்பும் இந்திரியங்களும் போதும் என்பது கருத்து. (1)

---

அவ—நாயகியினுடைய பேச்சு அமிருதவாஷர்போல் கண்ணனுக்கு இனியதாயிருந்தது. அதனால் அவன் பிறைந்தது. அவனுடைய திருக்கண்களிலும் திருப்பவளத்திலும் ஒரு புதிய அழகு உண்டாயிற்று. அதைப்பார்த்து கோபி பேசுகிறாள் :—

போகுநம்பீ யுன்றமரை புரைகண் ணிணையுஞ்செவ்வாய் முறுவலும்
ஆகுலங்கள் செய்யவழி தற்கேநோற் றோமேயாம்
தோகைமா மயிலாக ணின்னருள் சூடுவார் செவியோசை
ஆகள் போகவிட்டுக் குழலூது போயிருந்தே. [வைத்தேழ

(ப - ரை) உன் - உன்னுடைய, தாமரை புரை கண் இணையும் - தாமரைப் பூவைப்போன்ற இரண்டு கண்களும், செவ்வாய் முறுவலும் - சிவந்த திருப்பவளத்திலிருக்கும் புந்தஹாஸமும், ஆகுலங்கள் செய்ய - (எங்களுக்குத்) துக்கங்களை உண்டுபண்ணவும், அழிதற்கே-(அதினாலே) தளர்ந்துபோவதற்கும். யாம் - நாங்கள், நோற்றோம் - (முன்னாலே) கர்மங்களைச் செய்தோம். தோகை மா மயிலார்கள் - தோகையையுடைய பெருமையுடைய

மயில்போன்றவர்களானகோபிகள், நின் அருள் - உங் கிருபை யை, சூடுவார் - தலையாலே வஹிப்பர்கள். நம்பீ ! போகு - அவர் களிடம் போ, ஓசை - புல்லாங்குழலின் ஓசையை, செவி - தங் கள் காதுகளில், வைத்து - கவனமாகக கேட்டு, எழ - எழும்படி, (எழுந்து உன்னிடம் ஓடிவரும்படி,) ஆக்கள் - மாடுகளை, போக விட்டு, போய்இருந்து - அவர்கள் வரக்கூடிய இடத்திலிருந்து, குழல் ஊது - வேணுகாநம் பண்ணு.

(கருத்து) "உன்னுடைய தாமரைப் பூப்போன்ற இரண்டு திருக்கண்களிலும், உன்னுடைய சிவந்த திருப்பவளத்திலிருக்கும் மந்தஹாஸத்திலும் ஒரு புது அழகு உண்டாயிருக்கிறது. என்னை அந்தக கோபிகளில் ஒருத்தியாக நீ எண்ணிக்கொண்டிருப்ப தால் இந்த அழகு உனக்கு உண்டாயிருக்கிறது. இந்த அழ கைப்பார்க்க ஆசைபபட்டு அது கிடைசகும்படியான பாசகியம் நான் பெறவில்லை. அது கிடைககவில்லையே எனறு துக்கப்படடுக் கொண்டு தளரும்படியான கர்மங்களையே பண்ணியிருக்கிறேன்" என்று சொல்லிக கண்ணனைப் பாராமல முகததைத திருப்பிக் கொண்டாள். கண்ணன், அவளுடைய கூந்தலின் அழகைப் பார்தது, "என்ன கூந்தல் அழகு!" என்றான். கோபி, "மயில் தோகைபோலிருககிற கூந்தலினல் ஒரு பெருமையையடைந்து, நீ கிருபையினல் கொண்டாடுவதைத் தலையால் வஹிக்கிற கோபி கள் அங்கே இருககிறார்கள். நான அவர்களல்லேன். நீ அங்கே போய் அவர்களுடன் சேர்ந்திரு" என்றாள். அவன் போக வில்லை. "அவாகளிடம் போவதறகு உபாயம் அறியாமல் நிற்கி றாயோ ? தகுந்த உபாயமிருககிறது. பசுககளை வெகுதூரம் போ கும்படிசெய்து, அவைகளைத திரும்பக்கூப்பிடுவதுபோல் வேணு காநம்பண்ணு ; அவர்கள் எப்போது நீ காநம் பண்ணுவாய் என்று கவனமாயக் காதுகளைக கொடுத்துககொண்டிருக்கிறார்கள். காநத்தைக் கேட்டவுடன எழுந்திருந்து உன்னிடம் ஓடிவரு வார்கள்" என்றாள். அவன அஙகிருந்தே குழலூத ஆரம்பித் தான். அதைப்பார்த்து, "நம்பி ! இங்கிருந்து ஊதாதே ; அவர் கள் வரககூடிய இடத்திலிருந்து ஊது ; அங்கே போ" என்றாள்,

போயிருந்து நின்புள்ளுவ மறியாத வர்க்குரை நம்பி நின்செய்ய
வாயிருங் கனியுங்கண் களும்விப ரீதமிந்நாள்
வேயிருந் தடந்தோளி ஞரித் திருவருள் பெறுவா ரெவர்கொல்
மாயிருங் கடலைக் கடைந்தபெரு மானுலே (௯)

(ப - ரை) நின புள்ளுவம் - உன்னுடைய கள்ள வார்த்தைகளை, போய் - (அவைகளை அறிந்த எங்களைவிட்டுப) போய், அறியாதவர்க்கு, இருந்து - (அவைகளையறியாதவர்களுடன் கூட) இருந்து, உரை - சொல்லு, நம்பி, நின-உன்னுடைய, செய்ய வாயும் - சிவந்த திருப்பவளமாகிய, இரும கனியும் - பெரிய கோவைப்பழமும், கண்களும், இ நாள் - இப்போது, விபரீதம் - முனபோல இல்லை, (இப்போது மிகுந்த அழகுள்ளவைகளாயிருக்கின்றன) வேய் - மூங்கிலைப்போன்ற, இரும - உருண்ட, தடம் தோளிஞர் - விசாலமான தோள்களையுடையவர்களாய், மா - பெரிய (ஆழமான), இரும் கடலை - பெரிய ஸமுத்திரத்தை, கடைந்த, பெருமாஞலே - ஸ்வாமியாலே, இ திரு அருள்-இந்த (அவர்களுடைய அழகைக்கண்டு நீ ஸந்தோஷப்படுவதாகிய) கிருபையை, பெறுவார - அடைகிறவர்கள், எவாகொல் - எவர்களோ ?

(கருதது) கண்ணன் :—நான் என ஜாதிக்குத தகுந்த விருத்தியால் வேணுகாநம் பணணுகிறேன் நீ சொலலுகிறபடி கோபிகைகளை அழைப்பதறகாக அதை நான் செய்யவிலலை உன்னைததவிர, வேறு எவளை நான அறிவேன் ? நீ என்னை “ போகு நமபி !” என்று ஏன் சொல்லுகிறாய் ?

கோபி :—உன்னுடைய இந்தக் கள்ள வார்த்தைகளை நான் அறிவேன. உன்னுடன் பழகி அவைகளை அறியாதவர்களிடம் போய், அவர்களோடுகூட இருந்து, இவைகளைச் சொல்லு; நமபி! உன்னுடைய கோவைப்பழமபோனற திருப்பவளத்திலும் திருக்கண்களிலும் ஒரு புது அழகு இப்போது உண்டாயிருக்கிறது. திருப்பாற்கடலைக கடைந்தகாலத்தில் அதிலிருந்து உண்டான பிராட்டியோடு சேர்ந்த ஸமயததிலும் உனககு இந்த அழகு உண்டாகவில்லையே ? மூங்கிலைக் காட்டிலும் அதிக அழகாய் உருண்டு விசாலமாய் இருககிற தோள்களையுடையவர்களும், அவர்

கள் அழுகைக்கண்டு, நீ ஸந்தோஷப்பட்டுக் கிருபையினால் கொண் டாடுவதை அடைகிறவர்களுமான பெண்கள் யாரோ? நானே அந்தப் பாக்கியத்தைப் பெறறவள் அல்லேன்.

குறிப்பு :—'நின் புள்ளுவம்' என்று பாட்டு ஆரம்பித்து 'பெருமானுலே' என்று முடிப்பதின் கருத்து.—முதல் இரண்டு அடிகளைக் கண்ணனைப் பார்த்துச் சொல்லிவிட்டு, முகத்தைத் திருப்பிக்கொண்டு, கடைசி இரண்டு அடிகளைத் தானாகவே தனக் குள்ளே சொல்லிக்கொள்ளுகிறாள் என்பது. அஃது அவனைப் பார்த்துச் சொன்னதன்று. (3)

---

ஆலி னீளிலை யேழுலகமுண் டன்றுநீ கிடந்தாயுன் மாயங்கள்
மேலை வானவரு மறியா ரினியெம் பரமே?
வேலி னேர்தடங் கண்ணினார்விளை யாடுசூழலைச் சூழவே நின்று
காலி மேய்க்க வல்லா யெம்மைநீ கழறேலே. (ச)

(ப - ரை) ஏழு உலகும் - ஏழு உலகங்களையும், உண்டு, அன்று - அந்தப் பிரளய காலத்தில், ஆலின - ஆலமரத்தினு டைய, நீள் இலை - நீண்டுகொண்டிருந்த இலையில், நீ, கிடந்தாய்- படுத்திருந்தாய், உன் மாயங்கள் - உன் வஞ்சனைகளை, மேலை வானவரும் - பிரம்மாதிகளுக்கும் மேலான நித்தியஸூரிகளும், அறியார் - அறியமாட்டார்கள், இனி - இப்படியிருக்கும்போது, எம் பரமே - (அறிவது) எங்களுடைய பரமோ? (எங்களால் அறியமுடியுமோ?), வேலின் நேர் தடம் கண்ணினார் - வேலைப் போன்ற விசாலமான கண்களையுடைய பெண்கள், விளையாடு - விளையாடுமிடமான, சூழலை - மண்டலத்தை (மணற்குன்றை), சூழவே நின்று - சுற்றிக்கொண்டேயிருந்து, காலி - மாடுகளை, மேய்க்க வல்லாய் - மேய்க்கச் சக்தியுள்ளவனே! எம்மை - எங் களை, நீ, கழறேல் - நாங்கள் தோல்வியடையும்படி பேசாதே.

(கருத்து) கண்ணன்—நான் தாய் தகப்பனுக்கு உட்பட்ட வனல்லவா, நான் பசு மேய்க்கப்போகவேண்டாமோ? நீ நினைக் கும்போது நான் வரக்கூடுமோ? ஆகையால், நான் வரத் தாமத மாயிற்று. அது வேறொன்றால் அன்று.

கோபி—பிரளயகாலத்தில் ஏழு உலகங்களையும், உன் வயிற்றில் வைத்துக்கொண்டு அப்போது நீண்டுகொண்டிருந்த ஒரு சின்ன ஆலிலையில் நீ படுத்துக்கொண்டிருந்தாய. இந்த ஆச்சரியமான வேலைகளைச் செய்யச்சக்தியுள்ள உனக்கு 'நான் மாடுமேய்க்கப் போயிருந்தேன்' என்று கேட்டவர்கள் நம்பும்படியாயப் பொய் சொல்லுவது ஆச்சரியமோ?

கண்ணன்—நான் பசு மேய்க்கப் போனது பொய்யோ?

கோபி—நீ மாடு மேய்ப்பதற்கு, வேலைப்போல் நீண்டு விசாலமான கண்களையுடைய பெண்கள் விளையாடுகிற மணற்குன்று தானோ இடம்? அதில் புல் இல்லையே; அதைச் சுற்றிதான் இருந்து நீ மாடுகளை மேய்க்கவேண்டுமோ? இந்தப் பொயயைச் சொல்லி எங்களை ஏமாற்றுதே.

குறிப்பு :—(1) வேல் என்கிற ஆயுதம் விரோதிகளை எப்படித் துன்பப்படுத்துமோ, அதுபோல் ஸ்திரீகளின் கண்ணும் அதைப் பார்த்த புருஷனுக்கு ஆசையையுண்டுபண்ணி, அவனைத் துன்பப்படுத்தும் என்பது இந்த உபமானத்துக்குக் கருத்து.

(2) பிரளய ஸமுத்ரத்தில் விழுவோம் என்று அறியாத சிறுபிள்ளையான நீ என்பது 'நீ' என்பதற்குக் கருத்து.

(இலக்கணம்) கழறேல் - எதிர்மறை ஏவல் வினைமுற்று. (4)

---

அவ—கோபி கண்ணனைக் குறித்து மேன்மேலும் பேசுகிற பேச்சுக்களாலே அவன் தைரியம் கொண்டு, அவளுடைய கிளிகளையும் பூவைகளையும் எடுத்துக்கொண்டு தன் திருநாமங்களைச் சொல்லும்படி செய்து, அதனால் ஆறுதலை அடைந்திருந்தான். அதைப் பார்த்து நாயகி பேசுகிறாள் :—

கழறேல் நம்பீயுன் கைதவம்மண் ணும்விண்ணும் நன்கறியுந் [திண்சக்கர
நிழறு தொல்படையா யுனக்கொன் றுணர்த்துவனுன்
மழறு தேன்மொழி யார்க ணின்னருள் சூடுவார் மனம்வாடி [நிற்கவெங்
குழறு பூவையொடுங் கிளியோடுங் குழகேலே.

(ப - ரை) நம்பீ - பூர்ணனே! கழறேல் - மங்களமாற்றும் வார்த்தைகளைச் சொல்லாதே, உன் கைதவம் - உன்னுடைய பொய்யை, மண்ணும் விண்ணும் - பூமியிலிருப்பவர்களும்

ஆகாசத்திலிருப்பவர்களும், நன்கு அறியும் - நன்றாக அறிவர்கள், திண் - வலிமையுள்ள, நிழறு - காந்தியை நாலு பக்கமும் வீசும படியான, சக்கரம் தொல் படையாய் - சக்ரமாகிய பழைய (எப்போதுமிருக்கிற) ஆயுதத்தையுடையவனே! உனக்கு ஒன்று நான் உணர்த்துவன் - உனக்கு (ஹிதமான) ஒன்றை நான் அறிவிக்கிறேன், மழறு - தழுதழுத்த, தேன் மொழியார் - இனியவைகளான சொல்லைச் சொல்லுகிறவர்களும், நின் அருள் சூடுவார்கள் - நீ கிருபையால் கொண்டாடுவதைத் தலையால் வஹிக்கிறவர்களுமான பெண்கள், மனம் வாடி நிற்க - மனம் வாடி நிற்கும் போது, எம் குழறு பூவையோடும் - நன்றாய்ப் பேசத் தெரியாத எங்களுடைய பூவையோடும், கிளியோடும், குழகேல் - விளையாடாதே.

(கருத்து) கண்ணன்—நான் சொன்னதெல்லாம் பொய்யோ? என்னிடம் பொய் இருக்கிறதோ?

கோபி—பெரியவனே! எங்களை ஏமாற்றாதே நீ பொய் சொல்லுவதைப் பூமியிலும் ஆகாசத்திலும் இருக்கிறவர்கள் நன்றாக அறிவர்கள். பாரத யுத்தத்தில ஜயத்ரதனைக் கொல்லும் போது நீ உன்னுடன் எப்போதும் கூட இருக்கிற சக்ரத்தால் ஸூர்யனை மறைத்துப் பகலை இராத்திரியாகச் செய்யவில்லையா? நான் உனக்கு ஒரு ஹிதத்தைச் சொல்லுகிறேன். அதைக் கவனமாய்க் கேள். நீ எங்களுடைய பூவையோடும் கிளியோடும் விளையாடிக்கொண்டிருந்து தாமதித்தால, உன் கிருபைக்குப் பாத்திரமாயிருக்கிற கோபிகள் மனம்வாடி நிற்பார்கள். நீ அதைக் கண்டு பொறுக்கமாட்டாய். ஆகையால், உடனே அங்கே போ. என பூவைகளுக்கும் கிளிகளுக்கும் நன்றாய்ப் பேசத் தெரியாது. அவர்களோ, தேன்போன்ற பேச்சுக்களைப் பேசுவார்கள். உன்னோடு சேர்ந்த ஸந்தோஷத்தினால தழுதழுத்து உன் நாமங்களைச் சொல்லுவார்கள். அதைக் கேட்டு லீலாரஸத்தை அநுபவிக்கலாம்.

குறிப்பு:—(1) கோபிகைகளின் பிரணயகலஹம் கண்ணன் பிருந்தாவநத்தில் இருக்கும்போது உண்டாயிருக்கவேண்டியது. ஜயத்ரதனுடைய வதம் அதைவிட்டுப்போய் வெகுகாலம் கழிந்து நடந்தது. இதை எப்படிச் சொல்லக்கூடும் என்றால், கோபிகா

*கீதையில் அவர்கள் பின்னால் வருவதை முன்னால் அறிந்து சொன்னதுபோல், இவளும் முன்னால ஜயத்ரதவதத்தை அறிந்து சொன்னாள் என்பது பரிஹாரம்.*

(2) *பூவையும் கிளிகளும் ஆழ்வார்விஷயத்தில் சிஷ்யனான மதுரகவியும், அநுகூலமான ஜனங்களும்.* (5)

---

*அவ — கண்ணன் முன்னால் இவள் கிட்டப்போகப் பயந்திருந்தான். அவளுடைய பேச்சுகளைக் கேட்டபின்பு, முன்னிலும் அதிகம் தைரியமுள்ளவனாய், அவள் ஸமீபத்திலிருந்த மரப்பாச்சியை எடுத்துக்கொண்டான். அதைப் பார்த்து நாயகி பேசுகிறாள் :—*

குழகியெங்கள் குழமணன் கொண்டு கோயின்மை செய்துகன்ம [மொன்றில்லை
பழகியா மிருப்போம் பரமேயித் திருவருள்கள்
அழகியாரிவ் வுலகமூன் றுக்குந் தேவிமை தகுவா பலருளா
கழகமேறே னம்பீ யுனக்கு மிளைதே கன்மமே. (௫)

*(ப - ரை) குழகி - விளையாடி (எங்களை வசப்படுத்திக்கொள்வதற்காக சிறுபிள்ளைகள் வேலைகளைச் செய்து), எங்கள் குழமணன் - எங்களுடைய மரப்பாச்சியை, கொண்டு - எடுத்துக் கொண்டு, கோயின்மை - செருக்கை, (நான் ஜயித்தேன் என்று எண்ணுவதை), செய்து, கன்மம் ஒன்று இல்லை - ஒருபிரயோஜநமுமில்லை, யாம் - நாங்கள், பழகியிருப்போம் - (உன் பொய்களில்) பழகியிருக்கிறோம், இ திரு அருள்கள் - நீ செய்கிற இந்த கிருபாகாரியங்கள் எல்லாம், பரமோ - எங்களுக்கு அடையத்தகுந்தவைகளோ? இ உலகம் மூன்றுக்கும் - இந்த மூன்று உலகங்களிலிருக்கிற ஸ்திரீகளைக்காட்டிலும், அழகியார் - அழகுள்ளவர்களும், தேவிமை தகுவார் - உனக்கு மனைவிகளாகத் தகுந்தவர்களுமான, பலர் உளர் - பலரிருக்கிறார்கள், நம்பீ - பூர்ணனே! கழகம்-(எங்களுடைய) கூட்டத்துக்குள்ளே, ஏறேல்- ஏறி வராதே, உனக்கும் இளைதே கன்மம் - இஃது உனக்கும் தகாத சிறுபிள்ளை வேலை.*

(கருத்து) கோபி—எங்களை வசப்படுத்திக்கொள்வதற்காக சிறுபிள்ளைகள் வேலைகளைச்செய்து, எங்கள் மரப்பாச்சியை எடுத்துக்கொண்டு, இவர்களை ஜயித்தோம் என்று எண்ணி உனக்கு ஒரு பிரயோஜநமுமில்லை.

கண்ணன்—என் ஆறுதலுக்காக இதைச் செய்கிறேன்.

கோபி—இது பொய்; உன்னுடைய பொய்களை நாங்கள் அடிக்கடி அறியவில்லையோ? நீ செய்கிற இந்தப் பிரீதி காரியங்களுக்கு விஷயமாயிருக்க நாங்கள் தகுந்தவர்களோ?

கண்ணன்—உன்னைத்தவிர, நான் ஆசைப்படத்தகுந்தவர் வேறு உண்டோ?

கோபி—மூன்று உலகங்களிலுமிருக்கும் ஸ்திரீகளைக் காட்டிலும் அதி அழகுள்ளவர்களான உனக்குத் தேவியாயிருக்கத் தகுந்தவர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்களே; அவர்களிடம் போ (இவள் இப்படிச் சொன்னபோதிலும் கண்ணன் அவர்களுடைய கூட்டத்திலே புகுந்தான். அதைப் பார்த்து) எங்கள் கூட்டத்திற்குள் வந்து ஏறுகே. நீயோ பெரியவன்; நாங்களோ சிறு பெண்கள்.

கண்ணன்—'தீமை செய்யும் சிரீதரன்' என்று எனக்குப் பெயரில்லையோ? நாலு பெண்கள் இருக்கிறவிடத்தில் தீமை செய்வது எனக்கு ஸ்வபாவமல்லவா?

கோபி—நீயோ ஸர்வேச்வரன், நாங்கள் இடைப்பெண்கள்; எங்களுக்குள்ளே வருவது உனக்குத் தகாது. அது சிறுபிள்ளை வேலை.

குறிப்பு—ஸர்வேச்வரனாயிருந்த எம்பெருமான் இடைப்பெண்கள் கூட்டத்துக்குள்ளே நுழைய, அவர்கள் அதைத் தடுக்க, உள்ளே போகமுடியாமலும், அவர்களிடத்தில் ஆசையாலே அதைவிட்டு வெளியே போகமுடியாமலும் அவன் தடுமாறுவது, அவனுடைய உயர்ந்த ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டுகிறது. இதை வியாஸர் முதலான ருஷிகள் புஸ்தகத்தில் எழுதிவிட்டுப் போயிருக்கிறார்களே. இதை உள்ளபடி அறிந்து எவர்கள் கொண்டாடுவார்களோ என்பது அவர்கள் கருத்து—என்று பட்டர் அருளிச்செய்தாராம். (6)

அவ—'கழகமேறேல்' என்று கோபி கண்ணனைத் தடுக்க, அவன் வேறொன்றையும் செய்யக்காணவில்லை. அவள் விளையாடுகிற பொம்மையை எடுக்க யத்தனப்பட, அவளும் தோழிகளும் ஓடிப்போய் அதை எடுத்துக்கொள்ள, அதை அவன் அவர்கள் கையிலிருந்து பிடுங்கினன். இதைப் பார்த்து நாயகி சொல்கிறாள் :—

கன்மமன் றெங்கள்கையிற்பாவை பறிப்பது கடல்ஞால முண்டிட்ட
நின்மலா நெடியா யுனக்கேலும் பிழைபிழையே
வன்மமே சொல்லியெம்மை நீவிளை யாடுதி யதுகேட்கி லென்னைமார்
தன்மபாவ மென்ன ரொருநான்று தடிபிணக்கே. (எ)

(ப - ரை) எங்கள் கையில், பாவை - இருக்கும் பொம்மையை, பறிப்பது-பிடுங்குவது, கன்மம் அன்று-(நீ செய்யத்தகுந்த) வேலையன்று, கடல் ஞாலம் - ஸமுத்திரத்தாலே சூழப்பட்ட பூமியை, உண்டிட்ட - சாப்பிட்ட, நின்மலா - தோஷமில்லாதவனே! நெடியாய் - பெரியவனே! உனக்கேலும் - உனக்குங்கூட, பிழை பிழையே - (நீ செய்கிற குற்றமான இந்த வேலை) உனக்குக் குற்றத்தையேயுண்டுபண்ணும், (அப்போது அவன்முன்பு அவளுடன் சேர்ந்திருக்கும்போது நடந்த சில விஷயங்களைச் சொல்ல), வன்மமே - மர்ம வார்த்தைகளையே, எம்மை சொல்லி-எங்களைப் பார்த்துச் சொல்லி, நீ விளையாடுதி- நீ விளையாடுகிறாய், அது - அதை, என் ஐமார்கள் - என் தமையனர்கள், கேட்கில் - கேட்டால், தன்மம் பாவம் என்னர் - இது தர்மம் இது பாபம் என்று பாரக்கமாட்டார்கள், (அவன் அவர்களுக்கு இது தெரியாதே என்று சொல்ல) ஒரு நான்று - என்றைக்காவது ஒருநாள், தடிபிணக்கே - தடியால் கலஹமுண்டாகும்.

(கருத்து) கோபி—எங்கள் கையிலிருக்கும் பொம்மையை நீ பிடுங்குவது உனக்குத் தகுந்த வேலையன்று. ஸமுத்திரத்தாலே சூழப்பட்ட பூமியைப் பிரளயகாலத்தில் நீ வயிற்றில் வைத்துக்கொண்டு ரக்ஷித்தாய். இதை ஒரு பிரயோஜனத்துக்காகவும் செய்யவில்லை. இதை ஒரு பெரிய குணமாக எல்லாரும் கொண்டாடுகிறார்கள். நீ இப்போது செய்கிற வேலையோ குற்றத்தை உண்டுபண்ணுவது. அந்தக்குணத்தைச் சொல்லுவது

போலவே, இந்த தோஷத்தையும் சொல்லுவார்கள். அப்போது அவன், அவளுடன் முன்னாலே சேர்ந்த காலத்தில் நடந்த சில விஷயங்களைச் சொல்ல; மர்மங்களான இந்த விஷயங்களை எங்களிடம் சொல்லி விளையாடுகிறாய். இதை என் தமையன்கள் அறிந்தால் இது கூடும் கூடாது என்று பார்க்காமல் உன்னை ஒருநாளும் கண்ணாலே பார்க்கமாட்டார்கள். கண்ணன் "இது அவர்களுக்கு எப்படித் தெரியும்?" என்று சொல்ல, கோபி— "என்றைக்காவது ஒருநாள் தெரியாதா? அப்போது கலஹமுண்டாகி தடியையும் எடுத்துக்கொள்ளுவார்கள்" என்று சொன்னாள்.

குறிப்பு:—(1) கண்ணன் உண்மையாக ஒரு மர்மமானதைச் சொன்னான். அதை அவள் ஒப்புக்கொள்ளாமல், விளையாட்டு வார்த்தையாகச் சொல்லுகிறாள்.

(2) 'ஐமார்' என்பதற்கு இருபத்துநாலாயிரப்படியில் பதி ஸஹோதரிகள் என்று அர்த்தம் எழுதியிருக்கிறது. பதி ஸஹோதரிகள் என்றால நாத்தனார்கள். ஒன்பதினாயிரத்தில் ஜ்ராதர: என்று பொருள் எழுதியிருக்கிறது. இதின்படி உரை எழுதப்பட்டது. பதினொண்ணாயிரத்தின்படி, ஐமார்கள் என்றவர்கள் 'நின அருள் சூடுவார்' என்று சொல்லப்பட்டவர்கள். அப்போது கருத்து—உனக்கு என்னிடத்தில் உண்மையான ஆசை இல்லை; விளையாட்டுப் பேச்சுக்களையே பேசுகிறாய் என்று அறியாமல அவர்கள் உனக்கு என்னிடத்தில் உண்மையில் ப்ரீதி இருந்து என்னுடன சேர்ந்தாய என்று எண்ணுவார்கள். பிறகு, நி அவர்களிடம் போகும்போது உன்னை அவர்கள் கண்ணாலே பார்க்கமாட்டார்கள்—என்பது.

'என்னைமார்' என்பது ஒரு சொல்லாகக்கொண்டு தந்தைமாரென்று பொருள்கொள்ளலாம். அல்லது என் அன்னைமார் என்பது என்னை-மார் என்று மரூஉ ஆகவும் கொள்ளலாம்; அதற்கு என் அன்னைமார் என்பது பொருள்.

(இ - ம்) விளையாடுதி - முன்னிலை வினைமுற்று விளையாடுகிறாய் என்று பொருள், 'எனிலும்' என்பது 'எனும்' என்றாயிற்று.

(7)

அவ—கண்ணன் இவ்விதமான வேலைகளைச் செய்து நம்மை இங்கே விளையாட விடமாட்டான், ஆகையால், வேறு இடத்துக்குப் போவோம் என்று நாயகியும் தோழிகளும் புறப்பட, அவன் அவர்களைப் போகவொட்டாமல் வளைத்துக்கொண்டான். அப்போது நாயகி பேசுகிறாள்.—

பிணக்கி யாவையும் யாவரும் பிழையாமற் பேதித்தும் பேதியாததோர்
கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிஞான மூர்த்தியினாய்
இணக்கியெம்மை யெந்தோழி மார்விளை யாடப்போதுமி னென்னப்
உணக்கிநீ வளைந்தாலென் சொல்லாருக வாதவரே. [போந்தோமை

(ப - ரை) யாவையும் - அறிவில்லாத எல்லா வஸ்துக்களையும், யாவரும் - அறிவுள்ள ஆத்மாக்களையும், பிணக்கி - ஒன்றாகப் பண்ணி, பிழையாமல் - தப்பாமல் (ஆத்மாக்களுடைய கர்மங்கள் ஒன்றோடொன்று கலக்காமல்), பேதித்தும் - (ஸிருஷ்டிகாலத்தில் அவர்களை) வெவ்வேறாகப் பண்ணினாலும், பேதியாதது - வேறுபடாததான (அவைகளுக்கு உண்டாகும் தோஷம் உன்னிடம்) வராதபடி செய்கிறதான, ஓர் - விலக்ஷணமான, கணக்கு இல் - அளவில்லாத, கீர்த்தி வெள்ளம்-கீர்த்திப் பிரவாஹத்தையுடைய, கதிர்-(உன்னுடைய ஸ்வரூபத்துக்கு) காந்திபோலிருக்கிற, ஞான மூர்த்தியினாய் - ஞானத்தை இயற்கையாயுள்ளவனே! எம் தோழிமார் - எங்களுடைய தோழிகள், எம்மை - எனளை, இணக்கி - சேர்த்துக்கொண்டு, விளையாட, போதுமின் என்ன - வாருங்கள் என்று சொல்லுகையாலே, போந்தோமை - போகிற எங்களை, உணக்கி - உலரும்படி செய்து (உன அழகு முதலானவைகளைக் காட்டி வருத்தப்படுத்தி), நீ வளைத்தால், உகவாதவர் - உன்னிடத்தில் பிரீதியில்லாதவர்கள், என் சொல்லார் - என்ன குறறத்தைச் சொலலமாட்டார்கள்?

(கருத்து) கோபி—பிரளயகாலம் வந்தபோது, அறிவில்லாத எல்லா வஸ்துக்களையும், அறிவுள்ள எல்லா ஆத்மாக்களையும், அவைகளுக்குப் பெயர்களும் ரூபங்களும் இல்லாதபடி ஒன்றாகச் செய்தாய்; பிறகு, ஸிருஷ்டிகாலம் வந்தபோது, அவரவர்கள் கர்மத்துக்குத் தகுந்தபடி அவரவர்களுக்குப் பெயர்களையும ரூபங்களையும் கொடுத்து உலகத்தை உண்டுபண்ணினாய். அவைகளுக்

குள்ளே நீ ஆத்மாவாயிருந்தும் இந்த ஸிருஷ்டியினால் அறிவில்லாதவைகளுக்கு உண்டான வேறுபாடுகளும், அறிவுள்ளவர்களுக்கு உண்டாகும் ஜ்ஞானக்குறைவுகளுமாகிய தோஷங்கள் உன்னைத் தொடவில்லை. இப்படிச் செய்ததினால் அளவில்லாத கீர்த்திப் பிரவாஹத்தையுடையவனாய், இப்படிச் செய்த ஸங்கல்பமாகிய ஜ்ஞானத்தை உன் ஸ்வரூபத்துக்கு இயற்கையான பிரபையாக உடையவனாயிருக்கிறாய் என தோழிகள் என்னைச் சேர்த்துக்கொண்டு 'வேறிடத்துக்குப்போய் விளையாடுவோமவா' என்று சொல்ல, நானும் அவர்களும் அப்படியே போய்க்கொண்டிருக்கும்போது எங்களைப் போகவொட்டாமல் வளைக்கிறாய். நீ இவ்விடத்தில் இருக்கிறதை அறியாமல் விளையாட வந்த எங்களை நீ உன அழகு முதலான குணங்களைக் காண்பித்து, எங்களை வளைத்தால், உன்னிடத்தில் பிரீதியில்லாதவர்கள் என்ன சொல்லமாட்டார்கள்? "இவனோ ஸர்வேச்வரன், அவர்களோ தாழ்ந்த இடைப்பெண்கள் அவர்களுடன் சேர்ந்துவிட்டானே, இப்படிச் சேருவது அவனுக்குத் தகுமோ? தகாததான செய்கையைச் செய்கிறானே" என்று உன்னிடத்தில் பழியைச் சொல்லுவார்கள்.

குறிப்பு :—ஆழ்வாரைப்போல எம்பெருமானுடைய அநுபவத்தில் ருசியுள்ள பாகவதர்களை, இந்தப் பாட்டில் தோழிமார்கள் என்று சொன்னது.

(இ - ம்) பேதியாதது - போந்தோமை - வினையால் அணையும் பெயர்கள் போதுமினோ - பன்மை ஏவல்வினைமுற்று. சொல்லார் - எதிர்மறை வினைமுற்று. (8)

---

அவ—கண்ணன் தங்களைப் போகவொட்டாமல வளைக்கும்போது, கோபி, அவன் முகத்தைப் பார்க்காமல் கொஞ்சகாலம் பேசாமல் இருந்தாள். பிறகு இப்படி இருப்பதும் பிசகு. அவன் "நான தன்னை நினைத்துக்கொண்டிருக்கிறேன்" என்று எண்ணுவன். அப்படி எண்ணாமலிருப்பதற்காக வேறு வேலைகளைச் செய்துகொண்டிருப்பதாகக் காட்டுகிறேன் என்று தீர்மானம் செய்து, தோழிகளுடன் மணல்களைக்கொண்டு சின்ன வீடுகளைக் கட்டி, சிறிய பாத்திரத்தில் சமையல் செய்துகொண்டிருந்தாள். அவன் "இவள் என்னைப் பார்க்காவிட்டால் நான் பிழைத்திருக்க

முடியாது. எப்படியாவது அவன் என்னைப் பார்க்கவேண்டும்'' என்று எண்ணி, அவைகளைத் தன் திருவடிகளாலே கலைத்து விட்டான். அப்போது, கோபி கோபித்துக்கொண்டு அவன் முகத்தைப் பார்த்துப் பேசுகிறாள்.—

உகவையா னெஞ்ச முள்ளுருகி யுன்றாமரைத் தடங்கண் விழிகளின்
அகவலைப் படுப்பா னழித்தாயுன் றிருவடியால்
தகவுசெய் திலையெங்கள் சிற்றிலும் யாமடு சிறுசோறுங் கண்டுநின்
முகவொளி திகழ முறுவல்செய்து நின்றிலையே. (௯)

(ப - ரை) உகவையால் - உன்னிடத்தில் பிரீதியால, நெஞ்சம - எங்களுடைய மனது, உள் உருகி - உள்ளும்கூட உருகி, உன் - உன்னுடைய, தாமரை தடம கண்-தாமரைக்குளம்போல் (குளிர்ந்து விசாலமாய் அழகாயிருக்கிற) கண்களையுடைய, விழி - பார்வையாகிற, வலை - வலையிலே, அகப்படுவான் - அகப்படும்படி செய்வதற்காக, எங்கள் சிற்றிலும - (விளையாட்டுக்காக மணல்களாலே) நாங்கள் கட்டின வீட்டையும, யாம் அடும சிறு சோறும்- நாங்கள் சின்ன பாத்திரங்களில் சமைக்கிற சோற்றையும், உன் திருவடியால் அழித்தாய், கண்டு-(எங்களுடைய விளையாட்டைப்) பார்த்துக்கொண்டு, நின் முகம ஒளி திகழ - உன்னுடைய முகத்தின் காந்தி ஸந்தோஷத்தாலே விளங்கும்படி, முறுவல் செய்து- மந்தஹாஸம் பண்ணிக்கொண்டு, நின்றிலையே - நிற்கவில்லையே, தகவு - கிருபையை, செய்திலை - நீ செய்யவில்லை.

(கருத்து) கோபி—நாங்கள் விளையாட்டுக்காக மணலில சின்ன வீடுகளைக் கட்டிக்கொண்டும், சின்ன பாத்திரங்களில் சோற்றைச் சமைத்துக்கொண்டுமிருந்தோம். இவைகளை உன் திருவடியால் கலைத்துவிட்டாய். இதை எதற்காகச் செய்தாய். நாங்கள் உன்னிடத்தில் பிரீதியினால் மனது முழுவதுமுருகி, தாமரைக்குளம் போலிருக்கிற உன்னுடைய திருக்கண்களின் பார்வையாகிற வலையில அகப்படவேண்டுமென்றுதானே; நாங்கள் விளையாடுவதைப் பார்த்துக்கொண்டு ஸந்தோஷத்தாலே உன்னுடைய முகத்தின் காந்தி விளங்கும்படி மந்தஹாஸம் பண்ணிக்கொண்டு நீ நிற்கவில்லை. நீ என்னுடன் சேருவதும் பிரிவதுமாயிருக்கையால், நீ வந்தாலும் உன்னைப் பார்க்கிறதில்லை என்று நான் செய்துகொண்ட தீர்மானத்தைக் கிருபையில்லாமல் அழித்துவிட்டாய்.

குறிப்பு :—(1) உனக்கு உலகம் சிற்றில்; அதை ஸங்கல்பத்தாலே அழிக்கிறாய் எங்களுடைய சிற்றிலை திருவடியாலேயே அழிக்கவேண்டுமோ என்பது கருத்து.

(2) ஆழ்வார் தம்முடைய தீர்மானத்தை எம்பெருமான் அழித்துவிட்டான் என்று மனதில் எண்ணினார் இதை வெளியில் காட்டாமல் கிருபையில்லாமல் சிற்றிலை அழித்தாய் என்று சொல்லுகிறார்.

(3) ஆழ்வாருக்கு உண்டாயிருந்த தீர்மானம் போய்விட்டதற்கு என்ன அடையாளம் என்றால், அவன் செய்ததற்காக அதிசமாகக் கோபித்துக்கொண்டு பேசாமலிருக்கவேண்டுமே. அப்படிச் செய்யாமல் அவனுடன் பேசினார். 'உன் முகவொளி திகழ முறுவல் செய்து' என்று அவன் அழகில் தனக்கு ஆசையிருப்பது தோன்றும்படி அதை வர்ணித்தார். இவைகளே அடையாளங்கள்.

(4) ஆழ்வார் எம்பெருமான் தம்மைக் கவனிக்கவில்லை. இனிமேல் இந்த உடம்பையும் இந்திரியங்களையும்கொண்டு முன்போல ஸம்ஸாரியாய்த் திரிவேன் என்று எண்ணினார். அவன் தன் திருமேனியழகைக் காட்டி, அந்த எண்ணத்தை அவர் விடும்படி செய்தான் என்பது பாட்டின் தாத்பரியம்.

(இ - ம) அகப்படுவான் - அகப்பட; வினையெச்சம். அழிப்பாய், செய்திலை, நின்றிலை - இவைகள் முன்னிலை ஒருமை வினைமுற்றுக்கள். (9)

---

அவ—கோபி, தம்முடைய சிற்றிலைக் கலைத்தபோது அவனைத் திருவடிமுதல் திருமுடிவரையில் பார்த்தாள். அவன் தம்மை விட்டுப்பிரிந்து வருத்தப்பட்டுத் தம்முடன் சேருவதற்குப் பிரயத்நப்பட்டதையும் பார்த்தாள். அவளுக்கு உண்டாயிருந்த கோபம் போய் அவனைப் பார்த்துப் பேசுகிறாள் :—

நின்றிலங்கு முடியினா யிருபத் தோர்கா லரசுகளைகட்ட
வென்றிநீண் மழுவா வியன்ஞால முன்படைத்தாய்
இன்றிவ்வா யாகுலத்தை வீய்யத் தோன்றிய கருமாணிக் கச்சுடர்
நின்றன்னை னலிவேபடு வோமென்று மாய்ச்சியோமே. (௧0)

(ப - ரை) நின்று - நிலையாயிருந்து, இலங்கு - விளங்குகிற, முடியினாய் - கிரீடத்தையுடையவனே! இருபத்து ஓர் கால் - இருபத்தொரு தடவை, அரசு - ராஜாக்களை, களைகட்ட - வேரொடு நாசம் பண்ணின, வென்றி - ஜயத்தையுடைய, நீள் மழுவாய் - நீண்ட கோடாலியையுடையவனே! வியன் - விஸ்தாரமான, ஞாலம் - பூமியை, முன் - ஸிருஷ்டி காலத்தில், படைத்தாய் - உண்டுபண்ணினவனே! இன்று - இப்போது, இ ஆயர் குலத்தை - இந்தக் கோபர்கள் குலத்தை, வீடு உய்ய - வீட்டில் உள்ள எல்லாருடன் நல்ல கதியடையும்படி, தோன்றிய - அவதாரம் செய்த, கருமாணிக்கம் சுடர் - கருமாணிக்கத்தின் காந்தியையுடையவனே! ஆய்ச்சியோம் - இடைப்பெண்களாகிய நாங்கள், என்றும் - எப்போதும், நலிவே படுவோம் - வருத்தத்தையே அநுபவிக்கிறோம்.

(கருத்து) நிலையாயிருந்து விளங்குகிற கிரீடத்தையுடையவனும், கருமாணிக்கம்போன்ற காந்தியையுடையவனுமானவனே! பரசுராமனுக்குள் அநுபிரவேசம் பண்ணி, ஜயத்தையுடைய நீண்ட கோடாலியாலே பூமிக்குக் களைகள்போலேயிருந்த அஸுரர்களாகிய ராஜாக்களை இருபத்தொரு தடவை நாசம் செய்தாய். இப்படிப்பட்ட சௌரியத்தையுடைய உனக்கு என்னுடைய கோபத்தைப் போக்கினது ஓர் ஆச்சரியமா? பிரளய காலத்தில் ஜீவன்கள் அறிவில்லாதவர்கள்போல் இருந்ததைப் பார்த்து, விஸ்தாரமான இந்தப் பூமியைக் கருணையினால் உண்டு பண்ணினாய், இப்போது இடையர்களாகிய நாங்கள் எங்களைச் சேர்ந்த எல்லாரோடும் நல்ல கதியை அடையும்படி வாத்ஸல்யத்தாலே கிருஷ்ணனாய் அவதாரம் செய்தாய். இவ்விதமான உன் அழகையும் சௌரியத்தையும் கருணையையும் வாத்ஸல்யத்தையும் அநுபவித்து, உன்னைப் பிரிந்து நாங்கள் வருத்தப்படுகிறோம். இப்படி வருத்தப்படுகிறது ஒரு தடவையன்று. சேருவதும் பிரிவதுமாயிருக்கிறது. இந்த வருத்தத்தை நீ அறியவில்லையா? (10)

ஆய்ச்சியா கியவன்னை யாலன்று வெண்ணெய்வார்த் தையுள்சீற்ற
கூத்தவப் பன்றன்னைக் குருகூர்ச் சடகோபன் [முண்டழு
ஏத்திய தமிழ்மாலை யாயிரத் துளிவையு மோர்பத் திசையோடு
நாத்தன்னு னவிலவுரைப் பார்க்கில்லை நல்குரவே. (கக)

(ப - ரை) ஆய்ச்சியாகிய - இடைச்சியாகிய, அன்னையால் - தாயாகிய யசோதையாலே, அன்று-முற்காலத்திலே, வெண்ணெய் வார்த்தையுள் - வெண்ணெயைத் திருடினான் என்ற பேச்சுக் கிளம்பினபோது, சீற்றம்-கோபத்தை (தாயாருடைய கோபத்தின் வேலையாகிய அதட்டுவதை), உண்டு - பெற்றுக்கொண்டு, அழு கூத்த - அழுது கூத்தாடின, அப்பன்தன்னை-மிகுந்த உபகாரம பண்ணின கண்ணனை, குருகூர் சடகோபன், ஏத்திய - ஸ்தோத் திரம் பண்ணின, தமிழ மாலை ஆயிரத்துள் - ஆயிரம் தமிழ்ப் பாட்டுக்களுக்குள்ளே, ஓர் - ஒப்பில்லாத, இவை பத்தையும் - இந்தப் பத்துப் பாட்டுகளையும், இசையோடு - கானத்தோடு, நாத்தனால் - (மனதில் படாமலபோனபோதிலும) நாக்கினலா வது, நவில உரைப்பார்க்கு - (எல்லாருக்கும) பிரீதியுண்டாகும் படி உரக்கச்சொல்லச் சக்தியுள்ளவர்களுக்கு, நல் குரவு - ஏழைத் தனம் (எம்பெருமானை அநுபவிப்பதில்லாமையாகிய) ஏழைமைத் தனம், இல்லை.

(கருத்து) பிருந்தாவநத்தில் கண்ணன் எழுந்தருளியிருக் கும்போது, அவன வெண்ணெயைத் திருடினன் என்று பேச் சுக் கிளம்பினபோது, அவன் தாயாகிய யசோதை கோபித்துக் கொண்டு அதட்டினதைப் பார்த்து, தான அழுது தோப்புக் கரணம போட்டு அவள் கோபத்தைத் தணித்தான். அதுபோல் தன்னைவிட்டுப பிரிந்து வருத்தப்பட்டுக் கோபித்துக்கொண்டு இருந்த ஆழ்வார், அவன் தம்மைவிட்டுப் பிரிந்து அவனுக்கு அதைபபொறுக்கமாட்டாமல் உண்டான தளர்ச்சியைப் பார்த்து ஸந்தோஷப்பட்டு கோபத்தை விட்டார். இப்படிப்பட்ட அப் பனைக் குறித்து, ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட் டுக்களைக் கானத்துடன் உயர்ந்த குரலோடு சொல்லச் சக்தியுள்ள வர்களுக்கு, எம்பெருமான் கிட்ட இருக்கச்செய்தே தாம் முகத் தைத் திருப்பிக்கொண்டு பட்ட பாட்டை அநுபவிப்பதாகிய

ஏழைத்தனமில்லை இவைகளின் கருத்தை அறிந்து, பாட்டுக்களைப் பாடவேண்டியதில்லை நாக்கினால்மட்டும் பாடினால் போதும்.

குறிப்பு :—(1) 'ஆய்ச்சியாகிய அன்னை' என்பதற்கு, பெற்ற தாயான தேவகியன்று; வளர்த்த தாயான யசோதை. அவள் பெற்றுவிட்டாள்; இவள் அருமுதல அவனை வளர்த்து வந்தாள். ஆகையால், இவளுக்குக் கண்ணனிடத்தில் மிகுந்த அன்பு இருந்தது. ஆகையால் அவள் கோபத்தைப் பொறுக்க முடியவில்லை என்பது கருத்து.

(2) தோப்புக்கரணம் போட்டதும் அழகாயிருந்தபடியால் அதை 'கூத்து' என்றார். (11)

---

பூர்ணத்வாத் கோபநாரீஜநஸஹ்ருதயதயா க்ஷீரஸிந்து-
ப்ரமாதாத் ந்யக்ரோதஸ்வாபயோகாத் ப்ரஹரணவஹநாத் ஸ்ரீஸ-
[illegible] நிர்தோஷத்வாத் [illegible]
[illegible] ஸ்வயமபிஸரதீத்யாஹ க்ருஷ்ணம்
ஷடாரி:। ।௭௧।

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் ஆச்ரிதர்களிடத்தில் தானே வருகிறான் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன —(1) வேண்டியவைகளெல்லாம் நிறைந்தவனாயிருப்பது; (2) கோபிகளாகிய பெண்களுக்கு ஸ்நேகனாயிருந்தது; (3) திருப்பாற்கடலைக் கடைந்தது; (4) ஆலிலையில் படுத்துக்கொண்டிருந்தது; (5) சக்கரத்தினால் அழகுள்ளவனாயிருப்பது; (6) லக்ஷ்மியும் பூமியும் மனைவியாயிருப்பது; (7) தோஷமில்லாமல் பெரியவனாயிருப்பது; (8) அளவில்லாத கீர்த்தியுள்ளவனாயிருப்பது; (9) ஆச்ரிதர்களை வசப்படுத்திக்கொள்ளும் திருக்கண்கள் உள்ளவனாயிருப்பது; (10) மோக்ஷாநுபவத்தைக் கொடுக்க ஆசைப்படுவது. (71)

---

## மூன்றாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் எம்பெருமான் வந்தாலும் அவனுடன் சேருகிறதில்லையென்று தீர்மானம் செய்துகொண்டிருந்த ஆழ்வார், அவனை நன்றாகப் பார்த்தபோது, அவருடைய கோபம் போய்விட்டது. அவனுடன் சேர்ந்த ஸந்தோஷத்தாலே இனிமேல் என்னைவிட்டுப் பிரியக்கூடாதென்று அவனிடம் பிரார்த்திக்கவேண்டியதை மறந்து, அவன் தம்முடன் திருவிண்ணகரில் சேர்ந்தபடியையும், அவன் ஸர்வேச்வரனாயிருப்பதையும், ஒருதோஷமுமில்லாமல் எல்லா நல்ல குணங்களும் உள்ளவனாயிருப்பதையும் இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார் :—

( கலித்துறை.)

நல்குரவுஞ் செல்வும் நரகுஞ் சுவர்க்க மூமாய்
வெல்பகையு நட்பும் விடமு மமுத மூமாய்
பல்வகையும் பரந்த பெருமா னென்னை யாள்வானைச்
செல்வ மல்குகுடித் திருவிண் ணகாக்கண் டேனே. (க)

(ப - ரை) நல்குரவும் - ஏழைத்தனமும், செல்வும் - செல்வமுமாய், நரகும் சுவர்க்கமும ஆய் - நரகும் ஸ்வர்க்கமுமாய், வெல் பகையும் - சத்ருக்களை ஜயிக்கிற பகையும், நட்பும் - ஸ்நேஹமுமாய், விடமும அமுதமும் ஆய - விஷமும அம்ருதமுமாய், பல்வகையும் பரந்த - (இப்படிப்) பலவிதமாய் எங்குமிருக்கிற, பெருமான் - ஸர்வேச்வரனான, என்னை - (முகங்காட்டாதிருந்த) என்னை, ஆள்வானை - தனக்கு அடிமை செய்யும்படி செய்துகொண்டவனை, செல்வம் மல்கு குடி - செல்வம் நிறைந்த ஸ்ரீவைஷ்ணவ குலங்களை உடைத்தான, திரு விண்ணகர் - திருவிண்ணகரிலே, கண்டேன் - (ஆசைப்பட்ட இடத்திலேயே) பார்த்தேன்.

(கருத்து) ஏழைத்தனமும் செல்வமும, நரகமும் ஸ்வர்க்கமும், பகையும் ஸ்நேஹமும், விஷமும் அம்ருதமும ஆகி, இப்படி ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பவைகளைத் தனக்கு விபூதிகளாயுடையவனும், ஸர்வேச்வரனும், முகம் காட்டாதிருந்த

என்னை முகம் காட்டும்படியும் அவனுக்குக் கைங்கரியம் செய்யும் படியும் செய்தவனுமான எம்பெருமானை, செல்வம் மல்குகுடி திருவிண்ணகரில் நான் பார்த்தேன்.

குறிப்பு —(1) 'செல்வம் மல்கு' என்கிற இடத்தில 'செல்வம' என்பது எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்யும் படியானபாக்கியம். பரதாழ்வான் சக்கிரவர்த்தித்திருமகனுச்குத் தூரத்திலிருந்து கைங்கரியம் செய்தான். அதுபோலில்லாமல லக்ஷ்மணன் கூடவே இருந்து கைங்கரியம் பண்ணினுன். அது போல் இந்த ஊராரும், எம்பெருமான கிட்ட இருந்து அவனுக் குக கைங்கரியம் செய்கிறார்கள் என்பது கருத்து.

(2) போகம் பண்ணுகிறவர்கள் வேறு உடம்பை எடுத்துக் கொண்டு வேறிடத்துச்குப் போய், ஸ்வர்க்கமாகிய பலனை அநுப விக்கிறார்கள். அப்படியில்லாமல் ஆழவார் இருந்தவிடத்திலேயே எம்பெருமான் அப்போதே வந்து தாம் அவனை அநுபவிச்கும் படி கண்டோம் என்று ஸந்தோஷப்படுகிறார். அவர் இருக்கிற இடத்தில் எம்பெருமான் வந்ததானது பசித்தவனுச்கு ஆஹாரம் அப்போதே தானுகவே அவனிருந்த இடத்தில் வந்ததுபோல் இருந்தது.

(3) 'செல்வம்' முதலான சொற்கள் அவைகளுச்கு ஆத்மா வாய், அதாவது—அவைகளை நியமனம் பண்ணிக்கொண்டிருக்கும் எம்பெருமானையே சொல்லுகின்றன. ஆகையால் அவைகள் அவனுசகு விபூதிகள். (1)

---

அவ—எம்பெருமானைக்கண்ட இடமான திருவிண்ணகரை ஸ்ரீவைகுண்டத்தைக்காட்டிலும் மேல்பட்டதென்று சொண் டாடுகிறார்.—

கண்ட வின்பந் துன்பங் கலக்கங்களுந் தேற்றமுமாய்
தண்ட முந்தண் மையுந் தழலு நிழலுமாய்
கண்டு கொள்தற் கரியபெரு மானென்னை யாள்வானூர்
தெண்டிரைப் புனல்சூழ் திருவிண் ணகர்நன் னகரே. (உ)

(ப - ரை) கண்ட இன்பம் - (விஷயங்களின் அநுபவத்தால உண்டாய் அளவுள்ளதாய் எல்லாராலும்) பார்க்கப்பட்ட ஸுகமும், துன்பம் - துக்கமுமாய், கலக்கங்களும் - (துக்கத்தால் வந்த மனதின்) கலக்கங்களும, தேறமும் ஆய் - (ஸுகத்தால் உண்டான) தெளிவுமாய், தண்டமும - (கலக்கத்தால உண்டான) கோபமும், தண்மையும - (மனதின் தெளிவாலுண்டாகும) பிரஸாதமுமாய், தழலும் - (மனதுக்குக் கோபத்தைப்போல் வருத்தத்தை உண்டுபண்ணும்) நெருப்பும், நிழலுமாய் - (பிரஸாதத்தைப்போல் குளிர்ந்த) நிழலுமாய், கண்டுகொள்தற்கு - கண்ணால் பார்ப்பதாகிய பிரயத்தனத்தினாலேயே அறிவதற்கு, அரிய - முடியாத, பெருமான் - ஸர்வேசுவரனும, என்னை ஆள்வான ஊர் - என்னை அடிமையாகப் பண்ணிக்கொண்டவனுமான (எம்பெருமான இருக்கும்) ஊரான, தெண் திரை - தெளிந்த அலைகளையுடையதாயிருக்கிற, புனல சூழ் - ஜலத்தாலே சூழப்பட்ட, திருவிண்ணகர், நல நகரே - நல்ல நகரம்.

(கருத்து) ஸுகமும் துக்கமும், கலக்கமும் தெளிவும், கோபமும் பிரஸாதமும், நெருப்பும நிழலும், இப்படி ஒன்றுக்கொன்று விரோதமானவைகளை விபூதிகளாக உடையவனும் கண்ணால் பார்ப்பதாகிய பிரயத்தனத்தாலேயே அறியமுடியாதவனும ஸர்வேசுவரனும, என்னை அடிமையாக்கிக்கொண்டவனுமான எம்பெருமானுடைய ஊரான திருவிண்ணகரே நல்ல நகர்.

குறிப்பு —(1) 'என்னை ஆள்வான்' என்பதற்கு, முன பாட்டில 'என்னை ஆள்வானை' என்பதற்குப்போல பொருள் கொள்ளவும்.

(2) வைகுந்தத்திலிருக்கும் எம்பெருமான், தாம் வருந்தப்படும்போது முகம் காட்டவில்லை. திருவிண்ணகரத்திலிருக்கிறவன்தான் வந்து உதவினான். ஆகையால, வைகுந்தத்தைக் காட்டிலும் திருவிண்ணகரே நல்லது என்பது ஆழ்வாரின் திருவுள்ளம்.

(3) 'தண்டம்' என்பதற்கு, நிக்ரஹம் என்பது பொருள். அது அதற்குக் காரணமான கோபத்தைச் சொல்லுகிறது. 'தண்மையும்' என்பதற்கு அநுக்ரஹம என்பது பொருள். அது அதற்குக் காரணமான பிரஸாதத்தைச் சொல்லுகிறது. (2)

அவ—இதில எமபெருமானுடைய கருணையைக் கொண்டாடுகிறார் :—

நகரமு நாடு களும்ஞா னமும்மூ டமுமாய்
நிகரில் சூழ்சுட ராயிரு ளாய்நில னாய்விசும்பாய்
சிகர மாடங்கள் சூழ்திரு விண்ணகாச் சேர்ந்தபிரான்
புகாகோள் கீாத்தியல் லாலில்லை யாவாக்கும் புண்ணியமே. (க)

(ப - ரை) நகரமும, நாடுகளும் - தேசங்களும், ஞானமும் - (வஸ்துக்களை உள்ளபடி அறிகிற) ஜ்ஞாநமும், மூடமும் ஆய் - (அவைகளை அப்படி அறியாத) அஜ்ஞாநமும, நிகர் இல் - ஒப்பில்லாத (ஐந்து பூதங்களுக்குள்ளே மற்றப் பூதங்களைக்காட்டிலும் பிரகாசத்தாலே அதிகமாய்), சூழ் - சூழ்ந்திருக்கிற, சுடராய் - தேஜஸ்ஸும், இருளாய் - (அதற்கு விரோதியான) இருட்டும், நிலனாய் - ரூபமுள்ள பூமியும, விசும்பாய் - ரூபமில்லாத ஆகாசமும, (இவைகள் எல்லாம் ஆய்), சிகர மாடங்கள் சூழ் - மலையின் சிகரங்கள்போல் உயர்ந்த வீடுகளாலே சூழப்பட்ட, திருவிண்ணகர் - திருவிண்ணகரை, சேர்ந்த பிரான் - சேர்ந்த ஸ்வாமியினுடைய, புகர் கொள் - பிரகாசத்தைக்கொண்ட (ஸூர்யனைக்காட்டிலும் அதிகமாய் விளங்குகிற), கீர்த்தி அல்லால் - கருணையைத் தவிர, யாவர்க்கும் - எவருக்கும், புண்ணியம் - பிழைப்பதற்கு உபாயம், இல்லை.

(கருத்து) நகரமும் தேசமும், ஜ்ஞாநமும் அஜ்ஞாநமும், தேஜஸ்ஸும் நிழலும, பூமியும ஆகாசமும் இப்படி ஒன்றுக்கொன்று விரோதமானவைகளை விபூதிகளாக உடையவனும் மலைச் சிகரங்கள்போல் உயர்ந்த வீடுகளால் சூழப்பட்ட திருவிண்ணகரத்தைச்சேர்ந்தவனுமான எமபெருமானுடைய கருணையைத் தவிர, வேறு முக்கியமான ஜீவநோபாயம் எவர்க்குமில்லை.

குறிப்பு :—(1) நகரம் - கொஞ்சமிடமுள்ளது ; நாடு - அதிகவிடமுள்ளது. ஆகையால், இரண்டுக்கும விரோதம்.

(2) எம்பெருமானுடைய கருணையானது திருவிண்ணகரில் ஆழ்வாருக்கு வருத்தத்தை நீக்கி, ஸந்தோஷத்தை

உண்டுபண்ணினபடியால், வைகுந்தத்தில் அது விளங்குவதைக் காட்டிலும் திருவிண்ணகரில் அதிகமாக விளங்குகிறது என்பது கருத்து.

(3) 'கீர்த்தி' என்கிற சொல் ஆகுபெயராய்க் கீர்த்தியை உண்டாக்குவதான கருணையைச் சொல்லுகிறது.

(4) புண்ணியமென்பது ஸுகத்துக்கு உபாயமான கர்மம். உஜ்ஜீவநமும் ஸுகமாகையாலே அதற்கு உபாயத்தைப் புண்ணியமென்று சொல்லலாம். (3)

---

புண்ணியம் பாவம் புணர்ச்சி பிரிவென் றிவையாய
எண்ண மாய்மறப் பாயுண்மை யாயின்மை யாயல்லனாய்
திண்ண மாடங்கள் சூழ்திரு விண்ணகர்ச் சேர்ந்தபிரான்
கண்ண னின்னரு ளேகண்டு கொண்மின்கள் கைதவமே (ச)

(ப - ரை) புண்ணியம் - ஸுகத்துக்கு காரணமான கர்மம், பாவம் - துக்கத்துக்கு காரணமான கர்மம், புணர்ச்சி - (புண்ணியத்தாலே வேண்டியவைகளுடன்) சேருவது, பிரிவு - (பாபத்தாலே அவைகளை விட்டுப்) பிரிவது, என்று இவையாய், எண்ணமாய் - போன விஷயத்தை நினைப்பது, மறப்பாய் - நடந்ததை மறப்பது, உண்மையாய் - இருக்கிறவைகளாய், இன்மையாய் - இல்லாதவைகளாய், அல்லனாய்-(இவைகள் எல்லாமாயுமிருந்தும), அவைகளின் தோஷங்களில்லாதவனாய், திண்ணம் மாடங்கள் சூழ் - திடமான வீடுகளால் சூழப்பட்ட, திருவிண்ணகர் சேர்ந்த பிரான், கண்ணன் - கிருஷ்ணனுடைய, இன் அருளே-இனிய கருணையினாலே, கைதவம் - க்ருத்கம, (உண்டுபண்ணப்பட்டன, உடம்புகள் இந்திரியங்கள் ஆகிய பதார்த்தங்கள் எல்லாம் உண்டு பண்ணப்பட்டவைகள்) இந்த விஷயத்தை, கண்டுகொண்மின்கள் - இந்த ஊரிலே ப்ரத்யக்ஷமாகப் பாருங்கள்

(கருத்து) புண்ணியமும் பாபமும், வேண்டியவைகளுடன் சேருவதும் அவைகளைவிட்டுப் பிரிவதும், போனதை நினைப்பதும் நடந்ததை மறப்பதும், இருக்கிறவைகளும் இல்லாதவைகளும் இப்படி ஒன்றுக்கொன்று விரோதமானவைகளை விபூதி

களாக உடையவனும், அப்படியிருந்தும், அவைகளின் தோஷங்கள் தன்னிடத்தில் இல்லாதவனும், திண்ணமாடங்கள் சூழ் திருவிண்ணகரைச் சேர்ந்தவனுமான கண்ணபிரானுடைய கருணையினாலேதான் எல்லாருடைய உடம்புகளும், இந்திரியங்களும் உண்டுபண்ணப்பட்டன. இதை இந்த ஊரில் பிரத்யக்ஷமாகப் பார்க்கலாம்.

குறிப்பு :— 'இருக்கிறவைகளும் இல்லாதவைகளும்' என்று உரையில் எழுதியதற்குப் பொருள் — குடம் இருக்கிறது என்றும், குடமில்லையென்றும் சொல்லும்போது, இருக்கிறது குடம், இல்லாதது குடமென்கிற இருப்புப்போய், அஃது உடைந்து உண்டாகும் கபாலம். கபாலமென்றால் இரண்டாய் உடைந்த ஒவ்வொரு பாதி. நம்முடைய மதத்தில் இல்லையென்பது ஒன்று கிடையாது. மண்கட்டி இல்லையென்றால், குடம் இருக்கிறதென்பதும், குடமில்லையென்றால் கபாலங்கள் இருக்கின்றன என்பதும் பொருள். ஒரே வஸ்து வெவ்வேறு இருப்புக்களை அடைகிறது. (4)

---

அவ்வெம்பெருமான் எல்லாரையும் ரக்ஷிக்கிறவன் என்கிறார் :—

கைதவஞ் செம்மை கருமை வெளுமை யுமாய்
மெய்பொய் யிளமை முதுமை புதுமை பழமையுமாய்
செய்த திண்மதிள் சூழ்திரு விண்ணகர்ச் சேர்ந்தபிரான்
பெய்த காவுகண் டீர்பெருந் தேவுடை மூவுலகே. (ரு)

(ப-ரை) கைதவம் - ருஜுவாக இல்லாமையும், செம்மை - ருஜுவாக இருப்பதும், கருமை, வெளுமையுமாய், மெய் பொய், இளமை முதுமை, புதுமை பழமையுமாய், இப்படியிருக்கிறவனாய், செய்த - செய்யப்பட்டதான, (எவ்வளவு காலமானாலும் அப்போதே செய்யப்பட்டதுபோல் காணப்படுகிற), திண் மதிள் சூழ் - திடமான மதிள்களாலே சூழப்பட்ட, திருவிண்ணகர்ச் சேர்ந்த பிரான், பெய்த - ஜலத்தைவிட்டு வளர்க்கப்பட்ட (வைத்து வளர்த்ததான), காவு கண்டீர் - தோட்டம்தான், பெருந் தேவுடை-பிரம்மா முதலான பெரிய தேவர்களையுடைய, மூவுலகு - மூன்று உலகங்களும்.

(கருத்து) ருஜுவில்லாமையும், ருஜுவாயிருப்பதும் கறுப்பும் வெளுப்பும், பொய்யும் மெய்யும், இளமையும் முதுமையும், புதிதாயிருப்பதும் பழசாயிருப்பதும் இப்படி ஒன்றுக்கொன்று விரோதிகளாயிருப்பவைகளை தனக்கு விபூதிகளாயுடையவனும் செய்ய திண் மதிள்சூழ் திருவிண்ணகரச் சேர்ந்தவனுமான பிரான் தான் ஒரு தோட்டத்தை அதின் யஜமானன் வளர்த்து ரக்ஷிப்பதுபோல், பிரமமா முதலான பெரிய தேவர்கள அடங்கிய மூன்று உலகங்களையும் உண்டுபண்ணி அவைகளுக்கு வேண்டியவைகளை கொடுத்து ரக்ஷிக்கிறன.

குறிப்பு.— ருஜுவாயிருப்பது – மனதில் எண்ணுவது போல் பேசுவதும் நடப்பதும் இப்படிச் செய்யாதது கைதவம்-ருஜுவாயில்லாமை. (5)

---

மூவுல கங்களு மாயல்ல ஞயுகப் பாய்முனிவாய்
பூவில் வாழ்மக ளாய்த்தெளவை யாய்ப்புக ழாய்ப்பழியாய்
தேவர் மேவித் தொழுந்திரு விண்ணகாச் சேர்ந்தபிரான்
பாவி யேன்மனத் தேயுறை கின்ற பரஞ்சுடரே. (சு)

(ப - ரை) மூ உலகங்களுமாய் - மூன்று உலகங்களும் அவைகளிலுள்ளவைகளுமாய், உகப்பாய்-பிரீதியாய், முனிவாய் - கோபமாய் (பிரீதியில்லாமையாய்), பூவில்வாழ் மகளாய் - தாமரைப் பூவிலிருக்கும் லக்ஷ்மியாய், தெளவையாய்-மூதேவியாய், புகழாய்- (லக்ஷ்மீ கடாக்ஷமுள்ளவர்களுக்குப் பெரும்) கீர்த்தியுமாய், பழியாய் - (மூதேவியின் பார்வையால் வரும்) அபகீர்த்தியுமாய், அல்லனாய் - (இவைகளின் தோஷங்கள் தன்னிடத்தில்) இல்லாதவனாய், தேவர் - நிதயஸூரிகள், மேவி - பிரீதியுடன், தொழும் - ஸேவிக்கும், திருவிண்ணகர்ச்சேர்ந்த பிரான், பாவியேன் மனத்தே - பாபஞ் செய்த என்னுடைய மனதில், உறைகின்ற - வஸிக்கிற, பரம் சுடரே - மிகுந்த ஜ்யோதிஸை ஸ்வரூபமாக உடையவன்.

(கருத்து) மூன்று உலகங்களும் அவைகளில் உள்ளவைகளும், பிரீதியும் அப்ரீதியும், லக்ஷ்மியும் மூதேவியும், அவர்களின் பார்வையால் முறையே வரும் கீர்த்தியும் அபகீர்த்தியும், இப்படி

ஒன்றுக்கொன்று விரோதமானவைகளை விபூதிகளாக உடைய வன் எம்பெருமான். நல்லவைகளுக்கு ஆதாமாயிருப்பதாலே தன்னிடத்தில தோஷம் வரும் என்கிற ஸந்தேஹம் எப்படி வருகிறதில்லையோ, அப்படியே கெட்டவைகளுக்கு ஆதாரமாயிருந்த போதிலும் அவைகளின் தோஷங்கள் அவனிடம் வருகிறதில்லை. இந்த விஷயத்தை எங்கே பார்ப்பது என்றால், என்னிடத்தில் பார்க்கலாம் பாவியானபடியால என்மனம் எல்லாவிதமான தோஷத்துக்கும் இடம். நித்திய ஸூரிகள் பிரீதியுடன் ஸேவிக்கும திருவிண்ணகா சேர்ந்தபிரான் இவ்விதமான என் மனதி லிருந்தபோதிலும் அவனுடைய காந்தியுள்ள ஸ்வரூபத்திற்கு ஒருவித தோஷமும் வரவில்லை. அவன் மிகுந்த காந்தியோடு விளங்குகிறனே.

குறிப்பு :—மூவுலகங்களாவன :—கிருதகம்-செய்யப்பட்டது, அகிருதகம் - செய்யப்படாதது, கிருதகாகிருதகம்-இரண்டுமுள்ளது பூ: புவ: ஸுவ: என்கிற மூன்று உலகங்களும் ஒரு கல்பத்தின் கடைசியில் அழிந்து மறுகல்பத்தில் செய்யப்படுகின்றன. ஜந தப: ஸத்யம என்கிற மூன்று உலகங்களும், ஒவ்வொரு கல்பத்திலும் செய்யப்படுகிறதில்லை. மஹாபிரளயத்தில்தான் அவைகளுக்கு நாசம். இரண்டு வகுப்புகளின் நடுவிலிருக்கிற மஹர் லோகமானது பிரளயகாலத்திலும் இருக்கிறது. ஆகையால், அது அகிருதகம். ஆனால், கீழ் மூன்று உலகங்களை எரிக்கிற அக்கினியின் ஜ்வாலையாலே அங்கிருப்பவர்கள் அங்கு இருக்க முடியாமல அதைவிட்டு மேல்உலகங்களுக்குப்போய், ஸிருஷ்டி காலத்தில அதற்குத திரும்பி வருகிறபடியால் அது கிருதகாகிருதகம். இப்படி அஃது இரண்டு விதமாயுமிருக்கும. (6)

---

பரஞ்சுட ருடம்பா யழுக்குப் பதித்த வுடம்பாய்
கரந்துந் தோன்றியு நின்றுங்கை தவங்கள்செய் தும்விண்ணோர்
சிரங்க ளால்வணங் குந்திரு விண்ணகர்ச் சேர்ந்தபிரான்
வரங்கொள் பாதமல் லாலில்லை யாவர்க்கும் வன்சரணே. (எ)

(ப - ரை) பரம் சுடர் உடம்பாய் - மிகுந்த காந்தியுள்ள (சுத்த ஸத்துவத்தாலே செய்யப்பட்ட) திருமேனியை உடைய

வனும், அழுக்கு பதித்த உடம்பாய் - அழுக்கு வைக்கப்பட்ட (முக்குணங்கள் நிறைந்த வஸ்துக்களை) உடம்புகளாக உடையவனும், கரந்தும் - மறைந்தும், (எல்லாருக்குள்ளேயுமிருக்கும் போதும் அவர்களால் அறியமுடியாதவனும்), தோன்றியும்-(அவதாரங்களில் எல்லாருக்கும் தெரியும்படி) தோன்றியும், நின்றும்-(ஆச்ரிதர்க்காக வெகுநாள்) இருந்தும், கைதவங்கள் செய்தும் - (சிசுபாலன முதலான விரோதிகள் தன்னை உள்ளபடி அறியாதபடி) வஞ்சனை செய்தும், விண்ணோர் சிரங்களால் - நித்தியஸூரிகள் தலையால், வணங்கும், திருவிண்ணகர் சேர்ந்த பிரான், வரம் கொள் - மேன்மையைக்கொண்ட, பாதம் அல்லால் - திருவடிகள் அல்லாமல், யாவர்க்கும் - எல்லாருக்கும், வன் சரண் - திடமான உபாயம், இல்லை.

(கருத்து) ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ள திரவியத்தால் செய்யப்பட்டிருப்பதால், மிகுந்த காந்தியையுடைய திருமேனியையுடையவனும், ஸத்துவம் முதலான மூன்று குணங்கள் நிறைந்த திரவியமாகிய பிரகிருதியிலிருந்து உண்டான வஸ்துக்களை உடம்புகளாக உடையவனும், எல்லாருக்குள்ளேயும் ஆத்மாவாக இருந்தபோதிலும் அவர்களுக்குத் தெரியாதபடி மறைந்தவனும், அவதாரங்களில் எல்லாரும் பார்க்கும்படி தோன்றுகிறவனும், ஆச்ரிதர்களுக்காக அவைகளிலேயே வெகுகாலமிருக்கிறவனும், சிசுபாலன முதலான விரோதிகள் தன்னை உள்ளபடி அறியமுடியாமல் இருக்கும்படி வஞ்சனைகளைச் செய்தவனும், நித்தியஸூரிகளின் தலைகளால் வணங்கப்படுகிற திருவிண்ணகரைச் சேர்ந்தவனுமான பிரானுடைய மேன்மையுள்ள திருவடிகளைத் தவிர எவ்வளவு ஜ்ஞானமுள்ளவர்களுக்கும் வேறு திடமான உபாயமில்லை.

குறிப்பு.—திருவடிகளுக்கு மேன்மையாவது—மிகவும் தாழ்ந்தவர்களும் கிட்ட வரும்படியிருப்பது. (7)

---

வன்ச ரண்சுரர்க் காயசு ராக்குவெங் கூற்றமுமாய்த்
தன்சர ணிழற்கீ ழுலகம் வைத்தும் வையாதுந்
தென்ச ரண்டிசைக் குத்திரு விண்ணகர்ச் சேர்ந்தபிரான்
என்சர ணென்கண்ண னென்னை யாளுடை யென்னப்பனே. (அ)

(ப - ரை) சுரர்க்கு - தேவப்பிரகிருதிகளுக்கு, வன்சரணாய் - திருடமான உபாயமாய், (தன்னுடன் சேருவதற்கு விரோதிகளான பாபங்களைப் போக்குகிறவனாய்), தன் சரண் நிழல் கீழ் - தன்னுடைய திருவடிகளின் நிழலின்கீழே, உலகம் வைத்தும் - உலகத்திலிருப்பவர்களை (ஆச்ரிதர்களை) வைத்துக் கொண்டும், அசுரர்க்கு - அஸுரப்பிரகிருதிகளுக்கு, வெம் கூற்றமுமாய் - க்ரூரமான மிருத்யுவாய், வையாதும் - (அவர்களைத் தன் திருவடிகளின் நிழலின்கீழ்) வைக்காதவனும், தென் திசைக்கு - தென் திக்குக்கு, சரண்-ஸம்ஸார பயத்தைப் போக்குமிடமான, திருவிண்ணகர் சேர்ந்த பிரான் - திருவிண்ணகரைச் சேர்ந்தவனுமான பிரான், என் சரண் - நான் அடையவேண்டிய வஸ்து, என் கண்ணன் - கண்ணைப்போல எல்லா வேலைகளையும் செய்து முடிக்க எனக்கு உபாயன், என்னை ஆளுடை-என்னைத் தனக்கு அடிமை செய்யும்படி செய்தவன், என் அப்பன் - என் ஸ்வாமி.

(கருத்து) ஆச்ரிதர்கள் தனனைச் சேருவதற்கு விரோதியான பாபங்களைப் போக்கி, அவர்களைத் தன திருவடிகளின நிழலின் கீழே வைத்துக்கொள்கிறவனும், அஸுரப் பிரகிருதிகளை அப்படி வைத்துக கொள்ளாமல், அவர்களுக்குக் க்ரூரமான மிருத்யு வானவனும், தென்திசையிலுள்ளவர்களுககு ஸம்ஸார பயத்தைப் போக்கத் தகுந்த இடமான திருவிண்ணகரைச் சேர்ந்தவனுமான எம்பெருமான், நான் அடையவேண்டியவஸ்து; எனக்கு வேண்டியதைச் செய்து முடிக்கிறவன்; என்னைத் தனக்குக் கைங்கரியம செய்யும்படி செய்தவன்; எனக்கு ஸ்வாமி.

குறிப்பு :— தெய்வப்பிரகிருதி என்பது — எம்பெருமான் சொன்னதைச் செய்யும் ஸ்வபாவமுள்ளவன்; அஸுரப்பிரகிருதி—எம்பெருமான் சொன்னதை மீறி நடக்கும் ஸ்வபாவம் உள்ளவன். (8)

---

என்னப்ப னெனக்கா யிகுளா யென்னைப் பெற்றவளாய்ப்
பொன்னப்பன் மணியப்பன் முத்தப்ப னென்னப்ப னுமாய்
மின்னப்பொன் மதிள்சூழ் திருவிண்ணகர்ச் சேர்ந்த வப்பன்
தன்னொப்பா ரில்லப் பன்தந்த னன்றன தாணிழலே. (௯)

(ப - ரை) பொன் அப்பன் - தங்கத்தைப்போல் விளங்குகிற ஸ்வாமி, மணி அப்பன் - ரத்நம்போலத் தங்கத்தைக் காட்டிலும் அதிக காந்தியுள்ள அப்பன், முத்தப்பன - முத்துப்போல மிகவும் அழகுள்ள ஸ்வாமி, என் அப்பனுமாய் - எனக்கு உபகாரம் செய்த ஸ்வாமி (இந்தவிதமாயிருந்து), தன் ஒப்பார் இல் அப்பன் - உபகாரம் செய்கிற விஷயத்தில் தனக்கு ஸமானமில்லாத அப்பனாய், மின்ன - மின்னும்படி (நாலு பக்கமும் பிரகாசிக்கும்படி), பொன் மதில் சூழ் - பொன்னால் செய்யப்பட்ட மதில்களால் சூழப்பட்ட, திருவிண்ணகர் சேர்ந்த, (இப்படியிருக்கிற) அப்பன் - எம்பெருமான், எனக்கு என் அப்பனாய - எனக்கே யுள்ள ஸ்வாமியாய், இருளாய் - வளர்த்த தாயாய், என்னைப் பெற்றவளாய் - என்னைப்பெற்ற தாயாய், தன தாள் நிழல்-தன்னுடைய திருவடிகளின் நிழலை, தந்தனன - (தன்னைவிட்டுப் பிரிந்து தாபத்தை அடைந்த எனக்கு) கொடுத்தான்.

(கருத்து) பொன்னைப்போல விளங்குகிறவனும், ரத்நங்கள் போல, பொன்னைக்காட்டிலும் அதிக காந்தியுள்ளவனும், முத்தைப்போல் அழகுள்ளவனும், எனக்கு உபகாரம் செய்தவனும், உபகாரம் செய்கிற விஷயத்தில் தனக்கு ஸமமானவன் இல்லாதவனும், பொன் மதில்களால் சூழப்பட்ட திருவிண்ணகரில் சேர்ந்தவனுமான எம்பெருமான் எனக்கே ஸ்வாமி. ஸௌசீல்யத்தாலே பெற்ற தாயைப்போலவும், வளர்த்த தாயைப்போலவும் எனக்குப் பிரியத்தைச் செய்கிறவன். அவனைவிட்டுப் பிரிந்து தாபத்தை அடைந்த எனக்குத் தன்னுடைய திருவடி நிழலைக் கொடுத்தான்.

குறிப்பு :—(1) பாட்டில் 'அப்பன் அப்பன்' என்று பல தடவை சொல்லுவது பிரீதியின் மிகுதியாலே.

(2) 'தன் ஒப்பார் இல்' என்பதற்கு, அவன் கிட்டவர, 'நீ எனக்கு வேண்டாம்' என்று ஆழ்வார் தள்ளத் தள்ள, 'நீ உனக்கு ஹிதத்தை அறியவில்லை. நான் உனக்கு வேண்டியவன்' என்று சொல்லித் தன்னை அவருக்குக் கொடுத்தான். இப்படி உபகாரம் செய்கிறவர் வேறு ஒருவருமில்லை என்பது கருத்து.

(இ - ம்) இருள் - இருளை : கடைக்குறை. 'அப்பனுமாய்' என்பதிலுள்ள உம்மையை முன்னும் கூட்டுக. (9)

நிழல்வெய்யிற் சிறுமை பெருமை குறுமை நெடுமையுமாய்ச்
சுழல்வன நிற்பன மற்று மாயவை யல்லனுமாய்
மழலை வாய்வண்டு வாழ்திரு விண்ணகர் மன்னுபிரான்
கழல்க ளன்றிமற் றோர்களை கணிலங் காண்மின்களே. (௰)

*(ப - ரை) நிழல் வெய்யில் - நிழலும் வெய்யிலும், சிறுமை பெருமை - சின்னதாயிருப்பதும் பெரிதாயிருப்பதும், குறுமை நெடுமையுமாய் - நீளமில்லாததாயும் நீளமுள்ளதாயுமிருப்பதும், சுழல்வன - ஜங்கமங்களும், நிற்பன - ஸ்தாவரங்களும் ஆகிய, மற்றுமாய் - வேறு வஸ்துகளுமாய் இருந்து, அல்லனுமாய் - அவைகளின் தோஷங்கள் இல்லாதவனுமாய், மழலை வாய்வண்டு - இனியதான குரலையுடைய வண்டுகள், வாழ் - வாழ்கின்ற, திரு விண்ணகர் மன்னு பிரான் - திருவிண்ணகரில் நிலையாயிருக்கிற ஸ்வாமியினுடைய, கழல்கள் அன்றி - திருவடிகளொழிய, மற்று ஓர் - வேறு ஒரு, களைகண் - ரக்ஷிக்கிற வஸ்து, இலம் - நாமில்லாதவர்கள், காண்மின்கள் - இதை என்னிடத்தில் பாருங்கள்.*

*(கருத்து) நிழலும் வெய்யிலும், சிறுமையும் பெருமையும், குறுமையும் நெடுமையும் இவைகளைத்தவிர, மற்றும் ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் இப்படி ஒன்றோடொன்று விரோதியான இவைகளை விபூதியாக உடையவனும், இனிய குரலோடு பாடிக்கொண்டு வண்டுகளிருக்கிற திருவிண்ணகரில் "நான் இருக்கிற வரையில் இதை விடுகிறதில்லை" என்று எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளைத்தவிர வேறு ரக்ஷிக்கக்கூடிய வஸ்து இல்லை. இதை எல்லாரும் என்னிடத்தில் பார்க்கலாம். அவனுடைய கடாக்ஷத்தைப் பெறுவதற்கு முன்பு நான் ஒரு வஸ்துவாக இல்லை. அதைப் பெற்றவுடனே நான் வஸ்துவானேன். ஆகையால், அவனைத்தவிர வேறு கதியில்லை.* (10)

---

காண்மின் களுலகீரென்று கண்முகப் பேநிமிர்ந்த
தாளிணை யன்றனைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன
ஆணை யாயிரத்துத் திருவிண்ணகர்ப் பத்தும் வல்லார்
கோணை யின்றிவிண் ணோர்க்கென்று மாவர் குரவர்களே. (௧௧)

(ப-ரை) உலகீர் - உலகத்திலிருக்கிறவர்களே! சரண்மின்கள் என்று - இந்த என் திருவடிகளைப் பற்றிக் கிருதார்த்தராகுங்கள் என்று, கண்முகப்பே - அவர்கள் கண்ணுக்கு எதிரே, நிமிர்ந்த - (திரிவிக்கிரமனாய்) வளர்ந்த, தாள் இணையன் தன்னை - இரண்டு திருவடிகளையுடைய எம்பெருமானைப் பற்றி, குருகூர்ச் சடகோபன் சொன்ன, ஆயிரத்து - ஆயிரம் பாட்டுக்களுக்குள், ஆணை - ஆஜ்ஞை, (அவன் உலகங்களை நியமனம் பண்ணும் பிரகாரங்களைக் காட்டும்) திருவிண்ணகர் பத்தும் - திருவிண்ணகர் விஷயமாகச் சொன்ன பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - அடிக்கடி படிக்கச் சக்தியுள்ளவர்கள், கோணை இன்றி - வக்கிரமில்லாமல் விண்ணோர்க்கு - நித்திய ஸூரிகளுக்கு என்றும் - எப்போதும், குரவர் ஆவர் - குருக்களைப் போலே பூஜிக்கத் தகுந்தவர்களாவார்.

(கருத்து) "ஆஸ்திகர்களாயும் ஆஸ்திகரல்லாதவர்களாயும் உலகத்திலிருக்கிற ஜனங்களே! இந்த என் திருவடிகளைப் பற்றிக் கிருதார்த்தர்களாக ஆகுங்கள்" என்று அவர்கள் கண் எதிரே ஓங்கி வளர்ந்த இரண்டு திருவடிகளையுடைய எம்பெருமானைப் பற்றி ஆழ்வார் திருவிண்ணகர் விஷயமாய் அவன் ஸர்வேச்வரனாய் எல்லாவற்றையும் நியமனம் செய்கிற பிரகாரங்களைக் காட்டும்படி சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களையும், அடிக்கடி சொல்லச் சக்தியுள்ளவர்கள் வக்கிரமில்லாமல் நித்திய ஸூரிகளால் குருக்களைப்போல பூஜை செய்யத் தகுந்தவர்கள் ஆவார்கள்.

குறிப்பு:—இங்கே வக்கிரமாவது—ஸம்ஸாரத்திலிருக்கிறவர்கள் இந்தப் பாட்டுக்களைப் பாடுவதினாலேயே குருக்களைப் போல பூஜிக்கத் தகுந்தவர்களோ என்று விவாதம் பண்ணுவது. ஸத்துக்கள் திருக்குப் போனவர்கள், இந்த லீலாவிபூதியை எம்பெருமானுடைய விபூதியென்று நினைத்துக் கொண்டிருப்பார்கள். அங்கே போய் அவர்கள் அடையும் நிலைமை இங்கே இருந்தே சிலர் அடைந்தால், அவர்களைக் கொண்டாட வேண்டாமோ? இதை அறிந்து நித்தியஸூரிகள் அவர்களைக் கொண்டாடுவதில் விவாதமில்லை என்பது கருத்து. (11)

---

[illegible] ॥ ௫௨ ॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் மற்றவர்களால் சேர்க்கமுடியாதவைகளைச் சேர்க்கிறவன் என்பது பத்துக்காரணங்களால் சொல்லப்படுகின்றது. அவைகளாவன:—(1) செல்வமும் ஏழைத்தனமுமாயிருப்பது, (2) ஸுகத்தையும் துக்கத்தையும் உண்டுபண்ணுவது; (3) நகரமாயும் கிராமமாயுமிருப்பது; (4) புண்ணியமாயும் பாபமாயுமிருப்பது; (5) கூட்டமாயும் பிரிவாயுமிருப்பது; (6) எல்லா உலகங்களுமாயும், அவைகளைக் காட்டிலும் வேறாயுமிருப்பது; (7) பரரூபத்தையும் ஜகத்தான ரூபத்தையுமுடையவனாயிருப்பது; (8) தேவப் பிரகிருதிகளுக்கு வேண்டியவனாயும் அஸுரப்பிரகிருதிகளுக்கு வேண்டாதவனாயுமிருக்கிறான் என்கிற கீர்த்தியையுடையவனாயிருப்பது; (9) வெயிலும் நிழலுமாயிருப்பது; (10) பொன்னையும் ரத்னங்களையும் முத்தையும்போல் அழகாயிருந்து தகப்பனைப்போல் ஹிதத்தையும், தாயைப்போல் பிரியத்தையும் செய்வது

---

# நான்காம் திருவாய்மொழி.

அவ — கீழ்த் திருவாய்மொழியில் திருவிண்ணகரில் எம்பெருமானுடைய அழகு, ஸௌசீல்யம என்கிற குணம், எல்லாவற்றையும் நியமனம் பண்ணுவது ஆகிய இவை முதலானவைகளை ஆழ்வார் அநுபவித்து மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தார். அதைப் பார்த்து எம்பெருமானும் ஸந்தோஷப்பட்டு, 'பிறந்தவாறி'ல (5–10) ஆழ்வார் ஆசைப்பட்டபடி தான் கிருஷ்ணனுய் அவதாரம செய்ததுமுதல் வைகுந்தததிறகு எழுந்தருளுகிறவரையில நடந்த லீலைகள் எல்லாவறறையும் ஆழ்வாருக்குக காட்டினுன். ஆழ்வார் அவைகளைப் பார்த்து, ஸந்தோஷப்பட்டு அவைகளைப் பேசுகிருர்.

(2) 'பிறந்தவாறி'ல ஆழ்வார், கிருஷ்ணுவதார லீலைகளை மனதின் தளர்ச்சியில்லாமல் பார்ககவேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆதலால், அவைகளையே எமபெருமான அவருக்குக் காட்டினுன். அதையும் மனதாலேயே ஆழவார் அநுபவிககிருர்.

( அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

குரவை யாய்ச்சிய ரோடு கோத்ததுங் குன்றமோன் றேந்தியதும்
உரவுநீரப் பொய்கை நாகங் காய்ந்தது முட்பட மற்றும்பல
அரவிற் பள்ளிப் பிரான்றன் மாய வினைகளை யேயலற்றி
இரவு நன்பக லுந்தவிர் கிலமேன் னகுறை யெனக்கே. (க)

(ப - ரை) குரவை - ராஸமண்டலததில், ஆய்ச்சியரோடு - இடைப்பெண்களோடு, கோததததும் - தன்னைக சோதததும், குன்றம் ஒன்று ஏந்தியதும் - கோவர்த்தநம் என்கிற ஒரு மலையைப் பிடித்துக்கொண்டிருந்ததும், உரவு நீர் - வலிமையையுடைய (விஷத்தினுல கிட்டமுடியாததான) ஜலத்தையுடைய, பொய்கை - மடுவிலிருந்த, நாகம் காய்ந்ததும் - (காளியன் என்ற) பாம்பைத் தாபமுண்டாகும்படி அடககியதும், உட்பட மற்றும் பல - இவை முதலான வேறுபலவான, அரவில் பள்ளி பிரான் தன் - ஆதிசேஷனுகிய படுக்கையின்மேல் படுத்துக்கொண்டிருக்கிற ஸ்வாமியினுடைய, மாய வினைகளையே - ஆச்சரியமான லீலைகளையே, அலற்றி - அடிக்கடி சொல்லிக்கொண்டு, இரவும் நல் பகலும் - நல்ல ராத்திரியிலும் பகலிலும், தவிர்கிலம் - ஒழிகிறேனில்லை. எனக்கு என்ன குறை?

(கருத்து) திருப்பாற்கடலில் ஆதிசேஷன்மேல் படுத்துக்
கொண்டிருக்கிற எம்பெருமான் ஆச்ரிதர்களுக்காக கிருஷ்ணனாய்
அவதாரம் செய்து தன்னிடத்தில் ஆசையுள்ளவர்களோடு சேர்ந்
திருப்பதையே போகமாக எண்ணுகிறவனானபடியால், ராஸமண்ட
லத்தில் இடைப்பெண்களுக்கு நடுவில மணிமாலையில மரகதமணியைக்
கோத்ததுபோல அவர்களுள் தான் ஒருவனாக தோளைப்பற்றி
நின்றதுவும, அவர்களை ரக்ஷிப்பதற்காக அவதாரம் செய்தபடி
யால் தன் போகத்தைக்காட்டிலும் அவர்களை ரக்ஷிப்பதையே
பெரிதாக எண்ணிக் கோவர்த்தனமென்னும் மலையைக் குடையாக
வைத்துக்கொண்டதுபோல் பிடித்துக்கொண்டிருந்ததுவும்,
விஷம் கலந்திருந்ததாலே கிட்டமுடியாத ஜலத்தையுடைய யமு
னையின் மடுவிலிருந்த காளியன் என்கிற பாம்புக்கு நாசத்தை
உண்டாக்கி, அதன் தலைகளின்மேல் கூத்தாடி அதை அடக்கின
தும், இவை முதலான ஆச்சரியமான பல லீலைகளை, முன்னாலே
நடந்தவைகளாய் இருந்தாலும் இப்போது நடக்கிறவைகளைப்போல்
எனக்கு அவன் காட்டுகிறான். இவைகளைப் பார்த்து என்னை
மறந்து அவைகளை அடிக்கடி சொல்லிக்கொண்டு ராத்திரியை
யும் பகலையும் ஒழிவில்லாமல் போக்குகிறேன். இப்படி நான்
அநுபவிக்கவேண்டிய விஷயங்களில் குறைவுபாடு, அவைகளின்
அநுபவம் நடுவில் நின்றுவிடுவதாகிய குறைபாடு உண்டோ?
ஒருகுறையுமில்லை.

குறிப்பு:—ராத்திரிக்கும் பகலுக்கும் வேற்றுமையறியாது — எம்
பெருமானை அநுபவிப்பதற்குக் குறியாயிருப்பது.

(இ - ம்) தவிர்கிலம - தவிர்க்கமாட்டோம். 'தவிர்கிலோம்'
என்றும் பாடமுண்டு. (1)

---

கேயத் தீங்குழ லூதிற் றும்நிரை மேய்த்ததுங் கெண்டையொண்கண்
வாசப் பூங்குழல் பின்னை தோள்கண் மணந்தது மற்றும்பல
மாயக் கோலப் பிரான்றன் செய்கை நினைந்து மனங்குழைந்து
நேயத் தோடு கழிந்த போதெனக் கெவ்வுல கம்நிகரே. (உ)

(ப - ரை) கேயம் தீம் குழல் ஊதிற்றும் - பாட்டுக்களுடன்
இனியதான வேணுவை ஊதினதும், நிரை - பசுமாடுகளின் கூட்

டங்களை, மேய்த்ததும், கெண்டை - கெண்டைமீனைப்போல், ஒண் - அழகான, கண - கண்களையும், வாசம் பூ குழல் - ஸ்வபாவமான வாஸனையுள்ள அழகான மயிர்முடியையுமுடைய, பின்னை - நப்பின்னைப் பிராட்டியினுடைய, தோள்கள் மணந்ததும் - தோள்களோடே சேர்ந்ததும், இவைகளும் மற்றும் பல, மாயம் கோலம் பிரான் தன் - ஆச்சரியமான அழகையுடைய பிரானுடைய, செய்கை - லீலைகளை, நினைந்து - நினைத்து, மனம் குழைந்து - மனது உருகி, நேயத்தோடு - பிரீதியோடு, போது - காலம், கழிந்த - போய்விட்டன, எனக்கு, எ உலகம் நிகர் - எந்த உலகம் ஸமம்?

(கருத்து) கண்ணன் பகலில் பிருந்தாவநத்தில் அறிவுள்ளவர்களும் அறிவில்லாதவர்களும் உருகும்படி வேணுகாநம் செய்ததும், மாட்டுக் கூட்டத்தை மேய்த்ததும், இதினுலுண்டான சிரமமும், நப்பின்னையை விட்டுப் பிரிந்திருந்த வருத்தமும் போகும்படி ஸாயங்காலத்தில் திரும்பிவந்து கெண்டை மீன்கள் போன்ற அவளுடைய கண்களால் பார்க்கப் பட்டதும், அவளுடைய இயற்கையாய் வாஸனையுள்ள அழகான கூந்தலை அநுபவித்ததும், அவளுடைய ஸுகமான தோள்களைக் கட்டிக் கொண்டதும், இவைகளால் அவனுக்குண்டான மிகுந்த அழகும், அவளைக் கட்டிக்கொண்டதாலே அவனுடைய திருமேனியில் பட்ட அவள் ஸ்தநங்களின் குங்குமமும் சந்தனமும் கஸ்தூரியும் ஆகிய இவைகளை எனக்குக் காட்டினன். இவைகளை நினைத்து மனது உருகி, பிரீதியுடன் காலத்தைப் போக்கினேன். இப்படி யிருக்கிற எனக்கு ஸமமானவர் எவர் இருக்கிறார்? வைகுந்தத்திலும் ஸமமானவருண்டோ?

குறிப்பு:—(1) 'கேயத்தீங்குழல்' என்கிறவிடத்தில், கண்ணன் கோபிகைகளின் பெயர்களை வைத்துப் பாட்டுக்களை வேணுவில் பாடினன். இது, பெண்களை அழைப்பதற்கும், மாடுகளை மேய்ப்பதற்கும் ஸாதநமாயிருந்தது.

(2) சக்கரவர்த்தித் திருமகன் கரன்தூஷணன் முதலானவர்களை வதம்செய்து வருத்தப்பட்டுத் திரும்பி வந்தபோது அந்த ச்ரமம் போகும்படி அவனை ஸீதை கட்டிக்கொண்டாள். அது போல, நப்பின்னை மாடுமேய்த்துச் சிரமப்பட்டுத் திரும்பிவந்த

கண்ணனைக் கட்டிக்கொண்டு தன்னுடைய பார்வையாலும், தன்னுடைய மயிர் முடியின் வாஸனையாலும், தன்னுடைய மிருதுவான தோள்களாலும் அவனுடைய சிரமத்தைப் போக்கினாள் என்பது கருத்து. (2)

---

நிகரின் மல்லரைச் செற்றதும் நிரைமேய்த் ததுநீ ணெடுங்கைச்
சிகர மாகளி றட்டது மிவைபோல் வனவும் பிறவும்
புகழ்கொள் சோதிப் பிரான்றன் செய்கை நினைந்து புலம்பியென்று
நுகர வைகல் வைகப்பெற் றேனெனக் கென்னினி நோவதுவே (௩)

(ப - ரை) நிரை மேய்த்ததும் - மாட்டுக் கூட்டங்களை மேய்த்ததும், நிகர் இல் - ஒப்பில்லாத, மல்லரை செற்றதும் - (சாணூரன் முஷ்டிகன் என்ற) மல்லர்களைக் கொன்றதும், நீள் நெடுங்கை - மிகவும் நீண்ட துதிக்கையையுடைய, சிகரம் மா - மலையின் சிகரம்போல பெரிய, களிறு அட்டதும் - (குவலயாபீடம் என்கிற) யானையைக் கொன்றதும், இவை போல்வனவும் பிறவும் - இவைகளைப்போல ஆச்சரியமான கேசி முதலான அஸுரர்களைக் கொன்றதும் ஆகிய, புகழ் கொள் - காந்தியையுடைய, சோதி - அப்ராக்ருதமான திருமேனியையுடைய, பிரான் தன் - ஸ்வாமியினுடைய, செய்கை - லீலைகளை, நினைந்து, புலம்பி - (அவைகளை உள் அடங்காமல்) வாய்விட்டுச் சொல்லி, என்றும் - எப்போதும், நுகர - அநுபவிக்கும்படி, வைகல் - காலமானது, வைகப்பெற்றேன் - நடக்கப் பெற்றேன். இனி - இப்படியான பின்பு, எனக்கு, நோவது என் - வருத்தப்படுவது எதற்காக?

(கருத்து) மாட்டுக் கூட்டங்களை எப்படிக் கண்ணன் ஆயாசமின்றி மேய்த்தானோ, அப்படியே ஆயாஸமில்லாமல் புஜபலத்தால் தங்களுக்கு ஒப்பில்லாத சாணூரன் முஷ்டிகன் முதலான மல்லர்களைக் கொன்றதும, அப்படியே மிகவும் நீண்ட துதிக்கையுள்ளதாய் மலைச்சிகரம்போல் பெரிதாய் இருந்த குவலயாபீடம் என்கிற யானையைக் கொன்றதும, இவைகளைப்போல் ஆச்சரியமான கேசி முதலான அஸுரர்களைக் கொன்றதும் ஆகிய காந்தியுள்ள அப்ராக்ருதமான திருமேனியையுடைய ஸ்வாமியான கண்ணன் தன்னுடைய லீலைகளைக் காட்டினான். அவைகளை நினை

த்து ஸந்தோஷமுள்ளடங்காமல் வாயாலே அவைகளைச் சொல்லிக் கொண்டு அவைகளை அநுபவித்து என் காலம் போய்க் கொண்டிருக்கிறது. உடம்பை ரக்ஷிப்பது முதலான வியாபாரங்களாலே இந்த அநுபவம் நடுவில் இல்லாமலிருப்பதுமில்லை அதற்கு முடிவுமில்லை. இப்படியான பின்பு எனக்கு எதற்காக வருத்த முண்டாகும்? அநுபவத்துக்கு காலமில்லாமலா? அல்லது அநுபவத்தில் ரஸம் போய்விடுவதாலா? ஒன்றுமில்லை.

குறிப்பு :—(1) 'நிகரில்' என்பதற்குக் கருத்து.—கண்ணன் திருமேனி மிகவும் மிருதுவானது; அவன் சிறு பிள்ளை; மல்லர்களின் உடம்புகளோ வஜ்ரம்போல் கடினமானவைகள். ஆகையால், கண்ணன் அவர்களுடன் சண்டைபோடுவதற்குத் தகுந்தவன் அல்லன் என்பது கருத்து

(2) கண்ணனுக்கு யானையையும் மல்லர்களையும் கொன்றதினால் முகத்தில் ஒரு காந்தியுண்டாய் அழகாயிருந்தது அதைக் கண்ட ஸபையிலிருந்த மதுரையிலுள்ள ஸ்திரீகள் அதைக் கொண்டாடினார்கள். இது 'புகர்கொள்' என்பதால் விளங்கும்.(3)

---

நோவ வாய்ச்சி யுரலோடார்க்க விரங்கிற்றும் வஞ்சப் பெண்ணைச்
சாவப் பாலுண் டதுமூர சகட மிறச்சா டியதுந்
தேவக் கோலப் பிரான்றன் செயகை நினைந்து மனங்குழைந்து
மேவக் காலங்கள் கூடினே னெனக்கென் னினிவேண் டுவதே (ச)

(ப - ரை) நோவ - திருமேனிக்கு வருத்தமுண்டாகும்படி, ஆய்ச்சி - இடைச்சியான யசோதை, உரலோடு, ஆர்க்க-பொருந்தியிருக்கும்படி (கெட்டியாகக் கட்டினபோது), இரங்கிற்றும - ஏங்கியிருந்ததும், வஞ்சம் பெண்ணை - (தாய்போல் ரூபத்தை எடுத்துக்கொண்டு) வஞ்சனை செய்த, (பூதனை என்கிற) ஸ்திரீயை, சாவ - சாகும்படி, பால் உண்டதும் - (அவளுடைய) பாலைச் சாப்பிட்டதும், ஊர் சகடம் - ஊர்ந்துவந்த வண்டியானது, இற - முறியும்படி, சாடியதும் - (திருவடிகளால்) உதைத்ததும் ஆகிய, தேவம் கோலம் - விளங்குகிற அழகையுடைய, பிரான் தன் - ஸ்வாமியினுடைய, செய்கை - லீலைகளை, நினைந்து, மனம்

குழைந்து - மனது உருகி, மேவ - ஸ்நேஹத்துடன் அநுபவிக்க, காலங்கள் கூடினேன் - காலம் கிடைக்கப்பெற்றேன், இனி - இப்படியானபின்பு, எனக்கு வேண்டுவது என் - எனக்கு அடைய வேண்டியது என்ன?

(கருத்து) இடைச்சியான யசோதை உரலோடே சேர்த்துக் கட்டின திருமேனியில் கயிறு அழுந்தும்படி கட்டினபோது, அவன் மனதில் வருத்தப்பட்டதுபோலிருந்ததும், வஞ்சனையால் தாயின ரூபத்தை எடுத்துக்கொண்டு வந்த பூதனை என்கிற பெண் சாகும்படி அவளுடைய ஸ்தந்யத்தைச் சாப்பிட்டதும், அஸுரன் உள்ளே இருந்ததாலே ஊர்ந்துவந்த வண்டி முறியும்படி திருவடிகளாலே உதைத்ததும் ஆகிய அப்ராக்ருதமாய் விளங்குகிற திருமேனி அழகையுடைய தன்னுடைய லீலைகளை எனக்குக் காட்டினான். அவைகளை நினைத்து மனது உருகி அநுபவிக்கும்படி எனக்குக் காலம் கிடைத்திருக்கிறது இந்த அநுபவமே எனக்கு பிரயோஜனமாயிருக்கிறது இதைத் தவிர நான் அடைய வேண்டிய பிரயோஜனம் என்ன இருக்கிறது?

குறிப்பு.—(1) கண்ணனுடைய திருமேனியில் கயிறு அழுந்துவதைப் பார்த்து ஆழ்வார் தமமுடைய திருமேனியில் அதே அழுந்தினதாக அநுபவித்து "நோவ" என்கிறார்.

(2) தன் ஸங்கல்பத்தின் லேசத்தினால் கணக்கில்லாத அண்டங்களை அழிக்கச் சக்தியுள்ள எம்பெருமானுக்கு ஒரு ஸ்த்ரீ கட்டின கட்டை அவிழ்க்க முடியாதா? முடியாதது போலிருந்து அழுது கொண்டிருப்பது அவனுக்கு ஸ்வபாவமானதால் தான் அப்படியிருந்தானே; இப்படி ஆச்ரிதருக்கு ஸுலபனாயிருந்தது என்ன ஆச்சரியம் என்பது 'இரங்கிற்றும' என்பதின் கருத்து.

(3) ராமாவதாரத்தில் சூர்ப்பணகை என்கிற ராக்ஷஸியினுடைய மூக்கையும் காதுகளையும் அறுத்து அனுப்பிவிட்டான். இதனால் பின்னால் பெரிய சண்டை விளைந்தது. க்ருஷ்ணனோ பூதனையைக் கொன்று விட்டான் என்பது "சாவ" என்பதற்குக் கருத்து.

(4) "தேவக்கோலம்" என்பதற்கு, கண்ணன் திருமேனி அப்பிராகிருதமான வஸ்துவால் செய்யப் பட்டிருந்ததாலே அது

மிகவும் அழகாயிருந்தது அதிலேயே இந்த லீலைகளை யெல்லாம் செய்தான் என்பது கருத்து. அப்பிராக்ருதம் என்பது ஸத்துவம் முதலான மூன்று குணங்களையுடைய பிரக்ருதி என்கிற திரவியத்தாலே செய்யப்படாமல், ஸத்துவம் என்கிற ஒரேகுண முள்ளதாய் மிகுந்த காந்தியுள்ளதாய் இருக்கும் திரவியத்தால் செய்யப்பட்டது.

(இ - ம) இரக்கப்பற்றும், உண்டதும், சாடியதும் - தொழிற் பெயர்கள். (4)

---

வேண்டித் தேவ ரிரக்க வந்து பிறந்ததும் வீங்கிருள்வாய்
பூண்டன் றன்னை புலம்பப் போயங்கோ ராய்க்குலம் புக்கதுங்
காண்ட லின்றி வளர்ந்து கஞ்சனைத் துஞ்சவஞ்சஞ் செய்ததும்
ஈண்டு நானலற் றப்பெற் றேனெனக் கென்ன விகலுளதே (ரு)

(ப - ரை) தேவர் இரக்க - தேவர்கள் வேண்டிக் கொள்ள, வேண்டி - (வஸுதேவரைத் தனக்குத் தகப்பனாக இருக்க) ஆசைப்பட்டு, வந்து - (திருப்பாற்கடலிலிருந்து) வந்து, பிறந்ததும் - அவதாரஞ்செய்ததும், அன்று, அன்னை - தாயான தேவகி, பூண்டு - (பிள்ளையினிடத்தில் ஆசையால்) கட்டிக்கொண்டு, புலம்ப - கதற, வீங்கு - வளருகிற, இருள்வாய்-இருளில் (நடுராத்திரியில்), போய்-(அங்கிருந்து தப்பிப்) போய், அங்கு-அந்த கம்ஸனுடைய தேசத்துக்குள்ளே, ஓர்-ஒப்பில்லாத, ஆய்க்குலம்-இடையர் கூட்டத்தில், புக்கதும் - புகுந்ததும், காண்டல் இன்றி - (கம்ஸன் முதலானவர்கள்) தன்னைக் காணாதபடி, வளர்ந்ததும், கஞ்சனை - கம்ஸனை, துஞ்ச - நசிக்கும்படி, வஞ்சனை செய்ததும் - வஞ்சனையைச் செய்ததும், (ஆகிய இவைகளை), ஈண்டு - இப்போது, நான் அலற்றப் பெற்றேன், எனக்கு, என்ன இகல் - என்ன விரோதம், உளது - இருக்கிறது?

(கருத்து) அஸுர ராஜாக்களைத் தூக்குவதால் பூமிக்கு உண்டாயிருந்த பாரத்தை இறக்க வேண்டுமென்று, தேவர்கள் பிரார்த்திக்க, வஸுதேவரைத் தனக்கு தகப்பனாக ஆசைப்பட்டுத் திருப்பாற்கடலிலிருந்துவந்து அவர் வைக்கப்பட்டிருந்த சிறைச்சாலையில் அவதரித்ததும், உடனே தாயான தேவகி பிள்

ளையை ஸ்நேஹத்தோடு கட்டிக்கொண்டு "துஷ்ட புத்தியுள்ள கம்ஸன் வந்தால் என்ன ஆகுமோ" என்று பயப்பட்டு அழ, தான் நான்கு புஜங்களுள்ளவனாயிருப்பதை மறைத்துக்கொண்டு அங்கிருந்து நடுராத்திரியிலே போய்க் கம்ஸனுடைய தேசத்துக்குள்ளேயே ஒப்பில்லாத ஒரு இடையர் கூட்டத்துக்குள்ளே புகுந்து, கம்ஸன் முதலானவர்கள் சாறுதப்படி வளர்ந்தது, பிறகு மதுரைக்குத் திரும்பிப் போய்க் கம்ஸனை சாகும்படி வதம் செய்தது ஆகிய இவைகளை அவன் எனக்குக் காட்டுகிறான். இவைகளை இப்போது ஆசையால் அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கப் பெற்றேன். இப்படியிருந்த பின்பு, அவனை அநுபவிப்பதற்கு எனக்கு என்ன விரோதமிருக்கிறது?

குறிப்பு:—'ஓர்' என்பதற்கு கம்ஸனுக்குப் பயப்படாமல் கண்ணனை மறைத்து வைத்துக்கொண்டு ரக்ஷிக்கும்படி சக்தியுள்ளது ஆயர்குலம் என்பது கருத்து. (௫)

---

இகல்கொள் புள்ளைப் பிளந்தது மிமிலே றுகள்செற் றதுவும்
உயர்கொள் சோலைக் குருந்தொ சித்தது முட்பட மற்றும்பல
அகல்கொள வைய மளந்த மாயனென் னப்பன்றன் மாயங்களே
பகலிராப் பரவப் பெற்றே னெனக்கென்ன மனப்ப ரிப்பே. (௬)

(ப-ரை) இகல் கொள் - (மனதில்) விரோதத்தைக் கொண்ட, புள்ளை - பக்ஷியை (கொக்கு ரூபத்துடன் வந்த அஸுரனை), பிளந்ததும் - வாயைப் பிளந்ததும், இமில் ஏறுகள் - பெரிய முசுப்பு முரிகளையுடைய ஏழு காளைமாடுகளை, செற்றதுவும் - (நப்பின்னைக்காகக்) கொன்றதுவும், உயர் கொள் - உயர்ந்திருப்பதைக்கொண்ட, சோலை - சோலையாயிருந்த, (மிகவும் தழைத்திருந்த) குருந்து ஒசித்ததும் - குருந்தமென்கிற மரத்தை முறித்ததும், உட்பட மற்றும் பல - இவை முதலான அநேகமான, அகல் கொள் வையம் - அகலத்தைக்கொண்ட பூமியை, அளந்த, மாயன் - ஆச்சரியனான, என் அப்பன் தன் - என ஸ்வாமியினுடைய, மாயங்களே - ஆச்சரியமான லீலைகளையே, பகல் இரா - பகலும் ராத்திரியும், பரவ - ஸ்தோத்திரம் பண்ண, பெற்றேன், எனக்கு, மனம் பரிப்பு என்ன - மனதில் வருத்தம் என்ன இருக்கிறது?

(கருத்து) கம்ஸனால் அனுப்பப்பட்டு மனதில் விரோதத்துடன் கொக்கு ரூபத்தை எடுத்துக்கொண்டு வந்த அஸுரனுடைய வாயைப் பிளந்ததும், பெரிய பிடரிகளையுடைய ஏழு காளை மாடுகளைப் பின்னைக்காகக் கொன்றதும், உயர்ந்து தழைத்து இருந்த அஸுரன் உள்ளே இருந்த குருந்தமரத்தை முறித்ததும், இவைகள் உள்பட விசாலமான பூமியைத் திரிவிக்கிரமரூபத்துடன் தன் திருவடியால் அளந்த ஸ்வாமி செய்த இந்த ஆச்சரியமான லீலைகளை அவன் எனக்குக் காட்டுகிறான். இவைகளை நான் ராத்திரியிலும் பகலிலும் ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு இருக்கப் பெறுகிறேன். இப்படியிருக்கிற எனக்கு, மனதில் என்ன வருத்தமிருக்கக்கூடும்? ஒன்றுமில்லை.

குறிப்பு.—(1) 'இராப் பகல்' என்பதற்கு, "உலகத்தார் விஷயங்களை அநுபவித்துக்கொண்டு காலத்தைப் போக்குகிறார்கள். நான் அவர்களைப்போலிராமல் கண்ணனுடைய லீலைகளை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கப் பாக்கியம் பண்ணினேனே" என்று ஆழ்வார் தம்மைக் கொண்டாடுகிறார் என்பது கருத்து.

(2) இந்தப் பாட்டில் 'அப்பன்' என்கிற சொல்லுக்கும், முதல் நாலு பாட்டுகளில் 'பிரான்' என்கிற சொல்லுக்கும் உபகாரம் செய்தவன் என்பது பொருள். தன் லீலைகளைக்காட்டித் தமக்கு உபகாரம் செய்ததை நினைத்து எம்பெருமானை 'பிரான்' என்று ஆழ்வார் சொல்லுகிறார். (6)

---

மனப்ப ரிப்போ டழுக்கு மானிட சாதியிற் றன்பிறந்து
தனக்கு வேண்டுருக் கொண்டு தான்றன சீற்றத் தினைமுடிக்கும்
புனத்து ழாய்முடி மாலைமார்ப னென்னப் பன்றன் மாயங்களே
நினைக்கு நெஞ்சுடை யேனெனக் கினியார் நிகர்நீ ணிலத்தே. (எ)

(ப - ரை) மனப் பரிப்போடு - (ஆச்ரிதர்களுடைய துக்கத்தைப் பொறுக்கமுடியாத) கருணையோடு, அழுக்கு - பலவிதமான தோஷங்களுக்கு இடமான, மானிட சாதியில் - மனித ஜாதியில் பிறந்து, தனக்கு வேண்டு உரு கொண்டு - தனக்கு வேண்டிய ரூபங்களை எடுத்துக்கொண்டு, தான், தன் சீற்றத்

தினை - தன் கோபத்தை, முடிக்கும் - தீர்த்துக்கொண்டவனும், புனம் துழாய் - தான் வளருகிற நிலத்திலிருந்தாற்போல் காணப் படுகிற துளஸியையணிந்த முடி - கிரீடத்தையும், மாலை மார்பன் - துளஸிமாலையையணிந்த மார்பையுடையவனுமான, என் அப்பன் தன் - என் ஸ்வாமியினுடைய, மாயங்களை - ஆச்சரியமான லீலைகளை, நினைக்கும் நெஞ்சு உடையேன் - நினைக்கும்படி-யான மனத்தையுடையவனான, எனக்கு, இனி - இந்த ஸ்வபாவத்தை அடைந்தபின்பு, நீள் நிலத்து - விசாலமான பூமியிலே, யார் நிகர்- யார் ஸமானமானவர் ?

(கருத்து) ஆச்ரிதர்களுடைய துக்கத்தைப் பொறுக்க முடி-யாமல் கருணையுடன் பலவித தோஷங்கள் நிறைந்த மனித ஜாதியில் தனக்கேயுள்ள அழகான திருமேனியுடன் அவதாரம் செய்து, இரண்டு புஜங்களையுடைய திருமேனியோ, நான்கு புஜங்களையுடைய திருமேனியோ அந்தந்தக் காலத்திலே வேண்டிய ரூபத்தை எடுத்துக்கொண்டு, ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் செய்து, தன்னுடைய கோபத்தைத் தீர்த்துக்கொண்டு தன் இஷ்டம் நிறைவேறினதைக் காட்டி ஸந்தோஷப்பட்டு ஸம்ஹாரம் செய்து, அழகான துளஸிமாலைகளைக் கிரீடத்திலும் திருமார்பிலும் அணிந்துகொண்டிருப்பதை எனக்கு அவன் காட்டுகிறான். இப்படிப்பட்ட என் அப்பனுடைய ஆச்சரியமான லீலைகளை எப்போதும் நினைக்கும் மனதாகிய பெரிய நிதியையுடையவனாய் இருக்கிறேன். இப்படியிருக்கிற எனக்கு ஸமானமானவர் இந்த விசாலமான பூமியில் யார் இருக்கிறார் ?

குறிப்பு —(1) கண்ணன் பத்து மாதம் தாயார் கர்ப்பத்திலிருந்தபடியாலும், தாயின் ஸ்தநங்களில் பால் குடித்தாலும், அவர்கள் தன்னைக் கட்டவும் பிடிக்கவும் ஸுலபனாயிருந்ததாலும் அவதாரத்தை 'பிறந்து' என்று பாட்டு சொல்கிறது.

(2) ஆச்ரிதர்களுக்கு விரோதம் செய்கிறவர்களிடத்தில் அவனுக்குக் கோபமுண்டாயிருந்தது. அவர்களை நாசம் பண்ணினதாலே ஆச்ரிதர்களுக்கு க்ஷேமமுண்டாயிற்று. அவனுக்கும் உண்டாயிருந்த கோபமும் போய்த் தன் லீலையையும் முடித்துக் கொண்டான் என்பது "தன் சீற்றத்தினை முடிக்கும்" என்பதற்குக் கருத்து.

(3) "புனத்துழாய்" என்பதற்கு, எமபெருமானுடைய திருமேனியிலிருப்பதால், துளஸி தான் வளர்ந்த இடத்தில் இருந்தது போலவே வாடாமல் அழகாய் இருந்ததென்பது கருத்து.

(4) இரண்டாம் பாட்டில், "எனக்கு எவ்வுலகம் நிகரே" என்று சொன்னபடியால அதை இங்கே மறுபடியும் சொல்ல வேண்டியதில்லையே. "ஆர் நிகர் நீணிலத்தே" என்று சொன்னதற்கு, 'அஜ்ஞாநம் நிறைந்த இந்தப் பூமியில் இருந்தும் மற்றவர்களைப்போலில்லாமல் நாம் கிருதார்த்தராக ஆனோம்' என்று ஆழ்வார் ஸந்தோஷப்படுகிறார் என்பது கருத்து.

(5) மனப் பரிப்பு - பரிப்பு என்பதற்கு துக்கம் என்று பொருள். இஃது ஆகுபெயராய்த் துக்கத்தைப் பொறுக்காமையாகிற கருணையைச் சொல்லுகிறது. (7)

---

நீணி லத்தோடு வான்வியப்ப நிறைபெரும் போர்கள் செய்து
வாண னுயிரந் தோடு ணித்தது முட்பட மற்றும்பல
மாணி யாய்நிலங் கொண்டமாய னென்னப் பன்றன் மாயங்களே
காணு நெஞ்சுடை யேனெனக் கினியென்ன கலக்க முண்டே. (அ)

(ப - ரை) நீள் நிலத்தொடு - விஸ்தாரமான பூமியிலிருக்கிறவர்களுடன், வான் - ஆகாசத்திலிருக்கிறவர்களும், வியப்ப - ஆச்சரியப்படும்படி, நிறை - (ஸேனைகள்) நிறைந்த, பெரும் போர்கள் - பெரிய சண்டைகளை, செய்து, வாணன் - வாணன் என்கிற அஸுரனுடைய, ஆயிரம் தோள் துணித்ததும்-ஆயிரம் தோள்களை அறுத்ததும், உள்பட மற்றும் பல - இவை முதலான வேறு பல, மாணியாய் - (வாமந) ப்ரம்மசாரியாய், நிலம் - பூமியை, கொண்ட - மஹாபலியிடமிருந்து எடுத்துககொண்ட, மாயன் - ஆச்சரியமுள்ளவனை, என்னபபன் தன்-என் ஸ்வாமியினுடைய, மாயங்களை-ஆச்சரியமான லீலைகளை, காணும் நெஞ்சுடையேன் - பார்க்கும்படியான மனதையுடையவனை, எனக்கு, இனி, என்ன கலக்கம் உண்டு?

(கருத்து) பூமியிலுள்ளவர்களும் ஆகாசத்தில் உள்ளவர்களும் ஆச்சரியப்படும்படி ஸேனைகள் நிறைந்த பெரிய சண்டை

களைச் செய்து, வாணன் என்கிற அஸுரனுடைய ஆயிரம் தோள்களை அறுத்தது உள்பட, வாமநப் பிரமசாரியாய் மஹாபலியிடமிருந்து பூமியை எடுத்துக்கொண்ட ஆச்சரியமான என் ஸ்வாமியினுடைய ஆச்சரியமான பல லீலைகளை அவன் எனக்குக் காட்டினான். அவைகளைப் பார்க்கிற மனதையுடைய எனக்கு இனிமேல் என்ன கலக்கமுண்டு? ஒன்றுமில்லை.

குறிப்பு :—(1) கண்ணன் வாணனுடன் சண்டைபோடும்போது அவனுக்கு உதவியாக வந்த ருத்திரனும், சுப்பிரமணியனும அக்கினியும் மற்றவர்களும் தனித்தனியாய்ச் சண்டை செய்தார்கள். இதனால் "போர்கள்" என்று பன்மையாகச் சொல்லப்பட்டது.

(2) கண்ணனுடைய லீலைகளைப் பார்த்துக்கொண்டிருந்த ஆழ்வார் வாமநனுடைய உலகு அளந்த லீலையைச் சொன்னதின் கருத்து—கிருஷ்ணன லீலைகளைப்போல வாமநன் லீலையும் ஆச்சரியமாயிருந்தது என்பதும, அதையும் ஆழ்வார் பார்த்தார் என்பதும.

(3) "காணும் நெஞ்சுடையேன்" என்பதற்கு, 'முடியானே'யில் (3–8) ஆழ்வாருடைய ஒவ்வொரு இந்திரியமும் மற்ற இந்திரியங்களின் லீலையை ஆசைப்பட்டதுபோல, அவருடைய மனதும இந்த வேலைகளை நினைத்ததுபோல பார்த்தது என்பது கருத்து.

---

கலக்க வேழ்கட லேழ்மலை யுலகே ழுங்கழி யக்கடாய்
உலக்கத் தோகொடு சென்ற மாயமு முட்பட மற்றும்பல
வலக்கை யாழி யிடக்கைச் சங்க மிவையுடை மால்வண்ணனை
மலக்கு நாவுடை யேற்கு மாறுளதோ விம்மண்ணின் மிசையே. (௩)

(ப - ரை) ஏழ்கடல் - ஏழு ஸமுத்திரங்களும், ஏழ்மலை - ஏழு (பெரிய) மலைகளும், உலகுஏழும - ஏழுஉலகங்களும், கலக்க - கலங்கும்படி, கழிய-(இவைகளெல்லாவற்றையும) தாண்டி, கடாய்-(திருத்தேரை) நடத்தி, உலக்க - முடிய, (திருநாட்டைப்போய்ச் சேரும்படி) தேர்கொடு-தேரைக்கொண்டு, சென்ற-போன, மாயமு

மும் - ஆச்சரியமான லீலையும், உள்பட மற்றும் பல - வேறுபல லீலைகளையும், வலம் கை ஆழி - வலக்கையில் சக்கரத்தையும், இடம் கை சங்கம் - இடதுகையில் சங்கத்தையும், இவை உடை - இவைகளை உடைய, மால் வண்ணனை - நீலவர்ணமுள்ள கண்ணனையும், மலக்கும்-(ஸந்தோஷத்தினால்) கலங்கும்படி பண்ணத்தகுந்ததான, நாவுடையேற்கு - நாக்கையுடைய எனக்கு; இ மண்ணினமிசை - இந்த பூமியிலே, மாறு உளதோ - எதிரானவர் உளரோ?

(கருத்து) வைதிகப்பிராம்மணனுடைய பிள்ளைகளைக்கொண்டு வருவதற்காக எழுந்தருளும்போது ஏழுஸமுத்திரங்களும் ஏழு பெரிய மலைகளும் ஏழு உலகங்களும் அவன் அழகைக்கண்டு அதிக ஸந்தோஷத்தால் கலங்கும்படி தேரை நடத்தி, அவைகளைத் தாண்டித் திருநாட்டுக்குப்போய்ச்சேர்ந்த ஆச்சரியமான லீலையும், மிகுந்த சீக்கிரத்துடன்போய் வேகமாய் திரும்பிவந்ததும், அந்தப் பிள்ளைகளை உயிருடன் கொண்டுவந்ததும் உள்பட வேறு பல லீலைகளும், ஆச்ரிதர்களிடமிருக்கும் வாத்ஸல்யத்தாலே அவர்களை ரக்ஷிப்பதற்காக வலது திருக்கையில் சக்கரமும் இடது திருக்கையில் சங்கமும் நீலமான திருமேனியும் உடையவனாய் இருப்பதும் ஆகிய இவைகளை அவன் எனக்குக் காட்டினான். அவைகளை நாக்காலே பாடி அவன் அதைக் கேட்டு ஸந்தோஷத்தினாலே மனது உருகும்படிசெய்த எனக்கு இந்த உலகத்தில் ஸமமாக எவர் இருக்கிறார்? ஒருவருமில்லை.

குறிப்பு :--'இவ்விதமான பாக்கியம் பெற்றேன். ஆகையால், நான் தன்னியன்' என்று ஆழ்வார் ஸந்தோஷப்படுகிறார். (9)

---

மண்மிசைப் பெரும்பாரம் நீங்க வோர்பா ரதமா பெரும்போர்
பண்ணிமா யங்கள்செய்து சேனையைப் பாழ்பட நூற்றிட் டுப்போய்
விண்மிசைத் தனதாம மேபுக மேவிய சோதி தன்றாள்
நண்ணிநான் வணங்கப் பெற்றே னெனக்கார் பிறர்நா யகரே. (௧௦)

(ப - ரை) மண்மிசை - பூமியிலிருந்த, பெரும் பாரம் - (அஸுரராஜாக்களைச் சுமப்பதாகிய) பெரிய பாரம், நீங்க - போகும்படி, மாயங்கள் - ஆச்சரியமான லீலைகளை, செய்து,

ஓர் - ஒப்பில்லாத, மா பாரதம் - மஹாபாரதம் என்கிற, பெரும் போர் பண்ணி - பெரிய சண்டையைச் செய்வித்து, சேனையை பாழ்பட - ஸேனைகளைப் பாழாகும்படி, நூற்றிட்டு - நாசம் செய்து, போய் - (வந்த வேலை முடிந்தவுடன் இந்த உலகத்தைவிட்டுப்) போய், விண்மிசை - பரமபதத்திலே, தனதாமமே - தனக்கேயுள்ள இடத்தில், புக மேவிய - ஆசைப்பட்டுப் புகுந்த, சோதி தன் - மிகுந்த காந்தியுடைய கிருஷ்ணனுடைய, தாள் - திருவடிகளை, நண்ணி - கிட்டி, நான் வணங்கப்பெற்றேன், எனக்கு, பிறர் நாயகர் - வேறு யஜமாநர், ஆர் - யாரிருக்கிறார்?

(கருத்து) அஸுரராஜாக்களைச் சுமப்பதாகிய பூமியின் பெரும் பாரமானது போகும்படி, ஜயத்ரதனைக் கொல்லுங் காலத்தில் சக்ரத்தினாலே ஸூரியனை மறைத்தது முதலான ஆச்சரியமான பல லீலைகளைச் செய்து, சண்டைக்குவந்த ஸேனை பாழாகும்படி செய்ததையும், தாம் அவதாரம் பண்ணின காரியம் முடிந்தவுடன் இந்தப் பூமியைவிட்டுப் போய் வைகுந்தத்தில் தனக்கே உள்ள இடத்தில் ஆசையோடு புகுந்ததையும் அவன் எனக்குக் காட்டினான். இப்படிப்பட்ட மிகுந்த காந்தியுள்ள திருமேனியோடுகூடிய கண்ணன் திருவடிகளை நான் கிட்டிக் கைங்கரியம் பண்ணும்படியான பாக்கியத்தைப்பெற்ற எனக்கு மேற்பட்டவர் எவராவது உண்டோ? ஒருவருமில்லை.

குறிப்பு:—(1) "பெரும்பாரம்" என்பதற்கு, பூமிக்கு விச்வம்பரா என்று பெயர். அதாவது எல்லாவற்றையும் தாங்குகிறவள் என்பது. அவள்கூட அஸுரராஜாக்களின் பாரத்தைத் தாக்கமுடியவில்லை என்பது கருத்து.

(2) 'நூற்றிட்டு' என்பதற்கு உபாயங்களைச் செய்து என்று பூர்வாசார்யர்கள் வியாக்யாநம். (10)

---

நாய கன்முழு வேழுல குக்குமாய் முழுவே ழுலகுந்தன்
வாய கம்புக வைத்து மிழ்ந்தவை யாயவை யல்லனுமாம்
கேச வனடி யிணைமிசைக் குருகூர்ச் சடகோ பன்சொன்ன
தூய வாயிரத் திப்பத்தாற் பத்த ராவர்துவ ளின்றியே. (கக)

(ப - ரை) முழு ஏழு உலகுக்கும் - ஏழு உலகங்கள் எல்லாவற்றுக்கும், நாயகனாய் - ஈசுவரனாய், முழு ஏழுலகும் - ஏழு உலகங்கள் எல்லாவற்றையும், தன் வாய் அகம் வைத்து - (பிரளய

காலத்தில்) தன் வாயில் வைத்து (தன் வயிற்றில் வைத்துக் கொண்டு), உமிழ்ந்து - (ஸிருஷ்டிகாலத்தில அவைகளை) வெளிப் படுத்தி, அவையாய் - அவைகளுக்கு ஆத்மாவாயிருந்து, (அந்த ரூபங்களாகத் தோன்றி) அவை அல்லனுமாம் - அவைகளின் தோஷங்களால தொடப்படாதவனும ஆகிய, கேசவன் - (கேசி என்கிற அஸுரனைக கொன்ற) கண்ணனுடைய, அடி இணை மிசை - இரண்டு திருவடிகளின் விஷயமாய், குருகூர் சடகோபன் சொன்ன ஆயிரத்து, தூய - பரிசுத்தமான, இ பத்தால் - இந்தப் பத்துப் பாட்டுககளால் (இவைகளை அடிககடி படிபபதாலே), துவ ளின்றி - குற்றமில்லாமல், பத்தர் ஆவர் - பக்தியைசசெய்தவர்கள் ஆவர்கள.

(கருத்து) ஏழுஉலகங்களாகிய எல்லாவற்றையும் நியமநம் செய்துகொண்டு அவைகளைத தனவயிற்றில்வைத்து ரக்ஷித்து ஸிருஷ்டிகாலத்தில் அவைகளை வெளிப்படுத்தி அவைகளின் ரூப மாகத்தோனறி அவைகளின் தோஷங்களால தொடப்படாத வனும், இவைகளால் ஸாவேசுவரன என்று காட்டப்பட்டவனும், கேசி எனகிற அஸுரனைக கொன்றவனுமான கண்ணனுடைய இரண்டு திருவடிகள் விஷயமாய் ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப்பாட்டுக்களை அடிக்கடி படிக்கிறவர்களை அவைகளே அவ னிடத்தில் பரிபூர்ணமான பக்தியுள்ளவர்களாகச் செய்யும்.

குறிப்பு :—(1) முதல் இரண்டு அடிகளாலே கீழ்த்திருவாய் மொழியின் விஷயத்தையும், 'கேசவன்' என்கிற சொல்லாலே இந்தத்திருவாய்மொழியின அர்த்தத்தையும் சேர்த்து ஆழ்வார் இந்தத் திருவாய்மொழியில் நிசமநம் செய்கிறார்.

(2) 'தூய' என்பதற்கு ஆச்ரிதர்களுக்கு இனியவைகளாய்க் கண்ணனுடைய ஆச்சரியங்களாயிருககிற அவதாரஙகளையும் லீலை களையுமே இந்தத் திருவாய்மொழியில் சொல்லுகையாலே இதற்கு ஒரு பரிசுத்தி உண்டென்பது கருத்து.

(3) 'துவளின்றி' என்பதற்கு, கண்ணனிடத்தில் உண்டா கும் பக்திக்கு ஓர் இடையூறு இல்லையென்பதும் ஒரு பிரயோ ஜநத்தைத் தேடாமல் செய்யப்படுவது என்பதும் கருத்து.

(இ - ம்) வாயகம் - வாயில், அகம்-ஏழாம் வேற்றுமையுருபு.

(11)

रासक्रीडादिकृत्यैर्विविधपशुप… [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ ७३ ॥

---

இந்தத்திருவாய்மொழியில், எம்பெருமான் எல்லாருடைய மனத்தையும் தான் செய்கிற லீலைகளாலே இழுக்கிறான் என்பது சொல்லப்படுகிறது. அவைகளாவன.—(1) ராஸக்ரீடை முதலானவைகள், (2) பலவிதமாய் வேணுகானம் செய்தது, (3) மல்லர்களைக் கொன்றது; (4) கோபிகைகளால் கட்டுப்பட்டு ஸாதுவாயிருந்தது, (5) ஆய்ப்பாடியில் பிறந்தது, (6) கம்ஸன் முதலான அஸுரர்களைக் கொன்றது; (7) தாழ்ந்தவர்களுக்குள்ளே பிறந்தது; (8) வாணாஸுரன் புஜங்களை அறுத்தது, (9) வைதிகன் பிள்ளைகளைத் திருப்பிக் கொண்டுவந்தது, (10) பாரதச் சண்டையைச் செய்வித்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினது. (73)

---

# ஐந்தாம் திருவாய்மொழி.

அவ—கீழ் இரண்டு திருவாய்மொழிகளாலே எம்பெருமானை அநுபவித்தது மாநஸாநுபவமாகவே இருந்தது அதனால், அவருக்குப்பிரீதி உண்டாயிற்று. இந்த அநுபவம் முற்றிப் பாஹ்யஸம்ச்லேஷத்தில் ஆசையை உண்டுபண்ணிற்று. ஆனால், அது கிடைக்கவில்லை. அதனால், துக்கமுமிருந்தது பிரீதியுடன் கலந்த இந்தத் துக்கத்தை இந்தத் திருவாய்மொழியில் தோழியின் பேச்சாகச் சொல்லுகிறார்.

(2) நாயகனுடைய ஸம்ச்லேஷம் கிடைக்காமல் வருந்தப்பட்டு அலற்றுகிற பெண்ணைப்பார்த்து, அவள் தாயாரும் பந்துக்களும், இவளை இழந்துவிடுவோமோ? என்று பயந்து, அவள் தோழியைப் பார்த்து, இவளுக்கு நாயகனிடத்தில் இருக்கிற ஆவலைக் குறைக்கவேண்டுமென்று சொல்ல, அவள் *துலைவில்லிமங்கலத்தில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானிடத்தில், இவள் மனது படிந்து விட்டது. இவள் விஷயத்தில் உங்களுக்கு ஆசை வேண்டாம் என்று தோழி சொல்லுகிறாள்.

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

துவளின் மாமணி மாட மோங்கு துலைவில்லி மங்க லந்தொழு
மிவளை நீரினி யன்னை மீருமக் காசை யில்லை விடுமினோ
தவளவொண் சங்கு சக்கர மென்றுந் தாமரைத் தடங்க
ணென்றுங்
குவளை யொண்மலர்க் கண்க ணீர்மல்க நின்று நின்று குழறுமே. (க)

(ப-ரை) துவள் இல் - தோஷமில்லாத, மா - மிகுந்த காந்தியையுடைய, மணி மாடம் - ரத்நங்களாலே செய்யப்பட்ட வீடுகள், ஓங்கு - உயர்ந்திருக்கிற, துலைவில்லிமங்கலம் - துலைவில்லிமங்கலம் என்கிற நகரத்தை, தொழும் இவளை - தொழுவதையே ஸ்வபாவமாக உடைய இந்தப் பெண்ணை, அன்னைமீர் - தாய்மார்களே! நீர், விடுமினோ - விட்டுவிடுங்கள், இனி - இனி

* தொலைவில்லிமங்கலம் என்றும் பாடமுண்டு.

ராஸக்ரீடாதிக்ருத்யைர் விவிதமுரலிகாவாதநேநோத்ஸ
ஸக்தைர் மல்லாவபங்காத் ஸகலவ்ரஜஜநநத: கம்ஸ
முக்யாரிஹத்யை: । நீசாதந்யேஷு ஜந்மந்யபி வ்ருஷலாஸ
ஹாஜ்யநத்வாதர்ஸநேந த்விஜஸுதபரிரக்ஷணாத் த்ருஷ்டஸ
ம்ருதி: க்ருஷ்ணஸ்ய காருண்யதோ ॥ ௭௩ ॥

---

இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் எல்லாருடைய மனத்தையும் தான் செய்கிற லீலைகளாலே இழுக்கிறான் என்பது சொல்லப்படுகிறது. அவைகளாவன.—(1) ராஸக்ரீடை முதலானவைகள், (2) பலவிதமாய் வேணுகானம் செய்தது, (3) மல்லர்களைக் கொன்றது; (4) கோபிகைகளால் கட்டுப்பட்டு ஸாதுவாயிருந்தது, (5) ஆய்ப்பாடியில் பிறந்தது, (6) கம்ஸன் முதலான அஸுரர்களைக் கொன்றது; (7) தாழ்ந்தவர்களுக்குள்ளே பிறந்தது; (8) வாணாஸுரன் புஜங்களை அறுத்தது, (9) வைதிகன் பிள்ளைகளைத் திருப்பிக் கொண்டுவந்தது, (10) பாரதச் சண்டையைச் செய்வித்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினது. (73)

---

# ஐந்தாம் திருவாய்மொழி.

அவ—கீழ் இரண்டு திருவாய்மொழிகளாலே எம்பெருமானை அநுபவித்தது மாநஸாநுபவமாகவே இருந்தது அதனாலே, அவருக்குப்பிரீதி உண்டாயிற்று. இந்த அநுபவம் முற்றிப் பாஹ்யஸம்ச்லேஷத்தில் ஆசையை உண்டுபண்ணிற்று. ஆனால், அது கிடைக்கவில்லை அதனால், துக்கமுமிருந்தது பிரீதியுடன் கலந்த இந்தத் துக்கத்தை இந்தத் திருவாய்மொழியில் தோழியின் பேச்சாகச் சொல்லுகிறார்.

(2) நாயகனுடைய ஸம்ச்லேஷம் கிடைக்காமல் வருத்தப்பட்டு அலறுகிற பெண்ணைப்பார்த்து, அவள் தாயாரும் பந்துக்களும், இவளை இழந்துவிடுவோமோ? என்று பயந்து, அவள் தோழியைப் பார்த்து, இவளுக்கு நாயகனிடத்தில் இருக்கிற ஆவலைக் குறைக்கவேண்டுமென்று சொல்ல, அவள் * துலைவில்லிமங்கலத்தில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானிடத்தில், இவள் மனது படிந்து விட்டது. இவள் விஷயத்தில் உங்களுக்கு ஆசை வேண்டாம் என்று தோழி சொல்லுகிறாள்

( எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

துவளின் மாமணி மாட மோங்கு துலைவில்லி மங்க லந்தொழு
மிவளை நீரினி யன்னை மீருமக் காசை யில்லை விடுமினோ
தவளவொண் சங்கு சக்கர மென்றுந் தாமரைத் தடங்க
ணென்றுங்
குவளை யொண்மலர்க் கண்க ணீர்மல்க நின்று நின்று குமுறுமே. (க)

(ப - ரை) துவள் இல் - தோஷமில்லாத, மா - மிகுந்த காந்தியையுடைய, மணி மாடம் - ரத்நங்களாலே செய்யப்பட்ட வீடுகள், ஓங்கு - உயர்ந்திருக்கிற, துலைவில்லிமங்கலம் - துலைவில்லிமங்கலம் என்கிற நகரத்தை, தொழும் இவளை - தொழுவதையே ஸ்வபாவமாக உடைய இந்தப் பெண்ணை, அன்னைமீர் - தாய்மார்களே! நீர், விடுமினோ - விட்டுவிடுங்கள், இனி - இனி

* தொலைவில்லிமங்கலம் என்றும் பாடமுண்டு.

மேல், உமக்கு - உங்களுக்கு, ஆசையில்லை - (இவள் விஷயத்தில் ஆசைப்பட இடமுமில்லை, (அதிகாரமுமில்லை), தவளம் - வெண்மையான, ஒண் - அழகான, சங்கு - சங்கம், சக்ரம் என்றும் - என்று சொல்லியும், தாமரைத் தடங்கண் என்றும் - தாமரைப்பூவின் இதழ்போல் விசாலமான திருக்கண்கள் என்று சொல்லியும், குவளை ஒண் மலர் - கருநெய்தலினுடைய அழகான பூவைப்போலிருக்கிற, கண்கள், நீர் மல்க - நீர் நிரம்ப, நின்று நின்று - (ஒவ்வொரு க்ஷணத்திலும் தளருகிற ஆத்மாவைத்) தரித்துக்கொண்டு தரித்துக்கொண்டு, குழறும் - (வாய்விட்டுச் சொல்லமுடியாமல் உள்ளே) குமிறுகிறாள்.

(கருத்து) தோஷமில்லாமல் மிகுந்த காந்தியுள்ள பலவித ரத்நங்களாலே செய்யப்பட்ட வீடுகள் உயர்ந்திருக்கிற திருத்தொலைவில்லிமங்கலம் என்கிற நகரத்தைத் தொழுவதே இவளுக்கு ஸ்வபாவமாயிருக்கிறது தாய்மார்களே! இவள் நீங்கள் சொன்னதைக் கேட்பள் என்கிற எண்ணத்தை விட்டுவிடுங்கள். இவள் விஷயத்தில் உங்களுக்கு ஆசைப்பட இடமுமில்லை. இது உனக்கு எப்படித் தெரியும என்றால், இவள் இருப்பைப் பாருங்கள். வெளுப்பாய் அழகான சங்கு சக்ரம் என்றும், தாமரைப்பூவைப் போல நீண்ட கண்கள் என்றும், சொல்லி அலற்றி, தாமரைப்பூவின் நிழலில் வளரவேண்டிய கருநெய்தல் பூவைப்போல் அழகான தன்னுடைய கண்கள் நீரைச் சொரியும்படி க்ஷணம் தோறும் தளருகிற தன் ஆத்மாவைத் தரித்துக்கொண்டு தரித்துக்கொண்டு வாயைவிட்டுச் சொல்லமுடியாமல் உள்ளுக்குள்ளே குமுறுகிறாள்.

குறிப்பு:—(1) முதலடியில் மாடங்களுக்குச் சொன்ன விசேஷங்களின் கருத்து—தொலைவில்லிமங்கலம் இவள் ஊருக்குக் கிட்ட இருக்கிறபடியால் அங்கே போய் அதைப் பார்த்தபிறகு, அதைவிட்டுப் பிரிந்தபோதிலும், அந்த ஊரிலுள்ள மாடங்களையும், அவைகளின் ரத்நங்களையும் பார்த்துக்கொண்டு வைத்த கண்ணை வாங்கமாட்டாமலிருக்கிறாள் என்பது.

(2) 'தொழுமிவளை' என்பதற்குக் கருத்து—இவ்வளவு ஆசையுள்ள இந்தப் பெண்ணை இனிமேல் திருப்பமுடியுமோ? என்பது.

(3) 'அன்னைமீர்' என்பதின் கருத்து—எம்பெருமான் இடத்தில் மனதை வைப்பது என்பது ஒன்றில்லையோ? நீங்களும் அப்படியிருக்க வேண்டாமா? அப்படியில்லாமல் அப்படியிருக்கிற இவளைத் தாயார் என்கிற உறவைக்கொண்டு திருப்பப் பார்க்கலாமா? என்பது.

(4) 'விடுமினோ' என்பதற்கு, தாஹம் எடுத்துத் தண்ணீரைக் குடிப்பவருக்குத் தடையாயிருக்கும் அருமையைப்போல் எம்பெருமானை இவள் அநுபவிப்பதற்குத் தடையாயிராமல், இவளுடைய பெருகிக்கொண்டிருக்கிற ஆசையைப் பார்த்துக் கொண்டிருங்கள் என்பது கருத்து.

(5) 'ஆசையில்லை' என்பதற்கு, இவளைத் துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் அதின் அழகைக் காட்டினீர்கள். இனிமேல் அவளைத் திருப்ப இடமுண்டோ? அதின் அழகைக் காட்டாமலே இருந்திருக்கவேண்டும் என்பது கருத்து.

(6) உரையில் அதிகாரம் (ப்ராப்தி) என்று எழுதினதற்குக் கருத்து—இவளுக்கு யௌவநம் வந்துவிட்டதே. இவள் மனது ஒருவனிடத்தில்படிந்த பிறகு தாயார் என்கிற உறவைக்கொண்டு இவள் ஆசையைப் போக்குவதற்கு உங்களுக்கு அதிகாரம் உண்டோ என்பது.

(7) 'சங்கு...தடங்கண் என்னும்' என்பதின் கருத்து—இவைகளைக் காணவேணுமென்று சொல்ல ஆரம்பித்தாள். அந்த வாக்கியத்தை முடிக்கச்சக்தியில்லை. சங்குசக்கரங்களையும், தாமரைக் கண்களையும், என்று சேர்த்துச்சொல்லவும் சக்தியில்லை சங்கு சக்கரம் என்றுசொல்லிக் கொஞ்சம்பொறுத்து, தாமரைத் தடங்கண் என்று சொல்லுகிறாள் என்பது.

(8) 'தவளவொண்சங்கு' என்கிறதற்குக் கருத்து—நீலமான திருமேனிக்கு ஒரு புதிய அழகை உண்டு பண்ணும்படி வெண்மையான சங்கு என்பது.

(9) இந்தத் திருவாய்மொழி ஆழ்வாருடைய ஸ்வபாவத்தைக் காட்டுகிறதென்று ஆசாரியர்கள் இதை மிகவும் கொண்டாடினார்கள். ஆறாயிரத்தில் ஒவ்வொரு பாட்டின் உரையும் இதை விளக்குகிறது. (1)

குமுறு மோசை விழவோ லித்துலை வில்லி மங்கலங் கொண்டுபுக்கு
அமுத மென்மொழி யாளை நீருமக் காசை யின்றி யகற்றினீர்
திமிர்கொண்ட லொத்து நிற்கு மற்றிவள் தேவதேவ பிரானென்றே
நிமியும் வாயொடு கண்க ணீர்மல்க நெக்கொ சிந்து கரையுமே. (உ)

(ப - ரை) குமுறும் ஓசை - குமிறுநிற்கிற ஓசையையுடைய (அநேக வாத்தியங்கள் ஏகோகாலத்தில வாசிக்கப்படுகிறபடியால் இஃது என்ன வாத்தியத்தின் ஓசையென்று சொல்லமுடியாத படி உண்டாகும சப்தத்தையுடைய), விழவு - உத்ஸவத்தினு டைய, ஒலி - கோஷத்தையுடைய, துலைவில்லிமங்கலம் - திருத் துலைவில்லிமங்கலம் என்கிற நகரத்தில், கொண்டுபுக்கு - (இவளைக் கூட அழைத்துக்) கொண்டுபோய்ப் புகுந்து, அமுதம் மென மொழியாளை - அமுதம்போல் இனிதும மென்மையுமுடையவளுமான பேச்சையுடைய இவளை, நீர் - நீங்கள், உமக்கு ஆசையின்றி, அகற்றினீர் - (இவள் உங்களை) விட்டுப் போகும்படி செய்தீர்கள், (இதற்கு என்ன அடையாளம் என்றால்), திமிர் கொண்டால் ஒத்து நிற்கும் - உடம்பு வாயுவினால் அசைவில்லாமலிருப்பதைக் கொண்டதுபோல் இவள் அசையாமலிருக்கிறாள், மற்று - அப் படியில்லாத (ஒரு வேலையைச்செய்யச் சக்தியுள்ளவளானபோது) இவள், தேவ தேவபிரான் - தேவர்களுக்கு (நித்யஸூரிகளுக் கு)த் தலைவனான விஷ்வக்ஸேநர் முதலானவர்களுக்குத் (தம்மை அநுபவிக்கும்படி கொடுத்து) உபகாரம் செய்கிறவன், என்றே - (இதற்குமேல் சொல்லமுடியாமல்) இது ஒன்றையே சொல்லி, நிமியும வாயொடு - உதடு அசையும் வாயோடு, கண்கள் நீர் மல்க- கண்கள் நீர் நிரம்ப, நெக்கு - உடம்பு கட்டுவிட்டு, ஒசிந்து - நன் றாய்த் தளர்ந்து, கரையும் - கரைகிறாள்.

(கருத்து) பலவித வாதயங்கள் வாசிக்கப்படுகிற உத்ஸவ கோஷத்தையுடைய துலைவில்லிமங்கலத்துக்கு இவளை அழைத் துக்கொண்டு போனீர்கள். இதனால் இவளை உங்களைவிட்டுப் பிரி யும்படி செய்தீர்கள். அதுமுதல் இவள் உங்களுடன் பேசவில்லை. இவளுடைய அமுதம்போலினியதான பேச்சை நீங்கள் கேட்கவு மில்லை. இப்படியானபின்பு, இவளை ஆசைப்பட இடமுண்டோ? நீ சொல்லுவதற்கு என்ன அடையாளம் என்றால் சொல்லு கிறேன். இவள் இருப்பைப் பாருங்கள். சிலவேளை வாயுவினால்

உடம்பு அசைவில்லாமலிருப்பதைப்போல் சித்திரத்தில் எழுதிய பொம்மைபோல அசையாமலிருக்கிறாள். ஒரு வேலையைச் செய்யச் சக்தியுண்டானபோது 'தேவதேவபிரான' என்று சொல்லுகிறாள். ஆரம்பித்த வாக்கியத்தை முடிக்கச் சக்தியில்லை. இவள் உதடு அசைகிறது. பேசச்சக்தியில்லை. இவள் கண்கள் நீரைச் சொரிகின்றன. இவள் உடம்பு கட்டுவிட்டு அதன்மேல் மிகுந்த தளர்ச்சியை அடைந்து மிகவும் உருகுகிறாள்.

குறிப்பு.—இவளைத் துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக் கொண்டு போகவேண்டுமோ? அப்படிப் போனாலும் உத்ஸவத்தில் அழைத்துக்கொண்டு போகவேண்டுமோ? என்பது 'விழவொலி' என்பதற்குக் கருத்து. (2)

---

கரைகொள் பைம்பொழிற் றண்பணைத்துலை வில்லி மங்கலங்
கொண்டுபுக்கு
உரைகொ ளின்மொழி யாளை நீருமக் காசை யின்றி யகற்றினீர்
திரைகொள் பௌவத் துச்சேர்ந் ததுந்திசை ஞாலந் தாவி யளந்ததும்
நிரைகள் மேய்த்தது மேபி தற்றி நெடுங்கண் ணீர்மல்க நிற்குமே (௩)

(ப - ரை) தண் - (புஷ்பங்கள்நிறைந்திருப்பதால்) குளிர்ந்த, பணை - கிளைகளையுடைய, கரைகொள் - கரைகளைக்கொண்டிருக்கிற (அவைகளை வியாபித்துக்கொண்டிருக்கிற) பசுமை-பச்சைகளான, பொழில் - தோட்டங்களை உடைத்தான, துலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு, உரை சொள் இன் மொழியாளை - உரையை (சப்தத்தையே) கொண்டு இனியதான பேச்சையுடையவளான இந்தப் பெண்ணை, நீர், உமக்கு ஆசையின்றி - இவளிடத்தில் உங்களுக்கு ஆசையில்லாமல், அகற்றினீர் - உங்களை விட்டுப் பிரியும்படி செய்தீர்கள், திரைகொள்-அலைகளைக் கொண்ட, பௌவத்து - ஸமுத்திரத்தில், சேர்ந்ததும் - எமபெருமான் படுத்திருப்பதும், திசைஞாலம் - திக்குக்களையுடைய இந்தப் பூமியை, தாவி-(திருவடிகளை) நீட்டி, அளந்ததும, நிரைகள்மேய்த்ததுமே-பசுக்கூட்டங்களை மேய்த்ததும், (ஆகிய இவைகளையே) பிதற்றி - ஒன்றோடொன்று சேராமல் சொல்லிக்கொண்டு, நெடும் கண் - நீண்டகண்களில், நீர்மல்க - நீர் நிரம்பும்படி, நிற்கும் - நிற்கிறாள்.

(கருத்து) புஷ்பங்கள் ஏராளமாக இருப்பதால் குளிர்ந்த கிளைகளை உடையவைகளும், நிலத்தின் செழுமையால் நாலு பக்கங்களிலும் வியாபித்திருக்கின்றவைகளுமான மகிழ் சம்பகம் முதலான மரங்களையுடைய துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக் கொண்டுபோய், உங்களுக்கு ஆசையில்லாமல், சொல்லாலேயே இனிமையாயிருக்கிற பேச்சுக்களையுடைய இவள் உங்களை விடும்படி நீங்களே செய்தீர்கள். இதற்கு அடையாளங்களைச் சொல்லுகிறேன். அலைகளையுடைய திருப்பாற்கடலில் எம்பெருமான் படுத்திருப்பதையும், திக்குக்களோடுகூடிய இந்தப் பூமியை அவன் திருவடிகளை நீட்டி அளந்ததையும், கிருஷ்ணனாய்ப் பசுக்கூட்டங்களை மேய்த்ததையும், ஒன்றோடொன்று சேராமல் சொல்லிக் கொண்டிருக்கிறாள். வேறு பேச்சுக்களைப் பேச இடமில்லை. நீண்ட கண்களில் கண்ணீரானது நாலுபக்கமும் பரவிப் போக முடியாமலிருக்கிறாள்.

குறிப்பு —(1) நீங்கள் இவளைத் துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக்கொண்டுபோனீர்கள். இதுவும் உத்ஸவம் நடக்கும் போது; இது போதாதா? புஷ்பங்களாலும் குளிர்ச்சியாலும் செழுமையாலும் அழகாயிருக்கிற மகிழ் சம்பகம் முதலான மரங்கள் நிறைந்த தோட்டங்களுக்குள்ளே இவளை அழைத்துக் கொண்டு போகவேண்டுமோ? என்பது பாட்டின் முதல் அடியின் கருத்து.

(2) உங்களுக்கு இவளிடம் ஆசை இருந்தால், இவளை அங்கே அழைத்துக்கொண்டு போகலாமோ? போனபடியால் உங்களுக்கு இவளிடத்தில் ஆசையில்லை என்றே எண்ணவேண்டும் என்பது 'ஆசையின்றி' என்பதின் கருத்து.

(3) 'உரைகொள்' என்பதற்கு, இவள் பேச்சின் அர்த்தத்தைப் பார்க்கவேண்டாம்; சொற்களே இனிமையாயிருக்கின்றன என்பது கருத்து.

(4) 'திரைகொள்' என்பதற்கு, பிராட்டி கிட்ட இருப்பதால் திருப்பாற்கடலானது ஸந்தோஷப்பட்டு, அலைகளாகக் கிளம்புகிறது என்பது கருத்து.

(ரு) 'நெடும் கண்' என்பதற்கு, இவள் கண்களில் நீர் நிரம்பி நாலு பக்கங்களிலும் பரவுவதைப் பார்த்தால் இவைகள் திருப்பாற்கடலோ என்று எண்ணும்படி இருக்கின்றன என்பது கருத்து.

(இ - ம) 'மெய்த்தநுமே' என்கிறவிடத்தில ஏகாரத்துக்குப் பிரிநிலைப் பொருள். வேறொன்றும் செய்கிறதில்லையென்பது கருத்து. (3)

---

நிற்கு நான்மறை வாணர் வாழ்துலை வில்லி மங்கலங் கண்டபின்
அற்க மொன்று மறவு ருண்மலிந் தாள்கண் டீர்வ ளன்னைமீர
கற்குங் கல்வி யெல்லாங் கருங்கடல் வண்ணன் கண்ணபி
ரானென்றே
ஒற்க மொன்று மிலளு கநது கந்துண் மகிழ்ந்து குழையுமே. (ச)

(ப - ரை) அன்னைமீர - தாய்மார்களே! இவள், நிற்கும் - எப்போதுமிருக்கும், நால மறை வாணர - நான்கு வேதங்களுக்கு நிர்வாஹகர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ் - வாழுகிற, துலைவில்லிமங்கலம கண்டபின் - துலைவில்லிமங்கலத்தைப் பார்த்த பினபு, அறசம் - (பெண்களுக்கு இருக்கவேண்டிய) அடக்கத்தை, ஒன்றும அற உருள் - கொஞ்சமும் மிகவும் உடையவளாயிருக்கவில்லை, மலிந்தாள் கண்டீர் - நம்மைவிட்டு மீறியிருக்கிறாள், கற்கும் கல்வி எல்லாம - இவள் சொல்லுகிற பேச்சுக்களெல்லாம், கரும கடல வண்ணன - நீலமான ஸமுத்திரம்போன்ற வர்ணத்தையுடையவன, என்றே - என்பதையே சொல்லி, ஒற்கம் ஒன்றும் இலள்-தளர்ச்சி கொஞ்சமுமில்லாதவளாயிருக்கிறாள், உகந்து உகந்து - ஸந்தோஷப்பட்டு ஸந்தோஷப்பட்டு, உள் மகிழ்ந்து, குழையும் - தளர்ச்சியை அடைகிறாள்.

(கருத்து) தாய்மார்களே! ஒருவராலும் செய்யப்படாமல் நித்தியமாய்த் தோஷமில்லாமலிருக்கிற நான்கு வேதங்களைப் படித்து, அதன் அர்த்தத்தை மற்றவர்களுக்குச் சொல்லிக்கொண்டு எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலானவைகளை அநுபவித்துக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸுகமாய் இருக்கிற துலைவில்லி மங்கலத்தை இவள் எப்போது பார்த்தாளோ, அதுமுதல், பெண்

களுக்கிருக்கவேண்டிய அடக்கம் இவளுக்குக் கொஞ்சமுமில்லாமல் போய்விட்டது. நாம சொல்வதைக் கேட்காதபடி நம்மை மீறி விட்டாள். இவள் அடிக்கடி பேசுகிற பேச்செல்லாம கருங்கடல வண்ணன் என்பதே. இப்படித் தளர்ச்சியில்லாமல் அவன் திரு நாமங்களைச் சொல்லிக்கொண்டு மேன்மேலும் ஸந்தோஷப்பட்டு உள் மகிழ்ந்து தளர்ச்சியை அடைகிருள். இனிமேல் இவளை என்ருல் திருப்பமுடியாது.

(இ - ம்) என்றே - ஏகாரத்திற்குக் கீழ்ப்பாட்டில்போல் பொருள். (4)

---

குழையும் வாண்முகத் தேழை யைத்துலை வில்லி மங்கலங்
கொண்டுபுக்கு
இழைகொள் சோதிச் செந்தா மரைக்கட் பிரானி ருந்தமை காட்டினீர்
மழைபெய் தாலொக்குங் கண்ண நீரினொ டன்று தொட்டமை
யாந்திவள்
நுழையுஞ் சிந்தைய ளன்னை மீர்தொழு மத்திசை யுற்று நோக்கியே.

(ப - ரை) அன்னைமீர் - தாய்மார்களே, குழையும் - உருகு கிற, (ஸ்வபாவமாய் மிருதுவாயிருக்கிற) வாள் முகத்து - காந்தி யுள்ள முகத்தையுடைய, ஏழையை-சபலையான இந்தப்பெண்ணை, துலைவில்லிமங்கலம் கொண்டு புக்கு - துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் அதற்குள்ளே புகுந்து, இழை கொள் - நகைகளைக்கொள்ளுகிற (நகைகளின் காந்திகள் தனக் குள்ளே அடக்கும்படியிருக்கிற), சோதி - காந்தி மண்டலத் திலே, செந்தாமரைக் கண்ணன், பிரான்-உபகாரனை எம்பெரு மான், இருந்தமை - இருக்கிற இருப்பை, காட்டினீர், அன்று தொட்டு - அது முதல, மழை பெய்தால் ஒக்கும் - மழை பெய் தாற்போலிருக்கும், கண்ண நீரினொடு - கண்ணீரோடு, இவள் - இந்தப்பெண், மை யாந்து - மோஹத்தை அடைந்து, நுழையும் சிந்தையள் - அவனுடைய திருமேனி அழகில் நுழைந்திருக்கிற மனத்தை உடையவளாய், அ திசை - அந்தத் திக்கையே, உற்று நோக்கி - நிலையாகப் பார்த்துக்கொண்டு, தொழும் - அஞ்சலி செய்துகொண்டிருக்கிருள்.

(கருத்து) மார்த்தவத்தினுடையவும் அழகினுடையவும் ஸாரதத்துக்கு இருப்பிடமான திருமுகத்தையுடைய இந்தப் பெண் ஏறகனவே எம்பெருமானிடத்தில் ஆசையுள்ளவளாயிருந்தாள். அவளைத் துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக்கொண்டு போய், அதற்குள் போகும்படி செய்து, அவன் இருந்த இருப்பைக் காட்டினீர்கள். அவன தன்னுடைய ஆபரணங்களின் காந்திகளைத் தனக்குள்ளே அடக்கும்படியான திருமேனியின் காந்தியையும தாமரைபபூப்போன்ற திருககண்களையுமுடையவனாய், நன்றாய் மலாந்து குளிர்ந்து அழகான தாமரைப்பூககள் நிறைநத ஒரு தடாகம்போல் இருககிறான். அவனை இவளுக்குக் காட்டினதுமுதல, மழை பெய்கிறதுபோல் கண்ணீரைச் சொரிந்துகொண்டிருககிறாள். அடிககடி மோஹததை அடைகிறாள் அவனுடைய திருமேனியின அழகில் மனததைவைதது அந்த ஊா இருக்கும் திககை உறறுபபார்தது கையைக கூப்பிககொண்டிருககிறாள்.

குறிப்பு :—(1) எமபெருமானுடைய மனதிலிருக்கிற வாத்ஸல்யமும் கருணையும் அவன திருககணகளில் தோன்றுகையால், அவைகள் மிகவும் அழகாயிருககின்றன என்பது 'செந்தாமரைக கண்" எனபதற்குக் கருதது.

(2) 'பிரான்' என்பதற்கு, தன் அழகை எம்பெருமான் ஆச்ரிதர்க்குக் காட்டுவதாகிய உபகாரத்தைச செய்கிறான என்பது கருத்து.

(3) ஸமுததிரத்தில் குளப்படி அடங்குவதுபோல் அவன் திருமேனியின் காந்திககுள்ளே ஆபரணங்களின காந்திகள் அடங்கியிருககின்றன எனபது "இழைகொள் சோதி" என்பதின் கருத்து.

(4) இவளைத் துலைவில்லிமங்கலததில் உத்ஸவம நடக்கும் போது அழைத்துககொண்டு போனீர்கள், அதனுடைய தோட்டங்களின அழகையும, ஸ்ரீவைஷ்ணவர்கள் நிறைந்திருப்பதையும் காட்டினீர்கள். இதனோடு நிறகக்கூடாதா? எமபெருமானுடைய அழகையும் காட்டினீர்களே; இனிமேல் அவளை எப்படித் திருப்பக்கூடும்? என்பது "பிரான் இருந்தமை" என்பதின் கருத்து.

(5)

நோக்கும் பக்க மெல்லாங் கரும்பொடு செந்நெ லோங்குசெந் தாமரை
வாய்க்குந் தண்பொரு நல்வ டகரை வண்துலை வில்லி மங்கலம்
நோக்கு மேலத் திசையல் லான்மறு நோக்கிலள் வைகல் நாடோறும்
வாய்க்கோள் வாசக மும்மணி வண்ண னாம மேயிவ ளன்னைமீா.

(ப - ரை) அன்னைமீர்! கரும்பொடு, செந்நெல் - சிவந்த நெல்களும் (கதிர்கள் பழுத்துப் பொன்னைப்போல் தோன்றுகிற நெற்பயிர்களும்), ஓங்கு - (செழிப்பாலே நிறைந்துண்டாகும்படி) உயர்ந்து, செந்தாமரை, நோக்கும் பக்கம் எல்லாம் - பார்க்குமிடமெல்லாம் வாய்க்கும் - நிறைந்திருக்கிற, தண் - குளிர்ந்த, பொருநல் - தாமிரபரணியினுடைய, வடகரை - வடகரையில், வண் - செல்வம் நிறைந்த, துலைவில்லிமங்கலம் - துலைவில்லிமங்கலத்தை, நோக்குமேல - பார்த்ததற்குமேல, இவள், அத்திசை அல்லால் - அந்தத் திசையைத் தவிர, மறுநோக்கிலள் - வேறொன்றின் பார்வையில்லாதவளாயிருக்கிறாள், வைகல் நாள்தொறும் - பொருதுலைக் கொண்டிருக்கிற நாள்கள்தோறும், வாய்கொள் - வாயிலே கொள்ளுகிற, இவள் வாசகமும் - இவளுடைய பேச்சுக்களும், மணிவண்ணன் நாமமே - மணியைப்போல அழகுடைய எம்பெருமானுடைய திருநாமங்களே.

(கருத்து) தாய்மார்களே! துலைவில்லிமங்கலத்தில் அமிர்த ரஸம் அருவிபோல் ஓடிவருகிற கரும்பும், பொன்னைப்போல் விளங்குகிற கறுத்த நெற்பயிரும், அவைகளுக்கு நிழலைக் கொடுத்துக்கொண்டு உயர்ந்து வளருகிற மலர்ந்த தேனை நிறைந்த தாமரைப்பூக்களும் பார்க்குமிடமெல்லாம் இருக்கின்றன. இந்த அழகுடைய ஊரை இவள் பார்த்ததுமுதல், அந்த ஊர் இருக்கும் திசையைத்தவிர, வேறொன்றையும் பார்க்கிறதில்லை. அவள் வாயில் வருகிற பேச்சுக்களெல்லாம் மணிபோல் அழகாயும் ஸுலபனாயுமிருக்கிற எம்பெருமானுடைய அழகையும் ஸௌலப்யத்தையும் காட்டுகிற திருநாமங்களாகவே இருக்கின்றன. இவளை இனிமேல் திருப்பமுடியுமோ?

குறிப்பு:— கீழ்ப்பாட்டில் துலைவில்லிமங்கலமிருக்கும் திக்கையே பார்க்கிறாள் என்பது சொல்லப்பட்டது; இந்தப்பாட்டில் வேறொன்றையும் பார்க்கிறதில்லை என்பது சொல்லப்படுகிறது.

(6)

அன்னை மீரணி மாம யில்சிறு மானிவ ணம்மைக் கைவலிந் [லால்
தென்ன வார்த்தையுங் கேட்கு றாள்துலை வில்லி மங்கல மென்றல்
முன்ன நோற்ற விதிகொ லோமுகில் வண்ணன் மாயங்கொ
சின்ன முந்திரு நாம முமிவள் வாய னகள்தி ருந்தவே. [லோவவன்

(ப - ரை) அன்னைமீர்! அணி மா மயில் - அழகாய் நீல வர்ணமுள்ள மயிலைப்போல் அழகுள்ளவளும், சிறு மான் - மான் குட்டியைப்போன்றவளுமான இவள், நம்மை கைவலிந்து-நமக்கு உட்படாதவளாக ஆகி, துலைவில்லிமங்கலம் என்று அல்லால் - துலைவில்லிமங்கலத்தைத்தவிர, என்ன வார்த்தையும் - வேறொரு பேச்சையும், கேட்க உறாள்-கேட்க ஸம்மதிக்கமாட்டாள், அவன் சின்னமும் - அவனுடைய (சங்கு சக்ரம் முதலான) அடையாளங்களும், திருநாமமும் - திருநாமங்களும், திருந்த - விளங்கும்படி, இவள் வாயனகள் - இவள் வாயிலே இருக்கின்றன, முன்னம்-முன் ஜந்மங்களிலே, நோற்ற விதிகொலோ - (இவள் செய்த) புண்ணியத்தின் பலனோ? முகில் வண்ணன் மாயங்கொலோ - நீலமேகம் போன்ற வர்ணமுள்ள எம்பெருமானுடைய அழகின் வேலையோ?

(கருத்து) நீலவர்ணமுள்ள அழகிய மயிலைப்போல் அழகுள்ளவளும், மான்குட்டியைப்போல மிரண்ட கண்களையுடையவளுமான இந்தப் பெண் நாம் சொன்னதைக் கேட்காதபடி நம்மை மீறிவிட்டாள். துலைவில்லிமங்கலமென்கிற சொல்லைத் தவிர வேறொரு சொல்லையும் இவள் கேட்கிறவளில்லை. அவனுடைய சங்கு சக்கரம் முதலான அடையாளங்களையும், அவனுடைய அழகையும், ஸௌலப்யம் முதலான குணங்களைக் காட்டுகிற திருநாமங்களையுமே இனிய குரலோடு வேதமும் அதை அறிந்த வ்யாஸர் முதலான ருஷிகளும் சொல்லுகிறதுபோல் சொல்லிக்கொண்டிருக்கிறாள். இதனால் அவைகளுக்கு ஒரு புதிய அழகு உண்டாகிறது. இவள் இப்படியிருப்பது முன் ஜன்மங்களில் செய்த புண்ணியத்தின் பலனோ? அல்லது முகில்வண்ணனுடைய அழகைக்கண்ட ஆச்சரியமோ? இந்த ஆச்சரியமாயிருக்கிறது. நான் சொல்லுவதைக்கூடக் கேட்கிறவளாய் இல்லை.

(இ-ம்) கேட்க+உறாள்=கேட்குறாள்; அகரம் கெட்டது தொகுக்கல் விகாரம். உறாள்-எதிர்மறை வினைமுற்று. உறு+ ஆ+ஆள்=உறாள்: இங்கே எதிர்மறை ஆகாரவிகுதி கெட்டது.

(7)

திருந்து வேதமும் வேள்வி யுந்திரு மாமக ளிருந் தாமலிந்
திருந்து வாழ்பொரு நல்வ டகரை வண்டுலை வில்லி மங்கலங்
கருந்த டங்கண்ணி கைதொ ழுதவந் நாடொ டங்கியிந் நாடொறு
மிருந்தி ருந்தர விந்த லோசன வென்றென் றேநைந் திரங்குமே (அ)

(ப-ரை) திருந்து வேதமும் - திருந்தின (தப்பாமலிருக்கிற) வேதங்களும், வேள்வியும் - யாகங்களும், திருமாமகளிரும் - லக்ஷ்மியாகிய குணங்கள்நிறைந்த பிராட்டியாரும், தாம் - தாமும், மலிந்து இருந்து - நிறைந்திருந்து (வைகுந்தத்திலைக்காட்டிலும் அதிக செல்வத்துடன் எழுந்தருளியிருந்து), வாழ் - வாழுகிற, பொருநல் வடகரை - தாம்பிரபாணியின் வடகரையிலிருக்கும், துலைவில்லிமங்கலம் - துலைவில்லிமங்கலத்திலிருக்கிற எம்பெருமானை, கரும் தடம் கண்ணி - கறுப்பாய்த் தடாகத்தைப்போல் (குளிர்ந்ததும் அகன்றதும் தெளிந்ததுமான) கண்களையுடைய இந்தப்பெண், கைதொழுத - ஸேவித்த, அ நாள் தொடங்கி - அந்த நாள் முதற்கொண்டு, இ நாள்தொறும் - இந்த நாள் வரையில், இருந்து இருந்து - (ஒவ்வொரு க்ஷணமும் ஆதாரமாக) தரித்துக்கொண்டு, அரவிந்தலோசன, என்று என்றே - என்று பலதடவை சொல்லி, நைந்து - தளர்ச்சியடைந்து, இரங்கும் - நெஞ்சுருகி நிற்கிறாள்.

(கருத்து) ஸ்வரங்களும் எழுத்துக்களும் அவைகளின் வரிசைகளும் தப்பாமலிருக்கிற வேதத்தினால் ஸ்தோத்ரம்பண்ணப்பட்டவனும், ஒரு பலனிலும் ஆசையில்லாமல் செய்யப்படுகிற யாகங்களாலே ஆராதிக்கப்படுகிறவனும், பெரிய பிராட்டி பூமிப்பிராட்டி நீளாதேவி இவர்களுடன் வைகுந்தத்தைக்காட்டிலும் அதிகச் செல்வத்தோடு வாழுகிற தாம்ரபர்ணியின் வடகரையில் இருக்கும் துலைவில்லிமங்கலத்தில் எழுந்தருளியிருப்பவனுமான எம்பெருமானைத் தடாகம்போலிருக்கிற கண்களையுடைய இந்தப் பெண் எந்த நாள் ஸேவித்தாளோ, அந்த நாள்முதல் இந்த நாள் வரையில் தளர்ச்சியை அடைந்திருந்தபோதிலும் ஒவ்வொரு க்ஷணத்திலும் தன்னைத் தைரியப்படுத்திக்கொண்டு 'அரவிந்தலோசனா! அரவிந்தலோசனா!' என்று பலதடவை சொல்லிக்கொண்டு மனது உருகி நிற்கிறாள்.

குறிப்பு.—(1) 'வேள்வி' என்று பாட்டில் பொதுவாகச் சொன்னபோதிலும், 'தாம' என்று எம்பெருமானைச் சொல்லுகிற சொல்லோடு சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறபடியால் பலன்களில் ஆசையில்லாமல் செய்யப்படுகிற யாகங்கள் என்கிற பொருள் கிடைக்கிறது.

(2) 'திருமாமகளிர்' என்று பெரியபிராட்டியைச் சொன்னபோதிலும், அஃது *உபலக்ஷணமாய்ப் பூமிப்பிராட்டியையும் நீளாதேவியையும் சொல்லுகிறது.

(3) ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸீதையை ஹநுமான் "அஸிதேக்ஷணா" என்று சொல்லுகிறார். அதன் பொருள்—கறுப்பான கண்களையுடையவளே என்பது. ஆழ்வாராகிய பெண்ணுக்குக் கண்கள் கறுப்பாயிருப்பதுடன், அவைகள் தடாகம் போல இருக்கின்றன. அவள் சக்ரவர்த்தித் திருமகனைமாத்திரம் அநுபவிப்பதினால் அவளுக்குக் கண்ணழகு. இவளுக்கோ, எம்பெருமானையும் பிராட்டியையும் சேர்த்து அநுபவிப்பதினால் கண்ணழகு இரட்டித்திருக்கிறது என்பது 'கரும் தடம் கண்ணி' என்பதின் கருத்து.

(இ - ம்) தாம்—தாமும் என்பதில் உம் தொக்கது, தொகுத்தலெனும் செய்யுள் விகாரம். (8)

---

இரங்கி நாடோறும் வாய்வெ ரீஇயிவள் கண்ண நீர்க ளலமர
மரங்க ளுமிரங் கும்வ கைமணி வண்ண வோவென்று கூவுமால்
துரங்கம் வாய்பி ளந்தா னுறைதொலை வில்லி மங்கல மென்றுதன்
கரங்கள் கூப்பித் தொழுமவ் வூர்த்திரு நாமங் கற்றதற் பின்னையே.

(ப - ரை) இவள், அ ஊர் - அந்த ஊரினுடைய, திருநாமம்— திருநாமத்தை, கற்றதன் பின்னை—அறிந்தபிறகு, இரங்கி - மனது உருகி, நாள் தொறும் - ஒவ்வொருநாளும், வாய் வெரீஇ - (அவனுடைய திருநாமங்களை) அவசமாகச் சொல்லி, கண்ண நீர்கள்

---

* உபலக்ஷணம் என்பது — சொன்னதிருக்கிறவைகளில் ஒன்றைச் சொன்னால், மற்றவைகளும் சொல்லப்படுகிறது என்று காட்டுவது.

அலமர - கண்ணீர் கலக்கும்படி பெருகி, மரங்களும், இரங்கும் வகை - (இவள் வருந்தக் குரலைக்கேட்டு) உருகும்படி, ஓ மணி வண்ணா - ரத்நங்களைப்போல அழகாயும் நீலமாயும், இருக் கிறவனே! என்று கூவும் - என்று கூப்பிடுகிறாள், அரங் கம் - குதிரைரூபமாய்வந்த கேசியினுடைய, வாய் பிளந்தான் - வாயைப்பிளந்த கண்ணன், உறை - வசிக்கிற, துலைவில்லிமங்கலம், என்று - சொல்லி, தன் கரங்கள் கூப்பி - தன்கைகளைக் கூப்பி, தொழும் - ஸேவிக்கிறாள்.

(கருத்து) இவளைத் துலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் அந்த ஊரினுடைய பெயரை இவளுக்குச் சொல் லிக்கொடுத்தது முதல், மனது உருகி, எம்பெருமானுடைய திரு நாமங்களை அவசமாகச்சொல்லி, கண்கள் [illegible] கண்ணீ ரைச் சொரிந்து, அறிவில்லாத மரங்களும் இவளுடைய அழுகைக் குரலைக் கேட்டு உருகும்படி 'ஓ! மணிவண்ணா!' என்று கூப்பிடு கிறாள்: அதனால் உண்டான ப்ரேம [illegible] கேசியைக் கொன்ற கண்ணன் வசிக்கிற துலைவில்லிமங்கலம் என்று சொல்லி, கைகளைக் கூப்பிக்கொண்டு அதை ஸேவிக்கிறாள்.

(இ - ம) கற்றதற்குப்பின்னை [illegible]. [illegible] - தொழிற்பெயர். கற்றல் என்று பொருள் [illegible]. கூவு மால் - ஆல் - இரக்கக் குறிப்பு. அசைநிலையுமாம். (9)

---

பின்னை கொன்னில மாம கள்கோல் திரும கள்கோல் பிறந்திட்டா
ளென்ன மாயங்கொ லோவிவ ணெடுமா லென்றே நின்று கூவுமால்
முன்னி வந்தவ னின்றி ருந்துறை யுந்துலை வில்லி மங்கலஞ்
சென்னி யால்வ ணங்குமவ் வூர்த்திரு நாமங் கேட்பது சிந்தையே

(ப - ரை) இவள், நெடுமால் என்றே - (ஆச்ரிதர்களிடத்தில்) மிகுந்த ஆசையையுடையவனே என்று, நின்று கூவுமால் - நிலையா யிருந்து கூப்பிடுகிறாள் முன்னி வந்து - (இவள் பிறப்பதற்கு) முன்பே அவதாரம் செய்து, அவன், நின்று இருந்து உறையும் - நின்றும் உட்கார்ந்தும் இப்படி இரண்டுவிதமாய் வசிக்கிற, துலை வில்லிமங்கலம் - திருத்துலைவில்லிமங்கலத்தை, சென்னியால் - தலையால், வணங்கும் வணங்குகிறாள் அவ்வூர் திருநாமம் - அந்த ஊர்த்திருநாமத்தை, கேட்பது- பிறர் சொல்ல கேட்க வேண்டும்

என்றும், சிந்தை - இவளுக்கு எண்ணமிருக்கிறது, பின்னைகொல் - இவள் நப்பின்னையோ? நிலம் மா மகள்கொல் - பூமியாகிய குணங்கள் நிறைந்த பிராட்டியோ? திருமகள்கொல்-லக்ஷ்மியோ? (அவர்களில் ஒருவருமன்று.) பிறந்திட்டாள் - (உலகம் வாழ்வதற்குப்) பிறந்திருக்கிறாள், என்ன மாயங்கொல் ஓ - என்ன ஆச்சரியமோ.

(கருத்து) நீங்கள் இவளை தொலைவில்லிமங்கலத்துக்கு அழைத்துக்கொண்டு போனதுமுதல். நெடுமாலே என்று நிலைபாய் நின்று கூப்பிடுகிறாள் தாம் பிறப்பதற்கு முன்பே தன்னுடன் சேருவதற்காக அவதாரம் செய்து ஓர் இடத்தில் நின்று கொண்டும், இன்னோர் இடத்தில் உட்கார்ந்துகொண்டும் இப்படி இரண்டு விதமாய் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் தொலைவில்லிமங்கலத்தைத் தலையால் வணங்குகிறாள். அந்த ஊரின் பெயரைத் தன் வாயால் சொல்லுவது போதாமல் அதைப் பிறர் சொல்லக் கேட்கவேண்டுமென்று ஆசைப்படுகிறாள். இவள் பின்னையோ? அல்லது பூமிப்பிராட்டியோ? அல்லது லக்ஷ்மிதானோ? அவர்கள் ஒருவருக்கும் இவளுடைய இருப்பில்லை ஆசையால், இவர்களில் ஒருத்தியுமன்று உலகம் வாழ்வதற்காக இப்படிப் பிறந்திருக்கிறாள். இவளுக்கு அவனிடத்தில் எவ்வளவு ஆசை இருக்கிறது? இஃது ஆச்சரியம் இப்படியிருக்கிற இவளை நான் கூடத் திருப்பமுடியாது.

குறிப்பு :—(1) தொலைவில்லிமங்கலம் என்கிற சொல்லை ஆழ்வாராகிய பெண் சொல்லும்போது தோழிக்கு இனிமையாய் இருந்தது. தான் அதைச் சொல்லும்போது அப்படி யிருக்கவில்லை ஆசையால், இரண்டாம்தடவை அதைச் சொல்லாமல், 'அவ்வூர' என்று சொல்லுகிறாள் என்பது 'அவ்வூர்' என்பதற்குக் கருத்து.

(2) 'பிறந்திட்டாள்' என்பதற்கு, நப்பின்னை முதலானவர்களில் ஒருத்தியாயிருந்தால் அவதரித்தாள் என்று சொல்லலாம். அப்படி இல்லாமையால் 'பிறந்திட்டாள்' என்று பாட்டு சொல்லுகிறது. (10)

சிந்தை யாலுஞ் சொல்லாலுஞ் செய்கையி னாலுந் தேவபி ரானையே
தந்தை தாயென் றடைந்த வண்குரு கூர வர்சட கோபன்
முந்தை யாயிரத் துள்ளி வைநல்ல வில்லி மங்கலத் தைச்சொன்ன
செந்தமிழ் பத்தும் வல்லா ரடிமை செய்வார் திருமா லுக்கே. (கக)

(ப-ரை) சிந்தையாலும் - மனதாலும், சொல்லாலும் - வாக்கின் வேலையாலும், செய்கையினாலும் - உடம்பின் வேலையாலும், தேவபிரானையே, தந்தை தாய் என்று - தகப்பன் என்றும் தாய் என்றும், அடைந்த, வண் - விலக்ஷணர்களான, குருகூரவர் - குருகூரிலிருக்கிறவர்களுக்குத் தலைவனான, சடகோபன், முந்தை - அநாதியான, ஆயிரத்துள் - (வேதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிற) ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, நல்வில்லி மங்கலத்தை - நல்லவில்லிமங்கல விஷயமாய், சொன்ன, செம் தமிழ் - செம்மையான (ஆர்த்தத்தை உள்ளபடி சொல்லுகிற) தமிழ்ப்பாட்டுக்களாகிய, இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - சொல்லச் சக்தியுள்ளவர்கள், திருமாலுக்கு - பிராட்டியோடுகூடிய எம்பெருமானுக்கு, அடிமை செய்வார் - கைங்கரியங்களைச் செய்வார்கள்.

(கருத்து) மனது வாக்கு உடம்பு ஆகிய இவைகளின் வேலை களால் தேவபிரானையே தமக்குத் தகப்பனாகவும் தாயாகவும் எண்ணி அடைந்தவராய், விலக்ஷணர்களாய்க் குருகூரில் வஸிக்கிற வர்களுக்குத் தலைவனாயிருந்த ஆழ்வார் வேதத்தின் ஸாரமான அர்த்தங்களைச் சொல்லுகிற ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே நல்ல வில்லிமங்கல விஷயமாய்ச் சொன்ன தமக்கு அவனிடத்தில் இருந்த ஆசையை உள்ளபடி காட்டுகிற இந்தப் பத்துப் பாட்டுக் களைப் படிக்கச் சக்தியுள்ளவர்கள் பிராட்டிக்கும் எம்பெருமா னுக்கும் சேர்த்து அவர்களுக்கு இஷ்டமான கைங்கரியம் பண்ணு கிறவர்களாவார்கள்.

குறிப்பு :— (1) ஒன்பதாவது பாட்டில் 'இரங்கி' என்று மனதின் வேலையும், 'கூவும்' என்பதால் வாக்கின் வேலையும், 'கரங்கள் கூப்பித்தொழும்' என்பதால் உடம்பின் வேலையும் சொல்லப்பட்டதை இந்தப்பாட்டின் முதல் அடி சொல்லுகிறது.

(2) ஆழ்வார் எப்படி எம்பெருமானை எல்லாவித பந்துக்களாகவும் எண்ணினாரோ அப்படியே அந்த ஊரிலிருக்கிறவர்களும் அவரையே எல்லாவித பந்துக்களாகவும் எண்ணியிருந்தார்கள். அவர்களின் பெருமையை இந்தப் பாட்டில் 'வண்' என்கிற சொல் காட்டுகிறது.

(3) 'தந்தைதாய் என்று அடைந்த' என்பதால், ஆழ்வார் பந்துக்களை விட்டுவிட்டார் என்பது காட்டப்படுகிறது. இதனால் எம்பெருமான் தன்னிடத்தில் ஒருவனுக்கு ஆசையை உண்டாக்கி அவனை மற்றப்பந்துக்களிடமிருந்து பிரிக்கிறான் என்கிற இந்தத் திருவாய்மொழியின் அர்த்தத்தை ஆழ்வாரே அருளிச் செய்கிறார். (11)

---

ஶர்வாக்ஷ்யாதித்வ ஶ்ரீஉஶஸாரதயா விஸ்ரம்ஶாயித்வ
ஹ்ருத்யாத் தத்வாத்யாரஸாவர்ணஸ்வஸஜாக்ஷத்வமேஹ
ஸேவ்ய: | ஸேவிஸ்வஸ்யஸ்வாஸ்திஸம்ஹதயா ஸௌஷ்டிஸ்த்வ
ஹாவாக பஹுஸம்ஹ்ய: ஸூத்ராஸ்ரவிபூயபக்தி ஹாராதித்
வோ வத்வோரி: ॥ |எச|

---

இந்தத் திருவாய்மொழியில் ஒருவனுக்கு தன்னிடத்தில் ஆசையை உண்டுபண்ணி, எம்பெருமான் அவனைப் பந்துக்களிடமிருந்து பிரிக்கிறான் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன.—(1) சர்வாங்க சுந்தரமான திருக்கண்கள் இவைகளின் அழகைக் காட்டுவது; (2) நித்திய ஸூரிகளுக்குத் தலைவனான விஷ்வக்ஸேனர் முதலானவர்களுக்கும் தலைவனாயிருப்பது, (3) திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் பெருமை; (4) அறுபோல உதாரகுணமுள்ளவனாயிருப்பது; (5) செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனாயிருப்பது; (6, 7) அழகையும் ஸௌலப்யத்தையும் காட்டுகிற திருநாமங்களையுடையவனாயும் சங்கு முதலான அடையாளங்களையுடையவனாயுமிருப்பது, (8) பிராட்டிகளாலே ஸேவிக்கப்படுவது; (9) மிகவும் ஸுலபனாயிருப்பது, (10) தன்னைச் சேர்ந்தவர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனாயிருப்பது. (74)

# ஆறாம் திருவாய்மொழி.

---

அவ—கீழ்த்திருவாய்மொழியில் மரங்களும் இரங்கும்படி ஆழ்வார் எம்பெருமானைக் கூப்பிட்டார். அப்படிச் செய்தும் அவருக்கு அவனுடைய பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்கவில்லை. இதனால் அவர் மோஹத்தை அடைந்து, தம்மைச் சேர்ந்தவர்களைப் பார்த்துப் பாராதருத் தளர்ச்சியடைந்த தம்முடைய இருப்பை நாயகியின் தாயார் வார்த்தையால எம்பெருமானுக்குத் தெரிவிக்கிறார்.

(2) நாயகனிடத்தில் ஆசையாலே மோஹத்தையடைந்து அவளுடைய ஆபரணங்கள் கழன்று விழுவதையும், அவளுடைய அழகு குறைவதையும் பார்த்த அவள் தாயார் 'அவன் அவளை அழகுக்கும் செய்த லீலைகளுக்கும் தோற்று இப்படியிருக்கிறாள்' என்று சொல்லி அலறுகிறாள்.

( கலிவிருத்தம்.)

மாலுக்கு வைய மளந்தம ணாளற்கு
நீலக் கருநிற மேகநி யாயற்குக்
கோலச்செந் தாமரைக் கண்ணற்கென் கொங்கல
ரேலக் குழலி யிழந்தது சங்கே. (௧)

(ப - ரை) மாலுக்கு - (ஆச்ரிதர்களிடத்தில்) மிகுந்த ஆசையையுடையவனுக்கு, வையம் அளந்த - பூமியை அளந்த, மணாளற்கு - நாயகனுக்கு, நீலம் - மழமழப்பான, கருநிற மேக நியாயற்கு - நீலநிறத்தையுடைய மேகத்தின் நிறத்தையுடையவனுக்கு, கோலம் - அழகான, செம் தாமரை கண்ணற்கு - செந்தாமரை கண்ணையுடையவனுக்கு, என் - என்னுடைய, கொங்கு அலர் - தேனை சொட்டுகிற புஷ்பங்களை உடைய, ஏலக் குழலி - ஏலம்போல் வாஸனையுடைய மயிர் முடியையுடைய பெண், இழந்தது, சங்கு - வளை.

(கருத்து) ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனும், ஆச்ரிதனான இந்திரனுக்காகப் பூமியைத் திருவடியால் அளந்தவனும், அழகிய மழை மேகத்தினுடைய அழகையும் குளிர்ச்சி

யையும், பெருமையையும், நிறத்தையுமுடையவனும், அந்த மேகத்தில் தாமரைத்தடாகமிருந்ததுபோல் தோன்றுகிற திருக் கண்களையுடையவனுமான எமபெருமானுக்குத் தோற்று, இவ் வளவு அழகையுடைய எமபெருமானையும மயக்கும் மயிர்முடியழ கையுடைய இந்தப்பெண், அவனை ஆசைப்பட்டுப் பெருமை யாலே உடம்பு இளைத்து, வளைகள் கழன்று நழுவி விட்டன.

குறிப்பு :—(1) 'மாலுக்கு, மணாளற்கு, நியாயற்கு, கண் ணற்கு' என்று தனித்தனியே சொன்னதின் கருத்து—ஒவ் வொன்றிலும் இவள் அவனுக்கு வசப்பட்டாளென்பது. இப் படியே மேல்பாட்டிலும கொள்க.

(2) நீலக் கருநிறம்—'கருநிறம்' என்பது சொல்லப்பட்ட படியால், 'நீலம்' என்கிற சொல்லுக்கு 'மழமழ' என்று இருக் கிற என்று பொருள்கொள்ள வேண்டும். 'நீலம்' என்பதற்கு மைச்சாந்து என்றும் பொருள் உண்டு. (1)

---

சங்குவில் வாள்தண்டு சக்கரக் கையற்குச்
செங்கனி வாய்ச்செய்ய தாமரைக் கண்ணற்குக்
கொங்கலர் தண்ணந் துழாய்முடி யானுக்கென்
மங்கை யிழந்தது மாமை நிறமே. (உ)

(ப - ரை) சங்கு வில் வாள் தண்டு சக்கரம் கையற்கு - இந்த ஐந்து ஆயுதங்களைத திருக்கைகளில் உடையவனுக்கு, செங் கனிவாய் - சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளம், செய்ய தாமரைக் கண்ணற்கு - சிவந்த தாமரைபோன்ற திருக்கண்கள், இவைகளையுடையவனுக்கு, கொங்கு அலர் - வாஸனை பரவுகிற, தண் அம் - குளிர்ந்த அழகான, துழாய் முடியானுக்கு - துள ஸியைக் கிரீடத்தில் உடையவனுக்கு, என் மங்கை - என்னுடைய யௌவனம நிறைந்த பெண், இழந்தது, மாமைநிறம் - அழகான உடம்பின் காந்தி.

(கருத்து) பூமியை அளக்கும்போது தன்னுடன்கூட வள ர்ந்த ஐந்து ஆயுதங்களையுடையவனும், தன்னுடைய திருவடிகளி னால் தொடப்பட்டு நல்லகதியை அடைந்த ஆத்மாக்களைப் பார்

த்து உண்டான ஸந்தோஷத்தினாலே பழுத்த கோவைப்பழம் போன்ற திருப்பவளத்தையும், செந்தாமரைப்பூவைப் போன்ற திருக்கண்களையுமுடையவனும், அந்த வேலையினாலுண்டான சிரமம்போவதற்காக நித்தியஸூரிகளால் கிட்டத்தில் சூட்டப்பட்ட வாஸனையுள்ள குளிர்ந்த அழகான துளஸியாலே அலங்கரிக்கப்பட்டவனுமான எம்பெருமானுடைய அழகிற்குத் தோற்று, அவனை ஆசைப்பட்டுப் பெருமையாலே யௌவநம் நிறைந்த இந்தப்பெண் தன்னுடைய மிகுந்த அழகையுடைய தேஜஸ்ஸாந்தியை இழந்துவிட்டாள். (2)

---

நிறங்கரி யானுக்கு நீடுல குண்ட
திறங்கிளர் வாய்ச்சிறுக் கள்வ ரவற்குக்
கறங்கிய சக்கரக் கையவ னுக்கென்
பிறங்கிருங் கூந்த லிழந்தது பீடே. (௩)

(ப - ரை) நீடு உலகு உண்ட திறம் - பெரிதான உலகங்களை (ப் பிரளயகாலத்தில்) சாப்பிட்ட பிரகாரம், கிளர் - நன்றாய்த் தோன்றுகிற, வாய் - வாயையுடைய, சிறு - (ஆலிலையில் அடங்கி இருக்கும்படியான) சின்ன ரூபத்தையுடைய, கள்வர் - வஞ்சகனை, அவற்கு - அவனுக்கு, நிறம் கரியானுக்கு - வர்ணம் கறுப்பாய் இருக்கிறவனுக்கு, கறங்கிய - சுழன்றுகொண்டிருக்கிற, சக்கரம் கையவனுக்கு - சக்கரத்தைக் கையிலுடையவனுக்கு, என் - என்னுடைய, பிறங்கு இரும் - உயர்ந்து (நீண்டு) அதிகமான, கூந்தல் - மயிர்முடியையுடைய, பெண், இழந்தது, பீடு - பெருமை.

(கருத்து) பெரிய உலகங்களைப் பிரளயகாலத்தில் சாப்பிட்ட விதமானது தோன்றுகிற வாயையுடையவனும், இப்படி உலகங்களைச் சாப்பிட்டும், ஓர் ஆலிலையில் அடங்கும்படியான சின்னரூபத்தை எடுத்துக்கொண்டு, அதைப் பார்த்தவர்களின் கண்களையும் மனதையும் அபகரிக்கிறவனும், ஆலிலையில் படுத்திருக்கும்போதும் நீலமேகம் போன்ற திருமேனியையுடையவனும், ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதிலும் அவர்கள் விரோதிகளை நாசம் பண்ணுவதிலுமுண்டான பரபரப்பினாலே எப்பொழுதும் சுழன்று கொண்டிருக்கிற சக்கரத்தைத் திருக்கையிலுடையவனு

மான எம்பெருமானுடைய அழகுக்குத்தோற்று அவனைப் பெரு மையாலே, நீலரத்நங்கள் சேர்ந்து விளங்குவதுபோல் விளங்கு கிற மயிர்முடியையுடைய என் பெண் இழந்தது அறிவினாலும் கெட்டிக்காரத்தனத்தினாலும் உண்டான பெருமை.

(இ - ம்) கள்வர் - ஒருமையில் பன்மை. (3)

---

பீடுடை நான்முக னைப்படைத் தானுக்கு
மாடுடை வைய மளந்த மணாளற்கு
நாடுடை மன்னர்க்குத் தூதுசெய் நம்பிக்கென்
பாடுடை யல்கு லிழந்தது பண்பே. (ச)

(ப - ரை) பீடு உடை - (உலகத்தை உண்டுபண்ணுவதற்கு வேண்டிய ஜ்ஞாநமும் சக்தியுமாகிய) பெருமையையுடைய, நான்முகனை, படைத்தானுக்கு - உண்டுபண்ணினவனுக்கு, மாடு உடை - இடத்தையுடைய, வையம் அளந்த மணாளற்கு, நாடு உடை - நாட்டையுடைய (பூமி முழுவதுக்கும் ஸ்வாமியாயிருக்கத் தகுந்த), மன்னர்க்கு - ராஜாக்களான பாண்டவர்களுக்கு, தூது செய் நம்பிக்கு - தூதனின் வேலை செய்த கண்ணனுக்கு, என் - என்னுடைய, பாடு உடை - இடத்தையுடைய (பெரிதான), அல்குல் - நிதம்பங்களையுடைய பெண், இழந்தது, பண்பு - ஸ்வ பாவம்.

(கருத்து) எல்லா ஆத்மாக்களும் எல்லாப் புருஷார்த்தங் களையும் அடைவதற்குவேண்டிய உடம்புகளையும் இந்திரியங்களை யும் பெறுவதற்காகப் பிரமமாவுக்குத் தகுந்த ஜ்ஞாநத்தையும் சக்தியையும் கொடுத்து, அவைகளை உண்டுபண்ணும்படி காருண் யத்தாலே செய்தவனும், தாழ்ந்தவர்களும் உயர்ந்தவர்களும் வெளிக்கும்படி பெரிதான பூமியை அவர்கள் இருந்தவிடத்திலேயே தன்னைக்கொண்டு தங்களாகும்படி அவர்களைத் திருவடியால் ஸ்பரிசித்து அளந்து ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டி இவளைத் தோற்பித்தவனும், பூமி முழுவதுக்கும் ஸ்வாமியாயிருக் கத் தகுந்தவர்களும் தன்னை எல்லாவிதத்தாலும் ஆச்ரயித்தவர் களுமான ராஜாக்களாகிய பாண்டவர்களுக்காக வாத்ஸல்யத்தினாலே

தூதன் செய்யவேண்டிய வேலையைச்செய்து தன்னைக் கிருதார்த்தனாக எண்ணுகிறவனுமான கண்ணனை, ஆசைப்பட்டுப் பெருமையாலே பெரிய நிதம்பங்களையுடைய இந்த என்னுடைய பெண் தன்னுடைய ஸ்வபாவத்தை இழந்தாள். (4)

---

பண்புடை வேதம் பயந்த பரனுக்கு
மண்புரை வைய மிடந்த வராகற்குத்
தெண்புனற் பள்ளியெந் தேவபி ரானுக்கென்
கண்புனை கோதை யிழந்தது கற்பே. (ரு)

(ப - ரை) பண்பு உடை வேதம் - நல்ல ஸ்வபாவத்தையுடைய வேதத்தை, பயந்த - (பிரமனுக்கு) கொடுத்த, பரனுக்கு, மண் புரை - மண் உயர்ந்த (அதிகமான), வையம் - பூமியை, இடந்த - பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்த, வராகற்கு - வராஹரூபமெடுத்தவனுக்கு, தென் புனல் பள்ளி - தெளிந்த ஜலத்தையுடைய திருப்பாற்கடலில் படுத்திருந்தவனும் எம் - என் ஸ்வாமியும், தேவ பிரானுக்கு - நித்திய ஸூரிகளுக்குத் தன்னைக் கொடுப்பதாகிய உபகாரத்தைச் செய்தவனுமானவனுக்கு, என் - என்னுடைய, கண் புனை - (தன்னைப் பார்ப்பவர்களின் கண்ணை தன்னிடம்) கட்டும்படியான அழகை யுடைய, கோதை - மயிர்முடியையுடைய பெண், இழந்தது, கற்பு - அறிவு.

(கருத்து) தன்னுடைய ஸ்வரூபம் ரூபம் குணம் முதலானவைகளை உள்ளபடி காட்டி, அதனால் தன்னைக்காட்டிலும் அதிகப் பெருமையையுடைய வேதத்தை ஆதிகாலத்தில் பிரம்மாவுக்குக் கொடுத்தவனும், இந்த ஔதார்யம் என்கிற குணத்தினால் எல்லாருக்கும் மேற்பட்டவனும், மண் நிறைந்து கனமான பூமியை வராஹரூபத்தை எடுத்துக்கொண்டு பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்த அழகையுடையவனும், வைகுந்தத்தில் தன்னுடைய அழகை அநுபவித்துக்கொண்டிருக்கிற நித்தியஸூரிகளும் தோற்று அடிமை செய்யும்படி திருப்பாற்கடலில் பிராட்டியுடன் அழகாய்ப் படுத்திருக்கிறவனுமான எம்பெருமானுக்குப் பார்த்தவர்கள் கண்ணையிழக்கும்படியான மயிர்முடியையுடைய என்னுடைய பெண் அறிவை இழந்தாள்.

குறிப்பு :—பாட்டின் முதலடிக்கு, பிரம்மாவுக்கு அறிவைக் கொடுத்தவன, என் பெண்ணின் அறிவைத் தன் அழகாலும் குணத்தாலும் வாங்கிவிட்டானே என்பது கருத்து. (5)

---

கற்பகக் காவன நற்பல தோளற்குப்
பொற்சுடர்க் குன்றன்ன பூந்தண் முடியற்குப்
நற்பல தாமரை நாண்மலாக் கையற்கென்
விற்புரு வக்கோடி தோற்றது மெய்யே. (௬)

(ப - ரை) கறபகம் கா அன - கறபகச்சோலைபோலிருக்கிற, நல் பல தோளறகு - நல்ல பல தோள்களை யுடையவனுக்கு, சுடர் - காந்தியுள்ள, பொன குனறு அன்ன - பொன்மலையென்று சொல்லத்தகுநத, பூ - அழகான, தண - குளிர்ந்த, முடியறகு - கிரீடத்தையுடையவனுககு, நல் பல - நல்லபல, தாமரை நாள் மலர் கையறகு-அபபோது மலர்ந்த தாமரைபூப்போலேயிருக்கிற திருககைகளை உடையவனுககு, என் - எனனுடைய, வில புருவம் கொடி - விலலைப்போன்ற புருவத்தையுடைய கொடிபோல் மிருதுவான பெண், தோறறது, மெய் - உடமபு.

(கருத்து) திருப்பாறகடலில் பிராட்டியுடன் படுத திருக்கிற அழகாலே கிளைகளையுடைய கற்பகச்சோலையோ என்று சொல்லும்படி நலல பல தோள்களையுடையவனும, அந்தக் கறபகச் சோலையில் தாமரைக்காடு அப்போது மலர்ந்ததுபோல, அழகாயிருக்கிற நல்ல பல திருககைகளையுடையவனும, காந்தியுள்ள பொன்மலைபோல் அழகாய்த் திருமுடிக்கு மிருதுவாயிருக்கிற கிரீடத்தையுடையவனுமான எம்பெருமானுக்கு, சாரங்கம் என்னும் வளைந்த விலலைப்போல் புருவங்களையும, கொடிபோன்ற உடம்பையுமுடைய என்னுடைய இந்தப்பெண் அவனைப் பெருமையால் தன் உடமபை இழந்தாள் அதாவது அது அவள் வசமில்லாமல் போயிறறு.

குறிப்பு :— (1) தோள்களுக்கு நன்மையாவது – வாஸனையாலும் மிருதுவா யிருப்பதாலும் கறபக மரங்களைக்காட்டிலும் அதிக அழகாயிருப்பது.

(2) 'பல தோளற்கு' என்பதற்கு, ஆசிரிதர்களைக் கட்டிக்கொள்வதற்கும் அதினால் அவர்களுக்குக் கண்களில் ஆனந்த ஜலத்தை உண்டுபண்ணுவதற்கும் தகுந்தபடி நான்கு கைகள் இருக்கின்றன என்பது கருத்து.

(3) கைகளுக்கு நன்மையாவது — நீலமேகம்போன்ற திருமேனிக்கு ஒரு புதிய அழகை உண்டுபண்ணும்படியாயிருப்பது.

(4) 'விறற்புருவக்கொடி' என்பதற்கு, தன் அழகால் அவனையும் தோற்பிக்கக்கூடிய இவள், அவன் அழகிற்குத் தோற்று இப்படிப் பரவசமாயிருக்கிறாளே என்று தாயார் துக்கப்படுகிறாள். பிரம்மாஸ்திரத்தைக் கையில் வைத்துக்கொண்டிருந்து மற்றவர்களை ஜயிக்கக்கூடியவன், அவர்களால் அடிபட்டுக்கிடப்பதுபோலிருக்கிறது இது என்பது கருத்து.

(இ - ம்) அன - அன்ன : தொகுத்தல் விகாரம். (௬)

---

மெய்யமர் பல்கல னன்கணிந் தானுக்குப்
பைய ரவினணைப் பள்ளியி னானுக்குக்
கையொடு கால்செய்ய கண்ணபி ரானுக்கென்
தைய லிழந்தது தன்னுடைச் சாயே. (௭)

(ப - ரை) மெய் அமர் - திருமேனியில் பொருந்தியிருக்கிற, (அதற்குத் தகுந்தவைகளாயிருக்கிற) பல கலன் - அநேகத் திருவாபரணங்களை, அணிந்தானுக்கு - சாத்திக்கொண்டிருக்கிறவனுக்கு, பை அரவின் - படங்களையுடைய ஆதிசேஷனாகிய, அணை பள்ளியினானுக்கு - படுக்கையில் படுத்துக்கொண்டிருக்கிறவனுக்கு, கையொடு கால் - திருக்கைகளோடு திருவடிகளும், செய்ய - சிவப்பாயிருக்கிற, கண்ணபிரானுக்கு - கண்ணனாய் அவதாரஞ்செய்து உபகாரம் செய்த எம்பெருமானுக்கு, என் தையல் - என்னுடைய பெண், இழந்தது, தன்னுடை சாய் - தனக்கு நகைகளால் உண்டான அழகு.

(கருத்து) தன்னுடைய திருமேனியின் காந்தியானது பூத்திருக்கிறதோ என்று சொல்லும்படி அதற்குத் தகுந்தவைகளான பல திருவாபரணங்களைச் சாத்திக்கொண்டிருக்கிறவனும்,

திருப்பாற்கடலில் ஆதிசேஷனாகிய படுக்கையில் அழகுடன் படுத்துக்கொண்டிருப்பவனும், திருவாபரணங்களின் காந்தியையும் ஆதிசேஷன் படங்களின் ரத்னங்களுடைய காந்தியையும் அடக்கிக்கொண்டு வெளிப்படுகிற காந்தியையுடைய சிவந்த திருக்கண்களையுடையவனும், கண்ணனாய் அவதாரம் செய்து ஆச்ரிதர்களுக்கு உபகாரங்களைச் செய்தவனுமான எம்பெருமானுக்குத் தோற்று, அவனைப் பெருமையாலே என்னுடைய இந்தப் பெண், ஆபரணங்களால் தனக்கு உண்டான அழகை இழந்தாள்.

(இ - ம) சாய் - சாயை - கடைக்குறை. சாயலின விகாரமாகவும் கொள்ளலாம்; சாயல் - மென்மை. உரிச்சொல். (7)

---

சாயக் குருந்த மொசித்த தமியற்கு
மாயச் சகட முதைத்த மணாளற்குப்
பேயைப் பிணம்படப் பாலுண்பி ரானுக்கென்
வாசக் குழலி யிழந்தது மாண்பே. (அ)

(ப - ரை) குருந்தம் - (அஸுரன உள்ளே புகுந்திருந்த) குருந்தமரத்தை, சாய - வேரோடு சாய்ந்துவிழும்படி, ஒசித்த - முறித்த, தமியற்கு - ஸஹாயமில்லாமல் வேலைகளைச் செய்கிற வீரனுக்கு, மாயம் சகடம் உதைத்த - வஞ்சனையுள்ள வண்டியை உதைத்து முறித்த, மணாளற்கு - இந்தப் பெண்ணின் நாயகனுக்கு, பேயை - (பூதனை என்கிற) பேய்ச்சியை, பிணம் பட - பிணமாய் விழும்படி, பால் உண்ட பிரானுக்கு - (அவளுடைய) ஸ்தந்யத்தைச் சாப்பிட்டு உபகாரம் செய்தவனுக்கு, என் வாசம் குழலி - இயற்கையாகவே நல்ல வாஸனையுள்ள மயிர் முடியையுடைய என்னுடைய பெண், இழந்தது, மாண்பு-அழகு.

(கருத்து) திருப்பாற்கடலிலிருந்துவந்து வஸுதேவனுக்குத் திருமகனாய் அவதாரம் செய்து, அஸுரன் உள்ளே புகுந்து இருந்த குருந்தமரத்தை ஒருஸஹாயமுமில்லாமல் கீழே சாய்ந்து விழும்படி முறித்து, உள்ளேயிருந்த அஸுரன் தோன்றாமல் வண்டிபோல் காணப்பட்டதைத் திருவடிகளால் உதைத்து முறித்து, பூதனையென்கிற பேய்ச்சி பிணமாய் விழும்படி அவள் ஸ்தந்யத்தைச் சாப்பிட்டு இப்படி உபகாரம் செய்து இந்த

லீலைகளால் உண்டான வருத்தம் திருமுகத்தில் தோன்றும்படி இருந்த இருப்பைக் காட்டி, இவளைத் தன் வசப்படுத்திக் கொண்ட எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெருமையால் நல்ல வாஸனையுள்ள மயிர்முடியையுடைய இந்த என்னுடைய பெண் தன் அழகை இழந்தாள்.

குறிப்பு :—(1) சக்கிரவர்த்தித் திருமகன் ருத்திரனுடைய வில்லை முறித்து, ஸீதையைத் தன் வசப்படுத்திக்கொண்டான். அதுபோல், மாயச்சகடத்தை உதைத்து முறித்து எம்பெருமான் ஆழ்வாரைத் தன் வசப்படுத்திக்கொண்டான் என்பது இரண்டாவது அடியின் கருத்து.

(2) சூர்ப்பணகை என்கிற ராக்ஷஸியை மூக்கையும் காது களையும் அறுத்து உயிருடன் விட்டபடியால் கலகமுண்டாகி இலங்கைக்குப்போய் ராவணனுடன் சண்டை போடவேண்டியதாயிருந்தது. அதுபோலில்லாமல், பூதனையைக் கொன்றமையால் கலஹமில்லை என்பது 'பிரான்' என்பதற்குக் கருத்து. (8)

---

மாண்பமை கோலத்தெம் மாயக் குறளற்குச்
சேண்சுடர்க் குன்றன்ன செஞ்சுடர் மூர்த்திக்குக்
காண்பெருந் தோற்றத்தெங் காகுத்த நம்பிக்கென்
பூண்புனை மென்முலை தோற்றது பொற்பே. (௯)

(ப - ரை) மாண்பு அமை - அழகு நிறைந்த, கோலத்து - அவதார ரூபத்தையுடையவனும், எம்-எம்முடையவனும் (அந்த அழகாலே நமக்கு ஸ்வாமியும), மாயம் குறளற்கு - ஆச்சரியமான வாமநனும், சேண் - உயர்ந்த, சுடர் குன்று அன்ன - காந்தியுள்ள மலையைப்போன்ற, செம் சுடர் - சிவந்த காந்தியுள்ள, மூர்த்திக்கு - திருமேனியையுடையவனும், காண்-காணத்தகுந்த, (பார்த்தவர்களுடைய கண்ணையும் மனதையுமிழுக்கும்படியான), பெரும் தோற்றத்து - ஆச்சரியமான அவதார ரூபத்தையுடையவனும், எம - எம்முடையவனும (எனக்கேஸ்வாமியும்), காகுத்த நம்பிக்கு - ககுத்ஸ்தன் வம்சத்தில் பிறந்தவனும் நல்ல குணங்கள் நிறைந்தவனுமான சக்கிரவர்த்தித் திருமகனுக்கு, என் - என்னு

டைய, பூண் புனை-ஆபரணங்களைப் பூட்டிக்கொண்ட, மென்முலை-மிருதுவான (நாயகனைவிட்டுப் பிரிந்த வருத்தத்தைப் பொறுக்க முடியாத) ஸ்தநங்களையுடைய இந்தப் பெண், தோற்றது - இழந்தது, பொற்பு - அழகு.

(கருத்து) மஹாபலியிடமிருந்து மூன்றுஅடி நிலத்தைக் கேட்பதற்காக அழகுநிறைந்த ஆச்சரியமான வாமந ரூபத்தை எடுத்துக்கொண்டவனும், அவன் கொடுத்த நிலத்தை அளப்பதற்காகத் திரிவிக்கிரம ரூபத்தை எடுத்துக்கொண்டு, உயர்ந்த காந்தியுள்ள மலையில் தாமரைக்காடு பூத்திருக்கிறதோ வென்று சொல்லும்படி, நீலமான திருமேனியில் சிவந்த திருவடிகள், திருக்கைகள், திருக்கண்கள், கௌஸ்துபமணி ஆகிய இவைகளையுடையவனும், பார்த்தவர்களுடைய கண்களையும் மனதையும் இழுக்கும்படியான ஆச்சரியமான அவதார ரூபத்தையெடுத்துக்கொண்டவனும், மேன்மையான குணங்கள் நிறைந்தவனும், ககுத்ஸ்தன் வம்சத்தில் பிறந்தவனுமான சக்ரவர்த்தித் திருமகனுக்கு அவனுடைய அழகுக்குத் தோற்று அவனைப் பெறமுடியாமல் என்னுடைய இந்தப்பெண் தன்னுடைய அழகை இழந்தாள்.

குறிப்பு :—கீழ்ப்பாட்டில் சொன்ன அழகு அவயவங்களின் அழகு ; இதில் சொன்ன அழகு திருமேனி முழுவதின் அழகு.

(9)

---

பொற்பமை நீண்முடி பூந்தண் டுழாயற்கு
மற்பொரு தோளுடை மாயப்பி ரானுக்கு
நிற்பன பல்லுரு வாய்நிற்கு மாயற்கென்
கற்புடை யாட்டி யிழந்தது கட்டே. (௧0)

(ப - ரை) பொற்பு அமை - அழகுநிறைந்த, நீள் - நீண்ட, முடி - கிரீடத்தையும், பூ - மலர்ந்த, தண் - குளிர்ந்த, துழாயற்கு - துளஸிமாலையையும் உடையவனுக்கு, மல் பொரு - மல்லரோடு சண்டைபோட்ட, தோள் உடை - தோள்களையுடைய, மாயம் பிரானுக்கு - ஆச்சரியமானவனும் உபகாரங்களைச் செய்தவனும், நிற்பன - ஸ்தாவரங்களும் ஜங்கமங்களுமான, பல் உரு வாய்-பல ரூபங்களுள்ளவனுமாக, நிற்கும் - இருக்கிற, மாயற்கு - ஆச்சரியமானவனுக்கு, என் - என்னுடைய, கற்பு உடையாட்டி-அறிவுள்ளபெண், இழந்தது, கட்டு - எல்லாம்.

(கருத்து) தான் ஸர்வேசுவரன் என்று தோன்றும்படி அழகு நிறைந்த நீண்ட கிரீடத்தையுடையவனும, நித்யஸூரி களும், மாலாகாரனும மலர்ந்த அழகான துளஸிமாலைகளாலும், கூனி சந்தனத்தாலும் செய்த அலங்காரத்தையுடையவனும, பிறகு இந்த அலங்காரமானது அழியாதபடி மல்லர்களுடன் சண்டைபோடும் சாதுர்யமுள்ளவனும், இந்த அழகை ஸபையில் வந்திருக்கும் மதுரா பட்டண ஸ்திரீகளுக்குக்காட்டி உபகாரம செய்தவனும், ஜங்கமங்களுக்கும் ஸ்தாவரங்களுக்கும ஆத்மா வாய், அவைகளைத் தனக்கு ரூபமாக உடையவனாயிருந்தும், அவைகளின தோஷங்கள் தன்னிடத்தில் சேராத ஆச்சரியத்தை யுடையவனுமான எம்பெருமானை ஆசைப்பட்டுப் பெறுமல் அறி வுள்ள என்பெண் தனனையும தன்னைச்சேர்ந்த எல்லாவற்றையு மிழந்தாள்.

குறிப்பு :—(1) முதலடியில் ஸர்வேசுவரன் என்று காட்டும் படியான கிரீடத்தையும், துளஸி மாலைகளால் அலங்காரத்தையும் சொல்லியிருக்கிறபடியால் அலங்காரத்தை மாலாகாரனும் கூனி யும் மாத்திரம் செய்யவில்லை. நித்திய ஸூரிகளும் செய்தார் கள் என்பது கருத்து.

(2) 'நிற்பன' என்பது, ஊர்வன என்பதற்கும் உப லக்ஷணம். நிற்பன - ஸ்தாவரங்கள்; ஊர்வன - ஜங்கமங்கள்.

(3) துளஸிமாலையைச் சொன்னது கூனிகொடுத்த சந்த னத்துக்கும் உபலக்ஷணம. (10)

---

கட்டெழிற் சோலைநல் வேங்கட வாணனைக்
கட்டெழிற் றென்குரு கூர்ச்சட கோபன்சொல்
கட்டெழி லாயிரத் திப்பத்தும் வல்லவர்
கட்டெழில் வானவா போகமுண் பாரே. (கக)

(ப - ரை) கட்டு எழில் - முழுவதும் பிரகாசிக்கிற, சோலை- சோலைகள் நிறைந்த, நல் - நல்லதான, (ஸ்வாமியான தனக்கும், தன்னுடைய ஸொத்துக்களான ஆத்மாக்களுக்கும் ஒரேவிதமாய் இனியவனான) வேங்கடம் வாணனை - திருவேங்கட மலைக்கு ஸ்வா மியானவனைக் குறித்து, கட்டு எழில் - ஊரெல்லாம் எம்பெருமா னுடைய ஸொத்து என்று நினைப்பதாகிய அழகையுடைய,

தென - அழகான, குருகூர் சடகோபன் சொல் - குருகூரிலிருந்த ஆழ்வார் அருளிச்செய்ததான, ஆயிரத்து - ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, கட்டு எழில - முழுவதும் அழகான, இப்பத்தும் வல்லவர்-இந்தப் பத்துப் பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள், கட்டு எழில - முழுவதும் விளங்குகிற, வானவர் - நித்திய ஸூரிகளுடைய, போகம - போகத்தை, உண்பார் - அநுபவிப்பார்கள்.

(கருத்து) முழுவதும் பிரகாசிக்கிற சோலைகளை உடைய ஸ்வாமியான தனக்கும் தாஸர்களுக்கும் இனியதான திருவேங்கட மலையின் ஸ்வாமியைக் குறித்து ஆழ்வார் அருளிச்செய்த முழுவதும் அழகான இந்தப் பத்துப் பாட்டுக்களை அடிக்கடி படிக்கச் சக்தியுள்ளவர்கள் நித்திய ஸூரிகளுடைய போகத்தை அநுபவிப்பார்கள். (11)

---

[illegible] ॥ ।௭௫।

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னுடைய அழகையும் லீலைகளையும் காட்டி தன்னை அடைந்தவர்களுக்குள்ள 'நான், என்னுடையது' என்கிற எண்ணம் தைரியம் சாதுரியம் முதலியவைகளை அபஹாரம் செய்கிறான் என்பது சொல்லப்படுகிறது. அவைகளாவன :— (1) எல்லாருக்கும் மேற்பட்டவனாயிருப்பது; (2) ஐந்து ஆயுதங்களின் விளையாட்டை யுடையவனாயிருப்பது; (3) பிரளயஜலத்தில ஆலிலையில் படுத்திருந்தது; (4) பிரம்மாவை உண்டுபண்ணினது முதலானவைகள்; (5) தேவர்களுக்கு ஸ்வாமியாயிருப்பது; (6) கற்பகச்சோலைபோல் அழகான தோள்களையுடையவனாயிருப்பது; (7) அநேக திரு ஆபரணங்களாலே அலங்காரமுள்ளவனாயிருப்பது; (8) குந்தமரத்தை முறித்தது; (9) ஆச்சரியமான அவதாரங்களைச்செய்தது; (10) எல்லாருக்கும் ஆத்மாவாயிருப்பது. (75)

# ஏழாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழிகளில் ஆழ்வார் எம்பெருமானைவிட்டுப் பிரிந்து துக்கப்பட்டு மோஹத்தையடைந்திருந்தார் என்பது சொல்லப்பட்டது. அவனிடத்திலிருந்த மிகுந்த ஆசையாலே அவனிருக்கும் திருக்கோளூருக்கு ஆழ்வார் எழுந்தருள, இதைக்கண்டு திருத்தாயார் துக்கப்பட்டு அதைத் தடுக்கமுடியாதபடி மோஹத்தை அடைந்திருந்தாள். வெகுகாலம் கழித்து நினைவு திரும்பிவந்தது. தன் பெண்ணைக் காணாமையால் அவளை இழந்தேன் என்று இந்தத் திருவாய்மொழியில் பலவிதமாய்ப் பேசுகிறாள்.

(2) ஆழ்வார் பலக்குறைவால் திருக்கோளூருக்கு எழுந்தருளவில்லை. ஆனால், அவனிடத்திலேயே அவர் மனது படிந்திருந்தபடியால் அங்கே தாம் போனதாகவே அவருக்குத் தோன்றிற்று. இவ்விதமான மாநஸாநுபவத்தால் எம்பெருமானைவிட்டுத் தாம் பிரிந்திருந்ததையும் நினைக்கமுடியவில்லை. முன் பிரிந்து உண்டானவியஸநமும் இருந்தது. இந்த இரண்டாலும் அவருடைய மனதைத்தவிர மற்ற இந்திரியங்கள் வேலை செய்யவில்லை. தம்முடைய இந்த இருப்பைத் தம்மைச் சேர்ந்தவர்கள் கண்டு வருந்தப்படுவதைத் தாயார் வார்த்தையால்சொல்லி அந்த இருப்பை எம்பெருமானுக்கு இந்தத்திருவாய்மொழியில் தெரிவிக்கிறார்.

(கலித்துறை.)

உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும்வெற் றிலையுமெல்லாங்
கண்ணனெம் பெருமா னென்றென்றே கண்க ணீர்மல்கி
மண்ணி னுளவன் சீர்வளம் மிக்கவ னூர்வினவி
திண்ண மென்னிள மான்புகு மூர்திருக் கோளூரே. (க)

(ப - ரை) உண்ணும் சோறு - (பசித்தவேளையில்) சாப்பிடப்படும் சோறும், பருகும் நீர் - (தாஹம் எடுத்தவேளையில்) குடிக்கப்படும் ஜலமும்; தின்னும் வெற்றிலையும் - (போகத்துக்காகச) சாப்பிடப்படும் வெற்றிலையும், எல்லாம்-இவைகள் எல்லாம், கண்ணன் எம்பெருமான் - என்ஸ்வாமியான கிருஷ்ணன், என்று என்றே - இப்படியே மேன்மேலும் சொல்லி, கண்கள் நீர் மல்கி-

கண்களில் நீர் நிரம்பி [இருக்கிறவளான], என் - என்னுடைய, இளமான் - மான்குட்டியைப்போல மருண்ட பார்வையுடைய பெண், மண்ணினுள் - பூமிகளுள்ளே, அவன் சீர் - அவனுடைய நல்ல குணங்களின, வளம - ஸம்ருத்தியானது, மிக்க - மிகுந்திருந்த, அவன் ஊர் - அவனுடைய ஊரை, வினவி - (எதிரில் வருகிறவர்களைக) கேட்டுக்கொண்டு, புகும ஊர - போகக்கூடிய ஊர், திருக்கோளூரே - திருக்கோளூர்தான, திண்ணம் - இது நிச்சயம்.

(கருத்து) நான் இவளுக்குச் சாப்பிடச் சோறறையும குடிக்க ஜலத்தையும போட்டுக்கொள்ள வெற்றிலையையும கொண்டு போய்க்கொடுத்தால, அவைகளை அவள் பாாக்கிறதில்லை. இவைகள் எல்லாம எனக்கு கண்ணனதான் என்று மான்குட்டியைப் போன்ற பார்வையையுடைய அவள மேனமேலும சொல்லிக்கொண்டு அவனைவிட்டுப பிரிந்த துககத்தாலே கணகளில நீர் நிரமபியிருநதாள். அவளை இங்கு காணவில்லையே. பூமியில் அவனுடைய நலல குணங்கள் எல்லாம நனறாய் விளங்குகிற ஊர் திருக்கோளூா. அவனிடத்தில படிந்த மனதையுடையவளாகையாலே 'அந்த ஊர் எங்கேயிருககிறது? எவ்வளவு தூரமிருககிறது?' என்று எதிரில் வருகிறவாகளைக் கேட்டுக்கொண்டு, தனககு அதுவே கட்டுஸாதம்போல் துணையாகவைத்துக்கொண்டு அங்கேயே போயிருப்பள். இதில் ஸந்தேஹமில்லை. கண்ணீர் நிறைந்த இருப்பையாவது நான் பார்த்துக்கொணடிருக்கப் பாககியம பெறவில்லை. அவளை இழந்தேன்.

குறிப்பு :— (1) சோறு பசிக்காத வேளையிலும், ஜலம் தாஹமிலலாத வேளையிலும, வெற்றிலை போகததைத் தேடாத காலத்திலும் ஒருவனுக்கு வேணடியிரா. பசித்துத் தாஹமெடுத்துப் போகத்தைத் தேடும் காலங்களில்தான் இவைகள் வேண்டியவைகளாக இருககும். இந்த அாததத்தைக காட்டுவதற்காக 'உண்ணும், பருகும, தின்னும்' என்று சொல்லியிருக்கிறது.

(2) உலகததிலுள்ளவர்களுக்குச் சோறு தாரகம்; அதாவது உடம்பில் உயிர் இருக்கும்படி செய்வது. ஜலம் போஷகம; அதாவது உடம்புக்கு புஷ்டியைச் செய்வது. வெறறிலையும் அவை போன்றவைகளும் போக்கியங்கள்; ஸுகத்தைக் கொடுகிறவை

கள். ஆழ்வாருக்கு இவைகள் எல்லாம் கண்ணனே. அவனை நினைப்பதாலேயே உடம்பில் உயிர் இருந்தது; அதுவே புஷ்டியாகக் கொடுத்தது, அதுவே அவருக்கு ஸந்தோஷத்தை உண்டுபண்ணிற்று என்பது 'கண்ணனே' என்பதற்குக் கருத்து.

(3) 'என் இளமான்' என்கிறவிடத்தில் 'என்' என்கிற சொல்லுக்கு உயர்ந்த வைஷ்ணவகுலத்தில் பிறந்தவர்கள் தம் முன்னோர்களைப்போலவே இருப்பார்கள் என்பது கருத்து.

(4) என் பெண்ணாகையால் அவனில்லாத ஊருக்குப் போகாள், மான்குட்டியைப் போலிருப்பதால், வெகுதூரம் போக அவளால் முடியாது. திருக்கோளூரில் அவன் குணங்களெல்லாம் நன்றாய் விளங்குகிறபடியாலும், அந்த ஊர் கிட்ட இருக்கிறபடியாலும் அங்கேயே அவள் போயிருக்கவேண்டும்.

(இ - ம்) கண்ணன்...என்றென்றே - ஏகாரத்துக்குப் பிரிநிலைப் பொருள் கண்ணனைத்தவிர வேறொன்றையும் பார்க்கிறதில்லை என்பது கருத்து. 'வெற்றிலையும்' என்பதிலுள்ள உம்மையை முன்புள்ள 'சோறு, நீர்' என்பவைகளோடும் கூட்டுக.

(1)

---

அவ—கீழ்ப்பாட்டில் ஆழ்வார் திருக்கோளூர்க்குப் போனதாகத் திருத்தாயார் தீர்மானம் பண்ணினாள். இதில் அவள் திரும்பி வருவளோவென்று அவளுடைய பூவைகளைக் கேட்கிறாள் :—

ஊரும் நாடு முலகமுந் தன்னைப்போ லவனுடைய
பேருந் தார்களு மேபிதற றக்கற்பு வானிடறிச்
சேரு நல்வளஞ் சோபழ னத்திருக் கோளூர்க்கே
போருங்கொ லுரையீர் கொடியேன் கொடிபூ வைகளே. (உ)

(ப - ரை) ஊரும் - தானிருந்த கிராமத்திலிருக்கிறவர்களும், நாடும் - அதைச்சேர்ந்த தேசத்திலிருக்கிறவர்களும், உலகமும் - அந்தத் தேசமுள்ள உலகத்திலிருக்கிறவர்களும், தன்னைப் போல் - தம்மைப்போல, அவனுடைய பேரும் - அவனுடைய (குணங்களைக் காட்டுகிற) திருநாமங்களையும், தார்களுமே - மாலைகளையும், (இவைபோல அடையாளங்களான சங்கு சக்ரம் முதலானவைகளையும்), பிதற்ற - முன்னும் பின்னுமாய்ச் சொல்லும்படி, வான் - பெரியதான (ஒருவராலும் மீறக்கூடாத), கற்பு -

ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய இருப்பை, இடறி - த்ருணமாக எண்ணி, நல் வளம் சேருமெ - நல்ல செழிப்பு சேர்ந்திருக்கிற, பழனம் திருக்கோளூர்க்கு - வயல்களையுடைய திருக்கோளூரில், சேரும் - சேருவள், கொடியேன் - பாபம் பண்ணின என்னுடைய, கொடி - கொடிபோல் மிருதுவான பெண், போரும் கொலோ - திரும்பி வருவாளா? பூவைகளே - அவளுடைய பூவைகளே! உரையீர் - சொல்லுங்கள்.

(கருத்து) எம்பெருமானுடைய குணங்களைக் காட்டுகிற திருநாமங்களையும், வனமாலை, சங்கு சக்ரம் முதலான அடையாளங்களையும் முன்னும் பின்னுமாய இந்தப்பெண் சொல்லுவதைக் கேட்டுத் தாமிருந்த கிராமத்திலும் அதைச் சேர்ந்த தேசத்திலும் அப்பாலுள்ள உலகத்திலுமிருக்கிறவர்களும், தம்மைப்போல் சொல்லும்படி அவைகளைச் சொல்லிக்கொண்டிருக்கிறாள். அவளை எப்பொழுதும் விட்டுப் பிரியும்படியான பாபத்தைப் பண்ணின என்னுடைய கொடிபோன்ற பெண், தனக்குண்டான வியஸநம் பொறுக்கமுடியாமையால் ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய தன்மையை அலக்ஷியம் செய்து மிகுந்த செழிப்புள்ள வயல்களால் சூழப்பட்ட திருக்கோளூரில் சேர்ந்திருக்கிறாளே. அவளுடைய பூவைகளே! அவள் திரும்பிவருவளோ? சொல்லுங்கள்.

குறிப்பு —(1) பூவைகளைக் கேட்பதின் கருத்து:—என்னிடம் அவள் எண்ணத்தைச் சொல்லமாட்டாள்; உங்களிடம் சொல்லியிருப்பளே; அதைச் சொல்லுங்கள். நான் பாபியானதால் எனக்காக வரமாட்டாள், உங்களுக்காகவாவது வரமாட்டாளோ? என்பது.

(2) 'போருங்கொல்' என்பதற்கு, உரையில் சொன்னபடியே பொருள் சொல்லவேண்டும். திருக்கோளூர்க்குப் போனது தாயாராலேயே முன்பாட்டில் சொல்லப்பட்டது. அதைப் பற்றிப் பூவைகளைக் கேட்கவேண்டியதில்லை. 'போரும' என்பதற்கு மீண்டு வரும் என்றும் பொருளுண்டு.

(இ - ம்) உரையீர் - பன்மை ஏவல் வினைமுற்று "ஊர், நாடு, உலகம்" என்கிற சொற்கள் ஆகுபெயர்களாய் அவைகளிலிருக்கிறவர்களைச் சொல்கின்றன. (2)

பூவைபைங் கிளிகள் பந்து தூதைபூம் புட்டில்கள்
யாவையுந் திருமால் திரு நாமங்க ளேகூவி யெழுமென்
பாவை போயினித் தண்பழ னத்திருக் கோளூர்க்கே
கோவை வாய்துடிப்ப மழைக்கண்ணொ டென்செய் யுங்கொலோ.

(ப - ரை) பூவை - பூவைகள், பைங்கிளிகள் - பச்சைவர்ண முள்ள கிளிகள், பந்து, தூதை - விளையாட்டுக்கு உதவும் செப்பு முதலான பொருள்கள், பூ புட்டில்கள் - புஷ்பப் பெட்டிகள், யாவையும் - ஆகிய இவைகளெல்லாம், திருமால - இவளுக்குப் பிராட்டியோடுகூடிய எம்பெருமான் தான். திருநாமங்களே கூவி - திரு நாமங்களையே சொல்லிக்கொண்டு, எழும் - அதினால பிராணனைத் தரித்துக்கொண்டிருக்கிற, என் பாவை - என் னுடைய பெண், தண் பழனம் திருக்கோளூர்க்கே - குளிர்ந்த வயல்களையுடைய திருக்கோளூரிலே, போய், இனி - அங்கு போன பின்பு, கோவை வாய் - கோவைப்பழம்போன்ற கீழுதடானது, துடிப்ப - துடிக்கும்படி, மழைக் கணணொடு - மழைபோல நீரைச் சொரிகிற கண்களோடு, என் செய்யும் கொலோ - என்ன செய்துகொண்டு இருக்கிறாளோ?

(கருதது) பிராட்டியோடு விளையாடிக்கொண்டிருக்கிற எம் பெருமானே இவளுக்குப் பூவை முதலான விளையாட்டு ஸாமான் கள். அவைகள் உலகத்திலிருக்கிறவர்களுக்கன்றோ விளையாட் டுக்கு உபயோகப்பட்டு ஸந்தோஷத்தை உண்டுபண்ணும். இவ ளுக்கு அவைகள் வேண்டுவதில்லை. அவனைக காணப் பெறாமை யாலே அவனுடைய திருநாமங்களையாவது சொல்லி அவைகளின் குளிர்ச்சியாலும் இனிமையாயிருப்பதாலும் உயிரைத் தரித்துக் கொண்டிருப்போம என்று அவைகளையே சொல்லிக்கொண்டிருந் தாள். குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட திருக்கோளூர்க்குப் போன என்னுடைய பெண் தன்னுடைய ஆசையெல்லாம் தீர்ந்து ஸந்தோஷப்பட்டுக்கொண்டிருப்பளோ? அல்லது அவன் ப்ரீதி செய்யாமையாலே கோவைவாய் துடிக்கும்படியும் கண்கள் நீரைச் சொரியும்படியுமிருந்து வருத்தப்படுவளோ?

குறிப்பு :—(1) இவள் சிறுபெண்ணாகையால் பூவைமுதலான வைகளைக்கொண்டு விளையாடவேண்டுமே; அப்படியில்லாமல் எம் பெருமானையே போக்யமாக எண்ணுகிறாளே; இஃதென்ன ஆச் சரியம் என்பது பாட்டின் முதலிரண்டடியின் கருத்து.

(2) இவள் இங்கே இருக்கும்போது திருநாமங்கள் தாரகமாயிருந்தன. இதைவிட்டு அங்கே போனது, அவனே தாரகமாயிருப்பன் என்று எண்ணிப் போனாளோ என்பது 'போய்' என்பதின் கருத்து. (3)

---

கொல்லையென் பாரகொலோ குணமிக் கனளென் பர்கொலோ
சில்லைவாய்ப் பெண்டுக ளயற்சேரி யுள்ளாரு மெல்லே
செல்வ மல்கி யவன்கிடந்த திருக்கோ ளூர்க்கே
மெல்லிடை நுடங்க விளமான் செல்ல மேவினளே. (ச)

(ப - ரை) இளமான் - மான்குட்டியைப்போன்ற இவள், செல்வம் மல்கி - செல்வம் மிகுந்து, அவன் கிடந்த - அவன் படுத்திருந்த, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரிலே, மெல் இடை - மிருதுவான தன்னுடைய இடுப்பு, நுடங்க - (நடந்து போன சிரமத்தாலே) துவளத்துவள, செல்ல - போவதற்கு, மேவினள் - ஆசைப்பட்டாளே, சில்லை வாய - கலஹம் பண்ணும் வாயையுடைய, பெண்டுகள் - கிட்ட இருந்த பெண்களும், அயல் சேரி உள்ளாரும - அடுத்த தெருவிலிருக்கிற பெண்டுகளும், கொல்லை என்பாரகொலோ - (ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய) வரம்பை அழித்துவிட்டவள் என்று சொல்லுவார்களோ, குணம் மிக்கனள் என்பர்கொலோ - குணத்தாலே உயர்ந்தவள் என்று சொல்லுவார்களோ? எல்லே - ஐயோ!

(கருத்து) மான்குட்டியைப்போல் அழகாயும அறியாதவளாயுமிருக்கிற இந்தப்பெண், செல்வம் மிகுந்து எம்பெருமான் பள்ளிகொண்டிருக்கிற திருக்கோளூருக்குத் தன்னுடைய அவயவங்கள் பலமில்லாமலிருப்பதைக் கவனியாமல், மிருதுவான தன்னுடைய இடுப்பு நடந்துபோகிற சிரமத்தால் துவளும்படி ஆசைப்பட்டுப் போனாளே இவளிருந்த தெருப்பெண்டுகளும், அசல் தெருப்பெண்டுகளும், இவள் தானிருக்கவேண்டிய இருப்பை மீறி அங்கே போனாள் என்று அதைக் குற்றமாகச் சொல்லுவார்களோ? அல்லது, இவளுக்கு அவனிடத்தில் என்ன மிகுந்த ஆசையிருக்கிறதென்று குணமாகச் சொல்லுவார்களோ? இதைக் குணமாகச் சொல்லுகிறவர்களுமுண்டோ? உலகத்தாருக்குக்

குணத்தைத் தோஷமாகச் சொல்லுவதன்றோ ஸ்வபாவம்? நான் அவனையிழந்து வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிறேனே. அவர்கள் குற்றமாகச் சொல்லுவதையும் கேட்கவேண்டுமோ? ஐயோ! நான் என்ன செய்வேன? (1)

---

மேவி நைந்து நைந்துவிளை யாடலுறா ளென்சிறுத்
தேவி போயினித் தன்றிரு மால்திருக் கோளூரில்
பூவியல் பொழிலுந் தடமு மவன்கோ யிலுங்கண்டு
ஆவியுட் குளிர வெங்ஙனே யுகக்குங்கோ லின்றே. (௨)

(ப - ரை) மேவி - (அவனை மனதாலே) கிட்டி (ஆசைப்பட்டு), நைந்து நைந்து - (ஒவ்வொரு க்ஷணத்திலும்) தளர்ச்சியை யடைந்து, விளையாடல் உறாள் - விளையாடுவதை அடையாதவளான, என் சிறு தேவி - என்னுடைய சிறு பெண்ணான தேவியானவள், போய் - (இங்கிருந்து) போய், இனி - இனிமேல், தன் திருமால் - தனக்கே ஸ்வாமியான பிராட்டியோடுகூடிய எம்பெருமானுடைய, திருக்கோளூரில், பூ இயல் - (எப்போதும) புஷ்பங்கள் நிறைந்திருப்பதே ஸ்வபாவமாகவுடைய, பொழில - தோட்டங்களையும, தடமும - (அவைகளிலிருக்கிற) தடாகங்களையும், அவன் கோயிலும் - அவனுடைய கோயிலையும, இன்று - (நல்ல பொழுதாய் விடிந்திருக்கிற) இன்றைக்கு, கண்டு - கண்ணாரக்கண்டு, ஆவி - பிராணனை (அது இருக்குமிடமான ஹ்ருதயம), உள் குளிர - (பிரிவாலுண்டான தாபம போய்) உள்ளுக்குள்ளும் குளிரும்படி, எங்ஙனே உகக்கும கொல் - எப்படி ஸந்தோஷப் படுவளோ?

(கருத்து) சிறு பெண்ணானதையாலே தன்னைப்போன்ற சிறு பெண்களோடு விளையாட வேண்டுவதாயிருக்க, அதைச்செய்யாமல், அவனை ஆசைப்பட்டு அவனைப் பெருமையாலே மிகுந்த தளர்ச்சியை அடைந்திருந்தாளே இந்தச் சிறுபெண்ணாகிய தேவி. இவள் தனக்கே ஸ்வாமியான திருமால் பள்ளிகொண்டிருக்கும் திருக்கோளூருக்குப்போய், அதில் இயற்கையாகப் புஷ்பங்கள் எப்போதும் நிறைந்திருக்கிற தோட்டங்களையும், அவைகளிலுள்ள தடாகங்களையும், அவனிருக்கும் கோயிலையும் கண்ணாரக்

கண்டு தனக்குப் பிரிவினாலுண்டான ஸந்தாபம் போய் ஹ்ருத யம் முழுவதும் குளிரும்படி ஸந்தோஷப்பட்டுக் கொண்டிருப் பாளோ? இதைப் பார்க்கும்படியான பாக்கியத்தை நான் பண் ணவில்லையே.

குறிப்பு :— 'தேவி' என்கிற சொல்லுக்கு, சிறு பெண்ணா யிருக்கும்போதும் எம்பெருமானுடைய குணங்களின் பெரு மையை அறியும்படியான ஸ்வபாவமுள்ள பெண் என்பது கருத்து.

(இ - ம) ஆவி - பிராணனை. இந்து ஆகுபெயராய் பிராணன் இருக்குமிடமான ஹ்ருதயத்தைச் சொல்கிறது. உருள் - வினை யால் அணையும் பெயர்; உருதவள் என்று பொருள். (5)

---

இன்றெனக் குதவா தகன்ற விளமா னினிப்போய்த்
தென்றிசைத் திலத மனைய திருக்கோ ளூர்க்கே
சென்றுதன் றிருமால் திருக்கண்ணுஞ் செவ்வாயுங் கண்டு
நின்றுநின்று நையும் நெடுங்கண் கள்பனி மல்கவே. (௬)

(ப - ரை) எனக்கு - (தன்னைப் பிரிந்து வருத்தப்படுகிற) எனக்கு, இன்று-(இப்படி வருத்தப்படும்) காலத்தில், உதவாது- துணையாயிராமல், அகன்ற - என்னைவிட்டுப்போன, இளமான் - மான்குட்டியைப்போன்றவள், போய் - (சிரமப்பட்டு) நடந்து போய், தென்திசை-தெற்குத் திக்குக்கு, திலதம் அனைய-(நெற்றி க்கு)த் திலகம்போல் அழகாயிருக்கிற, திருக்கோளூர்க்கே - திரு க்கோளூரில், சென்று - பிரவேசித்து, இனி - இனிமேல், தன் திருமால் - தன்னுடைய பிராட்டியோடு கூடியிருக்கும் எம்பெரு மானுடைய, திருக்கண்ணும் - திருக்கண்களையும், செவ்வாயும், சிவந்த திருப்பவளத்தையும், கண்டு - கண்ணாரக்கண்டு, நெடும் கண்கள்-ஸந்தோஷத்தால் மலர்ந்த கண்களில், பனி மல்க - (ஆன ந்த) ஜலம் பெருகும்படி, நின்று நின்று நையும் - தளர்ச்சியை அடைவள்.

(கருத்து) இவளை விட்டுப்பிரிந்து நான் வருத்தப்படுகை யில், எனக்குத் துணையாக இல்லாமல் மான்குட்டியைப்போன்ற இவள் என்னை விட்டுப்போனாளே. அவள் சிரமத்துடன் தென் திக்குக்குத் திலகம்போல் அழகைச்செய்யும் திருக்கோளூருக்குப்

போய், அங்கே தன்னுடைய எம்பெருமான் பிராட்டியுடன் சேர்ந்திருப்பதையும், அவனுடன சோகத்தையால் புது அழகை அடைந்த அவனுடைய திருக்கண்களையும் சிவந்த திருப்பவளத்தையும் கண்ணாரக்கண்டு, கண்ட ஸந்தோஷத்தாலே தன்னுடைய கண்கள் மலர்ந்து அவைகளிலிருந்து ஆநந்த ஜலம் பெருகும்படி நிலையாயிருந்து தளர்ச்சியை அடைவளோ? இந்த இருப்பை நான் காணப்பெறவில்லையே. (6)

---

மல்குநீர்க் கண்ணொடு மைய லுற்றம னத்தினளா
யல்லுநன் பகலு நெடுமோ லென்றழைத்த தினிப்போய்ச்
செல்வம் மல்கிய வன்கிடந்த திருக்கோ ளூரக்கே
யொல்கி யொல்கிநடந் தெங்ஙனே புகுங்கொ லோசிந்தே. (எ)

(ப - ரை) நல் அல்லும [நல] பகலும - நல்ல ராத்திரியிலும் நல்ல பகலிலும், மலகு நீர-பெருகுகிற நீரையுடைய, கண்ணொடு - கண்களோடு, மையல உற்ற - மோஹத்தையடைந்த, மனத்தினளாய் - மனத்தையுடையவளாய், நெடுமால் என்று-ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனே என்று சொல்லி, இனி - இதற்கு மேலே, ஒலகி ஒலகி நடந்து - பலக்குறைவால தளர்ந்து தளர்ந்து நடந்துபோய், ஓசிந்து - துவண்டு, செலவம மல்கி - செல்வம் நிறைந்து, அவன கிடந்த - அவன பள்ளிகொண்டிருந்த, திருக்கோளூரக்கே - திருக்கோளூரிலே, எங்ஙனே போய் புகுங்கொல- எப்படிப் போய் நுழைவளோ?

(கருத்து) எம்பெருமானுடன் சேர்ந்து அவனை அநுபவிக்கும்படியான ராத்திரியிலும் பகலிலும அவனைக் காணப் பெறாமையாலே கண்களில நீர்பெருக மனதில மோஹமடைந்து நெடுமாலே என்று சொல்லி அவனை அழைத்துக்கொண்டிருந்தாள். இப்படிப்பட்ட இவள், பலக்குறைவாலே அசைந்து அசைந்து துவண்டு, செல்வம பெருகி அவன் பள்ளிகொண்டிருந்த திருக்கோளூரில எப்படிப் போய்ச் சேர்ந்தாளோ? அப்படி நடந்து போனதை நான் பார்க்கும்படியான பாக்கியம பண்ணவில்லையே.

குறிப்பு —(1) ராத்திரிக்கும் பகலுக்கும நன்மையாவது—எம்பெருமானைக் கண்டு அவனுடன் சேருவதற்காக ஏற்பட்ட காலமாயிருப்பது.

(2) "செல்வம் மல்கி" என்பதற்கு, அந்த ஊரில் நிறைந்திருந்த செல்வத்தைக் கண்டு கர்வம் அடைந்து அவன் இங்கே வராமல் அங்கே படுத்துக்கொண்டிருக்கிறான்; இல்லாவிட்டால், இவள் போவதற்குள் எதிரில் வந்திருக்கமாட்டானோ? என்பது கருத்து. இதற்கு, அவன் படுத்திருப்பதில் அழகு என்கிற செல்வம் நிறைந்திருக்கிறது என்றும் பொருள் கொள்ளலாம். (7)

---

ஒசிந்த நுண்ணிடை மேற்கையை வைத்து நொந்துநொந்து
கசிந்த நெஞ்சினளாய்க் கண்ணநீர் துளும்பச் செல்லுங்கொல்
ஒசிந்த வொண்மலராள் கொழுநன் றிருக்கோ ளூர்க்கே
கசிந்த நெஞ்சினளா யெம்மை நீத்தவெங் காரிகையே (அ)

(ப - ரை) ஒசிந்த - (எம்பெருமானுடன் சேர்ந்ததாலே) துவண்ட, ஒண் - அழகிய, மலராள் - தாமரைப் பூவிலிருக்கிற பிராட்டியினுடைய, கொழுநன் - நாயகனுடைய, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரை அடைவதற்காகவே, கசிந்த நெஞ்சினளாய் - (அவனிடத்தில்) ஆசையால் நனைந்திருக்கிற மனத்தையுடையவளாய், எம்மை - தாயார்களான எங்களை, நீத்த - விட்டுப்போன, என் காரிகை - என்னுடைய அழகான பெண், ஒசிந்த - (மிகுந்த துக்கத்தாலே) துவண்ட, நுண் - இயற்கையாகவே மெல்லிதான, இடை - இடுப்பில், கையை வைத்து, நொந்து நொந்து - அதுவும் தாங்காமல் மேன்மேலும் வருத்தப்பட்டு, கண்ணநீர் துளும்ப - கண்களில் ஜலம் அலைய, கசிந்த நெஞ்சினளாய் - ஆசையால் நனைந்த மனத்தையுடையவளாய், செல்லும் கொல் - போய்ச்சேர்ந்தாளோ?

(கருத்து) வண்டால் துவைக்கப்பட்ட பூமாலையைப்போல் எம்பெருமானுடன் சேருகையாலே துவட்சியை அடைந்து, அதனால் ஓர் அழகுள்ளவளாயிருக்கிற பிராட்டியின் நாயகனான எம்பெருமானுடைய திருக்கோளூர்க்குப் போகவேண்டும் என்று அவனிடத்தில் ஆசையால் இளகின மனத்தை உடையவளான என்னுடைய அழகான பெண் தாயார்களாகிய எங்களை விட்டுவிட்டாளே. இயற்கையாகவே நுட்பமாயிருந்த துக்கத்தினால்

துவண்ட இடுப்பில் கையை வைத்துக்கொண்டு அதுவும் பொறுக்க முடியாமல் வருத்தப்பட்டுக்கொண்டு, கண்களில் ஜலமிலேய அவனிடத்தில் ஆசையால் இளகின மனத்தையுடையவளாய், அங்கே போய்ச்சேர முடிந்ததோ? அல்லது முடியவில்லையோ?

(8)

காரியநல் லனகளவை காணி லென்கண் ணனுக்கென்று
ஈரியா யிருப்பா ளிதெல்லாங் கிடக்க வினிப்போய்ச்
சேரிபல் பழிதூ யிரைப்பத் திருக்கோ ளூர்க்கே
நேரிழை நடந்தா ளெம்மை யொன்றும் நினைத்திலளே (௯)

(ப - ரை) நல்லனகள் காரியம் அவை - (அவனுக்காக எங்களால்) சிலாக்யமாய்ச் செய்யப்பட்டவைகளை (புஷ்பம் சந்தநம் முதலானவைகளை), காணில - கண்டால், என் கண்ணனுக்கு என்று - இவைகள் என் கண்ணனுக்கு என்று நினைத்து, ஈரியாய் இருப்பாள்-ஈரமுள்ள (அவனிடத்தில ஆசையால இளகின) மனத்தையுடையவளான, நேர இழை-தகுந்த ஆபரணங்களை உடைய இந்தப் பெண், இது எல்லாம் கிடக்க - (அவனுக்காக நான் கொண்டுபோன) இவைகளெல்லாம கிடக்க (கண்ணாலே பாராமல்), இனி - இதற்குமேலே, போய் - (இவைகளை விட்டுப்) போய், சேரி - தெருவிலிருக்கிற ஜனங்கள், பலபழி - பலபழிகளை, தூய்-தூற்றி, இரைப்ப - இரைந்து பேசும்படி, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கு, நடந்தாள்-நடந்து போனாள், எம்மை-என்னை ஒன்றும - ஒன்றாகவும, நினைத்திலள் - நினைத்தவளில்லை.

(கருத்து) அவனுக்காகக் கொண்டுபோன சிலாக்கியமான சந்தநம் புஷ்பம் முதலானவைகளைக் கண்டு அவனிடத்தில் ஆசையால் இளகின மனத்தையுடையவளாய் இவைகள் என் கண்ணனுக்கு என்று நினைத்து அவைகளைக் கண்ணாலே பார்க்காமலிருந்தாள். மிருதுவான உடம்புக்குத் தகுந்த லகுவான ஆபரணங்களையுடைய இந்தப் பெண் தெருவிலிருக்கிற ஜநங்களெல்லாம் அவளைப்பற்றிய பல பழிகளைச் சொல்லி இரையும்படி திருக்கோளூர்க்குப் போய்விட்டாளே? என்னைத் தாயாகவும் நினைக்கவில்லை. ஊரானரைப்போலவும் நினைக்கவில்லையே.

குறிப்பு :—(1) பல பழிகளாவன—அவன் வருகிறவரையில பொறுக்காமல் இவள் புறப்பட்டுப்போனாள்; தாயைவிட்டுப் போனாள்; தனியே போனாள்; ஊராருக்குப் பயப்படாதே போனாள்—என்பனவாம். இப்படி ஒவ்வொருத்தியும் சொல்லும் பழிகள்.

(2) 'போனாள்' என்று சொல்லாமல 'நடந்தாள்' என்று சொன்னதற்குக் கருத்து—அவள் எம்பெருமானிடத்தில் பக்தியுள்ளவளாகையால, தன் பெண்ணாக இருந்தும் அவளிடத்தில கௌரவம் பண்ணிச் சொல்லுகிறாள் என்பது.

(3) 'ஒன்றும் நினைக்கிலள்' என்பதற்கு, எம்பெருமானிடத்தில பக்தியுள்ளவர்களுடைய அபிமானத்தை எல்லாரும் தேடவேண்டியது அவனிடத்தில பக்தியுள்ள பெண்ணின அபிமானம் தனக்குக் கிடைக்கவில்லையே என்று தாயார் வருத்தப்படுகிறாள் என்பது கருத்து

(4) 'இனிப்போய்' என்கிறதற்கு, எல்லாம் கிருஷ்ணனுக்கு என்று இங்கே நினைத்துக்கொண்டிருந்தாளே; இதற்கு மேலே அவனுக்கு என்ன செய்யவேண்டும் என்று நினைத்து அங்கே போனாள் என்பது கருத்து. (9)

---

நினைக்கிலேன் தெய்வங்கா ணெடுங்க ணிளமா னினிப்போ
யனைத்து லகுமு டைய வரவிந்த லோசனனைத்
தினைத்த னையும்விடா ளவன்சேர் திருக்கோ ளூர்க்கே
மனைக்குவான் பழியும் நினையாள் செல்ல வைத்தனளே. (௧0)

(ப - ரை) அனைத்து உலகும் - எல்லா உலகங்களையும், உடைய - உடையவனான, அரவிந்தலோசனனை - தாமரைக் கண்ணனை, தினைத்தனையும் - தினையளவும் (கொஞ்சமும்), விடாள் - விடாதவளான, நெடுங்கண் - விசாலமான கண்களையுடைய, இளமான் - மான்குட்டியைப்போல அழகாயிருக்கிற இந்தப் பெண், இனி - இதற்குமேல, போய் - அவனைத் தேடிக்கொண்டுபோய், மனைக்கு - தன்னுடைய குடிக்கு, வான் பழி - (வரும்) பெரிய பழியையும், நினையாள் - நினைக்காதவளாகி, அவன் சேர் -

அவன் வசிக்குமிடமான, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரில், செல்ல வைத்தனள் - போக (மனதை) வைத்தாள் (சீக்கிரமாகப் போனாள்), நினைக்கிலேன் - (இப்படித் தகாத இவளுடைய வேலைகளை) நான் நினைக்கவும் சக்தியில்லாதவளாயிருக்கிறேன், தெய்வங்காள் - ஓ தெய்வங்களே!

(கருத்து) விசாலமான கண்களையுடைய மான்குட்டியைப் போல் அழகாயிருக்கிற இந்தப் பெண் இரண்டு விபூதிகளுக்கு ஸ்வாமியான தாமரைக் கண்ணனைக் கொஞ்சமும் விடுகிறதில்லை. தன் கண்ணழகுக்குத் தோற்று அவன் இங்கே வரவேண்டியவனல்லவா? அவன் கண்ணழகுக்குத் தோற்று இவள் அவன் வசிக்குமிடமான திருக்கோளூருக்குச் சீக்கிரமாய்ப் போனாளே. இதென்ன ஆச்சரியம் தன் குடிக்கு வரும் பழியையும் நினைக்கவில்லையே. அவளுடைய இந்தத் தகாத வேலையை என்னால் நினைக்கவும் முடிய வில்லையே. ஓ! தெய்வங்களே!

குறிப்பு.—எம்பெருமானையே நம்பின தாயார் வேறு தெய்வங்களைக் கூப்பிடுவது அவர்கள் தன் பெண்ணை ரக்ஷிப்பதற்காக அன்று. அவர்கள் ஊராரைப்போல் பழி சொல்லவில்லை. தன்னைப்போல் அவர்கள் தூங்கவில்லை. அவர்களுடன் தன் துக்கத்தைச்சொல்லி ஆறுதலை அடைகிறாள் என்பது 'தெய்வங்காள்' என்பதின் கருத்து.

(2) தினையென்றது ஒரு சின்ன தானியம்.

(இ - ம) நினைக்கிலேன் - நினை + கில் + ஆ + என்; கில் சக்தியைக் காட்டும் இடைச்சொல். எதிர்மறை ஆகாரம் கெட்டது. (10)

---

வைத்தமா நிதியாம் மதுசூ தனையே யலற்றிக்
கோத்தலா பொழில்சூழ் குருகூர்ச் சடகோ பன்சொன்ன
பத்துநூற்று ளிப்பத் தவன்சேர் திருக்கோ ளூர்க்கே
சித்தம்வைத் துரைப்பார் திகழ்பொன் னுலகாள் வாரே. (கக)

(ப - ரை) வைத்த - (ஆபத்காலத்தில் உதவுவதற்காக) வைக்கப்பட்ட, மா - பெரிய, நிதி ஆம் - நிதியாக இருக்கிற, மது

சூதனையே - மதுவைக்கொன்ற எம்பெருமானையே, அலற்றி - (அவனையடையாமையாலுண்டான வருத்தத்தாலே) அடிக்கடி சொல்லி, கொத்து அலர் - பூங்கொத்துகள் மலருகிற, பொழில் சூழ் - சோலைகளாலே சூழப்பட்ட, குருகூர் சடகோபன் சொன்ன - குருகூரிலிருக்கும் ஆழ்வார் அருளிச்செய்த, பத்து - பத்து அர்த்தங்களைச் சொல்லுகிற, நூற்றுள் - நூறு பாட்டுக்களுக்குள்ளே, இ பத்தை - இந்தப் பத்துப் பாட்டுக்களை, அவன் சேர் திருக்கோளூரதனை - அவன் சேர்ந்திருக்கிற திருக்கோளூரில், சித்தம் வைத்து - மனதை வைத்து, உரைப்பார் - சொல்லுகிறவர்கள், திகழ - விளங்குகிற, பொன் உலகு - பொன்போல் பிரகாசிக்கிற உலகத்தை (வைகுந்தத்தை), ஆள்வார் - ஆளுவார்கள்.

(கருத்து) ஆபத்துக் காலத்தில் உதவுவதற்காக வைக்கப்பட்ட எவ்வளவு எடுத்துக்கொண்ட போதிலும் குறையாததான நிதியும், மதுவைக் கொன்றதுபோல் ஆச்ரிதர்களுடைய இடையூறுகளைத் தீர்க்கிறவனுமான எம்பெருமானைக் காணப் பெறாமையாலே வருத்தப்பட்டு அடிக்கடி அவனையே சொல்லிக் கொண்டு ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களை அவன் சேர்ந்திருக்கிற திருக்கோளூரில் மனதைவைத்துப் படிக்கிறவர்களுக்கு பகவானுடைய அநுபவத்தின ஆனந்தத்தால் விளங்குகிற ஸ்வயம்ப்ரகாசமான வைகுந்தமானது இட்டவழக்காயிருக்கும்.

குறிப்பு :—(1) உலகத்தில ஆபத்துக் காலத்துக்காக வைக்கப்பட்டிருக்கிற பணமானது எடுக்க எடுக்கக் குறையும்; எம்பெருமானென நிதி அப்படியன்று; எப்போதும நிறைந்தேயிருக்கும்.

(2) எமபெருமானை நிதியாகச் சொன்னதின கருத்து—நிதியானது தன்னையுடையவனுக்கு ஆபத்துக்காலத்தில் உதவுகிறது. அதனாலே ஒன்றுக்கும் அவன் விசாரப்பட வேண்டியதில்லை. அதைக்கொண்டு எல்லாப் போக்கியங்களையும் அடையலாம். இந்தக் குணங்கள் எமபெருமானிடத்தில் அதிகமாய் இருக்கின்றன. அவனை அநுபவிக்கிற ரஸத்தில எல்லா ரஸங்களும் அடங்கியிருக்கின்றன. அவனை அநுபவிக்கிறவன் தனக்கு எல்லாம் நிறைந்திருப்பதாக எண்ணுவன். எம்பெருமான் தன்னையடுத்தவர்கள் காலில் எல்லாரும் விழும்படி செய்பவன் என்பது.

(3) 'மதுசூதனை' என்பதற்கு, தன் அநுபவத்துக்கு இடையூறுகளைப் போக்குகிறவன் என்பது கருத்து.

(4) ஆழ்வாருக்கு, திருக்கோளூர் எம்பெருமானிடத்திலேயே மனது படிந்திருந்தது. வேறொன்றும் அவர் கண்ணுக்குத் தோன்றாதே. அப்படியிருக்க, அவர் 'கொத்தலர்' என்று சொல்லுவதின் கருத்து—அந்த எம்பெருமானைத் தாம சேர்ந்ததாக எண்ணிக் கொஞ்சம் ஆறுதலையடைந்தார். அதனால் புஷ்பங்கள் மலர்ந்ததைப் பார்க்கவும் சொல்லவும் முடிந்தது என்பது. இதற்கு வேறுவிதமாயும் பொருள்கொள்ளலாம.—எம்பெருமானை விட்டுப் பிரிந்து முன்னால் வருத்தப்பட்டார். அதைப் பார்த்த பூங்கொத்துக்கள் வாடியிருந்தன. இப்போது அவருக்குக் கொஞ்சம் ஆறுதல் உண்டானபடியாலே அவைகள் மலர்ந்து அழகாயிருக்கின்றன. ஆழ்வாருக்கு ஸமமான ஸுகத்தையும் துக்கத்தையும உடையவைகள் சோலைகள் என்பது.

(5) பத்துப் பாட்டுக்கள் ஒரு திருவாய்மொழி, பத்துத் திருவாய்மொழிகள் ஒரு பத்து. ஆகையால், ஒரு பத்தில் நூறு பாட்டுக்கள் இருக்கின்றன. இந்த பிரபந்தத்திலிருக்கும் பத்துப் பத்துக்களில் ஒவ்வொன்றும ஒவ்வொரு அர்த்தத்தைச சொல்லுகிறது இதைத்தான் பாட்டு 'பத்து நூற்றுள்' என்று சொல்லுகிறது. பத்து நூறுகள் ஆயிரம் என்றும் அர்த்தம் பண்ணலாம். ஆனால் முன் சொன்னது அழகாயிருக்கிறது. (11)

---

[illegible]

|எசு|

---

இந்தத் திருவாய்மொழியில் தன்னையடுத்தவர்கள் ஊரார் சொல்லும் பழிகளைக் கண்டு பயப்படாமல் தைரியத்துடனிருப் பதற்குக் காரணம் எம்பெருமான் என்பது பத்துக் காரணங் களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன:—(1) எல்லாருக் கும் மேற்பட்டவனுயிருந்தும், அவதாரங்களைச் செய்து எல்லா ருக்கும் ஸுலபனுயிருப்பது; (2) வனமாலையால் காட்டப்பட்ட அழகும், திருநாமங்களால் காட்டப்பட்ட அவனுடைய உயர்ந்த குணங்களும்; (3) பிராட்டியோடு சேர்ந்திருப்பது; (4) அதி ஞல் செல்வம் நிறைந்திருந்தது; (5) அதே காரணத்தாலே சோலைகளும் தடாகங்களும் அந்த ஊரில் செழுமையாயிருப்பது; (6) அதே காரணத்தாலே எம்பெருமானுக்குப் புதிதாய் ஓர் அழகு உண்டாயிருப்பது; (7) ஆச்ரிதர்களிடத்தில் ஆசையுள்ள வனுயிருப்பது; (8) பிராட்டிக்குத் தகுந்த அழகுள்ளவனுய் இருப்பது; (9) ஆச்ரிதர்களுக்கு உட்பட்டிருப்பது; (10) எல்லா உலகங்களுக்கும் ஈச்வரனுயிருப்பது முதலானவைகள். (76)

---

# எட்டாம் திருவாய்மொழி.

---

அவ—(1) 'மாலுக்கு' எனகிற திருவாயமொழியில (6–6) ஆழ்வாருக்கு எமபெருமானைவிடடுப்பிரிந்த வ்யஸநத்தாலே பலக் குறைவு உண்டாயிருந்தது என்றும, 'உண்ணுஞசோறு' இல (6–7) திருக்கோளூரில் எழுந்தருளியிருக்க அவனிடத்தில் அவர மனது நன்றாய்ப் படிந்திருந்தது என்றும சொல்லப்பட்டது. ஆகையால, தாம அவனைவிடடுப பிரிந்த இருப்பு அவருக்குத தோன்றவில்லை. 'உண்ணும சோறு' இல் அவனுடைய குணங் களை இடைவிடாமல் நினைத்துக்கொண்டிருந்ததினால் கொஞசம் ஆறுதல் உண்டாயிறறு. அதனால் பலக்குறைவு கொஞசங்குறைந் தது. தமமுடைய இருப்பை நினைக்கும்படி சக்தியுள்ளவரானார். அப்போது பாஹ்யஸம்ச்லேஷம் இல்லாமலிருப்பதை அறிந்து வருத்தத்தைப் பொறுக்கமுடியாமல தம்மை நாயகியாகப் பாவி த்துப் பக்ஷிகளைத் தூதுவிடுகிறார்.

(2) ஆழ்வார் நாயகியாகத் தம்மைப் பாவித்துத் தூது விடுவதற்குக் காரணத்தை இரண்டுவிதமாய்ச் சொல்லலாம் :— (1) எமபெருமான தமமுடன சேர்ந்து மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்து, அஃது அடங்குவதற்காகத தம்மைவிட்டுப் பிரிந்து, அஃது அடங்குகிறவரையில் அவன் திரும்பி வராமலிருந்தான். ஆகையால், தம் வருத்தத்தினால தூதுவிடுகிறாள் என்பது ஒரு வகை. (2) திருக்கோளூருக்குப் போக ஆரம்பித்துத் தோட்டத் துக்குள் போனாள். ஆனால், பலக்குறைவால் போகமுடியவில்லை. அங்கிருந்தே பக்ஷிகளைத் தூது விடுகிறாள் என்பது இரண்டா வது வகை. இவைகளில் எம்பெருமானுடன் ஆழ்வார் சேராமை யால் முதலில் சொன்ன பக்ஷத்தைக்காட்டிலும், இரண்டாவது பக்ஷம் ஸ்வரஸமாயிருக்கிறது.

(கலித்துறை.)

பொன்னுல காளீரோ புவனி முழுதா ளீரோ
நன்னலப் புள்ளினங்காள் வினையாட்டி யேனி ரந்தேன்
முன்னுல கங்களெல்லாம் படைத்த முகில்வண்ணன் கண்ணன்
என்னலங் கொண்ட பிரான்றனக் கென்னிலைமை யுரைத்தே.

(ப - ரை) நல் - நல்ல, நலம் - மேன்மையான குணங்களை யுடைய, புள் இனங்காள் - பக்ஷிக கூட்டங்களே! முன் - பிரளய காலத்தில், உலகங்கள் எல்லாம படைத்த - எல்லா உலகங்களையும் உண்டுபண்ணினவனும, முகில வண்ணன - மேகம் போன்ற ஸ்வபாவமுள்ளவனும், கண்ணன - கண்ணனாய் அவதாரம செய்து ஆசரிதர்களுக்கு ஸுலபனும, என நலம கொண்ட - என்னுடைய நல்ல குணங்களை அபஹரித்துககொண்ட, பிரான் தனக்கு - எனக்கு உபகாரம செய்தவனுமான எம்பெருமானுக்கு, என் நிலைமை - நான இப்போதிருக்கும் இருப்பை, உரைத்து - விண்ணப்பம செய்து, பொன உலகு - பொன்னைப் போல ஆசைபபடததகுந்த வைகுந்தத்தை, ஆளீரோ - ஆளுங்கள், புவனி முழுது - பூமி முழுவதையும, ஆளீரோ - ஆளுங்கள், வினையாட்டியேன நான - (அவனைவிட்டுப் பிரிந்து வருந்தபபடும படியான) பாபம் பண்ணின பெண்ணாகிய நான், இரந்தேன - (உங்களை) யாசித்தேன.

(கருத்து) நல்ல மேன்மையான குணங்களையுடைய பக்ஷிக் கூட்டங்களே! எம்பெருமான் என்னுடன சேர்ந்து என்னுடன் சேருவதையே தனக்கு லாபமாக எண்ணித் தன்னையும தன்னைச் சேர்ந்த இரண்டு விபூதிகளையும என்னுடையவைகளாகச் செய்தான. பிறகு, என்னுடைய அழகு முதலான உடம்பின் குணங்களையும், புத்தி முதலான ஆத்ம குணங்களையும், என்னையும் அபஹரித்துக்கொண்டு என்னைவிட்டுப போய், என்னை இல்லாதவள்போல செய்திருக்கிறான். இப்படி வருந்தப்பட்டுக் கொண்டிருக்கிற என்னுடைய இருப்பை அவனிடத்தில் விண்ணப்பம செய்யவேண்டும். (அவைகள போகவில்லை). ஏன் போகவில்லை? 'அவன் நாம் வேண்டுவதைச் செய்யாவிட்டால், என்ன செய்கிறது?' என்று நினைக்கிறீர்களோ? 'அவன் அப்படிச் செய்யாதிருக்கமாட்டான்.' ஏன் என்றால், பிரளயகாலத்தில் உடம்புகளும் இந்திரியங்களுமில்லாமல் அறிவில்லாதவைகளைப் போல் ஆத்மாக்கள் இருந்ததைப் பார்த்து இரங்கி எல்லா உலகங்களையும உண்டுபண்ணவில்லையா? மேகத்தைப்போல் வேண்டியவர்களுக்கு வேண்டியதைக கொடுக்கவில்லையா? அவதாரம் செய்து ஆச்ரிதர்களுக்கு ஸுலபனாயிருக்கவில்லையா? ஆகையால்,

என்னுடைய இருப்பை அவனிடம் விண்ணப்பம் செய்ய வேண்டும். அதைச் செய்து, இரண்டு விபூதிகளையும என்னிடம பெற்றுககொண்டு அவைகளை ஆளுங்கள். இப்படி ப்ரயோஜநத்தைக காட்டி நான சொன்னதும பிசகு. நீஙகள் செயகிற பெரிய உபகாரத்துககு இவைகளைக கொடுப்பது பதில உபகாரமாக ஆகுமோ? ஆகையால், சகரவர்த்திதிருமகன ஸுக்ரீவனை வேண்டினதுபோல, உங்களை விளையாட்டியேன யாசிக்கிறேன். மிகுந்த கருணையுள்ளவர்களாகையாலே நீங்கள் துககஸமுத்திரத்தில் மூழ்கியிருககிற என் இருப்பை அவனுக்குச சொலல வேணடும.

குறிப்பு :— (1) பக்ஷிகளுககு மேன்மையான குணங்களாவன.—தயை, பிரிநதிருககிறவர்களைக கூட்ச்சேர்ககும ஸ்வபாவம முதலியன. வானரமான ஹநுமான ஸீதையை ராமனுடன் சேர்த்தான். ஆகையால், பக்ஷிகளும சேர்ககக்கூடும் எனபது கருத்து.

(2) 'இனங்காள்' என்பதற்கு, கூட்டமா யிருப்பதால் எல்லாத் திக்குகளிலும் அனுப்பக கூடியவைகளா யிருப்பது. ஸீதையைததேட வானரக கூட்டங்கள் எல்லாத திக்குக்களிலும அனுப்பப்பட்டார்களே என்பது கருத்து.

(3) ஆழ்வார் இரண்டு விபூதிகளையும் பக்ஷிகளுக்குக கொடுக்ககூடுமோ என்றால, எமபெருமான் தம்முடன் சேர்ந்த காலத்திலேயே, அவைகளைப் பிரிந்தகாலத்திலும தமககு அதீநமாயிருககும்படி பண்ணினான். ஆகையால், அவைகளைப் பக்ஷிகளுக்குக கொடுககலாம எனபது.

(4) 'ஆளிர்' என்பதற்கு, இந்த இரண்டு விபூதிகள் உங்களுடையவைகள்; அவைகளை நான் உங்களுக்குக கொடுக்கவேண்டியதில்லையென்று உபசாரமாக ஆழ்வார் சொல்லுகிறார் என்பது கருத்து.

(5) ஆளீரோ - ஓகாரத்திற்கு இரக்கப்பொருள். அவைகள் நான் பட்டபாடு படவேண்டுமோ? அப்படிப் படாதபடி அவைகளை ரக்ஷிக்கவேண்டும். அவைகளை நீங்களே ரக்ஷிக்கிறவர்கள். அதில் எங்களுக்கு அதிகாரமில்லை. நாங்களும் உங்களால் ரக்ஷிக்கத்தகுந்தவர்கள் என்பது கருத்து.

(6) 'இரங்கேன்' என்று போனசாலச்சொல்லுக்குக் கருத்து—நான் உங்களிடத்தில் சரணாகதி பண்ணியாய்விட்டது. இனிமேல் செய்யவேண்டிய வேலை உங்களுடையது. இதில் எனக்குப் பரமில்லை என்பது. இதற்கு வேறுவிதமாயும் பொருள் கொள்ளலாம்:—ஒரேதடவை உங்களிடத்தில சரணாகதி பண்ணினேன். அதை அடிக்கடி செய்தால உங்களுக்கு வருத்தமுண்டாகாதா? என்பது.

(7) 'பொன் உலகு' என்பதற்கு, பொன்னைப்போல் தானாகவே பிரகாசிக்கிறது என்றும் பொருள் கொள்ளலாம்.

(8) முதலடிக்குக் கருத்து—சக்கிரவர்த்தித் திருமகன் தன்னுடன் ஸீதையைச் சேர்ப்பதற்குச் செய்யவேண்டிய வேலையைச் செய்த ஹநுமானைக் கட்டிக்கொண்டு 'இதுதான் என்னுடைய எல்லா ஸொத்தும்' என்று சொன்னான். அதுபோலத் தம்முடன் எம்பெருமானைச் சேர்ப்பதற்குச் செய்யவேண்டிய வேலைகளைச் செய்கிற பக்ஷிகளுக்கு இரண்டு விபூதிகளையும் கொடுப்பது அவனுக்கு ஸம்மதமாயிருக்கும்—என்பது.

(இ - ம) ஆளீர் - முன்னிலைப் பன்மை வினைமுற்று. (1)

---

அவ—கீழ்ப்பாட்டில் ஆழ்வார் தூது போகிற பக்ஷிகளுக்குத் திருநாட்டைக் கொடுத்தார். இந்தப் பாட்டில் அவர் தம்முடைய கையைக் கொடுக்கிறார். அஃது எம்பெருமானுக்கு மிகுந்த பிரீதிக்கு விஷயமாயிருக்கிறபடியால், திருநாட்டைக் காட்டிலுமுயர்ந்ததன்றோ!

மையமர் வாணெடுங்கண் மங்கைமார் முன்பென் கையிருந்து
நெய்யம ரின்னடிசி னிச்சல் பாலொடு மேவீரோ
கையமர் சக்கரத்தென் கனிவாய்ப் பெருமானைக் கண்டு
மெய்யமா காதல்சொல்லிக் கிளிகாள் விரைந்தோடி வந்தே. (உ)

(ப - ரை) கிளிகாள் - கிளிகளே! கை அமர் - திருக்கையில் பொருந்தியிருக்கிற, சக்கரத்து - சக்கரத்தையுடைய, என் கனிவாய் பெருமானை - கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தை

உடைய என்ஸ்வாமியை, கண்டு, மெய் அமர் - உண்மையாகப் பொருந்தி இருக்கும், காதல் - என்னுடைய ஆசையை, சொல்லி, விரைந்து - வேகமாய், ஓடிவந்து, மையமா - மையானது இருக்கிற, வாள் நெடும கண் - காந்தியுள்ள நீண்ட கண்களையுடைய, மங்கைமார் முனபு - ஸ்திரிகளுக்கு முன்னாலே, என் கை இருந்து - என் கையிலிருந்து, நெய் அமர் - நெய் இருக்கிற, இன் அடிசில் - இனிமையான அன்னத்தை, பாலோடு - பாலொடுகூட, நிசல் - எப்போதும், மேவீர - பிரிதியுடன் அடையுங்கள்.

(கருத்து) கிளிகளே! செந்தாமரைப்பூப்போன்ற தன் திருக்கையில அதறகுத தகுந்ததான சகரததைதயுடையவனும், இநத அழகினலுண்டான ஸநதோஷத்தினால் சோவைப்பழம போல் விளங்குகிற திருப்பவளததையுடையவனும், இந்த அழகைக் காட்டி என்னைத தோறபிதது அடிமையாககிககொண்டவனுமான எமபெருமானைக கணடு உண்மையாக அவனிடததில் எனககு இருக்கும ஆசையைச சொல்லி, தாமதம் செய்யாமல நான் முடிவதறகுமுன்னால் வேகமாய் ஓடிவாருங்கள். வந்து அலங்காரமாக இடப்பட்ட மையினலே காந்தியோடு விளங்குகிற ஸந்தோஷத்தினல் மலர்நது நீண்ட கைகளையுடைய என் தோழிகளுக்கு முன்னலே என கையிலிருநது நான் கொடுக்கும் அன்னத்தை நெய்யோடும பாலோடும் சேர்தது எப்போதும பிரிதியுடன சாப்பிடுங்கள். அதாவது நான் சொல்லிககொடுக்கும திருநாமங்களைப் பக்தியுடனும ஆனந்ததுடனும் எப்போதும் சொல்லிக் கொணடிருங்கள. இபபடிச சொல்லிககொண்டு நான் உஜ்ஜீவிக்கும்படிச் செய்யுங்கள்.

குறிப்பு :—(1) 'திருக்கையில் திருவாழியிருப்பது' ஒரு தாமரைப்பூவில் மற்றொரு தாமரைப்பூப்பூததது போல் அழகாயிருககிறதென்பது 'கையமர் சக்கரத்து' எனபதின் கருத்து.

(2) 'கண்டு' என்பதற்கு, நான் மனதால் மாத்திரம் பாாதது வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அப்படியில்லாமல் கண்களால் பார்த்து என்பது கருத்து. 'சொல்லி' என் பதனாலேயே பார்ப்பது ஏற்படுமே. 'கண்டு' என்பதற்கு, அவன் அழகைக்கண்டு ஸந்தோஷப்பட்டு என்பது பொருள்.

(3) 'மெய்யமர் காதல்' என்கிறவிடத்தில், அவனுக்கு என்னிடத்திலிருக்கும் ஆசை பொய், எனக்கு அவனிடமிருக்கும் ஆசையோ உண்மை என்பது கருத்து.

(4) 'விரைந்து' என்பதற்கு, அவன் வரும்போது கூட வருவோம் என்று இல்லாமல், சக்ரவர்த்தித் திருமகன் நந்திக் கிராமத்திற்கு வருவதற்குமுன், ஹநுமான் பரதனிடம் வந்தது போல நீங்கள் முன்னால வரவேண்டும் என்பதும், அவன் வருகிறான் என்பதைக்கேட்டு உண்டான ஸந்தோஷம் அடங்கின பிறகு அவன் வருவதைப் பார்க்கவேண்டும் என்பதும் கருத்து.

(5) 'ஓடிவந்து' என்பதற்கு, மெல்ல வராமல் சக்கிரவர்த்தித் திருமகனிடத்தில் இலங்கையிலிருந்து ஹநுமான் வந்ததுபோல் சீக்கிரமாக வரவேண்டும் என்பது கருத்து.

(6) 'மையமர்' என்பதற்கு, நீங்கள் கொண்டுவரும் வார்த்தையைக் கேட்டு நான் ஸந்தோஷப்படுவதைப் பார்த்து, என் தோழிமார்களும் ஸந்தோஷப்பட்டுத் தங்கள் கண்களுக்கு மையிட்டு அலங்காரம் செய்துகொள்வார்கள் அதனால கண்களுக்கு ஒரு காந்தியும், ஸந்தோஷத்தினால மலர்ச்சியும் உண்டாகும் என்பது கருத்து.

(7) 'உண்ணும் சோறு' (6–7) இல் சொன்னபடியே, ஆழ்வாருக்கு எம்பெருமானே சோறு. ஆகையால், இங்கே 'அடிசில்' என்பது எம்பெருமானுடைய அழகையும் நல்ல குணங்களையும் அவன் செய்த ஆச்சரியமான லீலைகளையும் காட்டுகிற திருநாமங்கள். பால் என்பது அவனிடத்தில பக்தி. நெய் என்பது கானம். திருநாமங்களைப் பக்தியுடன் பாடினால மிகுந்த இன்பத்தைக் கொடுக்கும் என்பது கருத்து.

(இ - ம்) மேவீர்-முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்று. (2)

---

ஓடிவந் தென்குழன் மேலொளி மாமல ரூதீரோ
கூடிய வண்டினங் காள்குரு நாடுடை யைவாகட்காய்
ஆடிய மாநெடுந் தோப்படை நீறெழச் செற்றபிரான்
சூடியதண் ணுளபமுண்ட தூமது வாய்கள் கொண்டே. (௩)

(ப - ரை) கூடிய வண்டு இனங்காள் - ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற வண்டுக் கூட்டங்களே! குரு நாடு உடை - குரு

தேசத்தை ஆளத் தகுந்தவர்களான, ஐவர்கட்கு ஆய் - ஐந்து பாண்டவர்களுக்காக, ஆடிய மா - (மனதைப்பிழாகுமபடி) ஓடின குதிரைகளையுடைய, நெடும் தேர - பெரிய தேரில (இருந்து), படை - ஸேனைகளை, நீறு எழ-சாம்பலாகப் பறந்துபோகும்படி, செற்ற - நாசம் செய்த, பிரான் - உபகாரம் செய்தவனை, சூடிய - சூட்டிககொண்டிருந்த, தண் - குளிர்ந்த, துளபம் உண்ட - துளஸியைச சாப்பிட்ட (அதன் தேனைக் குடித்த), தூ மது - பரிசுத்தமான தேனையுடைய, வாய்கள் கொண்டு - வாய் களைக்கொண்டு, ஓடிவந்து, என குழல்மேல் - என் மயிர்முடியின மேல், ஒளி மா மலர் - (உண்டாகப்போகிற) சாந்நியையுடைய பெரிய பூக்களினமேல், ஊதீர் ஓ - ஊதமாட்டீர்களா ?

(கருத்து) ஒன்றொடொன்று சேர்ந்து பறக்கிற வண்டுக கூட்டங்களே! குருதேசத்தை ஆளத் தகுந்த தனரை ஆச்ர யித்த பாண்டவர்களுககுத துணையாக இருந்து அழகாக ஓடுகிற குதிரைகள் கட்டின பெரிய தேரில ஸாரதியாக இருந்து, சண் டைக்குவந்த ஸேனைகள் தூளிகளாக எழும்படி கண்ணன் நாசம செய்தானே. அப்போது அவனுககு உண்டான சிரமம போவ தற்காக, அவனிடததில மிகுந்த பக்தியுள்ள ஜனங்கள், குளிர்ந்த துளஸிமலர் மாலைகளைச் சூட்டினாகளே. அந்த மலாகளிலிருக கும் பரிசுத்தமான தேனைக் குடித்து, தேனும் வாயுமாய் நான விரஹதாபத்தால் முடிவதற்கு முன்னாலே ஓடிவந்து என்னு டைய மயிர்முடியிலிருககும் பூக்களின்மேல் தேன் துளிகள் விழும படி ரீங்காரம் செய்யுங்கள். உங்களை வேண்டுகிறேன். அப் போது அந்தப் புஷ்பங்கள் அந்தத தேன துளிகள் பட்டபடி யால் மலாந்து காந்தியுள்ளவைகளாக விளங்கும. அதனால் அவனை விட்டுப் பிரிந்து எனக்கு உண்டாயிருககும் தாபம் குறையும். என் கண்ணும் தூக்கத்தையடையும்.

குறிப்பு :—(1) ‘ நெடும் தேர் ’ என்பதற்கு, மூன்று உலகங் களையும் ஜயிககத் தகுந்த தேர் என்பது கருத்து.

(2) தேர்ப்படை—தேரையுடைய படை என்றும் பொருள் கொள்ளலாம.

(இ-ம்) ஊதீர்-முன்னிலைப் பன்மை வினைமுற்று. ஊதீரோ - ஓ என்பதற்கு வினாப்பொருள். (3)

தூமது வாய்கள் கொண்டுவந்தென் முல்லைகண் மேற்றும்பிகாள்
பூமதுவுண் ணச்செல்லில் வினையேனைப் பொய்செய் தகன்ற
மாமதுவார் தண்டுழாய்முடி வானவர் கோனைக் கண்டு
யாமிதுவோ தக்கவா றென்னவேண்டுங் கண்டீர் நுங்கட்கே. (ச)

(ப - ரை) என் முல்லைகள்மேல் - என்னுடைய முல்லைக் கொடிகள் மேல் (இருக்கிற), தும்பிகாள் - தும்பிகளே! பூ மது - (அவைகளின்) பூவிலிருக்கிற தேனை, உண்ண செல்லில் - குடிக்கப் போனால் (குடிக்க ஆரம்பித்தால்), வினையேனை - பாபம் செய்த என்னை, பொய் செய்து - பொய்யான சோகதையைச் செய்து, அகன்ற - விட்டுப்போனவனும், மா மது வார் - மிகுந்த தேனைச் சொரிகிற, தண் துழாய் முடி - குளிர்ந்த துளஸியைக் கிரீடத்தில் உடையவனுமான, வானவர் கோனை - நித்தியஸூரிகளுக்குத் தலைவனுமான (எம்பெருமானை), கண்டு, தூ மது - பரிசுத்தமான தேனை (அதைப்போல் இனிமையான பேச்சுக்களை) உடைய, வாய்கள் கொண்டு - வாய்களைக்கொண்டு, உவந்து - (துளஸியின் தேனைக் குடித்து) ஸந்தோஷப்பட்டு, நுங்கட்கு - உங்களுக்கு, இதுவோ, யாம் தக்கவாறு - நாம் இருக்கவேண்டிய வழி, என்னவேண்டும் - என்று சொல்லவேண்டும், கண்டீர் - இதைக் கட்டாயம் செய்யவேண்டும்.

(கருத்து) என்னுடைய முல்லைக்கொடிகள்மேல் வந்திருக்கும் தும்பிகளே! அவைகளின் புஷ்பங்களிலிருக்கும் தேனைக்குடிக்க ஆரம்பித்தால், நான் சொல்லுகிறதைச் செய்யவேண்டும். எம்பெருமான் சொன்னதெல்லாம் உண்மையென்று நம்பும்படியான பாபத்தைப் பண்ணின என்னுடன் சேர்ந்திருந்ததுபோல் ஒரு இந்த்ர ஜாலத்தை எம்பெருமான் செய்து என்னை விட்டுப் போய், வைகுந்தத்தில் நித்தியஸூரிகளின் கூட்டத்தின் நடுவிலே அவர்களால் சாத்தப்பட்ட தேனைத் தாரையாகச்சொரிகிற துளஸிப் புஷ்பங்களைத் திருமுடியில் சூட்டிக்கொண்டு ஸந்தோஷமாயிருக்கிறான். அவனைக்கண்டு அந்தத்துளஸிபுஷ்பத்திலிருக்கும் தேனைக்குடித்து ஸந்தோஷப்பட்டு, தேனைப்போல் இனிமையான பேச்சுக்களாலே "ஒருத்தி உம்மை ஆசைப்பட்டுக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறாளே, கருணையுள்ள உமக்கு அவளைக் கவனியாமல் இருப்பது தகுந்ததோ" என்கிற வார்த்தையை அவ

னிடம் சொல்லவேண்டும். இப்படி நீங்கள் செய்தால், அவன் உடனே வருவான். நானும் ஸந்தோஷப்படுவேன் என் முல்லை களும் அதினால் நல்ல புஷ்பங்களையுடையவைகளாய் உங்களுக்கு வேண்டிய தேனைக்கொடுக்கும். நான் சொல்லுவதைச் செய்யா விட்டால் அவன் வரமாட்டான்; எனக்கும் துக்கத்தாலே தாப முண்டாகும்; முல்லைக் கொடிகளும் வாடிப்போகும், உங்களுக் குத் தேன் கிடைக்காது, ஆகையால், நான் சொல்லுவதைக் கட்டாயம் செய்யவேண்டும்.

குறிப்பு :—(1) தும்பி என்பது ஒருவித வண்டு.

(2) தம்முடைய முல்லைக் கொடிகளுக்கு வந்திருப்பதாலே தமக்கு அவைகள் மிகவும் வேண்டியவைகள் என்று எண்ணி, அவைகளை ஆழ்வார் தூது விடுகிறார்.

(3) 'நீர்' என்று சொல்லவேண்டியதாயிருக்க, 'யாம்' என்று சொன்னது உபசார வார்த்தை. முன்னிலையிடத்தில் தன்மை.

(4) ஸீதையைவிட்டு ஒரு க்ஷணமும் நான் பிழைத்திருக்க மாட்டேன் என்று கருணையால் சொன்னீரே; அந்தக் கருணை எங்கே போயிற்று என்பது கருத்து.

(5) உங்களுடைய பேச்சு தேனைப்போலினிமையாயிருப் பதால் அதைக் கேட்டவுடன் அவன் இங்கே வருவான் என்பது கருத்து.

(இ - ம்) 'மா மது' என்கிறவிடத்தில், 'மது' என்கிற சொல்லுக்கு ஆகுபெயராய் மதுவைப்போல் இனிமையான பேச்சு என்பது பொருள். (4)

---

நுங்கட்கியா னுரைக்கேன் வம்மின் யான்வளர்த்த கிளிகாள்
வெங்கண்புள் ளூர்ந்துவந்து வினையேனை நெஞ்சங் கவர்ந்த
செங்கட் கருமுகிலைச் செய்ய வாய்ச்செழுங் கற்பகத்தை
எங்குச்சென் றாகிலுங்கண் டிதுவோ தக்கவா றென்மினே. (ரு)

(ப - ரை) யான் வளர்த்த கிளிகாள் - நான் வளர்த்த கிளி களே! நுங்கட்கு - உங்களுக்கு, யான் உரைக்கேன் - நான்

சொல்லுகிறேன், வட்மின் - வாருங்கள், வெம் கண் - க்ரூரமான கண்களை உடைய, புள் - பக்ஷியாகிய கருடனை, ஊர்ந்து - ஏறி, வந்து, வினையேனை - பாபம் செய்த என்னுடைய, நெஞ்சம் - மனதை, கவர்ந்த - அபஹரித்த, செம் கண - சிவந்த திருக்கண்களை உடைய, கரு முகில் - நீலமேகம் போன்றவனும், செய்ய வாய் - சிவந்த திருப்பவளத்தை உடைய, செழும கறபகத்தை - அழகான கலபகவிருக்ஷத்தைப்போன்றவனுமான (எம்பெருமானை), எங்கு - எந்த இடத்திலாகிலும், சென்று - போய், கண்டு, இதுவோ தகக ஆறு - இப்படி இருப்பதோ உமக்குத தகுந்தவழி, என்மின - என்று சொல்லுங்கள்.

(கருத்து) நான் வளர்த்த கிளிகளே! என் வருத்தத்தைப் பார்த்து, நீங்களும் வருத்தப்படுகிறீர்களே! என் வருத்தத்தைப போககுவதற்கு ஓர உபாயத்தை உங்களுககுச் சொல்லுகிறேன; வாருங்கள் எமபெருமான என்னுடன சேருவதறகாகக குரூரமான பார்வையுள்ள கருடனமேலே ஏறிக் கொண்டுவந்து என்னுடன் சேர்ந்து, என்னை விட்டுப் போயவிட்டான். போகும் போது, செத்தவனைப் பிழைப்பிக்கும்படியாய்க் குளிர்ந்த தன்னுடைய கடாக்ஷத்தாலும், நீலமேகம் போன்ற திருமேனியின் அழகாலும், மிகவும் இனிமையான குளிர்ந்த பேச்சுககளாலும் கறபகவிருக்ஷம்போல் இல்லாமல தன்னையே கொடுக்கிறவனும் என்னைக் கட்டிககொணடதாலும், பாபம்பண்ணின என்னுடைய மனது முதலான இநதிரியங்களை அபஹரிததுககொண்டு போய் விட்டான். வைகுந்தத்துககுப் போயாகிலும் அவனைப் பார்தது, “அவளுடைய மனதை நீர் கொணடு வநதீரே. அவளிடத்தில உம்முடைய மனதைக்கொஞ்சம்கூட வைககாமல இவ்வளவுதூரம் வந்துவிடடீரே? இஃது உமக்குத் தகுந்ததோ?” என்கிற இந்த வார்த்தையைச் சொல்லுங்கள்.

குறிப்பு:—(1) நான் வளர்த்த கிளிகள் நான் துக்கப்படுகையில், ஸந்தோஷத்துடனிருக்குமோ? அவனைச் சேர்ந்தவைகள் அன்றோ அவனைப்போலிருக்கும் என்பது ‘யான் வளர்த்த கிளிகாள்’ என்பதின் கருத்து.

(2) 'வெம் கண்' என்பதற்கு, ஆச்ரிதர்களுடைய விரோதிகளை நாசம் பண்ணுவதற்காக அவர்களைக் க்ரூரமாய்க் கருடன் பார்க்கிறானென்பதும், இங்கே எம்பெருமானை தன்னுடன் சேருவதற்கு இருக்கும் இடையூறுகளை அவன் தீர்த்தான் என்பதும் கருத்து.

(3) 'வினையேனை' என்பதற்கு, என்னைப் பிரிந்து அவன் துக்கப்படாமலிருக்கிறான்; அப்படி இராமல் அவனைப் பிரிந்து நான் துக்கப்படும்படியான பாபத்தைப் பண்ணியிருக்கிறேன் என்பது கருத்து. (5)

---

அவ—கீழ்ப் பாட்டிலே 'இதுவோ தக்கவாறு' என்று எம்பெருமானிடம் சொல்லவேண்டுமென்று கிளிகளை வேண்டினாள். அதன்மேலே பூவைகளையும் அதே வார்த்தையைச் சொல்லும்படி அனுப்பினாள். அவைகள் போகவில்லை, 'நாம் வேண்டுவதை அவன் செய்யாவிட்டால், என்ன செய்கிறது' என்று அறிவதற்காக அவைகள் போகாதிருந்தனவாக எண்ணி, அதற்குப் பதில் சொல்லுகிறாள்.—

என்மின்னு நூன்மார்வ னென்கரும் பெருமானென் கண்ணன்றன்
மன்னுநீள் கழன்மேற் றண்டுழாய நமக்கன்றி நல்கான்
கன்மின்களென் றும்மையான் கற்பியா வைத்தமாற் றஞ்சொல்லி
சென்மின்கள் தீவினையேன் வளர்த்த சிறுபூ வைகளே. (௬)

(ப - ரை) தீ வினையேன்-கெட்ட கர்மங்களைச் செய்த நான், வளர்த்த, சிறு பூவைகளே! என் - என்னுடைய, மின்னு நூல மார்வன் - பிரகாசிக்கிற யஜ்ஞோபவீதத்தை மார்பிலுடைய, என் கரும் பெருமான - என்னுடைய நீலவர்ணமுள்ள திருமேனியை உடைய ஸ்வாமியான, என் கண்ணன் - என்னுடைய கண்ணன், தன் - தன்னுடைய, நீள் கழல்மேல் - நீண்ட திருவடிகளின மேல், மன்னு - நிலையாயிருக்கிற, தண் - குளிர்ந்த, துழாய் - துளஸியை, நமக்கு அன்றி நல்கான் - நமக்கு அல்லாமல (வேறொருவருக்கும்) ஸந்தோஷப்பட்டுக் கொடுக்க

மாட்டான், சென்மின்கள் என்று-(விளை யாடிக்கொண்டு திரியாமல்) இதை அடிச்சடி சொல்லுங்கள் என்று, உம்மை - உங்களை, யான்-நான், கற்பியாவைத்த - (கற்பித்து) சொல்லிக் கொடுத்துவைத்த, மாற்றம் - (இதுவோ தக்கவாறு என்கிற) வார்த்தையை, சொல்லி - சொல்லிக்கொண்டு, சென்மின்கள்-போங்கள்.

(கருத்து) நான் வளர்த்த சிறு பூவைகளே! உங்களுடைய வேலையை நான் செய்யவேண்டியது. நான் பாபம் செய்தபடி யால் என் வேலையை நீங்கள் செய்யும்படி உங்களை அனுப்ப வேண்டியதாயிருக்கிறது. என் சின்னஞ் சிறு அழகான ஆபரணங்களால் அலங்காரம் செய்யப்பட்ட தன்னுடைய நீல மான திருமேனியையும், தன்னையும் எனக்குப் போக்யமாயிருக்கும்படி செய்திருக்கிறான். ஆசிரிதர்களிருக்குமிடத்துக்குப் போகும்படி நீண்ட தன் திருவடிகளின்மேல் எப்போதும் சாத்திக் கொண்டிருக்கிற குளிர்ந்த துளஸியை நமக்குப் பிரீதியுடன் கொடுப்பன். அதை வேறொருவருக்கும் அப்படிக் கொடுக்க மாட்டான். ஆகையால், ஸந்தேஹமில்லாமல் அவனிடம் போங்கள். அப்படிப் போகும்போது நான் நிர்ப்பந்தப்படுத்திச் சொல்லிக் கொடுத்த 'இதுவோ தக்கவாறு' என்கிற வார்த்தையைச் சொல்லிக்கொண்டே போகவேண்டும்.

குறிப்பு.—(1) பாட்டில் 'என் மின்னு நூல் மார்பன்' என்றும், 'என் கரும் பெருமான்' என்றும், 'என் கண்ணன்' என்றும், 'என்' என்கிற சொல்லைப் பலதடவை சொன்னதற்குக் கருத்து—ஒவ்வொன்றும் தனித்தனியாக ஆழ்வாருக்குப் போக்யமாக இருந்தது என்பதும், அவருக்கு அவனிடத்தில் மிகுந்த அபிநிவேசம் இருந்தது என்பதுமாம்.

(2) 'மின்னுநூல்' என்பதற்கு, தங்கத்தாலே செய்யப்பட்டிருப்பதாலே நூல் பிரகாசிக்கிறது என்பது பொருள். இது மற்ற ஆபரணங்களுக்கும் உபலக்ஷணம்.

(3) 'சொல்லி' என்பதற்கு, பிரயாணம் போகிறவன் கட்டுசாதத்தைக் கொண்டுபோவதுபோல், இந்த வார்த்தை

யைச் சொல்லிக்கொண்டு போகவேண்டும் என்பதும், அங்கே போனபிறகு சொல்லுவோம் என்று இருக்கக்கூடாதென்பதும் கருத்து.

(இ - ம) கறபியா - கற்பித்து வினையெச்சம். நல்கான் - எதிர்மறை வினைமுற்று. நல்கு + ஆ + ஆன, எதிர்மறை ஆகாரம் கெட்டது. (6)

---

அவ—இதுவரையில் அறிவுள்ள பக்ஷிகளைத் தூதுகளாக ஆழ்வார் அனுப்பினார். தம்முடைய வியஸநத்தாலே கலங்கி அறிவில்லாத தன் பாவைகளை இந்தப் பாட்டில் தூது விடுகிறார். பறவைகள் பறந்துபோய் விடுகின்றன. இவைகள் அவைகளைப் போலில்லாமல் தன்னிடத்திலேயே நிலையாயிருப்பதால் தன் வேலையை அவைகள் செய்யும் என்பது அவர் எண்ணம்.

பூவைகள் போனிறத்தன் புண்டரீகங் கள்போலுங் கண்ணன்
யாவையும் யாவரு மாய்நின்ற மாயனேன் னாழிப்பிரான்
மாவைவல் வாய்பிளந்த மதுசூதற் கென்மாற்றஞ் சொல்லி
பாவைகள் தீர்க்கிற்றி ரேவினை யாட்டியேன் பாசறவே (எ)

(ப - ரை) பூவைகள் போல், நிறத்தன் - நிறத்தை உடையவன், புண்டரீகங்கள் போலும் கண்ணன - தாமரைப் பூக்களைப் போன்ற கண்களையுடையவன், யாவையும் - அறிவில்லாத எல்லா வஸ்துக்களும், யாவரும் - அறிவுள்ள எல்லாரும், ஆய் - இவைகளாய், நின்ற, மாயன் - ஆச்சரியமானவன். என் ஆழி பிரான் - சக்ரத்தைக் கையிலுடைய என் ஸ்வாமி, மாவை - குதிரை ரூபமாய வந்த அஸுரனுடைய, வல் வாயை - பலமுள்ள வாயை, பிளந்த, மதுசூதற்கு (இந்த அடையாளங்களையுடைய) மதுஸூதனுக்கு, என் மாற்றம் சொல்லி - என்னுடைய (இதுவோ தக்கவாறு) என்கிற வார்த்தையைச் சொல்லி, பாவைகள் - பாவைகளே! வினையாட்டியேன் - பாபம் செய்த என்னுடைய, பாசறவு - துக்கத்தை, தீர்க்கிற்றிரே - தீர்க்கமுடியுமா?

(கருத்து) பாவைகளே! என்னுடைய ஸ்வாமியான மதுஸூதனனிடம்போய் ‘இதுவோ தக்கவாறு’ என்கிற வார்த்தையைச்

சொல்லி, என் துக்கத்தைப் போக்கமுடியுமா? உங்களால் அல்லாமல் என்னாலே போக்கமுடியாது. அவனை எப்படி யறியலாம் என்றால் அதற்கு அடையாளங்களைச் சொல்லுகிறேன். அவன் பூவைகள்போல் நிறமுள்ளவன்; தாமரைப் பூவைப் போன்ற கண்களையுடையவன; அறிவில்லாத எல்லா வஸ்துக்களையும் அறிவுள்ள எல்லாரையும் தனக்குப் பிரகாரமாய் வைத்துக்கொண்டு அவைகளை நியமனம் செய்வதாகிய ஆச்சரியமான வேலைகளைச் செய்கிறவன. இந்த விஷயத்தை அவன கண்களைப் பார்ப்பதிலேயே அறியலாம் திருக்கையில் சக்ரத்தையுடையவன். கையும் திருவாழியுமான அழகைக் காட்டியன்றோ என்னைத தனக்கு அடிமையாக்கிக் கொண்டவன். ஆச்ரிதர்களுக்கு விரோதியான கேசி என்கிற அஸுரனைக் கொன்றவன். இந்த அடையாளங்களாலே அவனைக் கண்டுபிடிக்கலாம். உங்களை லாளநம் பண்ணவேண்டியவள் நான். என் வேலையைச் செய்ய உங்களை அனுப்பவேண்டியிருக்கிறதே. இப்படி நான் பாபம் பண்ணியிருக்கிறேனே.

(இ - ம்) தீர்க்கிற்றிர் - தீர் + கில் + ற் + இ + ர். முன்னிலை வினைமுற்று. கில் என்பது சக்தியைக் காட்டும் இடைச்சொல். றகர ஒற்று எழுத்துப்பேறு. தீர்க்கச் சக்தியுள்ளவர்கள் நீங்கள் என்பது பொருள். (7)

---

அவ—ஒரு குருகுபக்ஷியைப் பார்த்து, ஆழ்வார் தூது போகச் சொனனார். அஃது உடனே புறப்படவில்லை. "அவன் உம்மை விட்டுப் போனவுடனே தூது விடவேண்டுமோ, கொஞ்சம் பொறுத்திருக்கக்கூடாதோ என்று அஃது எண்ணிப் போகவில்லை" என்று அவள் நினைத்துப் பதில் சொல்லி அதைத தூது அனுப்புகிறாள் .—

பாசற வெய்தியின் னேவினை யேனேனை யூழிநைவேன்
ஆசறு தூவிவெள் ளைக்குரு கேயருள் செய்தொருநாள்
மாசறு நீலச் சுடர்முடி வானவர் கோனைக்கண்டு
ஏசறு நும்மையல் லான்மறு நோக்கிலள் பேர்த்துமற்றே, (அ)

(ப - ரை) ஆசு அறு தூவி - தோஷமில்லாத சிறகை யுடைய, வெள்ளைக்குருகே! வினையேன் - பாபம் செய்த நான், பாசு-(பாசம்) பற்று, அறவு - அதின் நீக்கத்தை (பிரிவை), எய்தி- அடைந்து, இன்னே - இப்படியே, எனை ஊழி - எவ்வளவு கல்பங்கள், நைவேன் - தளர்ச்சியையடைவேன். ஒரு நாள், அருள் செய்து - கிருபை செய்து, மாசு அறு - தோஷமில்லாத, நீலம் - நீலகாந்தியையுடைய, சுடர் முடி - பிரகாசமான மயிர் முடியை யுடைய, வானவர்கோனை கண்டு - நித்தியஸூரிகளின் தலைவனைக் கண்டு, ஏசு அறும் - (இவள் ஊரார் சொல்லும) பழிகளைக் கவனிக் கிறதில்லை. நும்மை அல்லால் - உம்மைத்தவிர, பேர்த்து மற்று - பின்னும் வேறு ஒன்றில், மறு நோக்கு இலள் - வேறு பார்வையை இல்லாதவள், (என்று சொல்லவேண்டும்).

(கருத்து) மெல்லப்போவதாகிய தோஷமில்லாத சிறகை யுடைய வெள்ளைக் குருகே! எம்பெருமானை விட்டுப்பிரிந்து, இப்படி எத்தனை கல்பங்கள் யான் வியஸநப்படுகிறது. இந்தத் துக்கம் முடியாதபடி பாபத்தைச் செய்திருக்கிறேன். ஆகையால், பிறர் துக்கத்தைப் பார்த்துக்கொண்டிருக்க முடியாத நீ உடனே அவனிடம் போ. நல்ல காந்தியையுடைய ஸ்வயம்பிரகாசமான அப்ராகிருதமான வஸ்துவால் செய்யப்பட்ட மயிர்முடியையுடையவனும் நித்தியஸூரிகளுக்குத் தலைவனுமான அவனைக் கண்டு "இவள் தன்னைப்பற்றி ஊரார் சொல்லும பழிகளைக் கவனிக்கிறதில்லை அப்படி உம்மிடத்தில் அவள் மனம் படிந்திருக்கிறது. நீர் அவளைக் கவனிக்காவிட்டாலும் உம்முடைய கடாக்ஷத்தையே ஆசைப்படுகிறாள். இதைத்தவிர வேறு ஒன்றையும் தனக்குத் துணையாக எண்ணவில்லை" என்கிற இந்த வார்த்தையைச் சொல்லவேண்டும.

குறிப்பு :—(1) 'வெள்ளைக்குருகு' என்பதற்கு, உடம்பு எப்படி வெளுப்பாயிருக்கிறதோ, அப்படியே அதன் மனதும் வெளுப்பாய் அதாவது சுத்தமாய் இருக்கிறது என்பது கருத்து. சக்தியாவது - பிறரின் துக்கத்தைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாமை. எம்பெருமானுக்கோ திருமேனி கறுத்திருப்பதின்றி உள்ளும் கறுத்திருக்கிறது; இல்லாவிட்டால் "அவன் என்னை விட்டுப்போவனோ?" என்பது கருத்து.

(2) 'இன்னே' என்று ஆழ்வார் தம்முடைய துக்கத்தை இப்படி இருக்கிறது என்று காட்டுகிறார்; அது வாயால் சொல்ல முடியாது என்பது கருத்து. (8)

---

பேர்த்துமற் றோர்களை கண்வினை யாட்டியே னொன்றிலேன்
நீர்த்திரை மேலு லவியிரை தேரும் புதாவினங்காள்
கார்த்திரண் மாமுகில் போற்கண்ணன் விண்ணவர் கோனைக்கண்டு
வார்த்தைகள் கொண்டருளி யுரையீர் வைகல் வந்திருந்தே. (௯)

(ப-ரை) நீர் திரை மேல்-ஜலத்தின் அலைகளின்மேல், உலவி-உலாவி, இரைதேரும் - ஆஹாரத்தைத் தேடுகிற, புதா இனங்காள் - புதாவின் கூட்டங்களே! வினையாட்டியேன் நான் -(பாபம் செய்த) நான், பேர்த்து - அவனை விட்டு, மற்று - வேறு, ஓர் - ஒப்பில்லாத, களைகண் - ரக்ஷிக்கிற வஸ்து, ஒன்று இலேன் - ஒன்று இல்லாதவள், கார் திரள் - நீல வர்ணத்தின் கூட்டம் போலிருக்கிற, மா முகில் வண்ணன் - பெரிய மேகம்போலிருக்கிற, கண்ணன் - கண்ணனாய் அவதாரஞ் செய்து ஸுலபனாயிருந்த, விண்ணவர் கோனை - நித்திய ஸூரிகளின் தலைவனை, கண்டு, வார்த்தைகள் கொண்டு - (அவன் சொல்லும்) வார்த்தைகளைப் பெற்றுககொண்டு, வந்து - இங்கேவந்து, இருந்து - (நான் கொடுக்கும் ஆஸநத்தில்) உட்கார்ந்துகொண்டு, அருளி - கிருபை செய்து, வைகல் - எப்போதும், உரையீர - சொல்லிக கொண்டிருக்க வேண்டும்.

(கருத்து) ஜலத்தின் அலைகளின்மேல் உலாவிக்கொண்டு இரையைத் தேடுகிற புதாக்கூட்டங்களே! உயர்ந்த குணத்தை உடைய எமபெருமான் என்னைக் கவனிக்காதபடி பாபத்தை நான் செய்திருக்கிறேன். அவனிடம்போய் "பயிர்கள் உலர்ந்து கொண்டிருக்கும்போது, அவைகளின்மேல் மழை பொழியாமல் வேறிடத்தில் மழையைப் பொழிகிற மேகத்தைப்போல் நீர் இருக்கிறீர். அவளோ உம்மை விட்டுப்பிரிந்து மிகவும் துக்கப் பட்டுக்கொண்டிருக்கிறாள். அவளைக் கவனிக்காமல் நித்தியஸூரிகளின் நடுவிலேயிருந்து உம்முடைய ஸ்வரூபம், ரூபம், குணங்கள், விபூதிகள் இவைகளைப் பார்த்துககொண்டு ஏற்கனவே ஆநந்த ஸமுத்திரத்தில் முழுகியிருக்கிற அவர்களுக்கு மறுபடியும்

உம்மைக் கொடுத்துக்கொண்டிருக்கிறீரே ! நீர் கண்ணனுய் அவதாரம் செய்து காட்டின ஸௌலப்யம் எங்கே போய்விட்டது ?" என்று இதை அவனிடம் சொல்லி, அவன் சொல்லும் வார்த்தையைப் பெறறுக்கொண்டு இங்கேவந்து நான் கொடுக்கும் ஆஸநத்தில் உட்கார்ந்து கிருபைசெய்து எப்போதும் அதைச் சொல்லிக்கொண்டு இருக்க வேண்டும். அதைக் கேட்பதே எனக்குப் போதுபோக்காயிருக்கும்.

குறிப்பு :—(1) 'புதா' என்பது ஒருவிதக் குருகு.

(2) 'நீர்த்திரைமேல்உலவி' என்பதற்குக் கருத்து - நிலத்தில்போவதுபோல் அலைகளுக்கு ஜலத்திலும் போய்ச் சஞ்சரிக்கிறதென்பதும், ஆகையால், அலைகள் அடைந்திற்கு அரியனமாயிருக்கிற ஜலத்தையும் தாண்டி வைகுந்தத்துக்கும் போகும் என்பதுமாம்.

(3) சக்ரவர்த்தித் திருமகனைக் காட்டிற்குக்கொண்டு விட்டுத் திரும்பிவந்த ஸுமந்திரனைப் பார்த்து, அவன் சொன்ன வார்த்தையைத் தசரதன் கேட்க ஆசைப்பட்டதுபோல் ஆழ்வாரும் எம்பெருமான்சொன்ன வார்த்தையைக் கேட்டுக்கொண்டேயிருக்க ஆசைப்படுகிறார்.

(இ - ம்) உரையீர - ஏவல் வினைமுற்று. (9)

---

வந்திருந் தும்மு டையமணிச் சேவலு நீருமெல்லாம்
அந்தர மொன்றுமின்றி யலர்மே லசையு மன்னங்காள்
என்றிரு மார்வற் கென்னையின்ன வாறிவள் காண்மினென்று
மந்திரத் தோன்றுணாத்தி யுரையீர மறுமாற் றங்களே. (கO)

(ப - ரை) உம்முடைய, மணி - ஸிலாக்கியமான, சேவலும்-ஆண் பக்ஷியும், நீரும்-பெண் பக்ஷிகளாகிய நீங்களும், எல்லாம் - வேறு உங்களுடைய பந்துக்களும், அந்தரம் - (சேர்வதில்) இடைவெளி, ஒன்றும் இன்றி - கொஞ்சமுமில்லாமல், அலர் மேல் - (தாமரைப்) பூக்களின்மேல், அசையும் - அசைந்து கொண்டிருக்கிற, அன்னங்காள் - அன்னங்களே ! என் திருமார்வற்கு-எனக்கு ஸ்வாமினியான பிராட்டியை மார்பிலுடைய ஸ்வாமிக்கு, என்னை -

என்னை (குறித்து), இவள், இன்ன ஆறு-இன்னவிதமாய் (இருக்கிறாள்), காண்மின்-பாருங்கள், என்று, மந்திரத்து-வீட்டில் (அந்தப்புரத்தில்), ஒன்று - ஒருவார்த்தையை, உணர்த்தி - அறிவித்து, மறுமாற்றங்கள் - பதில் வார்த்தைகளை, வந்து - அங்கிருந்துவந்து, இருந்து-என் பக்கத்திலிருந்து, உரையீர் - சொல்லுங்கள்.

(கருத்து) உங்களுடைய சிலாக்கியமான சேவலுடனும், பிள்ளை பேரன் முதலான வேறு பந்துக்களுடனும் சேர்ந்து ஒரு க்ஷணமும் ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியாமல் தாமரைப் புஷ்பங்கள்மேலிருந்து அசைந்துகொண்டிருக்கும் அன்னங்களே! எனக்கு ஸ்வாமிநியான பிராட்டியைத் திருமார்பில் வைத்துக் கொண்டிருக்கிற ஸ்வாமியினிடம்போய், அவனைத் தவிர வேறு கதியில்லாத என்னைப்பற்றி 'இவள் இந்த விதமாயிருக்கிறாள் பாருங்கள்' என்று ஒரு வார்த்தை சொல்லுங்கள். அவன் ஸபையில் மற்றவர்களுடனிருக்கும்போது சொல்லக்கூடாது. ஏன் என்றால், அப்போது அவன் வேறு நினைவுள்ளவனுயிருப்பான். ஸபையை விட்டு அந்தப்புரத்துக்கு எழுந்தருளிப் பிராட்டியும் அவனுமாக இருக்கும்போது பிராட்டிக்கு முன்னுலே இதைச் சொல்ல வேண்டும். இதைச் சொல்லி அவன் சொல்லும் பதில் வார்த்தைகளைப் பெற்றுக்கொண்டு அங்கிருந்து வந்து என் பக்கத்திலிருந்து அவைகளைச் சொல்லவேண்டும்.

குறிப்பு :—(1) ஆண்பக்ஷிகளுக்குச் சிலாக்கியத் தன்மை யாவது—எம்பெருமான் தன்னை விட்டுப்போனதுபோல இல்லாமல், பெண் பக்ஷிகளுடன் எப்போதும் சேர்ந்திருப்பது.

(2) வைகுந்தத்தில் ஆண் பெண் என்கிற வித்தியாஸமில்லை. ஆனபோதிலும் சிலர் புருஷர்களாகவும், சிலர் ஸ்திரீகளாகவும் ரூபங்களையெடுத்துக்கொண்டு எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்கிறார்கள். அதுபோல் ஆண்பக்ஷிகளும் பெண்பக்ஷிகளுமாகிய அன்னங்கள், தம்முடைய வேலையைச் செய்யும் என்பது ஆழ்வார் திருவுள்ளம்.

(3) 'இன்னவாறு காண்மின்' என்பதற்கு, வேறு விதமாயும் பொருள் சொல்லலாம் – வெளுப்பான உங்களுடைய உடம்

புகளைக் காட்டுங்கள் என்பது அதாவது—அன்னங்களின் உடம்பு வெளுத்திருப்பதுபோல் ஆழ்வாருடைய திருமேனியும் எம்பெருமானை விட்டுப்பிரிந்த துக்கத்தாலே வெளுத்துப்போய்விட்டது—என்பதாம். (10)

---

மாற்றங்க ளாய்ந்து கொண்டு மதுசூத பிரானடிமேல்
நாற்றங்கொள் பூம்பொழில் சூழ்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
தோற்றங்க ளாயிரத்து ளிவையு மொருபத்தும் வல்லார்
ஊற்றின்க ணுண்மணல் போலுரு காநிற்பர் நீராயே. (கக)

(ப - ரை) மதுசூதபிரான் - மதுவைக்கொன்ற பிரானுடைய, அடிமேல் - திருவடிகளின்மேல், (இருக்கும்) நாற்றம்கொள் - வாஸனையைக்கொண்ட, பூ பொழில் - புஷ்பத் தோட்டங்களால், சூழ் - சூழப்பட்ட, குருகூர் சடகோபன் - குருகூரில் எழுந்தருளியிருக்கிற ஆழ்வார், மாற்றங்கள் - சொற்களை, ஆய்ந்து கொண்டு - (அனுபவத்துக் கருவியாயிருக்கும்படி தம்முடைய புத்தியால்) பார்த்து, சொன்ன, தோற்றங்கள் - நாவிலுண்டான, ஆயிரத்துள், இவையும் ஒரு பத்தும் - இந்த விலக்ஷணமான பத்துப் பாட்டுக்களை, வல்லார் - (ஆழ்வாருடைய அபிப்பிராயத்தை அறிந்து சொல்ல) சக்தியுள்ளவர்கள், ஊற்றின்கண் - ஊற்றினிடத்தில், நுண் - ஸூக்ஷ்மமான, மணல்போல், நீராய், உருகா நிற்பர் - உருகிக்கொண்டேயிருப்பார்கள்.

(கருத்து) மது என்கிற அஸுரனைக் கொன்று வேதத்தை ப்ரம்மாவுக்குத் திருப்பிக் கொடுத்து உபகாரஞ்செய்த எம்பெருமானுடைய திருவடிகளிலிருந்து நல்ல வாஸனையை எடுத்துக் கொண்ட புஷ்பத் தோட்டங்களால் சூழப்பட்ட திருக்குருகூரில் எழுந்தருளியிருந்த ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களை, அவருடைய அபிப்பிராயத்தை அறிந்து சொல்லச் சக்தியுள்ளவர்கள், ஊற்றில் ஸூக்ஷ்மமான மணல்போல் நீராய் உருகிக்கொண்டேயிருப்பார்கள். இந்தப் பாட்டுக்களடங்கிய ஆயிரம் பாட்டுக்களும் எம்பெருமானை ஆழ்வார் அநுபவித்து அதனால் உண்டான ஸந்தோஷத்தாலே நிறைந்த ஏரியின் ஜலம் வழிந்து ஓடுவதுபோல் தானாகவே தோன்றினவைகள். அவைகளி

னுடைய சொற்களும் அவனுக்குத் தகுந்தவைகளாக இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டு உண்டானவைகளாயும் அழகாயும் மதுரமாயுமிருக்கின்றன.

குறிப்பு:—(1) குருகூரின் புஷ்பகத் தோட்டங்களுக்குள்ள வாஸனையானது எம்பெருமானுடைய திருவடிகளிலிருந்து உண்டாயிருக்கிறது என்று ஆழ்வார் உத்ப்ரேக்ஷிக்கிறார். அவனிடத்தில் எல்லா வாஸனைகளும் எல்லா ரஸங்களுமிருக்கின்றன என்று வேதம் சொல்லுகிறது. 'அடிமேல்' என்பதை 'சொன்ன' என்பதோடும் சேர்க்கலாம். இப்படியே சிலர் வியாக்யானம்.

(2) திருக்குருகூர்த் தோட்டங்களின் வாஸனை எம்பெருமானுடைய திருவடிகளிலிருந்து உண்டானபடியால், அந்த எம்பெருமான் திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் என்று ஏற்படுகிறது.

(3) 'உருகாநிற்பர்' என்கிற நிகழ்காலச் சொல்லுக்கு, உருகிக்கொண்டேயிருப்பர்கள் என்பது கருத்து.

(4) எம்பெருமானிடத்தில் ஆசையால் உடம்பு தளர்ந்து கரைவதே அறிவுள்ளவனுக்கு உயர்ந்த புருஷார்த்தம். இதையே ஸ்ரீபாஷ்யகாரரும், ஸ்ரீபாஷ்யத்தின் மங்கள ச்லோகத்தில் அருளிச் செய்திருக்கிறார்.

(இ - ப) உருகா - உருகி. உடன்பாட்டு வினையெச்சம். (11)

---

மோக்ஷஸ்ய ப்ரக்ஷ்யஸக்த்யா விஸ்ம்ருத்யா ஜிஷ்ணஸார
ஸ்யோமாக்ஷஸ்த்ரே ஷேஸ்ய ஸாவாஹூ வாரயதயா ஸ்யாச்ரி
தே வக்ஷவாதாக | காந்த்யா ஸாராஜ்யோமாஹவ தரணஹ
ஸாஷ்வாரஸ்ய கஸ்ய ஸ்ரீயாய க்ஷஸ்ய திஷயஸ்ய கயயாஸாஸ
நைவம் ஸூரிபிஃ |    |எள|

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னிடத்தில் சேதநர்களைக் கொண்டுவந்து சேர்க்கும் ஆசார்யர்களுக்குத் தன்னுடைய இரண்டு விபூதிகளையும் இட்ட வழக்காக இருக்கும்படி செய்கிறான் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன:— (1) உலகங்களையெல்லாம் உண்டுபண்ணும் சக்தி; (2) திருவாழியுமசையுமான அழகு; (3) அர்ஜுநனுக்கு ஸாரதியாயிருந்தது; (4) தேனைப்பெருக்குகிற மாலை விளங்கும் கிரீடத்தையுடையவனாயிருப்பது; (5) கருடனை வாஹநமாக உடைத்தாயிருப்பது, (6) தன் ஆச்ரிதர்களிடத்தில் பக்ஷபாத முள்ளவனாயிருப்பது; (7) பூவைபோன்ற நிறத்தோடுகூடிய திருமேனி யுள்ளவனாயிருப்பது, (8) இரண்டு விபூதிக்கும் நாதனாயிருப்பதைக் காட்டுகிற கிரீடத்தை யுடையவனாயிருப்பது; (9) அவதாரகாலத்திலும் மிகவும் உயர்ந்தவனாயிருப்பது; (10) பிராட்டியுடன் சேர்ந்திருப்பது. (77)

குறிப்பு:—எட்டாம் பாட்டில் 'சுடர்முடி' என்பதற்கு, காந்தியுள்ள கிரீடம் என்று அர்த்தம். இது ஸ்ரீதேசிகன் திருவுள்ளம்.

---

# ஒன்பதாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில், ஆழ்வார் எம்பெருமானுக்குத் தூதுவிட்டார். 'அஞ்சிறைய மடநாராய்' (1–4) என்பதில், தூதுவிட்டவுடன் அவன் வந்ததுபோல் வரவில்லை. ஆகையால் மிகுந்த வருத்தத்துடன் திருநாட்டிலும் தன் குரல் கேட்கும்படி அவனை இந்தத் திருவாய்மொழியில் கூப்பிடுகிறார்.

(2) இந்தப் பத்து ஐந்தாம் திருவாய்மொழியில் 9-வது பாட்டில், "மரங்களு மிரங்கும்வகை மணிவண்ணவோ வென்று கூவுமால்" என்று சொல்லப்பட்டது; அறிவில்லாத மரங்களும் இரங்கும்படி கூப்பிட்ட தாம் வைகுந்தத்திலும் கேட்கும்படி உரத்த குரலுடன் கூப்பிட்டால், அறிவுள்ளவர்களுக்குள் உயர்ந்தவனும் மிகவும் இரக்கமுள்ளவனுமான எம்பெருமான் தம் குரலைக் கேட்டு மனது உருகி வரமாட்டானே என்பது அவர் திருவுள்ளம்.

(கலித்துறை.)

நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்க ளிரண்டாய்ச் சிவனா யயனானாய்
கூரா ராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால்
வாரா யொருநாண் மண்ணும் விண்ணு மகிழவே. (க)

(ப - ரை) நீராய் - ஜலமும், நிலனாய் - பூமியும், தீயாய் - அக்னியும், காலாய் - காற்றும், நெடு வானாய் - விசாலமான ஆகாசமும், சீர் ஆர்-ஸம்பத்து நிறைந்த, சுடர்கள் இரண்டாய் - இரண்டு தேஜஸுகளான ஸூரியனும் சந்திரனும், சிவனாய்-சிவனும், அயன்-பிரமமாவும், ஆனாய் - ஆனவனே! கூர் ஆர்-கூர்மை பொருந்தின, ஆழி - திருவாழியையும், வெண் சங்கு - வெண்மையான சங்கத்தையும், ஏந்தி - திருக்கைகளில் வைத்துக் கொண்டு, மண்ணும்-பூமி முதலான லீலா விபூதியும், விண்ணும்-நித்ய விபூதியும், மகிழ - ஸந்தோஷப்படும்படி, கொடியேன்பால்-பாபம் பண்ணின என்னிடம், ஒருநாள், வாராய் - வரவேண்டும்.

(கருத்து) ஐந்து பூதங்களும் சந்திரனும் ஸூரியனும் சிவனும் பிரம்மாவும் ஆகியவைகளை உனக்கு உடம்புகளாக உடையவனே! உன்னைக் காணப்பெறாமல் வருத்தப்பட்டுக் கூப்பிடுகிற

என்னுடைய குரலைக் கேட்டு இரண்டு விபூதிகளிலிருக்கிறவர்களும் முடிந்துபோவர்கள் போலிருக்கிறது. அப்படி அவர்கள் ஆகாமல் ஸந்தோஷப்பட்டிருக்கும்படி திருவாழியையும் திருச்சங்கையும் திருக்கைகளில் ஏந்திக்கொண்டிருக்கிற அழகுடன், உன்னுடைய இரண்டு விபூதிகளும் என்னுடைய குரலைக் கேட்டு வருத்தப்பட்டு அழியும்படி அதிக க்ரூரனுயிருக்கிற என்னிடம் ஒருநாள் வரவேண்டும்.

குறிப்பு :—(1) ஜலம் தாஹத்தைத் தீர்க்கிறது ; பூமி ஆஹாரத்தைக் கொடுத்துப் பசியைப்போக்குகிறது ; அக்னி குளிரால் உண்டாகும் வருத்தத்தைப் போக்குகிறது ; காற்று தென்றலரூபமாயிருந்து உடம்பிலிருந்து உண்டான தாபத்தைப்போக்குகிறது ; ஆகாசம் எல்லாருக்கும் இருக்க இடங்கொடுத்துக் கொண்டு எங்கும் நிறைந்திருக்கிறது ; ஸூர்யன் இருட்டைப் போக்கி ஸுகமாக நடமாடும்படி செய்கிறுன் ; சந்திரன் எல்லாவற்றையும் போஷிக்கிறுன். இப்படிப் பலவிதமாய் உபகாரம் செய்யும்படி பதார்த்தங்களை உண்டுபண்ணி அவைகளில் ஆத்மாவாயிருந்து, அவைகள் செய்யவேண்டிய வேலைகளைச் செய்யும்படி நியமநம் பண்ணுகிறவனை என்பது பாட்டின் முதலிரண்டு அடிகளுக்குக் கருத்து.

(2) ஐந்து பூதங்களையும் சந்த்ர ஸூர்யர்களையும் சிவனையும் பிரம்மாவையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறபடியால், அவைகள் எப்படி எம்பெருமானுக்கு உடம்புகளாயிருந்து அவனுக்கு உட்பட்டிருக்கின்றனவோ, அப்படியே அவர்களும் அவனுக்கு உடம்புகளாய் அவனுக்கு உட்பட்டிருக்கிறுர்கள் ; இந்த விஷயத்தில் அவைகளுக்கும் அவர்களுக்கும் வித்தியாஸமில்லை என்பது கருத்து.

(3) ‘ஒரு நாள்’ என்பதற்கு, வெய்யிலில் களைப்பு அடைந்து தாஹமடைந்தவன் ஒரு தடவை நாக்கு நனையும்படி நீர்த்துளியைத் தேடுவதுபோல், ஆழ்வாரும் தம் துக்கம் தீரும்படி ஒருநாள் தம்மிடம் வரவேண்டும் என்று பிரார்த்திக்கிறுர் என்பது கருத்து.

(இ - ம்) வாராய் - ஒருமை ஏவல் வினைமுற்று. ஆனுய் - ஆனுன் என்கிற வினையால் அணையும் பெயரின் வெளிவேற்றுமை ; ஆனவனே ! ——— (1)

அவ—கீழ்ப் பாட்டில், உன்னுடைய விபூதிகள் நான் வருத்தத்துடன் கூப்பிடுவதைக்கேட்டு அழியாமல் ஸந்தோஷப்படும்படி எழுந்தருளவேண்டுமென்று எம்பெருமானை ஆழ்வார் பிரார்த்தித்தார். அவன் 'நீர் சொல்லுவதைச் செய்வதற்காக எனக்குத் தகாத வேலையைச் செய்யலாமோ' என்று சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்.—

மண்ணும் விண்ணு மகிழக் குறளாய் வலங்காட்டி
மண்ணும் விண்ணுங் கொண்ட மாய வம்மானே
நண்ணி யுனைநான் கண்டு கந்து கூத்தாட
நண்ணி யொருநாள் ஞாலத் தூடே நடவாயே. (உ)

(ப - ரை) மண்ணும் - பூமி முதலான எல்லா உலகங்களும், விண்ணும் - வைகுந்தமும், மகிழ-(உன் அழகைக்கண்டு) ஸந்தோஷப்படும்படி, குறளாய் - வாமந ரூபத்தை எடுத்துக்கொண்ட, வலம் காட்டி - (உன்னுடைய அழகாகிய) பலத்தைக் காட்டி, மண்ணும் விணணும் - பூமியையும் ஸ்வர்க்கலோகத்தையும், கொண்ட - (மஹாபலியிடமிருந்து) எடுத்துக்கொண்ட, மாயம் - ஆச்சரியத்தையுடைய, அம்மானே - ஸ்வாமியே! உன்னை, நண்ணி - கிட்டி (என்னுடைய அவயவங்களாலே தொட்டு), கண்டு - (கண்களாலே) பார்த்து, உகந்து - ஸந்தோஷப்பட்டு, நான் கூத்தாட, நண்ணி - (நானிருக்கிறவிடத்தில்) வந்து, ஒரு நாள், ஞாலத்தூடே - பூமியில், நடவாய் - நடக்கவேண்டும்.

(கருத்து) நீ வாமந ரூபத்தை எடுத்துக்கொண்டு, உன்னுடைய அழகாகிய பலத்தைக் காட்டிப் பூமியையும், ஸ்வர்க்கத்தையும் மஹாபலியிடமிருந்து எடுத்துக்கொள்ள அவனிடம்போய்க் கையை நீட்டி, 'மாவலி மூவடி தா' என்று கேட்கவில்லையா? லக்ஷ்மிக்குப் பதியாயிருக்கிற உனக்கு இது தகுந்த வேலையா? இந்த இரண்டு விபூதிகளும் உன் அழகைக்கண்டு ஸந்தோஷப்படுவதற்காக செய்யவில்லையா? இப்பொழுது அவைகள் அழியாமல் ஸந்தோஷப்படும்படி நான் சொல்வதையும் செய்யவேண்டாமா? ஆச்சரியமான லீலைகளைச்செய்த ஸ்வாமியே! நான் துக்கத்தாலே வாடின என்னுடைய அவயவங்களாலே உன்னைத் தொட்டு, நீ

நடந்து வருகையில்கண்களால் உன் திருமேனி அழகையும் உன் நடை அழகையும் பார்த்து ஸந்தோஷப்பட்டு, ஸந்தோஷம் உள்ளடங்காமல் கூத்தாடும்படி ஒருநாள் பூமியில், மஹாபலி யஜ்ஞசாலையில் நடந்துபோனதுபோல் நடந்து வரவேண்டும்.

குறிப்பு:— (1) 'வலங்காட்டி' என்பதற்கு, ஆசாரியனை சுக்ராசார்யர் தடுக்கும்போதும் நீ கேட்டதைக் கொடுக்கும்படி உன் அழகன்றோ செய்தது. ஆகையால், அதுவே உன்னுடைய பலம் என்பது கருத்து.

(2) 'கொண்ட' என்பதற்கு, ராவணன் ப்ரதிகூலனாய் இருந்தபடியால் அவனை எம்பெருமான நிரஸநம் செய்தான். மஹாபலி ஔதார்யம் என்கிற பெரிய குணமுடையவனாயிருந்த படியால் ராவணனைப்போல் நிரஸநம் பண்ணக்கூடாது என்று அழகைக் காட்டி அவனை மோஹிக்கும்படி செய்து அவைகளைப் பெற்றுக்கொண்டான் என்பது கருத்து. அவைகளை இந்திரனுக்கு வாங்கிக் கொடுத்தான். அப்படியிருந்தபோதிலும், ஆச்ரிதனுடைய லாபத்தைத் தன் லாபமாக எண்ணுகிறபடியால் அதை 'கொண்ட' என்று சொல்லுகிறார்.

(3) 'மாய' என்பதற்கு, ச்ரிய:பதியானவன் யாசகனாய் வந்ததும், தன் அழகைக் காட்டி அஸுரனை வஞ்சித்ததும், 'கொள்வன் நான் மாவலி மூவடி' என்று சிறுபிள்ளைகள்போல ஒன்றோடொன்று சேராத சொற்களைச் சொன்னதும், சிறிய திருவடிகளைக் காட்டி பெரிய திருவடிகளால் அளந்ததுமாகிய இந்த ஆச்சரியமான லீலைகளைச் செய்தவன் என்பது கருத்து.

(4) 'அம்மானே' என்பதற்கு, எம்பெருமான் தேவர்கள் அஸுரர்கள் எல்லாருக்கும் ஸ்வாமியானபடியால் அஸுரனை மஹாபலியையும் அழகாலே வஞ்சிக்கவேண்டியிருந்தது என்பது கருத்து.

(5) இந்திரன் ஒரு ப்ரயோஜநத்தை அடைவதற்காக உன்னைக் கேட்டுக்கொண்டான். மஹாபலியும் ஒன்றைத் தன்னதாக எண்ணிக்கொண்டு உனக்குக் கொடுத்தான். நான் இந்திரனைப் போல ஒன்றைக் கேட்கிறேனா? மஹாபலியைப்போல் ஒன்றை

என்னுடையதாக எண்ணுகிறேனா? உன்னை அநுபவிக்கையே மிகுந்த தனமாக எண்ணியிருக்கிறேனே! அவர்களுக்கு உன்னைக் காட்டின நீ எனக்கு உன்னைக் காட்டவேண்டாமா? என்பது கருத்து.

(6) 'ஒருநாள்' என்பதற்கு, நீ நடந்து வருவதைப் பல நாள் பார்க்கவேண்டுமென்று கேட்கிறேனா? ஒருதடவைதான் நான் கேட்பது. அஸுரனான மஹாபலியிடம் ஒருதரம் முன்னாலே நடந்துபோனாயே; வேறு பிரயோஜநத்தைத் தேடாத என்னிடம் ஒருநாள் வரக்கூடாதோ என்பது கருத்து.

(இ - ம) நடவாய் - ஏவலவினைமுற்று. முதல் அடியில் 'மண்ணும்' என்பது மற்ற உலகங்களுக்கும் உபலக்ஷணம் (2)

---

அவ—'ஏதோ ஒருதடவை நான் வாமநனாய் அவதாரம் பண்ணி உலகில் நடந்துபோனதைக்கொண்டு மறுபடியும் இந்த ஸம்ஸாரிகள் நடுவே என்னை வருமபடி சொல்லலாமோ?' என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்:—

ஞாலத் தூடே நடந்து நின்றுங் கிடந்திருந்துஞ்
சாலப் பலநா ளுகந்தோ றுயிர்கள் காப்பானே
கோலத் திருமா மகளோ டுன்னைக் கூடாதே
சாலப் பலநா ளடியே னின்னந் தளர்வேனோ. (௩)

(ப-ரை) ஞாலத்து ஊடே - பூமியின் நடுவில், நடந்தும், நின்றும், கிடந்தும் - படுத்துக்கொண்டும், இருந்தும் - உட்கார்ந்துகொண்டும், சால - மிகவும், பல நாள் - வெகு காலம்; உகம் தோறு - ஒவ்வொரு யுகத்திலும், உயிர்கள் காப்பானே - ஆத்மாக்களை ரக்ஷிக்கிறவனே! கோலம் திரு மா மகளோடு - வடிவழகையுடைய பிராட்டியோடு, உன்னை, கூடாதே - கிட்டாமல் (அநுபவிக்காமல்), இன்னம், சாலபல நாள் - மிகவும் வெகுகாலம், அடியேன், தளர்வேனோ - தளர்ச்சியையடைவேனோ?

(கருத்து) நீ ஒருதடவையா அவதாரம் பண்ணினாய்? சக்ரவர்த்தித் திருமகனாய் அவதாரம் செய்து தண்டகாரண்யத்துக்கு ஸீதைக்கு முன்னாலே நடந்துபோகவில்லையா? வாலியைக் கொன்ற பிறகு வில்லைப் பிடித்துக்கொண்டு நிற்கவில்லையா? ஸமுத்ரக்கரையில் ஸமுத்ரராஜன் வருகிற வரையில் படுத்திருக்க வில்லையா? அநேக ஸமயங்களில் ஸீதையோடு உட்கார்ந்திருக்க வில்லையா? இவைகளைப் பார்க்க வேண்டும் என்கிற ஆசையில் லாதவர்களும் பார்க்கும்படி செய்யவில்லையா? இவைகளை ஒரு நாளா செய்தாய்? பதினோராயிரம் வருஷம் பூமியிலிருந்து எல்லாரும் உன்னை அநுபவிக்கும்படி அவர்கள் கிட்ட இருக்கவில்லையா? இவைகளை ஒரே யுகத்தில்தான செய்தாயா? 'ஒவ்வொரு யுகத்திலும் நான் வருகிறேன' என்று ஸ்ரீகீதையில் சொன்ன படி யுகங்கள்தோறும் செய்யவில்லையா? இப்படியிருந்தும் எல்லா ஆத்மாக்களையும் மிகுந்த கருணையினால் ரக்ஷிக்கிறவனே! எந்த அவதாரத்திலும் உனக்குத் தகுந்த அழகுள்ள திருமேனியை யுடைய பிராட்டியுடன் நீ இருப்பதையும், உன் அழகையும், நீ செய்யும் ஆச்சரியமான லீலைகளையும், நான் ஒருநாளாவது பார்க்காமல் தளர்ச்சியை அடையலாமோ? உன்னையறியாமலும் உன்னிடத்தில் ருசி பிறவாமலுமிருந்த காலத்தில் உன்னை இழந்திருந்தேன். உன்னையறிந்து உன்னிடத்தில் ருசி பிறந்த பின்பும் உன்னை இழந்திருக்கலாமோ? இப்படி ஒருநாள் இரண்டு நாளா? எத்தனை காலம் இப்படி இருப்பது?

குறிப்பு.—இங்கே உரையில் ராமாவதாரத்தைச் சொன்ன போதிலும், எல்லா அவதாரங்களுக்கும் இஃது உபலக்ஷணம். பாட்டில இன்ன அவதாரம் என்று சொல்லாமல் 'நடந்தும் நின்றும் கிடந்திருந்தும்' என்று பொதுவாய்ச் சொல்லியிருக் கிறது.

(இ - ம்) காப்பானே - வினையால் அணையும் பெயர். (3)

---

அவ—"உம்மிடம் நான் வருவதற்கு இடையூறுகள் இருக் கின்றனவே" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார் :—

தளர்ந்து முறிந்துஞ் சகட வசுர ருடல்வேறாப்
பிளந்து வீயத் திருக்கா லாண்ட பெருமானே
கிளர்ந்த பிரமன் சிவனிந் திரன்விண் ணவர்சூழ
விளங்க வொருநாள் காண வாராய விண்மீதே. (௪)

(ப - ரை) சகட அசுரர் - வண்டியில் புகுந்துவந்த அஸுரனுடைய, உடல் - உடம்பானது, தளர்ந்தும் - கட்டுகுலைந்தும், முறிந்தும், வேறு - தனித்தனியாக, பிளந்து, வீய - நாசமாகும்படி (தூளிகளாக கிளம்பும்படி), திரு கால் ஆண்ட - திருவடிகளை உபயோகப்படுத்தின, பெருமானே - ஸ்வாமியே! கிளர்ந்த - (என்னை ரக்ஷிப்பதற்காக நீ வருவதைக்கண்டு ஸந்தோஷத்தினால்) உத்ஸாஹமுள்ள, பிரமன், சிவன், இந்திரன், விண்ணவர் - (மற்ற) தேவர்கள் (ஆகிய இவர்கள்), சூழ - உன்னைச் சுற்றிலும் ஸேவிக்க, விளங்க - (உன்னுடைய தேஜஸாலே எல்லா உலகமும்) விளங்கும்படி, விண்மீது - ஆகாசத்தில், ஒருநாள், காண வாராய் - நான் பார்க்கும்படி வரவேண்டும்.

(கருத்து) ஆச்ரிதர்களுக்கு விரோதியான வண்டிக்குள்ளே புகுந்து வந்த அஸுரனை உன்னுடைய திருவடிகளாலே உதைத்து அவன் உடம்பு கட்டுகுலைந்து முறிந்து இரண்டு பாகங்களாக ஆகி, தூளிகளாகப் பறக்கும்படி செய்தாயே. ஸ்வாமியான உன்னை இப்படி ரக்ஷித்துக்கொண்டாயே. உன்னுடைய சொத்தான என்னை ரக்ஷிப்பதற்கு இடையூறுகளாயிருப்பவைகளை நீயே போக்க வேண்டும். பிரமனாயும் சிவனும் இந்திரனும் மற்ற தேவர்களும் என்னை ரக்ஷிப்பதற்காக வருகிற உன்னைக் கண்டு ஸந்தோஷப்பட்டு பரபரப்புடன் உன்னைச் சுற்றியிருந்து ஸேவிக்கும்படியாகவும், ஒரே காலத்தில் லக்ஷம் ஸூர்யர்கள் உதித்தாற்போல் காந்தியுள்ள உன் திருமேனி எங்கும் பிரகாசிக்கும்படியாகவும் நான் காணும்படி வர வேண்டும். இதைப் பல நாள்கள் செய்யவேண்டாம். கஜேந்திர ஆழ்வானுக்குப்போலே ஒரு நாள் செய்தால் போதும். பூமியில இறங்கவேண்டாம். ஆகாசத்திலும் உயர்ந்த இடத்திலிருந்தால் போதும். மஹாபலிக்குச் செய்ததுபோல் என் தலையில் உன் திருவடிகளை வைக்க வேண்டாம், கண்களால் பார்க்கும்படி வந்தால் போதும். (4)

அவ—" முக்தர்கள் என்னிடம் வரும்படி நான் வைகுந்தத்தில் இருக்க வேண்டாமா? அதைவிட்டு வேறு இடங்களுக்கு வரக்கூடுமோ?" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்.—

விண்மீ திருப்பாய் மலைமே னிற்பாய் கடற்சேர்ப்பாய்
மண்மீ துழல்வா யிவற்று ளெங்கு மறைந்துறைவாய்
எண்மீ தியன்ற புறவண் டத்தா யெனதாவி
யுண்மீ தாடி யுருக்காட் டாதே யொளிப்பாயோ. (௫)

(ப - ரை) விண் மீது இருப்பாய் - வைகுந்தத்தில் உட்கார்ந்திருக்கிறவனே! மலைமேல் நிற்பாய் - திருமலையில் நிற்கிறவனே! கடல் சேர்ப்பாய் - திருப்பாற்கடலில் படுத்திருப்பவனே! மண் மீது உழல் வாய் - பூமியின் மேலே (அவதாரங்களைச்செய்து உன் அழகை எல்லாரும் பார்க்கும்படி) திரிகிறவனே! இவற்றுள் - (ஜங்கமங்களாயும் ஸ்தாவரங்களாயுமிருக்கிற) இந்த வஸ்துக்களில், எங்கும் - எல்லாவற்றிலும், மறைந்து - (ஒருவரும் உன்னை) அறியாதபடியிருந்து, உறைவாய்-வஸிக்கிறவனே! எண்மீது இயன்ற - எண்ணுக்குமேல்போன, புற அண்டத்தாய் - இந்த அண்டத்துக்கு வெளியே வேறு அண்டங்களிலிருக்கிறவனே! எனது ஆவியுள் - என் ஸ்வரூபத்திலும், மீது - மிகவும், ஆடி - நடமாடி, (வஸித்து) உரு - (உன்னுடைய அழகான) ரூபத்தை, காட்டாதே - காட்டாமல், ஒளிப்பாயோ - மறைப்பாயோ?

(கருத்து) நீ வைகுந்தத்தைவிட்டு வேறு இடங்களுக்கு வரவில்லையா? நீ திருமலையில் நித்திய ஸூரிகளும் பூமியிலுள்ளவர்களும் ஸேவிக்கும்படி நிற்கிறாய். பிரம்மா முதலான தேவர்கள் உன்னிடம்வந்து முறையிடும்படி திருப்பாற்கடலில் படுத்துக்கொண்டிருக்கிறாய். எல்லாரும் உன் அழகைப் பார்க்கும்படி சக்ரவர்த்தித் திருமகனாயும் வஸுதேவர் திருமகனாயும் அவதாரங்கள் செய்து பூமியில் திரிந்தாய். இந்த அண்டத்திலிருக்கிற எல்லா வஸ்துக்களுக்குள்ளேயும் வெளியிலிருக்கிற கணக்கில்லாத அண்டங்களிலும் அவைகளால் அறியமுடியாதபடி அவைகளுக்கு ஆத்மாவாயிருக்கிறாய். இது மாத்திரமா? என்னுடைய ஸ்வரூ

பத்திலும் வஸிக்கிறாய், இப்படி ஸமீபத்திலிருந்தும்நான் உன்னைக் கண்களாலே பார்க்காதபடி ஒளிந்து கொண்டிருக்கிறாய். இது உனக்குத் தகுந்ததோ?

(இ - ம) "இருப்பாய்" முதலான சொற்கள் எல்லாம் வினையால் அணையும் பெயர்கள். ஒளிப்பாய் - முன்னிலை வினைமுற்று. சேர்ப்பாய் - தனவினைப்பொருளில் வந்தது. ஒளிப்பாயோ - ஏகாரத்துக்கு வினைப்பொருள். (5)

---

அவ—'நான் எங்குமிருப்பது உண்மையே; ஆனால், நீர் என்னைப் பார்க்கத் தகுந்தவர் அன்று' என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்:—

பாயோ ரடிவைத் ததன்கீழ்ப் பரவை நிலமெல்லாம்
தாயோ ரடியா லெல்லா வுலகுந் தடவந்த
மாயோ னுன்னைக் காண்பான் வருந்தி யெனைநாளும்
தீயோ டுடன்சேர் மெழுகா யுலகிற் றிரிவேனே. (௬)

(ப - ரை) ஓர் அடி - ஒரு திருவடியை, பாய் வைத்து - பரப்பி வைத்து, அதன் கீழ், பரவை நிலம் எல்லாம் - ஸமுத்ர முள்படப் பூமி எல்லாவற்றையும், தாய்-தாவி (அளந்து), ஓர் அடியால் - மற்றொரு திருவடியாலே, எல்லா உலகும் - எல்லா உலகங்களையும், தடவந்த - தடவினவனை, மாயோன் - ஆச்சரியமான லீலையைச் செய்தவனே! உன்னை காண்பான் - உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டு, வருந்தி - (அது கிடைக்காமல்) வருத்தப்பட்டு, எனை நாளும் - எப்போதும், தீயோடு உடன் - நெருப்போடு கூட, சேர் - சேர்ந்த, மெழுகாய் - மெழுகைப்போல் உருகி, உலகில் - (இழிவான இந்த) உலகத்தில், திரிவேனே - திரியவேண்டியவனுமாக இருப்பேனோ?

(கருத்து) வாமனனாய் அவதாரம் செய்து ஒரு திருவடியைப் பரப்பி, அதின்கீழே ஸமுத்ரமுள்படப் பூமி எல்லாவற்றையும் அளந்து, மற்றொரு திருவடியால் மேலுள்ள எல்லா உலகங்களையும் தடவி இந்த ஆச்சரியமான லீலையை நீ செய்தாயே! ஒரு தடாகத்தில் விழுந்த ஒரு ரத்நத்தை அதன் ஸொந்தக்

காரன் காலால் தேடுவதுபோல் பூமியை அளப்பதாக என்கிற வியாஜத்தைக்கொண்டு என்னிடம் அபிநிவேசத்தாலே திருவடியால் என்னைத் தேடவில்லையா? நான் உன்னைப் பார்ப்பதற்குத் தகுந்தவன் என்று எண்ணித்தானே இப்படிச் செய்தாய்? அப்போது என்னைத் தகுந்தவனாக எண்ணவில்லையா? அந்தத் தகுதி இப்போது எங்கே போய்விட்டது? உன்னைக் காண்பதற்கு ஆசைப்பட்டு அது கிடைக்காமல் வருத்தப்பட்டு நெருப்புடன் சேர்ந்த மெழுகுபோல் உருகி இந்த இழிவான பூமியில் எவ்வளவு காலம் நான் திரியவேண்டியதோ?

(இ - ம்) காண்பான் - காண . வினையெச்சம். (6)

---

அவ—" என்னைப் பார்ப்பதற்கு நீர் ஓர் உபாயத்தைச் செய்யவேண்டும்" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார் :—

உலகிற் றிரியுங் கரும கதியா யுலகுமாய்
உலகுக் கேயோ ருயிரு மானாய் புறவண்டத்து
உலகிற் பொலிந்த திசைபத் தாய வருவேயோ
அலகிற் பொலிந்த வறிவி லேனுக் கருளாயே. (எ)

(ப - ரை) உலகில், திரியும் - திரிகிற (அந்தந்தப் பலன்களை ஆசைப்படுகிறவர்களாலே செய்யப்படுகிற), கரும கதியாய் - யாகங்கள் முதலான கர்மங்களாகிய உபாயங்களாயும், உலகுமாய் - அந்தக் கர்மங்களைச் செய்யத் தகுந்த இடங்களாகிய உலகங்களாயும், உலகுக்கே - உலகங்களிலிருக்கும் எல்லா ஆத்மாக்களுக்கும், ஓர் உயிருமானாய் - ஒப்பில்லாத ஆத்மாவாயுமிருக்கிறவனே! புற அண்டத்து - இந்த அண்டத்துக்கு வெளியிலே (இருக்கிறவைகளாய்), அலகில் - எண்ணிக்கையில், பொலிந்த - மிகுந்த, திசை பத்தாய் - பத்துத் திக்குகளுமாயிருக்கிற, அருவே - நாமமும் ரூபமுமில்லாத முக்தாத்மாக்களுமாயிருக்கிறவனே! அலகில பொலிந்த - எண்ணிக்கையில் மிகுந்த, அறிவிலேனுக்கு - அறிவில்லாத எனக்கு, அருளாயே - நீ கிருபை செய்யவேண்டும்.

(கருத்து) அந்தந்தப் பலன்களை ஆசைப்பட்டு அவைகளுக்கு உபாயங்களாக ஆத்மாக்களாலே செய்யப்படும் யாகம முதலான கர்மங்களும, அவைகளைச் செய்யததகுந்த உலகங்களும், அவைகளைச் செய்கிற எல்லா ஆத்மாக்களும, இந்த அண்டத்துக்கு வெளியே கணக்கில்லாமல், தஙகளுடைய ஜ்ஞானததாலே எங்கும வியாபித்துககொண்டு நாமங்களும ரூபங்களுமில்லாமல் இருக்கிற முகதர்களும ஆகிய இவைகளெல்லாம உன் ஸங்கல்பத்துக்கு அதீநங்கள் அன்றோ? உன்னைக காணுவதற்கு உபாயமான ஜ்ஞாநம் இன்னதென்று கொஞசமும அறியாதவனுயிருககிறேன். உபாயம செய்வதாகிய ஒரு சுமையை என் தலையில் வைக்காதே. உபாயத்தை நீயே செய்யவேண்டியது. (7)

---

அவ—"என்னை உள்ளபடி அறிகிறவர்களுக்கு அன்றோ நான் என்னைக காட்டிககொடுப்பது" என்று எமபெருமான் சொன்னதாக நினைத்து, அதறகுப் பதில் அருளிச்செய்கிறார் :—

அறிவி லேனுக் கருளா யறிவா ருயிராஞய்
வெறிகோள் சோதி மூர்த்தி யடியே னெடுமாலே
கிறிசெய் தென்னைப் புறத்திட் டின்னங் கெடுப்பாயோ
பிறிதோன் றறியா வடியே ஞவி திகைக்கவே. (அ)

(ப-ரை) வெறிகொள்-வாஸனையை (இயற்கையாக)க் கொண்ட, சோதி-காந்தியுள்ள, மூர்த்தி-திருமேனியையுடையவனே! அறிவார் உயிர் ஆனாய் - உன்னை அறிகிறவர்களுக்கு உயிராயிருக்கிறவனே! அறிவிலேனுக்கு - அறிவில்லாத எனக்கு, அருளாய்-கிருபை செய்ய வேண்டும, அடியேன் நெடுமாலே - தாஸனை எனக்கு வெருதூரத்திலிருககும் பெரியவனே! பிறிது - (உன் திருவடிகளைத் தவிர) வேறு, ஒன்று - ஒரு விஷயத்தை, அறியா-அறியாத, அடியேன ஆவி - என்னுடைய மனது, திகைக்க - கலங்குமபடி, கிறி செய்து - (ஏதோ ஓர்) உபாயத்தைச் செய்து, என்னை, புறந்து இட்டு-(உன்னைக் காட்டாமல்) வேறுன விஷயங்களில் போகுமபடி செய்து, இன்னம் கெடுப்பாயோ?

(கருத்து) "இயற்கையான வாஸனையும் காந்தியுமுள்ள திருமேனியையுடையவனே! உன்னையறிந்தவர்களுக்கு உன்னைக்காட்

டிக்கொடுத்து அவர்கள் தங்கள் ஆத்மாக்களைத் தாங்கும்படி செய்கிறாய். அவர்களை இப்படி ரக்ஷிப்பது தகுந்தது தான். ஆனால், இஃது ஓர் குணமாகுமோ? உன்னையறியாத எனக்கு உன்னைக் காட்டிக் கொடுப்பதன்றோ குணம். ஆகையால், உன் திருமேனியைக் கிருபையால் எனக்குக் காட்டிக்கொடுக்கவேண்டும்." என்று ஆழ்வார் பிரார்த்தித்த உடனே எம்பெருமான் அதைச் செய்யாமையாலே பயந்து மேலே பேசுகிறார். "வெகுகாலமாய் உன்னைக் காணப்பெறாமல் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற அடியேனை காண முடியாதபடி வெகு தூரத்திலிருக்கிற பெரியவனே! உன் திருவடிகளைத் தவிர, வேறு ப்ராப்யமும் (அடையவேண்டியதும்) அதற்கு உபாயமும் இல்லையென்று எண்ணிக்கொண்டிருக்கிறேனே. அந்த எண்ணமும் கலங்கும்படி உன்னைக் காட்டாமல் என்னை வஞ்சித்து, சப்தம் முதலான விஷயங்களைக் காட்டி இன்னமும் கெடுக்கவோ பார்த்திருக்கிறது. இதுவரையில் நான் இழந்திருந்தது போதாதோ? உன்னிடத்தில் ருசி உண்டான பிறகும் உன்னை இழந்திருக்க வேண்டுமோ?" என்கிறார். (8)

---

அவ—"சப்தம் முதலான விஷயங்கள் புருஷார்த்தங்கள் அல்லவா? அவைகளைக் கெடுதல்களாக 'படுப்பாயோ' என்று ஏன் சொன்னீர்?" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்துப் பதில் அருளிச்செய்கிறார்.—

ஆவி திகைக்க வைவர் குமைக்குஞ் சிற்றின்பம்
பாவி யேனைப் பலநீ காட்டிப் படுப்பாயோ
தாவி வையங் கொண்ட தடந்தா மரைகட்கே
கூவிக் கொள்ளுங் கால மின்னங் குறுகாதோ. (௯)

(ப - ரை) ஆவி - மனது, திகைக்க - மோஹத்தையடையும்படி, ஐவர் - ஐந்து (இந்திரியங்கள்), குமைக்கும் - பீடிக்கும், பல, சிறு இன்பம்-அல்பமான ஸுகங்களை, காட்டி, பாவியேனை-பாபம்பண்ணின என்னை, நீ, படுப்பாயோ-கெடுப்பாயோ? தாவி-தாவி அளந்து, வையம்-பூமியை, கொண்ட-வியாபித்த, தடம்-விசாலமான, தாமரைகட்கே-(திருவடித்) தாமரைகளில், கூவிக்கொள்ளும் - அழைத்துக்கொள்ளும், காலம் - காலமானது, இன்னம், குறுகாதோ - கிட்டிவாராதோ?

(கருத்து) விஷயங்களினால் உண்டாகும் ஸுகம் மனதுக்கு மோஹத்தை உண்டாக்கி, இருக்கிற நல்ல அறிவைப் போக்கும்; அதில் மனதைவைத்தவனை ஐந்து இந்திரியங்களும் 'என்னுடைய விஷயங்களைப்பார், என்னுடைய விஷயங்களைப் பார்' என்று இழுத்து முடிவில் மிகுந்த துக்கத்தை உண்டாக்கும். அந்த ஸுகம் அல்பம்; நிலையில்லாதது. ஆகையால், அந்த ஸுகமானது புருஷார்த்தமன்று. இன்னமும் விஷயங்களோடு சேராத இருப்பையடைந்தும் அவைகள் நிறைந்திருக்கும் தேசத்திலிருக்கும்படி பாபத்தைப் பண்ணியிருக்கிறேன். மீனைப் பிடிப்பவர்கள் அவைகளுக்கு மாம்ஸத்தைக் காட்டுவதுபோல் அந்தப் பலவிதமான ஸுகங்களை எனக்குக் காட்டி, உன்னை அறியாமல் அசேதநத்தைப் போலிருக்கும்படி என்னைச் செய்யலாமா? "நான் உன்னை இப்படிச் செய்தேனோ" என்று கேட்கிறாயோ? அவைகளிருக்கும் இடத்தில் என்னை வைத்திருப்பதே அப்படிச் செய்ததாக ஆகாதோ? ஆகையால், பூமியை வியாபித்து அளந்த மிகுந்த இன்பத்தைக் கொடுக்கும் திருவடித் தாமரைகளில் என்னை அழைத்துச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்ல, இதை எம்பெருமான் உடனே செய்யவில்லை. 'உம்மை என்னிடம் சேர்க்குங்காலம் வந்தால் சேர்த்துக்கொள்ளுகிறேன்' என்று அவன் சொன்னதாக நினைத்துச் சொல்லுகிறார்.—"அந்தக் காலம் வருஷம் யுகம் கல்பம் என்று திரும்பித் திரும்பி வந்துகொண்டிருக்கிற எல்லாக் காலங்களும் போனாலும் கிட்டவாராதோ?" என்கிறார்.

குறிப்பு :— (1) 'ஐவர்' என்று இந்திரியங்களை அறிவுள்ளவர்களைச் சொல்வதுபோல் சொன்னதற்குக் கருத்து—சக்தியில்லாத ஒருவனை யமனுடைய ஐந்து வேலைக்காரர்கள் மூலைக்கு ஒருவனாயிழுப்பதுபோல் அவைகள் ஒருவனைத் துன்பப்படுத்துகின்றன—என்பது.

(2) 'சிற்றின்பம்' என்று இன்பத்தை அல்பமாகச்சொன்னது, அது நிலையாயிருக்காது என்பதற்கும் உபலக்ஷணமென்று அதை உரையில் சேர்த்திருக்கிறது. (9)

அவ—'சொன்ன குற்றங்களையுடைய விஷய ஸுகம் உமக்கு வேண்டாம். இவைகளில்லாத ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதை ஏன் நீர் தேடக்கூடாது?' என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து அதற்குப் பதில் சொல்லுகிறார் —

குறுகா நீளா விறுதி கூடா வெனையூழி
சிறுகா பெருகா வளவி லின்பஞ் சேர்ந்தாலும்
மறுகா லின்றி மாயோ னுனக்கே யாளாகும்
சிறுகா லத்தை யுறுமோ வந்தோ தெரியிலே. (கo)

(ப-ரை) மாயோன்-ஆச்சரியமானவனே! குறுகா நெடுகா-இயற்கையாகக் குறைவதும் பெருகுவதுமில்லாத, இறுதி கூடா-முடிவையடையாத, எனை ஊழி-எவ்வளவு கல்பங்களானாலும், சிறுகா பெருகா-குறைவதும் பெருகுவதுமில்லாத, அளவு இல-அளவில்லாத, சிறு இன்பம்-(ஆத்மாவைமாத்திரம் அநுபவிப்பதாகிய) அல்பமான இன்பமானது, சேர்ந்தாலும்-அடையப்பட்டாலும், தெரியில்-(நன்றாக விசாரித்து) பார்க்குங்கால், மறு கால் இன்றி-மறுபடியும் ஒரு காலமில்லாமல், உனக்கே ஆளாகும்-உனக்கே கைங்கரியம் செய்யும், சிறு காலத்தை-கொஞ்சகாலத்தை, உறுமோ-கிட்டுமோ?

(கருத்து) ஆத்மாவை மாத்திரம் அநுபவிப்பதாகிய ஸுகமானது ஸ்வபாவத்தாலும் காலத்தாலும் குறைதலும் வளர்தலுமில்லாமல் ஒரே விதமாயும் அளவில்லாததாயும் முடிவில்லாததாயும் இருக்கட்டும். ஆனால், அது உனக்குக் கைங்கரியம் செய்வதாகிய ஆநந்தத்தைப் பார்க்கும்போது, அல்பமாகவே தோன்றும். அதை ஒரு தட்டிலும், உனக்கு ஒரே க்ஷணம் கைங்கரியம் பண்ணுவதாகிய ஆநந்தத்தை இன்னொரு தட்டிலும் வைத்துத் தூக்கிப் பார்த்தால் அறிவுள்ளவன் கைங்கரியாநுபவத்தை விட்டு அந்த ஆத்மாநுபவ ஸுகத்தை எடுத்துக் கொள்ளுவனோ? என்ன கஷ்டம்! இந்த விஷயத்தைப்பற்றி விசாரிக்க வேண்டுமோ? விஷய ஸுகத்தை நான் வேண்டாமென்பது அதன் குற்றங்களைக் கவனித்து அன்று; உன் கைங்கரியத்துக்கு இடைஞ்சலாயிருப்பதென்று எண்ணி; இந்தத் தோஷம் ஆத்மாநுபவத்திலு

மிருக்கிறது. ஆகையால், இந்த இரண்டும் எனக்கு வேண்டா உனக்கே நான் அடிமையாயிருப்பதை எனக்குக்கொடுத்து அருள வேண்டும்.

(இ - ம்) குறுகா - குறுகாத : ஈறுகெட்ட பெயரெச்சம். நீளா, கூடா, சிறுகா பெருகா-இவைகளும் இப்படியே (10)

---

தெரித லினைத லெண்ண லாகாத் திருமாலுக்கு
உரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்
தெரியச் சொன்ன வோரா யிரத்து ளிப்பத்தும்
உரிய தொண்ட ராக்கு முலக முண்டாற்கே. (கக)

(ப - ரை) தெரிதல் - (நலையுக்திகளுடன ஆசாரியனிடத்தில அர்த்தங்களைக் கேட்டுத) தெளிவது, நினைதல - (கேட்ட அர்த்தம மனதில படியும்படி அதை அடிக்கடி) நினைத்துக் கொண்டிருப்பது, எண்ணல் - (அந்த அர்த்தத்தை) தியானம் பண்ணுவது (ஆகிய இவைகளாலே), ஆகா - உள்ளபடி அறியமுடியாதவனுன, திருமாலுக்கு - பிராட்டியோடுகூடிய எமபெருமானுக்கு, உரிய - (அவனுக்கே) தகுந்த, தொண்டர்-எவர்கள் தாஸர்களோ, தொண்டர் - அவாகளுக்கு எவர்கள் தாஸர்களோ, தொண்டன் - அவர்களுக்குத் தாஸனுன, சடகோபன் - ஆழ்வார், தெளிய சொன்ன - ஸந்தேஹ மிலலாமல் தெரியும்படி சொன்ன, ஓர்-விலக்ஷணமான, ஆயிரத்துள், இ பத்தும - இந்தப் பத்துப் பாட்டுகளும, (படிக்கிறவர்களை) உலகம உண்டாற்கு - பிரளயகாலத்தில் உலகங்களைத் தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்த எம்பெருமானுக்கு, உரிய தொண்டர் - அவனுக்கே தாஸர்களாக, ஆக்கும் - செய்யும.

(கருத்து) பிரம்மா, சிவன், ஸநகர் முதலான பெரியோர்களாலும், சிரவணத்தினுலும மனனத்தினுலும் தியானத்தினுலும் உள்ளபடி அறியமுடியாத திருமாலுக்கே தகுந்த தொண்டர் தொண்டர் தொண்டராகிய ஆழ்வார், அவனுடைய ஸ்வபாவத்தையும், மற்றவைகளின் தோஷங்களையும் உள்ளங்கையில் வைக்கப்

பட்ட நெல்லிக்கனியைப்போல் நன்றாய் அறியும்படி சொன்ன இந்தப் பத்துப் பாட்டுகளை அடிக்கடி படிக்கிறவர்கள் எம்பெருமானுக்கே உரிய தாஸர்கள் ஆவர்கள்.

(இ - ம) ஆகா - ஆகாத : ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (11)

---

सर्वात्मत्वाज्जगत्याः क्रमणत उत संरक्षणाद्विष्ट-
पानां शत्रूच्चाटात्सदा सहितमस्या पञ्चभाव-
स्थितत्वात् । निर्वाहाज्ज्ञानिकोट्या वचनविहितया सर्व-
शीर्षण्यत्वाच्च ज्ञानात्मक्षेमोद्धारासक्तिसंपत्ति-
कृन्नष्टधीयोगात् ॥ ।எஅ।

---

இந்தத் திருவாய்மொழியில் தன் ஸ்வரூபத்தை அறிந்தவனுக்கு எம்பெருமானைவிட்டுப் பிரிந்திருப்பது தகாதது என்று எண்ணும்படி அவனிருக்கிறான் என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன —(1) எல்லாருக்கும் எல்லாவற்றுக்கும ஆத்மாவாயிருப்பது; (2) உலகத்தை அளந்தது; (3) உலகங்களை ரக்ஷிப்பது; (4) சத்ருருக்களை நாசம் பண்ணுவது; (5) பரரூபம முதலான ஐந்து ரூபங்களையுடையவனாயிருப்பது; (6, 7) அண்டங்களின் நிர்வாஹத்தைச் செய்வது; (8) ஜ்ஞானிகளுக்கு உயிராயிருப்பது; (9) எல்லாருடைய தலையிலும் திருவடியை வைத்தது; (10) மோக்ஷத்தில் ஆசையை உண்டுபண்ணுவது. (78)

# பத்தாம் திருவாய்மொழி.

---

அவ — கீழ்த் திருவாய்மொழியில் தமக்கு எம்பெருமானுடைய பாஹ்யஸம்ச்லேஷம் இங்கே கிடைக்கவேண்டும்; அல்லது தம்மை வைகுந்தத்துக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டும் என்று ஆழ்வார் உரத்த குரலோடு கூப்பிட்டார். அவன் ஒன்றையும் செய்யவில்லை. இனிமேல், அவனைப் பார்ப்பதற்கு அவன் திருவடிகளில் பிரபத்தி பண்ணுவதைத்தவிர, வேறு உபாயமில்லை என்று நிர்மாணித்து, இந்தத் திருவாய்மொழியில் திருவேங்கடமுடையானுடைய குணங்களை ஒன்பது பாட்டுக்களில் சொல்லி, பத்தாவது பாட்டில், பிராட்டி புருஷகாரமாகப் பிரபத்தியைப் பண்ணுகிறார் —

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

உலக முண்ட பெருவாயா வுலப்பில் கீர்த்தி யம்மானே
நிலவுஞ் சுடர்சூ ழொளிமூர்த்தி நெடியா யடியே னாருயிரே
திலத முலகுக் காய்நின்ற திருவேங் கடத்தெம் பெருமானே
குலதொல் லடியே னுனபாதங் கூடு மாறு கூறாயே (க)

(ப - ரை) உலகம் உண்ட பெருவாயா - உலகங்களைப் பிரளய காலத்தில் சாப்பிட்ட பெரிய வாயையுடையவனே! உலப்பில் கீர்த்தி - முடிவில்லாத (வாத்ஸல்யம் முதலான) குணங்களாலுண்டான புகழையுடையவனே! அம்மானே - ஸ்வாமியே! நிலவும் - விளங்கும், சுடர் சூழ - காந்தியாலே உலகத்தைச் சூழ்ந்துகொண்டிருக்கிற, ஒளி மூர்த்தி - அப்பிராகிருதமயமான திருமேனியை உடையவனே! அடியேன் ஆர் உயிரே - எனக்குப் பூர்ணமான பிராணனாயிருக்கிறவனே! நெடியாய - (வைகுந்தமாகிய) உயர்ந்த உலகத்தில் இருப்பவனே! உலகுக்கு - உலகங்களுக்கு, திலதம் ஆய் நின்ற - திலகம்போல அலங்காரமாய் நிலையாயிருக்கிற, திருவேங்கடத்து - திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும், எம்பெருமானே! குல தொல் அடியேன் - குலத்தினால் அநாதியான தாஸனான நான், உன பாதம் - உன்னுடைய திருவடிகளை, கூடும் ஆறு - சேரும் வழியை, கூறாய் - சொல்லு.

(கருத்து) பிரளயகாலத்தில் கருணையாலே உலகங்களை உன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தாய். அளவில்லாத வாத்ஸல்யம் முதலான குணங்களை உடையவனாயிருக்கிறாய். ஸ்வபாவமாயுள்ள காந்தியாலே உலகங்களை வியாபித்துக்கொண்டிருக்கிற அப்பிராகிருதமான திருமேனியையுடையவனாயிருக்கிறாய். நீ எனக்கு ஸ்வாமி; இதை எனக்கு நன்றாய்க் காட்டியிருக்கிறாய். உன்னை விட்டு ஒருக்ஷணமும் என் பிராணனை இருக்காது. வெகு தூரமான வைகுந்தத்திலிருந்தபோதிலும் எல்லாரும் உன்னைக் காணும்படி எல்லா உலகங்களுக்கும் அலங்காரமான திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிறாய். நானோ உனக்கு வம்ச பரம்பரையாக தாஸன். ஆகையால், என்னை உன் திருவடிகளில் சேர்த்தருளவேண்டும்.

குறிப்பு:—(1) உலகங்களைப் பிரளயகாலத்தில் ரக்ஷிப்பதற்கு உன் வாயைப் பெரிதாகத் திறந்தது முதலான வியாபாரங்களைப் பரபரப்புடன் செய்தாயே இப்படிச் செய்த நீ என்னைக் கவனிக்காமலிருக்கலாமா? "இவைகளுக்கு ஆபத்து வந்த காலத்தில அன்றோ நான் ரக்ஷித்தது" என்று சொல்லுகிறாயோ? அந்த ஆபத்துக்களெல்லாம் என ஒருவனுக்கே வந்திருக்கின்றன. "பிரளய ஜலத்தில் விழுந்தனவன்றோ அந்த ஆபத்து" என்று சொல்லுகிறாயோ? நான் ஸம்ஸார ஸமுத்ரத்தில் விழுந்திருக்கவில்லையா? உன்னை ரக்ஷிக்கவேண்டுமென்று கேட்காமல் அசேதனம்போல் கிடந்தவர்களை ரக்ஷித்தாயே. கேட்கிற என்னை ரக்ஷிக்கலாகாதோ என்பது "உலகமுண்ட பெருவாயா" என்பதற்குக் கருத்து.

(2) 'கூறாய்' என்பதற்கு, உனக்கு ஒரு சொல்லாயிருக்கும்; அது எனக்குப் பெரிய புருஷார்த்தமாம். "மாசுச:" (துக்கப்படாதே) என்று கண்ணனாய் நீ அர்ஜுனனைத் தேற்றினாய். இப்போது ஒரு சொல்லைச் சொல்லி என் துக்கத்தைப் போக்கவேண்டும் என்பது கருத்து.

(இ - ம்) கூறாய் - ஒருமை ஏவல் வினைமுற்று. (1)

அவ—"என்னுடன் சேருவதற்கு உன் பாபங்கள் இடையூறுகளாக இருக்கின்றனவே. அவைகள் போனாலன்றோ உன்னை சேர்ந்துக்கொள்ளலாம" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில அருளிச்செய்கிறார்:—

கூறாய் நீறாய் நிலனாகிக் கொடுவல் லசுரர் குலமெல்லாஞ்
சீறா வெறியுந் திருநேமி வலவா தெய்வக் கோமானே
சேறார் சுனைத்தா மரைசெந்தீ மலருந் திருவேங் கடத்தானே
ஆறா வன்பி லடியேனுன் னடிசேர வண்ண மருளாயே. (உ)

(ப - ரை) தெய்வம் கோமானே - தேவர்களுக்குத் தலைவனே! கொடு - க்ரூரமான, வல் - பலமுள்ள, அசுரர் குலம் எல்லாம் - அஸுரக கூட்டங்கள் எல்லாவற்றையும், கூறாய் - அநேகம துண்டுகளாயும், நீறாய் - (அவைகளும் தெரியாதபடி) தூளியாயும், நிலன் - (அவைகளும் தெரியாதபடி) வெறும் தரையாகவும், ஆகி (ஆக்கி) - செய்து, சீறா - (இதைச் செய்தும்) பாம்பைப்போல் சீறிகொண்டு, எரியும் - ஜ்வலிக்கிற, திரு நேமி - திருவாழியை, வலவா - வலதுபாகத்திலுடையவனே! சேறு ஆர் - சேறு நிறைந்த, சுனை - சுனைகளில், தாமரை - தாமரைப்பூக்கள், செம் தீ மலர - செவந்த அக்கினிபோல் மலருகிற, திருவேங்கடத்தானே - திருவேங்கடத்தில் எழுந்தருளியிருப்பவனே! ஆறா - (ஒருபோதும்) அடங்காததான, அன்பில் - ஆசையை உடையவனான, அடியேன், உன அடி சேர் வண்ணம் - உன் திருவடிகளைச் சேரும்படி, அருளாய் - கிருபைபண்ணவேண்டும்.

(கருத்து) க்ரூரமான பலமுள்ள அஸுரர்களின் கூட்டங்களை உன் சகரதைதக்கொண்டு இருந்தவிடம் தெரியாமல் நாசம் செய்தாயே. அப்படிச் செய்தும் கோபமடங்காமல் ஸர்ப்பம்போல் சீறிக்கொண்டிருக்கிற திருவாழியை வலதுகையில் தரிக்கிறவனே! இப்படி உன்னை ஆச்ரயித்த தேவர்களுக்கு உண்டான இடையூறுகளை நீயே போக்கினாய். உன்னிடத்தில் ஆறாத ஆசையுள்ள என்னுடைய இடையூறுகளையும் நீயே போக்கவேண்டும். சேறு நிறைந்த சுனைகளில் சிவந்த நெருப்பைப்போல் தாமரைப்பூக்கள் மலரும் திருவேங்கட மலையில்

எழுந்தருளியிருப்பவனே! மேன்மேல் வளருகிற என் மிகப்பெரிய தான ஆசையாகிய ஸமுத்திரத்தில் மூழ்கியிருக்கிற அடியேனை உன் திருவடிகளில் சேரும்படி கிருபை பண்ணவேணும்.

குறிப்பு:—(1) 'சூழ' என்பது பல்லவிலிருக்கும் பிற குட்டை.

(2) 'செந்நெலொடு' என்பதற்குக் கருத்து—செந்நெல்களு டைய காந்தியாலே திருமாலை யொத்தனவாயிருப்பனவாய் அழகிய காந்தியுள்ளவைகளாய், குளிர்ந்தவைகளாய், பருத்த தண்டை உடையவைகளாய் மலரும்—என்பது.

(இ-ம) சிறு. செய்யாமல் ஊர் வாயப்பட்டு விளைவிப்பன. ஆரு - ஆருத பற்றுக்கொட்ட மதிப்பெற்ற வெற்றிப்ப "ஆர்" என்பதற்கு பிறவினைப்பொருள். அம்பில - நீர் மண்டபத்து உடைய என்பது பூர்வர்கள் உரை. (2)

---

அவ—"போகத்தைத் தொடுக்கவேண்டும் என்றீரே, அதை ஒரு காலமுமில்லாமல் கொடுக்கமாட்டீரோ?" என்று எம்பெருமான் சொன்னதாக நினைந்து, அதற்குப் பதில் சொல்லுகிறார்:—

வண்ண மருள்கொ ளணிமேக வண்ணா மாய வம்மானே
யெண்ணம் புகுந்து தித்திக்கு மமுதே யிமையோ ரதிபதியே
தெண்ணல் லருவி மணிபொன்முத் தலைக்குந் திருவேங் கடத்தானே
அண்ண லேயுன் னடிசேர வடியேற் காவா வென்னாயே. (௩)

(ப-ரை) இமையோர் - தேவர்களுக்கு (நித்யஸூரி களுக்கு), அதிபதியே - ஸ்வாமியே! வண்ணம் - ஸ்வபாவமான, அருள் கொள் - கிருபையைக் கொண்டவனான, அணி - அழகான, மேக வண்ணா - மேகத்தினுடைய வர்ணத்தையுடைய வனே! மாய-ஆச்சரியமான திருமேனியையுடைய, அம்மானே - ஸ்வாமியே! எண்ணம் - என் மனதில், புகுந்து, தித்திக்கும் - இனியதாயிருக்கும், அமுதே - அமிருதமே, தெள் நல்-தெளிந்த நல்ல, அருவி - அருவிகள், மணி - ரத்நங்களையும், பொன் - பொன்னையும், முத்து - முத்துக்களையும், அலைக்கும் - (அலைக

ளாலே இரு கரைகளிலே) ஒதுக்கும், திருவேங்கடத்தானே - திருவேங்கடமலையில் எழுந்தருளி யிருக்கிறவனே! அண்ணலே - ஸ்வாமியாயிருப்பதை எனக்குக் காட்டினவனே! உன் அடி - உன்னுடைய திருவடிகளை, சேர - நான் சேரும்படி, அடியேற்கு - அடியேனுக்கு. ஆ ஆ என்றே - ஐயோ! ஐயோ! என்று கிருபை செய்யவேண்டும்.

(கருத்து) நீ நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாயிருக்கிறாய். ஆகையினாலே, உன்னைச் சேருவதற்கு அவாவுற்றிருக்கையில், நீலமேகம்போன்ற ஆச்சரியமான திருமேனியுடன் கிருபையால் என் மனதில் புகுந்து எனக்கு இனியவனாயிருக்கிறாய். நீ எனக்கு ஸ்வாமி என்றும் நான் உனக்கு வேலைக்காரன் என்றும் எனக்குத் தெரிவித்தாய். தெளிந்த அழகான அருவிகள் அலைகளாலே ரத்னங்களையும் பொன்னையும் முத்தையும் கொண்டுவந்து கரைகளில் விளங்கும்படி ஒதுக்கும் திருவேங்கடமலையிலிருக்கிறாய். இவைகளையெல்லாம் எந்தக் காரணத்தால் செய்தாய்? ஸ்வபாவமாயுள்ள உன் கிருபையினாலே இவைகளைச் செய்யவில்லையா? அந்த நிர்ஹேதுகமான கிருபையினால் இப்போதும் "ஐயோ! இவன் வருத்தப்படுகிறானே" என்று இரக்கப்பட்டு, நான் உன் திருவடிகளை வந்து சேரும்படி செய்யவேண்டும். (3)

---

அவ - இப்படி ஆழ்வார் பிரார்த்திக்க, எம்பெருமான், 'நான் உம் மனதில் புகுந்தது நீர் செய்த புண்ணியத்தை வியாஜமாக வைத்துக்கொண்டுதான்; இப்போது நீர் வேண்டியதைச் செய்வதற்கும் ஒரு வியாஜம் வேண்டும்' என்று சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார் :—

ஆவா வென்னா துலகத்தை யலைக்கு மசுரர் வாணாண்மேல்
தீவாய் வாளி மழைபொழிந்த சிலையா திருமா மகள்கேள்வா
தேவா சுரர்கள் முனிக்கணங்கள் விரும்புந் திருவேங் கடத்தானே
பூவார் கழல்க ளருவினையேன் பொருந்து மாறு புணராயே. (ச)

(ப - ரை) ஆ ஆ என்னாது - ஐயோ! ஐயோ! என்று இரக்கப்படாதே, உலகத்தை - உலகத்திலுள்ளவர்களை, அலைக்கும் - துன்பப்படுத்தும், அசுரர் - அஸுரர்களுடைய, வாழ் நாள்

மேல் - வாழுகிற நாள்கள்மேல் (பிராணன்போமளவில்), தீ வாய் - நெருப்பை முனையிலுடைய, வாளி மழை - பாணங்களின் மழையை, பொழிந்த, சிலையா - வில்லையுடையவனே! திருமாமகள் கேள்வா - பிராட்டிக்கு நாயகனே! தேவா - பிரகாசிக்கிறவனே! சுரர்கள் - நித்யஸூரிகளும், முனி கணங்கள் - ருஷிகூட்டங்களும், விரும்பும் - ஆசைப்படுகிற, திருவேங்கடத்தானே - திருவேங்கடமலையிலிருக்கிறவனே! பூ ஆர் - புஷ்பங்கள் நிறைந்த, கழல்கள் - உன் திருவடிகளை, அருவினையேன் - பெரிதான பாபங்களைச் செய்த நான், பொருந்துமாறு - சேரும் விதத்தை, புணராய் - உண்டுபண்ணவேண்டும்.

(கருத்து) அஸுரர்கள் கொஞ்சமும் பயமில்லாமல் உலகத்தோர்களைத் துன்பப்படுத்துவதைப் பார்த்து, பொறுக்க முடியாமல் அந்த அஸுரர்களின் பிராணன் போகும்படி அக்னி முனையிலுள்ள பாணங்களை மேகம் மழை பொழிவதுபோல் வர்ஷித்து உலகத்தின் உபத்திரவத்தை நீக்கினவனே! இந்த அஸுர ஜயத்தைக் கண்டு ஸந்தோஷப்பட்ட பிராட்டியாலே கட்டிக் கொள்ளப்பட்டு அதனாலே அழகாய் விளங்குகிறவனே! நித்ய ஸூரிகளும் ருஷிகூட்டங்களும் ஆசைப்பட்டு வந்துகொண்டிருக்கிற திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிறவனே! இதுவரையில் நீ ஏற்படுத்தியிருக்கிற உபாயங்கள் எனக்குப் பிரயோஜனப்படமாட்டா. உனக்கு வியாஜம் வேண்டுமானாலும் ஒரு புதிய உபாயத்தை உண்டுபண்ணி, உன்னை ஸேவிக்கிறவர்கள் ஸமர்ப்பிக்கும் புஷ்பங்கள் நிறைந்த உன் திருவடிகளில் என்னைச் சேர்த்து, உலகத்தார் வருத்தத்தை அஸுரர்களை நாசஞ்செய்து போக்கினதுபோல் என் வருத்தத்தையும் போக்கவேண்டும்.

குறிப்பு :--(1) சக்ரவர்த்தித் திருமகன் கரதூஷணாதிகளை வதஞ்செய்து திரும்பிவந்தபோது ஸீதை அவனைக் கட்டிக் கொண்டாள். அஸுர ஜயத்தாலே உண்டான அழகும் பிராட்டி கட்டிக்கொண்டதாலே உண்டான அழகும் சேர்ந்து அவன் மிகவும் நன்றாய் விளங்கினான். இது பாட்டில் முதலிரண்டு அடிகளில் சொல்லப்படுகிறது.

(2) உலகத்தார்கள் எமபெருமானுடைய விபூதிகள்; அவர்களிடத்தில் பிரீதி பண்ணுவது ஒரு குற்றம். அதன்மேல்

அவர்களைத் துன்பப்படுத்தினது இன்னும் பெரிய குற்றம். இந்த இரண்டு குற்றங்களைச் செய்த அஸுரர்களை எம்பெருமானால் பொறுத்துக்கொண்டிருக்க முடியுமோ? (4)

---

அவ—"நீர் புதிதாய் ஓர் உபாயத்தை உண்டுபண்ணு" என்று சொன்னீரே, அதை என்னால் செய்யமுடியுமோ"? என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற்குப் பதில் சொல்லுகிறார் —

புணரா நின்ற மரமேழன் றெய்த வொருவில் வலவாவோ
புணரேய நின்ற மரமிரண்டி னடுவே போன முதல்வாவோ
திணரார் மேக மெனக்களிறு சேருந் திருவேங் கடத்தானே
திணரார் சார்ங்கத் துன்பாதஞ் சேர்வ தடியே னெந்நாளே. (ரு)

(ப-ரை) புணரா நின்ற - புணர்ந்து (ஒன்றோடொன்று சேர்ந்து) நின்ற, மரம் ஏழு - ஏழு மராமரங்களையும், அன்று - அப்போது (ஸுக்ரீவனுக்கு நம்பிக்கையுண்டுபண்ணின காலத்தில்), எய்த - (அம்பினால்) எய்த, ஒரு வில் வலவா - ஒப்பில்லாத வில்லையுடைய வீரனே! புணர் ஏய் நின்ற - சேர்ந்திருப்பதை அடைந்திருந்த, மரம் இரண்டின் நடுவே - இரண்டு மருதமரங்களின் நடுவிலே, போன, முதல்வா - ஜகத்காரணனே! திணர் ஆர் - கனமாயிருப்பது நிறைந்த, மேகம் என - மேகமோ என்று சொல்லத்தகுந்த, களிறு சேரும் - யானைகள் சேரும், திருவேங்கடத்தானே! திணர் ஆர் - கனமாயிருப்பது நிறைந்த, சார்ங்கத்து - சார்ங்கத்தை உடைய, உன பாதம் - உன்னுடைய திருவடிகளை, அடியேன், சேர்வது எந்நாள் - எந்த நாளோ? ஓ - ஐயோ!

(கருத்து) உன்னாலே முடியாதது உண்டோ? ஸுக்ரீவனுக்கு உன் ஸாமர்த்தியத்தில் நம்பிக்கையுண்டுபண்ணின காலத்தில் ஒன்றோடொன்று சேர்ந்து லக்ஷ்யம் வைக்கமுடியாதபடி மலைபோலிருந்த ஏழு மராமரங்களையும் மலையையும் ஒரே பாணத்தால் துளைத்த வில்லையுடையவனல்லவா நீ? க்ருஷ்ணனாய் அவதாரம் செய்து நெருங்கியிருந்த இரண்டு மருத மரங்களின் நடுவிலே உனக்கு ஒரு துன்பமுமுண்டாகாதபடி போனவனல்லவா? உலகத்தை உண்டுபண்ணினவனல்லவா? இவைகள் மேகங்களோ

உனக்கே தாஸனான நான், மெய் - உண்மையாக, எய்தி - அடைந்து, அடிக்கண் - திருவடிகளிலே, மேவுவது-பொருந்துவது (இடைவிடாமல் கைங்கரியம் பண்ணுவது), எந்நாள்-எந்த நாள்?

(கருத்து) உன்னுடைய பரத்வத்தை (எல்லாருக்கும் மேலாயிருப்பதை) எப்போதும் பார்த்துக்கொண்டிருக்கிற நித்தியஸூரிகளும், உன்னுடைய ஸௌசீல்யத்தை (தாழ்ந்தவர்களுடனும் கூட இருப்பதை) எப்போது பார்க்கப்போகிறோம் என்று ஆசைப்பட்டு, திருமலைக்குக் கூட்டம் கூட்டமாய் வந்து உன்னை ஸ்தோத்திரம் பண்ணி வணங்கி, உடம்பாலும் வாக்காலும் மனதாலும், உலகத்தையளந்த உன் திருவடித் தாமரைகளுக்குக் கைங்கரியம் செய்கிறார்கள். ஆகையால், அந்த இடத்திலேயே உன்னை நான் வந்து அடைந்து இடைவிடாமல் உன் திருவடிகளில் கைங்கரியம் செய்யவேண்டும். இப்போது மனதால் மாத்திரம் அங்கு போனதாய் எண்ணிக்கொண்டிருக்கிறேன். இஃது உண்மையாகவே உண்டாகவேண்டும். அந்தக் காலம் எப்போது வருமோ?

குறிப்பு :—உலகத்தையளந்த காலத்தில் அதிலிருப்பவர்களுடைய குணங்களையும் தோஷங்களையும் பார்க்காமல் எல்லாருடைய தலைகளை எம்பெருமான் தன் திருவடியால் தொட்டான். இந்த ஸௌசீல்யம் என்கிற குணத்தைப் பூமியில்தான் பார்க்கலாம். இங்கேதான் தாழ்ந்தவர்கள் இருக்கிறார்கள். ஆகையால், நித்தியஸூரிகள் திருமலைக்கு ஆசைப்பட்டு வருகிறார்கள். (6)

---

அவ—“உமக்காக ஒரு புதிதான உபாயத்தை நான் உண்டு பண்ணவேண்டுமென்றும், ‘அஃது என்னாலே முடியும்’ என்றும் நீர் சொன்னீர்; அது முடிந்தபோதிலும் நீர் சொன்னதைச் செய்தால் நான் பக்ஷபாதமுள்ளவன் என்று எனக்குப் பழி சொல்லுவார்களே. ஆகையாலே, ஏற்பட்டிருக்கிற ஓர் உபாயத்தைச் செய்யும்” என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, ஆழ்வார் பதில் சொல்லுகிறார் :—

அடியேன் மேவி யமர்கின்ற வமுதே யிமையோ ரதிபதியே
கொடியா வடுபுள் ளுடையானே கோலக் கனிவாய்ப் பெருமானே
செடியார் வினைக டீர்மருந்தே திருவேங் கடத்தெம் பெருமானே
நொடியார் பொழுது முனபாதங் காண நோலா தாற்றேனே. (எ)

(ப - ரை) இமையோர் அதிபதியே - நித்தியஸூரிகளின ஸ்வாமியே! அடு - (ஆச்ரிதர்களுடைய விரோதிகளுக்கு) நாசத்தை உண்டுபண்ணுகிற, புள் - பக்ஷியை (கருடனை), கொடி ஆ உடையானே - கொடியாக வைத்துககொண்டிருக்கிறவனே! திரு வேங்கடத்து எமபெருமானே! செடி ஆர் - செடியைப்போல் நிறைந்திருக்கிற (மேன்மேலும் வளருகிற), வினைகள் - பாபங்கள், தீர் - போக்குவதற்கு, மருந்தே - மருந்தாயிருக்கிறவனே! கோலம் கனிவாய் - அழகாலே பழுத்த கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தையுடைய, பெருமானே - பெரியவனே (இனிய வனாயிருக்கும் விஷயத்தில் அளக்கமுடியாதவனே!) நான் - (இந்த அழகுக்குத் தோற்று அடிமையான) நான், மேவி - ஆசைப்பட்டு (ஒரு க்ஷணமும் உன்னைவிட்டுப் பிரிந்திருக்கமுடியாமல்), அமர்கின்ற - இடைவிடாமல் நான் அநுபவித்துக் கொண்டிருக்கிற, அமுதே - அமிருதமே! உன பாதம் - உன்னுடைய திருவடிகளை, காண - பார்க்க (அநுபவிக்கைக்கு), நோலாது - வேண்டிய புண்ணியத்தைப் பண்ணாமல் (இருந்த போதிலும்), நொடி ஆர் பொழுதும் - கை சொடுக்குவது முடியும் காலமும், ஆற்றேன் - ஆறியிருககமாட்டேன்.

(கருத்து) நித்தியஸூரிகளால் சூழப்பட்டு ஆச்ரிதர்களுடைய விரோதிகளை நாசம் செய்யும் கருடன்மேல் ஏறிக்கொண்டு எனக்காகத் திருமலையில் வந்தாய்; செடிகள் வளர்வதுபோல் மேன்மேலும் வளர்ந்துகொண்டு உன்னைப் பார்ப்பதற்கு பிரதிபந்தகமாயிருந்த என் பாபங்களை, வியாதிகளைத் தீர்க்கும் மருந்துபோல் நீ போக்கினாய்; அழகால் கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தைக் காட்டி, வேறு விஷயங்களில் எனக்கு இருந்த ஆசையை விலக்கி என்னை உனக்கு அடிமையாக்கினாய்; ஒரு க்ஷணமும் உன்னைவிட்டுப் பிரியாமல் மனதால் உன்னை அமுதம்போல் அநுபவித்துக்கொண்டிருக்கும்படி செய்தாய். இவ்வளவு உபகாரங்களைச் செய்த நீ பாக்கியிருக்கும் கொஞ்ச வேலையையும்

செய்யவேண்டாமோ? உன்னைக் கண்களால் பார்க்கும்படி உபாயத்தை நான் செய்யாதபோதிலும் இதை நீ செய்யவேண்டும். ஒரு க்ஷணமும் உன்னைவிட்டுப் பிரிந்து ஆறியிருக்கமுடியாது. (7)

---

அவ—"நீர் சொன்னபடி யாருக்காவது நான் செய்திருக்கிறேனு?" என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார்:—

நோலா தாற்றே னுனபாதங் காண வென்று நுண்ணுணர்வின்
நீலார் கண்டத் தம்மானு நிறைநான் முகனு மிந்திரனுஞ்
சேலேய் கண்ணா பலாசூழ விரும்புந் திருவேங் கடத்தானே
மாலாய் மயக்கி யடியேன்பால் வந்தாய் போலே வாராயே. (அ)

(ப - ரை) நுண் உணர்வின் - ஸூக்ஷ்மமான அறிவை உடைய, நீல் ஆர் கண்டதது அம்மானும் - நீல நிறம் நிறைந்த கழுத்தையுடைய முக்கியமான ருத்திரனும், நிறை - (அவனைக்காட்டிலும் அதிகமாய் ஜ்ஞான சக்திகள்) நிறைந்த, நான்முகனும் - பிரம்மாவும், இந்திரனும், சேல் ஏய் கண்ணார் - மீனையொத்திருக்கிற கண்களையுடைய அவர்கள் மனைவிகளும், பலர், சூழ - சூழும்படி, உன பாதம் - உன் திருவடிகளை, காண - கண்டு அநுபவிக்க, நோலாது - புண்ணியம் பண்ணுமல், (இருந்த போதிலும), ஆற்றேன் - (அந்த அநுபவமில்லாமல்) ஆறியிருக்க மாட்டேன் (என்று தனித்தனியாய்ச் சொல்லி), விரும்பும் - ஆசைப்படும், திருவேங்கடத்தானே, மாலாய் - (உன்னைப் பாராமல்) பைத்தியம் பிடித்து, மயக்கி - மயங்கும்படி செய்து (இருக்கிற நீ), வந்தாய் போல் - கஜேந்திராழ்வானுக்கு வந்ததுபோல், அடியேன்பால் - அடியேனிடம், வாராய் - வரவேண்டும்.

(கருத்து) ஸூக்ஷ்மமான அறிவையுடையவனும், ஹாலாஹலம் என்கிற விஷத்தைச் சாப்பிட்டதினுல் கறுப்பாயிருக்கிற கழுத்தையுடையவனும், இந்த வேலையைச் செய்யச் சக்தியுள்ளவனுயிருந்தபடியால் உலகத்தாருக்கு மேற்பட்டவனுமான ருத்திரனும், அவனைக் காட்டிலும் அதிகமான ஜ்ஞானத்தையும் சக்தியையுமுடைய பிரம்மாவும் இந்திரனும் "உன்னைப் பார்த்து

*அநுபவிக்கும்படியான புண்ணியங்களைச் செய்யாதபோதிலும், அந்த அநுபவமில்லாமல் ஆறியிருக்க முடியாது" என்று தனித் தனியே சொல்லிக்கொண்டு, மீன்போன்ற கண்களையுடைய தங்களுடைய மனைவிகளால் சூழப்பட்டு திருமலைக்கு ஆசைப்பட்டு வருகிறார்களே! வந்து உன்னைப் பார்த்து அநுபவிக்கிறார்களே! அப்படியே நானும் உன்னை எப்போதும் பார்த்து அநுபவிக்கும்படி வரவேண்டும். (இப்படி ஆழ்வார் பிரார்த்திக்க, அப்போதே எம்பெருமான் எழுந்தருளவில்லை ஆழ்வார் சொல்லுகிறார்) உன்னை எப்போதும் அநுபவிக்கும்படி எழுந்தருள இஷ்டமில்லாதபோதிலும் கஜேந்திராழ்வானுக்கு வந்ததுபோல், உன்னைக் காணப்பெறுமல் பைத்தியம் பிடித்து மயக்கத்தை அடைந்திருக்கும்படி செய்யப்பட்ட அடியேனிடம் ஒரு தடவை எழுந்தருள வேண்டும்.*

*குறிப்பு :—ரக்ஷிக்கத்தகுந்த ஒருவனுக்கு இயக்கமுண்டானதற்காக, ரக்ஷிப்பதை வேண்டியவர்கள் தங்கள் குடும்பத்தோடு வந்து அவன் காலில் விழுவது உலக வழக்கம். அப்படியே தேவர்கள் தங்கள் மனைவிகளுடன்கூட திருமலைக்கு வந்து எம்பெருமான் திருவடிகளில் விழுகிறார்கள் என்பது கருத்து.*

*(இ - ம்) வந்தாய்போல் - வந்தவனைப்போல் : வினையால் அணையும் பெயர். வாராய் - ஒருமை ஏவல் வினைமுற்று.* (8)

---

வந்தாய் போலே வாராதாய் வாரா தாய்போல் வருவானே
செந்தா மரைக்கட் செங்கனிவாய் நாற்றே ளமுதே யெனதுயிரே
சிந்தா மணிகள் பகரல்லைப் பகல்செய் திருவேங் கடத்தானே
அந்தோ! அடியே னுனபாத மகல கில்லே னிறையுமே. (௯)

*(ப - ரை) வந்தாய்போலே - வந்தவன்போல் (இருந்து), வாராதாய் - (உன்னை ஆச்ரயிக்காதவர்களுக்கு) கிட்ட வராதவனாயிருக்கிறவனே! வாராதாய்போல்-கிட்ட வராதவன்போலே (இருந்து), வருவானே - (ஆச்ரிதர்களின்) கிட்ட வருகிறவனே! செந்தாமரை கண், செங்கனிவாய், நான்கு தோள் (ஆகிய இவைகளையுடைய), அமுதே - அமுதம்போலினியனானவனே! எனது உயிரே - என்னுடைய ப்ராணனே! சிந்தாமணிகள் - சிந்தா*

மணிகள்போல் இருக்கிற ரதனங்களுடைய, பகர் - காந்தியா னது, அல்லை - ராத்திரியை, பகல செய் - பகலாகச் செய்யும், திருவேங்கடததானே! அந்தோ - ஐயோ! அடியேன், உன பாதம் - உன்னுடைய திருவடிகளை, இறையும் - க்ஷணகாலமும், அகல கில்லேன் - விட்டுப் பிரிய சக்தியில்லாதவன்.

(கருத்து) உன்னை ஆச்ரயிக்காதவர்களுக்குக் கிட்டவருவது போல் தோன்றுகிறாய். ஆனால், அவர்களுக்கு ஸுலபனன்று; உன்னை ஆச்ரயித்தவர்கள் தங்களுடைய, வேறு உபாயமில்லா ததை நினைத்து, இவன் நமக்குத் துர்லபன் என்று எண்ணின போதிலும் அவர்களுக்கு ஸுலபனாயிருக்கிறாய். செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையும், சிவந்த கோவைப்பழம்போன்ற திருப்பவளததையும் நானகு தோள்களையும் உடையவனும் அமி ருதம்போலினியவனுமாயிருககிறவனே! இந்த அழகைக காட்டி உன்னையே எனக்குத் தாரகமாகவும் போஷகமாகவும் போக்கிய மாகவும் செய்துவிட்டாய். சிந்தாமணிகள்போல கேட்டவர்களுக் குக் கேட்டதைக் கொடுப்பவைகளான ரதனங்கள் ஸூரியகிர ணங்கள்போன்ற தங்களுடைய காந்தியாலே ராத்திரியைப் பகலா கப்பண்ணும் திருவேங்கடமலையில் எனக்காக எழுந்தருளியிருக் கிறாய். அடியேனால் உன்னுடைய திருவடிகளை ஒரு க்ஷணமும் விட்டுப் பிரிந்து இருக்கமுடியாது. ஆகையால், கிருபையால் என்னை உன் திருவடிகளில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

குறிப்பு:—தாரகம், போஷகம், போக்யம் என்கிற சொற் களுக்கு அர்த்தத்தை, இந்தப் பத்து ஏழாம் திருவாய்மொழியில் "உண்ணும் சோறு" என்கிற முதற பாட்டின் உரையில் பார்க்க.

(இ - ம்) வந்தாய், வாராதாய்: வினையால் அணையும் பெயர்கள்; வந்தவனே, வாராதவனே என்பவை பொருள். (9)

---

அவ—ஏற்பட்ட ஏதாவது ஓர் உபாயத்தை நீர் செய்ய வேண்டுமென்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, அதற் குப் பதில் சொன்னார். இப்போது உபாயங்களில் ஒன்றான பிரபத்தியை இந்தப் பாட்டில் செய்கிறார்:—

அகல கில்லே னிறையுமென் றலர்மேன் மங்கை யுறைமார்பா
நிகரில் புகழா யுலகமூன் றுடையா யென்னை யாள்வானே
நிகரி லமரா முனிக்கணங்கள் விரும்புந் திருவேங் கடத்தானே
புகலொன் றில்லா வடியேனுன் னடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே. (கo)

(ப - ரை) இறையும் - கொஞ்சமும் (க்ஷணகாலமும்), அகல கில்லேன என்று - பிரிய சக்தியில்லாதவள் என்று சொல்லிக் கொண்டு, அலர்மேல் - தாமரைப்பூவின்மேல் இருக்கிற, மங்கை - எப்போதும் யௌவனத்தையுடைய பிராட்டி, உறை மார்பா - வஸிக்கிற திருமார்பையுடையவனே! நிகர் இல் - ஒப்பு இல்லாத, புகழாய் - புகழை உடையவனே! மூன்று உலகம் உடையாய் - மூன்று உலகங்களுக்கும் ஸ்வாமியாய் இருக்கிறவனே! என்னை - (தாழ்ந்தவனுன) என்னையும், ஆள்வானே-அந்தரங்கமான வேலைக் காரனுகச் செய்துகொண்டவனே! நிகர் இல் - ஒப்பில்லாத, அமரர் - (உன் கட்டளைகளைச் செய்கிற) நித்தியஸூரிகள், முனிகணங்கள் - (உன்னுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டிருக்கும்) நித்தியஸூரிகளின கூட்டங்களும், விரும்பும் - மிகுந்த ஆசையுடன் வருகிற, திருவேங்கடத்தானே! உன் அடி கீழ் - உன்னுடைய திருவடிகளின் கீழே, புகல் ஒன்று இல்லா அடியேன் - வேறு புகுமிடம் ஒன்றுமில்லாத அடியேன், அமர்ந்து - நிலையாய் (வேறு பிரயோஜநத்தை ஆசைப்பட்டு அதை உன்னிடம் பெறறுக்கொண்டு உன்னைவிட்டுப் போகிறவர்கள்போல் இல்லாமல் உன்னையே பிரயோஜநமாக எண்ணி நிலையாயிருந்து), புகுந்தேன் - என்னை ரக்ஷிக்கிற சுமையை உன் திருவடிகள் வாங்கிக்கொண்டதாக உறுதியாகப் புத்தியாலே எண்ணுகிறேன்.

(கருத்து) தாமரைப்பூவின்மேல் அதின் வாஸனையானது ஒரு ரூபத்தை எடுத்துக்கொண்டதுபோல் எழுந்தருளியிருக்கிற எப்போதும் யௌவனமுள்ள பெரிய பிராட்டியும் கூட எப்போதுமுன்னுடன் சேர்ந்திருந்தபோதிலும் உன் திருமார்பு ஒவ்வொரு க்ஷணமும் புதிதாய்த் தோன்றி இனியதாயிருக்கிறபடியால் அதை ஒரு க்ஷணமும் விட்டுப் பிரியமுடியாது என்று சொல்லிக்கொண்டு, எப்போதும் வஸிக்கிற திருமார்பையுடையவனே! அளவில்லாத கருணையாகிய குணத்தையுடையவனே!

மூன்று உலகங்களுக்கும் ஸ்வாமியாய் அவைகளை ரக்ஷிக்கவேண்டிய பொறுப்புள்ளவனே! தாழ்ந்தவனான என்னையும் உனக்கு அந்தரங்கமான வேலைகளைச் செய்யும்படி செய்து உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டினவனே! உன்னுடைய கட்டளையைச் செய்துகொண்டும், உன்னுடைய குணங்களை அநுபவித்துக்கொண்டும இப்படி இருக்கிற இருவகைப்பட்ட நித்தியஸூரிகளின் கூட்டங்களும் ஆசைப்பட்டு வந்து ஸேவிக்கும்படி திருமலையில நீ எல்லாருக்கும ஸுலபனாய் எழுந்தருளியிருக்கிறவனே! எனக்கு உன்னைத் தவிர வேறு உபாயமில்லை. ஆகையால், பிராட்டியைப் புருஷகாரமாகக்கொண்டு அவளுடன் சேர்ந்திருக்கிற உன்னுடைய திருவடிகளையே உபாயமாக எண்ணி என்னை ரக்ஷிக்கவேண்டிய சுமையை வேறு பிரயோஜநத்தைத் தேடாமல் மனதால் ஸமர்ப்பித்துவிட்டேன. இப்போதே என்னுடைய எல்லா ப்ரதிபந்தங்களும போய், உனக்கு எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும எல்லா அவஸ்தைகளிலும் எல்லாவிதமான கைங்கரியங்களையும் நான் செய்யவேண்டும்.

குறிப்பு :—(1) 'புகழாய்' என்கிற இடத்தில் 'புகழ்' என்கிற சொல்லுக்கு, புகழை - கீர்த்தியை உண்டாக்கும் நல்ல குணம் என்பது பொருள். எம்பெருமானுடைய ஜ்ஞானமும் சக்தியும், நிக்ரஹம் பண்ணுவதற்கும் அநுக்ரஹம் பண்ணுவதற்கும் பொதுவானபடியால் அவைகளை இங்கே சொல்லுவதில் கருத்தில்லை அநுக்ரஹத்தையே பிரார்த்திக்கிற இந்த இடத்தில் அநுக்ரஹத்துக்கே வேண்டிய கருணை சொல்லப்படுகிறது. வாத்ஸல்யம் என்கிற குணமும் அதிலே அடங்கியிருக்கிறது.

(2) 'உலகம் மூன்று உடையாய்' என்பதாலே ஸ்வாமித்வம் என்கிற குணமும், 'என்னை ஆள்வானே' என்பதாலே ஸௌசீல்யம் என்கிற குணமும், 'திருவேங்கடத்தானே' என்பதாலே ஸௌலப்யம் என்கிற குணமும் காட்டப்படுகின்றன. இந்த மூன்று குணங்களையும் வாத்ஸல்யத்தையும் பிரபத்தி பண்ணும்போது ஒருவன் நினைக்கவேண்டியது.

(3) இந்தக் குணங்களைப் பார்ப்பதற்கு வைகுந்தத்தில் இடமில்லை. பூமியிலேதான் இவைகளைப் பார்க்கலாம். ஆகை

யால், அதைப் பார்க்க ஆசைப்பட்டு நித்தியஸூரிகள் திரு மலைக்கு வருகிறார்கள் என்பது 'விரும்பும்' என்கிற சொல்லின் கருத்து.

(4) பிராட்டி புருஷகாரமாயும், எம்பெருமானுடன்கூட பிரபத்தி பண்ணுகிறவன் சுமையை வாங்கிக்கொள்ளுவதால் உபாயமாயும் இருக்கிறாள். அவளுக்கு இரண்டு ஆகாரங்களிருக் கின்றன. எம்பெருமானுக்குப் புருஷகாரம் என்கிற ஆகாரம் கிடையாது. பிராட்டியின் இந்த ஏற்றத்தைக் காட்டுவதற்காக முதல் அடியில்அந்த ஆகாரத்துக்கு வேண்டினபடி எப்போதும் எம்பெருமானுடன்கூட இருப்பது சொல்லப்படுகிறது. எம்பெரு மானே பிரபந்நன் சுமையை ஒப்புகொள்ளுகிறான். பிராட்டி அதைச் செய்கிறதில்லை என்று சொல்ல இந்தப்பாட்டு வரவில்லை. இரண்டுபேரும இந்தக் காரியத்தைச் சேர்ந்து செய்கிறார்கள் என்பது த்வயம் என்கிற மந்த்ரத்தாலும அதன் அர்த்தத்தை வெளியிடுகிற சரணாகதி கத்யத்தாலும் ஏற்படுகிறது. இந்தப பாட்டிலும் பிராட்டி எப்போதும் எமபெருமான் திருமார்பில் இருக்கிறபடியால் அவனுக்கு விசேஷணமாயிருப்பது சொல்லப் படுகிறது.

(5) இந்தப் பாட்டு 'த்வயம்' என்கிற மந்த்ரத்தின் முன்பாதியின் அர்த்தத்தைச் சொல்லுகிறது. 'அகல கில் லேன்' என்பதால், 'ஸ்ரீமத்' என்கிற சொல்லின் பொரு ளும், நான்கு குணங்களைச் சொல்லுவதாலே அவைகளைக் காட்டு கிற 'நாராயண' என்கிற சொல்லின் பொருளும், 'உன் அடிக் கீழ்' என்பதாலே, 'சரணௌ' என்பதின் பொருளும் 'புகுந் தேன' என்பதினால் 'ஶரணம்' என்பதின் பொருளும் 'புக லொன்று இலலா' என்பதால், வேறு உபாயமில்லை என்கிற கார்ப்பண்யத்தை விகுதியாலே காட்டும் "ப்ரபத்யே" என்ப தின் பொருளும் சொல்லப்படுகின்றன. ஆகையால், மந்திரத்தின் பின்பாதியின அர்த்தத்தையும் சொல்வதில் கருத்து இருக்கிற படியால், பாட்டு அதைச் சொல்லாமலே சொல்லாதபோதிலும் உரையில் எழுதப்பட்டது.

(6) 'புருஷகாரம்' என்பது ரக்ஷிக்கவேண்டியவனை ரக்ஷிக்கிறவனிடம் சேர்க்கிற சேதனன். (10)

---

அடிக்கீ ழமர்ந்து புகுந்தடி யீர் வாழ்மி னென்றென் றருள்கொடுக்கும்
படிக்கே ழில்லாப் பெருமானைப் பழனக் குருகூரச் சடகோபன்
முடிப்பான் சொன்ன வாயிரத்துத் திருவேங் கடத்துக் கிவைபத்தும்
பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரிய வானு ளிலாவுவரே. (கக)

*(ப - ரை) அடியீர் - எனக்குக் கைங்கரியம் பண்ணுவதில் ஆசையையுடையவர்களே! அடி கீழ் - என்னுடைய திருவடிகளின் கீழே, அமர்ந்து - நிலையாயிருந்து, புகுந்து - நன்றாய்ப் படிந்த மனதையுடையவர்களாய், வாழ்மின் - வாழுங்கள், என்று என்று - இப்படி அடிக்கடி சொல்லிக்கொண்டு, அருள் கொடுக்கும்படி - கிருபை செய்கிற விதத்தில், கேழ் இல்லா - ஒப்பில்லாத, பெருமானை - எல்லாருக்கும் மேற்பட்டிருக்கிற எம்பெருமானைக் குறித்து, பழன குருகூர் சடகோபன் - நல்ல வயல்களால் சூழப்பட்ட குருகூரில் எழுந்தருளியிருந்த ஆழ்வார், முடிப்பான் - முடிக்கும்படி (அவனையடைந்து கிருதார்த்தனாக வேண்டுமென்று) சொன்ன, ஆயிரத்து - ஆயிரத்துள், திருவேங்கடத்துக்கு - திருவேங்கடமலையின் பெருமையை வர்ணிக்கிறவைகளான, இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுகளையும், பிடித்தார் - ஆசிரயித்தவர்களை (பிரீதியுடன் சொல்லுகிறவர்களை), பிடித்தார் - ஆசிரயிக்கிறவர்கள், பெரிய வானுள் - அளவிடமுடியாத ஸ்வபாவத்தையுடைய வைகுந்தத்தில், வீற்று இருந்து - பெருமையையுடையவர்களாய் இருந்து, நிலாவுவர் - (திரும்பி வருவதில்லாமல்) நிலையாய் விளங்குவார்கள்.*

*(கருத்து) எம்பெருமான் "எனக்குக் கைங்கரியங்களைச் செய்ய ஆசைப்படுகிறவர்களே! என் திருவடிகளின்கீழ் வேறு பிரயோஜனத்தைத் தேடாமல் அவைகளிலேயே படிந்த மனதை உடையவர்களாய் வாழுங்கள்." என்று தனித்தனியே ஒவ்வொருவருக்கும் சொல்லிக்கொண்டிருக்கிறான். ஆசிரிதர்களுக்குக் கிருபை செய்கிற விஷயத்தில் அவருக்கு ஸமானமானவருமில்லை. எல்லாருக்கும் மேற்பட்டவன். இப்படிப்பட்ட எம்பெருமானை அடைந்து தாம் கிருதார்த்தராக ஆகவேண்டும் என்று ஆழ்வார் திருமலையின் பெருமையை வர்ணித்துச் சொன்ன இந்தப் பத்துப்பாட்டுக்களையும் எவர்கள் பிரீதியுடன் சொல்லிக்கொண்டு இருக்கிறார்களோ, அவர்களை ஆச்ரயித்தவர்களும்கூட அளக்க*

இந்தப் பத்தில் எம்பெருமான் சரண்யன் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) ஆசாரியர்கள் வழியாக அடையப்படுவது, (2) தானாகவே ஆசிரிதர்களிடம் வருவது, (3) சேரக்கூடாதவைகளைச் சேர்ப்பது; (4) தன்னுடைய செயல்களாலே ஆசிரிதர்களை ஸந்தோஷப்படுத்துவது; (5) தன்னைச் சேர்ந்த பந்துக்களை ஆச்ரிதர்கள் விடும்படி செய்வது, (6) ஆசிரிதர்களைச் சேர்ந்த அஹங்கார மமகாரங்களை அபஹரிக்கும் ஸாமர்த்தியம்; (7) தைரியம் முதலானவைகளை உண்டுபண்ணுவது; (8) தன்னிடம் ஆசிரிதர்களைச் சேர்ப்பவர்களுக்கு இரண்டு விபூதிகளையும் கொடுப்பது; (9) ஆச்ரிதர்கள் தன்னைவிட்டுப் பிரிவதற்குத் தகாதவனாயிருப்பது, (10) பிரபத்தியினால் அடையக்கூடியவனாயிருப்பது

---

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:||

ஜ்ஞாநவைராக்யநிஷ்டாநஸேவ்யயே

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீமதே பகவத்பாஷ்யகாராய மஹாதேசிகாய நம:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஆறும்பத்து முற்றிற்று.

---

ஸ்ரீமதே வேதாந்தராமாநுஜமஹாதேசிகாய நம: ||

திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# ஏழாம்பத்து.

ததேவம் ஷஷ்டாந்தம் விஹிதஸவிசேஷவ்யவஸிதி:
பயாதாஸாஸ்வாத் விஸ்ருதஸஹ்யோதயஸ்வஸ்தஸம்ஸ்ரிதே |
ஜநிக்ஷேபாவந்த்யாஸவ்யஸ்யாதிசிராநிக்ஷ்யஸம்ஸ்ரேந
ஸ்வதஸ்ஸித்தஸ்வஸ்வீயம் வ்யஸநஸமநம் ஸம்ஸ்தவயதி || |௧௫|

இப்படி ஆழ்வார் முதல்பத்து முதல் ஆறும்பத்து முடிய அங்கங்களோடுகூடிய பிரபத்தியை ஆசாரியனை முன்னிட்டுச் செய்து, பலன் உடனே கிடைக்காமையால் வருத்தப்பட்டு, அவஸரப்படுகிறவராய், தமக்கு அநிஷ்டத்தைச் செய்ய நினைத்திருக்கிறுனே என்று சொல்லுவது முதலான காரணங்களாலே, ஆச்ரிதர்களின் அநிஷ்டங்களைப் போக்குவதில் தானுகவே வேலை செய்யும் ஸ்வபாவமுள்ள ஸ்வாமியை ஏழாவதுபத்தில் தமக்கு அபிமுகமாகும்படி பிரார்த்திக்கிறுர். (15)

ஸஹந் ஸாத்யாஸங்கா வஸஜிதகஹ: ப்ரகடயந்
ஸ்வரக்ஷாத்ருத்வம் ஸ்வாத்ருத்வவிமுஜஜந் ப்ரணயிதாம் |
ஸ்ரீ கார்ந்தூத்தா ஸ்மரணவிஸதஸ்த்ருவிபவ:
ஸகதலயஜ்ஜந்து ஸ்தோத்ரவ்யஸநஜிதஸிதப்ரஹரிஹ ||௧௬|

இந்தப் பத்தில எம்பெருமான் ஆச்ரிதர்களுடைய அநிஷ்டங்களைப் போக்கும் ஸ்வபாவமுள்ளவன் எனபது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன—(1) ஆச்ரிதர்கள் தன்னை வஞ்சனை செய்கிறவன் என்று ஸந்தேஹப்படுவதைப் பொறுத்துக்கொண்டிருப்பது; (2) அவர்கள் தன்னைப் பழி சொல்லுவதைப் போக்குவது; (3) தான் ரக்ஷகன் என்பதை வெளியிடுவது; (4) அது செய்யும் விதங்களை நன்றுய்க் காட்டு

வது; (5) எல்லா ஜந்துக்களிடத்திலும் தனக்கு இருக்கும் ஆசையைக் காட்டுவது; (6) ஆச்ரிதர்களுடைய அழுகைக் குரலைப் போக்குவது; (7) ஆச்ரிதர்களுடைய மனதில் கண்ணாலே பார்ப்பதுபோல் தெளிவாய்த் தோன்றுவது; (8) ஆச்சரியமான விபூதிகளை உடையவனாயிருப்பது; (9) தன்னை ஸ்தோத்ரம் பண்ணும்படி ஆச்ரிதர்களைச் செய்வது; (10) ஸ்தோத்ரம் பண்ணுகிறவர்களின் துக்கத்தைப் போக்குவது. (16)

## முதல் திருவாய்மொழி.

அவதாரிகை—கீழ்த் திருவாய்மொழியில் தம்முடைய * ப்ரகிருதி ஸம்பந்தத்தைப் போக்கவேண்டுமென்றும், தம்மை அடிமையாக்கிக்கொள்ள வேண்டுமென்றும் எம்பெருமானுடைய திருவடிகளில் ஆழ்வார் பிரபத்தி பண்ணினார். இதை அவன் உடனே செய்யவில்லை. அதற்குக் காரணம், அவருடைய உடம்பில் அவனுக்கிருந்த ஆசையும், அவரைக் கொண்டே திருவாய்மொழியை முடிக்கவேண்டுமென்பதுமாம். இந்தத் தாமதத்தைப் பொறுக்காமல் அசோகவனத்திலிருந்த ஸீதை கூப்பிட்டதுபோல் கூப்பிடுகிறார்.

(2) இந்தத் தாமதத்தை ஆழ்வார் பொறுக்காததற்குக் காரணம்—(1) தம்முடைய இந்திரியங்கள் விஷயங்களை விட்டு எம்பெருமானிடத்திலேயே படிந்திருந்த போதிலும், விஷயங்களில் படிந்திருக்கிற மற்றவர்களின் இந்திரியங்களும் தம்முடைய இந்திரியங்களும் ஒரே ஜாதியாயிருப்பதும; (2) இதுவரையில் விஷயங்களில் அவைகள் படிந்திருந்து எம்பெருமானுடைய அநுபவத்துக்கு இடையூறாயிருந்ததும்; (3) இப்போதும் அவனுடைய பாஹ்ய ஸம்ச்லேஷத்துக்கு இடையூறாயிருப்பதும்; (4) இனிமேலும் உடம்பானது இளப்பமாயிருப்பதாலே எம்பெருமானுடைய பாஹ்ய ஸம்ச்லேஷத்துக்குத் தகாததாயிருப்பதுமாம்.

---

* ப்ரகிருதி ஸம்பந்தம்—பிரகிருதியிலிருந்து உண்டான உடம்புடனும் இந்திரியங்களுடனும் ஸம்பந்தம்.

(3) பாம்புகள் கடிக்கா விட்டாலும் அவைகளின் நடுவி லிருப்பதும் பயத்துக்குக் காரணமன்றோ? ஆகையால் உடம் புடனும் இந்திரியங்களுடனுமகூட இருப்பதற்கு ஆழ்வார் பய ந்து எம்பெருமானைக் கூப்பிடுகிறார்.

(ஆசிரியத்துறை.)

உண்ணி லாவிய வைவ ராற்குமை தீற்றி யென்னையுன் பாத பங்கயம்
நண்ணிலா வகையே நலிவா னின்னு மெண்ணுகின்றாய்
எண்ணி லாப்பெரு மாய னேயிமை யோர்க ளேத்து முலக மூன்
அண்ணலே யமுதே யப்பனே யென்னை யாள்வானே. [றுடை

(பதவுரை) எண் இலா - எண்ணிக்கையில்லாத, பெரு - பெரிய (மிகவுமுயர்ந்த), மாயனே - ஆச்சரியமான சக்திகளை உடையவனே! இமையோர்கள் - நித்தியஸூரிகள், ஏத்தும் - ஸ்தோத்ரம் பண்ணும், மூன்று உலகம் உடை - மூன்று உல கங்களையுடைய, அண்ணலே - ஸ்வாமியுமானவனே! அமுதமே - அமுதம்போலினியவனே! அப்பனே - உபகாரங்களைச் செய் கிறவனே! என்னை ஆள்வானே - (இனனும் உன்னுடைய வேறு குணங்களைக் காட்டி) என்னை உனக்கு உட்பட்டவனாய்ச் செய்து கொண்டவனே! உள் - (என்னுடைய) உடம்புக்குள்ளே, நிலா விய - விளங்குகிற, ஐவரால் - ஐந்துபேர்களால் (ஐந்து இந் திரியங்களால்), இன்னும், குமை-துன்பத்தை, தீற்றி - தின்னப் பண்ணி (நான் அநுபவிக்கும்படி செய்து), என்னை, உன் பாத பங்கயம் - உன் திருவடித் தாமரைகளை, நண்ணிலா வகையே - கிட்டாதபடியே, நலிவான் - ஹிம்ஸிக்க, எண்ணுகின்றாய் - எண்ணுகிறாய்.

(கருத்து) என்னுடைய துக்கத்தைப் போக்கத்தகுந்த- கணக்கில்லாத-மிகவுமுயர்ந்த-ஆச்சரியமான சக்திகள் உன்னிடம் இருக்கின்றனவே; என் துக்கத்தைப்போக்கவில்லையே; ஆதலால் அந்தச் சக்தியெல்லாம் என்னை ஹிம்ஸிப்பதற்காகவென்று நினைக் கிறேன். உன்னைவிட்டு ஒருக்ஷணம் பிரிந்திருக்க முடியாதவர்களை இந்திரியங்களைக்கொண்டு துன்பப்படுத்துகிறாய். இந்தப் பெரிய குணத்தை ஸ்தோத்ரம்பண்ண நித்தியஸூரிகள் இருக்க, நீ என் னைக் கவனிப்பாயோ? மூன்று உலகங்களுக்கும் ஸ்வாமியாயிருப்ப

திருலே உன் சொத்தான என்னை நீ ரக்ஷிப்பாய் என்று என்னை நம்பும்படி செய்தாய், எனக்கு அமிருதம்போல இனியவனாயிருப்பதைக் காட்டி உன்னைத் தவிர வேறு விஷயங்களை நான் நினைக்காதபடி செய்தாய்; நான் உண்டானதுமுதல் எனக்குப் பல உபகாரங்களைச் செய்து மேலும் உபகாரம் செய்வாய் என்று என்னை நம்பும்படி செய்தாய். இன்னும் வேறு உன்னுடைய குணங்களைக் காட்டி என்னை உனக்கு உட்பட்டவனாகச் செய்துகொண்டாய். ஆகையால், உன்னை ஒருக்ஷணமும் விட்டு நான் பிரிந்திருக்க முடியாது. இப்படியிருக்கிற என்னை ஏன் ஐந்து இந்திரியங்களின் நடுவில் வைத்திருக்கிறாய். அவைகள் உடம்புக்குள் இருப்பதால், அவைகளை நான் விடமுடியாது. அவைகள் பகைவர்போல பயத்தையுண்டாக்குகின்றன. இப்படி என்னைச் செய்ததெல்லாம் இனி மேலும் என்னைத் துன்பப்படுத்தி உன் திருவடிகளின் கிட்ட வராமல செய்வதற்காகவா? இதுவரையில் நான் உன்னை இழந்திருந்தது போதாதா? உன் திருவுள்ளம் என்ன?

குறிப்பு:—(1) 'ஐவர்' என்று சேதநர்களைப்போல் இந்திரியங்களைச் சொல்லுவதற்குக் காரணம் பகைவர்களைப்போலிருக்கின்றன என்பது. கோபத்தாலே அஃறிணையை உயர்திணையாயிற்று.

(2) விரோதிகள் ஒருவராய் அல்லது இருவராயிருந்தால் எப்படியாவது பரிஹாரம் பண்ணலாம். அவர்கள் ஐந்து பேர்களாயிற்றே என்பது, 'ஐவர்' என்பதற்குக் கருத்து.

(3) 'எண்ணுகின்றாய்' என்பதினால் இவர் என் கிட்டவாராததற்கு உபாயம் என்ன என்று நினைத்துக்கொண்டிருக்கிறாயா? ஸர்வேசுவரனான உனக்கு இதுதானா வேலை? என்று ஆழ்வார் வருத்தப்பட்டுக் கேட்கிறார்.

(4) இவ்வளவு உபகாரஞ்செய்த எம்பெருமானைத் தமக்கு அபகாரம் செய்கிறவனாகச் சொல்லுவதற்குக் காரணம் அவனிடம் தமக்கு உண்டாய்ப் பலப்பட்ட உறவு.

(5) கருத்தில் 'இந்தப் பெரிய குணத்தை' என்பது வெறுத்துச் சொல்வது; இது பெரிய குணம் அன்று என்பது கருத்து.

(இலக்கணம்) தீற்றி - பிறவினை வினையெச்சம்; தின்னும்படி செய்து என்பது பொருள்; நண்ணிலா - நண்ணிலாத : எதிர் மறைப் பெயரெச்சம்; நண் + இல + ஆ நலிவான் - நலிய : வினை யெச்சம். எண்ணிலா - எண் + இலா - இலாத : பெயரெச்சம்.

---

அவ—'நீர் சொன்னபடி உமக்கு உபகாரம் செய்த நான் உம்மை இந்திரியங்களுக்கு வசப்படுத்தி என்னிடம் வாராதபடி செய்வேனோ' என்று எம்பெருமான் கேட்பதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார் :—

என்னை யாளும்வன் கோவோ ரைந்திவை பெய்தி ராப்பகல் மோது
உன்னை நானணு காவகை செய்து போதிகண்டாய் [வித்திட்டு
கன்னலே யமுதே காாமுகில் வண்ண னேகடல் ஞாலங் காக்கின்ற
மின்னு நேமியினாய் வினை யேனுடை வேதியனே. (உ)

(ப - ரை) கன்னலே - வெல்லமே! அமுதே - அமிருதமே! வினையேனுடை-பாபம் செய்த என்னுடைய, வேதியனே - வேதத்தால் (ரக்ஷிக்கிறவனாகச்) சொல்லப்பட்டவனே! கார் முகில் வண்ணனே-கறுப்பான மேகத்தினுடைய (மழை காலத்து மேகத்தினுடைய) ஸ்வபாவத்தையுடையவனே! கடல் ஞாலம்-ஸமுத்திரத்தால சூழப்பட்ட பூமியை, காக்கின்ற-(எப்போதும்) ரக்ஷிக்கிற, மின்னு நேமியினாய்-பிரகாசிக்கிற சக்கரத்தையுடையவனே! என்னை, ஆளும் - ஆளுகிற, வன் - பலமுள்ள, கோ - ஸ்வாமிகளான, ஓர் ஐந்து இவை - ஒன்றைப்போல் ஒன்று இல்லாத ஐந்தான இந்த இந்திரியங்களை, பெய்து - (மழைபொழிவதுபோல்) என்னிடத்தில விட்டு, இரா பகல் - ராத்திரியும் பகலும் (எப்போதும்), மோதுவித்திட்டு - மிகவும வேகமாய் அடிக்கும்படிசெய்து, உன்னை, நான், அணுகாவகை-கிட்ட வாராதபடி, செய்து, போதி கண்டாய் - போவாய்.

(கருத்து) நீ உபகாரம் செய்ததாய்ச் சொன்னவை எல்லாம் உண்மையே; வெல்லத்தைப்போலவும் அமுதத்தைப்போலவும் எனக்கு மிகவும் இனியவனாயிருக்கிறாய்; மழைக்காலத்து மேகம் வர்ஷிப்பதுபோல் உதாரனாய் உன்னைச் சேரமுடியாதபடி பாபத்

தைப் பண்ணின எனக்கும் மனதால் அநுபவிக்கும்படி உன்னைக்கூடக் கொடுக்கிறாய; எல்லாரையும ரக்ஷிக்கிறவனாய் வேதத்தால் சொல்லப்படுகிறாய், எல்லா உலகங்களையும் ரக்ஷிப்பதற்கு உபகரணமான மின்னுகிற சக்ராயுதம் உள்ளவனாயிருக்கிறாய். இப்படியெல்லாமிருந்தும் பிரபத்தி பண்ணினபின்பும என்னை ஐந்து இந்திரியங்களின் நடுவிலேயே வைத்திருக்கிறாயே? அவைகள் எனக்கு உட்பட்டு நான சொன்னதைச் செய்யவேண்டியவைகளாயிருக்க, அவைகள் எனக்கு ஸ்வாமியாய் அவைகளுக்குத் திருப்தி செய்யும்படி என்னைச் செய்கின்றனவே. இதற்குத் தகுந்தபடி அவைகளுக்குப் பலமிருக்கிறதே. அவைகள் ஒன்றைப் போல் ஒன்று இல்லாமல் ஆச்சரியமான சக்திகளுள்ளவைகளாயிருக்கின்றனவே. ப்ரஹ்லாதன்மேல் அவன் தகப்பன் பாம்புகளை விட்டதுபோல் அவைகளை என்னிடம் விட்டிருக்கிறாயே. தேங்காயைக் கல்லின்மேல் மோதுவதுபோல் என்னை அவைகளைக் கொண்டு ஹிம்ஸை செய்து ராத்திரியும் பகலும் நான் வருந்தும்படி செய்துகொண்டிருக்கிறாயே. உன் கேள்வி எப்படி சரியானது?

குறிப்பு:—(1) 'அடியார் குழாங்களை என்றுகொல் நான் சேருவதோ' என்று வேண்டினேன். என்னை இந்த இந்திரியங்களுடன் சேர்த்திருக்கிறாயே என்பது 'பெய்து' என்பதின் கருத்து.

(2) 'ஒழிவில் காலம் எல்லாம்' உனக்குக் கைங்கரியம் பண்ண ஆசைப்பட்டேன். ராத்திரியும் பகலும் இவைகளுக்கு வேலை செய்யும்படி செய்திருக்கிறாயே. நான் கேட்ட பலன்கள் நன்றாய்க் கிடைத்திருக்கின்றன—என்பது 'இராப்பகல்' என்பதற்குக் கருத்து.

(இ - ம்) போதி-முன்னிலை ஒருமை வினைமுற்று. அறுகா-அறுகாத: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; கண்டாய்-தேற்றத்தைக் காட்டும் முன்னிலை இடைச்சொல். (2)

---

அவ—'உம்மை இந்திரியங்களுடனே சேர்த்து வைத்திருப்பது துன்பப்படுத்துவதற்காக அன்று; அஃது ஒரு பிரயோஜனத்துக்காக' என்று எம்பெருமான் சொன்னதாக எண்ணி, அதற்குப் பதில் சொல்லுகிறார்:—

வேதி யாநிற்கு மைவ ரால்வினை யேனை மோதுவித் துன்றிருவடிச்
சாதி யாவகைநீ தடுத்தென் பெறுதி யந்தோ
ஆதி யாகி யகலி டம்படைத் துண்டு மிழ்ந்து கடந்தி டந்திட்ட
சோதி நீண்முடியாய் தொண்ட னேன்மது சூதனனே. (௩)

(ப - ரை) ஆதியாகி - உலகத்திற்குக் காரணமாய், அகல் இடம்-விசாலமான பூமியை, படைத்து - உண்டுபண்ணி, உண்டு, உமிழ்ந்து, கடந்து - (த்ரிவிக்ரமனாய் மஹாபலியிட மிருந்து) அளந்து எடுத்துக்கொண்டு, இடந்திட்ட - (வராஹனாய் அவதாரஞ் செய்து அதைப் பிரளய ஜலத்திலிருந்து) கொண்டுவந்த, சோதி நீள் முடியாய் - காந்தியுள்ள நீண்ட கிரீடத்தையுடையவனே! தொண்டனேன் மதுசூதனனே - (உன அநுபவத்தில) சபலமுள்ள என்னுடைய மதுஸூதனனே! வேதியாநிற்கும - துளைத்துக்கொண்டிருக்கும், ஐவரால் - ஐந்து இந்திரியங்களால், வினையேனை - பாபம செய்த என்னை, மோதுவித்து - வேகமாய் அடிபடும்படி செய்து, உன் திருவடி - உன் திருவடிகளை, சாதியா வகை - அடையாதபடி, தடுத்து, நீ என் பெறுதி- நீ என்ன அடையப்போகிறாய்? அந்தோ - ஐயோ!

(கருத்து) உனக்கு இதுவரையில் கிடைக்காமல் இனிமேல் கிடைக்கவேண்டிய பிரயோஜனம் என்ன இருக்கிறது? நீ காந்தியுள்ள நீண்ட கிரீடத்தையுடைய ஸர்வேசுவரனு யிருக்கவில்லையா? அப்படி ஒரு பிரயோஜன மிருந்தாலும், நீயே அதை அடைய முடியாதா? உலகததிறகுக் காரணமாய் விசாலமான இந்தப் பூமியை உண்டுபண்ணி, பிரளயகாலத்தில அதை உனக்குள்ளே வைத்துக்கொண்டு, ஸிருஷ்டி காலததில அதை வெளிப்படுத்தி, த்ரிவிக்கிரமனாய் அதை மஹாபலியிட மிருந்து எடுத்துக்கொண்டு, வராஹமாய் அவதாரம் செய்து பிரளயஜலத்திலிருந்து அதை மேலே கொண்டுவந்து, இப்படி நீ விளையாட வில்லையா? நானோ உன்னை அநுபவிப்பதில் ஆசையுள்ளவனுயிருக்கிறேன். மதுவைக் கொன்றதுபோல் என்னுடைய ப்ரதிபந்தங்களை நீயே தீர்க்க வேண்டியவன். இப்படியிருக்க, ஒரு பாணம் மரத்தைத் துளைப்பதுபோல் ஹிம்ஸை செய்கிற இந்த ஐந்து இந்திரியங்களைக் கொண்டு என்னை மிகவும் துன்பப்படுத்தி உன் திருவடிகளை நான் கிட்டாதபடி செய்கிறாயே. இதனால் உனக்கு என்ன

பிரயோஜனம் உண்டாகும்? உண்டாகுமானால் இதுவேபோதும். ஐயோ! ரக்ஷிக்கவேண்டிய நீ வருத்தப்படுத்துகிறவனாயிருக்கிறாயே? இப்படியாகும்படி நான் பாபம் பண்ணியிருக்கிறேனே.

குறிப்பு:—(1) நீ சக்ரவர்த்தித் திருமகனாயிருந்து பரதாழ்வானைப் பிரித்து வைத்தாய்; அதுவும் உன்னுடைய பிரதிஜ்ஞை நிறைவேறுவதற்காக. என்னைப் பிரித்து வைப்பதனால் என்ன பிரயோஜனம் என்பது 'எனபெறுதி' என்பதின் கருத்து.

(2) எம்பெருமான் திருவாய்மொழியைப் பாடுவதாகிய பிரயோஜனத்தைச் சொல்லவில்லை. இதைச் சொன்னால் அதனால் அதில் பிரீதி செய்யமாட்டார் என்று நினைத்து பொதுவாய் 'ஒரு பிரயோஜனத்துக்கு' என்று சொன்னான். இதை ஆழ்வார் பின்பு தாம் திருவாய்மொழியில் தெரிந்துகொள்ளுவார்.

(இ - ம) வேதியா - வேதித்து வினையெச்சம். பெறுதி - முன்னிலை ஒருமை வினைமுற்று. முடியாய் - முடியான் என்பதின் விளிவேற்றுமை. (3)

---

அவ—கீழ்ப் பாட்டில் தம்மை இங்கே வைத்திருப்பதால் ஒரு பிரயோஜனத்தையும் காணேன் என்று ஆழ்வார் சொன்னார்; தம்மைத் துன்பப் படுத்துவதற்காகவே அங்ஙனம் செய்கிறான் என்று சொல்லுகிறார் :—

சூது நானறி யாவகை சுழற்றியோ ரைவரைக் காட்டி யுன்னடிப்
போது நானணு காவகை செய்து போதிகண்டாய்
யாதும் யாவரு மின்றி நின்னகம் பாலொ டுக்கியோ ராலி னீளிலை
மீதுசேர் குழவி வினையேன் வினைதீர் மருந்தே (4)

(ப - ரை) யாதும் - (அறிவில்லாதவைகளை) ஒன்றையும், யாவரும் - (அறிவுள்ள) எல்லாரையும், இன்றி - (அவைகளில் ஒன்றையும்) விடாமல், நின் அகம்பால் - உனக்கு உள்ளே, ஒடுக்கி - ஒடுங்கப்பண்ணி, ஓர் ஆலின - ஒப்பில்லாத ஆலமரத்தினுடைய நீள் இலை மீது - நீண்டுகொண்டிருக்கிற இலையின் மேலே, சேர் - படுத்துக்கொண்டிருந்த, குழவி-குழந்தையே! வினையேன் வினை - பாபத்தையுடைய என்னுடைய பாபங்களை, தீர் மருந்தே-தீர்ப்

பதற்கு மருந்தா யிருக்கிறவனே! ஓர் ஐவரை - ஒப்பில்லாத ஐந்து இந்திரியங்களை, காட்டி - என்னைப் பார்க்கும்படி செய்து, சூது நான் அறியாவகை - (உன் திருவடிகளை அடைவதற்கு நீயே) உபாயமாயிருப்பதை நான் அறியாதபடி, சுழற்றி - பிரமிக்கச் செய்து, உன் அடி போது - உன் திருவடித் தாமரைகளை, நான் அணுகா வகை - நான் கிட்ட வாராதபடி, செய்து, போதி - போவாய், கண்டாய் - இதில் ஸம்சயமில்லை.

(கருத்து) பிரளய காலத்தில் எல்லாவற்றையும் எல்லாரையும் ஒன்றையும் விடாமல் உனக்குள்ளே ஒடுங்கும்படி செய்து, ஓர் ஆலமரத்தின் நீண்டுகொண்டிருக்கிற இலையின்மேலே சிறு குழந்தையாய்ப் படுத்துக்கொண்டிருந்தாய். ஆகையால், எதையும் செய்ய உனக்குச் சக்தியுண்டு. பாபம் பண்ணின என்னுடைய பாபங்களைப் போக்குவதற்கு ஏற்பட்ட மருந்தாக இருக்கிறாய். இப்படி யிருக்கையில், ஹிம்ஸை செய்வதில் ஒப்பில்லாத ஐந்து இந்திரியங்களை என்னிடம் கொண்டுவந்து விட்டிருக்கிறாய். இதைப் பார்க்கும்போது உன்னையடைவதற்கு நீயே உபாயமென்பதையும் நான் மறந்துபோகும்படி கலங்கி உன் திருவடித் தாமரைகளைக் கிட்டாதபடி நீ செய்துகொண்டிருக்கிறாய் என்று எனக்குத் தோன்றுகிறது. இப்படிச் செய்து எனக்குத் தோன்றாதபடி போகப் பார்க்கிறாய். இதில் ஸந்தேஹமில்லை.

குறிப்பு:—(1) 'ஓர் ஆலின்' என்பதில 'ஓர்' என்பதற்கு இஃது என்ன இடத்தில் முளைத்து வந்தது என்று அறிய முடியவில்லை என்பது கருத்து.

(2) நீளிலை-நீண்டுகொண்டிருக்கிற இலை; அதாவது சின்ன இலை.

(3) 'வினையேன்' என்பதற்கு என்னை அறிவதற்குப் பாபமே அடையாளம். அப்படி அவைகள் என்னிடம் மிகுந்திருக்கின்றன என்பது கருத்து. (4)

---

நித்தியஸூரிகளுடனேகூட இருந்து அவர்களுக்கு வேண்டியவைகளைச் செய்கிறவனே! என்னை உன் திருவடிகளுக்கு அடிமையாக்கிக் கொள்ளவேண்டும்.

குறிப்பு -(1) "ஹா ராமனே! ஹா லக்ஷ்மணனே! ஹா ஸுமித்ரையே! ஹா ராமனுடைய தாயே!" என்று அசோகவனத்திலிருந்த ஸீதை கதறினதுபோல், ஆழ்வாரும் தமக்கு உறவாயிருக்கும் நித்தியஸூரிகளையும் அவர்களுக்குத் தலைவனான எம்பெருமானையும் கதறிக் கூப்பிடுகிறார் என்பது 'ஓ' என்பதின் கருத்து.

(இ - ள்) நெகிழ்ப்பான் : வினையால் அணையும் பெயர். அறுத்தாய் : வினையாலணையும் பெயரின் விளிவேற்றுமை. 'ஓ' துக்கத்தைக்காட்டும் இடைச்சொல். (5)

---

விண்ணு ளாரபெரு மாற்க டிமைசெய் வாரை யுஞ்செறு மைம்பு
[லனிவை
மண்ணு ளேன்னைப்பெற் றலென்செய்யா மற்று நீயும்விட்டால்
பண்ணு ளாய்கவி தன்னு ளாய்பத் தியுனுள் ளாய்பர மீசனே
[வந்தேன்
கண்ணுளாய் நேஞ்சுளாய் சொல்லு ளாயோன்று சொல்லாயே. (௬)

(ப - ரை) விண்ணுளார் பெருமாற்கு - வைகுந்தத்திலிருக்கிறவர்களுக்கு ஸ்வாமியான புருஷோத்தமனுக்கு, அடிமை செய்வாரையும் - அடிமை செய்துகொண்டிருக்கிறவர்களையும், செறும் - ஹிம்ஸிக்கும்படியான, இவை ஐம்புலன் - இந்த ஐந்து விஷயங்கள், மண்ணுள் - பூமியில், என்னைப் பெற்றால - என்னை அடைந்தால், மற்று - இது தவிர, நீயும், விட்டால் - (என்னை) விட்டுவிட்டால், என் செய்யா - என்ன துன்பங்களைச் செய்ய மாட்டா, பண் உளாய் - கானத்திலிருப்பவனே! கவிதன் உள்ளாய் - என் சொற்களான பாட்டுக்குள்ளே இருக்கிறவனே! பத்தியின் உள்ளாய் - பக்தியிலிருக்கிறவனே! என் கண்ணுள்ளாய - என்னுடைய கண்களிலிருக்கிறவனே! நெஞ்சுஉளாய் - மனத்திலிருக்கிறவனே! சொல் உளாய் - வாக்கிலிருக்கிறவனே! பரம ஈசனே - எல்லாம் தெரிந்தவனும் ஸர்வேச்வரனுமாயிருக்கிறவனே! வந்து - (எனக்காக நான்கு அடிகள்) வந்து, ஒன்று

சொல்லாயே-(உம்மை என் திருவடிகளில் சேர்க்கிறேன், அல்லது செய்ய முடியாது என்கிற இந்த இரண்டில்) ஒன்றைச் சொல்ல வேண்டும்.

(கருத்து) சப்தம் முதலான விஷயங்களின் வலிமை எவருக்குந் தெரியாது? வைகுந்தத்தில் உனக்குக் கைங்கரியம் செய்கிற நித்திய ஸூரிகளையும் அவைகள் மயக்குகின்றனவே. இந்தப் பூமியோ அவைகளுக்குத் தங்கள் வேலையைச் செய்வதற்குத் தகுந்த இடமாக இருக்கிறதே. எனக்கோ அவைகளை ஜயிக்கச் சக்தியில்லை. ரக்ஷிக்கவேண்டிய நீயும் என்னைக் கைவிட்டால் அவைகள் என்னை லக்ஷியமாக வைத்துக்கொண்டு என்ன துன்பங்களைச் செய்யமாட்டா. இந்த என்னுடைய இருப்பு உனக்குத் தெரியாதா? இந்த ஹிம்ஸை என்னால் ஸஹிக்கமுடியவில்லை. நீ என்னுடைய கானத்திலும், அதோடு பாடுகிற பாட்டுக்களிலும், பக்தியிலும், கண்களிலும், வாக்கிலும், மனதிலுமிருக்கிறாயே. என்னுடைய வருத்தத்தோடு கூப்பிடுகிற என் குரலையும், என் பாட்டுக்களையும் நீ கேட்கவில்லையா? பக்தியையும், கண்களும் வாக்கும் மனதும் உன்னைக் காணப்பெறாமல் விடாய்த்திருப்பதையும நீ அறியவில்லையா? ஆகையால் எல்லாம் அறிந்தவனும் எதையும் செய்யச் சக்தியுள்ளவனாயிருக்கிற நீ நாலடி வந்து, இந்த என்னுடைய துக்கமெல்லாம் போகும்படி என்னை உன்னிடம் சேர்த்துக்கொள்ளுகிறேன் என்று சொல்லு. அல்லது, இதைச் செய்ய முடியாது. நீர் வீண் ஆசையை விட்டு விடும் என்று சொல்லு.

குறிப்பு:—(1) விஷயங்கள் நித்தியஸூரிகளையும் மயக்கும் என்பதற்கு உதாரணம்.—ஸூமுகன் என்னும் பாம்பின் கதை இந்திரன் ஸாரதியான மாதலிக்காக அதை ரக்ஷிப்பதாக ஒப்புக்கொண்ட எம்பெருமானிடம் நித்தியஸூரியான கருடன் அதைத் தின்ன ஆசைப்பட்டு சண்டைக்குப் போனான். இந்தக் கதையைப் பாரதத்தில் உத்தியோக பர்வத்தில் பார்க்கலாம்.

(இ-ம்) செய்யா: எதிர்மறைப்பன்மை வினைமுற்று. உளாய் என்கிற சொற்கள்: வினையாலணையும் பெயர்களின் விளிவேற்றுமைகள்; உள்ளவனே என்பது பொருள். சொல்லாய்: முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்று. (6)

அவ—"விஷயங்கள் என்னைத் துன்பப்படுத்தும் என்று சொல்லுகிறீரே; இவைகளில் உம்முடைய இந்திரியங்கள் படியாத படி அவைகளை ஜயிக்கமாட்டீரோ?" என்று எம்பெருமான் கேட்டதாக நினைத்துப் பதில் சொல்லுகிறார்:—

ஒன்று சொல்லி யொருத்தனி னிற்கி லாத வோரைவர் வன்க
என்று யான்வெல் கிற்பனுன் றிருவரு ளில்லையேல் [யவரை
அன்று தேவ ரசுரர் வாங்க வலைகட லரவ மளாவியோர்
குன்றம் வைத்தவெந் தாய்கொடி யேன்பரு கின்னமுதே. (எ)

(ப-ரை) அன்று - அப்போது (திருப்பாறகடலைக் கடைந்தபோது), தேவர் - தேவர்களும், அசுரர் - அஸுரர்களும், வாங்க - கைவாங்க (கடைய முடியாமல இருக்க), அலை கடல் - அலைகளோடு கூடிய ஸமுத்ரத்தில், அரவம் - (வாஸுகி என்கிற) பாம்பை, அளாவி - சுற்றி, ஓர் குன்றம் - (மந்தரமென்கிற) ஒரு மலையை, வைத்த - (கடையுமபடி) நிறுத்தின, எந்தாய் - ஸ்வாமியே! கொடியேன் - பாபம் பண்ணின நான், பருகு இன் அமுதே - குடிக்கும்படியான (அநுபவிக்கும்படியான) இனிமையான அமிருதமே! ஒன்று சொல்லி - ஒரு வார்த்தையைச் சொல்லி, ஒருத்தனில் - ஒரு வழியில், நிற்கிலாத - நிற்கமாட்டாதவைகளான, ஓர் - ஒப்பில்லாத, ஐவர் - ஐந்து இந்திரியங்களாகிற, வன் கயவரை - பலமான கீழ்மக்களை, நின் திரு அருள் இல்லையேல் - உன்னுடைய கிருபை இல்லாவிட்டால், என்று-எப்போது, வெல்கிற்பன்-நான் ஜயிக்கச் சக்தியுள்ளவன்?

(கருத்து) என்னாலே இந்திரியங்களை ஜயிக்கமுடியுமா? அவைகள் ஒன்றிலே ஆசையை உண்டுபண்ணி, அதைச் சம்பாதித்து அநுபவித்துக்கொண்டிருக்கும்போதே, அந்தப்பிரகாரம் இல்லாமல் வேறு ஒன்றில் ஆசையை உண்டுபண்ணிக்கொண்டிருக்கிறவைகள் அன்றோ? அந்தப் பலமுள்ள துன்பப்படுத்துகிற கீழ்மக்களை உன் கிருபையில்லாமல் என்னால் ஜயிக்கமுடியுமோ? தேவர்களும் அஸுரர்களும் திருப்பாற்கடலைக் கடைய ஆரம்பித்து, அதைச் செய்யமுடியாமல் நிற்கையில், மந்தரம் என்கிற ஒரு மலையை அந்த ஸமுத்ரத்தில் வைத்து, அதில வாஸுகியைச் சுற்றி அவர்கள் அதைக் கடையும்படி செய்தாய்.

மங்கள், என - என்கிற, பல பொருள் - பல வஸ்துக்களை, முதல்-முதலில் (ஸ்ருஷ்டி காலத்தில்), படைத்தாய் - உண்டுபண்ணினவனே! என் கண்ணா - என் கண்ணனே! எம் பரஞ்சுடரே-என்னுடைய பரஞ்ஜ்யோதிஸ் என்று சொல்லப்பட்டவனே! குலம் முதல் - குலத்துக்கு முதலானவர்களையும். அடும் - துன்பப்படுத்தும், தீ வினை-க்ரூரங்களான பாபங்களாகிற, கொடு வல் - கொடுமையான பலமுள்ள, குழியினில் - பள்ளத்தில், வீழ்க்கும் - விழும்படி செய்யும், ஐவரை - ஐந்து இந்திரியங்களை, வலம் - பலத்தை, முதல் - முதலோடு, கெடுக்கும் வரம் - நாசம் பண்ணுவதாகிய நான் கேட்கும் வரத்தை, தந்தருள் - கொடுத்து அருளவேண்டும், கண்டாய்-இதைக் கட்டாயம் செய்யவேண்டும்.

(கருத்து) பூமி முதலான எல்லா உலகங்களையும் அவைகள் நிரம்புவதற்காக ஸ்தாவரங்கள் ஜங்கமங்கள் என்கிற எல்லா வஸ்துக்களையும் உன் ஸங்கல்பத்தாலேயே ஸ்ருஷ்டி காலத்தில் உண்டு பண்ணினாய்; கண்ணனாய் அவதாரம் செய்து ஆச்ரிதர்கள் வேண்டினதைச் செய்து அவர்களின் விரோதிகளை நாசம் செய்தாய்; எனக்கு போக்யமான உயர்ந்த காந்தியையுடையவனே! மிகவும் கோரமும் ஆழமுள்ளதும் அதைவிட்டு வெளியே ஏற முடியாததுமான ஒரு பள்ளத்தில் ஒருவனை விழும்படி செய்வதுபோல், பொறுக்கமுடியாத துன்பங்களையுண்டுபண்ணும் க்ரூர கர்மங்களை ஒருவனுக்குச் செய்வித்து அவனை அவனுடைய குலத்துக்கு முதலாயிருப்பவர்களுள்பட ஹிம்ஸை செய்யும் இந்த ஐந்து இந்திரியங்கள். அவைகளின் பலத்தை அதற்குக் காரணத்துடன் நீ நாசம் செய்யவேண்டும் என்கிற வரத்தை நான் கேட்கிறேன். அதை நீ கட்டாயம் செய்தருளவேண்டும்.

குறிப்பு :—(1) ஸ்ருஷ்டி காலத்தில் எம்பெருமானைத் தவிர ஒன்றுமில்லாமையால் உலகத்தை உண்டுபண்ணினது ஒரு ஸஹாயமுமில்லாமல் தானாகவே தன் ஸங்கல்பத்தாலேயே செய்தான் என்பது 'முதல்' என்பதின் கருத்து.

(2) 'என் கண்ணா' என்கிற இடத்தில் க்ருஷ்ணனாக அவன் அவதாரம் செய்ததும், அப்போது அவன் செய்த லீலைகளும் தமக்காக என்று ஆழ்வார் எண்ணுகிறார் என்பது 'என்' என்பதின் கருத்து. (9)

அவ—கீழ்ப் பாட்டில் ஆழ்வார் வேண்டினபடி எம்பெருமான் உடனே செய்யவில்லை. அதனால் மிகுந்த வருத்தத்தை அடைந்து இதில் அவனைக் கூப்பிடுகிறார்.

என்பரஞ் சுடரே யென்றுன்னை யலற்றி யுன்னிணைத் தாமரைகட்கு
அன்புருகி நிற்கு மதுநிற்கச் சுமடு தந்தாய்
வன்ப ரங்க ளெடுத்தைவர் திசைதிசை வலித்தெற்று கின்றனர்
முன்ப ரவைகடைந் தமுதங் கொண்ட மூர்த்தியோ. (௧0)

(ப - ரை) முன்-முன்காலத்தில், பரவை-(திருப்பால்) கடலை, கடைந்து, அமுதம் கொண்ட-அமிருதத்தை எடுத்துக்கொண்ட (தேவர்களுக்கு அதைக் கொடுத்த), மூர்த்தி - ஸ்வாமியே! என் பரம சுடரே - என்னுடைய பரமஜ்யோதியே! என்று உன்னை, அலற்றி - அடிக்கடி சொல்லி, உன் - உன்னுடைய, இணை தாமரைகட்கு - ஒன்றுக்கொன்று ஒப்பான திருவடித் தாமரைகளில், அன்பு - ஆசையாலே, உருகி நிற்குமது - நான் உருகி இருக்கவேண்டியது; நிற்க - அஃதிருக்கட்டும், சுமடு தந்தாய் - (உடம்பாகிய) சும்மாட்டை எனக்குக் கொடுத்திருக்கிறாய், ஐவர்- ஐந்து இந்திரியங்கள், வன் - பலமான, பரங்கள் - பாரங்களை (விஷயங்களை), எடுத்து - எடுக்கும்படி செய்து (என் தலைமேல் ஏற்றி), திசை திசை - ஒவ்வொரு திக்கிலும், வலித்து-இழுத்து, எற்றுகின்றனர் - அடிக்கின்றனர், ஓ!

(கருத்து) ஆச்ரிதர்களுக்கு வேண்டியதைச் செய்கிறவனும், அது செய்யும் திறமையுள்ளவனுமாகி, திருப்பாற்கடலைக்கடைந்த காலத்தில் அதிலிருந்து உண்டான அமுதத்தை அஸுரர்களுக்கிலொமல் தேவர்களுக்கே கொடுத்த ஸ்வாமியே! என்னுடைய பரம் ஜ்யோதியே என்று உன்னை அடிக்கடி சொல்லி, உன் இரண்டு திருவடித் தாமரைகளில் ஆசையால் நான் உருகியிருக்க வேண்டியது. அதுதான் எனக்கு ஸ்வரூபம். அஃதிருக்கட்டும். ஒரு சும்மாட்டைப்போல் எனக்கு உடம்பைக் கொடுத்திருக்கிறாய். அதில் விஷயங்களாகிய தூக்கமுடியாத பாரங்களை ஐந்து இந்திரியங்கள் ஏற்றி மூலைக்கு ஒன்றாய் இழுத்து என்னைத் துன்பப்படுத்துகின்றன. ஒரு ராஜகுமாரன் தலையில் கிரீடத்தைவைக்க வேண்டியதைவிட்டு, ஒரு சும்மாட்டை வைத்து அதன்மேலே

தூக்கமுடியாத பாரத்தை வைத்து நாலுபேர்கள் மூலைக்கு ஒருவனாய் இழுப்பதுபோலிருக்கிறது என்னுடைய இருப்பு. சுமை தூக்கமுடிந்ததாயும், என்னை இழுக்கிறவன ஒருவனாயும், இழுப்பதும ஒரு திக்காயுமிருந்தால் கொஞ்சம பொறுக்கலாம; அப்படி இல்லை. சுமையோ தூக்கமுடியாதது. இழுப்பவர்களோ ஐந்துபேர்கள்; அவர்கள் மூலைக்கு ஒருவராய இழுக்கிறார்கள். ஐயோ! நான் என்ன செய்வேன். (10)

---

கொண்ட மூர்த்தியோர் மூவராய்க் குணங்கள் படைத்த ளித்துக் [கெடுக்குமப்
புண்டரீகக் கொப்பூழ்ப் புனற்பள்ளி யப்பனுக்கே தொண்டர்
தொண்டா தொண்டர் தொண்டன் சடகோபன் சொல்லா யிரத்து [ளிப்பத்துங்
கண்டு பாட வல்லார் வினைபோங் கங்குலும் பகலே. (கக)

(ப - ரை) குணங்கள் கொண்ட மூர்த்தி - (ஸத்துவம் ரஜஸு தமஸு என்கிற) மூன்று குணங்களைக்கொண்ட உடம்பையுடையவர்களான, ஓர் மூவராய் - ஒப்பில்லாத (பிரம்மா விஷ்ணு ருத்திரன்) என்கிற மூன்று பேர்களாய், படைத்து - (உலகங்களை) உண்டுபண்ணி, அளித்து - ரக்ஷித்து, கெடுக்கும் - நாசம் செய்கிறவனும், அ புண்டரிகம் கொப்பூழ் - அந்த (பிரம்மா உண்டாவதற்கு இடமாயிருந்த) தாமரையை உந்தியில் உடையவனும், புனல் பள்ளி - (திருப்பாற்கடலாகிய) ஜலத்தைப் படுக்கையாக உடையவனும் ஆன, அப்பனுக்கு - உபகாரம் செய்கிற எமபெருமானுக்கு, தொண்டர் - எவர் தாஸர்களோ, தொண்டர் - அவர்களுக்கு எவர் தாஸர்களோ, தொண்டர் - அவர்களுக்கு எவர்கள் தாஸர்களோ, தொண்டன் - அவர்களுக்குத் தாஸனான, சடகோபன் சொல்லாயிரத்துள், இ பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், கங்குலும் பகலும் - ராத்திரியிலும் பகலிலும், கண்டு பாட வல்லார் - அவைகளின் கருத்தை அறிந்து கானத்துடன் சொல்லச் சக்தியுள்ளவர்களுடைய, வினை போம் - பாபங்கள் போகும்.

(கருத்து) எம்பெருமான் ரஜஸு என்கிற குணமுள்ள உடம்பையுடைய பிரம்மாவுக்குள்ளேயிருந்து உலகங்களை உண்டு

பண்ணுகிறான். ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ள திருமே
னியை எடுத்துக்கொண்டு, விஷ்ணுவாய் அதை ரக்ஷிக்கிறான்.
தமஸு என்கிற குணமுள்ள உடம்பையுடைய ருத்திரனுக்கு
உள்ளேயிருந்து அதை அழிக்கிறான். பிரமமா உண்டாவதற்கு
இடமான தாமரைப்பூவை உந்தியில வைத்துக்கொண்டிருக்
கிறான். எல்லாருடைய குறைகளையும் கேட்டு அவைகளுக்குப்
பரிஹாரம் செய்வதற்காக திருப்பாற்கடலில் பள்ளிகொண்டு
இருக்கிறான். இப்படிப் பலவிதமாய் உபகாரங்களைச் செய்த
எம்பெருமானுடைய கருணை முதலிய குணங்களை அநுபவித்து
அவனுக்குத் தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டனான
ஆழ்வார் அருளிச்செய்ததும் அந்தக் குணங்களையே பிடித்துக்
கொண்டு கூப்பிட்டதுமான இந்தப் பத்துப் பாட்டுக்களை அவை
களின் கருத்துக்களை அறிந்து எப்போதும் பாடச் சக்தியுள்ள
வர்களுடைய கர்மங்கள் போய்விடும்.

குறிப்பு :—(1) மிகுந்த தாபம் எடுத்தவன் குளிர்ந்த தடாகத்
தில் மூழ்கி அதில் அடியிலிருப்பதுபோல் ஆழ்வாருக்கு இந்திரி
யங்களாலும் விஷயங்களாலும் உண்டான துன்பம் போகும்படி
சேஷத்வத்தின் எல்லை நிலத்தில தாமிருப்பதாகச் சொல்லுகிறார்.
சேஷத்வம் என்பது—மேற்பட்ட ஒருவனுக்காகவே இருந்து
அவனுக்கு வேலை செய்து அவனை ஸந்தோஷப்படுத்துவது. இஃது
உள்ளவர்கள் எம்பெருமானுடைய தொண்டர். அவர்களுக்கு
இதைச் செய்கிறவர்கள் அவருடைய தொண்டர். அவருக்கு
இதைச் செய்கிறவர்கள் அவர்களுக்குத் தொண்டர் அவர்களுக்கு
இதைச் செய்கிற தம்மை அவர் தொண்டன் என்று ஆழ்வார்
தம்மைச் சொல்லுகிறார்.

(2) 'கங்குலும் பகலும்' என்பதை 'வினை' என்கிற
சொல்லுடன் சேர்த்து எப்போதுமிருக்கிற வினைகள். என்றும்
பொருள்கொள்ளலாம். இப்படியே வியாக்யானம். (11)

நிஸ்ஸம்க்யாஸ்சர்யயோகாதிமதுரதயா ஜகத்கார
ணத்வாத் ஸ்வாந்தஸ்தாண்டத்வஹேதோ: ஸகலபதிதயா ஸ்வார்த்த
ஸூரிநாத: | ஸ்வீயேஷ்டஸ்தாநாத்யைர்விஶ்வதிஷ்டயா
லோகஸம்ரக்ஷணாத் ஸ்வாஸ்ரிதாஸ்ரிதாநாம் ஸ்வஹேத ஸ்வகநாஸ
ஸம்ரஹேதுர்ஹ விஞ்ஞாதிகஸ்ய || ||அக||

---

இந்தத் திருவாய்மொழியில் த்ரிமூர்த்தியாயும் அஸுரர்களை நாசம் செய்கிறவனுமிருக்கிற எம்பெருமான் தன்னை ஆச்ரயித்தவர்கள் தன்னை வஞ்சனை செய்கிறவனாக நினைக்கப்படுவதைப் பத்துக் காரணங்களால் பொறுத்துக்கொள்ளுகிறான் என்பது சொல்லப்படுகிறது. அவைகளாவன.—(1) எண்ணமுடியாத ஆச்சரியங்களுள்ளவனாயிருப்பது; (2) மிகவும இனியவனாயிருப்பது; (3) உலகத்துக்குக் காரணமாயிருப்பது; (4) எல்லா உலகங்களையும வயிற்றில வைத்துக்கொண்டிருந்தாலும் ஒரு சிறு ஆலிலையில் படுத்துக்கொள்ளத் தகுந்தவனாயிருந்தது; (5) நித்தியஸூரிகளின் தலைவனாயிருப்பது; (6) வாக்கிலும் மனதிலுமிருப்பது; (7) தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தது முதலானவைகள்; (8) எல்லாருக்கும் ஸ்வாமியாய் இருப்பது; (9) உலகத்தை ரக்ஷிப்பது; (10) ஆச்ரிதர்களுக்குத் தன் அழகைக் காட்டி அவர்கள் அதை அநுபவிப்பதாகிய உபகாரத்தைச் செய்வது. (81)

---

# இரண்டாம் திருவாய்மொழி.

---

அவ—ஆரும்பத்து பத்தாம திருவாயமொழியில் திருவேங்கடமுடையானிடத்தில் ஆழ்வார் ப்ரபத்தி பண்ணினுர். அதைச் செய்தும் தம்முடைய பிரகிருதி ஸம்பந்தம் போகவில்லை. அஃது எமபெருமானைப் பூர்ணமாய் அநுபவிப்பதறகு இடையூரு யிருப்பதைப் பார்ததார். மிகுந்த வருதத முண்டாயிற்று. இனி மேல, கோயிலில் (ஸ்ரீரங்கத்தில) பெரியபெருமாளிடம போனுல் தான், தம்முடைய வருததமெல்லாமபோகும் என்று நினைத்து, அங்கே போய் அவன் திருவடிகளில விழுந்தார். அங்கேயும் அவ னுடைய கடாக்ஷம் கிடைககவில்லை.

(2) சக்ரவர்ததித் திருமகன் மிகுந்த கருணையுள்ளவனுய் மனிதர்களுககுத் துக்கமுண்டானபோது தானும் மிகுந்த துக்கத்தையடைந்தான். அவன் ஸ்ரீரங்கநாதனுடைய குணங்களைக் கண்டு அவனுககு அடிமையாகி அவனைப் பரதேவதையாக நினைத்து ஆராதநம் பண்ணினபடியால் அவனே அதிக கிருபை உள்ளவன், அவனுல் தமமுடைய வருத்தம எல்லாம் போகும் என்று நினைதது ஆழ்வார் அவனிடம போனுர்.

(3) எம்பெருமானும், 'ஆழ்வாருடைய பாட்டுக்கள் அமுதம்போலினியவைகளாய் ஸமஸாரமாகிய காட்டுத்தீயால் பொசுக்கப்பட்டுககொண்டிருக்கிற ஜீவன்களுககுத் தாபத்தைப் போககி அவர்களுக்கு ஜீவனத்தை உண்டுபண்ணுகின்றன ; இவர் இந்தப் பிரபந்தத்தை முடிககவேண்டும ; அவருக்கு அதுவரையில எப்படி ஆறுதலைச் செய்கிறது?' என்று நினைததுக்கொண்டிருந்தான். ஆழ்வார் இதையறியாமல், அவன் தன்னைக் கவனிக்கவில்லை என்று எண்ணி மிகவும் துக்கப்பட்டு மோஹததை யடைந்தார். இதை அவரைச் சேர்ந்தவர்கள் பெரியபெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து முறையிட்டார்கள். அதைத் திருத்தாயார் பேச்சாகப் பேசுகிறுர்.

(4) இவருடைய துக்கத்தைப்பார்த்த திருத்தாயார் இவரைக்காட்டிலும் அதிக துக்கமுள்ளவளாய், இவருடைய இருப்

யைப் பெரியபெருமாளுக்குக்காட்டி, இவர் செய்யும் வேலைகளைச் சொல்லி, 'இவரைப்பற்றி என்ன செய்யப்போகிறாய்?' என்று கேட்கிறாள் :—

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

கங்குலும் பகலுங் கண்டுயி லறியாள்
  கண்ணநீர் கைகளா லிறைக்குஞ்
சங்குசக் கரங்க ளென்றுகை கூப்புந்
  தாமரைக் கண்ணென்றே தளரும்
எங்ஙனே தரிக்கே னுன்னைவிட் டென்னு
  மிருநிலங் கைதுழா விருக்குஞ்
செங்கயல் பாயநீர்த் திருவரங் கத்தா
  யிவடிறத் தென்செய்கின் றாயே. (௧)

(ப - ரை) கங்குலும் பகலும் - ராத்திரியும் பகலும், கண் துயில் - கண்களில் தூக்கத்தை, அறியாள் - அறியவில்லை, கண்ண நீர் - கண்களுடைய நீரை, கைகளால், இறைக்கும் - இறைக்கிறாள், சங்கு, சக்கரங்கள், என்று, கைகூப்பும் - கைகளைக் கூப்புகிறாள், தாமரைக்கண், என்றே - இவ்வளவே சொல்லி, தளரும் - தளர்ச்சியை அடைகிறாள், உன்னைவிட்டு எங்ஙனே தரிக்கேன் - எப்படிப் பிழைத்திருப்பேன்? என்னும் - என்று சொல்லுகிறாள், இரு நிலம் - பெரிய பூமியை, கை துழா இருக்கும் - கைகளால் தடவிக்கொண்டிருக்கிறாள், செம் - சிவந்த, கயல் - மீன்கள், பாய - (ஸந்தோஷத்தாலே இங்கும் அங்கும்) குதித்துக்கொண்டிருக்கிற, நீர் - ஜலத்தையுடைய, திரு அரங்கத்தாய் - ஸ்ரீரங்கத்திலிருக்கிறவனே! இவள்திறத்து - இவள் விஷயத்தில், என் செய்கின்றாய் - என்ன செய்கிறாய்?

(கருத்து) இவளுக்குப் பகலிலும் ராத்திரியிலும் தூக்கமில்லை. நாயகனுடன் சேர்ந்திருப்பதின் ரஸத்தை அறியாதிருந்தால் ஊராரைப்போல் ராத்திரியில் தூங்கலாம். நாயகனுடன் சேர்ந்திருப்பதின் ரஸத்தை அநுபவித்துக்கொண்டிருந்தால், ராத்திரியில் விழித்துக்கொண்டிருந்து பகலில் தூங்கலாம். இவள் உன்னுடன் சேர்ந்திருப்பதின் ரஸத்தை அறிந்திருக்கிறபடியாலும், அந்த ரஸம் இப்போது கிடையாமையாலும் தூக்கம் அதிகப்

பட்டு பகலிலும் தூங்குவதில்லை ; ராத்திரியிலும் தூங்குவதில்லை. ஊற்றில் ஜலம் ஊறுவதுபோல் அவள் கண்களிலிருந்து நீர் ஊறிக்கொண்டே இருக்கிறது. இப்படி வருத்தப்படுகிற தசையில் நீ வராமலிருக்க மாட்டாய் என்று நினைத்து உன்னைப் பார்ப்பதற்காக அந்தக் கண்ணீரை, ஊறுகிற ஜலத்தைத் தடடாலே இறைப்பதுபோல் தன் கைகளால் இறைத்துக்கொண்டிருக்கிறாள் ஸமுத்ர ஜலத்தை இறைப்பதுபோல இது முடியாத வேலையென்று சிறு பெண்ணாகையால் அறியவில்லை. 'சங்கு சக்கரங்களை ஏந்திக்கொண்டு வரவேண்டும்' என்று சொல்ல ஆரம்பித்து, 'சங்கு சக்கரங்கள்' என்று சொல்லி மேலே சொல்லமுடியாமல் அந்த வேண்டுதலைக் கைகளைக் கூப்பி அறிவிக்கிறாள். உன் தாமரைக் கண்களாலே குளிரக் கடாக்ஷிக்க வேண்டுமென்று சொல்ல நினைத்து, 'தாமரைக்கண்' என்று மாத்திரம் சொல்லி மேலே சொல்லமுடியாமல் தளர்ச்சியையடைகிறாள். 'மிகவும் இனிதான கண் அழகுள்ள உன்னைவிட்டுப் பிரிந்திருந்து ஒருவிதமாயும் தரித்திருக்கமுடியாது. நீ ருசியமான விஷத்தைச் சாப்பிட்டவன் தரித்திருக்க முடியுமோ?' என்கிறாள். இப்படிச் சொல்லியும் நீ வரவில்லை. தன்னுடைய தாபம் போவதற்காகக் கைகளாலே பூமியைத் தடவிக்கொண்டிருக்கிறாள். இளமையால் சிவந்த கயல் மீன்கள் ஸந்தோஷத்தாலே அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கிற ஜலம்நிறைந்த ஸ்ரீரங்கத்தில் இவளுக்காகவே வந்திருக்கிறவனே! இவள் இருப்பைக் கடாக்ஷித்தருள வேண்டும். இவள் விஷயத்தில் என்ன செய்ய நினைத்திருக்கிறாய்? மீன்களுள்பட எல்லாரும் ஸந்தோஷப்படுகையில இவள் மாத்திரம் துக்கப்படலாமா?

குறிப்பு.—'இவள் திறத்து' என்கிறவிடத்தில், 'இவள்' என்கிற சொல்லாலே தண்டகாரண்யத்தில் ருஷிகள் ராக்ஷஸர்கள் தின்ற உடம்புகளை ராமனுக்குக் காட்டினதுபோல் ஆழ்வாருடைய இருப்பை எம்பெருமானுக்குத் தாயார் கையால காட்டுகிறாளென்பதும், அதை வாயால் சொல்ல முடியாதென்பதும் கருத்து.

(இ - ம) துழா - துழாவி : கடைக்குறை. திருவரங்கத்தாய் : விளிவேற்றுமை. (1)

என்செய்கின் றாயென் றாமரைக் கண்ணா
வென்னுங்கண் ணீர்மல்க விருக்கும்
என்செய்கே னெறிநீர்த் திருவரங் கத்தா
யென்னும்வெவ் வுயிர்த்துயிர்த் துருகும்
முன்செய்த வினையே முகப்படா யென்னும்
முகில்வண்ணா தகுவதோ வென்னும்
முன்செய்திவ் வுலக முண்டுமிழ்ந் தளந்தா
யென்கொலோ முடிகின்ற திவட்கே. (உ)

(ப-ரை) என் தாமரைக் கண்ணா! என்செய்கின்றாய் என்னும் - என்ன செய்கிறாய் என்று சொல்லுகிறாள், கண் நீர் மல்க - கண்ணீர் பெருகும்படி, இருக்கும் - இருக்கிறாள், எறி நீர் - எறிகிற (அலைகளாக மேலே கிளம்புகிற) ஜலம் நிறைந்த, திருவரங்கத்தாய் - ஸ்ரீரங்கத்திலிருக்கிறவனே! என் செய்கேன் - நான் என்ன செய்வேன், என்னும் - என்று சொல்லுகிறாள், வெம்மை உயிர்த்து உயிர்த்து - உஷ்ணமாக மூச்சுவிட்டு விட்டு, உருகும் - உருகுகிறாள், முன் செய்த - முற்பிறப்பில் நான் செய்த, வினையே - ஏ கர்மமே! முகப்படாய் என்னும் - என் கண்ணுக்கு முன்னாலே வந்து நிற்க வேண்டும் என்று சொல்லுகிறாள், முகில் வண்ணா - மேகத்தின் ஸ்வபாவத்தையுடையவனே! தகுவதோ என்னும் - இது உனக்குத் தகுந்ததோ என்று சொல்லுகிறாள், முன் - முற்காலத்தில், இ உலகம் - இந்த உலகத்தை, செய்து - உண்டுபண்ணி, உண்டு, உமிழ்ந்து, அளந்தாய் - (திரிவிக்கிரமனாய்) அளந்து எடுத்துக்கொண்டவனே! இவட்கு - இவளுக்கு, முடிகின்றது - முடியப்போவது, என்கொலோ - என்னவோ?

(கருத்து) 'தாமரைப் பூப்போன்ற திருக்கண்களின் அழகாலே என்னை அடிமையாக்கிக்கொண்டவனே! அந்தக் கண்களால் என்னைக் குளிர கடாக்ஷிக்கப்போகிறாயா? அல்லது இல்லையா?' என்று சொல்லுகிறாள். இதை நீ உடனே செய்யவில்லை. அதினாலுண்டான தாபத்தாலே கண்களில் பெருகும் ஜலமானது சோஷித்து கரைகட்டப்பட்ட ஸமுத்ரத்தைப்போல கண்ணுக்குள்ளேயேயிருக்கிறது. ஒரு வேலையையும் செய்யச் சக்தியில்லாதவளாய் இருக்கிறாள். 'என்னுடைய தாபம் போவதற்காகத் தானே ஸ்ரீரங்கத்தில் நித்தியவாஸம் பண்ணுகிறாய்; இப்படி

மன்னிடம் வருவதற்கு ஸௌலப்யமிருக்கிற நீ என்னிடம் வரா விட்டால், நான் இந்தத் தாபத்தை எப்படிப் பொறுப்பேன்?" என்று சொல்லுகிறாள். இந்தத் தாபத்தால் அடிக்கடி உஷ்ணமாய் பெருமூச்சுவிட்டு நெருப்பிலைவத்த மெழுகைப்போல் உருகுகிறாள் "இப்படி நான் வருந்தப்படும்படி என்ன பாபங்களை முன் ஜன்மத்தில் செய்தேனோ! மிகுந்த கருணையுள்ள உன்னையும் வரவொட்டாமல் தடுப்பதால் அவைகள் மிகுந்த பலமுள்ளவைகளாயிருக்கவேண்டும். இப்படிப்பட்ட பாபங்களே! என் முன்னாலே தோன்றவேண்டும்" என்று சொல்லுகிறாள். "மேகம்போல் ஒரு வியாஜமில்லாமலே எவருக்கும் வேண்டியதைச் செய்கிற பரமோபகாரனே! என்னை இப்படிக் கவனிக்காமலிருப்பது அந்தக் குணத்துக்குத் தகுந்ததோ" என்று சொல்லுகிறாள். 'இந்த குணத்தை எங்கே பார்த்தாய்?' என்கிறாயோ? 'நான் சொல்லுகிறேன். பிரளயகாலத்தில் ஆத்மாக்கள் அறிவில்லாதவைகளைப் போல் இருப்பதைப் பார்த்து இரக்கத்தால் இந்த உலகத்தை உண்டுபண்ணினாய். மறுபடியும் பிரளயகாலத்தில் இதை உன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தாய். ஸிருஷ்டி காலத்தில் இதை வெளிப்படுத்தி முன்போலிருக்கும்படி செய்தாய். மஹாபலி இதை எடுத்துக்கொண்டபோது இதை அளந்து எடுத்துக் கொண்டாய். இப்படி நீ பரமோபகாரன் என்பதைக் காட்டவில்லையா' என்று சொல்லுகிறாள். இவளுக்கு என்ன முடிவு வருமோ? இவளுடைய கர்மங்களே பலனைக் கொடுக்குமோ? அல்லது நீ அநுக்கிரஹம் செய்யப்போகிறாயோ? என்று தாயார் புலம்புகிறாள். (2)

---

வட்கிலளிறைவு மணிவண்ணா வென்னும்
வானமே நோக்குமை யாக்கும்
உட்குடை யசுர ருயிரெல்லா முண்ட
வொருவனே யென்னுமுள் ளுருகுங்
கட்கிலீ யுன்னைக் காணுமா றருளாய்
காகுத்தா கண்ணனே யென்னும்
திட்கொடி மதிள்சூழ் திருவரங் கத்தா
யிவடிறத் தென்செய்திட் டாயே. (௩)

(ப - ரை) இறையும் - கொஞ்சமும், வட்கு - வெட்கம், இலள் - இல்லாதவள் ஆனாள், மணிவண்ணா என்னும் - ரத்னத்தின் ஸ்வபாவமுள்ளவனே என்று சொல்லுகிறாள், வானமே நோக்கும் - ஆகாசத்தையே பார்த்துக்கொண்டிருக்கிறாள், மை ஆக்கும் - மோஹத்தையடைகிறாள், உட்கு உடை - பலமுடைய, அசுரர் உயிர் எல்லாம் உண்ட - அஸுரர்களுடைய உயிரையெல்லாம் நாசம் பண்ணின, ஒருவனே என்னும் - ஒப்பில்லாதவனே என்று சொல்லுகிறாள், உள் உருகும் - மனம் நெகிழ்ந்து உருகுகிறாள், கட்கு இலீ - (மாம்ஸக்) கண்களுக்குத் தோன்றுகிறவன் அல்லாதவனே! உன்னை, காணும் ஆறு - நான் பார்க்கும்படியை, அருளாய் - கிருபை செய்யவேண்டும், காகுத்தா - ககுத்ஸ்த வம்சத்திற் பிறந்தவனே! கண்ணா - கண்ணனே! என்னும் - என்று சொல்லுகிறாள், திண் - திடமான, கொடி மதிள் சூழ் - கொடி விளங்குகிற மதில்களாலே சூழப்பட்ட, திருவரங்கத்தாய்! இவள் திறத்து - இவள் விஷயத்தில், என் செய்கின்றாய் - என்ன செய்தாய் (என்ன செய்ய நினைத்தாய்).

(கருத்து) உன்னைக் காணப்பெறாமையாலே ஸ்திரீகளுக்கு இருக்கவேண்டிய வெட்கம் என்கிற குணமும் இவளிடம் இல்லாமல் போய்விட்டது. மோஹத்தை அடைகிறாள். மோஹம் தெளிந்து 'மணிபோலே ஸுலபனும் காந்தியுள்ளவனுமாயிருக்கிறவனே' என்று சொல்லுகிறாள். ஸ்ரீகஜேந்திரனுக்கு முந்தத் தோன்றினதுபோல் கருடன்மேல் ஏறிக்கொண்டு வந்து தோன்றுவாய் என்று நினைத்து நீ வரும் வழியான ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறாள்; வேறொன்றையும் பார்க்கிறதில்லை. இப்படி ஆகாசத்திலும் காணப்பெறாமையால் மோஹத்தையடைகிறாள். மறுபடியும் மோஹம் தெளிந்து, 'இந்திரன் முதலானவர்களையும் ஜயிக்கும்படி வலிமையுள்ள அஸுரர்களையெல்லாம் நாசம் செய்தவனே! இப்படி உனக்கு ஒப்பில்லாதவன் என்று உன்னைக் காட்டின நீ ஆச்ரிதனுன என்னுடைய இடையூறுகளைப் போக்கி அருளவேண்டும்' என்று சொல்லுகிறாள். மறுபடியும் [illegible]மையால நெஞ்சு உருகுகிறாள். மாம்ஸக் கண்ணுக்கு நான் தோன்றுகிறதில்லை என்கிற நிர்ப்பந்தமிருக்கிறதே என்று சொல்லுகிறாயோ? எனக்காக மாத்திரம் அந்த நிர்ப்பந்தத்தை விலக்கி நான் ஒருத்தி உன்னைக் காணும்படி கிருபை செய்ய

வேண்டுமே என்கிறாள். அதை நான் செய்யத் தகுந்ததோ என்று சொல்லுகிறாயோ? கருதல்த வசத்தில் சகரவாததித திருமகனுப் நீ வந்து எல்லாரும் பார்க்கும்படி திரியவில்லையோ? இதை ஒருதடவையா செய்தாய்? கண்ணனாய் அவதாரம் செய்து இடைச்சிகள் கூப்பிட்டபொழுது அவர்கள் கண்களுக்குமுன் தோன்றவில்லையா என்று சொல்லுகிறாள். திடமான கொடிகளால் அலங்காரம் செய்யப்பட்ட மதில்களால் சூழப்பட்ட ஸ்ரீரங்கத்திலிருப்பவனே! அவதாரம் செய்த காலங்களில் எல்லாருக்கும் நான் உதவவில்லையே என்றுதானே ஸ்ரீரங்கத்தில் நீ நித்யவாஸம் பண்ணுகிறாய். இப்படியிருக்கிற நீ இவள் விஷயத்தில் என்ன செய்ய நினைத்துக்கொண்டிருக்கிறாய்? இவளைக் கவனிக்காமலேயிருக்கவா? அல்லது இவளுக்கு அநுக்ரஹம் செய்யவா? என்று தாயார் சொல்லுகிறாள்

குறிப்பு.—இந்தப் பெண்ணுக்கு லஜ்ஜை போய்விட்டது என்பதை 'தாயாரான என் முன்னாலே இவள் தன் நாயகனைக் கூப்பிடுவதால் அறிந்தேன்' என்பது தாயாரின் கருத்து.

(இ - ம்) கட்கிலீ. விளிவேற்றுமை. (3)

---

இட்டகா லிட்ட கைகளா யிருக்கு
மெழுந்துலா மயங்குங்கை கூப்பும்
கட்டமே காத லென்றுமூர்ச் சிக்குங்
கடல்வண்ணா கடியைகா ணென்னும்
வட்டவாய் நேமி வலங்கையா வென்னும்
வந்திடா யென்றென்றே மயங்கும்
சிட்டனே செழுநீர்த் திருவரங் கத்தா
யிவடிறத் தென்சிந்தித் தாயே. (ச)

(ப - ரை) இட்ட கால் இட்ட கைகளாய் இருக்கும் - (தோழிகளாலே) வைக்கப்பட்ட கால்களையும் கைகளையும் உடையவளாய் இருக்கிறாள், எழுந்து - கிளம்பி, உலா - உலாவி, (அங்குமிங்கும் நடந்து), மயங்கும் - மோஹத்தையடைந்து கிடக்கிறாள், கை கூப்பும் - கைகளைக்கூப்புகிறாள், காதல் - ஆசையானது, கட்டம் என்று - கஷ்டமென்று, மூர்ச்சிக்கும் - மூர்ச்சையையடைகிறாள்,

கடல வண்ணு - ஸமுத்திரத்தின் ஸ்வபாவமுடையவனே! கடியை காண் என்னும் - நீ குரூரனானவன் என்று சொல்லுகிறாள், வட்டம் வாய் - வட்டமான வாயையுடைய (சுற்றிலும் வாயையுடைய), நேமி - சக்ரத்தை யுடைத்தான, வலம் கையா என்னும் - வலது கையையுடையவனே என்று சொல்லுகிறாள், வந்திடாய் என்று என்றே - நீ வரவேண்டுமென்று பலதடவை சொல்லி, மயங்கும் - மோஹத்தை அடைகிறாள், சிட்டனே - சிஷ்டனே! (நல்ல நடக்கையையுடையவனே), செழுநீர் - அழகிய ஜலத்தையுடைய, திருவரங்கத்தாய் - ஸ்ரீரங்கத்திலிருக்கிறவனே! இவள் திறத்து - இவள் விஷயத்தில், என் சிந்தித்தாய் - என்ன நினைக்கிறாய்?

(கருத்து) கைகளையும் கால்களையும் அசைக்க இவளுக்குச் சக்தியில்லை. அவைகள் பராதீனங்களாயிருக்கின்றன. ஒரு விளக்கு அணைந்துபோவதற்கு முன்னுலே பிரகாசிப்பதுபோல இவள் திடீரென்று எழுந்திருந்து அங்குமிங்கும் நடந்து மோஹத்தையடைகிறாள். நினைவு திரும்பிவந்து தன்னுடைய பிரிந்த துக்கத்தால் கைகளைக் கூப்புகிறாள். 'உன்னிடத்தில் வைக்கிற ஆசையானது பொல்லாது. அதினுல் துன்பமேயல்லாமல் வேறொன்றுமில்லை. உன்னிடத்தில் ஆசையில்லாதவர்கள் என்ன பாக்கியம் பண்ணினர்களோ!' என்று அடிக்கடி சொல்லி மோஹிக்கிறாள். இதுவரையில் உன்னை 'கடல்வண்ணு' என்று உன்னுடைய அளவில்லாத நல்ல குணங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாள். இப்போது அதைவிட்டு 'நீ மிகவும் இரக்கமில்லாதவன். இதில் ஸந்தேஹமில்லை.' என்று சொல்லுகிறாள். ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்காகச் சுற்றிலும் வாயையுடைய சக்ரத்தை வலது திருக்கையில் வைத்துக்கொண்டிருக்கிறவனே என்று, திருவாழியும் கையுமாயிருக்கிற உன்னுடைய அழகைப்பார்க்க ஆசைப்பட்டுச் சொல்ல ஆரம்பித்து மேலே இதை முடிக்க முடியாமல் நிறுத்தி விடுகிறாள். கொஞ்சம் பொறுத்திருந்து வரவேண்டும் என்று சொல்லுகிறாள். நீ உடனே வராமையால், மறுபடியும் வரவேண்டுமென்று சொல்லுகிறாள். அப்படி வரக்காணாமையால் மயங்குகிறாள். நல்ல நடவடிக்கையையுடையவனே! இதுவோ உன்னுடைய நல்ல நடவடிக்கை? செழுநீரையுடைய ஸ்ரீரங்கத்திலிருக்கிறவனே! யோக்கியன்போல் பாவனை பண்ணிக்கொண்டு தண்ணீர்க்கரையிலிருக்கிறாய். எல்லாரும் வரும்படியான தண்ணீர்ப்

வேண்டுமே என்கிறாள். அதை நான் செய்யத் தகுந்ததோ என்று சொல்லுகிறாயோ? கருதவர்க்க வடமதத்தில் சகராவாதத்தித திருமகளுப் நீ வந்து எல்லாரும் பார்க்குமபடி திரியவில்லையா? இதை ஒருதடவையா செய்தாய்? கண்ணனுய் அவதாரம் செய்து இடைச்சிகள் கூப்பிட்டபொழுது அவர்கள் கண்களுக்குமுன் தோன்றவில்லையா என்று சொல்லுகிறாள். திடமான கொடிகளால் அலங்காரம் செய்யப்பட்ட மதில்களால சூழப்பட்ட ஸ்ரீரங்கத்திலிருப்பவனே! அவதாரம் செய்த காலங்களில் எல்லாருககும் நான் உதவவில்லையே என்றுதானே ஸ்ரீரங்கத்தில் நீ நித்யவாஸம் பண்ணுகிறாய். இப்படியிருக்கிற நீ இவள் விஷயத்தில என்ன செய்ய நினைத்துககொண்டிருககிறாய்? இவளைக கவனிககாமலேயிருககவா? அல்லது இவளுக்கு அநுக்ரஹம் செய்யவா? என்று தாயார் சொல்லுகிறாள்

குறிப்பு.—இந்தப் பெண்ணுக்கு லஜ்ஜை போய்விட்டது என்பதை 'தாயாரான என் முன்னுலே இவள் தன் நாயகனைக் கூப்பிடுவதால் அறிந்தேன்' என்பது தாயாரின் கருத்து.

(இ - ம்) கட்கிலீ. விளிவேற்றுமை. (3)

---

இட்டகா லிட்ட கைகளா யிருக்கு
மெழுந்துலா மயங்குங்கை கூப்பும்
கட்டமே காத லென்றுமூர்ச் சிக்குங்
கடல்வண்ணு கடியைகா ணென்னும்
வட்டவாய் நேமி வலங்கையா வென்னும்
வந்திடா யென்றென்றே மயங்குஞ்
சிட்டனே செழுநீர்த் திருவரங் கத்தா
யிவடிறத் தென்சிந்தித் தாயே. (ச)

(ப - ரை) இட்ட கால் இட்ட கைகளாய் இருக்கும் - (தோழிகளாலே) வைக்கப்பட்ட கால்களையும் கைகளையும் உடையவளாய் இருக்கிறாள், எழுந்து - கிளம்பி, உலா - உலாவி, (அங்குமிங்கும் நடந்து), மயங்கும் - மோஹத்தையடைந்து கிடக்கிறாள், கை கூப்பும் - கைகளைக்கூப்புகிறாள், காதல் - ஆசையானது, கட்டம் என்று - கஷ்டமென்று, மூர்ச்சிக்கும் - மூர்ச்சையையடைகிறாள்,

(ப-ரை) பால - இரண்டு பாகங்களாக, துன்பங்கள் - (பிரதிகூலர்க்கு) துன்பங்களையும, இன்பங்கள் - (அநுகூலர்க்கு) இன்பங்களையும், படைத்தாய்-உண்டுபண்ணினாய், பற்று இலார் - (குணங்களுடைய) ஸம்பந்தமில்லாதவர்களும், பற்ற நின்றானே - (உன்னை) ஆச்ரயிக்கும்படி இருக்கிறவனே! கால சக்கரத்தாய் - (ஆச்ரிதர்களின விரோதிகளுக்கு) யமன்போலிருக்கிற சக்கரத்தையுடையவனே! கடல் இடங்கொண்ட - திருப்பாற்கடலில் உனக்குப் படுக்குமிடத்தைக்கொண்ட, கடல் வண்ணா - ஸமுத்திரம்போன்ற வர்ணமுள்ளவனே! கண்ணனே - கண்ணனாய் அவதாரம செய்தவனே! என்னும் - என்று சொல்லுகிறாள், சேல்கொள் - மீன்களைக்கொண்டிருக்கிற, தண் புனல் சூழ - குளிர்ந்த ஜலத்தாலே சூழப்பட்ட, திருவரங்கத்தாய் என்னும், என் தீர்த்தனே - என்னுடைய பரிசுத்தனே! என்னும - என்று சொல்லுகிறாள், என்னுடை - என்னுடைய, கோமளம் கொழுந்து - கொழுந்துபோல மிருதுவான இந்தப் பெண், கோலம் - அழகான, மா - பெரிய, மழை - மழை ஜலம்போல் குளிர்ந்த, கண் - கண்களில், பனி மல்க - ஜலங்கள் நிரம்ப, இருக்கும் - (அசையாமல்) இருக்கிறாள்.

(கருத்து) 'நீ பிரதிகூலர்க்குத் துக்கமும், அநுகூலர்க்கு ஸுகமும் என்று இவைகளைப பிரித்துவைத்திருக்கிறாய். இந்த ஏற்பாட்டை என் விஷயத்தில மாற்றவோ பார்க்கிறது' என்கிறாள். 'குணம் ஒன்றுமில்லாதவர்களை நான் எப்படி ஏற்றுக்கொள்ளுகிறது?' என்று சொல்லுகிறாயோ? குணமொன்று மில்லாமல் அபராதத்தையே செய்துகொண்டிருந்த காகாஸுரனையும் நீ ரக்ஷிக்கவில்லையா? 'வேறு உபாயமில்லாதவர்களையும் காப்பாற்றும் உன் ஸ்வபாவம் எங்கே போயிற்று' என்கிறாள்; 'இடையூறுகள் இருக்கும்போது உம்மை நான ஏற்றுக்கொள்ளக் கூடுமோ' என்று சொல்லுகிறாயோ? ஆச்ரிதர்களின் விரோதிகளுடைய ஆயுள் எப்போது முடியப்போகிறது என்று யமனைப் போல் பார்த்துக்கொண்டிருக்கும் திருவாழியைத் திருக்கையில் வைத்துக்கொண்டிருக்கிறது எதற்காக? எனக்காக அன்றோ? ஆகையால் என் இடையூறுகளை நீயே போக்கவேண்டாமோ? என்கிறாள். 'நான் வெகுதூரத்தில் வைகுந்தத்தில் இருக்கிறேனே' என்கிறாயோ? ஆச்ரிதர்களான தேவர்கள் உன்னிடம்

வந்து முறையிடுவதற்காகத் திருப்பாற்கடலில் ஒரு ஸமுத்திரத்தில் இன்னொரு ஸமுத்திரம் சாய்ந்தாற்போல் பள்ளிகொண்டிருக்கிறாயே முன்காலத்தில் ஆர்த்திகர்களான மனிதர்கள் உன்னிடம் வருவதற்காகக் கண்ணனாய் பூமியிலும் நீ அவதாரம் செய்யவில்லையா? இந்தக் காலத்திலும் எல்லாரும் ஆச்ரயிக்கும்படி ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கவில்லையா? அந்த ஊரைச் சூழ்ந்துகொண்டிருக்கிற ஜலத்திலிருக்கும் மீன்கள் அதைவிட்டுப் பிரிந்திருக்கமுடியாததுபோல் உன்னைவிட்டுப் பிரிந்திருக்க என்னால் முடியாது என்பது உனக்குத் தெரியாதா?' என்று சொல்லுகிறாள். உன்னிடத்தில் எனக்கு ஆசையுண்டாவதற்கு இடையூறுகளாய் இருந்தவைகளை நீ போக்கினாயே அப்படியே உன்னை நான் சேருவதற்கு இடையூறுகளான என் பாபங்களையும் நீ போக்கவேண்டாமா? என்றும் சொல்லுகிறாள். இப்படிச் சொல்லியும் நீ வரவில்லை. இவள் கொழுந்துபோல் மிருதுவாயிருக்கிறாள். இவளுடைய அழகாய் விசாலமான குளிர்ந்த கண்களில் நீர் நிரம்பி அசையாமலிருக்கிறாளே! (7)

---

கொழுந்துவா னவர்கட் கென்னுங்குன் றேந்திக்
கோநிரை காத்தவ னென்னும்
அழுந்தொழு மாவி யனலவெவ் வுயிர்க்கு
மஞ்சன வண்ணனே யென்னும்
எழுந்துமே னோக்கி யிமைப்பில ளிருக்கு
மெங்ஙனே நோக்குகே னென்னுஞ்
செழுந்தடம் புனல்சூழ் திருவரங் கத்தா
யென்செய்கே னென்றிரு மகட்கே. (அ)

(ப - ரை) வானவர்கட்கு - வைகுந்தத்திலிருப்பவர்களுக்கு, கொழுந்து என்னும் - கொழுந்துபோல் (தலையில் வைத்துக் கொள்ளும் அலங்காரம்போல்) இருக்கிறவனே என்று சொல்லுகிறாள், குன்றம் ஒன்று - கோவர்த்தநம் என்கிற ஒரு மலையை, ஏந்தி - கையில் ஏந்திக்கொண்டு, கோ நிரை காத்தவனே - மாடுகளின் கூட்டங்களை ரக்ஷித்தவனே! என்னும், அழும் - அழுகிறாள், தொழும் - (உன்னைக் குறித்து) கைகூப்புகிறாள், ஆவி - ஆத்மாவானது, அனல - வெந்துபோகும்படி, வெவ்வுயிர்க்கும்-

உஷ்ணமாய் பெருமூச்சு விடுகிருள், அஞ்சனவண்ணனே - மை போல் நீலமான திருமேனியையுடையவனே! என்னும், எழுந்து, மேல் நோக்கி - ஆகாசத்தைப் பார்த்து, இமைப்பு இலள் இருக்கும் - கண்கொட்டாதவளாயிருக்கிருள், எங்ஙனே - எப்படி, நோக்குகேன் - காணுவேன், என்னும், செழும் தடம் புனல் சூழ் - அழகாய் விசாலமாயிருக்கிற ஜலத்தாலே சூழப்பட்ட திருவரங்கத்தாய்! என் திருமகட்கு - லக்ஷ்மீபோலிருக்கிற என் பெண்ணுக்கு, என் செய்கேன் - என்ன செய்வேன்?

(கருத்து) "வைகுந்தத்திலிருந்து அங்கிருப்பவர்களுக்குத் தலைவனும் வேண்டியதெல்லாம் கிடைத்திருக்கிறவனும் இருக்கிற நீ இடையர்கள் வம்சத்தில் பிறந்து, பெருமழையினுல் துன்பப்பட்ட கோபர்களையும் கோபஸ்திரீகளையும் அவர்கள் மாடுகளையும் கோவர்த்தனம் என்கிற ஒருமலையைப் பிடித்துக்கொண்டு ரக்ஷித்தாயே. இதை உனக்கு ஒரு ப்ரயோஜநம் கிடைப்பதற்காகச் செய்தாயோ? கருணையினுலே இதைச் செய்யவில்லையா? அந்தக் கருணை எங்கேபோயிற்று? அதற்கு நான் விஷயமில்லையா?" என்று சொல்லுகிருள். பின்னையும் நீ வராமையால் அழுகிருள். உன்னைக்குறித்துக் கையைக்கூப்புகிருள். இவள் ஆத்மா உஷ்ணத்தாலே வெந்துபோகும்படி பெருமூச்சு விடுகிருள். "என்னுடைய தாபம் எல்லாம் போம்படி மைபோன்ற திருமேனியைக் காட்டியருளவேண்டும்" என்கிருள். இப்படி வருத்தப்பட்டு கூப்பிடுவதைக்கேட்டு நீ வராமலிருக்க மாட்டாயென்றும், கஜேந்திராழ்வானுக்கு வந்ததுபோல் நீ ஆகாசத்தில் வருவாயென்றும் நினைத்து மேலே பார்த்துக்கொண்டு நீ வருவதை ஆரம்பமுதல் பார்ப்பதற்காகக் கண்கொட்டாமலிருக்கிருள். இப்படியிருந்தும் நீ வரவில்லை. 'உன்னை எப்படி பார்க்கப்போகிறேன்'? என்கிருள். செழும் தடம் புனல்சூழ் திருவரங்கத்திலிருக்கிறவனே! லக்ஷ்மி போலிருக்கிற என் பெண்ணுக்கு நான் என்ன செய்வேன்? இவளுடைய ஆசையைக் குறைப்பேனே, அல்லது உன்னை வரும்படி செய்வேனே? ஒன்றும் என்னுல் முடியாது.

(இ - ம்) அஞல: வினையெச்சம். (8)

என்றிரு மகள்சேர் மார்வனே யென்னு
மென்னுடை யாவியே யென்னும்
நின்றிரு வெயிற்ற லிடந்துநீ கொண்ட
நிலமகள் கேள்வனே யென்னும்
அன்றுரு வேழுந் தழுவிநீ கொண்ட
வாய்மக ளன்பனே யென்னுந்
தென்றிரு வரங்கங் கோயில்கொண் டானே
தெளிகிலேன் முடிவிவ ளனக்கே. (௰)

(ப - ரை) என் திரு மகள் - எனக்கு ஸ்வாமினியான பெரிய பிராட்டி, சேர் - எப்போதும் சேர்ந்திருக்கும், மார்வனே - மார்பையுடையவனே! என்னும் - என்று சொல்லுகிறாள், என் ஆவியே - எனக்குப் பிராணனாயிருக்கிறவனே, என்னும், நின் - உன்னுடைய, திரு எயிறறல் - அழகான கொம்பினாலே, இடந்து - பிரளயஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்து, நீ கொண்ட, நில மகள் கேள்வனே - பூமிப்பிராட்டிக்கு நாயகனே, என்னும், அன்று - அப்போது, (நப்பின்னை உன்னையாசைப்பட்ட போது), உரு ஏழும - இடிபோல முழங்கின ஏழு காளை மாடுகளை யும், தழுவி-கட்டிககொண்டு, நீ கொண்ட, ஆய்மகள் அன்பனே - இடைப்பெண்ணுக்கு (நப்பின்னைக்கு) இனியவனே, என்னும், தென் - அழகான, திருவரங்கம் கோயில்கொண்டானே - ஸ்ரீரங் கத்தைக் கோயிலாக உடையவனே! இவள்தனக்கு - இவளுக்கு முடிவு, தெளிகிலேன் - இன்னதென்று அறியச் சக்தியில்லாத வளாயிருக்கிறேன்.

(கருத்து) "எனக்கு ஸ்வாமினியான பெரிய பிராட்டி எப் போதும் வாஸம் செய்யும் திருமார்பை உடையவனே! அவ ளுக்கு ஸ்தனங்கள்போலவும் கைகள்போலவும் நான் சேஷமாய் இருக்கிறேன் என்று என்னிடத்தில் பிரீதி பண்ணினாய்; இப் போதும் அவளுடைய ஸந்தோஷத்துக்காக என்னைக் காப்பாற்ற வேண்டாமா? பிரளய ஜலத்தில் மூழ்கிக் கிடந்த பூமிப்பிராட் டியை உன்னுடைய அழகான கொம்பினாலே மேலே எடுத் துக்கொண்டுவந்து அவளுக்கு நாயகனாயிருக்கிறவனே! இப்படி உன்னுடைய ரூபத்தை மாறறிக்கொண்டாகிலும் உன்னிடத்தில் ஆசையுள்ளவர்களுக்கு வேண்டியதைச் செய்யவில்லையா? உன்

னுடைய அழகையும் குணங்களையும் கண்டு உன்னை ஆசைப்பட்ட நப்பின்னைப்பிராட்டிக்காக இடிபோல் முழங்கின ஏழு காளைமாடு களை அழுந்தக் கட்டிக்கொண்டு கொன்று, அவளைக் கல்யாணம் செய்துகொண்டவனே! நப்பின்னையைக் கட்டிக்கொள்வதற்காக அன்றோ காளைமாடுகளைக் கட்டிக்கொண்டது உனக்கு இனியதாய் இருந்தது. அவளுக்கு நான் சேஷம். உன்னை நினைத்துக் கொண்டே நான் தரித்துக்கொண்டிருக்கும்படி அவளுக்காகத் தானே செய்திருக்கிறாய். இன்னமும் அவளுக்காகவே என்னை உன் திருக்கண்களால் பார்த்தருளவேண்டும்" என்று சொல்லு கிறாள். இவளுக்காகவே ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கிற நீ இவளைப் பார்த்தருளுகிறதில்லை. நீ எவ்வளவு குணமுள்ள வனாயிருந்தாலும் இவள் படுகிற வருத்தத்தைப் பார்த்தால் அந்த வருத்தத்துக்கு ஒரு முடிவு உண்டாகும் என்று எனக்குத் தோன்றவில்லை. (9)

---

முடிவிவ டனக்கொன் றறிகிலே னென்னும்
மூவுல காளியே யென்னுங்
கடிகமழ் கொன்றைச் சடையனே யென்னும்
நான்முகக் கடவுளே யென்னும்
வடிவுடை வானோர் தலைவனே யென்னும்
வண்டிரு வரங்கனே யென்னும்
அடியடை யாதாள் போலிவ ளணுகி
யடைந்தனள் முகில்வண்ண னடியே. (௧0)

(ப - ரை) இவள், தனக்கு, முடிவு ஒன்று - முடிவுக்கு உபாயம் ஒன்றை, அறிகிலேன் என்னும் - அறியமுடியவில்லை என்கிறாள், மூ உலகு ஆளியே - மூன்று உலகங்களை ஆளுகிற இந்திரனே! என்னும், கடிகமழ் - வாஸனை வீசுகிற, கொன்றை சடையனே - கொன்றைப்பூவை ஜடையிலுடையவனே, என்னும், நான்முகம் கடவுளே - நான்கு முகமுள்ள பிரம்மாவான தெய் வமே! என்னும், வடிவு உடை - அழகான ரூபத்தையுடைய, வானோர் - நித்தியஸூரிகளுக்கு, தலைவனே என்னும், வண் - உதாரமான, திருவரங்கனே - ஸ்ரீரங்கத்திலிருப்பவனே! என் னும், அடி - அவனுடைய திருவடிகளை, அடையாதாள்போல்-

அடையாமல் முடிந்துபோவள்போல் இருந்த இவள், முகில் வண்ணன - மேகத்தினுடைய ஸ்வபாவத்தையுடைய பெரிய பெருமாளின், அடி - திருவடிகளை, அணுகி - கிட்டி, அடைந்தனள் - (மனதாலே நன்றாய் அநுபவிக்கும்படி) அடைந்தாள்.

(கருத்து) "நான் இப்படி வருத்தப்படுவதைக் காட்டிலும் முடிந்துபோவதே நல்லது, ஆனால் அதற்கு ஓர் உபாயத்தையும் அறியமுடியவில்லை" என்று இவள் சொல்லுகிறாள். "ஒரு ப்ரயோஜனத்தை ஆசைப்பட்டு உன்னை ஆச்ரயித்திருக்கிற மூன்று உலகத்துக்கு அதிபதியான இந்திரனுக்கும், பொன்னிறப்பூவைச் சடையிலுடைய ருத்திரனுக்கும், நான்கு முகமுள்ள பிரம்மாவுக்கும் ஆத்மாவாயிருந்து அவர்களுக்கு வேண்டியவைகளைச் செய்கிறவனே! உன்னையே ப்ரயோஜனமாக எண்ணின எனக்கு நான் வேண்டினதைச் செய்யவேண்டாமா"? என்கிறாள் "உன்னை அநுபவித்து, அதினாலுண்டான ப்ரீதியால் ஓர் அழகு உடம்பில் விளங்கும்படியிருக்கிற நித்யஸூரிகளுக்கு உன்னைக் கொடுத்துக்கொண்டிருக்கிறவனே! நானும் உன்னை அப்படி அநுபவிக்கவேண்டாமா"? என்கிறாள். "நித்ய ஸூரிகள்மாத்திரமல்லாமல் எல்லா ஸம்ஸாரிகளும் உன்னை அநுபவிக்கும்படி ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கிறாயே! அந்த ப்ரயோஜனத்தை நானும் பெறவேண்டாமோ"? என்கிறாள். உன்னைப் பிரிந்த இந்த வருத்தத்தாலே முடிந்துபோவேனோ என்று இருந்தாள். இப்போது நிலத்திலும் ஜலத்திலும் பொழிகிற மழையைப்போல் எல்லாருக்கும் உபகாரம் செய்யும் ஸ்வபாவமுள்ள பெரியபெருமாளின் திருவடிகளைக் கிட்டி, மனதால் நன்றாய் அநுபவிக்கும்படி அடைந்துவிட்டாள். (10)

---

முகில்வண்ண னடியை யடைந்தருள் சூடி
யுய்ந்தவன் மொய்புனற் பொருநல்
துகில்வண்ணத் தூநீர்ச் சேர்ப்பன்வண் பொழில்சூழ்
வண்குரு கூர்ச்சட கோபன்
முகில்வண்ண னடிமேற் சொன்னசொன் மாலை
யாயிரத் திப்பத்தும் வல்லார்
முகில்வண்ண வானத் திமையவர் சூழ
விருப்பர்பே ரின்பவெள் ளத்தே. (கக)

(ப - ரை) முகில் வண்ணன் - மேகத்தின் வர்ணமுள்ள, பெரியபெருமாளுடைய, அடியை-திருவடிகளை, அடைந்து-(மன தால் மிகவும் தெளிவாய்) அநுபவித்து, அருள் சூடி - அவன் கிருபையைத் தலையால் வஹித்து (பெற்று), உய்ந்தவன் - உஜ்ஜீவித்தவரும, (பிரிவினாலுண்டான தாபமபோய் தரித்திருக்கிற வரும), மொய்புனல் - மொய்த்திருப்பதைக்கொண்ட ஜலத்தை யுடைய, பொருநல - தாம்ரபர்ணியினுடைய, துகில் வண்ணம் - (வெளுப்பு வர்ணமுள்ள) வஸ்திரமபோல், தூ - சுத்தமான (மிக வும தெளிந்த), நீர் - ஜலத்தை, சேர்ப்பன்-சேர்ந்தவரும் (அதின கரையிலிருப்பவரும்), வண் - அழகான, பொழில சூழ் - தோட்டங்களாலே சூழபபட்ட, வண் குருகூர சடகோபன - அழகான திருநகரியிலிருக்கிறவருமான ஆழவார, முகிலவண்ணன் அடிமேல சொன்ன-மேகவர்ணன விஷயமாக அருளிச்செய்த, சொல்மாலை ஆயிரத்து - சொலமாலைகளாகிய ஆயிரத்தில், இ பத்தும - இந்தப் பத்துபபாடடுக்களையும, வலலார - படிககச் சக்தியுள்ளவர்கள், முகில வண்ணன-மேகமபோல் நிலவர்ணமுள்ள, வானத்து - பரமபததநில், இமையவர் - நித்தியஸூரிகள், சூழ - சூழ்ம்படி, பேரின்ப வெள்ளதது - அளவில்லாத இன்பப் பிரவாஹத்தில், இருப்பர் - எப்போதுமிருப்பர்.

(கருத்து) மேகவர்ணனை பெரியபெருமாளின் திருவடிகளை மிகவும் தெளிவாய் அநுபவிதது அதினால் முன் பிரிவினாலுண்டாயிருந்த தாபமபோய் தரிததவரும, தாமரபர்ணியின கரையில திருக்குருகூரில் எழுந்தருளியிருந்தவருமான ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப்பாட்டுகளையும் படிக்கச்சக்தியுள்ளவர்கள் வைகுந்தத்துக்குப்போய் 'இப்படியும பிரகிருதியிலிருந்து ஒருவன் இங்கே வரக்கூடுமோ ?' என்று ஆச்சரியப்படுகிற நித்தியஸூரிகளின் நடுவிலிருந்து அளவில்லாத ஆனந்த ஸமுத்திரத்தில எப்போதும மூழ்கிக்கொண்டிருப்பா.

குறிப்பு :—'முகில்வண்ணவானத்து' எனபதற்கு, எம்பெருமானுடைய திருமேனியின் நீலகாந்தியினால் அந்த வைகுந்தம் முழுவதும் நீலமாய்விட்டது எனபது கருத்து. (11)

[illegible] ॥ ८२ ॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்கள் தன்னைப் பழிப்பதைப் போக்குகிறானென்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன:—(1) ஸ்ரீரங்கத்தில் வந்திருப்பது; (2) எல்லா உலகங்களையும் முன் இருந்தது போல் ஸ்ருஷ்டித்து உண்டுபண்ணுவது; (3) எல்லாரும் தன்னை ஆச்ரயிக்கும்படி பூமியில் அவதாரம் செய்தது, (4) பக்தபராயிருப்பது, (5) ஆச்ரிதர்களின் விரோதிகளைப் போக்கும் தன்மை; (6) ஆதிசேஷன்மேல் படுத்திருப்பது; (7) ஜீவாத்மாக்களுடைய கர்மங்களுக்குத் தகுந்தபடி லோகங்களையும் தேகங்களையும் கொடுப்பது, (8) கோவர்த்தனத்தைத் தூக்கிப்பிடித்துக் கோகுலத்தை ரக்ஷித்தது; (9) பிரளயஜலத்திலிருந்து மேலே பூமியைக்கொண்டுவருவதாகிய உபகாரத்தைச் செய்தது; (10) மேகம்போன்ற திருமேனியையுடையவனாயிருப்பது. (82)

---

# மூன்றாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் கடைசிப் பாட்டில் ஆழ்வார் முன்போலல்லாமல் அதிகத்தெளிவாகப் பெரியபெருமாளை அநுபவித்துப் பிரிவினுலுண்டான தாபம தீர்ந்து தரித்திருந்தார் என்று சொல்லப்பட்டது. ஆனபோதிலும் ஆசைப்பட்ட பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமையால் வருததப்பட்டு, இப்போதே அது கிடைக்கவேண்டுமென்று அவஸரப்படுவதை, நாயகனைவிட்டுப் பிரிந்து உடனே அவனிடம் போகவேண்டுமென்று அவஸரப்படுகிற நாயகியின பேச்சாலே அவர் அருளிச்செய்கிறார்

(2) நாயகன் நாயகிக்குத் தன்னுடன் சேர்க்கையால் உண்டான ஸந்தோஷம உள்ளடங்குவதற்காகவும வேட்டையாடுவதற்காகவும், திருப்பேரைக்குப்போவதாகத தீர்மானம்செய்து, அவளைக் கௌரவம செய்து, அவள் ஸம்மததகின்பேரில புறப்பட்டான். நாயகியும், அவனுககு ஆயுதங்களைக்கொடுத்து வாசற்படியளவில் கூடப்போய், 'நீ ஜயத்துடன் திரும்பிவரவேண்டும' என்று சொன்னுள் அவன் போனபிறகு பிரிவினுலுண்டான வருததத்தை அறிந்து திருப்பேரைக்குப் போகப்புறப்பட்ட அவளைத் தாயாரும் தோழிகளும் மறறப்பந்துக்களும் தடுக்க, நாயகி "நான் போகாமலிருககமாட்டேன். தனியே என்னைப் போகவிட்டீர்கள் என்கிற பழி உங்களுக்கு வராமலிருப்பதற்காக நீங்களே என்னைச் சீக்கிரம் அங்கே கொண்டுபோய் விடுங்கள்" என்று சொல்லுகிறுள் :—

( எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்-)

வெள்ளைச் சுரிசங்கொ டாழி யேந்தித்
   தாமரைக் கண்ணனென் னெஞ்சி னூடே
புள்ளைக் கடாகின்ற வாற்றைக் காணீ
   ரென்சொல்லிச் சொல்லுகே னன்னை மீர்காள்
வெள்ளச் சுகமவன் வீற்றி ருந்த
   வேத வொலியும் விழா வொலியும்
பிள்ளைக் குழாவிளை யாட்டொ லியுமறாத்
   திருப்பே ரையில்சேர்வ னேனே. (க)

(ப - ரை) அன்னைமீர்காள் - தாய்மார்களே! வெள்ளை - (சந்திரமண்டலம்போல்) வெளுப்பாய், சுரி சங்கொடு - உள்ளே சுழிகளையுடைய சங்கத்துடன், ஆழி - (ஸூர்யமண்டலம்போல் இருக்கிற) திருவாழியை, ஏந்தி - (திருக்கைகளில்) வைத்துக் கொண்டு, தாமரைக் கண்ணன், என் நெஞ்சின் ஊடே - என் மனதின் நடுவில், புள்ளை - பக்ஷியை (கருடனை), கடாகின்ற - நடத்துகிற, ஆற்றை - விதத்தை, காணீர் - நீங்கள் பார்க்கிறீர்களில்லை, என் சொல்லி - என்ன வார்த்தைகளைச் சொல்லி, சொல்லுகேன் - (உங்களுக்கு இதைச்) சொல்லுவேன், வெள்ளச் சுகம் - பிரவாஹமான ஸுகங்களையுடைய, அவன், வீற்றிருந்த - பெருமையுடன் எழுந்தருளியிருக்கிற, வேத ஒலியும் - வேதத்தைப் படிக்கிறவர்களின் கோஷமும், விழா ஒலியும் - உத்ஸவத்தில் (முழங்குகிற வாத்யங்களின்) கோஷமும், பிள்ளை குழா - சிறு பிள்ளைகளின் கூட்டம், விளையாடு ஒலியும் - விளையாடும்போது (ஒருவரோடொருவர்) பேசும் பேச்சின் கோஷமும், அறா - (ஒரு போதும்) நீங்காத, திருப்பேரையில், நான் சேர்வன் - நான் போய்ச்சேருவேன்.

(கருத்து) சங்கையும் சக்ரத்தையும் திருக்கைகளில் ஏந்திக் கொண்டு தாமரைக் கண்ணனாகிய எம்பெருமான் கருடன்மேல் ஏறிக்கொண்டு என் மனதின் நடுவிலே அதிவேகமாக அங்குமிங்கும் போய்க்கொண்டிருக்கிறான். திருக்கண்களைப்போல் ஆயுதங்கள் திருமேனிக்குஅலங்காரங்களாய், ஆயுதங்கள்போல் திருக்கண்கள் எல்லாரையும் திருவடிகளில் விழும்படி செய்கிறவைகளாய் இருப்பதை நீங்கள் பார்க்கவில்லை இந்த அழகை நீங்கள் பாராததைக்கொண்டு 'இஃது இப்படியுமிருக்குமோ' என்று நீங்கள் சொல்லக்கூடாது. ஆனால், 'அதை நீ இப்படியிருக்கிறது என்று சொல்' என்கிறீர்களோ? என்னாலும் சொல்லமுடியாது. அவ்வளவு ஆச்சரியம். ஆகையால், அவனை ஒருக்ஷணமும் காணாமல் தரித்திருக்கமுடியாது. வேதகோஷமும் உத்ஸவகோஷமும், விளையாடுகிற இளம் பிள்ளைகளின் கோஷமும் எப்போதும் நிறைந்திருக்கிற திருப்பேரையில் அவன் என்னுடன் சேர்ந்ததினாலுண்டான ஆனந்த வெள்ளத்தில் பெருமையுடன் எழுந்தருளியிருக்கிறான். அங்கே இப்போதே என்னைக்கொண்டுபோய் விடுங்கள். இதை நீங்கள் செய்யாவிட்டால் நானே போவேன்.

*குறிப்பு :—(1) சங்கை 'வெள்ளைச்சுரி' என்று வர்ணித்து, திருவாழியை வர்ணிக்காமலிருந்ததற்குக் கருத்து—அதன் அழகை வர்ணிக்கமுடியாது என்பது.*

*(2) பிள்ளைகள் அந்த ஊரில் விளையாடும்போதும் எம்பெருமானுடைய குணங்களையே சொல்லிக்கொண்டிருக்கிறார்கள் என்பது 'பிள்ளைக்குழா விளையாட்டொலியும்' என்பதின் கருத்து.*

*(இ - ம்) கடாகின்ற - கடாவுகின்ற, இடைக்குறை. காணீர் - எதிர்மறை முன்னிலைப் பன்மை வினைமுற்று. அரு - அருத, எதிர்மறைப் பெயரெச்சம்; கடைக்குறை.* (1)

---

நானக் கருங்குழற் றேழி மீர்கா
 ளன்னையர் காளயற் சேரி யீர்காள்
நானித் தனிநெஞ்சங் காக்க மாட்டே
 னென்வச மன்றிதி ராப்ப கற்போய்த்
தேன்மொய்த்த பூம்பொழிற் றண்ப ணைசூழ்
 தென்றிருப் பேரையில் வீற்றி ருந்த
வானப் பிரான்மணி வண்ணன் கண்ணன்
 செங்கனி வாயின் றிறத்த துவே. (உ)

*(ப - ரை) நானம் கரும் குழல் - நானம் என்கிற வஸ்துவையுடைய (அதனாலே வாஸனை ஊட்டப்பட்ட) கருமையான மயிர்முடியையுடைய, தோழிமீர்காள்! அன்னையர்காள் - தாய்மார்களே! அயல் சேரியீர்காள் - மற்ற ஊரிலிருக்கிறவர்களே! நான், இ தனி நெஞ்சம் - இந்த ஸ்வதந்திரமாய்விட்ட மனதை, காக்க மாட்டேன் - தடுக்கமுடியாதவள், என் வசம் அன்று, இது, இரா பகல் - இராத்திரியிலும் பகலிலும், போய், தேன் மொய்த்த - வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கிற, பூ பொழில் - புஷ்பத் தோட்டங்களாலும், தண் பணை - குளிர்ந்த ஜலம் நிறைந்த நிலங்களாலும், சூழ் - சூழப்பட்ட, திருப்பேரையில், வீற்றிருந்த - (தான் ஸர்வேசுவரன் என்கிற) பெருமை தோன்றும்படியிருக்கிற, வானப் பிரான் - (வைகுந்தத்திலிருக்கும் இருப்பை இங்கே*

எல்லாருக்கும் காட்டுவதாகிய) உபகாரத்தைச் செய்கிற, மணி வண்ணன் - ரத்நம்போல் ஸுலபனுன, கண்ணன் - க்ருஷ்ண னுடைய, செங்கனிவாயின் திறத்தது - சிவந்த கோவைப்பழம் போன்றத் திருப்பவளத்தில் படிந்திருக்கிறது.

(கருத்து) வாஸனையுள்ள கருங்கூந்தலையுடைய தோழி களே! தாய்மார்களே! ஊரிலிருக்கும் மற்ற ஜநங்களே! நான் தனியே போவது ஸரியல்ல என்றுசொல்லி ஏன் தடுக்கிறீர்கள்? என் மனது இப்போது நான் சொன்னதைக் கேளாமல் ஸ்வதந் திரமாகிவிட்டது. அஃது என்வசமில்லை. ஆகையால், அவன் பேரைச்சொன்னுல் தளர்ச்சியையடையும் என்னுல் அவனிடம் போகாதபடி அதைத் தடுக்கமுடியாது. வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கிற புஷ்பங்களுள்ள தோட்டங்களாலும் குளிர்ந்த நீர் நிலங்களாலும் சூழப்பட்ட திருப்பேரையில் அவதாரம் செய்த காலத்தில் தன்னிடத்தில் வராதவர்களும்வந்து ஆச்ரயிக் கும்படி ரத்நம்போல் ஸுலபனுயிருக்கிற எம்பெருமான், வைகுந் தத்தில் தானிருக்குமிருப்பை அந்த ஊரிலிருப்பவர்களுக்குக் காட்டிக்கொண்டு தான் ஸர்வேசுவரன் என்கிற பெருமை தோன் றும்படி எழுந்தருளியிருக்கிறுன். என்னுடன் சேர்ந்திருந்த திஞல் உண்டான புதிய அழகையுடைய அவனுடைய செங்கனி வாயில் என் மனது ராத்திரியும் பகலிலும்போய் விழுந்து படிந் திருக்கிறது. ஒருவேளை அங்கேபோய் ஒருவேளை அங்கே போகாதிருந்தால் அதைத் தடுக்கப் பார்க்கலாம். எப்போதும் அங்கே படிந்திருப்பதை எப்படித் தடுக்கமுடியும்? ஆகையால் நான் அங்கே போகாமலிருக்க முடியாது.

குறிப்பு :—(1) நானம் என்பது மயிர்முடிக்கு வாஸனையைச் செய்யும் ஒரு வாஸனைத் திரவியம். இதை எம்பெருமான் நாய கியுடன் சேர்ந்தகாலத்தில் சாத்திக்கொண்டிருந்து, பிறகு தோழி களுக்குக்கொடுத்தான், அதை அவனிடத்தில் கௌரவத்தால் அவர்கள் தலையில் வைத்துக்கொண்டிருந்தார்கள். அதிஞலே அவர்கள் மயிர்முடிக்கு ஒரு வாஸனையுண்டாயிற்று. இதைச் சொல்லுவதின் கருத்து—இதை அவர்கள் தரித்திருக்காவிட்டால் அவன் நினைவு நாயகிக்கு வராது. அவளும் அங்கேபோகப் புறப் படமாட்டாள் என்பது.

(2) 'அயற்சேரியீர்காள்' என்பதற்கு, அந்தரங்கர்களான தாய்மார்களுக்கும் தோழிகளுக்கும் இவளுடைய மனதின் இருப்புத் தெரியும். இதை அந்தரங்கரல்லாத ஊராரும் அறியும்படியிருந்தது அவளுடைய மிகுந்த வருத்தம் என்பது கருத்து. (2)

---

செங்கனி வாயின் றிறத்த தாயுஞ்
 செஞ்சுடர் நீண்முடிச் தாழ்ந்த தாயுஞ்
சங்கோடு சக்கரங் கண்டு கந்துந்
 தாமரைக் கண்களுக் கற்றுத் தீர்ந்தும்
திங்களு நாளும் விழாவ ருத
 தென்றிருப் பேரையில் வீற்றி ருந்த
நங்கள் பிரானுக்கென் னெஞ்சந் தோழீ
 நாணு நிறையு மிழந்த துவே. (௩)

(ப - ரை) தோழி! என் நெஞ்சம் - என் மனது, செங்கனிவாயின் திறத்ததாயும் - (அவனுடைய) செங்கனிவாயில் படிந்ததாயும், செம்மை சுடர் - சிவந்த காந்தியையுடைய, நீள் முடி - நீண்ட கிரீடத்தில், தாழ்ந்ததாயும் - விழுந்ததாயும், சங்கொடு, சக்கரம் - சக்ரத்தையும், கண்டு, உகந்தும்-ஸந்தோஷப்பட்டும், தாமரைக் கண்களுக்கு, அற்று தீர்ந்தும்-வேறு அவயவங்களுக்குப் போகாமல் அவைகளையே பார்த்துக்கொண்டும், திங்களும் - மாஸங்களிலும், நாளும் - நாள்களிலும், விழா அருத - உத்ஸவங்கள் நீங்காத, தென் திருப்பேரையில் வீற்றிருந்த, நங்கள் பிரானுக்கு - நம்முடைய உபகாரகனுக்கு, நாணும் - வெட்கத்தையும், நிறையும் - அடக்கத்தையும், இழந்தது.

(கருத்து) தோழி! 'நீ தனியாக அங்கே போவது உன்னுடைய வெட்கத்துக்கும் அடக்கத்துக்குந் தகுந்ததோ' என்று சொல்லி என்னைத் தடுக்கிறாயே! அவைகளை நான் இழந்து எவ்வளவு காலமாய்விட்டது. ஒவ்வொரு மாதத்திலும், ஒவ்வொரு நாளிலும் உத்ஸவம் எப்போதும் நடந்துகொண்டிருக்கிற தென் திருப்பேரையில் அர்ச்சையாய் எழுந்தருளி நமக்கு ஸுலபனாய் இருக்கும் எம்பெருமான் பெருமையுடன் எழுந்தருளியிருக்கிறானே. என்னுடைய மனஸானது அவனுடைய சிவந்த

கோவைப்பழம்போன்ற திருப்பவளத்தின் காந்தி கொழுந்து விட்டு மேல்நோக்கி வளர்ந்ததோ என்று சொல்லும்படியிருக்கிற கிரீடத்திலும் படிந்திருக்கிறதே. அவனுடைய சங்கையும் சக்ரத்தையும் பார்த்து ஸந்தோஷப்பட்டு அவனுடைய திருக்கண்களின் அழகைப் பார்த்து, வேறு அவயவங்களுக்குப் போகாமல் அவைகளுக்கே சேஷமாய் இருக்கிறதே. ஆகையால், என்னைத் தடுத்து என்ன ப்ரயோஜனம்?

(இ - ம்) அறு - அறுத : எதிர்மறைப் பெயரெச்சம்; கடைக்குறை. (3)

---

இழந்தவெம் மாமை திறத்துப் போன
வென்னெஞ்சி னாருமங் கேவொ ழிந்தார்
உழந்தினி யாரைக்கொண் டென்னு சாகோ
வோதக் கடலொலி போல வெங்கும்
எழுந்தநல் வேதத் தொலிநின் றோங்கு
தென்றிருப் பேரையில் வீற்றி ருந்த
முழங்குசங் கக்கையன் மாயத் தாழ்ந்தே
னன்னையர் காளென்னை யென்மு னிந்தே. (4)

(ப - ரை) இழந்த - (நான்) இழந்த, எம் மாமை திறத்து - எம்முடைய காந்திவிஷயத்தில், போன - (அவனிடம்) போன, என் நெஞ்சினாரும் - என் மனதும், அங்கே - அங்கேயே, ஒழிந்தார்-நின்றுவிட்டார், இனி - இதற்குமேல், உழந்து- (அழுகிலே) சுற்றிச்சுற்றிக்கொண்டிருந்து, ஆரைக்கொண்டு, என்-எதை, உசாகோ-(இது தகுந்தது இது தகாதது என்று) நிரூபணம் பண்ணுவேன், ஓதம் கடல்-அலைகள் மேலேகிளம்புவதையுடைய ஸமுத்ரத்தினுடைய, ஒலிபோல, எங்கும், எழுந்த, நல் வேதத்து ஒலி-மங்களமான வேதகோஷமானது, நின்று - நிலையாயிருந்து, ஓங்கும்-வ்ருத்தியடைகிற, தென் திருப்பேரையில், வீற்றிருந்த, முழங்கு சங்கம் கையன் - முழங்குகிற சங்கத்தைக் கையிலுடைய எம்பெருமானுடைய, மாயத்து - ஆச்சரியமான அழகில், ஆழ்ந்தேன் - முழுகிவிட்டேன், அன்னையர்காள் - தாய்மார்களே! என்னை, முனிந்து - கோபித்து, என் - என்ன ப்ரயோஜனம்?

(கருத்து) தாய்மார்களே! "நீ செய்வது தகுந்ததா அல்லது தகாததா? என்று விசாரிக்க வேண்டாமா? அதைச்செய்யாமல் அங்கே போகலாமா?" என்று கோபிக்கிறீர்களே எம்பெருமான் அபஹரித்துக்கொண்டுபோன என உடம்பின் காந்தியை அவனிடமிருந்து திருப்பிக் கொண்டுவர என் மனதை அவனிடம் அனுப்பினேன். அஃது என்வேலையைச் செய்யாமல் அங்கேயே நின்றுவிட்டது. அவன் அழகில் சுற்றிச் சுற்றிக்கொண்டிருக்கிற நான் மனதில்லாமல், எந்த ஸஹாயத்தைக்கொண்டு இது தகுந்தது இது தகாதது என்று விசாரிப்பேன். அலைகள் ஓங்கிக் கிளம்பிக்கொண்டிருக்கிற ஸமுத்ரத்தின் கோஷத்தைப் போல நல்ல வேதங்களின் கோஷம் எப்போதும் நிறைந்திருக்கிற தென் திருப்பேரையில் அவன் திருக்கையில் முழங்குகிற சங்கத்தை ஏந்திக்கொண்டு பெருமையோடு எழுந்தருளியிருக்கிறான். அவன் சங்கும் கையுமாயிருக்கும் அழகில் நான் மூழ்கிவிட்டேன், என்னைக்கோபித்துக்கொள்வதில் என்ன ப்ரயோஜனம்?

குறிப்பு:—தம்மனது அவனுடன் சேர்ந்தவுடனே தம்முடைய வேலையை மறந்துவிட்டது. அதைக் காண்பிப்பதற்காக நெஞ்சினாரென்று அறிவுள்ள பெரியவர்களைச் சொல்லுவதுபோல் ஆழ்வார் அருளிச்செய்கிறார்.

(இ-ம்) உசாகோ - உசாவுகோ. இடைக்குறை. கு - காலம் காட்டும் விகுதி; உசாவேனோ என்பது பொருள். (4)

---

முனிந்து சகட முதைத்து மாயப்
 பேய்முலை யுண்டு மருதி டைபோய்க்
கனிந்த விளவுக்குக் கன்றெ றிந்த
 கண்ண பிரானுக்கென் பெண்மை தோற்றேன்
முனிந்தினி யென்செய்தீ ரன்னை மீர்காள்!
 முன்னி யவன்வந்து வீற்றி ருந்த
கனிந்த பொழிற்றிருப் பேரை யிற்கே
 காலம் பெறவென்னைக் காட்டு மினே. (௫)

(ப - ரை) முனிந்து - கோபித்து, சகடம் - வண்டியை, உதைத்து, மாயம் பேய் - வஞ்சனையுடன் வந்த (பூதனை என்கிற) பேய்ச்சியினுடைய, முலையுண்டு - ஸ்தந்யத்தைப் பானம்பண்ணி, மருது இடை போய் - இரட்டையான மருத மரங்களின் நடுவே போய், கனிந்த - பழுத்த பழங்களையுடைய, விளவுக்கு - விளா மரத்தின்மேல், கன்று - கன்று ஆயமாய் வந்த அஸுரனை, எறிந்த, கண்ணபிரானுக்கு, என் பெண்மை - என்னுடைய பெண்களிருக்கவேண்டிய தன்மையை, தோற்றேன், இனி, அன்னைமீர்காள்! முனிந்து - (என்னைக்) கோபித்துக்கொண்டு, என் செய்தீர் - என்ன பிரயோஜனத்தை அடைகிறீர்கள், முன்னி - (எனக்கு) முன்னமேயே, அவன் வந்து நின்றிருந்த, கனிந்த பொழில் - பழங்களையுடைய தோட்டங்களையுடைய, திருப்பேரையிற்கு, காலம் பெற - சீக்கிரத்தில், என்னை, காட்டிமின் - காட்டுங்கள்.

(கருத்து) தாய்மார்களே! நீ இப்படி ஸாமான்ய பெண்களுக்கு இருக்கவேண்டிய தன்மைகளுக் கேற்றபடி இல்லை என்று சொல்லி கோபிக்கிறீர்களே! கண்ணனாய் அவதாரஞ் செய்து, தாய் ஸ்தந்யத்துக்காக அழுது கொண்டிருந்தபோது, அஸுரன் உள்ளே புகுந்திருந்த வண்டியைத் திருவடிகளால் உதைத்தான்; வஞ்சனையுடன் வந்த பூதனையென்கிற பேய்ச்சியின் ஸ்தந்யத்தைச் சாப்பிட்டு அவளைக் கொன்றான்; இரட்டையான மருதமரங்களின் நடுவிலேபோய் அவைகளை முறித்தான்; கன்று ஆயமாய் வந்த அஸுரனை விளாமரமாயிருந்த அஸுரன்மேலே எறிந்து இருவரையும் கொன்றான். இப்படி அவன் செய்த ஆச்சரியமான லீலைகளையும் விளாமரத்தைப் பார்த்த பார்வையையும் அவன் இப்போது எனக்குக் காட்ட, அவைகளுக்குத் தோற்றுப் பெண்களுக்கிருக்கவேண்டிய தன்மையையிழந்தேன். என்னைக் கோபித்துக்கொண்டு என்ன பிரயோஜனத்தை அடையப்போகிறீர்கள்? பழங்கள் நிறைந்த தோட்டங்களால் சூழப்பட்ட திருப்பேரையில் என் வரவை எதிர் பார்த்துக்கொண்டு எனக்கு முன்னமே வந்து எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுக்குச் சீக்கிரமாக என்னைக் கொண்டுபோய்க் காட்டுங்கள். (5)

காலம் பெறவென்னைக் காட்டு மின்கள்
காதல் கடலின் மிகப்பெரி தால்
நீல முகில்வண் ணத்தெம் பெருமா
னிற்குமுன் னேவந்தென் கைக்கு மெய்தான்
ஞாலத் தவன்வந்து வீற்றி ருந்த
நான்மறை யாளரும் வேள்வி யோவாக்
கோலச்செந் நெற்கள் கவரி வீசுங்
கூடு புனற்றிருப் பேரை யிற்கே. (௬)

(ப - ரை) காதல் - என் ஆசையானது, கடலில் - ஸமுத்ரத்தைக்காட்டிலும், மிக பெரிது - மிகப்பெரிதாயிருக்கிறது, நீல முகில வண்ணத்து - நீலமேகம்போன்ற வர்ணமுள்ள, எம்பெருமான், முன்னேவந்து நிற்கும் - (என கணணுககு) முனனேவந்து நிற்கிறான், என் கைக்கும் எய்தான் - என் கைகளுக்கும் அகப்படுகிறவனில்லை, ஞாலத்து - பூமியில், அவன் வந்து வீற்றிருந்த, நானமறையாளரும் - நான்கு வேதங்களைப் படிக்கிறவர்களும், வேள்வி-யாகங்களில், ஓவா-நிற்காமல வேலைகளைச் செய்துகொண்டிருக்கிற இடமான, கோலம் - அழகான, செந்நெற்கள - பழுத்த செந்நெற்பயிர்கள், கவரி வீசும் - அசைந்து சாமரங்களைப் போடும, கூடு புனல் - கூடின ஜலமுள்ள, திருப்பேரையிற்கே - திருப்பேரைக்கு, என்னை, காலம் பெற - சீக்கிரத்தில், காட்டு மின்கள் - (கொண்டுபோய் அவனுக்குக்) காட்டுங்கள்.

(கருத்து) "அவன் வேட்டைக்குப் போயிருக்கிறான். தானே திரும்பி வருவான். ஏன் அவசரப்படுகிறாய்?" என்று சொல்லுகிறீர்களே, எனக்கு அவனிடமிருக்கும் ஆசையானது உங்களுக்குத் தெரியாது. அது ஸமுத்திரத்தைக் காட்டிலும் அதிகப் பெரிதானது. ஆசையால், அவன் வருகிறவரையில் எனக்குப் பொறுத்திருக்க முடியுமோ? 'அந்த ஆசையைக் கொஞ்சம் அடக்கிக்கொள்' என்கிறீர்களோ? அவன் நீலமேகம்போன்ற திருமேனியின் அழகைக் காட்டிக்கொண்டு என் முன்னாலே நிற்கிறானே. இப்படி அவன் செய்யாவிட்டால் நீங்கள் சொன்னதை நான் செய்யலாம். "அவன் வந்து நின்றால், உனக்கு வேண்டியதுதான் கிடைத்துவிட்டதே இன்னும் என்ன குறைவு" என்கிறீர்களோ? அவன் கண்களுக்குமாத்திரம் தோன்

றுகிறான்; கைக்கு எட்டவில்லை. நாலு வேதங்களைப் படிக்கிறவர்கள் யாகங்களை அவனுக்கு ஆராதநமாக எப்போதும் செய்துகொண்டும், பழுத்த செந்நெற் பயிர்கள் அசைந்து புஷ்பங்கள் போட்டுக்கொண்டும் இப்படி அறிவுள்ளவைகளும் அறிவில்லாதவைகளும் கைங்கரியம் பண்ணும்படி பூமியில் ஜலம் நிறைந்த திருப்பேரையில் தன் பெருமை தோன்றும்படி மஹாநகராக வாழ்ந்தருளியிருக்கிறான். அந்த ஊருக்கு என்னைக் கொண்டுபோய்ச் சீக்கிரம் அவனுக்குக் காட்டுங்கள். தாமதித்தால் பொறுக்க முடியாது.

(இ - ம்) கடலில் - இல், ஐந்தாம் வேற்றுமை உருபு; எல்லைக்காட்டிலும் என்பது பொருள். [illegible] - [illegible] வினை முற்று. ஓவா - ஓவாத. பெயரெச்சம்; கடைக்குறை. ஆல் - அசைநிலை. (6)

---

பேரெயிற் சூழ்கடற் றென்னி லங்கை
  செற்றபி ரான்வந்து வீற்றி ருந்த
பேரையிற் கேபுக்கென் னெஞ்சம் நாடிப்
  பேர்த்து வரவெங்குங் காண மாட்டேன்
ஆரை யினியிங் குடையந் தோழீ
  யென்னெஞ்சங் கூவவல் லாரு மில்லை
யாரை யினிக்கொண்டென் சாதிக் கின்று
  தென்னெஞ்சங் கண்டது வேகண் டேனே. (எ)

(ப - ரை) பேர் - பெரிய (உயர்ந்த), எயில் - மதில்களால், சூழ் - சூழப்பட்ட, கடல் தென் இலங்கை - (நாற்புறமும்) சமுத்திரத்தை நாலுபக்கத்திலுமுடைய தெற்குத் திசையிலிருக்கும் இலங்கையை, செற்ற பிரான் - அழித்து உபகாரம் செய்த எம்பெருமான், வந்து வீற்றிருந்த, பேரையிற்கே - திருப்பேரையில், புக்கு - புகுந்து, நாடி - (அவனை) தேடி, என் நெஞ்சம் - என் மனது, பேர்த்து - திரும்பவும், எங்கும், வர காணமாட்டேன், இனி, தோழீ! இங்கு - இந்த இருப்பில், ஆரை உடையம் - ஆரைத் துணையாக நாமுடையோம், என் நெஞ்சம் கூவ வல்லாரும் இல்லை - என் மனதைக் கூப்பிடச் சக்தியுள்ளவருமில்லை;

இனி, ஆரைக்கொண்டு, என் சாதிக்கின்றது-எதைச் செய்கிறது? என் நெஞ்சம் கண்டதுவே - என் மனது பார்த்ததையே, கண்டேனே - நானும் கண்டுவிட்டேன்.

(கருத்து) 'உனக்கு எம்பெருமானிடத்தில் அளவில்லாத ஆசையிருக்கிறது; அதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன்; ஆனபோதிலும் நீ அங்கே போவது தகுந்ததன்று; அவன் வருகிற வரையில் இங்கேயிரு' என்று சொல்லுகிறாயே? உயர்ந்த மதில்களால் சூழப்பட்டு ஸமுத்திரத்தை அகழ்போல் நாலு பக்கத்திலுமுடைய தென்னிலங்கையிலுள்ள ராவணனையும், அவன் பிள்ளை முதலான பந்துக்களையும் சக்ரவர்த்தித் திருமகனும் அவதரித்து நாசம் செய்து விஜயஸ்ரீயுடன் இப்போது தென் திருப்பேரையில் எழுந்தருளியிருப்பதை என் மனது பார்த்து இன்னம் திரும்பி வரவில்லை. ஏ! தோழியே! இங்கு நமக்கு எந்தத் துணை இருக்கிறது? அங்கே இருக்கிற என் மனதை அழைத்துக் கொண்டுவரச் சக்தியுள்ளவன் ஒருவனுமில்லை. இப்படியான பிறகு நீயும் நானும் எந்த ஸஹாயத்தைக்கொண்டு எந்த ப்ரயோஜனத்தை அடைவது? ஆகையாலே, என் மனது எங்கே போய் புகுந்திருக்கிறதோ, அங்கேயே நான் போக வேண்டியது. வேறொன்றும் முடியாது.

குறிப்பு :—(1) தோழி தம்மைப்போலவே தமக்கு ஸமமான ஸுகத்தையும் துக்கத்தையுமுடையவளாகையாலே அவளையும் சேர்த்துக்கொண்டு 'உடையம்' என்று தன்மைப் பன்மைச் சொல்லால் சொல்லுகிறார்.

(2) அவன், விரோதிகளை நாசம்பண்ணி விஜயலக்ஷ்மியை அடைந்து சிரமப்பட்டு வந்திருக்கிறான். கரன் தூஷணன் முதலானவர்களை வதம் செய்துவந்த சக்ரவர்த்தித்திருமகனை ஸீதை கட்டிக்கொண்டு அவன்ச்ரமத்தைப் போக்கினதுபோல், நானும் திருப்பேரைக்குப் போய் இலங்கையை நாசம் செய்ததாலுண்டான அவன்தாபம் போகும்படி அவனுக்குச் சீதோபசாரம் செய்யவேண்டும் என்பது நாயகியின் கருத்து. (7)

கண்டதுவே கண்டேல் லாருங் கூடிக்
கார்க்கடல் வண்ணனோ டென்றி றத்துக்
கொண்ட லர்தூற் றிற்றது முதலாக்
கொண்டவென் காத லுரைக்கிற் றோழீ
மண்டிணி ஞாலமு மேழ் கடலும்
நீள்வி சும்புங் கழியப் பெரிதால்
தெண்டிரை சூழ்ந்தவன் வீற்றி ருந்த
தென்றிருப் பேரையில் சேர்வன் சென்றே. (அ)

(ப - ரை) தோழி, கண்டதுவே கண்டு - வெளியிலிருப்பதையே பார்த்து, எல்லாரும் கூடி, கார் கடல் வண்ணனோடு - கறுத்த ஸமுத்திரத்தின் வர்ணத்தையுடையவனோடு, என் திறத்து - (அவன் பக்கத்திலுண்டான) என்னுடைய ஆசையை, கொண்டு - (அதையே குற்றமாக) கொண்டு, அலர் - பழிகளை, தூற்றிற்றது முதலா - தூற்றினதையே விருத்தி பண்ணும் காரணமாகக் கொண்டு, கொண்ட - மிகவும் அதிகமான, என் காதல் - என் ஆசையை, உரைக்கில் - சொல்ல ஆரம்பித்தால், மண் திணி - மண் நெருங்கியிருக்கிற, ஞாலமும் - பூமியும், எழ் கடலும் - ஏழு ஸமுத்திரங்களும், நீள் விசும்பும் - நீண்ட ஸ்வர்க்க லோகமும், கழிய - மீறும்படி (அவைகளிலடங்காமல்), பெரிது - பெரிதாயிருக்கிறது, தெண் திரை - தெளிந்த அலைகளாலே, சூழ்ந்து, அவன் வீற்றிருந்த, தென் திருப்பேரையில், சென்று, சேர்வன் - போய்ச்சேருவேன்.

(கருத்து) எனக்குப் பிரியத்தைச் செய்யும் தோழிகளும், ஹிதத்தைச்செய்யும் தாய்மார்களும் ஆகிய நீங்கள் என் மனதிலிருப்பதை அறியாமல் மேலே காணப்பட்டதைக்கொண்டு எம்பெருமானிடம் எனக்கு உண்டாயிருக்கும் ஆசையைக் குற்றமாக நினைத்து, "ஒருத்திக்கு நீலவர்ணமான ஸமுத்திரத்தின் வர்ணமுள்ளவன் விஷயத்தில் இவ்வளவு ஆசையிருக்கலாமோ? இது நம்முடைய குலத்துக்குப் பழியாகாதோ?" என்று சொல்லுகிறீர்களே. இப்படி நீங்கள் சொல்லாமலிருந்தால் என் ஆசை ஒருவேளை அடங்கியிருக்கலாம். நீங்கள் சொல்லுவதே அது விருத்தியடைவதற்குக் காரணமாயிருந்தது. அஃது இப்போது எவ்வளவு என்று சொல்லவேண்டுமோ? இந்தப் பூமியிலும் ஏழு

ஸமுத்திரங்களிலும் விசாலமான வைகுந்தலோகத்திலும் அஃது அடங்காது. ஆகையால், தெளிந்த தாம்ரபர்ணியின் ஜலத்தால் சூழப்பட்ட பெருமையுடன் அவன் எழுந்தருளியிருந்த திருப்பேரைக்கு நீங்கள் கொண்டுபோய் விடாதபோனாலும் நானே போய்ச் சேருவேன். அந்த ஊரே அநுபவத்துக்குத் தகுந்தது. அங்கே போகவேண்டாமா?

(இ - ம்) முதலா - முதலாக : வினையெச்சம் ; கடைக்குறை. ஆல் : அசைநிலை. (8)

---

சேர்வன்சென் றென்னுடைத் தோழி மீர்கா
 ளன்னையர் காளென்னைத் தேற்ற வேண்டா
நீர்களு ரைக்கின்ற தென்னி தற்கு
 நெஞ்சு நிறைவு மெனக்கிங் கில்லை
கார்வண்ணன் கார்க்கடல் ஞால முண்ட
 கண்ண பிரான்வந்து வீற்றி ருந்த
ஏர்வள வொண் கழனிப் பழனத்
 தென்றிருப் பேரை யின்மா நகரே. (௯)

(ப - ரை) என்னுடை - என்னுடைய, தோழிமீர்காள்! அன்னையர்காள்! என்னை, தேற்ற வேண்டா - (நீங்கள்) ஸமாதானம் பண்ணவேண்டா, இதற்கு - (நான் அங்கே) போவதற்கு, என் - எந்த விரோதத்தை, நீர்கள் - நீங்கள், உரைக்கின்றது - சொல்லுகிறது? நெஞ்சும் - மனதும், நிறைவும் - (குணங்களின்) நிறைவும், எனக்கு இங்கில்லை. கார்வண்ணன் - நீலவர்ணமுள்ளவனும், கார் கடல் ஞாலம் - நீலமான ஸமுத்திரத்தாலே சூழப்பட்ட பூமியை, உண்ட, கண்ணபிரான், வந்து-(என்னோடு சேருவதற்காக எனக்கு) முன்னமே வந்து, வீற்றிருந்த, ஏர்வளம் - ஏர்களின் ஸம்ருத்தியையுடைய, ஒண்-அழகான, கழனி-வயல்களையும், பழனம் - நீர் நிலங்களையும், உடைய, தென்திருப்பேரையின் மா நகரே-தென்திருப்பேரையென்கிற பெரிய பட்டணத்தை, சென்று - போய், சேர்வன் - சேருவேன்.

(கருத்து) 'இப்போதே அவன் வந்துவிடுவென், அவஸரப்பட வேண்டாம்; அப்படிப் போவதும் உசிதமன்று' என்று தோழிகளும் தாய்மார்களும் தடுக்க, அவர்களைப் பார்த்து, என்னுடைய

தோழிகளே! தாய்மார்களே! நீங்கள் அங்கே போவதற்குத் துணிந்த எனக்கு ஸமாதானம் சொல்லவேண்டாம். நான் அங்கே போவதற்கு என்ன விரோதத்தை நீங்கள் சொல்லுகிறீர்கள் என்றும், அங்கே போனால் என்ன விரோதம் வரும் என்றும் கேட்கிறேன், 'நீ போவது உன் தைரியத்துக்கும் சாதுர்யத்துக்கும் விரோதம்' என்று பதில் சொல்லுகிறீர்களோ? தன் நீலமான திருமேனியின் அழகாலும் பிரளயகாலத்தில் பூமியை வயிற்றில்வைத்து ரக்ஷித்துக்காட்டின கருணையாலும் கண்ணனாய் அவதாரஞ்செய்து இடைப்பிள்ளைகளுடனும் இடைப்பெண்களுடனும் சேர்ந்திருந்த ஸௌசீல்யமென்கிற குணத்தாலும் அப்போது அவன் ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதற்குச் செய்த லீலைகளாலும் எம்பெருமான் என் மனதையும் இந்த என் குணங்களையும் ஏற்கனவே அபகரித்துக்கொண்டுவிட்டான். அவைகள் இப்போது என்னிடமில்லை. ஏர்களின் ஸமிருத்திகளையுடைய வயல்களும், நீர் நிலங்களும் நிறைந்த திருப்பேரையில் என்னுடன் சேருவதற்காக முன்னாலேயே வந்து தான் எல்லாருக்கும் மேற்பட்டவன் என்று தோன்றும்படி எழுந்தருளியிருக்கிறானே. அந்த ஊருக்கு நான் போய்ச்சேருவேன். நீங்கள் சொல்லுகிற வார்த்தையைக்கேட்டு திரும்பிவரமாட்டேன்.

குறிப்பு:—ஏர் என்பது ஒரு கலப்பையில் பூட்டின இரட்டைக் காளைமாடுகள். (9)

---

நகரமு நாடும் பிறவுந் தேர்வே
 ணெனக் கில்லையேன் றேழி மீர்காள்
சிகர மணிநெடு மாட நீடு
 தென்றிருப் பேரையில் வீற்றி ருந்த
மகர நெடுங்குழைக் காதன் மாயன்
 நூற்று வரையன்று மங்க நூற்ற
நிகரில் முகில்வண்ண னேமி யானென்
 னெஞ்சங் கவர்ந்தெனை யூழி யானே. (௧0)

(ப - ரை) என் தோழிமீர்காள்! நகரமும் - பட்டினத்திலிருப்பவர்களையும், நாடும்-தேசத்திலிருப்பவர்களையும், பிறவும்-மற்றவிடங்களிலிருக்கிறவர்களையும், தேர்வேன் - தேடுவேன்,

நாண் - வெட்கம், எனக்கு இல்லை. சிகரம் - சிகரங்களையுடைய, மணி - ரத்நங்களால் செய்யப்பட்ட, நெடு - உயர்ந்த, மாடம் - வீடுகள் நிறைந்ததும், நீடு - வெகுகாலமிருப்பதுமான, தென் திருப்பேரையில் வீற்றிருந்த, மகர நெடுங்குழைக்காதன், என்கிற திருநாமமுள்ளவனும், மாயன் - ஆச்சரியமானவனும், அன்று - (பாரதயுத்தம் நடந்த) அந்தக் காலத்தில், நூற்றுவரை - துர்யோதனன் முதலான நூறுபேர்களை, மங்க - நாசம் அடையும்படி, நூற்ற - மந்திராலோசனை செய்தவனும், நிகர் இல் - ஒப்பில்லாதவனும், முகில் வண்ணன் - நீலமேகம்போன்ற வர்ணமுள்ளவனும், நேமியான் - (அந்தச் சண்டையில் பகலை இராத்திரியாக்கின) சக்கரத்தையுடையவனுமான எம்பெருமான், என் நெஞ்சம் கவர்ந்து - என் மனதை அபஹரித்து, எனை ஊழியான் - எத்தனை கல்பங்களையுடையவன்.

(கருத்து) தோழிமார்களே! 'நீ எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பேரைக்குப்போனால், பட்டணங்களிலும் தேசங்களிலும் மற்றவிடங்களிலும் இருக்கிறவர்கள் உனக்குப் பழி சொல்லமாட்டார்களா?' என்று சொல்லுகிறீர்களோ? அப்படி பழிசொல்லுவதையே நான் தேடுகிறேன். அதுவே எனக்கு அழகம்போல் புருஷார்த்தமாயிருக்கும். 'அவர்கள் பழிசொன்னால், உனக்கு வெட்கமாய் இருக்காதோ?' என்கிறீர்களோ? அஃது என்னிடம் இப்போதில்லை. சிகரங்களையுடைய ரத்நங்களால் செய்யப்பட்ட உயர்ந்த வீடுகளையுடையதாய் வெகுகாலமிருக்கக்கூடிய திருப்பேரையில் மகரநெடுங்குழைக்காதன் என்கிற திருநாமத்துடன் வீற்றிருந்த எம்பெருமான், மேகம்போன்ற திருமேனியழகாலும் பாரதயுத்தத்தில் துர்யோதநன் முதலான நூறுபேர்களை நாசம் அடையும்படி மந்திராலோசனை செய்த லீலையாலும், அந்தச் சண்டையில் சக்கரத்தைக்கொண்டு பகலை ராத்திரியாக ஆக்கின லீலையாலும், தனக்கு ஒத்தவர் இல்லாத இருப்பாலும் என்னுடைய வெட்கத்தை எத்தனை கல்பங்களுக்கு முன்னாலே அபஹரித்துவிட்டான்.

குறிப்பு:—மகரநெடுங்குழைக்காதன் என்பதற்கு, மீனைப் போன்றதாயும் நீண்டதாயுமிருக்கிற குழைகளை (கடுக்கன்களை) யுடைய காதுகளையுடையவன் என்பது பொருள்.

(இ-ம்) நாடு, நகரம், பிற - என்கிற சொற்கள் ஆகுபெயர்களாய் அவைகளிலிருக்கிறவர்களைச் சொல்லுகின்றன. (10)

---

ஊழிதோ றூழி யுருவும் பேருஞ்
  செய்கையும் வேறவன் வையங் காக்கும்
ஆழிநீர் வண்ண னையச் சுதனை
  யணிகுரு கூர்ச்சட கோபன் சொன்ன
கேழிலந் தாதியோ ராயி ரத்து
  ளிவைதிருப் பேரையின் மேய பத்தும்
ஆழியங் கையனை யேத்த வல்லா
  ரவரடி மைத்திறத் தாழி யாரே. (கக)

(ப-ரை) ஊழி ஊழி தோறும் - ஒவ்வொரு கல்பத்திலும், உருவும் - ரூபங்களும், பேரும் - திருநாமங்களும், செய்கையும் - செய்கிற லீலைகளும், வேறவன் - வேறாயிருக்கிறவனும், வையம் - எல்லா உலகங்களையும், காக்கும் - ரக்ஷிக்கிறவனும், ஆழி நீர் வண்ணனை - ஸமுத்திரஜலம்போல் வர்ணமுள்ளவனும், அச்சுதனை - ஆச்ரிதர்களைக் கைவிடாதவனுமான, எம்பெருமானைப் பற்றி, அணி - (உலகத்துக்கு எல்லாம்) அலங்காரமான, குருகூர் சடகோபன் சொன்ன, கேழ் இல் - ஒப்பில்லாத, அந்தாதி - அந்தாதி ரூபமாகிய, ஓர் - விலக்ஷணமான, ஆயிரத்து - ஆயிரத்துள், திருப்பேரையின் மேய - திருப்பேரையைச் சேர்ந்த (திருப்பேரை விஷயமான), இவைபத்தும் - இந்தப் பத்துப்பாட்டுகளையும், கொண்டு, ஆழி அம் கையனை - திருவாழியாலே அழகான திருக்கையுடையவனை, ஏத்த வல்லார் அவர் - ஸ்தோத்ரம் பண்ணச் சக்தியுள்ளவர்கள், அடிமைத்திறத்து - கைங்கரியம் செய்கிற விஷயத்தில், ஆழியார் - திருவாழிபோலிருப்பார்கள்.

(கருத்து) ஒவ்வொரு கல்பத்திலும் வெவ்வேறு ரூபங்களும் திருநாமங்களும் லீலைகளுமுள்ளவனும், எல்லா உலகங்களையும் ரக்ஷிக்கிறவனும், ஸமுத்திரஜலம்போல் நீலவர்ணமுள்ளவனும், ஆச்ரிதர்களைக் கைவிடாதவனுமான எம்பெருமானைப் பற்றி ஆழ்வார் திருப்பேரை விஷயமாய்ச் சொன்ன இந்தப்

பத்துப் பாட்டுக்களையுங்கொண்டு திருவாழியும் கையுமாயிருக்கும் அழகை ஸ்தோத்திரம் பண்ணச் சக்தியுள்ளவர்கள் திருவாழியைப்போல அந்தரங்கமான கைங்கரியங்களைச் செய்வர்கள்.

(இ - ம்) மேய - மேவிய : பெயரெச்சம் ; கடைக்குறை. (11)

---

[illegible] || அ௩ ||

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களை ரக்ஷிக்கிறான் என்பதைப் பத்துக்காரணங்களால் ஆழ்வார் வெளியிடுகிறார். அவைகளாவன :—(1) தாமரைக்கண்ணனாய் மணதிலிருப்பது ; (2) பரமபதத்திலிருப்பது ; (3) தன்னைச் சேர்ந்தவர்களுக்கு உபகாரம் பண்ணுவது ; (4) முழங்குகிற சங்கத்தைக் கையிலுடையவனாயிருப்பது ; (5) ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம்செய்வது ; (6) தன்னிடத்தில் ஆசையை விருத்திபண்ணுவது ; (7) உலகங்களை ரக்ஷிப்பது ; (8) ஸமுத்திரம்போல் அழகாயிருப்பது ; (9) ஆபத்காலத்தில் ரக்ஷிப்பது ; (10) மீன்போன்ற அழகான குண்டலங்களையும், திருமேனியின் காந்தியையும் உடையவனாயிருப்பது. (83)

---

## நான்காம் திருவாய்மொழி.

அவ—கீழ்த்திருவாய்மொழியில் இப்போதே எம்பெருமானுடைய பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்கவேண்டும் என்று ஆழ்வார் அவஸரப்பட்டார் என்று சொல்லப்பட்டது. அவர் வருத்தத்தைப்பார்த்து பெரியபெருமாள் விஜயலக்ஷ்மியுடன் மிகவும் தெளிவாய் அவர் மனதில்தோன்ற, அவனைப்பார்த்து, அவர் ஸந்தோஷப்பட்டு அவனை இந்தத் திருவாய்மொழியில் கொண்டாடுகிறார்.

(2) இப்படியே சக்ரவர்த்தித் திருமகன் கரன் தூஷணன் முதலானவர்களை ஸம்ஹாரம்செய்து விஜயலக்ஷ்மியுடன் திரும்பி வந்தபோது ஸீதை அவனைக் கட்டிக்கொண்டு ஸ்தோபசாரம் செய்தாள். அதுபோல் ஆழ்வாரும் ஸந்தோஷப்பட்டு அவனுடைய ஆச்சரியமான லீலைகளைச்சொல்லி அநுபவிக்கிறார் :—

(கலிவிருத்தம்.)

ஆழி யெழச்சங்கும் வில்லு மெழத்திசை
வாழி யெழத்தண்டும் வாளு மெழவண்டம்
மோழை யெழமுடி பாத மெழவப்பன்
ஊழி யெழவுல கங்கொண்ட வாறே. (க)

(ப - ரை) திசை - திக்குக்களிலே, வாழி எழ - (ஸ்தோத்ரம் பண்ணுகிறவர்களுடைய) வாழி ! வாழி ! என்கிற சொற்கள் எழும்பும்படியாகவும், அண்டம் மோழை எழ - (வளர்ந்த திரிவிக்கிரமன் திருமேனி அண்டத்துக்குள் அடங்காமல் ஆவரணஜலம்) குமிழியிட்டு அண்டத்துக்குள் வரும்படி, முடி பாதம் எழ - திருமுடியும் திருவடிகளும் வளரும்படியும், ஆழி எழ - சக்ரம் என்கிற ஆயுதம் வளரும்படியும், (அதன் பின்னாலே) சங்கும் வில்லும், எழ - வளரும்படியும், தண்டும் - கதையும், வாளும் - கத்தியும், எழ - வளரும்படியும், ஊழி எழ - கல்பமானது (நல்ல காலமானது) வரும்படியும், அப்பன் - பெரிய உபகாரம் செய்த ஸர்வேச்வரன், உலகம் கொண்ட ஆறு-உலகங்களை (மஹாபலியிடமிருந்து) எடுத்துக்கொண்ட விதம் (மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது).

(கருத்து) என் அப்பன் வாமநனாயிருந்து வளரும் ஸமயத்தில் பதினான்கு உலகங்களிலுமிருக்கிற எல்லா ஆத்மாக்களாலே ஸ்தோத்ரம் பண்ணப்பட்டவனாய் சக்கிரம் முதலான ஆயுதங்களுடன் வளர்ந்து, அண்டம் முழுவதிலும் வியாபித்து, மஹாபலியிடமிருந்து உண்டான கஷ்டம் போய் நல்லகாலம் வரும்படி உலகங்களையளந்து அவைகளை அவனிடமிருந்தெடுத்துக்கொண்ட விதம் என்ன ஆச்சரியம்!

குறிப்பு:—(1) எம்பெருமான் இப்படி வளரும்போது அஸுரர்கள் அவனை எதிர்ப்பார்களோ என்று பயந்து திருவாழி வளர்ந்தது என்பதும், அதன் பின்னாலே மற்ற ஆயுதங்களும் வளர்ந்தன என்பதும் கருத்து. (1)

---

ஆறு மலைக்கெதிர்ந் தோடு மொலியர
வூறு சுலாய்மலை தேய்க்கு மொலிகடல்
மாறு சுழன்றழைக் கின்ற வொலியப்பன்
சாறு படவமு தங்கொண்ட நான்றே. (உ)

(ப-ரை) அப்பன், சாறுபட - (திருப்பாற்கடலில்) ஸாரமான வஸ்துக்கள் மேலே கிளம்பிவரும்படி (கடைந்து), அமுதம் கொண்ட - அமிர்தத்தை எடுத்துக்கொண்ட, நான்று - (அந்தக்) காலத்தில், ஆறு - ஆறுகள், மலைக்கு - அவை உண்டான இடங்களான மலைகளுக்கு, எதிர்ந்து ஓடும் ஒலி - எதிர்த்து ஓடுகிற சப்தமும், அரவு ஊறு - (வாஸுகி என்கிற) பாம்பின் உடம்பை, சுலாய் - சுற்றி, மலை தேய்க்கும் ஒலி-(மந்தரம் என்கிற) மலையைத் தேய்க்கும்போதுண்டான (சரசர என்கிற) சப்தமும், கடல் - ஸமுத்ரமானது, மாறு சுழன்று - பக்கத்தில் அங்குமிங்கும் சுழன்று, அழைக்கின்ற - உண்டாக்கும், ஒலி - சப்தமும், (உண்டாயின).

(கருத்து) அப்பன் ஸாரங்களான வஸ்துக்கள் மேலேகிளம்பும்படி திருப்பாற்கடலைக் கடைந்து அமுதத்தை எடுத்துக் கொண்டகாலத்தில், ஆறுகள் தாங்கள் உண்டான மலைகளைநோக்கி எதிர்த்துப்போன சப்தமும், வாஸுகி என்கிற பாம்பைச்சுற்றி

இழுக்கும் ஸமயத்தில் மந்தரம் என்கிற மலேயோடு உரைகிற சப்தமும், ஸமுத்ரம் அங்குமிங்கும் சுழன்றுகொண்டு உண்டாக்கின சப்தமும் என்ன ஆச்சரியம்!

(இ - ம்) சுலாய் - சுலாவி : வினையெச்சம். (2)

---

நான்றில வேழ்மண்ணுந் தானத்த வேபின்னும்
நான்றில வேழ்மலை தானத்த வேபின்னும்
நான்றில வேழ்கடல் தானத்த வேயப்பன்
ஊன்றி யிடந்தெயிற் றிற்கொண்ட நாளே. (௩)

(ப - ரை) அப்பன், ஊன்றி - (பிரளய ஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை) குத்தி, இடந்து - அதினின்றும் எடுத்து, எயிற்றில் - தெற்றிப்பல்லில், கொண்டநாள்-எடுத்துக்கொண்ட காலத்தில், நான்றில - (தங்கள் இடங்களைவிட்டு) அசையாதவைகளாகி, ஏழ் மண்ணும் - ஏழு தீவுகளும், தானத்த - (தங்கள் தங்கள்) இடங்களிலிருந்தன, பின்னும், நான்றில - அசைவில்லாதவைகளாய், ஏழ்மலை - ஏழு பெரியமலைகளும், தானத்த - (தங்கள் தங்கள்) இடங்களிலேயிருந்தன, பின்னும், நான்றில - அசைவில்லாதவைகளாய், ஏழ் கடல் - ஏழு ஸமுத்ரங்களும், தானத்த - (தங்கள் தங்கள்) இடங்களிலிருந்தன.

(கருத்து) அப்பன் வராஹ ரூபத்தையெடுத்துக்கொண்டு பிரளயஜலத்தில் மூழ்கியிருந்த பூமியைத் தன்னுடைய தெற்றிப் பல்லின்முனையால்குத்தி அதைமேலே கொண்டுவந்த நாளில், ஏழு தீவுகளும் ஏழுபெரிய மலைகளும் ஏழு ஸமுத்ரங்களும் தங்கள் தங்கள் இடங்களைவிட்டு அசையாமல் அங்கங்கேயேயிருந்தன. இஃதென்ன ஆச்சரியம்!

குறிப்பு :—ஒவ்வொன்றுமே மிகவும் ஆச்சரியமாயிருந்தது என்று காட்டுவதற்காக 'பின்னும்' என்கிற சொல் இரண்டு தடவை சேர்க்கப்பட்டிருக்கிறது.

(இ - ம்) நான்றில - நால் + ற் + இல் + அ. நால்பகுதி ; ற் - இறந்தகால இடைநிலை. இல்-எதிர்மறை விகுதி ; அ-பலவின்பால் வினைமுற்று விகுதி. அசைந்தில என்பது பொருள். (3)

---

நாளு மெழநில நீரு மெழவிண்ணுங்
கோளு மெழவெரி காலு மெழமலை
தாளு மெழச்சுடர் தானு மெழவப்பன்
ஊளி யெழவுலக முண்ட வூணே. (௪)

*(ப - ரை) நாளும் - நாள் முதலான எல்லாக் காலங்களும், எழ - நிலைகுலையும்படி, நிலம் நீரும் - பூமியும் ஜலமும், எழ, விண்ணும் - ஆகாசமும், கோளும் - (நவக்ரஹங்களான) தேஜஸ்ஸுகளும், எழ, எரி காலும் - நெருப்பும் காற்றும், எழ, மலை தாளும் - மலைகளின் அடிகளும், எழ, சுடர் தானும்-நக்ஷத்திரங்களாகிய தேஜஸ்ஸுகளும், எழ, அப்பன், ஊளி எழ - (குடிக்கிற) சப்தமானது உண்டாகும்படி, உலகம்கொண்ட வூணே - உலகங்களைப் பக்ஷித்த பக்ஷணம்.*

*(கருத்து) பிரளயகாலத்தில் அப்பன் ஐந்து பூதங்களும் மலைகளின் அடிகளும் நவக்ரஹங்களும் நக்ஷத்திரங்களும் நிலை குலையும்படியும், ஸமுத்ரஜலத்தை உறிஞ்சின சப்தம் மேலே கிளம்பும்படியும் உலகங்களைப் பக்ஷித்தது என்ன ஆச்சரியம்!* (4)

---

ஊணுடை மல்லர் ததர்ந்த வொலிமன்னன்
ஆணுடைச் சேனை நடுங்கு மொலிவிண்ணுள்
ஏணுடைத் தேவர் வெளிப்பட்ட வொலியப்பன்
காணுடைப் பாரதங் கையறை போழ்தே. (௫)

*(ப - ரை) அப்பன், காணுடை - காண்கையை உடைய (பார்க்கத்தகுந்ததான), பாரதம் - பாரதச்சண்டையில், கை யெறிபோழ்து - (சேனையை அணிவகுத்து, நீங்களிப்படி யிருங்கள், நாங்கள் அப்படியிருக்கிறோம் என்று) கையைக்காட்டி முதலில் ஏற்பாடு செய்தகாலத்தில், ஊண் உடை - (பலமுண்டாவதற்காக) சாப்பாட்டையுடைய, மல்லர், ததர்ந்த ஒலி - நெருங்கின சப்தமும் (ஒருவரோடு ஒருவர் நெருங்கி உடம்பு முறிகிற சப்தமும்), ஆண் உடை-ஆண்மைத்தன்மையையுடைய, ஸேனை - ஸேனைகளிலிருந்த, மன்னர்-(துர்யோதநனைச்சேர்ந்த) ராஜாக்கள் நடுங்கும் - (அப்பன் அர்ஜுனனுக்கு தேரோட்டுவதைக்) கண்டு நடுங்கின சப்தமும், ஏண் உடை-எண்ணு தலையுடைய (பிரஸித்தர்*

கள் என்று எண்ணப்பட்ட), தேவர் - (பிரம்மா முதலான) தேவர்கள், விண்ணுள் - ஆகாசத்தில், வெளிப்பட்ட ஒலி - வந்து தோன்றின கோஷமும், என்ன ஆச்சரியம்!

(கருத்து) அப்பன், பாரதச் சண்டையில் ஸேனையைக் கையைநீட்டி அணிவகுத்து ஸாரத்யம் பண்ணின காலத்தில் கொழுத்து பருத்த மல்லர்கள் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து உடம்புகளை முறித்த சப்தமும், துர்யோதநன் ஸேனையிலிருந்த ஆண்தன்மையுள்ள ராஜாக்கள் கண்ணனைக்கண்டு பயந்து செய்த சப்தமும், பிரஸித்தரான பிரம்மா முதலான தேவர்கள் ஆகாசத்தில் வந்திருந்து கண்ணனைக் கொண்டாடின சப்தமும் என்ன ஆச்சரியமாயிருந்தன.

(இ - ம்) ஊண் - முதனிலை திரிந்த தொழிலாகுபெயர். ஏண் - முதனிலை திரிந்த தொழிற்பெயர். காண் - முதனிலைத் தொழிற்பெயர். (5)

---

போழ்து மெலிந்தபுன் செக்கரில் வான்றிசை
சூழ மெழுந்துதி ரப்புன லாமலை
கீழ்து பிளந்த சிங்கமொத்த தாலப்பன்
ஆழ்துயர் செய்தசு ரரைக்கொல்லு மாறே. (சு)

(ப - ரை) போழ்து - காலம் (பகலானது), மெலிந்த - இளைத்த, (முடிவையடைந்த), புன் செக்கரில் - அற்பமான சிகப்பில், (செவ்வானமுள்ள ஸந்தியாகாலத்தில்), வான்-ஆகாசமும், திசை-திக்குக்களும், சூழும்-சுற்றிலும், எழுந்து, உதிரம் புனல் ஆ-ரத்த ஜலமாக ஓடும்படி, அப்பன், ஆழ் துயர்-ஆழமான (மிகுந்த) துன்பத்தை, செய்து, அசுரரை-(ஹிரண்யகசிபு என்கிற) அஸுரனை, கொல்லும் ஆறு - கொன்ற விதம், மலை - மலையை, கீழ்து - கீழாகும்படி (தான் மேல் ஏறிக்கொண்டு), பிளந்த, சிங்கம்-ஸிம்மத்துக்கு, ஒத்தது - ஒத்திருந்தது.

(கருத்து) அப்பன் ஸந்தியாகாலத்தில் ஹிரண்யகசிபு என்கிற அஸுரனுக்கு மிகுந்த துன்பத்தைச்செய்து ரக்தமான ஆறு எங்கும் ஓடும்படி கொன்றது மிகவும் ஆச்சரியம். அஃது ஒரு சிங்கம் மலைமேல் ஏறிக்கொண்டு அதைப்பிளந்தாற்போலிருந்தது.

குறிப்பு :—அசுரரை—அவன் அதிக பலமுள்ளவன் என்று காட்டுவதற்காகப் பன்மைச்சொல்.

(இ - ம்) புனல் ஆ - ஆக : ஈறுகெட்ட வினையெச்சம். கீழ்து- குறிப்புவினையெச்சம் ; கீழிடத்துள்ளதாய் என்பது பொருள். (6)

---

மாறு நிரைத்திரைக் குஞ்சரங் களின
நூறு பிணமலை போல்பு ரளக்கடல்
ஆறு மடுத்துதி ரப்புன லாவப்பன்
நீறு படவிலங் கைசெற்ற நேரே. (எ)

(ப - ரை) நூறு இனம்-நூறு நூறு கூட்டங்களான, பிணம்- (ராக்ஷஸப்பிணங்கள்) மலைபோல்-மலைகள்போல, புரள - புரளும் படியும், கடல் - ஸமுத்திரம், ஆறு மடுத்து - ஆறுகளில் திரும்பி ஓடும்படி, உதிரம் புனல் ஆ - ரத்த ஜலமாகும்படியும், அப்பன், இலங்கை, நீறுபட - தூளிகளாய் எழும்படி, செற்ற நேர் - நாசம்பண்ணின காலத்தில், சரங்கள் - பாணங்கள், மாறு - ஒன்றையொன்று எதிர்த்து, நிரைத்து - கூட்டமாய்ச் சேர்ந்து, இரைக்கும் - சப்தித்தன.

(கருத்து) அப்பன், சக்ரவர்த்தித்திருமகனாய் ராக்ஷஸர் கள் பிணங்கள் மலைகள்போல் கூட்டங்கூட்டங்களாகப் புரளும்படி யும், ஸமுத்ரம் முழுவதும் ரத்த வெள்ளத்தால் நிறைந்து ஆறு களில் எதிர்த்து ஓடும்படியாகவும், லங்கையென்கிற பட்டணம் தூளியாய் கிளம்பும்படியும் அதை நாசம் செய்தான். அப்போது அவன் விட்ட பாணங்கள் ஒன்று ஒன்றை எதிர்த்து ஒன்றோ டொன்று கூட்டங்களாய்ச் சேர்ந்து எவ்வளவு ஆச்சரியமான சப்தத்தையுண்டுபண்ணின.

(இ - ம்) புனல் ஆ - புனல்ஆக : ஈறுகெட்ட வினையெச்சம். நேர் - நேரம். (7)

---

நேர்சரிந் தான்கொடிக் கோழிகொண் டான்பின்னும்
நேர்சரிந் தானெரியு மனலோன் பின்னும்
நேர்சரிந் தான்முக்கண் மூர்த்திகண் டீரப்பன்
நேர்சரி வாணன்திண் டோள்கொண்ட வன்றே. (அ)

(ப - ரை) அப்பன், நேர் சரி - நேரிலிருந்து விலகின, வாணன் - வாணன் என்கிற அஸுரனுடைய, திண் - திடமுள்ள, தோள் - தோள்களை, கொண்ட அன்று - அறுத்தகாலில், கோழி - கோழியை, கொடி கொண்டான் - த்வஜத்திலுடையவனான ஸுப்பிரமணியன், நேர் சரிந்தான் - நேரில் இருந்து விலகினான், பின்னும், எரியும் அனலோன் - எரிக்கிற அக்கினியும், நேர் சரிந்தான், பின்னும், முக்கண் மூர்த்தி - மூன்று கண்களையுடையவனாய் தன்னை ஸ்வாமியென்று நினைத்துக்கொண்டிருந்தவனாயிருந்த ருத்திரன், நேர்சரிந்தான்.

(கருத்து) அப்பனுக்கு முன்னாலே நிற்கமுடியாமல் தனக்குத் துணையாக வேண்டிக்கொள்ளப்பட்ட ருத்திரன் பின்னாலே நின்ற வாணன் என்கிற அஸுரனுடைய தோள்களை அப்பன் அறுத்த காலத்தில் ஸுப்ரமண்யனும் அக்னியும் ருத்திரனும் எதிரில் நிற்கமுடியாமல் ஓடிப்போனார்கள். இதென்ன ஆச்சரியம்.

குறிப்பு :—(1) 'திண் தோள்' என்பதற்கு, ருத்திரன் கொடுத்த வரத்தினால் பலமுள்ளவைகளான என்பது கருத்து.

(2) ருத்திரன் வெட்கப்பட்டுத் தன்னை மறைத்துக் கொண்டு போனான். இவன் எவன் என்று தெரிவிக்க 'முக்கண்' என்று அவன் உடம்பின் அடையாளத்தைக் காட்டுகிறார்.

(இ - ம்) கொண்டான் - வினையால் அணையும் பெயர். சரிந்தான் - ஒருமை ஆண்பால் படர்க்கை வினைமுற்று. (8)

---

அன்றுமண் ணீரெரி கால்விண் மலைமுதல்
அன்று சுடரிரண்டு பிறவும் பின்னும்
அன்று மழையுயிர் தேவுமற் றுமப்பன்
அன்று முதலுல கஞ்செய் ததுமே. (௯)

(ப - ரை) அப்பன், மண் - பூமியையும், நீர் - ஜலத்தையும், எரி - அக்கினியையும், கால் - வாயுவையும், விண் - ஆகாசத்தையும், மலை முதல் - மலை முதலானவற்றையும், அன்று - அப்போது (நினைத்தபோதே), இரண்டு சுடர் - சந்திர ஸூரியர்களையும், பிறவும் - மற்ற கிரஹங்களையும் நக்ஷத்திரங்களையும்,

பின்னும், அன்று, மழை-மழையையும், உயிர்-(அதினால் பிழைத்திருக்கும்) பிராணிகளையும், தேவும்-(மழைபெய்விக்கிற) தேவதைகளையும், மற்றும் - இன்னுமுள்ள வஸ்துக்களையும், செய்ததும் - உண்டுபண்ணினதும், அன்று - அப்போதேதான், முதல் - இப்படி முதலில் ஸிருஷ்டிகாலத்தில், உலகம் செய்ததும் - உலகங்களையுண்டுபண்ணினதும், அன்று - அப்போதுதானே.

(கருத்து) அப்பன் தன்னுடைய நினைவாலேயே ஐந்து பூதங்களையும் பூமியிலுள்ள மலைகள் முதலான வஸ்துக்களையும் ஆகாசத்திலுள்ள சந்திரனையும், ஸூரியனையும், நவக்கிரஹங்களையும், நக்ஷத்திரங்களையும், மழையையும், அதனால் பிழைத்திருக்கும் பிராணிகளையும், மழையைப்பெய்விக்கிற தேவதைகளையும் உண்டுபண்ணினான். இப்படித் தன்னுடைய நினைவாலேயே உலகங்களை உண்டுபண்ணின அப்பனுக்கு மிகவும் அல்பர்களான விரோதிகளை நாசம் செய்வது ஓர் ஆச்சரியமோ?

---

மேய்நிரை கீழ்புக மாபுர ளச்சுனை
வாய்நிறை நீர்பிளி றிச்சொரி யவின
ஆநிரை பாடியங் கேயொடுங்க வப்பன்
தீமழை காத்துக் குன்றமெடுத் தானே. (௧0)

(ப - ரை) மேய் நிரை - மேய்கிறவைகளான பசுக்களுடைய கூட்டங்கள், கீழ் புக - கீழே புகுந்து ஸுகமாயிருக்கும்படியும், மா - மிருகங்கள், புரள - புரளும்படியும், சுனை - சுனைகளுடைய, வாய் நிறை - வாயளவும் நிறைந்த ஜலமும், பிளிறி - சப்தித்து, சொரிய - சொரியும்படியும், இனம் ஆ நிரை - கூட்டமான பசுக்கூட்டங்களையுடைய, பாடி - திருவாய்ப்பாடி, அங்கே ஒடுங்க - அதின் கீழே ஒடுங்கும்படியும், அப்பன், தீ மழை - கொடுமையான மழையை, காத்து - தடுத்து, குன்றம் - கோவர்த்தநம் என்கிற மலையை, எடுத்தான் - தூக்கிப்பிடித்தான்.

(கருத்து). பசுக்கூட்டங்களும் இடையர்களும் பயமில்லாமல் கீழேவந்து ஸுகமாயிருக்கும்படியும், மலைபோலிருந்த யானை முதலான மிருகங்கள் புரளும்படியும், சுனைகளில் வாய் அளவும் நிறைந்திருந்த ஜலம் சப்தித்துக்கொண்டு கீழே சொரியும்படி

யும், ஆய்ப்பாடி ஒடுங்கி நிற்கும்படியும் அப்பன் கோவர்த்தனம் என்கிறமலையைத் தூக்கித் தலைகீழாகப் பிடித்து கொடுமையான மழையைத் தடுத்தானே. இஃதென்ன ஆச்சரியம். (10)

---

குன்ற மேடுத்த பிரானடி யாரோடும்
ஒன்றி நின்றசட கோப னுரைசெயல்
நன்றி புனைந்தவோ ராயிரத் துள்ளிவை
வென்றி தரும்பத்து மேவிக்கற் பார்க்கே. (கக)

(ப - ரை) குன்றம் எடுத்த, பிரான் - பிரானுடைய, அடியாரொடும் - தாஸர்களோடே, ஒன்றி நின்ற - ஒன்றாய்ச்சேர்ந்து, (அவர்களுக்குத்தாஸனாய்) நின்ற, சடகோபன், உரை செயல்- சொல்லுவதாகிற செய்கையான (வாக்காலேசெய்யப்பட்ட கைங்கரியமான), நன்றி - நன்மைகளை, (ஸர்வேச்வரன் செய்த மேன்மையான லீலைகளை) புனைந்த - தொடுத்துச்சொன்ன, ஓர் ஆயிரத்துள், இவைபத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களையும், மேவி- பிரீதியைச்செய்து, கற்பார்க்கு - அடிக்கடி படிக்கிறவர்களுக்கு, வென்றி தரும் - (அவைகள் ஒவ்வொன்றுமே) ஜயத்தைக் கொடுக்கும்.

(கருத்து) கோவர்த்தந மலையைத் தூக்கிப்பிடித்து தன்னுடைய ஸௌலப்யம் ஸௌசீல்யம் என்கிற குணங்களைக்காட்டி தனக்குத் தாஸர்களாகச் செய்யப்பட்டவர்களுக்குத் தாஸனாயிருந்த ஆழ்வார், தாமும் அந்த மலையின்கீழ் இடையர்களுடன் இருந்ததாக நினைத்து அவனுடைய ஆச்சரியமான லீலைகளைத் தொடுத்துச் சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களையும் பிரீதியுடன் அடிக்கடி படிக்கிறவர்களுக்கு அவைகளில் ஒவ்வொன்றுமே விஜயத்தைக் கொடுக்கும்.

குறிப்பு :—ஐச்வரியத்தை விரும்பினவர்களுக்கும் ஆத்மாவை மாத்திரம் அநுபவிக்கவேண்டுமென்கிறவர்களுக்கும் பக்தியோகம் பண்ணுகிறவர்களுக்கும் அதற்கு இடையூறுகளை ஒவ்வொருபாட்டும் தீர்க்கும். பிரபத்திசெய்தவர்களுக்கு அவர்கள் எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்வதற்கு விரோதியான பாபங்களை நாசம் பண்ணும் என்பது 'வென்றி தரும்' என்பதின் கருத்து. (11)

---

விக்ராந்த்யா விஶ்வநாஶ்ருதஶயநதஸ்தோத்ரஸ்ருதஸுதாம்ரு
தயாத்ராத: கல்பே ஜோகாஜநாத் க்ஷிதிபரஹரணாத் தைத்ய
ராஜந்யஹாராத் । லங்காஸம்ரோதகத்வாதஸுரபுஜவநச்சேத
நால்லோகஸ்ருஷ்டிஸம்ஸ்ருத்யா கோவர்த்தநாத்ரே: ஸ்வாஶ்ரிதஜந
வஶ்யத்வம் வக்தியயம் ஶ்ரீஸகாஹ ॥ ।௮௪।

---

இந்தத் திருவாய்மொழியில் லக்ஷ்மீபதியான எம்பெருமான் உலகங்களைத் தான் ரக்ஷிப்பதைத் தான்செய்த பத்து லீலைகளால் வெளியிடுகிறான் என்பது சொல்லப்படுகிறது. அந்த லீலைகளாவன :—(1) உலகங்களை அளந்தது ; (2) அமுதத்துக்காக ஸமுத்ரத்தைக் கடைந்தது ; (3) பூமிப்பிராட்டியை மேலே கொண்டு வந்தது ; (4) கல்பத்தின்முடிவில் உலகங்களைச் சாப்பிடுவது ; (5) பூமியின் பாரத்தைப்பாரதச் சண்டையில்போக்கினது ; (6) அஸுர ராஜனாகிய ஹிரண்யகசிபுவைக்கொன்றது ; (7) லங்கையை நாசம்செய்தது ; (8) அஸுரனான வாணனுடைய தோள்களாகிய காட்டையழித்தது ; (9) உலகத்தை உண்டுபண்ணினது ; (10) கோவர்த்தநம் என்கிற மலையைத் தூக்கிப்பிடித்தது. (84)

---

# ஐந்தாம் திருவாய்மொழி.

---

அவ—கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமான்செய்த ஆச்சரியமான லீலைகளை ஆழ்வார் கொண்டாடினர். உலகத்துக்கு உபகாரம் செய்ததாகிய அவைகளின் குணத்தை இந்தத் திருவாய்மொழியில் அநுபவிக்கிறார். இதற்குவேறு விதமாயும் அவதாரிகை சொல்லலாம். கீழ்த்திருவாய்மொழியில் ' இலங்கை செற்ற நேரே ' என்கிற ஏழாம்பாட்டில் சொன்னது ஆழ்வார் நினைவிற்கு வந்தது. ராமாவதாரத்தில் செய்த லீலைகளில் ஈடுபட்டு அவைகளை முதலில் சொல்லி மற்ற அவதாரங்களில் செய்த லீலைகளையும் சக்ரவர்த்தித் திருமகன்தான் செய்தான் என்றும் இதில் சொல்லுகிறார் :—

( கலித்துறை.)

கற்பா ரிராம பிரானையல் லால்மற்றுங் கற்பரோ
புற்பா முதலாப் புல்லெறும் பாதியொன் றின்றியே
நற்பா லயோத்தியில் வாழுஞ் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தன னான்முக னார்பெற்ற நாட்டுளே. (க)

(ப - ரை) நான்முகனார் - பிரம்மா, பெற்ற - உண்டுபண்ணின, நாட்டுளே - தேசத்திலே, பா - (பூமியில்) பரவும்தன்மையுள்ள, புல்முதலா-புல்முதலாகவும், புல்-மிகவும் சிறிய, எறும்பு ஆதி - எறும்பு முதலாகவும், (இருக்கிற) நல்பால் - நல்ல இடங்களையுடைய, அயோத்தியில், வாழும், சராசரம் முற்றவும் - ஸ்தாவரங்கள் ஜங்கமங்கள் எல்லாவற்றையும், ஒன்று இன்றியே - ஓர் உபாயமுமில்லாமல், நல்பாலுக்கு - நல்ல ஸ்வபாவத்திலே, உய்த்தனன் - சேரும்படி செய்தான். (ஆதலால்) கற்பார் - நினைக்கிறவர்கள், இராமபிரானையல்லால் - இராமனாய் பெரிய உபகாரம் செய்தவனைத்தவிர, மற்றும் - வேறொன்றையும், கற்பரோ - நினைப்பரோ ?

(கருத்து) எம்பெருமான் சக்ரவர்த்தித்திருமகனாய் அவதாரம் செய்து, பிரம்மாவினாலுண்டுபண்ணப்பட்ட தேசத்தில் நல்ல இடங்களையுடைய அயோத்தியில் வாழும் புல் முதலான

ஸ்தாவரங்களும் சிற்றெறும்பு முதலான ஜங்கமங்களும் ஆகிய இவைகளையெல்லாம் ஓர் உபாயத்தைச்செய்யாதபோதிலும் வைகுந்தத்திலிருப்பவர்போலே தன்னிடத்தில் பக்தியுள்ளவைகளாக இருக்கும்,நல்ல ஸ்வபாவமுள்ளவைகளாக செய்தான். இந்த உபகாரத்தைச்செய்த அவனைத்தவிர, வேறு எவனைத் தங்களுக்கு ஹிதத்தையும் பிரியத்தையும் ஆசைப்படுகிறவர்கள் நினைப்பார்கள்.

குறிப்பு :—(1) மூன்றாவது அடியில் 'நற்பால்' என்றதற்கு, நல்ல இடங்களையுடைய என்பது பொருள். இடங்களுக்கு நன்மையாவது—பக்தி பண்ணவேண்டியதற்குக் கர்மயோகம் முதலான சில உபாயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில்லாமலே அங்கிருந்தவர்களுக்குச் சக்ரவர்த்தித் திருமகன் திருவடிகளில் பக்தியுண்டுபண்ணினது. இதற்கு இடங்களின் ஸ்வபாவமே காரணம்.

(2) 'நான்முகனார் பெற்ற' என்பதற்குக் கருத்து—ப்ரம்மாவே கர்மத்துக்கு உட்பட்டவன்; அவனாலே உண்டு பண்ணப்பட்டவர்களும் கர்மங்களுக்கு உட்பட்டவர்களாய்ப் பிரகிருதியிலிருந்து உண்டான வஸ்துக்களையே தங்களுக்குத் தாரகங்களாயும் போஷகங்களாயும் போக்கியங்களாயும் எண்ணிக் கொண்டிருந்தார்கள். அவர்களையும் தன் திருவடிகளையே தாரகங்களாகவும் போஷகங்களாகவும் போக்கியங்களாகவும் எண்ணும்படி சக்ரவர்த்தித் திருமகன் செய்தான் என்பது.

(3) 'புற்பாமுதலாப்புல்லெறும்பாதி' என்பதற்குக் கருத்து ஸ்தாவரங்கட்குப் புற்கள் கடைசியிலும், ஜங்கமங்களுக்கு எறும்புகள் கடைசியிலும் இருக்கின்றன என்பது.

(4) 'மற்றும் கற்பரோ' என்பதால் ஹநுமானைப்போல் இராமாவதாரம் தவிர பரரூபத்திலும் மற்ற அவதாரங்களிலும் எண்ணம் போகுமோ என்பது கருத்து.

(இ - ம்) முதல்ஆ - முதலாக : ஈறுகெட்ட வினையெச்சம். கற்பரோ - ஓ என்பதற்கு எதிர்மறைப்பொருள்; அது கற்கமாட்டார்கள் என்பது. (1)

அவ—கீழ்ப் பாட்டில் சொன்னதைக்காட்டிலும் மிகுந்த ஆச்சரியமுள்ளதை எம்பெருமான் செய்தான் என்று சொல்லுகிறார் :—

நாட்டிற் பிறந்தவர் நாரணற் காளன்றி யாவரோ
நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்காய்
நாட்டை நலியு மரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டை யளித்துய்யச் செய்து நடந்தமை கேட்டுமே. (உ)

(ப - ரை) நாட்டில் - (மனிதர்களின்) உலகத்தில், பிறந்து, மனிசர்க்காய் - (எல்லாவிடங்களிலுமிருக்கிற) மனிதர்களுக்காக, படாதன பட்டு - (ஒருவரும்) படாத துக்கங்களைப் பட்டு, நாட்டை - தேசத்தை, நலியும் - துன்பப்படுத்தின, அரக்கரை - ராக்ஷஸர்களை, நாடி - தேடி, தடிந்திட்டு - நாசம் செய்து, நாட்டை அளித்து - தேசத்தை ரக்ஷித்து, உய்ய செய்து - உஜ்ஜீவிக்கும்படி பண்ணி, நடந்தமை - (தன் இருப்பிடமான வைகுந்தத்துக்குப்) போனதை, கேட்டும், நாட்டில் பிறந்தவர், நாரணற்கு - (ஸௌலப்யம் முதலான குணங்களையுடைய) சக்ரவர்த்தித் திருமகனுக்கு, ஆள் அன்றி - அடிமையாகாதவர்களாக, ஆவரோ - இருப்பார்களோ ?

(கருத்து) தனக்குத் தகாததும், மனிதர்களாலும் வெறுக்கப்படுவதுமான இந்த உலகத்தில் மனிதனுக சக்ரவர்த்தித் திருமகனுய் அவதாரம்செய்து, ஒரு மனிதன் வருத்தப்படும்போதும் தானும் மிகுந்த துக்கமுள்ளவனுயிருந்து, தகப்பனுர் வார்த்தையைக் கேட்பது என்கிற வியாஜத்தைக்கொண்டு காட்டுக்கு எழுந்தருளி தேசத்திலிருப்பவர்களைத் துன்பப்படுத்தின ராக்ஷஸர்களை அவர்களிருக்குமிடம் தேடிக்கொண்டுபோய் நாசம் செய்து, ராவணனை வதம் செய்தவுடன் அயோத்திக்குத் திரும்பிவந்து பதினோராயிரம் வருஷம் ஜனங்களை ரக்ஷித்து, பிறகு தன்னுடைய இருப்பிடமாகிய வைகுந்தத்திற்கு எழுந்தருளினன். இந்தக் கதையை ராமாயணம் முதலான கிரந்தங்களாலே கேட்டு அறிந்து, ராம ராம என்கிற சொல் நிறைந்திருக்கிற இந்தத் தேசத்தில் பிறந்த எவன் ஸௌலப்யம் முதலான குணங்களையுடைய அவனுக்கு அடிமையாக ஆகாமல் இருக்கமுடியும்? அப்படியிருக்கிறவன் அறிவுள்ளவனே ?

குறிப்பு :—(1) 'படாதனபட்டு' என்பதற்கு, அயோத்தியி லிருக்கும் எவனும் துக்கப்பட்டால், அதைப்பார்த்து, தானும் துக்கப்படுவன் என்பது கருத்து.

(2) பிரம்மா முதலான தேவர்கள் எம்பெருமானை ராவணனை ஸம்ஹாரம் பண்ணவேண்டுமென்று வேண்ட, அவன் சக்ரவர்த்தித்திருமகனுய் அவதாரம் செய்தான். ராவண ஸம்ஹாரமான பிறகு உடனே வைகுந்தத்திற்குப் போகாமல் அயோத்திக்குத் திரும்பிவந்து, தாம் காட்டுக்குப்போகும்போது மிகுந்த வருத்தத்தையடைந்த ஜனங்களுக்கு ஆறுதலையுண்டாக்குவதற்காக இதை ஒருநாள் இரண்டுநாள் செய்தால் போதாதென்று நினைத்து பதினேராயிரம் வருஷம் அவர்களின் நடுவிலிருந்து அவர்களை உஜ்ஜீவிப்பித்தான்.

(3, 'நாரணன்' என்கிற சொல்லுக்கு, வாத்ஸல்யம், ஸௌலப்யம், ஸௌசீல்யம், காருண்யம், ஸ்வாமியாயிருப்பது இவைமுதலான குணங்களுக்கு இருப்பிடமென்பது பொருள். இந்த ஒவ்வொன்றையும் எம்பெருமான் இந்த அவதாரத்தில் நன்றாய்க்காட்டினுன் என்பதைக் காட்டுவதற்காக பாட்டில் அந்தச்சொல் சேர்த்திருக்கிறது.

(4) அவனுக்கு அடிமையாகாதவன் தான் பிறந்த பலனை இழந்தான் என்பதும், அவன் நாட்டில் பிறந்தவனேடு சேர்ந்தவன் அன்று என்பதும், அறிவில்லாதவரைப்போலிருக்கிறவன் என்பதும் கருத்து. (2)

---

அவ—கீழ்ப்பாட்டில் எம்பெருமான் அநுகூலர்க்கு உபகாரம் செய்தது சொல்லப்பட்டது ; இஃது ஓர் ஆச்சரியமோ ? பிரதிகூலர்க்கும் அவன் உபகாரம் செய்தானே என்று சொல்லுகிருர் :—

கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல் லான்மற்றுங் கேட்பரோ
கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுக ளேவையுஞ்
சேட்பாற் பழம்பகை வன்சிசு பாலன் திருவடி
தாட்பா லடைந்த தன்மை யறிவாரை யறிந்துமே. (௩)

(ப - ரை) கேட்பார் செவி - கேட்பவர்களுடைய காதை யும், சுடும் - (நெருப்பைப்போல்) சுடுகிற, கீழ்மை - கீழ்மைப் பட்ட, வசவுகளையே, வையும் - வைகிறவனாய், சேண் பால்-வெகு காலமாய் (ஹிரண்யகசிபுவாகவும் ராவணனாகவும் பிறந்த காலம் முதல்), பழம் பகைவன் - பழைய விரோதியான, சிசுபாலன், திரு அடி - எப்போதும் ஸ்வாமியாயிருக்கிற கண்ணனுடைய, தாள் பால் - திருவடிகளில், அடைந்த தன்மை - அடைந்த ஸ்வ பாவத்தை, அறிவாரை - அறிந்தபெரியோர்களை, அறிந்தும், கேட் பார்கள் - (காதுக்கினியதானதைக்) கேட்கவேண்டுமென்று ஆசைப்படுகிறவர்கள், கேசவன் கீர்த்தியல்லால் - கேசியை ஸம் ஹாரம்செய்த அவனுடைய கீர்த்தியைத்தவிர, மற்றும் - வேறொ ன்றையும், கேட்பரோ?

(கருத்து) ஹிரண்யகசிபுவாகவும் ராவணனாகவும் பிறந்தது முதல் பகைவனும், எம்பெருமானை வைவதைக்கேட்டு ஸந்தோ ஷப்படும் ஸ்வபாவமுள்ள பிரதிகூலர்களுடைய காதுகளையும் சுடும்படியான கீழ்மைப்பட்ட வசவுகளையே வைதவனுமான சிசுபாலனும், ஸ்வாமியாயிருந்த தன்னுடைய திருவடிகளையடைந் ததையும், கேசியை ஸம்ஹாரம் பண்ணினதையும் அறிந்த பெரி யோர்களிடம்போய் காதுக்கு இனியதானவைகளைக் கேட்க வேண்டுமென்று ஆசைப்படுகிறவர்கள், அவனுடைய கீர்த்தியைத் தவிர வேறு ஒன்றைக் கேட்பரோ?

குறிப்பு:—'திருவடி' என்கிறவிடத்தில், எம்பெருமான் எல்லாருக்கும் ஸ்வாமியாயிருப்பது ஒருகாரணத்தாலன்று. அது ஸ்வபாவத்தினால் ஏற்பட்டது. இந்த உயர்ந்த ஸ்வபாவத்தை 'திரு' என்கிற சொல் சொல்லுகிறது. அடி - ஸ்வாமி. (3)

---

அவ—கீழ்ச்சொன்ன உபகாரத்தைக்காட்டிலும், அதிக ஆச்சரியமான உபகாரத்தைச் சொல்லுகிறார்:—

தன்மை யறிபவர் தாமவற் காளன்றி யாவரோ
பன்மைப் படர்பொரு ளாதுமில் பாழ்நெடுங் காலத்து
நன்மைப் புனற்பண்ணி நான்முக னைப்பண்ணித் தன்னுள்ளே
தோன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்தே. (௪)

(ப - ரை) பன்மை படர் பொருள் - பலவகைகளாயிருப்பதையுடையதும் (அவைகளில் ஒவ்வொருவகையும் பலவிதங்களாய்) வியாபிப்பதுமான வஸ்துக்கள், ஆதும் இல்-ஒன்றுமில்லாத (மூலப்பிரகிருதியில் லயத்தையடைந்த) பாழ் - பாழான (ஒரு புருஷார்த்தத்துக்குத் தகுந்தது அல்லாத), நெடும் - நீண்ட, காலத்து - பிரளய காலத்தின் முடிவிலே, நன்மை புனல் - நன்மையுடைய ஜலத்தை, பண்ணி - உண்டுபண்ணி, நான்முகனை - பிரம்மாவை, பண்ணி தன் உள்ளே - தன்னுடைய ஸங்கல்பத்திலே தொன்மை - முன்காலத்தில், மயக்கிய - ஒருவருக்கும் தெரியாதபடி செய்த, தோற்றிய - (உடம்புகளையும் இந்திரியங்களையும் கொடுத்து) தோன்றும்படி செய்த, சூழல்கள் - உபாயங்களை, சிந்தித்து-நினைத்து, தன்மை - (அவன் காரணமாய் மற்றவைகள் காரியமாயிருக்கும்) ஸ்வபாவத்தை, அறிபவர் - அறிகிறவர்கள், தாம் - தாங்கள், (நினைவுடன்) அவர்க்கு அன்றி - அவர்க்கு அல்லாமல், ஆளாவரே - அடிமையாவர்களோ?

(கருத்து) இப்போது தேவன் மனிதன் மிருகம் மரம் என்று பலவிதமாய்ப் பிரிந்து அவைகளில் ஒவ்வொன்றும் பலவிதமாய்ப்பிரிந்து எங்கும் நிறைந்திருக்கிற பொருள்களெல்லாம் ஒன்றும் மீதியிராமல் பிரகிருதியில் லயத்தையடைந்து ஒரு ஜீவனுக்கும் ஒரு புருஷார்த்தமுமில்லாமல் மஹாபிரளயம் என்று சொல்லப்பட்ட ஒரு காலமிருந்தது. அந்தக்காலத்தின் முடிவில் எம்பெருமான் நல்ல ஜலத்தையுண்டுபண்ணி, அதில் பிரம்மாவை உண்டுபண்ணி, முன்காலத்தில் தன்னைவிட்டுப் பிரிக்கமுடியாதபடி செய்துவைத்திருந்த பிரகிருதியை எல்லாப் புருஷார்த்தங்களுக்கும் ஸாதனங்களான உடம்புகளாகவும் இந்திரியங்களாகவும் தோன்றும்படி தன் ஸங்கல்பத்தினாலேயே செய்து, அந்த உடம்புகளில் இந்திரியங்களையும் ஆத்மாக்களையும் வைத்து, இப்படி அவன் மிகுந்த கருணையினால் உலகத்தையுண்டுபண்ணின உபாயங்களை வேதாந்தத்தாலே விசாரித்து, அவன் காரணமாகவும் மற்றவை காரியங்களாகவும் இருப்பதை அறிந்தவர்கள், அவனைத் தவிர வேறு எவனுக்கு மனதுடன் அடிமை ஆவர்கள்.

குறிப்பு :—(1) ஜலத்துக்கு நன்மையாவது - பிரளயகாலத்தின் ஆரம்பத்தில் ஜலம் உலகங்களை அழிப்பதற்கு உதவிற்று; அதுபோலில்லாமல் உலகங்களையுண்டுபண்ணுவதற்கு உதவினது.

(2) ஒருவன் பொம்மையைப்பண்ணுவதுபோல், எம்பெருமான் பிரம்மாவையுண்டுபண்ணினன் என்பதும், ஆகையால் அவன் எம்பெருமானுக்கு உட்பட்டவனென்பதும் 'நான்முகனைப்பண்ணி' என்பதின் கருத்து.

(3) பிரம்மாவின் வாழ்நாள் இரண்டு பரார்த்தம். அப்போது உலகமுண்டாகி இந்தக்காலம்போலிருக்கிறது. அது முடிந்த பிறகு உலகமில்லாமல் இரண்டு பரார்த்தமிருக்கின்றன. அந்தக்காலம் மஹாபிரளயம். நம்முடைய 360 வருஷங்கள் தேவர்களுக்கு ஒருவருஷம். தேவர்களின் பன்னீராயிரம் வருஷங்கள் ஒரு சதுர்யுகம். ஆயிரம் சதுர்யுகம் ஒரு கல்பம். அது பிரம்மாவுக்கு ஒரு பகல்; அவனுடைய ராத்திரியும் அதே அளவுள்ளது. 360 பிரம்மாவின் பகலும், 360 ராத்திரியும் சேர்ந்து அவனுக்கு ஒரு வருஷம். அப்படி நூறு வருஷங்கள் அவனுடைய ஆயுள். அதற்குப்பரம் என்று பெயர். அதில் பாதி பரார்த்தம். இப்போது முதல் பரார்த்தமாகி இரண்டாவது பரார்த்தத்தில் ச்வேதவராஹகல்பம் என்கிற முதல் நாள் நடக்கிறது. (4)

---

சூழல்கள் சிந்திக்கின் மாயன் கழலன்றிச் சூழ்வரோ
ஆழப் பெரும்புன றன்னு ளழுந்திய ஞாலத்தைத்
தாழப் படாமற்றன் பாலொரு கோட்டிடைத் தான்கொண்ட
கேழற் றிருவுரு வாயிற்றுக் கேட்டு முணர்ந்துமே. (௫)

(ப - ரை) பெரும் - பெரிதான, புனல் தன்னுள் - ஜலத்திலே, ஆழ அழுந்திய-அடியில்போய் மூழ்கியிருந்த, ஞாலத்தை-பூமியை, தாழப்படாமல் - தாமதம் செய்யாமல், தன்பால்-தன் திருமேனியிலே, ஒரு - ஒருபாகமான, கோட்டு இடை - கொற்றிப்பல்லில், கொண்ட - க்ரஹித்துக்கொண்ட, கேழல் திரு உருவாயிற்று - அழகிய வராஹ ரூபமாயிருந்ததை, கேட்டும் - உணர்ந்தும் (அதை மனதில் தரித்தும்), சூழல்கள் - புருஷார்த்தத்துக்கு உபாயமாயிருப்பவைகளை, சிந்திக்கில் - செய்யவேண்டுமென்று நினைத்தால், மாயன் கழல் அன்றி - ஆச்சரியமாயிருக்கிற அவனுடைய திருவடிகளைத்தவிர, சூழ்வரோ-வேறு எதையும் ஆச்ரயிப்பரோ?

(கருத்து) கிணற்றில் விழுந்த குழந்தையையெடுக்கத் தாய் உடனே அதில் முழுகுவதுபோல், பெரிய ஜலத்தில் அடியில் மூழ்கியிருந்த பூமியை எடுப்பதற்காக அழகான வராஹரூபத்தையெடுத்துக்கொண்டு அந்த ஜலத்தில் தாமதமில்லாமல் மூழ்கி அதைத் தன்னுடைய தெற்றிப்பல்லில் எடுத்துக்கொண்டு எம்பெருமான் அதை மேலே கொண்டுவந்தான் என்று வேதமும் இதிஹாஸங்களும் புராணங்களும் சொல்லுகின்றன. இதைக் கேட்டு அதைத்தரித்திருந்து, புருஷார்த்தத்துக்கு வேண்டிய உபாயங்களைச் செய்ய ஆசைப்படுகிறவர்கள் அவன் திருவடிகளைத் தவிர வேறு எதை ஆச்ரயிப்பர்கள்?

குறிப்பு :—' இதிஹாஸம் ' என்பது மஹாபாரதமும் ராமாயணமும். விஷ்ணுபுராணம் பாகவதம் முதலானவைகள் புராணங்கள்.

(இ - ம்) ஆயிற்று-ஆனதை : வினையால் அணையும் பெயர்.

---

கேட்டு முணர்ந்தவர் கேசவற் காளன்றி யாவரோ
வாட்டமி லாவண்கை மாவலி வாதிக்க வாதிப்புண்டு
ஈட்டங்கொள் தேவர்கள் சென்றிரந் தார்க்கிடர் நீக்கிய
கோட்டங்கை வாமன னாய்ச்செய்த கூத்துக்கள் கண்டுமே. (௬)

(ப - ரை) வாட்டமிலா - வாடுதல் (குறைதல்) இல்லாத, வண் கை - கொடுப்பதையே ஸ்வபாவமாயுள்ள கைகளையுடைய, மாவலி - மஹாபலி, வாதிக்க - துன்பப்படுத்த, வாதிப்பு உண்டு- (அதனால்) துன்பத்தையடைந்து, ஈட்டம் கொள்-கூட்டமாயிருப்பதைக்கொண்ட, தேவர்கள், சென்று - போய், இரந்தார்க்கு - யாசித்தவர்களுக்கு, இடர் நீக்கிய - துன்பத்தைப் போக்கினவனை, கோட்டு - (தாந ஜலத்தைப் பெற்றுக்கொள்வதற்காக) குவிந்திருப்பதையுடைய, அம் - அழகிய, கை - திருக்கைகளையுடைய, வாமனனாய், செய்த கூத்துக்களை - பண்ணின லீலைகளை, கண்டும் - நன்றாக அறிந்தும், கேட்டும்-(பிறர் சொல்லக்) கேட்டும், உணர்ந்தவர்கள் - தாங்கள் மநநம் செய்து நிரூபணம் பண்ணினவர்கள், கேசவற்கு அன்றி - பிரம்மாவுக்கும் ருத்திரனுக்கும் காரணமான எம்பெருமானுக்கல்லது, ஆளாவரோ - அடிமை யாவர்களோ?

(கருத்து) தன்னை யாசித்தவர்களுக்கு வேண்டியதைக் கொடுப்பதில் ஒரு குறையுமில்லாத மஹாபலியாலே துன்பப்படுத்தப்பட்டு அந்தத் துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் தேவர்கள் கூட்டமாய்ச் சேர்ந்து எம்பெருமானிடம் போய், 'தங்களுடைய துன்பத்தைத் தீர்க்கவேண்டும்' என்று பிரார்த்திக்க, அவனும் தீர்க்கிறேன் என்று சொல்லி, அவர்களின் வருத்தத்தைப் போக்குவதற்காக, அழகான வாமநரூபத்தை எடுத்துக்கொண்டு செய்த ஆச்சரியமான லீலைகளை நன்றாய் அறிந்தும், பிறர் சொல்லக் கேட்டும், மநநம் செய்து நிரூபணம் பண்ணினவர்கள், பிரம்மாவுக்கும் ருத்திரனுக்கும் காரணமான அவனைத் தவிர, வேறு எவர்க்கும் அடிமையாக ஆவர்களோ?

குறிப்பு:—(1) மஹாபலியினால் துன்பப்படுத்துவதற்கு முன்னாலே தேவர்கள் ஒருவர் பெருமையை ஒருவர் ஸஹிக்காமல் சேராமல் இருந்தார்களென்பதும், அவனால் துன்பப்படுத்தப்பட்டபோது கர்வம் போய் அவர்கள் தங்கள் காரியம் முடிவதற்காக ஒன்றுசேர்ந்தார்கள் என்பதும், 'ஈட்டம் கொள்' என்பதற்குக் கருத்து.

(2) எம்பெருமான் எல்லாருக்கும் கொடுக்கிறவன்; ஒன்றையும் ஒருவனிடமிருந்து வாங்குகிறவனல்ல. இந்த தன்னுடைய ஸ்வபாவத்தை அந்தக் காலத்தில் விட்டுவிட்டு ஆச்ரிதர்களான தேவர்களுக்காக தானஜலத்தை வாங்குவதற்காகத் தன் கைகளைக் குவித்துக்கொண்டு மஹாபலியிடம் யாசித்தான் என்பது 'கோட்டங்கை' என்பதின் கருத்து.

(3) அவன் செய்த கூத்துக்களாவன—அன்றே பிறந்து, அன்றே வளர்ந்து, அன்றே பிக்ஷையெடுத்ததும், க்ருஷ்ணாஜிநத்துடனும் யஜ்ஞோபவீதத்துடனும் முஞ்சியுடனும் வணக்கத்துடனும் மஹாபலியின் யஜ்ஞசாலைக்குப் போனதும், 'கொள்வன் நான் மாவலி மூவடி' என்று அறியாத பிள்ளைகள்போல் கேட்டதும், சிறிய திருவடிகளைக் காட்டி பெரிய திருவடிகளால் அளந்ததுமாம்.

(4) ராவணனைப்போல் மஹாபலியைக் கொல்லாததற்குக் காரணம் அவனுடைய ஔதார்யம். இஃது இரண்டாவது அடியின் கருத்து.

(5) 'கேசவன்' என்கிற சொல்லில், 'க' என்பது பிரம்மாவையும், 'ஈசன்' என்பது ருத்திரனையும், 'வ' என்பது இவர் இருவர்களுக்கும் காரணமாயிருப்பதையும் சொல்லும். திரிமூர்த்திகள் என்று சொல்லப்பட்டவர்களில் ஒருவன் தன் திருவடியை மேலே நீட்டினான். அதற்கு ஒருவன் ஸந்தோஷத்துடன் திருமஞ்ஜனம் செய்தான். மற்றொருவன் அந்த ஜலத்தை அப்படியே தலையால் தரித்தான். இவர்களில் யார் பெரியவன்? (6)

---

கண்டுந் தெளிந்துங் கற்றார்கண்ணற் காளன்றி யாவரோ
வண்டுண் மலர்த்தொங்கன் மார்க்கண் டேயனுக்கு வாழுநாள்
இண்டைச் சடைமுடி யீச னுடன்கொண்டு சாச்செல்ல
கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுடன் சென்ற துணர்ந்துமே.

(ப - ரை) வண்டு உண் - வண்டுகள் (தேனை) சாப்பிடும், மலர் - புஷ்பங்களையுடைத்தான, தொங்கல் - மாலையையுடைய, மார்க்கண்டேயனுக்கு, வாழும் நாள் - (அபமிருத்யு இல்லாமல்) வாழும் காலம் உண்டாவதற்காக, இண்டை சடை - அதிகமான ஜடைகளை, முடி - தலையிலுடைய, ஈசன் - ருத்திரன், உசா - பேசி (நானும் எம்பெருமானை ஆச்ரயித்தவன், நீயும் அவனை ஆச்ரயி என்று சொல்லி), உடன் கொண்டு - கூட அழைத்துக் கொண்டு, செல்ல - கிட்ட, அங்கு - அப்போது, கொண்டு - அவனை ஒப்புக்கொண்டு, தன்னொடுங் கொண்டு-அவனைத் தனக்கு அடிமையாக்கிக்கொண்டு, உடன் சென்றது - தன்னைவிட்டுப் பிரியாது தன்னையே நம்பியிருக்கும்படிச் செய்ததை, உணர்ந்தும் - (புராணங்களைக்கொண்டு) அறிந்தும், கண்டும் - கண்ணால் பார்த்ததுபோல் அறிந்தும், தெளிந்தும் - (பிரியமானதையும் ஹிதமானதையும் ஸந்தேஹம் போகும்படி மநநத்தாலே) தெளிந்தும், கற்றோர் - (இப்படி இது ஸாரம் இஃது அஸாரம் என்று பிரித்து) அறிந்தவர்கள், கண்ணற்கு அன்றி - கண்ணனுக்கு அல்லாமல், ஆளாவரோ - (யாருக்கும்) அடிமைகளாவரோ?

(கருத்து) தாயும் தகப்பனும் மிகுந்த தபஸாலேபெற்று மிகுந்த பிரீதியுடன் வளர்த்து, மதுவைப் பெருக்கிற பூமாலைகளைக்கொண்டு அலங்கரித்த மார்க்கண்டேயனுக்கு அபமிருத்யு

போய் நீண்டகாலம் பிழைத்திருப்பதற்காக அவனால் ஆச்ரயிக்கப்பட்ட ருத்திரன் தான் ஜடையும் தலையுமாயிருந்து தபஸ் செய்வதைக்காட்டி நானும் எம்பெருமானை ஆச்ரயித்திருக்கிறேன், நீயும் அவனையே ஆச்ரயி என்று சொல்லி அவனையும் கூட அழைத்துக்கொண்டு எம்பெருமானிடம் போனான். அவனும் மார்க்கண்டேயனை ரக்ஷிக்கவேண்டியவனாக ஒப்புக்கொண்டு இதன் மேலே அவனை அடிமையாகச் செய்துகொண்டு தன்னைவிட்டு அவன் பிரியாமல் தன்னையே நம்பிக்கொண்டிருக்கும்படியும் செய்தான். இது புராணங்களில் பிரஸித்தம். இதை எவர்கள் கேட்டுக் கண்ணால் பார்ப்பதுபோல் அறிந்து, தங்களுக்கு எது ஹிதமும் பிரியமும் என்று மனனத்தாலே தெளிந்து, இது ஸாரம் இது ஸாரமல்ல என்று பிரித்து அறியச் சக்தியுள்ளவர்கள் இப்படி மார்க்கண்டேயனுக்கு உபகாரம் செய்த கண்ணனுக்கு அன்றி யாருக்கு ஆளாவார்கள்?

(இ - ம்) உசா - உசாவி : ஈறுகெட்ட வினையெச்சம். 'இண்டை' என்பதைப்பற்றி நாலாவது அநுபந்தத்தை (அகராதியைப்) பார்க்க. (7)

---

செல்ல வுணர்ந்தவர் செல்வன்றன் சீரன்றிக் கற்பரோ
எல்லை யிலாத பெருந்தவத் தாற்பல செய்மிறை
யல்ல லமரரைச் செய்யு மிரணிய னாகத்தை
மல்ல லரியுரு வாய்ச்செய்த மாய மறிந்துமே. (அ)

(ப - ரை) எல்லை இலாத - அளவில்லாத, பெரும், தவத்தால் - தபஸால், பல - பலவிதமான, செய் மிறை - (தன்னால்) செய்யப்பட்ட பீடைகளை உடையவனும், அமரரை - தேவர்களை, அல்லல் செய்யும் - துன்பப்படுத்துபவனுமான, இரணியன் ஆகத்தை - ஹிரண்யகசிபுவின் உடம்பை, மல்லல் அரி உருவாய் - பெருமையையுடைய நரஸிம்ம ரூபத்தை எடுத்துக்கொண்டவனாய், செய்த, மாயம் - ஆச்சரியமான வேலைகளை, அறிந்தும், செல்ல உணர்ந்தவர் - கடைசிவரையில் போய் அறிந்தவர்கள் (பூர்ணமாய் அறிந்தவர்கள்), செல்வன் தன் சீர் அன்றி - ஸம்பத்தையுடையவனுடைய நல்ல குணங்களையல்லாமல், கற்பரோ - வேறொன்றை மனதால் நினைப்பரோ?

*(கருத்து)* ஹிரண்யகசிபு என்கிற அஸுரன் மிகவும் கடுமையான தபஸைச் செய்து, வரங்களைப் பெற்று எல்லா உலகங்களுக்கும் பலவிதமான பீடைகளைச் செய்து தேவர்களைத் துன்பப்படுத்த, அப்போது, எம்பெருமான் பெரிய நரசிங்க உருவத்தை எடுத்துக்கொண்டு அவனுடம்பை ஆச்சரியமான லீலைகளைச் செய்து பிளந்தான் என்பது புராணங்களில் பிரஸித்தம். பூர்ண ஜ்ஞானராய் இதை அறிந்தவர்கள் ஆச்ரிதர்களோடு சேர்ந்திருப்பதாகிய பெரிய ஸம்பத்தையுடைய அவனுடைய வாத்ஸல்யமென்கிற குணத்தைத் தவிர வேறு எதை மனதாலே அநுஸந்திப்பர்கள்?

*குறிப்பு:—ஆச்சரியங்களான லீலைகள்—"சிறுபிள்ளையான ப்ரஹ்லாதன் தூணிலிருக்கிறான்" என்று சொன்னவுடனே அதிலிருந்து வெளிப்பட்டதும், நகங்களாலே ஹிரண்யகசிபுவினுடைய மார்பைப் பிளந்ததும்.* (8)

---

மாய மறிபவர் மாயவற் காளன்றி யாவரோ
தாயஞ் செறுமொரு நூற்றுவர் மங்கவோ ரைவர்க்காய்த்
தேச மறியவோர் சாரதி யாய்ச்சென்று சேனையை
நாசஞ்செய் திட்டு நடந்தநல் வார்த்தை யறிந்துமே. (௯)

*(ப-ரை) தாயம் - தாயத்தை (தாயமாக வரவேண்டிய ராஜ்யத்தை), செறும் - கெடுக்கும் (அடையாதபடி செய்யும்), ஓர் - ஒப்பில்லாத, நூற்றுவர் - (துர்யோதநன் முதலான) நூறு பேர்கள், மங்க - நாசமடையும்படி, ஓர் - வேறு துணையில்லாதவர்களான, ஐவர்க்கு ஆய் - ஐந்து பாண்டவர்களுக்கு எல்லா பந்துக்களாயிருந்து, தேசம் அறிய - தேசம் எல்லாம் அறியும்படி, ஓர்- ஒப்பில்லாத, சாரதியாய், சென்று - (தேரை நடத்திக்கொண்டு) போய், சேனையை நாசம் செய்திட்டு - ஸேனைகளை நாசம் அடையும்படி செய்து, நடந்த - (திருநாட்டுக்கு) எழுந்தருளின, நல் வார்த்தை - நல்ல வார்த்தையை, அறிந்தும், மாயம் - ஆச்சரியத்தை, அறிபவர் - அறிந்தவர்கள், மாயவற்கு அன்றி - ஆச்சரியமான கண்ணனுக்கு அல்லாமல், ஆளாவரோ - வேறொருவருக்கு அடிமையாகுவாரோ?*

(கருத்து) ஐந்து பாண்டவர்களுக்குத் தாயக்கிரமப்படி வர வேண்டிய ராஜ்யத்தை அவர்கள் அடையாதபடி செய்து, இரக்க மில்லாமையிலும் பெரியோர்கள் சொன்னதைக் கேட்காமை யிலும் ஒப்பில்லாத துர்யோதனன் முதலான நூறுபேர்கள் நாசம் அடையும்படி, தன்னைத் தவிர வேறு துணையில்லாத அந்தப் பாண்டவர்களுக்கு எம்பெருமான் எல்லாவித பந்துவாய் பாரதச் சண்டையில் தேசமெல்லாம் அறியும்படி தான் சாரதி யாகி அர்ஜுனனுடைய ரதத்தை நடத்திக்கொண்டு போய், ஸேனைகளை நாசம் செய்து, வந்த காரியம் முடிந்தவுடன் அருமை உள்ள இளப்பமான இந்த இடத்தில் நாம் இனி இருப்பது தகாதென்று திருநாட்டுக்கு எழுந்தருளினான் என்று அவ னுடைய ஸௌசீல்யம் முதலான குணங்களை மஹாபாரதம் நன்றாகக் காட்டுகிறது. இதையறிந்து அந்த எம்பெருமான் ஆச்ரிதர்களுக்கு உட்பட்டு அவர்கள் சொன்னதைச் செய்வ தாகிய உயர்ந்த குணத்தை அறிந்தவர்கள் ஆச்சரியமான அவ னுக்கல்லாமல் வேறு எவனுக்கு அடிமையாக இருப்பார்கள்?

குறிப்பு:—'தாயம்' என்பது, வயிற்றில் பிறந்த ஸம்பந்தத் தாலேயே பிள்ளைக்கு வரவேண்டிய தகப்பன் சொத்து. (9)

---

அவ—கீழ்ப்பாட்டுக்களில் சொன்ன உபகாரங்கள் ஸம்ஸா ரத்திலிருப்பவர்களுக்குச் செய்யப்பட்டன; ஸம்ஸாரத்தை முழுவதும் போக்குவதாகிய மிகவும் ஆச்சரியமான உபகாரத் தைச் சொல்லுகிறார்:—

வார்த்தை யறிபவர் மாயவற் காளன்றி யாவரோ
போர்த்த பிறப்பொடு நோயொடு மூப்பொ டிறப்பிவை
பேர்த்துப் பெருந்துன்பம் வேரற நீக்கித்தன் றாளின்கீழ்ச்
சேர்த்தி யவன்செய்யுஞ் சேமத்தை யெண்ணித் தெளிவுற்றே.

(ப-ரை) போர்த்த - போர்த்துக்கொண்டிருக்கிற (ஆத்ம ஸ்வரூபத்தை மறைத்துக்கொண்டிருக்கிற), பிறப்பொடு, நோ யொடு - வியாதியோடு, மூப்பொடு - கிழத்தனத்தோடு, இறப்பு- மரணமும், இவை - ஆகியவைகளையெல்லாம், பேர்த்து - அடி யோடு போக்கி, பெரும் துன்பம் - பெரிய அநர்த்தமாகிய ஆத்ம

மாத்ரத்தின் அநுபவத்தை, வேர் அற நீக்கி - வேர் அற்றுப் போகும்படி தள்ளிவிட்டு, தன் தாளிணை கீழ் - தன்னுடைய திருவடிகளின் கீழ், சேர்த்தி - சேரப்பண்ணி அவன், செய்யும், சேமத்தை - க்ஷேமத்தை, எண்ணி - அடிக்கடி நினைத்து, தெளிவு உற்று - நிச்சயத்தை அடைந்து, வார்த்தை அறிபவர் - சொன்ன விஷயத்தை அறிகிறவர்கள் (இதைத் தள்ளவேண்டியது இதை எடுத்துக்கொள்ளவேண்டியது என்று அறிந்தவர்கள்), மாயவற்கு அன்றி - ஆச்சரியமான அவனுக்கு அல்லாமல், ஆளாவரோ - வேறொருவருக்கு அடிமையாவார்களோ ?

(கருத்து) எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலானவைகளை ஒருவன் அறியாதபடி அவன் ஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டிருக்கிற பிறப்பு, வியாதி, கிழத்தனம், மரணம் ஆகிய ஸம்ஸாரத்தை முழுவதும் போக்கி, ஆத்மாவைமாத்திரம் அநுபவிப்பதாகிய பெரிய அநர்த்தத்தை வேர் அற்றுப்போகும்படி தள்ளிவிட்டு எம்பெருமான் ஜீவனைத் தன் திருவடிகளின் கீழே இருக்கும்படி செய்து, அவன் இவ்விடத்திற்குத் திரும்பி வாராதபடி அவனுக்குக் கிடைத்த ஐசுவரியத்தை ரக்ஷிக்கிறான் என்பது வேதாந்த சாஸ்திரத்தில் பிரஸித்தம். இந்த விஷயத்தை அடிக்கடி நினைத்து நிச்சயத்தை உறுதியாகக்கொண்ட சேதநர்கள் ஆச்சரியமான சக்ரவர்த்தித் திருமகனைத் தவிர வேறு எவருக்கு அடிமையாக ஆவார்கள் ?

குறிப்பு :—(1) 'பெருந் துன்பம்' என்றது, நரகத்தில் உண்டாகும் அநுபவம் அன்று. அது 'பிறப்பு' என்கிற சொல்லில் அடங்கியிருக்கிறது. பிறப்பு—மனிதனாகப் பிறப்பதும், நரகத்தில் அநுபவத்துக்காக அதற்குத் தகுந்த உடம்பை அடைவதுமாம். ஆகையால், 'துன்பம்' என்கிற சொல் எம்பெருமானுடைய அநுபவத்துக்கு இடைஞ்சலாயிருப்பதால் கைவல்யம் என்று சொல்லப்பட்ட ஆத்மாவைமாத்ரம் அநுபவிப்பதையே சொல்லுகிறது. அந்த அநுபவம் மிகுந்த இனிமையாய் ஒருவனை இழுக்கும்படியிருப்பதாலே அதை 'பெருந் துன்பம்' என்று பாட்டு சொல்லுகிறது.

(2) இந்தத் திருவாய்மொழியின் ஆரம்பத்தில் சக்ரவர்த்தித் திருமகனைச் சொன்னபடியால், முடிவிலும் அவனையே

சொல்லவேண்டியது. ஆகையால், 'மாயன்' என்கிற சொல் சக்ரவர்த்தித் திருமகனையே சொல்லுகிறது.

(இ - ம்) சேர்த்தி - பிறவினை இறந்தகால வினையெச்சம்.

(10)

---

தெளிவுற்று வீவின்றி நின்றவர்க் கின்பக் கதிசெய்யுந்
தெளிவுற்ற கண்ணனைத் தென்குரு கூர்ச்சட கோபன்சொல்
தெளிவுற்ற வாயிரத் துள்ளிவை பத்தும்வல் லாரவர்
தெளிவுற்ற சிந்தையர் பாமரு மூவுல கத்துள்ளே. (கக)

(ப - ரை) வீவு இன்றி - நாசம் (நடுவில் விட்டுப்போவது) இல்லாமல், தெளிவு உற்று - (எம்பெருமான் விஷயமான) நல்ல அறிவை அடைந்து, நின்றவர்க்கு - இருக்கிறவர்களுக்கு, இன்பம் கதியை-இனியதான (தன்னுடைய திருவடிகளின்) அநுபவத்தை, செய்யும், தெளிவு உற்ற-(இப்படி செய்தும் இவர்களுக்கு ஒன்றும் செய்யவில்லையே என்கிற) நினைவையடைந்திருக்கிற, கண்ணனை, தென் குருகூர்ச் சடகோபன், சொல் - சொல்லான, தெளிவு உற்ற ஆயிரத்துள், இவை பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - படிக்கச்சக்தியுள்ளவர்கள், பா மரு - பாவுதல் பொருந்தின, மூவுலகத்துள்ளே - (ஸத்வம் முதலான மூன்று குணங்களாலே) மூன்று விதமான உலகத்திலிருந்தபோதும், தெளிவுற்ற சிந்தையர் - தெளிந்த ஜ்ஞாநமுள்ள மனதையுடையவர்களாக ஆவார்கள்.

(கருத்து) வேறு பிரயோஜனத்தைத் தேடாமல் எம்பெருமானுடைய ரூபம் முதலானவைகளை இடைவிடாமல் நினைத்துக் கொண்டிருக்கிறவர்களுக்கு மிகுந்த இன்பத்தைக் கொடுக்கும் தன் திருவடிகளைக் கொடுத்தும் 'இவர்களுக்கு ஒன்றும் செய்யவில்லையே' என்கிற நினைவோடுகூடிய கண்ணனைப்பற்றித் தென் குருகூர்ச் சடகோபன் அவனை மனதால் நன்றாய்ப் பார்த்து அருளிச்செய்த ஆயிரத்துள் இந்தப் பத்துப் பாட்டுக்களையும் அடிக்கடி படிக்கச் சக்தியுள்ளவர்கள், ஆத்மாக்களுடைய கர்மங்களுக்குத் தகுந்தபடி விரிவையடைகிற இந்தப் பிரகிருதிமண்டலத்திலிருந்தபோதிலும், கண்ணால் பார்ப்பதுபோல் தெளிவாயும், பக்திரூபத்தையடைந்ததாயுமிருக்கிற எம்பெருமான் விஷயமான ஜ்ஞானத்தை மனதிலுள்ளவர்களாக ஆவார்கள்.

குறிப்பு :—'தெளிவுற்ற ஆயிரத்துள்' என்பதற்கு, ஆழ்வார் மனதால் நன்றாய்ப் பார்த்து அருளிச்செய்திருக்கிறபடியால் அவருடைய ஆயிரம் பாட்டுக்களைக்கொண்டு வேதத்தில் நன்றாய் அர்த்தம் தெரியாமல் ஸந்தேகமுள்ள இடங்களில் அர்த்தத்தை நன்றாய்த் தெரியலாம் என்பது கருத்து.

(இ - ள்) பாமரு - பா + மருவு - பா : முதனிலை தொழிற்பெயர், பரவுதல், மருவு - பொருந்தின : மருவு என்பது மரு என்றாயிற்று. (11)

---

[illegible] ।அரு।

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானுக்கு எல்லாவிடத்திலும் ஸ்நேஹமிருக்கிறது என்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) அயோத்தியிலிருந்த ஸ்தாவரங்களுக்கும் ஜங்கமங்களுக்கும் மோக்ஷத்தைக் கொடுத்தது ; (2) எல்லாவிதமாய் உலகத்தை ரக்ஷிப்பது ; (3) சிசுபாலனுக்கு ஸாயுஜ்யத்தைக் கொடுத்தது ; (4) உலகங்களை உண்டுபண்ணினது ; (5) பூமியைப் பிரளய ஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தது ; (6) யாசிப்பதற்காக வாமநரூபத்தை எடுத்துக்கொண்டது ; (7) சிவனையடுத்த மார்க்கண்டேயனை மோக்ஷத்தைக் கொடுத்து ரக்ஷித்தது ; (8) ப்ரஹ்லாதனுக்காக அவன் தகப்பனை ஹிரண்யகசிபுவைக் கொன்றது ; (9) பாண்டவர்களுக்காகத் துர்யோதனன் முதலானவர்களை நாசம் செய்தது; (10) மோக்ஷமடைந்தவனுடைய ஐசுவரியத்தை ரக்ஷிப்பது. (85)

குறிப்பு :—முதல்பாட்டின் உரையில், நல்ல ஸ்வபாவத்தைக் கொடுத்ததாக எழுதியிருக்கிறது. அப்படியும் அர்த்தம் பண்ணலாம். அது பிள்ளான் அபிப்ராயம்.

---

# ஆறாம் திருவாய்மொழி.

---

அவ—கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமான் ஆச்ரிதருடைய பிரகிருதி ஸம்பந்தத்தையறுத்துத் தன் திருவடிகளை அவர்கள் அடையும்படி செய்கிறான் என்று சொல்லப்பட்டது; இந்த அவன் ஸ்வபாவத்தின் நினைவு உண்டானபோது ஆழ்வார் 'என்னையும் இப்படிச் செய்யாமல் பிரகிருதியுடனே இன்னம் சேர்த்துவைத்திருக்கிறானே' என்று வருந்தி, அவனுடன் சேருவதற்கு இடையூறான இதைப் பார்த்து மிகுந்த துக்கத்தை அடைந்தவராய், அதை உடனே போக்கவேண்டுமென்று இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமானைக் கூப்பிடுகிறார் :—

(கலித்துறை.)

பாமரு மூவுலகும் படைத்த பற்ப நாபாவோ
பாமரு மூவுலகு மளந்த பற்ப பாதாவோ
தாமரைக் கண்ணாவோ தனியேன் றனியா ளாவோ
தாமரைக் கையாவோ வுன்னை யென்றுகொல் சேர்வதுவே. (க)

(ப - ரை) பா - பரவுதலையுடைய வஸ்துக்கள் (தேவர்கள் முதலாய் ஸ்தாவரங்கள் வரையில் உள்ள ஜந்துக்கள்), மரு-மருவி (எங்கும் நிறைந்திருக்கிற), * மூ உலகும் - மூன்றாகிய உலகங்களையும், படைத்த - உண்டுபண்ணின, பற்ப நாபா - தாமரைப் பூப்போன்ற நாபியையுடையவனே! ஓ! பா மரு-மேலே சொன்ன ஜந்துக்கள் நிறைந்த, மூ உலகும் - மூன்று உலகங்களையும், அளந்த, பற்ப பாதா - தாமரைப்பூப்போன்ற திருவடிகளையுடையவனே! ஓ! தாமரைக்கண்ணா! தனியேன் - தனியனான (வேறு உபாயமில்லாத), எனக்கு, தனியாளா - ஒப்பில்லாத ரக்ஷகனே! தாமரைக்கையா! உன்னை, என்றுகொல் - எப்போது, சேர்வது-நான் அடைவது?

---

* மூவுலகம் என்பது கிருதகம், அகிருதகம், கிருதகாகிருதகம் என்பவைகள். முதல் ஸம்புடம் 401-வது பக்கம் நோட்டைப் பார்க்க.

(கருத்து) தேவர்கள் முதலான ஜந்துக்கள் நிறைந்த இம் மூன்று உலகங்களையுண்டுபண்ணி, எல்லாருக்கும் உடம்புகளையும் இந்திரியங்களையும் கொடுத்து உபகாரம் செய்தவனே! பெற்ற தாயாய் இருந்து நீ என்னைக் கவனிக்காமலிருக்கலாமா? இதன் மேலே வாமனனாய் அவதாரம் பண்ணி இவன் உயர்ந்தவன் இவன் தாழ்ந்தவன் என்று பாராமல் எல்லாரையும் உன் திருவடியால் தொட்டு உஜ்ஜீவிக்கும்படி செய்தவனே! வேறு உபாயமில்லாத எனக்கு நீயே உபாயம். தாமரைப்பூக்களைப்போன்ற உன்னுடைய நாபியையும் திருவடிகளையும் திருக்கண்களையும் திருக்கைகளையும் என் ஆசையடங்கும்படி என் கண்களாலே பார்த்து உன்னை அடைவது எப்போதோ?

(இ - ம்) பா - முதனிலைத் தொழிலாகுபெயர். (1)

---

அ-வேறு பிரயோஜனங்களைத் தேடுகிறவர்களுக்கும் உபகாரம் செய்கிற நீ உன்னையே வேண்டுகிற எனக்கும் வேண்டுவதைக் கொடுக்கலாகாதோ என்று சொல்லுகிறார்:—

என்றுகொற் சேர்வதந் தோவர ஞன்முக னேத்துஞ்செய்ய
நின்றிருப் பாதத்தை யானிலம் நீரெரி கால்விண்ணுயிர்
என்றிவை தாமுதலா முற்று மாய்நின்ற வெந்தாயோ
குன்றேடுத் தாநிரை மேய்த்தவை காத்தவெங் கூத்தாவோ. (உ)

(ப - ரை) நிலம் - பூமி, நீர் - ஜலம், எரி - அக்னி, கால் - வாயு, விண் - ஆகாசம், உயிர் - பிராணிகள், என்று - என்று (சொல்லப்படுகிற), இவைதாம் முதலா - இவைகள் முதலாக, முற்றுமாய் நின்ற - எல்லா வஸ்துக்களாகவுமிருந்த, எந்தாய் - என் ஸ்வாமியே! ஆ நிரை - பசுக்கூட்டங்களை, மேய்த்து, குன்றம் எடுத்து - (கோவர்த்தன) மலையை எடுத்து, அவை - அவைகளை, காத்த - (மழையிலிருந்து) ரக்ஷித்த, என் கூத்தா - என்னுடைய (ஆச்சரியமான) லீலைகளைச் செய்தவனே! அரன் - சிவனும், நான்முகன் - பிரம்மாவும், ஏத்தும்-ஸ்தோத்ரம் பண்ணும் படியான, செய்ய - சிவந்த, நின் திருப்பாதத்தை - உன்னுடைய திருவடியை, யான் - நான், சேர்வது, என்றுகொல் - எப்போதோ? அந்தோ - ஐயோ!

(கருத்து) ஐந்து பூதங்கள் ஆத்மாக்கள் முதலான எல்லாவற்றுக்கும் ஆத்மாவாய், இவன் குணமுள்ளவன் இவன் குணமில்லாதவன் என்று பாராமல் எல்லாருடனும் சேர்ந்திருக்குமவனே! இப்படி உன்னுடைய ஸௌசீல்யம் என்கிற குணத்தைக் காட்டி, என்னை உனக்கு அடிமையாக்கிக்கொண்டவனே! ஒரு காரணமில்லாமல் ஸ்வபாவமாயுள்ள உன்னுடைய கருணையாலே கிருஷ்ணனாய் அவதாரம் செய்து பசுக்கூட்டங்களை மேய்த்து அவைகளைக் கோவர்த்தனம் என்கிற மலையை எடுத்துப் பிடித்து, மழையிலிருந்து ரக்ஷித்தது முதலான பல ஆச்சரியமான லீலைகளைச் செய்தவனே! ஐசுவரியம் முதலான பிரயோஜனங்களைத் தேடுகிற பிரம்மாவும் சிவனும் உன் திருவடிகளைக் கொண்டாடும்படி செய்கிறாயே. உன்னையே வேண்டுகிற நான் தாமரைப்பூப்போல் சிவந்த அந்தத் திருவடிகளை வந்தடைவது எப்போது? ஐயோ! இதைச் செய் என்று உன்னைக் கூப்பிடவேண்டுமோ?

(இ - ம்) முதல் ஆ - முதலாக : ஈறுகெட்ட வினையெச்சம்.

---

அவ—கீழ்ப்பாட்டில், கோவர்த்தன மலையைத் தூக்கிப் பிடித்தது சொல்லப்பட்டது; அந்த அழகைத் தாம் எப்போது காண்பது என்று சொல்லுகிறார் :—

காத்தவெங் கூத்தாவோ மலையேந்திக் கன்மாரி தன்னைப்
பூத்தண் டுழாய்முடி யாய்புனை கொன்றையஞ் செஞ்சடையாய்
வாய்த்தவென் நான்முக னேவந்தென் னாருயிர் நீயானால்
ஏத்தருங் கீர்த்தியி னாயுன்னை யெங்குத் தலைப்பெய்வனே. (௩.)

(ப - ரை) மலை ஏந்தி - (கோவர்த்தன) மலையைத் தூக்கிப் பிடித்து, கல் மாரி தன்னை - கல் மழையை (மிகவும் உக்ரமான மழையை), காத்த - தடுத்த, என் கூத்தா - என்னுடைய (இந்த அழகான) லீலைகளைச் செய்தவனே! பூ தண் துழாய் முடியாய் - புஷ்பங்களையும் குளிர்ந்த துளஸிகளையும் திருமுடியிலுடையவனே! புனை கொன்றை - தொடுக்கப்பட்ட கொன்றைப்பூவை உடைய, அம் - அழகான, செம் சடையாய் - சிவந்த ஜடைகளை உடையவனே! (இவைகளையுடைய ருத்திரனுக்கு ஆத்மாவே!)

வாய்த்த - (உனக்குப் பிள்ளையாய்) வந்த, என் நான்முகனே - எனக்கு ஸ்வாமியான பிரம்மாவே (பிரம்மாவுக்கு ஆத்மாவாயிருப் பவனே!), எத்தரும்-ஸ்தோத்ரம் பண்ணுவதற்கு அருமையான, கீர்த்தியினாய் - கீர்த்திகளை (குணங்களை) உடையவனே! நீ வந்து, என் ஆர் உயிர் - என்னிடம் நிறைந்திருக்கிற ஆத்மா, ஆனால் - இப்படியானபிறகு, உன்னை, எங்கு - எந்த விடத்தில், தலைப் பெய்வன் - சேர்வன்?

(கருத்து) கொன்றைப்பூ மாலையை அழகான சிவந்த ஜடை களினுடைய ருத்திரனுக்கும், உனக்குப் பிள்ளையாய் வந்த பிரம் மாவுக்கும் ஆத்மாவாயிருக்கிறவனே! என்னுடைய ஸ்வரூபத்தை யும், ஸ்திதியையும் நியமநம் பண்ணுகிறவனே! இவ்வளவென்று ஸ்தோத்ரம் பண்ணமுடியாத உயர்ந்த குணங்களையுடையவனே! நீ கிருஷ்ணனாய் அவதாரம் செய்தகாலத்தில் கோவர்த்தன மலை யைத் தூக்கிப் பிடித்து, மிகவும் உக்ரமான மழையைத் தடுத்த அழகையும், அப்போது கோபர்கள் புஷ்பங்களைக்கொண்டும் குளிர்ந்த துளஸியைக்கொண்டும் உனக்கு அலங்காரம் செய்த போதிருந்த அழகையும் நான் எங்கே பார்க்கப்போகிறேன்? என் னாலே என்ன செய்யமுடியும்? நீயோ எதையும் செய்யச் சக்தி யுள்ளவன். உன் கிருபையைத் தவிர இதற்கு வேறு என்ன உபா யம் உண்டு?

(இ - ம்) கீர்த்தியினாய் - கீர்த்தியினான் என்பதின் விளிவேற் றுமை. எத்தரும் - எத்து + அரும். எத்து - முதனிலைத் தொழிற்பெயர். அல்லது, எத்த + அரும் - எத்தவரும் என்றும் கொள்ளலாம். நிலைமொழி ஈற்று அகரம் தொகுத்தல். (3)

---

அவ—இப்பாட்டில் பிரம்மா முதலானவர்களின் ஸ்வரூபம் எம்பெருமானுக்கு அதீநம் என்று சொல்லப்பட்டது. அவர் களுடைய ஐச்வரியமும் அவனாலே கொடுக்கப்பட்டதென்று சொல்லுகிறார்:—

எங்குத் தலைப்பெய்வ னானெழின் மூவுல கும்நீயே
அங்குயர் முக்கட் பிரான்பிர மபெரு மானவனீ
வெங்கதிர் வச்சிரக்கை யிந்திரன் முதலாத் தெய்வம்நீ
கொங்கலர் தண்ணந் துழாய்முடி யென்னுடைக் கோவலனே. (௪)

(ப - ரை) கொங்கு-தேனையுடைய (தேனைச்சொரிகிற), அலர்-மலருகிற, தண் - குளிர்ந்த, அம் - அழகிய, துழாய் முடி-திருத்துழாயைத் திருமுடியிலுடைய, என்னுடை கோவலனே - என்னுடைய கோபாலனே! ஏழில் - பிரகாசத்தையுடைய, மூ உலகும் - மூன்று உலகங்களும், நீயே, அங்கு - அவைகளிலுள்ள எல்லா வஸ்துக்களைக்காட்டிலும், உயர் - உயர்ந்த, முக்கண் பிரான் - மூன்று கண்களையுடையவனும் (தன்னைச் சேர்ந்தவர்களுக்கு) உபகாரம் செய்கிறவனுமான ருத்திரனும், நீயே, அவன் - பிரஸித்தனான, பிரம பெருமான் - பிரம்மாவான உலகங்களுக்கு ஸ்வாமியானவன், நீ, வெம் கதிர் - உஷ்ணமான கிரணங்களையுடைய, வச்சிரம் கை-வஜ்ராயுதத்தைக் கையிலுடைய, இந்திரன் முதலா - இந்திரன் முதலான, தெய்வம் நீ - தேவர்களும் நீ, நான், உன்னை, எங்கு - எங்கே, தலைப்பெய்வன்-சேருவேன்.

(கருத்து) மூன்று உலகங்களுடைய ஐசுவரியம் உனக்கு அதீனம். அவைகளிலுள்ள எல்லா வஸ்துக்களைக்காட்டிலும் ஞானத்தாலும் சக்தியாலுமுயர்ந்த முக்கண்பிரானுடைய ஐசுவரியத்தையும், பிரஸித்தனாய் உலகங்களுக்கு ஸ்வாமியாயிருக்கிற பிரம்மாவின் ஐசுவரியத்தையும், உஷ்ணமான கிரணங்களையுடைய வஜ்ராயுதத்தைக் கையிலுடைய இந்திரனுடையவும், மற்றுத் தேவர்களுடையவும் ஐசுவரியத்தையும் நீயே கொடுத்திருக்கிறாய். தேனைச்சொரிகிற மலர்ந்த குளிர்ந்த அழகான துளஸிமாலையும் திருமுடியுமாயிருக்கிற அழகை என் மனதுக்குக் காட்டின கோபாலனே! நீயே அவர்களுக்கு உபகாரம் செய்ததுபோல் என்னுடைய இடையூறுகளைப்போக்கி நான் உன்னைச்சேரும்படி செய்தருள வேண்டும்.

(இ - ம்) முதலா-முதலான : ஈறுகெட்ட பெயரெச்சம். (4)

---

அவ—'நான் செய்ததாக நீர் சொல்லுவது எல்லாமுண்மையே. ஆனால், நீர் என்னைப்பார்ப்பதற்கு ஓர் உபாயத்தைச் செய்யவேண்டும். அப்படியே ஓர் ஏற்பாடு இருக்கிறது.' என்று எம்பெருமான் சொன்னதாக நினைத்து, பதில் சொல்லுகிறார் :—

என்னுடைக் கோவல னேயென்பொல் லாக்கரு மாணிக்கமே
யுன்னுடை யுந்தி மலருல கமவை மூன்றும்பரந்து
உன்னுடைச் சோதிவெள் ளத்தகம் பாலுன்னைக்
[கண்டுகொண்டிட்டு
என்னுடை யாருயி ராரெங்ங னேகொல்வந் தெய்துவரே. (ரு)

(ப - ரை) என்னுடை கோவலனே - என்னுடைய கோபாலனே! என் - என்னுடைய, பொல்லா - துளையிடப்படாத (முன்னால் அநுபவிக்கப்படாத), கருமாணிக்கமே - நீல ரத்நம் போன்ற திருமேனியையுடையவனே! உன்னுடை உந்தி - உன்னுடைய தொப்புளில் (உண்டான), மலர் - (தாமரைப்) பூவில், (உண்டான), உலகம் - உலகங்களுடைய, அவை-பிரஸித்தமான, மூன்றும் - (ஸத்துவம் ரஜஸு தமஸு என்கிற) மூன்று குணங்களாலே மூன்று கூறுகளாகப் பிரிந்திருக்கிற விஷயங்களை, பரந்து - வியாபித்திருந்து, என்னுடை ஆர் உயிரார் - என்னுடைய பூர்ணமான ஆத்மாவானவர், உன்னுடை - உனக்கேயுள்ளதான, சோதி வெள்ளத்து - காந்திப் பிரவாஹமாயிருக்கிற, அகம்பால் - (வைகுந்தம் என்கிற) இடத்தை இருப்பிடமாகவுடைய, உன்னை, கண்டிட்டு - பார்த்து, எங்ஙனே - எப்படி, வந்து எய்துவர் - வந்து அடைவர்?

(கருத்து) மாடு மேய்த்து வா என்று சொல்லும்படி ஆச்ரிதர்களான இடையர்களுக்கு நீ உட்பட்டிருந்ததையும், முன்னாலே அநுபவிக்கப்படாத நீலரத்நம்போன்ற திருமேனியின் அழகையும் என் மனதுக்குக் காட்டினவனே! என்னை ஓர் உபாயம் செய்யச் சொல்லுகிறாயே. என்னுடைய ஆத்மாவான பெரியவர் உன்னுடைய தொப்புளில் உண்டான தாமரைப்பூவில் உண்டு பண்ணப்பட்ட ஸத்வம் ரஜஸு தமஸு என்கிற குணங்களாலே மூன்றுவகைப்பட்ட விஷயங்களில் படிந்து எல்லாம் தமக்குக் கிடைத்ததாக எண்ணிக்கொண்டிருக்கிறாரே. நீயோ வெகுதூரத்தில் அளவில்லாத காந்தியையுடைய வைகுந்தத்திலிருக்கிறாயே. அவர் உன்னைக்கிட்டி எப்படி அநுபவிக்கப்போகிறார்? அவரால் முடியாததுண்டோ?

குறிப்பு:—ஆத்மாவைப் பெரியவராகச்சொல்லி, அவராலே முடியாததுண்டோ என்று சொல்லுவதற்குக் கருத்து—அது

மிகவும் தாழ்ந்தது ; விஷயங்களில் மிகவும் படிந்திருக்கிறது ; தன்னைக் கிருதார்த்தனாகவும் எண்ணிக்கொண்டிருக்கிறது ; அதற்கு எம்பெருமானை ஆசைப்படுவதும் கிட்டுவதும் அநுபவிப்பதும் எப்படி முடியும்? என்பது. ஆகையால், தம்மால் செய்வதோர் உபாயமில்லை. அவனே அதைச் செய்யவேண்டியதென்பது கருத்து. (5)

---

வந்தெய்து மாறறி யேன்மல்கு நீலச் சுடர்தழைப்பச்
செஞ்சுடர்ச் சோதிகள் பூத்தொரு மாணிக்கஞ் சேர்வதுபோல்
அந்தர மேற்செம்பட் டோடடி யுந்திகை மார்வுகண்வாய்
செஞ்சுடர்ச் சோதி விடவுறை யென்றிரு மார்பனையே. (௬)

(ப - ரை) மல்கு - வளருகிற, நீலம் சுடர் - நீலகாந்தியானது, தழைப்ப-தழையும்படி (எல்லாத் திக்குக்களிலும் பரவும்படி), செம்மை சுடர் - சிவந்த வர்ணத்தையுடையவையான, சோதிகள் - ஜோதிஸுகளை (சிவந்த காந்திகளை), பூத்து - புஷ்பித்து, ஒரு மாணிக்கம் - ஒப்பில்லாத நீலரத்நமானது, சேர்வதுபோல் - படுத்திருப்பதுபோல், அந்தரம்மேல்-நடுவில் (இடுப்பில்), செம்பட்டோடு - பீதாம்பரத்துடன், அடி - திருவடிகளும், உந்தி - திருநாபியும், கை - திருக்கைகளும், மார்பு - திருமார்பும், கண் - திருக்கண்களும், வாய் - திருப்பவளமும், செம்சுடர் சோதி - சிவந்த காந்திகளை, விட - வீசும்படி, உறை - (கோயிலிலே) கண்வளர்ந்தருளுகிறவனும், என் திரு மார்பனை - என் தாயான லக்ஷ்மியை மார்பிலுடையவனுமான பெரியபெருமானை, வந்து எய்தும் ஆறு-நான் வந்து அடையும் உபாயத்தை, அறியேன் - நான் அறியவில்லை.

(கருத்து) எம்பெருமான் கோவிலில் கண்வளர்ந்தருளுகிற அழகை என்ன சொல்வேன் ? அவன் திருமேனியிலிருந்து கிளம்பின நீலகாந்தி மேன்மேலும் வளர்ந்து நாலு பக்கங்களிலும் பரவுகிறது. ஒரு நீல ரத்னத்தில் சிவந்த புஷ்பங்கள் பூத்திருப்பது போல் அவனுடைய நீலமான திருமேனியில் சிவந்த காந்தியையுடைய இடுப்பில் சாத்திக்கொண்டிருக்கிற பீதாம்பரமும் திருவடிகளும் நாபியும் திருக்கைகளும்திருமார்பும் திருப்பவளமும் சிவந்த காந்தியை வீசுகின்றன ; என் தாயான பிராட்டியைத் திரு

மார்பிலுடையவனும் கோயிலில் கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளை நான் பார்க்காவிட்டால் தரித்திருக்க முடியாது. அவனை அடைவதற்கு உபாயமோ எனக்குத் தெரியாது. நான் ஆசைப்படுவதை அவனே செய்யவேண்டும்.

குறிப்பு :—நாபியில் தாமரைப்பூ இருப்பதாலும் திருமார்பில் கௌஸ்துபமிருக்கிறபடியாலும் அவைகளைப் பாட்டு மற்றவைகளுடன் சேர்த்திருக்கிறது. (6)

---

அவ—மூன்றாவது நான்காவது பாட்டுக்களில் பிரம்மா ருத்திரன் முதலானவர்களின் ஸ்வபாவமும், ஐசுவரியமும் எம்பெருமானுக்கு அதீநங்கள் என்பது சொல்லப்பட்டது ; இதில் அவர்களுடைய போகமும் ப்ரவிருத்திகளும் அவன் அதீநங்கள் என்பது சொல்லப்படுகிறது :—

என்றிரு மார்பன் றன்னையென் மலைமகள் கூறன்றன்னை
யென்றுமென் னாமக ளையகம் பாற்கொண்ட நான்முகனை
நின்ற சசிபதி யைநிலங் கீண்டெயின் மூன்றெரித்த
வென்று புலன்துரந் தவிசும் பாளியைக் காணேனே. (எ)

(ப - ரை) என் திருமார்பன் தன்னை - பிராட்டியைத் திருமார்பில் உடைய என்னுடைய ஸ்வாமியை, என் - என்னுடையவனை, மலைமகள் கூறன் தன்னை - ஹிமயமலையின் பெண்ணான பார்வதியைப் பாதி உடம்பில் வைத்துக்கொண்டிருப்பவனை, என் - என்னுடையவனை, நா மகளை - நாக்கிலிருக்கும் மகளை (ஸரஸ்வதியை), என்றும் - எப்போதும், அகம்பால் - வாயில், கொண்ட - வைத்துக்கொண்டிருக்கிற, நான்முகனை-பிரம்மாவை, நின்ற-(அவர்களுடன்கூட வேதத்தில் சொல்லப்படும்படி) நின்றவனை, சசி பதியை - இந்திராணியின் கணவனை, நிலம் கீண்டு - பூமியைப் பிரளயஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்து, எயில் மூன்று-மூன்று மதில்களை, எரித்து - கொளுத்தி, புலன்-இந்திரியங்களை, வென்று - ஜயித்து, துரந்த - விட்டுவிட்ட, விசும்பு ஆளியை - ஸ்வர்க்கத்தை ஆளுகிற ஸர்வேசுவரனை, காணேன் ஓ - காணமாட்டேனே.

(கருத்து) நீ லக்ஷ்மியை உன் திருமார்பில் வைத்துக்கொண்டிருப்பது உனக்கு அதீநமாயிருப்பதுபோல், பார்வதியை ருத்திரன் தன் உடம்பின் பாதியில் வைத்துக்கொண்டிருப்பதும், ஸரஸ்வதியைப் பிரம்மா எப்போதும் தன்னுடைய நாக்கில் வைத்துக்கொண்டிருப்பதும், இந்திராணியுடன் இந்திரன் சேர்ந்திருப்பதும் உனக்கு அதீநங்கள். அந்தந்த ஸ்திரீகளால் அவரவர்களுக்குக் கிடைக்கும் போகமும் உன் அதீநம். எப்படி நீ பூமியைப் பிரளயஜலத்திலிருந்து மேலே கொண்டுவந்தாயோ ; அப்படியே ருத்திரனுக்கு ஆத்மாவாயிருந்து த்ரிபுரம் என்கிற மூன்று பட்டணங்களை எரித்தாய். பிரம்மாவுக்கு ஆத்மாவாயிருந்து ஸ்ருஷ்டி செய்வதற்காக இந்திரிய ஜயத்தைப்பண்ணினாய். இந்திரனுக்கு ஆத்மாவாயிருந்து ஸ்வர்க்கத்தையாளுகிறாய். ஆகையால் இவர்கள் எல்லாருடைய பிரவிருத்திகளும் உனக்கு அதீநங்கள். ஆனபின்பு நான் வேண்டுவது உன்னுடைய அநுக்கிரஹத்தாலேயே கிடைக்கவேண்டியது. நீயோ அதைச் செய்யவில்லை. ஆகையால், இனிமேலுன்னை நான் காணாமல் போகவேண்டியதாக ஆகும்.

குறிப்பு :–(1) தகப்பன், யௌவனம் வந்த பிள்ளைகளுக்குத் தகுந்த மனைவிகளைத் தேடி அவர்களுக்குக் கல்யாணம் செய்விப்பதுபோல், எம்பெருமானும் பிரம்மா முதலானவர்களுக்கு அவரவர்களுக்குத் தகுந்த மனைவிகளைக் கல்யாணம் பண்ணிவைத்திருக்கிறானென்பது கருத்து.

(2) 'எயில்' என்பது மதிள் ; 'மூன்று எயில்' என்பது ஆகுபெயராய் மதில்களையுடைய மூன்று பட்டணங்களைச் சொல்லுகிறது. (7)

---

ஆளியைக் காண்பரி யாயரி காணரி யாயரக்கர்
ஊளையிட் டன்றிலங்கை கடந்து பிலம்புக் கொளிப்ப
மீளியம் புள்ளைக் கடாய்விறன் மாலியைக் கொன்றுபின்னும்
ஆளுயர் குன்றங்கள் செய்தடர்த் தானையுங் காண்டுங்கொலோ. (அ)

(ப - ரை) ஆளியை - யாளியை, காண் - பார்த்த, பரியாய் - குதிரையாய், அரி காண் - ஸிம்மத்தைக் கண்ட, நரியாய், அரக்கர் - ராக்ஷஸர்கள், ஊளையிட்டு, அன்று - அப்போது,

இலங்கை கடந்து - இலங்கையை விட்டு, பிலம் புக்கு - ரஸாதலத்தில் புகுந்து, ஒளிப்ப - ஒளிந்துகொள்ளும்படி, மீளி - (பிரதிகூலர்க்கு) மிருத்யுவாய், அம் - (அநுகூலர்க்கு) அழகான, புள்ளை - (கருட) பக்ஷியை, கடாய் - (வேகமாக) நடத்தி, விறல் மாலியை - பராக்கிரமமுள்ள மாலியை, கொன்று - நாசம் செய்து, பின்னும், ஆள் - ஆள்களால் (கொல்லப்பட்ட ராக்ஷஸர்களால்), உயர் குன்றங்கள் செய்து - உயர்ந்த மலைகளைச் செய்து, அடர்த்தானையும் - நாசம் செய்த எம்பெருமானையும், காண்டும் கொலோ - நாம் பார்ப்போமோ?

(கருத்து) யாளியைக்கண்ட குதிரையைப்போலவும், சிங்கத்தைக்கண்ட நரியைப்போலவும் பயந்து ஊளையிட்டு ராக்ஷஸர்கள் அந்தக் காலத்தில், பயந்த பக்ஷிகள் கூட்டைவிட்டு ஓடுவதுபோல், இலங்கையைவிட்டு ஓடிப்போய், பாம்புகள் வளைகளில் புகுந்து ஒளிந்து கொள்வதுபோல் ரஸாதலத்தில் புகுந்துகொள்ளும்படி பிரதிகூலர்க்கு மிருத்யுவாய், அநுகூலர்க்கு அழகாய்த் தோன்றுகிற கருடனை வேகமாக நடத்தி, மாலி ஸுமாலி முதலானவர்களைக்கொன்று அவர்கள் பிணங்களை மலைகள்போல் எம்பெருமான் குவித்தான். இப்படிப்பட்ட பெருமையையுடைய அவன் என்னுடைய இடையூறுகளைப்போக்கி எனக்குத் தன்னை எப்போது காட்டப்போகிறான்? (8)

---

காண்டுங் கொலோநெஞ்ச மேகடிய வினையே முயலும்
ஆண்டிறன் மீளிமொய்ம்பி னரக்கன் குலத்தைத் தடிந்து
மீண்டு மவன்றம்பிக் கேவிரி நீரிலங் கையருளி
யாண்டுதன் சோதி புக்க வமரரரி யேற்றினையே. (௯)

(ப - ரை) கடிய வினையே - க்ரூரமான பாபத்தையே, முயலும் - (ஆவலுடன்) செய்ய முயற்சி செய்கிறவனும், ஆண் திறல் - ஆண்மையிலே (மற்றவர்களையடக்குவதில்) ஸாமர்த்தியமுள்ளவனும், மீளி மொய்ம்பில் - யமனைப்போல் வலிமையை உடையவனும் ஆக (இருந்த), அரக்கன் குலத்தை - (தம்பியுடனும் பிள்ளைகளுடனும்) ராக்ஷஸனான ராவணனுடைய குலத்தை, தடிந்து - கொன்று, அவன் தம்பிக்கே - அவனுடைய மற்றொரு

*தம்பியான விபீஷணனுக்கே, விரி நீர் - விஸ்தாரமான ஜலத்தை (ஸமுத்ரத்தைச்) சுற்றிலுமுடைய, இலங்கை அருளி - இலங்கையைக் கிருபையினால் கொடுத்து, மீண்டும் - மேலும், ஆண்டு - (திருவயோத்திக்குத் திரும்பிவந்து) அதைப் பரிபாலநம்பண்ணி, தன் சோதி - தன்னுடைய மிகுந்த காந்தியுள்ள வைகுந்தத்தில், புக்க - புகுந்த, அமரர் அரி ஏற்றினை - நித்தியஸூரிகளுடைய, ஸிம்மச்ரேஷ்டனை, நெஞ்சமே - மனமே! நாம், காண்டும் கொலோ - பார்க்கமுடியுமோ ?*

*(கருத்து) பிராட்டியைப் பலாத்காரமாகக் கொண்டுபோன க்ரூரமான கர்மத்தை உடையவனும், மற்றவர்களை அடக்குவதில் ஸாமர்த்தியமுள்ளவனும், யமனைப்போல மிருத்தசக்தியையுடையவனுமான ராவணனையும் அவன் தம்பி கும்பகர்ணனையும், பிள்ளைகளையும் கொன்று, அவனுடைய மற்றொரு தம்பியான விபீஷணனுக்கு லங்கையின் ஐசுவரியத்தைக் கொடுத்து அயோத்திக்குத் திரும்பிப்போய், தன்னைவிட்டுப் பிரிந்து வருத்தப்பட்ட தன்னுடைய பிரஜைகளுக்கு அந்த வருத்தம் தீரும்படி வெகுகாலம் அரசாண்டு, அவர்களுடன் தன்னுடைய வைகுந்தத்துக்குப்போய் நித்தியஸூரிகளின் நடுவில் சிங்கம்போல் விஜயலக்ஷ்மியுடன் எழுந்தருளியிருக்கிற சக்ரவர்த்தித் திருமகனை மனமே நாமும் ஒருநாள் பார்க்கமுடியுமோ ?*

*குறிப்பு :—விபீஷணனுக்குச் சக்ரவர்த்தித் திருமகன் லங்கை ஐசுவரியத்தைக் கொடுத்தது, அவன் தனக்குத் துணையாக இருந்தான் என்பதற்காக அன்று ; ராவணனைக் கொல்ல வேண்டியதாயிருந்ததே ; அவனைச் சேர்ந்தவர்களுக்கு இதைக் கொடுக்கவேண்டுமே. நல்லவேளை அவனுக்கு ஒரு தம்பியிருக்கிறானே என்று பார்த்து அதைச் செய்தது.* (9)

---

ஏற்றரும் வைகுந்தத் தையரு ளும்நமக் காயர்குலத்து
ஈற்றிளம் பிள்ளையொன் றாய்ப்புக்கு மாயங்க ளேயியற்றிக்
கூற்றியல் கஞ்சனைக் கொன்றைவர்க் காய்க்கொடுஞ் சேனைதடிந்து
ஆற்றல் மிக்கான் பெரியபரஞ் சோதி புக்கவரியே. (௧௦)

(ப - ரை) ஆயர்குலத்து - இடையர்கள் குலத்திலே, ஈற்று இளம்பிள்ளையாய் - ஈன்றுதலை - பிறந்தலை உடைய சிறுபிள்ளையாய், மாயங்களை இயற்றி - ஆச்சரியமான லீலைகளையே செய்து, ஒன்றாய் புக்கு-ஒரு காரணத்தாலே (மதுரைக்குப்) போய், கூற்று இயல் - யமனுடைய ஸ்வபாவமுள்ளவனை, கஞ்சனை - கம்ஸனை, கொன்று, ஐவர்க்கு ஆய் - ஐந்து பாண்டவர்களுக்கு எல்லாவித பந்துவாய், கொடும் சேனை - (துரியோதனனுடைய) கொடுமையான ஸேனையை, தடிந்து - நாசஞ்செய்து, ஆற்றல் மிக்கான் - பொறுமை மிகுந்தவனும், பெரிய, பரஞ்சோதி - பரஞ்சோதி என்று சொல்லப்படுகிற வைகுந்தத்தில், புக்க - புகுந்தவனுமான அரி - ஹரியான க்ருஷ்ணன், ஏற்று அரும் - ஏறுதல் அருமையான, வைகுந்தத்தை, நமக்கு, அருளும் - க்ருபையுடன் கொடுப்பன்.

(கருத்து) எம்பெருமான் கண்ணனாய் இடையர்களுக்குள்ளே அவதாரஞ்செய்து சிறுபிள்ளையாயிருக்கும்போதே பூதனை சகடாஸுரன் முதலானவர்களைக் கொன்றது முதலான ஆச்சரியமான லீலைகளைச் செய்து, பந்துரூபமாய் மதுரைக்குப்போய் புகுந்து, உடம்பைவிட்டு உயிரைப்பிரிக்கிற யமனைப்போல வஸுதேவனையும் தேவகியையும் விட்டுத் தன்னைப்பிரித்த கம்ஸனைக் கொன்று, தன்னையாச்ரயித்த ஐந்து பாண்டவர்களுக்கு எல்லாவித பந்துவாயிருந்து, அவர்களுடைய விரோதியான துர்யோதநனையும் அவன் ஸேனைகளையும் நாசஞ்செய்து, இவ்வளவும் செய்தும் நான் ஒன்றும் அவர்களுக்குச் செய்யவில்லையேயென்று எண்ணிக்கொண்டிருந்து வைகுந்தத்துக்குப் போனானே. இப்படி ஆச்ரிதர்களுக்கு விரோதிகளை நாசஞ்செய்து அவர்களுக்கு வேண்டியதைச் செய்தவன் நம்முடைய இடையூறுகளைப்போக்கி அவனுடைய க்ருபையில்லாமல் ஏறமுடியாத வைகுந்தத்தை நமக்குக் கொடுக்கமாட்டானோ? ஆகையால் மனமே தேறியிரு.

(இ - ம்) ஏற்றரும் - ஏற்று + அரும்; ஏற்று - ஏறுதல்: தொழிற்பெயர். ஈற்று - தொழிற்பெயர்; பிறத்தல் என்பது பொருள். மிக்கான் - வினையாலணையும் பெயர். (10)

---

புக்க வரியுரு வாய வுணனுடல் கீண்டுகந்த
சக்கரச் செல்வன்றன் னைக்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
மிக்கவோ ராயிரத் துள்ளிவை பத்தும்வல் லாரவரைத்
தொக்குப் பல்லாண் டிசைத்துக் கவரிசெய்வ ரேழையரே. (கக)

(ப - ரை) அ-அந்த, அரி உருவாய்-ஸிம்மரூபத்தையுடைய வனாய், புக்கு - (சத்துருவினிடத்தில்) புகுந்து, அவுணன்உடல் - ஹிரண்யகசிபுவின் உடம்பை, கீண்டு - பிளந்து, உகந்த - ஸந்தோஷப்பட்ட, சக்கரம்செல்வன் தன்னை - சக்கரம் (முதலான எல்லா ஆயுதங்களாகிய) ஸம்பத்தையுடையவனைப்பற்றி, குருகூர்ச் சடகோபன் சொன்ன, மிக்க - பெருமையையுடைய, ஓர் ஆயிரத் துள் இவை பத்தும், வல்லாரவரை - படிக்கச் சக்தியுள்ளவர்களை, ஏழையர் - (பாகவத கைங்கரியத்தில்) ஆசையுள்ளவர்களான அப் ஸரஸ்ஸுக்கள், தொக்கு - கூட்டமாய்ச்சேர்ந்து, பல்லாண்டு, இசைத்து - பாடி, கவரி - சாமரம் வீசுவதை, செய்வர் - பண்ணு வார்கள்.

(கருத்து) வாயாலே சொல்லமுடியாதபடி ஆச்சரியமான சிங்கரூபத்தை யெடுத்துக்கொண்டு, ஹிரண்யகசிபுவின் உடம் பைப்பிளந்து தன்னை ஆச்ரயித்தவன் விரோதியை நாசம்செய் வதால் ஸந்தோஷப்பட்டவனும், பிரதிகூலர்களை நாசம்பண்ணு வதற்குவேண்டிய எல்லா ஆயுதங்களாகிய ஸம்பத்தையுடையவனு மான எம்பெருமானைப்பற்றி ஆழ்வார் அருளிச்செய்தவைகளும், ஆச்ரிதர்களுக்காகவே வைத்துக்கொண்டிருக்கிற அவனுடைய ஸ்வரூபம் ரூபம் குணங்கள் விபூதிகள் ஆகிய இவைகளை நன்றாய்ச் சொல்லுகையாலே மிகுந்த பெருமையையுடையவைகளுமான ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே இந்தப் பத்துப்பாட்டுக்களைப் படிக் கிறவர்களுக்கு, எம்பெருமானுக்குக் கைங்கரியம் செய்துகொண் டிருந்து பாகவதர்களுக்கும் கைங்கரியம் செய்வதில் ஆசையுள்ள அப்ஸரஸ்ஸுக்கள் கூட்டமாய்ச் சேர்ந்து பல்லாண்டு பாடி சாமரம் வீசுவது முதலான எல்லாவித உபசாரங்களைச் செய் வார்கள்.

குறிப்பு :—பல்லாண்டு என்பதற்கு வெகு வர்ஷங்கள் என் பது பொருள். வெகு வர்ஷங்களிருக்க வேண்டுமென்று சொல் லுகிற பாட்டுக்களும் அதற்குப்பொருள்.

இந்தத் திருவாய்மொழியில் முதலிரண்டு பாட்டுக்களாலே எம்பெருமானே பிராப்யன் என்றும், அடுத்த ஐந்து பாட்டுக்களாலே அவனே அதற்கு உபாயம் என்றும், அவைகளுக்கு அடுத்த இரண்டு பாட்டில், விரோதிகளை நாசம்பண்ணுவதே அவனுக்கு ஸ்வபாவம் என்றும் சொல்லி, பத்தாவது பாட்டில் இப்படிப்பட்டவன் நம்மை ரக்ஷிக்காதிருக்கமாட்டான் என்று ஆழ்வார் தம்முடைய மனதை ஸமாதானப்படுத்துகிறார்.

---

[illegible] ॥ |௮௬|

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களுடைய அழுகைக் குரலைப் போக்குகிறனென்பது பத்துக் காரணங்களாலே சொல்லப்படுகிறது. அவைகளாவன :— (1) திருநாபியிலிருக்கும் தாமரைப்பூவால் விளங்குவது ; (2) பிரம்மா ருத்திரன் முதலானவர்களாலே ஸேவிக்கப்படுகிற திருவடிகளையுடையவனாயிருப்பது ; (3) கோவர்த்தனத்தை யெடுத்து, பசுக்களை ரக்ஷித்தது முதலானவைகள் ; (4) எல்லாரையும் அவர்களுக்குள்ளேயிருந்து நியமநம்பண்ணுவது; (5,6) ஆச்ரிதர்களுக்கு உட்பட்டு, அவர்கள் சொன்னதைச்செய்வது ; (7) பிரம்மா முதலானவர்களை ஆபத்திலிருந்து விடுவித்தது ; (8) அஸுரர்களை நாசம்பண்ணுவது ; (9) ராவணன் தம்பியான விபீஷணனைக் காப்பாற்றினது ; (10) பாண்டவர்களின் விரோதிகளை நாசம் செய்தது. (86)

---

# ஏழாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த் திருவாய்மொழியில் ஆழ்வார், தமக்கு எம்பெருமான் கட்டாயம் வைகுந்தத்தைக் கொடுப்பன் என்று தம் மனதை ஸமாதானப்படுத்தினார். இதை அவன் உடனே செய்யவில்லை; பின்னையும் அவனுடன் சேருவதற்கு ஆசைப்பட்டார். அவனுடைய அழகை நினைத்துக்கொண்டிருந்ததாலே அவனை மனதால் பார்த்து ஸந்தோஷப்பட்டார். ஆனால், அவனுடைய பாஹ்ய ஸம்ச்லேஷம் கிடைக்காமையால் வருத்தமுமிருந்தது. அவனுடைய அவயவங்களின் அழகாலே துன்பப்படுத்தப்பட்டவராய் தன்னுடைய இருப்பை ஒரு நாயகியின் பேச்சாகப் பேசுகிறார்.

(2) "எங்ஙனேயோ" (5 - 5)-இல் அவருக்கு ஸந்தோஷமும் வருத்தமும் கலந்திருந்தன. இந்தத் திருவாய்மொழியிலும் அவ்விரண்டுமிருக்கின்றன. ஆனால், அதில் அவைகள் ஸமமாயிருந்தன; இதில் வருத்தம் அதிகப்பட்டிருக்கிறது. "இணைக்கூற்றங் கொலோ" என்பதால் இது தெரிகிறது.

(3) ஒரு நாயகி, தன் இருப்பைப்பார்த்துத் துக்கப்பட்ட பந்துக்களுக்கும் தனக்கும் நடக்கிற இருப்பை வெளியிட்டுக் கொண்டு அலற்றுகிறாள்.

(கலித்துறை.)

ஏழைய ராவி யுண்ணு மிணைக்கூற்றங் கோலோவறியேன்
ஆழியங் கண்ண பிரான்றிருக் கண்கள் கோலோவறியேன்
சூழவுந் தாமரை நாண்மலர் போல்வந்து தோன்றுங்கண்டீர்
தோழியர் காளன்னை மீரேன்செய் கேன்துய ராட்டியேனே. (க)

(ப - ரை) ஏழையர் ஆவி - சபலைகளான ஸ்திரீகளுடைய பிராணனை, உண்ணும் - சாப்பிடுகிற, இணை கூற்றம் கொல் ஓ - இரட்டையான யமன்களோ? அறியேன், ஆழி அம் கண்ண பிரான் - ஸமுத்திரத்தைப்போல் அழகான கண்களுடைய பிரானுடைய, திரு கண்கள் ஓ அறியேன், தாமரை, நாள் மலர் போல் - அப்போது உண்டான புஷ்பம்போல், சூழவும் - என்னைச் சுற்றி

னும், வந்து தோன்றும் - வந்து தோன்றுகின்றன. கண்டீர் - பார்த்தீர்களா (பார்க்கவில்லையா?) தோழியர்காள் - தோழிகளே! அன்னைமீர் - தாய்களே! துயராட்டியேன் - துன்பத்தை அடைந்திருக்கிற நான், என்செய்கேன், என்னசெய்வேன்?

(கருத்து) இரண்டு வஸ்துக்கள் என் முன்னாலே தோன்றுகின்றனவே, அவைகள் எம்பெருமானிடத்தில் ஆசையுள்ளவர்களும் அவனை அநுபவிக்கப்பெறாமல் தரித்திருக்கமுடியாதவர்களுமான ஸ்திரீகளுடைய பிராணனைக் கொண்டுபோவதற்காக ஒன்றோடொன்று ஸங்கேதம் பண்ணிக்கொண்டு வந்திருக்கிற யமன்களா? இவைகள் யமன்களாயிருந்தால் இவ்வளவு அழகுள்ளவைகளாயிருக்குமா? அல்லது, முன்னால் என்னுடன் சேர்ந்து உபகாரம்செய்த கண்ணனுடைய நீண்ட அழகான திருக்கண்களோ? இவைகள் உயிரிழந்தவனைப் பிழைப்பிக்கத் தகுந்தவைகளல்லவா? என்னை இப்படி வருத்தப்படுத்துங்களோ? இவைகள் அப்போது பூத்த தாமரைப் பூக்களைப் போல் அழகாய் என்னைச் சுற்றிலுமிருந்து வருத்தப்படுத்துகின்றன. இவைகள் எவைகளோ? எனக்குத் தெரியவில்லை. மூலபலத்தோடு சண்டைசெய்த காலத்தில் ராக்ஷஸர்களுக்கு எங்குமிராமனிருப்பதாய்த் தோன்றி, அவர்கள் அவனுடைய பாணங்களுக்குத் தப்பிப் போகாமலிருந்ததுபோல் என்னைச் சுற்றிலுமிருக்கிற இவைகளை நான் எப்படித் தப்பிப்போவது? தோழிகளே! தாய்மார்களே! இவைகளை நீங்கள் பார்க்கவில்லையா? ஓ! துக்கப்படவே பிறந்திருக்கிற நான் என்னசெய்வேன்? இவைகளைக் கிட்டவும் முடியவில்லை; மறக்கவும் முடியவில்லை. இந்தத் துக்கத்துக்கு என்ன பரிஹாரம் பண்ணக்கடவேன்?

குறிப்பு:—(1) இந்த இணைக்கூற்றம், ஏழைகளையே துன்பப்படுத்துகின்றனவே; அவர்களுக்கு ஆசையையுண்டுபண்ணின எம்பெருமானை துன்பப்படுத்தவில்லையே; துன்பப்படுத்தினால், இவைகள் படுத்துகிற பாட்டைப்பார்த்து ஸஹிக்காமல் அவன் இரங்குவன். 'நீ படுகிறபாடு வேண்டாம்' என்று என்னை விலக்கப் பார்க்கிற தோழிகளையும் தாய்மார்களையும் அவைகள் துன்பப் படுத்தவில்லையே. துன்பப்படுத்தினால், நான் செய்வதெல்லாம் தகுந்ததல்ல என்று அவர்கள் எண்ணமாட்டார்களே என்பது கருத்து.

(2) அசோகவனத்திலிருந்து "ஹா! ராம! ஹா! லக்ஷ்மண!" என்று ஸீதை கதறினதுபோல், ஆழ்வாரும், 'தாய்மார்களே! தோழிகளே!' என்று கதறுகிறார்.

(3) 'ஆவியுண்ணும்' என்பதற்கு, உடம்பிலும் அலங்காரங்களிலும் ஒரு வேறுபாட்டையும் பண்ணாமல் பிராணனை மாத்திரம் கொண்டுபோகின்றன என்பது கருத்து.

(4) 'ஆழி அம் கண்ணபிரான்' என்பதற்கு, திருப்பாற்கடலைப்போல் நீண்டு விசாலமாய் குளிர்ந்து இனியவைகளாய் வெண்மையாய் எம்பெருமானுடைய கண்களிருக்கின்றன என்பது கருத்து.

(5) எம்பெருமானுடைய முகத்தின் அவயவங்களை அநுபவிக்கிற ஆழ்வார் அவனுடைய திருக்கண்களை முதலில் பேசுவதற்குக் காரணம்:—சேதநாசேதநங்களையும் திருக்கண்களாலே வசப்படுத்திக்கொள்வதுதான்.

(6) எம்பெருமானுடைய திருமுகத்தின் அழகை ஆழ்வார் இடைவிடாமல் நினைத்ததாலே கண்முன்னே எம்பெருமான் வந்திருப்பதாக எண்ணி, அவனைக் கட்டிக்கொள்ளப் போகிறார். கையில் அகப்படவில்லை. நடுக்கடலிலிருப்பதுபோல் துக்கப்பட்டுக் கூப்பிடுகிறார். (1)

---

அவ—கீழ்ப்பாட்டில் நாயகி "தோழியர்காள் அன்னைமீர் என் செய்கேன்" என்று சொல்ல, அவர்கள் வந்து நீ இப்படி அலற்றுவது தகுந்தது அன்று என்று சொல்ல, அவர்களுக்குப் பதில் சொல்லுகிறாள்:—

ஆட்டியுந் தூற்றியு நின்றன்னை மீரென்னை நீர்நலிந்தென்
மாட்டுயர் கற்பகத் தின்வல்லி யோகொழுந் தோவறியேன்
ஈட்டிய வெண்ணெயுண் டான்றிரு மூக்கென தாவியுள்ளே
மாட்டிய வல்விளக் கின்சுட ராய்நிற்கும் வாலியதே. (உ)

(ப - ரை) மாட்டு உயர் - (கண்களின்) பக்கங்களில் உயர்ந்திருக்கிற, கற்பகத்தின், வல்லியோ - கொடியோ, கொழுந்தோ-

(அல்லது அதினுடைய) கொழுந்தோ, அறியேன் - நான் அறியவில்லை. ஈட்டிய - சேர்த்துவைக்கப்பட்ட, வெண்ணெய் உண்டான் - வெண்ணெயைச் சாப்பிட்ட கண்ணனுடைய, திரு, மூக்கு, எனது ஆவி உள்ளே-என்னுடைய ஸ்வரூபத்துக்குள்ளே மாட்டிய - தொங்கவிடப்பட்ட (ஏற்றிவைத்திருக்கிற), வல் - பலமான, விளக்கின் சுடராய் - விளக்கினுடைய ஜ்வாலையாய், நிற்கும், வாலியது - (அதிக) பலமுள்ளதாகவிருக்கிறது. அன்னைமீர் - தாய்மார்களே! நீர், ஆட்டியும் - அங்குமிங்கும் அலைத்தும், தூற்றியும் - பழிகளைச் சொல்லியும், என்னை, நலிந்து - துன்பப் படுத்தி, என் - என்ன பிரயோஜநம்?

(கருத்து) இரண்டு க்ஷீரஸமுத்திரத்துக்கு நடுவிலே வாஸனையே ரூபத்தை யெடுத்துக்கொண்டு அவைகளின் குளிர்ந்த அலைகளால் நனைக்கப்பட்டு ஓங்கிவளர்ந்த கற்பகவிருக்ஷத்தின் கொடியோ என் முன்னுலே தோன்றுகிறது? ருஜுவாய் நீண்டிருப்பதாலே கொடி என்று சொல்லலாம். அஃது அல்ல. மிகவும் மிருதுவாய் அழகாய் கூர்மையுள்ளதாயிருக்கிறது. இஃது அந்தக் கொடியின் கொழுந்தோ? அதுவுமல்ல. அதில் வெண்ணெய் வாஸிக்கிறதே. ஆகையால், கோபிகள் சேர்த்துவைத்திருந்த வெண்ணெயைச் சாப்பிட்ட கண்ணனுடைய திருமூக்குத்தான். அஃது என்னுடைய ஸ்வரூபத்திலிருந்து அதில் ஏற்றிவைக்கப்பட்ட விளக்கின் ஜ்வாலையைப்போல் துன்பப்படுத்துகிறது. ஜ்வாலையைப்போல என்று சொல்லுவதும் பிசகு. அதை மணியாலும் மந்திரத்தாலும் சுடாமலிருக்கும்படி செய்யலாம். இதை அப்படித் துன்பப்படுத்தாமல் செய்யமுடியவில்லை. ஆகையால், அதைக்காட்டிலும் இஃது அதிகபலமுள்ளது. இஃது என் இருப்பு. எனக்கு ஹிதத்தையும் பிரியத்தையும் செய்கிற நீங்கள் என்னை ஒருவிடத்தில் இருக்கவொட்டாமல் அலைத்து, ஊராருடன் சேர்ந்து எனக்குப் பழிகளைச் சொல்லிக்கொண்டு இருக்கிறீர்களே. இதனுல் உங்களுக்கு என்ன பிரயோஜனம் கிடைக்கும்?

குறிப்பு :—(1) இரண்டு திருக்கண்களின் நடுவிலேயிருக்கும் மூக்கானது இரண்டு திருப்பாற்கடலின் நடுவில் ஒரு கற்பகவிருக்ஷமிருந்தால் அதின் கொடிபோலிருக்கிறது என்பது "மாட்டு உயர்" என்பதற்குக் கருத்து.

(2) கண்ணன் வெண்ணெயைச் சாப்பிடும்போது, மூக்கில் படும்படி அது திரண்டிருந்தது என்பது 'ஈட்டிய' என்பதின் கருத்து. அதையே ஆழ்வார் எப்போதும் நினைத்துக்கொண்டிருந்ததினால் அப்போதும் அவன் திருமூக்கில் வெண்ணெய் வாஸனையிருந்ததாகத் தோன்றிற்று என்பது கருத்து.

(3) திருமூக்காகிய விளக்கின் ஜ்வாலை தம்முடைய ஸ்வரூபத்திலிருக்கிறதே: சுற்றிலுமிருந்த திருக்கண்களைத் தப்பினாலும் தப்பலாம். ஸ்வரூபத்திலிருக்கிற இதை எப்படித் தப்பக்கூடும் என்பது, "ஆவியுள்—நிற்கும்" என்பதற்கு கருத்து.

(இ - ம்) உண்டான் - வினையாலணையும் பெயர். (2)

---

வாலிய தோர்கனி கொல்வினை யாட்டியேன் வல்வினைகொல்
கோலந் திரள்பவ ளக்கொழுந் துண்டங்கொ லோவறியேன்
நீல நெடுமுகில் போற்றிரு மேனியம் மான்றொண்டைவாய்
ஏலுந் திசையுளெல் லாம்வந்து தோன்றுமென் னின்னுயிர்க்கே.

(ப - ரை) வாலியது-பலமுள்ளதான (நன்றாய்ப் பழுத்த) ஓர் - விலக்ஷணமான, கனி கொல் - பழமோ? வினையாட்டியேன் - பாபம்பண்ணின என்னுடைய, வல் - பலமான, வினை கொல் - பாபமோ? கோலம் திரள்-அழகினுடைய கூட்டம்போலிருக்கிற, பவளம் - பவளத்தினுடைய, கொழுந் துண்டம் கொலோ-நன்றாய் வளர்ந்த துண்டமோ? அறியேன்; நீலம் - நீலமான, நெடு முகில்போல் - பெரிய மேகம்போன்ற, திருமேனி - திருமேனியையுடைய, அம்மான் - ஸ்வாமியினுடைய, தொண்டை வாய் - கோவைப்பழம்போன்ற திருப்பவளம், என் - என்னுடைய, இன் - இனியதான, உயிர்க்கு - ஆத்மாவுக்கு, (என் ஸ்வரூபத்தைக் கொல்லுகைக்காக), ஏலும்-(ஓடிப்போய் இதில் அகப்படாமல் தப்பிப்போவதற்கு) தகுந்த, திசையுள் எல்லாம் - திக்குகளில் எல்லாம், வந்து தோன்றும்.

(கருத்து) இஃதென்ன என் முன்னாலே தோன்றுகிறதே, இது நன்றாய்ப் பழுத்த அளவில்லாமல் இனியதான பழமோ? அல்ல, பழம் என்னை வருத்தப்படுத்துமோ? பாபம்செய்த என்

னுடைய பாபமோ? அதுவுமல்ல. அழகெல்லாம் ஒன்ருய்ச் சேர்ந்து வந்ததுபோலிது இருக்கிறது. ஆனால், பவளத்தின் நன்ருய் வளர்ந்த துண்டமோ? அதுவுமன்று. பெரிய நீலமேகம்போன்ற என் ஸ்வாமியின் திருமேனிக்குப் புதிய ஓர் அழகைச்செய்கிற திருப்பவளம்; இஃது இந்த அழகைக்காட்டி என்னுடைய ஆத்மாவைக் கொல்லுவதற்காக வந்திருக்கிறது. எங்கேயாவது போய்த் தப்பிப்போகலாமோ என்ருல், எங்கே போனாலும் இது வந்து தோன்றுகிறதே.

குறிப்பு:—பாபமானது எம்பெருமானுடைய நிக்கிரஹ ரூபமாகையாலே அது அவனிடமேயிருக்கிறது. ஆகையால் அவனுடைய திருப்பவளத்தைப் பாபம் என்று சொல்லலாம். நிக்ரஹம் என்பது—ஒருவன்செய்த கெட்ட கர்மத்துக்குத் தண்டனையைச் செய்யவேண்டுமென்கிற ஸங்கல்பம். (3)

---

இன்னுயிர்க் கேழையர் மேல்வ ளையுமிணை நீலவிற்கோல்
மன்னிய சீர்மத னன்கருப் புச்சிலை கோல்மதனன்
தன்னுயிர்த் தாதை கண்ணபெரு மான்பு ருவமவையே
என்னுயிர் மேலன வாயடு கின்றன வென்றுநின்றே. (ச)

(ப - ரை) இன் உயிர்க்கு - இனியதான பிராணனைக்கொண்டுபோவதற்காக, ஏழையர்மேல் - (எம்பெருமானைப் பார்க்கவேண்டுமென்கிற) ஆசையுள்ள ஸ்திரீகள்மேலே, வளையும்-(தானுகவே) வளையும், இணை-ஒன்றோடொன்று ஒத்த, நீல வில் கோல் - நீலமான வில்லுகளோ, மன்னிய சீர்—நிலையாயிருக்கிற (ஸௌந்தரியமாகிற) நல்ல குணத்தையுடைய, மதனன் - மந்மதனுடைய, கருப்பு சிலை கோல் - கரும்பாகிய வில்லுகளோ? மதனன் தன் - மன்மதனுக்குங்கூட, உயிர் தாதை - உயிரான தகப்பனை, கண்ண பெருமான் - கண்ணனை எல்லாருக்கும் மேற்பட்டவனையுடைய, புருவம் அவையே - புருவங்கள் தான் இவை. என் உயிர் மேலனவாய் - என் பிராண விஷயங்களாய்க்கொண்டு, என்றும் - எப்போதும், நின்று - (துன்பப்படுத்துவதில்) நிலையாயிருந்து, அடுகின்றன - ஹிம்ஸை செய்கின்றன.

(கருத்து) இவையென்ன? ஒன்றோடொன்று ஒத்திருக்கின்றனவே? எம்பெருமானைப் பார்ப்பதில் ஆசையுள்ள ஸ்திரீகளுடைய பிராணனைக் கொண்டுபோவதற்காகத் தாங்களாக வளைந்த இரண்டு நீல வில்லுகளோ? அஃதன்று. அவைகளுக்கு ஸ்திரீகள் மேல் வளையவேண்டுமென்று ஒரு நிர்ப்பந்தமில்லை. அழகுநிலையாயிருக்கிற மந்மதனுடைய கரும்பு ரூபமான வில்லுகளோ? அல்ல. அவைகளுக்கு இவ்வளவு அழகு இருக்குமோ? தன் அழகாலே எல்லாரையும் மோஹிக்கும்படி செய்கிற மந்மதனுக்குங்கூட ஸ்வரூபத்தைக்கொடுத்து அது நிலையாயிருக்கும்படி செய்கிற அவன் தகப்பனுன கண்ணனுடைய புருவங்களே இவைகள். என் பிராணனை நோக்கிக்கொண்டு என்னைத் துன்பப்படுத்துவதில் நிலையாயிருந்து எப்போதும் ஹிம்ஸையையே செய்து கொண்டிருக்கின்றன. (4)

---

என்றுநின் றேதிக ழுஞ்செய்ய வீன்சுடர் வெண்மின்னுக்கோல்
அன்றியேன் னுவி யடுமேணி முத்தங்கோ லோவறியேன்
குன்ற மெடுத்த பிரான்மு றுவலேன தாவியடும்
ஒன்று மறிகின்றி லேனன்னை மீரெனக் குய்விடமே. (ரு)

(ப - ரை) என்றும் - எப்போதும், நின்றே திகழும் - நிலையாய் விளங்கும், செய்ய சுடர் - சிவந்த காந்தியை, ஈன் - உண்டுபண்ணுகிற, வெண் மின்னு கொல் - வெண்மையான மின்னலோ? அன்றி - அல்லது, என் ஆவி அடும் - என் ஆத்மாவைத் துன்பப்படுத்தும் தன்மையுள்ள, அணி முத்தம் கொலோ - வரிசையாக வைக்கப்பட்ட முத்துக்களோ? அறியேன், குன்றம் எடுத்த பிரான் - (கோவர்த்தந) மலையைத் தூக்கிப்பிடித்து உபகாரஞ்செய்த கண்ணனுடைய, முறுவல் - மந்தஹாஸம், எனது ஆவி அடும் - என்னுடைய ஆத்மாவை ஹிம்ஸைசெய்கிறது, அன்னைமீர் - தாய்மார்களே! எனக்கு, உய்வு இடம் ஒன்றும் - நான் தப்பிப்பிழைக்கும் இடமொன்றையும், அறிகின்றிலேன் - அறியமுடியவில்லை.

(கருத்து) இஃதென்ன பிரகாசமுள்ளதாயிருக்கிறதே! இஃதென்ன வெண்மையான மின்னலோ? அன்று. மின்னல்

தோன்றி ஒருக்ஷணத்தில் போய்விடும். இதுவோ நிலையாயிருக்கிறதே! அது வெண்மையாயிருக்கும். இது சிவந்த காந்தியுடன் கலந்திருக்கிறதே! என் ஆத்மாவை ஹிம்ஸைப்படுத்துவதற்கு வரிசையாக வைக்கப்பட்ட முத்துக்களோ? அதுவுமன்று. கோவர்த்தந மலையைத்தூக்கிப் பிடித்து கோபஸ்திரீகளை ரக்ஷித்து அந்த ஸந்தோஷத்தினாலே உண்டான கண்ணனுடைய மந்த ஹாஸம்தான் இது. இந்து அந்த கோபஸ்திரீகள் எல்லாருக்கும் ஆனந்தத்துக்குக் காரணமாயிருந்தது. எனக்கு ஒருத்திக்கே துன்பத்திற்குக் காரணமாய் என் ஆத்மாவை ஹிம்ஸை செய்கிறது. இதைத் தப்பி எங்கேயாவது போய்ப் பிழைக்கலாமோ என்றால், அங்கேயும் வருகிறதே, தாய்மார்களே!

குறிப்பு:—திருப்பவளத்தின் காந்தியுடன் திருமுத்துக்களின் காந்தி சேர்ந்திருப்பதால, தோனறுகிற காந்தியானது, சிவந்த காந்தியோடு கலந்த வெண்மைபோலிருக்கிறது. திருமுத்துக்கள் என்றால் பற்கள். (5)

---

உய்விட மேழையர்க்கு மசுரர்க்கு மரக்கர் கட்கும்
எவ்விட மென்றிலங்கி மகரந் தழைக்குந் தளிர்கோல்
பைவிடப் பாம்பணை யான்றிருக் குண்டலக் காதுகளே
கைவிட லொன்று மின்றி யடுகின்றன காண்மின்களே. (௬)

(ப - ரை) ஏழையர்க்கும் - (எம்பெருமானிடத்தில்) ஆசையுள்ள ஸ்திரீகளுக்கும், அசுரர்க்கும் - அஸுரர்களுக்கும், அரக்கர்கட்கும் - ராக்ஷஸர்களுக்கும், உய்வு இடம் - (தப்பிப்போய்) பிழைக்குமிடம், எவ்விடம் என்று-எந்தவிடம் என்று, இலங்கி - விளங்கி, மகரம் தழைக்கும் - மீன்ரூபமாக தழைத்திருக்கும், தளிர்கொல் - தளிர்களோ, பை விடம் - படங்களையும் விஷத்தையும் உடைய, பாம்பு அணையான் - ஆதிசேஷனாகிய பாம்பைப் படுக்கையாகவுடைய எம்பெருமானுடைய, திருக்குண்டலம் காதுகளே - திருக்குண்டலங்களையுடைய காதுகள்தான் இவைகள். கைவிடல் ஒன்றும் இன்றி - (ஒருக்ஷணமும்) கைவிடாமலிருந்து, அடுகின்றன - ஹிம்ஸை செய்கின்றன, காண்மின் - பாருங்கள்.

(கருத்து) இவைகள் என்ன? மீன் ஆகாரங்களையுடையவைகளாய் தழைத்த தளிர்களோ? அன்று, அவைகளைக்கண்டு அஸுரர்களும் ராக்ஷஸர்களும் பயந்து தப்பிப்பிழைக்குமிடமில்லாமல் வருத்தப்படுவதுபோல், எம்பெருமானிடத்தில் ஆசையுள்ள ஸ்திரீகளும் அவனைப்பெறாமல் வருத்தப்படும்படி செய்கின்றனவே. ஆகையால், எம்பெருமானுடைய திருமேனி ஸ்பரிசத்தாலே படம் எடுத்துக்கொண்டு பிரதிகூலர் கிட்ட வரமுடியாதபடி விஷத்தை வைத்துக்கொண்டு, தன் அழகை விருத்தி பண்ணுகிற ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்டிருக்கிற எம்பெருமானுடைய திருக்காதுகளில் தொங்குகிற மகரகுண்டலங்கள்தானிவை. அவைகள் ஒருக்ஷணமும் என்னைவிடாமல் நிலையாயிருந்து ஹிம்ஸிக்கின்றன. இதைப்பாருங்கள்.

குறிப்பு :—(1) தம்மைப்போல மற்றவர்களும் இவைகளைப் பார்ப்பதாக ஆழ்வார் நினைத்து "காண்மின்" என்கிறார்.

(2) அஸுரர்களும் ராக்ஷஸர்களும் இந்த அழகைக்கண்டு பொறுக்காமல் முடிவார்கள். ஸ்திரீகள் இந்த அழகோடுகூடிய எம்பெருமானை அடையப்பெறாமல் முடிவார்கள் என்பது "உய்விடம்......எவ்விடம்" என்பதின் கருத்து. (6)

---

காண்மின்க ளென்னையர் காளென்று காட்டும் வகையறியேன்
நாண்மன்னு வெண்டிங்கள் கொல்நயந் தார்கட்கு நச்சிலைகொல்
சேண்மன்னு நாற்றடந் தோட்பெரு மான்றன் றிருநுதலே
கோண்மன்னி யாவி யடுங்கொடி யேனுயிர் கோளிழைத்தே. (எ)

(ப - ரை) நாள் - நாளுக்குநாள், மன்னு - நிலையாயிருக்கும் (குறையாமல் வளரும்), வெண் - வெளுத்த (களங்கமில்லாத), திங்கள் கொல் - சந்திரனோ, நயந்தார்கட்கு - (தன்னை) ஆசைப்பட்டவர்களுக்கு, நச்சு இலை கொல் - ஆசையில்லையோ (ஆசை இல்லாதபடி செய்கிறதோ), சேண் மன்னு - நீளமாயிருப்பது நிலையாயிருக்கிற, நால் - நான்கு, தடம் - பருத்த, தோள் - தோள்களையுடைய, பெருமான் தன் - ஸ்வாமியினுடைய, திருநுதலே - அழகான நெற்றியே, கொடியேன் - பாபம்செய்த என்னுடைய,

உயிர் - பிராணனை, கோள் - கொள்ளுதலை (அபஹாரம் செய்வதை), இழைத்து - (நிரூபணம்) செய்து, கோள் மன்னி - கொள்ளுதில் (அபஹாரம் செய்வதில்) நிலையாயிருந்து, ஆவி - என் பிராணனை, அடும் - துன்பப்படுத்துகிறது. அன்னையர்காள் - தாய்மார்களே! காண்மின் - (இப்படி) பாருங்கள், என்று, காட்டும் வகை - காட்டும்விதத்தை, அறியேன்.

(கருத்து) இஃதென்ன முன்னாலே தோன்றுகிறதே; இது சுக்லபக்ஷத்தில் அஷ்டமியில் தோன்றுகிற சந்திரனோ? மற்ற நாள்களில்போல் கலைகள் குறையவில்லை. வளர்ந்துகொண்டேயிருக்கின்றன. பௌர்ணமியில்போல் களங்கமுமில்லை. அதுவன்று. 'நீ என்னையாசைப்படாதே நான் உன்னை முடிக்கப்போகிறேன்' என்று காட்டுகிறதே; ஆகையால், முழந்தாள்வரையில் நீண்டிருக்கிற பருத்த நான்கு தோள்களை யுடையவனும், அந்த அழகைக் காட்டி என்னைத் தனக்கு அடிமையாகச் செய்துகொண்டவனுமான எம்பெருமானுடைய திருநெற்றிதான். அஃது என்னுடைய பிராணனை "இதை நான் கொண்டுபோகவேண்டியது" என்று நிச்சயம் செய்து, அதைக் கொண்டுபோகிற வேலையைச் செய்துகொண்டு மற்றவைகளைக் காட்டிலும் அதிகமாக என்னைத் துன்பப்படுத்துகிறது. 'தாய்மார்களே! நீ வருத்தப்படுகிறாயே; இது வருத்தப்படுத்துகிறதென்று சொல்லுகிறாயே, அதை எங்களுக்குக் காட்டு' என்று சொல்லுகிறீர்களே. அது கையில் அகப்படக்கூடியதாயிருந்தால், இதைப்பார் என்று சொல்லலாம். என்னைப்போல் மனதாலே பார்க்கிறவர்களாய் நீங்களிருந்தால் இதை நீங்கள் மனதால் பாருங்கள் என்று சொல்லலாம். அதுவுமில்லையே இதுவுமில்லையே. ஆகையால், உங்களுக்குச் சொல்லும் விதத்தை நான் அறியவில்லை.

குறிப்பு :—திருத்தோள்கள் அவைகளை அநுபவிப்பவர்களுக்கு ரஸம் இரட்டிப்பதற்காக இரண்டாக இராமல் நான்காக இருக்கின்றன என்பது கருத்து.

(இ - ம்) இலை - இல்லை : தொகுத்தல் விகாரம். (7)

*அவ—கீழ் ஏழுபாட்டுக்களாலே எம்பெருமானுடைய திரு முகத்தின் அவயவங்களின் அழகைத் தனித்தனியே ஆழ்வார் அநுபவித்தார்; அவைகளின் சேர்க்கையின் அழகை அநுபவிக்கிருர் :—*

கோளிழைத் தாமரையுங் கொடியும் பவளமும் வில்லுங்
கோளிழைத் தண்முத்த முந்தளி ருங்குளிர் வான்பிறையுங்
கோளிழை யாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல் கண்ணன்
கோளிழை வாண்முக மாய்க்கொடி யேனுயிர் கொள்கின்றதே. (அ)

*(ப-ரை) கோள் இழை - (தங்களின்) காந்திகளையே தங்களுக்கு ஆபரணமாகவுடைய, தாமரையும் - இரண்டு தாமரைப் பூக்களும், கொடியும், பவளமும், வில்லும், கோள் இழை - தன் அழகையே தனக்கு ஆபரணமாகவுடைய, தண்-குளிர்ந்த, முத்தமும் - முத்துக்களின் வரிசைகளும், தளிரும் - இரண்டு தளிர்களும், குளிர் - குளிர்ந்த, வான் - பெரிய, பிறையும் - அஷ்டமீ சந்திரனும் (இவைகள் எல்லாம் சேர்ந்திருக்கிற), கோள் - தன் அழகையே, இழையா உடைய - ஆபரணமாக உடைய, கொழும்- மிகுந்த காந்தியுள்ள, சோதி வட்டம் கொல் - ஜ்யோதிர்மண்டலமோ, கண்ணன் - கண்ணனுடைய, கோள் இழை, வாள் முகமாய் - அழகிய முகம் என்று பெயர்வைத்துக்கொண்டு, கொடியேன் - கொடுமையான பாவம் பண்ணின என்னுடைய, உயிர் - பிராணனை, கொள்கின்றது - அபஹரித்துக்கொண்டிருக்கிறது.*

*(கருத்து) மிகவும் அழகான ஒரு ஜ்யோதிர் மண்டலத்தில் மிகுந்த அழகையுடைய இரண்டு தாமரைப்பூக்களும், ஒரு கற்பகக் கொடியும், ஒரு பவளத்துண்டமும், இரண்டு வில்லுகளும், முத்துக்களின் வரிசைகளும், இரண்டு தளிர்களும், ஒரு சுக்கிலபக்ஷ அஷ்டமீ சந்திரனும் சேர்ந்திருக்கின்றனவே. இது ஜ்யோதிர் மண்டலம்தான். கண்ணனுடைய மிகுந்த அழகுள்ள நெற்றி என்கிற பெயரை வைத்துக்கொண்டு அவன் அழகாலே வருத்தப்படும்படி பாபம்செய்த என்னுடைய பிராணனைக் கொண்டு போகிற வேலையைச் செய்துகொண்டேயிருக்கிறது.*

*குறிப்பு :—இரண்டு தாமரைப்பூக்கள் இரண்டு திருக்கண்கள்; கொடி திருமூக்கு; பவளத்துண்டம் திருப்பவளம்; இரண்டு*

*விற்கள் இரண்டு புருவங்கள்; முத்துக்களின் வரிசைகள் பற்கள்; தளிர்கள் காதுகள்; அஷ்டமீசந்திரன் திருநெற்றி; ஜ்யோதிர் மண்டலம் இவைகளோடு கூடிய முகம்.* (8)

---

கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந் திட்ட கொழுஞ்சுருளின்
உள்கொண்ட நீலநன் னூற்றழை கொல்லன்று மாயன்குழல்
விள்கின்ற பூந்தண் டுழாய்விரை நாறவந் தென்னுயிரைக்
கள்கின்ற வாறறி யீரன்னை மீர்கழ றுநிற்றிரே. (கூ)

*(ப - ரை) கொள்கின்ற - (உலகங்களெல்லாம்) வியாபித்திருக்கிற, கோள் - பலமான, இருளை - இருட்டை, சுகிர்ந்திட்ட - எஃகிச் செய்யப்பட்ட, கொழும் - கொழுத்த, (மிகவும் நீலமான), சுருளின் - சுருட்டப்பட்டதினுடைய, உள்கொண்ட - உள்ளே வைக்கப்பட்ட, நீலம் - நீலங்களான, நல் - அழகான, நூல் தழைகொல் - நூற்களின் கூட்டமோ, அன்று - அல்ல, மாயன்குழல் - அழகால் மிகவும் ஆச்சரியமான கண்ணனுடைய தலைமயிர்கள், விள்கின்ற - மலர்கிற, பூ - அழகான, தண் - குளிர்ந்த, துழாய் விரை - துளஸியின் வாஸனை, நாற-வாஸிக்கும் படி, வந்து - என்னிடம்வந்து, என் உயிரை - என் ஆத்மாவை, கள்கின்ற ஆறு - கொண்டுபோகிற விதத்தை, அறியீர் - நீங்கள் அறிகிறீர்களில்லை. அன்னைமீர் - தாய்மார்களே, கழறுநிற்றிர் - கோபித்துக்கொண்டு வார்த்தை சொல்லுகிறீர்கள்.*

*(கருத்து) மிகவும் நீலமாய் எனக்கு முன்னாலே தோன்றுகின்றனவே. இவைகள் என்ன? சந்திரன் ஸூரியன் முதலானவர்களில்லாத பிரளயகாலத்தில் இருக்கிற இருட்டையெடுத்து, பஞ்சைக் கடைவதுபோல் ஸாரமில்லாத பாகங்களை எடுத்துவிட்டு பாக்கியிருப்பதைச் சுருட்டி அதில் கை பட்டதினால் அழுக்கடைந்த வெளிப்புறத்தை விட்டுவிட்டு, உட்புறத்திலிருக்கிற பஞ்சினால் செய்யப்பட்ட நீலமான அழகான நூல்களின் கூட்டமோ? அல்ல. இவைகளுக்கு இவ்வளவு அழகு இருக்குமோ? இவைகளில் இப்போது மலர்ந்த அழகான குளிர்ந்த துளஸியின் வாஸனையிருக்கிறதே. ஆகையால், அழகால் மிகவும் ஆச்சரியமான கண்ணனுடைய தலைமயிர்கள்தான் இவைகள். என்னைச்*

சுற்றிலும் வந்திருந்து, என்பிரானைக்கொண்டுபோய்க்கொண்டிருக்கின்றன. தாய்மார்களே! இதை நீங்கள் அறியாமல் கோபித்துக்கொண்டு வார்த்தை சொல்லுகிறீர்களே.

குறிப்பு :—பஞ்சில் ஸாரமில்லாதவைகள் எல்லாம் போகும்படி, வில்லால் அதைக் கொட்டுகை பஞ்சுகல்.

(இ - ம்) கழறுகிற்றிர் - ஒருசொல்; ஆகில் - இடைநிலை. முன்னிலைப் பன்மை வினைமுற்று. (9)

---

நிற்றிமுற் றத்துளென்று நெரித்த கையினிரா யெம்மைநீர்
சுற்றியுஞ் சூழ்ந்தும் வைதிர் சுடர்ச்சோதி மணிநிறமாய்
முற்றவிம் மூவுல கும்விரி கின்ற சுடர்முடிக்கே
யொற்றுமை கொண்டதுள்ள மன்னைமீர் நசையென் னுங்கட்கே.

(ப - ரை) முற்றத்துள், நிற்றி - நிற்கிறாய், என்று, நெரித்த - நெரிக்கப்பட்ட, கையினிராய் - கைகளையுடையவர்களாய், நீர் எம்மைச் சுற்றியும் சூழ்ந்தும், வைதிர் - வைகிறீர்கள், சுடர் சோதி - (ஸூரியன் முதலான) ஜ்யோதிஸுக்களுடைய காந்தி போன்ற காந்திகளையுடையதாய், மணி நிறமாய் - ரத்நங்களின் காந்தியையுடையதாய், இ மூவுலகும் - இந்த மூன்று உலகங்களையும், முற்ற - முழுவதும், விரிகின்ற - வியாபிக்கிற, சுடர் - காந்தியையுடையதாயிருக்கிற, முடிக்கு - கிரீடத்திலேயே, உள்ளம் - என்னுடைய மனது, ஒற்றுமை - ஒற்றுமையை (அதையே நினைத்துக்கொண்டிருப்பதை), கொண்டது - அடைந்துவிட்டது, அன்னைமீர்காள் - தாய்மார்களே! நுங்கட்கு - உங்களுக்கு, நசை - ஆசை, என் - என்ன (இருக்கிறது).

(கருத்து) இதுவரையில் ஒருவராலும் பார்க்கப்படாத நீ எல்லாரும் பார்க்கும்படி முற்றத்தில் நிற்கிறாய் என்று சொல்லி, கைகளை நெரித்துக்கொண்டு எம்பெருமானுடைய அழகை நினைத்து வருத்தப்பட்டுக்கொண்டிருக்கிற என் ஸ்வபாவத்தை அறிந்த நீங்கள் எனக்கு நாலுபக்கங்களிலும் கிட்ட இருந்தும் என்னைச் சுற்றிக்கொண்டும் வைகிறீர்களே. ஸூரியன் சந்திரன் முதலான ஜ்யோதிஸுக்களின் காந்தியையுடையதாய், ரத்நங்களின்

காந்திகளையுடையதாய், எல்லா உலகங்களையும் வியாபித்திருக்கிற காந்தியையுடையதான அவனுடைய கிரீடத்திலேயே என் மனது படிந்துவிட்டது. வேறொன்றையும் நினைக்கமுடியாது. இப்படியான பின்பு, தாய்மார்களே! என்னைக் கோபித்துக்கொண்டு என்ன பிரயோஜநம்? யௌவநத்தையடைந்து நாயகனுடன் சேர்ந்திருப்பதின் ரஸத்தையறிந்த ஸ்திரீகள் விஷயத்தில், தாயாருக்குத் தன் இஷ்டப்படி அவள் நடப்பள் என்கிற ஆசை உண்டோ?

(இ - ம்) வைதிர் - மூன்னிலைப் பன்மை வினைமுற்று. (10)

---

கட்க ரியபிர மன்சிவ னிந்திர னென்றிவர்க்கும்
கட்க ரியகண்ண னைக்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
உட்குடை யாயிரத்து ளிவையு மொருபத்தும் வல்லார்
உட்குடை வானவ ரோடே யுடனாய் என்று மாயாரே. (கக)

(ப - ரை) கட்கு - கண்ணுக்கு, அரிய - எட்டாத, பிரமன் சிவன், இந்திரன், இவர்க்கும் - இவர்களுக்கும், கட்கு அரிய - கண்களுக்கு எட்டாத, கண்ணனை, குருகூர் சடகோபன் சொன்ன, உட்கு உடை - (எம்பெருமானுடைய குணங்களைச் சொல்லும்) சக்தியையுடைய, ஆயிரத்துள், இவையும் ஓர் பத்தும் - விலக்ஷணங்களான இந்தப் பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - படிக்கச் சக்தியுள்ளவர்கள், உட்குடை (அவனுடைய குணம் முதலானவைகளை அநுபவிக்கும்) சக்தியையுடைய, வானவரோடு - நித்திய ஸூரிகளோடு, உடனாய் - கூட இருந்து, என்றும் - எப்போதும், மாயாரே - நாசத்தை அடையமாட்டார்கள். (அவர்களைவிட்டுப் பிரியமாட்டார்கள்.)

(கருத்து) மனிதர்களாலே கண்களால் பார்க்கமுடியாத பிரம்மா ருத்திரன் இந்திரன் முதலான தேவர்களாலும் கண்களால் பார்க்கமுடியாத கண்ணனைப்பற்றி ஆழ்வார் அருளிச்செய்த அவன் குணங்களைச் சொல்லுகிற இந்தப் பத்துப் பாட்டுக்களையும் படிக்கச் சக்தியுள்ளவர்கள், அவனுடைய குணம் முதலானவைகளை எப்போதும் அநுபவிக்கும் சக்தியையுடைய நித்தியஸூரிகளோடுகூட இருப்பார்கள். அவர்களைவிட்டுப் பிரியவும் மாட்டார்கள்.

## எட்டாம் திருவாய்மொழி.

அவ—கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் எம்பெருமானுடைய ரூபத்தை உள்ளும் புறமும் முன்னும் பின்னும் நாலு பக்கங்களிலும் பார்த்துக்கொண்டிருந்தும் அவனுடைய பாஹ்யஸம்ச்லேஷம் கிடைக்காமையால் வருத்தப்பட்டு தன் இருப்பைப் பேசினார். இவ்வளவு வருத்தப்பட்டும், அவன் வந்து அவர் வருத்தத்தைத் தீர்க்கவுமில்லை. அவரை உடம்பைவிட்டுப் பிரிக்கவுமில்லை. இதைப்பார்த்து ஆச்சரியப்பட்டு 'எம்பெருமானே! இஃதென்ன ஆச்சரியம்' என்று விண்ணப்பம் செய்ய, அவன் 'இதுதானா ஆச்சரியம்' என்று சொல்லித் தன்னுடைய பலவிதமான ஆச்சரியங்களைக் காண்பித்தான். அவைகளை இந்தத் திருவாய்மொழியில் ஆச்சரியப்பட்டுப் பேசுகிறார்.

(2) நாயகனுடைய ரூபமானது நாயகிக்குக் கையிலகப்படாமல் எங்குந்தோன்றுவதற்கு 'உருவெளிப்பாடு' என்று பெயர். நாயகனை விட்டுப்பிரிந்த நாயகி அவனையே நினைத்துக்கொண்டு இருக்கும்போது அந்த நினைவின் பலத்தாலே அந்த ரூபம் எங்கும் தோன்றும். இஃது அவளுடைய அவஸ்தைகளில் ஒன்று.

(3) இந்தத் திருவாய்மொழியில் சொல்லுகிறபடி எம்பெருமானுக்கு உலகம் ரூபமாயிருப்பதை ஆழ்வார் பல இடங்களில் அநுபவித்தார். அதை இங்கே மறுபடியும் பேசுவதற்குக் காரணம்—அவன் ஒவ்வொரு க்ஷணமும் புதிதாய்த் தோன்றுவது. ஆகையால்தான் அவனை 'அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே!' என்று அவரே சொல்லுகிறார்.

(கலிவிருத்தம்.)

மாயா வாமனனே மதுசூதா நீயருளாய்
தீயாய்நீ ராய்நிலனாய் விசும்பாய்க் காலாய்
தாயாய்த்தந் தையாய்மக்க ளாய்மற்றுமாய் முற்றுமாய்
நீயாய்நீ நின்றவா றிவையென்னநி யாயங்களே. (க)

(ப - ரை) மாயா - ஆச்சரியமானவனே! வாமனனே, மதுசூதா - மதுவைக்கொன்றவனே, நீ அருளாய் - (நான் கேட்பதற்குப்பதில்) நீயே சொல்லவேண்டும், தீயாய் - நெருப்பாய்,

நீர் ஆய், நிலன் ஆய் - பூமியாய், விசும்பு ஆய் - ஆகாசமாய், கால் ஆய் - வாயுவாய், தாயாய், தந்தை ஆய் - தகப்பனாய், மக்களாய்- பிள்ளைகளாய், மற்றுமாய் - இன்னுமுள்ள பந்துக்களாய், முற்று மாய் - (சொன்னவர்களைத்தவிர) வேறு ஜநங்களாய், நீயாய் - உனக்கேயுள்ள ஆகாரத்தையுடையவனாய், இவை நீ நின்ற ஆறு- நீ நின்ற இந்த விதங்கள், என்ன நியாயங்கள் - என்ன யுக்திகள் உள்ளவைகள்?

(கருத்து) ஆச்சரியமானவனே! வாமநனாய் அவதாரம் பண்ணினவனே! மது என்கிற அஸுரனைக்கொன்றதுபோல் ஆச்ரிதர்களுடைய விரோதிகளை நாசம்பண்ணும் ஸ்வபாவமுள்ள வனே! நான் கேட்கப்போவதற்குக் கிருபையால் பதில் சொல்ல வேண்டும். நீ பூமி முதலான ஐந்து பூதங்களாயும் தாய் தகப் பன் முதலான எல்லா ஜநங்களாகவும் தோன்றுகிறாய். ஆனால், அவைகளின் தோஷங்கள் உன்னிடம் ஒட்டுகிறதில்லை. உன்னிடத் தில் எல்லா நல்ல குணங்களும் நிறைந்திருக்கின்றன. இப்படி நீ இருப்பதற்கு என்ன யுக்திகள் வேதாந்தத்தில் ரஹஸ்யமாகச் சொல்லப்படுகின்றன?

குறிப்பு :—(1) 'மாயா' என்று இந்தத் திருவாய்மொழியில் சொல்லப்போகிற ஆச்சரியங்களைப் பொதுவாய்ச் சொன்னபடி; அவைகளில் ஒன்றை வாமநனே என்று சொல்லுகிறார்.

(2) பூமி முதலான ஐந்து பூதங்கள், உலகத்தை உண்டு பண்ணுவதற்குக் காரணமாக முன்னாலே எம்பெருமானாலே செய்யப்பட்டவைகள். இவைகளைக் காரண வர்க்கம் என்று சொல்லுகிறது. தாய் தந்தை முதலானவர்கள் கார்ய வர்க்கம். காரியம் என்பது வேறு இருப்பை அடைந்த வஸ்து. மண்கட்டி காரணம்; அதினால் செய்யப்பட்ட குடம் காரியம்.

(3) மஹாமேரு என்கிற தங்க மலையை ஒரு மாட்டுமணி யாகச் செய்ததுபோலிருக்கிறது, எம்பெருமான் தன்னுடைய பெரிய ரூபத்தை வாமநமாய்ச் செய்துகொண்டது. இதுவும் ஓர் ஆச்சரியம். (1)

---

அங்கண்மலர்த்தண் டுழாய்முடி யச்சுதனே யருளாய்
திங்களும் ஞாயிறுமாய்ச் செழும்பல்சுட ராயிருளாய்ப்
பொங்குபொழி மழையாய்ப் புகழாய்ப்பழி யாய்ப்பின்னும்நீ
வெங்கண்வெங் கூற்றமுமா யிவையென்ன விசித்திரமே. (உ)

(ப - ரை) அம் கள் - அழகான தேனைச் சொரிகிற, மலர்- புஷ்பங்களையுடையவனும், தண் துழாய் முடி - குளிர்ந்த துளவியைத் திருமுடியிலுடையவனும், அச்சுதனே-இந்த அழகு ஒரு போதும்முன்னைவிட்டு நீங்காதவனுமானவனே! நீ அருளாய், திங்களும் - சந்திரனும், ஞாயிறுமாய் - ஸூரியனுமாய், செழும்- அழகான, பல் - பலவிதமான, சுடர் ஆய் - நக்ஷத்திரங்களாய், இருள் ஆய் - இருட்டாய், பொங்கு பொழி-பொங்கிப் பெய்கிற, மழையாய், புகழாய் - கீர்த்தியாய், பழியாய், பின்னும்-மேலும், நீ, வெம் கண்-க்ரூரங்களான கண்களையுடைய, வெம் கூற்றமும் - க்ரூரமான யமனுமாயிருக்கிறாய், ஆம் இவை - ஆகிய இவைகள், விசித்திரமே - என்ன ஆச்சரியங்கள்!

(கருத்து) அங்கண் மலர்த் தண் துழாய்முடி அச்சுதனே! நீ, எல்லாருக்கும் ஸந்தோஷத்தைச் செய்கிற சந்திரனாகவும், தாபத்தைப் பண்ணுகிற ஸூரியனாகவுமிருக்கிறாய். அழகான பல நக்ஷத்திரங்களாகவும் இருட்டாகவுமிருக்கிறாய். நன்றாய் பெய்கிற மழையாயிருக்கிறாய், புகழாயும் பழியாயும் இருக்கிறாய். மரணத்தைக் காட்டிலும் அதிகமான பழியாயிருந்தும் மரணத்தைச் செய்கிற யமனுமிருக்கிறாய். இவைகள் என்ன ஆச்சரியங்கள்! நீயருளாய்.

(இ - ம்) பொங்கு பொழிமழை : பொங்கு - பொங்கி; பகுதியே வினையெச்சப்பொருளில் வந்தது. (2)

---

சித்திரத்தேர் வலவா திருச்சக்கரத் தாயருளாய்
எத்தனை யோருகமு மவையாயவற் றுள்ளியலும்
ஒத்தவொண் பல்பொருள்க ளுலப்பிலன வாய்வியவாய்
வித்தகத்தா னிற்றிநீ யிவையென்ன விடமங்களே. (௩)

(ப - ரை) சித்திரம் தேர் வலவா-ஆச்சரியமாகத் தேரை நடத்த சக்தியுள்ளவனே! திரு சக்கரத்தாய் - அழகான சக்கரத்தை யுடையவனே! நீயருளாய், எத்தனை - அநேகங்களான, ஓர் - ஒப்பில்லாத, அவை - பிரஸித்தங்களான, உகமுமாய் - யுகங்களுமாய், அவற்றுள் - அவைகளுள், இயலும் - நடக்கும், ஒத்த - ஒன்றோடொன்று ஒத்தும், வியவாய்-ஒன்றோடொன்று ஒத்துக்கொள்ளாமலும், ஒண் - குணங்கள் நிறைந்த, பல் - பல விதங்களான, உலப்பு இலனை - முடிவில்லாதவைகளாயிருக்கிற, பொருள்களாய் - வஸ்துக்களாய், வித்தகத்தால் - ஆச்சரியப்படும் படியான தன்மையாலே, நீ நிற்றி - நீ நிற்கிறாய், இவை என்ன விடமங்கள்-(விஷமங்கள்) இவைகள் என்ன சேராச் சேர்த்திகள்?

(கருத்து) பாரதயுத்தத்தில் அர்ஜுநனுடைய ரதத்தை ஆச்சரியமாக நடத்தினவனே! அதே சண்டையில் பகலை இராத்திரியாகப் பண்ணின சக்ரத்தை உடையவனே! கிருதம், த்ரேதா, த்வாபரம், கலி என்று பிரஸித்தங்களாய் ஒன்றைப் போல் ஒன்று இல்லாத யுகங்களாய் இருக்கிறாய். அந்த யுகங்களில் காலத்துக்கு உட்பட்டவைகளாய் பல விதமான வஸ்துக்கள் சில ஆசாரங்களாலே ஒன்றோடொன்று ஒத்தும், வேறு சில ஆசாரங்களாலே ஒன்றைப்போல் ஒன்று இல்லாமலுமிருக்கின்றன. அவைகள் பல குணங்களையுடையவைகளாய், தேவன் மனிதன் முதலான பலவிதங்களாய் ஒவ்வொரு விதத்திலும் கணக்கில்லாதவையாயிருக்கின்றன. நீ ஆச்சரியப்படும்படியான தன்மையுள்ளவனாய் இந்த எல்லா வஸ்துக்கள் ரூபமாய்த் தோன்றுகிறாய். இவைகள் என்ன சேராச் சேர்த்திகள்? நீயருளாய்.

குறிப்பு:—தேரை ஆச்சரியமாக நடத்தினதாவது—பீஷ்மர் துரோணர் முதலானவர்களுடைய பாணங்கள் அர்ஜுநன் மேல் படாமலும், இவன் பாணங்கள் அவர்கள்மேல் படும்படியாகவும், அந்தப் பாணங்களுக்கு முன்னாலே அதிக வேகமாகத் தேர் போகும்படியாகவும் தேரை நடத்தினது.

(இ - ம்) நிற்றி - முன்னிலை ஒருமை வினைமுற்று. (3)

---

கள்ளவிழ்தா மரைக்கண்ண னேயெனக் கொன்றருளாய்
உள்ளது மில்லதுமா யுலப்பில்லன வாய்வியவாய்
வெள்ளத் தடங்கடலுள் விடநாகணை மேல்மருவி
உள்ளப்பல் யோகுசெய்தி யிவையென்ன வுபாயங்களே. (௪)

(ப - ரை) கள் அவிழ் - தேன் பெருகுகிற, தாமரை கண் - தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவனே! கண்ணனே, எனக்கு ஒன்று அருளாய், உள்ளதும் - (எப்போதும் ஒரேவிதமாயிருப்பதாலே) இருக்கிறதென்று சொல்லப்பட்ட சேதநர்களும், இல்லதும் ஆய் - (அடிக்கடி மாறுவதாலே) இல்லாதது என்று சொல்லும்படியான அசேதநமான மூலப்பிரகிருதியும் ஆய், உலப்பு இல்லனவாய் - முடிவில்லாதவைகளாய், வியவு ஆய் - விலக்ஷணங்களான வஸ்துக்களாக இருக்கிறாய், வெள்ளம் - நீர் நிறைந்த, தடம் - விசாலமான, கடலுள் - திருப்பாற் கடலில், விடம் நாகம் அணைமேல் - விஷத்தையுடைய பாம்பாகிய படுக்கையின்மேல், மருவி - பிரீதியுடன் படுத்திருந்து, உள்ளம் - உன் ஸங்கல்பத்தாலே, பல் - பல, யோகு - சிந்தைகளை, செய்தி - செய்துகொண்டிருக்கிறாய், இவை என்ன உபாயங்கள்?

(கருத்து) அப்போது மலர்ந்து தேன் துளிகளைச் சொட்ட விட்டுக்கொண்டிருக்கிற தாமரைப் பூவைப்போன்ற திருக்கண்களை யுடையவனே! கண்ணனே! நீ ஒரேவிதமாயிருக்கிற ஆத்மாக்களாகவும், எப்போதும் மாறிக்கொண்டிருக்கிற மூலப்பிரகிருதியாகவும் இருக்கிறாய். கணக்கில்லாதவைகளாய் ஒன்றைப் போல் ஒன்று இல்லாதவைகளான வஸ்துக்களாகவுமிருக்கிறாய். திருப்பாற்கடலில் ஆதிசேஷன்மேல் பிரீதியுடன் படுத்திருந்து உன் ஸங்கல்பத்தாலே பல சிந்தனைகளைச் செய்துகொண்டிருக்கிறாய். இவைகள் என்ன உபாயங்கள்? எப்படி அவதாரம் செய்கிறதென்று? ஆச்ரிதர்களுடைய அநிஷ்டங்களை எப்படி போக்குகிறதென்று? அவர்கள் வேண்டினதை எப்படிக் கொடுக்கிறது என்று? அவர்களுடன் எப்படிச்சேருவது என்று? எனக்குத் தெரியவில்லை. அவைகளில் இன்னதென்று பிரித்து அறுளிச் செய்யவேண்டும்.

(இ - ம்) செய்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று. (4)

பாசங்க ணீக்கியென்னை யுனக்கேயறக் கொண்டிட்டுநீ
வாசமலர்த்தண் டுழாய்முடி மாயவனே யருளாய்
காயமுஞ் சீவனுமாய்க் கழிவாய்ப்பிறப் பாய்ப்பின்னும்நீ
மாயங்கள் செய்துவைத்தி யிவையென்ன மயக்குக்களே. (ரு)

(ப - ரை) வாச மலர் - வாசனையையுடையதாய் மலர்ந்த, தண் துழாய் முடி - குளிர்ந்த துளஸியைத் திருமுடியிலுடையவனே! மாயவனே-ஆச்சரியமானவனே! அருளாய், பாசங்கள் - விஷயங்களில் பிடிப்புகளை, நீக்கி - போக்கி, என்னை, உனக்கே உற - உனக்கே சேஷமாகவும், மற்றவர்களுக்கு சேஷமல்லாமலும், கொண்டிட்டு - எடுத்துக்கொண்டு, பின்னும், காயமும் - உடம்பும், சீவனுமாய் - (அதற்கு ஆத்மாவான) ஜீவனுமாய், கழிவாய் - உடம்பு போவதாகிய மரணமாய், பிறப்பாய், நீ மாயங்கள் செய்து வைத்தி - நீ ஆச்சரியமானவைகளைச் செய்து கொண்டிருக்கிறாய். இவை என்ன, மயக்குக்கள் - மயக்கும்படியான லீலைகள்?

(கருத்து) வாஸனையுள்ளதாய் மலர்ந்திருக்கிற துளஸியைத் திருமுடியிலுடையவனே! ஆச்சரியமானவனே! விஷயங்களிலிருக்கும் பிடிப்பைப்போக்கி என்னை உனக்கே சேஷமாயும் வேறு ஒருவருக்குச் சேஷமல்லாமலும் செய்த பின்பும், என்னை விஷயங்களின் நடுவில் வைத்திருக்கிறாய். நீ உடம்பாகவும் அதைக் காட்டிலும் வேறான ஆத்மாவாகவுமிருக்கிறாய். நீ இறப்பும் பிறப்புமாயிருக்கிறாய். இப்படி ஆச்சரியமானவைகளைச்செய்து கொண்டிருக்கிறாய். இவைகள் என்ன மயக்கும்படியான வியாபாரங்கள். இதை நீ யருளாய்.

குறிப்பு :—ஆழ்வார் கேட்கிறார்—ஸம்ஸாரத்தில் ருசியில்லாதவனாயும் உன்னையே போக்கியம் என்று எண்ணும்படியாகவும் என்னைப் பண்ணிவைத்து மறுபடியும் ஸம்ஸாரத்தில் வைத்திருக்கிறாய். இஃது ஆச்சரியமாயிருக்கிறது. இதை எதற்காகச் செய்கிறாய் என்று. இதை இந்தத் திருவாய்மொழியில் கேட்கவந்தவர் அப்பொழுது மனதில் தோன்றின வேறு ஆச்சரியங்களையும் பேசுகிறார்.

(2) மயக்குக்கள் - அவித்யை முதலானவைகள்.

(இ - ம்) வைத்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று. (5)

மயக்கா வாமநனே மதியாம்வண்ண மொன்றருளாய்
அயர்ப்பாய்த் தேற்றமுமா யழலாய்க்குளி ராய்வியவாய்
வியப்பாய் வென்றிகளாய் வினையாய்ப்பய னாய்பின்னும்நீ
துய்க்காய்நீ நின்றவா றிவையென்ன துயரங்களே. (சு)

(ப - ரை) மயக்கா - மயக்குகிறவனே! வாமநனே! மதி ஆம் வண்ணம் - எனக்குத் தெளிவான அறிவு உண்டாகும் விதமாய், ஒன்று அருளாய் - ஒன்றைக் கிருபை செய்யவேண்டும், அயர்ப்பு ஆய் - அறிவில்லாமையாய், தேற்றமும் ஆய்-தெளிவான அறிவுமாய், அழலாய் - உஷ்ணமாய், குளிர் ஆய், வியப்பாய் - ஆச்சரியமாய், வியவாய் - அதைக்காட்டிலும் வேறான ஆச்சரிய மல்லாததாய், வென்றிகளாய் - ஜயங்களாய், வினையாய் - (புண்யம் என்றும் பாபம் என்றும் சொல்லுகிற) கர்மங்களாய், பலனாய் - அவைகளின் பலங்களாய், பின்னும், நீ, துய்க்காய் - தப்பு ஜ்ஞாநமாய், நீ நின்ற ஆறு - நீ யிருக்கிற விதங்கள், இவை என்ன? துயரங்கள் - துக்கத்தையுண்டுபண்ணுகிறவைகள்?

(கருத்து) உன்னுடைய திருமேனியின் அழகாலும் நடையழகாலும் பேச்சின் அழகாலும் மஹாபலியை மயக்கின வாமநனே! என் மனது கலங்குகிறது. அது தெளியும்படி நீ ஒன்றைச் செய்தருளவேண்டும், அறிவில்லாமையாயும், தெளிந்த அறிவாயுமிருக்கிறாய், உஷ்ணமுமாயும் குளிராயுமிருக்கிறாய், ஆச்சரியப்படத் தகுந்ததாயும் தகாததாயுமிருக்கிறாய். ஜயமாயிருக்கிறாய், புண்யமாயும் பாபமாயுமிருக்கிறாய். அவைகளின் பலன்களான ஸுகமும் துக்கமுமாயிருக்கிறாய். ஒன்றை வேறொன்றாக என்னுகிற அறிவாயுமிருக்கிறாய். இவைகளெல்லாம் உனக்கு விளையாட்டு. எங்களுக்கோ துன்பங்களைக் கொடுக்குமவைகளாயிருக்கின்றன.

குறிப்பு:—பாட்டில் சொன்ன அறிவில்லாமை முதலானவைகள் எம்பெருமானிடம் வழக்காயிருக்கின்றன. இதைத்தான் அவைகளாய் இவைகளாய் என்று பாட்டு சொல்லுகிறது.

(இ - ம்) மயக்கா - மயக்கன் என்பதின் விளிவேற்றுமை. மயக்கு - முதனிலைத் தொழிற்பெயர். மயக்கத்தைச் செய்கிறவன் - மயக்கன். (6)

துயரங்கள் செய்யுங்கண்ணு சுடர்நீண்முடி யாயருளாய்
துயரஞ்செய் மானங்களாய் மதனுகி யுகவைகளாய்த்
துயரஞ்செய் காமங்களாய்த் துலையாய்நிலை யாய்நடையாய்த்
துயரங்கள் செய்துவைத்தி யிவையென்ன சுண்டாயங்களே. (எ)

*(ப - ரை) சுடர் - காந்தியுள்ள, நீள் - நீண்ட, முடியாய் - கிரீடத்தையுடையவனே! துயரங்கள் செய்யும் கண்ணு, அருளாய், துயரம் செய் - துக்கத்தைச் செய்கிற, மானங்கள் ஆய் - கர்வங்களாய், மதன் - (மதம்) ஆகி - கொழுப்பாய், உகவைகளாய் - பிரீதிகளாய், துயரம் செய் காமங்களாய் - துக்கத்தைச் செய்கிற ஆசைகளாய், துலையாய் - தூக்குகிறது ஆய் (கனமாய் லகுவாய்), நிலையாய்-நிற்பதாய், நடையாய், துயரங்கள் செய்து வைத்தி - துக்கங்களைப் பண்ணுகிருய், இவை என்ன சுண்டாயங்கள் - உன் பிரயோஜனமாகச் செய்யப்பட்ட வேலைகள்?*

*(கருத்து) காந்திநிறைந்த நீண்ட கிரீடத்தையுடையவனே! உன்னுடைய இந்த அழகைக்காட்டி என்னைத் துன்பப்படுத்துகிற கண்ணனே! துன்பப்படுத்துகிற கர்வமும் கொழுப்புமாய் பிரீதிகளுமாய் துன்பப்படுத்துகிற ஆசைகளாயுமிருக்கிருய். கனமாயும் லகுவாயுமிருக்கிருய். நிற்பதாயும் நடப்பதாயுமிருக்கிருய். இப்படித் துன்பங்களைச் செய்துகொண்டிருக்கிருய். இவைகள் உனக்கு விளையாட்டுக்கள். எங்களுக்குத் துன்பங்களாயிருக்கின்றன. உன்னுடைய அழகைப்பார்த்து வருத்தப்படுவதுபோல் உன்னுடைய இந்த விஷயங்களைப் பார்த்தும் வருத்தப்படுகிற என்னைத் தெளிவிக்கவேண்டும்.*

*குறிப்பு:—மானம் என்பது—உயர்ந்த பிறப்பு, நிறைந்த செல்வம், நல்லபடிப்பு இவைகளால் ஒருவனுக்கு உண்டாகும் கர்வம். மதம் என்பது—ஸந்தோஷத்தினுல் இன்னது செய்யத் தகுந்தது இன்னது செய்யத் தகாதது என்று அறியமுடியாதபடி செய்கிற கொழுப்பு.* (7)

---

என்னசுண்டா யங்களானின் றிட்டாயென்னை யாளுங்கண்ணா
இன்னதோர்தன் மையையென்றுன்னை யாவர்க்குந் தேற்றரியை
முன்னியமூ வுலகுமவை யாயவற்றைப் படைத்துப்
பின்னுமுள் ளாய்புறத்தா யிவையென்ன வியற்கைகளே. (அ)

(ப - ரை) என்ன சுண்டாயங்களால் - என்ன உன் பிரயோஜநத்துக்காகச் செய்யப்பட்ட லீலைகளால், நின்றிட்டாய் - இருக்கிறாய், என்னை ஆளும் கண்ணா - என்னை அடிமையாக்கிக்கொண்ட கண்ணனே! இன்னது ஓர் தன்மையை - இவ்விதமான ஒரு பிரகாரத்தையுடையவன் என்று, உன்னை, யாவர்க்கும் - எவர்களுக்கும், தேற்றரியை - தெளிவாய் அறிவதற்கு முடியாதவனாயிருக்கிறாய், முன்னிய-முன்னாலேயிருந்த (அநாதியான), மூ வுலகும் அவையாய்-மூன்று உலகங்களுமாய், அவற்றை படைத்து - அவைகளையுண்டுபண்ணி, பின்னும், உள்ளாய் - அவைகளுக்குள்ளேயிருக்கிறாய், புறத்தாய் - அவைகளுக்கு வெளியிலுமிருக்கிறாய், இவை - இவைகள், என்ன, இயற்கைகள் - (ஆச்சரியப்படத்தகுந்த) ஸ்வபாவமுள்ளவைகள்?

(கருத்து) உன் விளையாட்டுக்காக என்ன ஆச்சரியமான லீலைகளைச் செய்துகொண்டிருக்கிறாய். உன் குணங்களைக் காட்டி என்னை உனக்கு அடிமையாகச் செய்துகொண்ட கண்ணனே! நீ என்ன ஒரு ஸ்வபாவமுள்ளவன் என்று அதிக ஜ்ஞாநமுள்ளவர்களும் அறியமுடியாமலிருக்கிறாய். கிருதகம் அகிருதகம் கிருதாகிருதகம் என்கிற அநாதியான மூன்று உலகங்களாயிருக்கிறாய். அவைகளை உண்டுபண்ணி அவைகளுக்குள்ளும் வெளியிலுமிருக்கிறாய். இவைகள் என்ன ஆச்சரியங்கள்.

(இ - ம்) தன்மையை - தன்மையையுடைய நீ: முன்னிலை ஒருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர்; அரியை - குறிப்பு வினைமுற்று. (8)

---

என்னவியற் கைகளாலெங் ஙனேநின்றிட்டா யென்கண்ணா
துன்னுகர சரணமுத லாகவெல் லாவுறுப்பும்
உன்னுசுவை யொளியூ றொலிநாற்ற முற்றுநீயே
உன்னை யுணரவுறி லுலப்பில்லை நுணுக்கங்களே. (கூ)

(ப - ரை) என் கண்ணா - நான் சொன்னபடி செய்கிற ண்ணனே! என்ன இயற்கைகளால் - என்ன (ஆச்சரிய) ஸ்வ ாவங்களையுடையவனாய், நின்றிட்டாய் - இருக்கிறாய், துன்னு - நருங்கின, கரம் சரணம் முதலாக - கைகள் கால்கள் முதலாக, ல்லா உறுப்பும் - எல்லா அவயவங்களும், உன்னு - (இனியவை ளாயிருப்பதால்) ஆசைப்படத்தகுந்தவைகளாயிருக்கிற, சுவை- ஸம், ஒளி - ரூபம், ஊறு - ஸ்பரிசம், ஒலி - சப்தம், நாற்றம் - ாஸனை, முற்றும் நீயே - இவைகள் எல்லாம் நீயே, உன்னை, ணர உறில் - அறிய (என்னத்தை) அடைந்தால், நுணுக்கங் ள் - ஸூக்ஷ்மங்கள் (விலக்ஷணங்கள்), உலப்பு இல்லை - (அவை ளுக்கு) முடிவு இல்லை.

(கருத்து) நான் சொன்னபடி செய்கிற கண்ணனே! என்ன ச்சரியமான ஸ்வபாவமுள்ளவனாயிருக்கிறாய். உடம்புகளில் நருங்கியிருக்கிற கைகள் கால்கள் முதலான எல்லா அவயவங் ளாயுமிருக்கிறாய். இனியவைகளாயிருப்பதால் ஆசைப்படத் குந்த ரஸமும் ரூபமும் ஸ்பரிசமும் சப்தமும் வாஸனையும் ்கிய எல்லாமாகவுமிருக்கிறாய். உன்னையறிய ஆசைப்பட்டு ரூபித்துப் பார்த்தால் உலகத்திலிருக்கிற மற்ற எல்லாவற்றை ம் காட்டிலும் நீ வேறுபட்டவன் என்றும், உன்னுடைய வேறு ாடுகளுக்குக் கணக்கில்லை என்றும் தோன்றும். (9)

---

ல்லை நுணுக்கங்களே யிதனிற்பிறி தென்னும்வண்ணம்
தால்லைநன் னூலிற்சொன்ன வுருவு மருவுநியே
ல்லித் துழாயலங்க லணிமார்பவென் னச்சுதனே
ல்லதோர் வண்ணஞ்சொன்னா லதுவேயுனக் காம்வண்ணமே.

(ப - ரை) இதினில் - இதைக்காட்டிலும், பிறிது - வேறு, ணுக்கங்கள் - ஸூக்ஷ்மங்கள், இல்லை என்னும் வண்ணம் - ல்லை என்கிற விதமாய், தொல்லை - பழைய (அநாதியான), நூலில் - நல்ல சாஸ்திரத்தில், சொன்ன, உருவும் - ரூப ள்ளதும் (காரியமாயிருக்கும்போது ரூபமுள்ளதாய்த் தோன் ம் மூலப்பிரகிருதியும்), அருவும் - ரூபமில்லாததும் (ஆத்மாக் நம்), நீயே, அல்லி துழாய் - புஷ்பங்களையுடைய துளஸிகளு டய, அலங்கல் - மாலைகளை, மார்ப - மார்பிலுடையவனே!

என் - என்னுடைய, அச்சுதனே, வல்லது ஓர் வண்ணம் - (தங்களால்) முடிந்த ஒருவிதமாய், சொன்னால் - (வேதங்களும் ஸநகர் முதலானவர்களும்) ஸ்தோத்ரம் பண்ணினால், அதுவே - அதுமாத்திரமே, உனக்கு ஆம் வண்ணமே - உனக்கேயுள்ள பிரகாரமோ ?

(கருத்து) இவைகளைக்காட்டிலும் ஸூக்ஷ்மங்களான வஸ்துக்கள் வேறு இல்லையென்று சொல்லும்படி நல்ல அநாதியான வேதாந்தங்களில் சொல்லப்பட்ட மூலப்பிரகிருதியும், ஆத்மாக்களும் நீயே. புஷ்பங்களோடுகூடிய துளஸிமாலையைத் திருமார்பிலுடையவனே ! இந்த அழகு ஒருநாளும் உன்னை விடுகிறதில்லை என்பதை எனக்குக் காட்டினவனே ! வேதமும் ஸநகர் முதலான யோகிகளும், உன்னை ஸ்தோத்ரம் செய்தால் அதுமாத்திரமே உன் பிரகாரமாக ஆகுமோ? உன் பிரகாரங்களுக்கு முடிவுண்டோ ?

குறிப்பு :—(1) வேதாந்தங்களுக்கு நன்மையாவது—ஒருவராலும் செய்யப்படாமையும், அதனால் ஒரு தோஷமும் இல்லாமையும்.

(2) பாட்டில் முதலிரண்டு அடிகளில் லீலாவிபூதியும், மூன்றாம் அடியில் நித்தியவிபூதியில் எம்பெருமானுக்கு இருக்கும் திருமேனியும் சொல்லப்படுகின்றன.

(3) நாலாவது அடிக்கு வேறுவிதமாயும் பொருள்கொள்ளலாம் :—உன்னிடத்தில் ஆசையுள்ளவர்கள் தங்களுக்கு முடிந்தவிதமாய் உன்னை ஸ்தோத்ரம் பண்ணினால், அதுவே உனக்குத் தகுந்தபிரகாரம் என்று நினைக்கும்படி அவர்களுக்குப் பவ்யனாய் (அடங்கினவனாய்) இருக்கிறாய்—என்பது. இந்த அர்த்தத்தில் ' அதுவே ' என்கிறவிடத்தில் ஏகாரத்திற்குத் தேற்றப்பொருள். முதல் அர்த்தத்தில் ஏகாரத்திற்கு எதிர்மறைப்பொருள்.

(இ - ம்) அலர் - என்பது பினை ஆகுபெயராய் புஷ்பத்தை மாத்திரம் சொல்லுகிறது. (10)

---

ஆம்வண்ண மின்னதோன்றென் றறிவதரிய வரியை
ஆம்வண்ணத் தாற்குருகூர்ச் சடகோப னறிந்துரைத்த
ஆம்வண்ண வொண்டமிழ்க ளிவையாயிரத் துளிப்பத்தும்
ஆம்வண்ணத் தாலுரைப்பா ரமைந்தார்தமக் கென்றைக்குமே. (கக)

(ப - ரை) ஆம் வண்ணம் - (அவனுக்கு) உண்டாயிருக்கும் பிரகாரம், இன்னது ஒன்று என்று - இவ்விதமான ஒன்று என்று, அறிவது அரிய - அறியமுடியாத, அரியை - ஹரியை, ஆம் வண்ணத்தால் - அவனுக்கு இருக்கும் பிரகாரப்படி, குருகூர் சடகோபன், அறிந்து, உரைத்த - சொன்ன, ஆம் வண்ணம் - (அவனுக்கு) தகுந்தபடியான, ஒண் - அழகான, தமிழ்கள் இவை - தமிழ்ப் பாட்டுக்களாகிய இந்த, ஆயிரத்துள், இப்பத்தும் - இந்தப் பத்துப்பாட்டுக்களையும், ஆம் வண்ணத்தால் - தங்களால் முடிந்த விதம், உரைப்பார் - சொல்லுகிறவர்கள், என்றைக்கும் - எப்போதும், தமக்கு அமைந்தார் - தங்களுக்குப் போதுமானவர்கள்.

(கருத்து) அவனுக்கு உள்ள பிரகாரங்கள் இன்னவைகள் என்று அறியமுடியாதபடியிருக்கிற ஹரியை (எம்பெருமானை) ஆழ்வார் உள்ளபடி அறிந்து சொன்ன இந்தப் பத்துப் பாட்டுக்களைத் தங்களுக்கு முடிந்தவரையில் சொல்லுகிறவர்கள் எம்பெருமானை உபாஸிக்கவேண்டாம். இந்தப் பாட்டுக்களாலேயே அவர்களுக்குச் செய்யவேண்டியவைகள் செய்யப்பட்டவைகளாக ஆகும்.

குறிப்பு :—‘ தங்களுக்கு முடிந்தவரையில் என்பதற்கு ’ கருத்து—பாட்டுக்களின் அர்த்தத்தைத் தெரிந்தோ தெரியாமலோ, அறிவுடன் சொன்னாலோ, அறிவில்லாமல் சொன்னாலோ என்பது.

(இ - ம்) ஆகும் என்பது உயிர்மெய் கெட்டு ஆம் என்று ஆயிற்று. (11)

[illegible]

[illegible] ||அஅ||

---

*இந்தத் திருவாய்மொழியில், எம்பெருமான் ஆச்சரியமான பலவிதமான விபூதிகளையுடையவன் என்பது சொல்லப்படுகிறது. அந்த விபூதிகளாவன :—(1) ஐந்து பூதங்கள் ; (2) சந்திரன் ஸூரியன் முதலான தேஜஸ்ஸுகள் ; (3) எல்லா யுகங்களிலுள்ள வஸ்துக்கள் ; (4) சேதநர்களும் அசேதநங்களும் ; (5) உடம்புகளும் ஆத்மாக்களும் ; (6) நினைவும் மறதியும் ; (7) கர்வம் கொழுப்பு முதலானவைகள் ; (8) ஒருவராலும் உள்ளபடியறியப் படாமை ; (9) தன்னையடைந்தவர்களுக்குப் பல நன்மைகளைச் செய்வது ; (10) வேதத்தினாலேயே அறியப்படுவது.* (88)

---

# ஒன்பதாம் திருவாய்மொழி.

அவ—எம்பெருமானைப் பரிபூர்ணமாய் அநுபவிப்பதற்குப் பிரகிருதியோடு ஸம்பந்தம் இடைஞ்சலாய் இருந்ததென்று அதைப் போக்கும்படியாக எம்பெருமானை ஆழ்வார் பிரார்த்தித்தார். எம்பெருமான் அதை உடனே செய்யாமையால் அவருக்கு மிகுந்த துக்கமுண்டாயிருந்தது. ஆனாலும், அவனுடைய ரூபம் எங்கும் தெரிந்துகொண்டிருந்தது. அவன் தன் ரூபத்தைக் காட்டினதும் தான் வேண்டியதைச் செய்யாமையும் ஆச்சரியமாயிருக்கின்றன என்று அவர் நினைத்தபோது, அவனுடைய மற்ற ஆச்சரியமான விபூதிகளையும் அப்ராகிருதமான திருமேனியையும் அவன் காட்டினான். அவைகளை ஆச்சரியத்துடன் இத்திருவாய்மொழியில் பேசினார். இதனால் மிகுந்த ஸந்தோஷமுண்டாய் முன் இருந்த துக்கமும் போய் விட்டது.

(2) எதற்காக அவன் தம்மைப் பிரகிருதி மண்டலத்தில் வைத்திருக்கிறானென்று நிரூபணம் பண்ணினார். பீஷ்மரைக் கொண்டு உலகத்தாருக்குத் தெரியும்படி தர்மங்களைக் கிருஷ்ணனுயிருந்து வெளியிட்டதுபோலத் தம்மைக்கொண்டு, தன்னை அடைந்தவர்களுக்கும் தனக்கும் இன்பம் உண்டாவதற்காக அவனே திருவாய்மொழியைப் பாடும்படி செய்கிறான். மிகவும் தாழ்ந்த தம்மைக்கொண்டு கவிபாடுவிப்பது என்ன ஆச்சரியமென்று அவனுடைய குணங்களை நினைத்துப் ப்ரீதியினால் இந்தத் திருவாய்மொழியில் பேசுகிறார் :—

(கலிவிருத்தம்.)

என்றைக்கு மென்னையுய் யக்கொண்டு போகிய
அன்றைக்கன் றென்னைத்தன் னாக்கியென் னாலென்னை
இன்றமிழ் பாடிய வீசனை யாதியாய்
நின்றவென் சோதியை யென்சொல்லி நிற்பனோ. (க)

(ப-ரை) என்றைக்கும் - எப்போதும் (மேலுள்ள காலம் எல்லாம்), என்னை, உய்ய - பிழைக்கும்படி, கொண்டு - (தனக்கு

வேலைக்காரனாயிருக்கும்படி) எடுத்துக்கொண்டு, போகிய-போய்க் கொண்டிருக்கிற, அன்றைக்கு அன்று - ஒவ்வொரு நாளிலும், என்னை, தன் ஆக்கி - தன்னைப்போல் (பரிசுத்தனாக) செய்து, என்னால், தன்னை, இன் தமிழ் - இனிமையான தமிழ்ப் பாட்டுக் களை, பாடிய - பாடின, ஈசனை-ஸர்வேச்வரனை, ஆதியாய் நின்ற - (கவி பாடுவதற்கு) காரணமாயிருந்த, என் சோதியை - (இந்தப் பாட்டுக்களைப் பாடுவதினால்) மிகுந்த காந்தியோடு விளங்குகிற வனை, என் சொல்லி நிற்பனோ - எதைச் சொல்லி நிற்பேன்?

(கருத்து) ஒரு வஸ்துவாக இல்லாதிருந்த என்னை மேலுள்ள காலம் எல்லாம் எம்பெருமான் தனக்கு வேலைக்காரனாயிருக்கும் படி செய்து, என்னை ஒரு வஸ்துவாகச் செய்தான். இளப்பங் களுக்கு இடமான என்னை ஒவ்வொருநாளும் தன்னைப்போல் பரிசுத்தனாகச் செய்கிறான். ஜ்ஞானமும் சக்தியும் கொஞ்சமும் இல்லாத என்னை *உபகரணமாகக்கொண்டு வேதங்களாலும் புரா ணங்களாலும் அளவிடமுடியாத தன்னைப்பற்றி இனிமையான தமிழ்ப் பாட்டுக்களைப் பாடுகிறான். அவன் எதையும் செய்யச் சக்தியுள்ளவன். ஒரு திருணத்தைப் பிரம்மாஸ்திரமாக ராமாவ தாரத்தில் செய்ததுபோல் என்னைக்கொண்டு இந்த வேலையைச் செய்கிறான். இந்தப் பாட்டுக்களைப் பாடுவதற்கு அவனே கார ணம். பாடுகிறவனுக்கு வீணைபோல் நானிருக்கிறேன். இந்தவேலை யைச் செய்வதாலே அவனுக்குப் புதிதாய் உண்டான ஒரு காந்தியை எனக்குக் காட்டி அருளினான். இப்படிப்பட்ட அவ னுடைய குணங்களை நான் எவ்வளவு சொல்லியும் எனக்குத் திருப்தி வருமோ? ஒவ்வொரு குணத்தையும் எல்லாக் காலமும் பேசினாலும் அதற்கு முடிவுண்டோ? (1)

---

* உபகரணம் என்பது ஒருவன் ஒரு வேலையைச் செய்வதற்கு ஸாதனமாய் வைத்துக்கொண்டிருப்பது. எழுதுகிறவனுக்குப் பேனா வைப்போலவும், பாடுகிறவனுக்கு வீணையைப்போலவும். இது 'துணைக் கருவி' என்று தமிழில் சொல்லப்படும்.

என்சொல்லி நிற்பனேன் னின்னுயி ரின்றேன்றாய்
என்சொல்லால் யான்சொன்ன வின்கவி யென்பித்து
தன்சொல்லாற் றன்றன்னைக் கீர்த்தித்த மாயனேன்
முன்சொல்லும் மூவுரு வாம்மு தல்வனே. (உ)

(ப - ரை) என் - என்னுடைய, இன் - இனியதான (இளப்பமான), உயிர் - ஆத்மாவானது, இன்று - இப்போது, ஒன்றாய்- ஒரு வஸ்துவாய், என் சொல்லால், யான் - நான், சொன்ன, இன் கவி - இனிமையான பாட்டு, என்பித்து - (உலகத்தார்) சொல்லும்படி செய்வித்து, தன் சொல்லால் - தன்னுடைய சொல்லாலே, தான் தன்னை கீர்த்தித்த - தான் தானே தன்னை ஸ்தோத்ரம் பண்ணின, மாயன் - ஆச்சரியமானவனும், என் முன் சொல்லும் - எனக்கு முன்னாலே (பாட்டைச்) சொல்லிக் கொடுக்கிறவனும், மூ உருவாம்-த்ரிமூர்த்தி ரூபனும், முதல்வன்- காரணமுமான அவனை, என் சொல்லி நிற்பன் - என்ன சொல்லி நிற்பேன் ?

(கருத்து) தாழ்ந்த என்னுடைய ஆத்மாவை ஒரு வஸ்துவாகப் பண்ணி, 'இந்தப் பாட்டுக்களை ஆழ்வார் பாடினார், இவைகள் ஆழ்வாருடைய பாட்டுக்கள்' என்று உலகத்தார் சொல்லிக் கொண்டிருக்கும்படி இவைகளை அவனே பாடினான். இவைகள் அவனுடைய பாட்டுக்கள். அவன் முன்னாலே 'உயர்வற' என்று சொல்ல, நான் 'உயர்வற' என்று பின்னே சொல்லிக்கொண்டு வந்தேன். இந்த ஆச்சரியமான வேலை எதுபோலிருக்கிறதென்றால், தானே உலகத்தை உண்டுபண்ணி ரக்ஷித்து, அழிப்பதற்குத் தானே காரணமாயிருக்க, பிரம்மாவுக்கு ஆத்மாவாயிருந்து அதை உண்டுபண்ணி, ருத்திரனுக்கு ஆத்மாவாயிருந்து அதை அழித்து இவ்வளவைக்கொண்டே 'உலகத்தைப் பிரம்மா உண்டு பண்ணினான், ருத்திரன் அதை அழித்தான்' என்று உலகத்தார் சொல்லும்படி செய்திருக்கிறானே. இதைப்போல்தான் இப்போது அவன் செய்கிற வேலையும். இந்த ஆச்சரியத்தைச் சொல்லமுடியுமோ ?

குறிப்பு :—'இன் உயிர்' என்கிறவிடத்தில் தம்மை நிந்திப்பதற்காக 'இன்' என்று ஸ்தோத்ரம் பண்ணினபடி. (2)

ஆமுதல் வன்னிவ னென்றுதற் றேற்றியென்
நாமுதல் வந்து புகுந்துநல் லின்கவி
தூமுதற் பத்தர்க்குத் தான்றன்னைச் சொன்னவென்
வாய்முத லப்பனை யென்று மறப்பனோ. (௩)

*(ப - ரை) இவன் முதல்வன் ஆம் என்று - இந்த நாராயணனை உலகத்துக்குக் காரணம் என்று, தன் தேற்றி - தன் விஷயத்தில் தேறும்படி பண்ணி (தன்னை நான் தெளிவாக அறியும்படி செய்து), என் நா முதல் - என் நாக்குக்கு (நாக்கின் வியாபாரத்துக்குக்) காரணமாய், வந்து புகுந்து, தூ - பரிசுத்தர் களான, முதல் - அநாதிகளான, பத்தர்க்கு - பக்தர்களுக்கு (நித்தியஸூரிகளுக்கு), நல் ஈன் (இன்) - நல்ல இனிமையான, கவி - பாட்டுக்களை, தான் தன்னை சொன்ன - தான் தன்னைப் பற்றிச் சொன்னவனும், என் வாய் முதல் - என் வாக்கின் வேலைக்குக் காரணமுமான, அப்பனை - உபகாரம் செய்தவனை, என்றும் மறப்பனோ - எப்போதாவது மறப்பேனோ ?*

*(கருத்து) நாராயணனை உலகத்துக்குக் காரணம் என்று நான் தெளிவாய் அறியும்படி செய்து, பிரம்மாவின் உத்தரவின் மேலே வால்மீகிருஷியின் நாக்கில் ஸரஸ்வதி வந்து புகுந்தது போலில்லாமல் தானே வந்து என் நாக்கில் வந்து புகுந்து, ஒரு போதும் ஸம்ஸாரமில்லாமல் எப்போதும் பரிசுத்தர்களான நித்தியஸூரிகளுக்கு இனியவைகளாயிருக்கும்படி அவன் தன்னைப் பற்றிப் பாடினான். இப்படி என்னுடைய வாக்கின் வேலைக்குக் காரணமாயிருந்து உபகாரம் செய்த அவனை எப்போதாவது மறப்பேனோ? ஒருபோதும் மறக்கமாட்டேன்.* (3)

---

அப்பனை யென்று மறப்பனென் னாக்கியே
தப்புத லின்றித் தனைக்கவி தான்சொல்லி
ஒப்பிலாத் தீவினை யேனையுய் யக்கொண்டு
செப்பமே செய்து திரிகின்ற சீர்கண்டே. (௪)

*(ப - ரை) என் ஆக்கியே - என்னை உபகரணமாகக் கொண்டே, தப்புதல் இன்றி - (பாடுவதில்) தப்பில்லாமல், தன்னை - தன்னைக் குறித்து, கவி - பாட்டுக்களை, தான் - தானே,*

சொல்லி - பாடி, ஒப்பு இலா - ஒப்பில்லாத, தீவினையேனை - க்ரூரமான கர்மங்களைச் செய்திருக்கிற என்னை, உய்யக்கொண்டு - பிழைக்கும்படி (மேலுள்ள காலமெல்லாம் அடிமையாயிருக்கும் படி) செய்துகொண்டு, செப்பமே செய்து - (எனக்கு) நன்மைகளையே செய்து, திரிகின்ற - இதுவே வேலையாய் அங்குமிங்கும் போய்க்கொண்டிருக்கிற, சீர் கண்டு - (ஸௌசீல்யம் என்கிற) குணத்தைக் கண்டு, அப்பனை - இப்படிப் பெரிய உபகாரம் செய் தவனை, என்று மறப்பன் - எப்போதாவது மறப்பேனோ?

(கருத்து) என்னை உபகரணமாகவே வைத்துக்கொண்டு பாடுவதில் சொற்குற்றமும் அர்த்தத்தில் குற்றமும் இல்லாமல் தன்னைப்பற்றித் தானே பாடுகிறான். தனக்கு ஜ்ஞாநத்திலும் சக்தியிலும் எப்படி ஸமமானவனில்லையோ, அப்படியே அறிவும் சக்தியுமில்லாமையில் எனக்கு ஸமாநமானவனில்லை. நான் க்ரூரமான கர்மங்களைச் செய்துகொண்டிருக்கிறவன். இப்படிப்பட்ட என்னையும் மேலுள்ள காலம் எல்லாம் தனக்கு அடிமையாயிருக்கும்படி செய்து, மேன்மேலும் நன்மைகளையே செய்து, இதுவே வேலையாய்த் திரிந்துகொண்டிருக்கிறான். இப்படி மிகவும் பெரிய உபகாரங்களைச் செய்கிறவனை எப்போதாவது மறப்பேனோ? இனி என் விஷயத்தில் அவன் ஒரு கெடுதலைச் செய்தாலும் அவன்செய்த உபகாரத்தை என்னால் மறக்கமுடியுமோ?

குறிப்பு:—'தப்புதலின்றி' என்கிறவிடத்தில் எம்பெருமான், தான் பாடினால் ஒரு தப்பில்லாமல் முடியும். நானே பாடினால் பிரயாஸப்பட்டபோதிலும் தப்பும் தவறுமாய் முடிவுக்கு வரும். என்னை உபகரணமாக வைத்துக்கொண்டு தான் பாடுகையில் என்னுடன் ஸம்பந்தத்தாலே ஒரு குற்றமுண்டாகலாமே. அஃதில்லாமல் முடித்துவிட்டது என்ன ஆச்சரியம் என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம் என்று இப்படி ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்தாராம். (4)

---

சீர்கண்டு கொண்டு திருந்துநல் லின்கவி
நேர்பட யான்சொல்லு நீர்மையி லாமையில்
ஏர்விலா வென்னைத்தன் னாக்கியென் னாற்றன்னைப்
பார்பர வின்கவி பாடும் பரமரே. (௫)

(ப - ரை) சீர் - (எம்பெருமானுடைய) நல்ல குணங்களை, கண்டுகொண்டு - பார்த்துக்கொண்டு, திருந்து - நன்றாய்த் தெரிவிக்கிற, நல் - நல்லவைகளான, ஈன் - இனியவைகளான, கவி - பாட்டுக்களை, நேர்பட - நேரும்படி, யான் சொல்லும் - நான் சொல்லும், நீர்மை இலாமையில் - ஸ்வபாவமில்லாமலிருப்பதில், ஏர்விலா - ஸமானமானவனில்லாத, என்னை, தன் ஆக்கி - தன்னைப்போல் (பரிசுத்தனாயும் ஜ்ஞாநம் சக்தியுள்ளவனாகவும்) செய்து, என்னால் - என்னைக்கொண்டு, தன்னை - தன்னைப்பற்றி, பார் - பூமி (எல்லா உலகங்களும்), பரவு - கொண்டாடும்படி, இன் கவி - இனியவைகளான பாட்டுக்களை, பாடும் - பாடுகிற, பரமர் - மிகவும் உயர்ந்தவரை, (என்று மறப்பனோ).

(கருத்து) நான் அவனுடைய நல்ல குணங்களைப் பார்த்து அவனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் இனியவைகளாயிருக்கும்படி தப்பில்லாமல் பாட்டுகளைப் பாடுகிற ஸ்வபாவம் இல்லாதவனும், அதற்கு வேண்டிய ஜ்ஞாநமும் சக்தியுமில்லாதவனும் இருக்கிறேன். இந்த விஷயத்தில் எனக்கு ஒப்பில்லை. இப்படிப்பட்ட என்னைத் தன்னைப்போல் பரிசுத்தமாயும் ஜ்ஞாநமும் சக்தியுமுள்ளவனாயும் பண்ணி, என்னை உபகரணமாகக்கொண்டு எல்லா உலகங்களும் கொண்டாடும்படி தன்னைப்பற்றித் தானே பாடுகிறான். இப்படித் தாழ்ந்தவனான என்னைக்கொண்டு இந்த உயர்ந்த வேலையைச் செய்வதனால் அவனே ஸர்வேசுவரன் என்று தோன்றுமேதா? இதைச் சாஸ்திரம்கொண்டு அறியவேண்டுமோ? இப்படி உபகாரம் செய்தவனை எப்போதாவது மறக்க முடியுமோ?

(இ - ம்) திருந்து...கவி - வினைத்தொகை. திருந்து - பிறவினைப்பொருள். பார் - பூமி: ஆகுபெயராய் அதிலுள்ள ப்ராணிகளைச் சொல்லுகிறது. (5)

---

இன்கவி பாடும் பரம கவிகளால்
தன்கவி தான்தனைப் பாடுவி யாதின்று
நன்குவந் தேன்னுட னாக்கியென் னுற்றன்னை
வன்கவி பாடுமென் வைகுந்த நாதனே. (சு)

(ப - ரை) இன் கவி - இனியவைகளான ச்லோகங்களையும், பாட்டுக்களையும், பாடும், பரம கவிகளால் - மிகவும் உயர்ந்த கவிகளால், தன் கவி - தனக்குத் தகுந்த பாட்டுக்களை, தான் தன்னை, பாடுவியாது - பாடுவித்துக்கொள்ளாமல், இன்று - இப்போது, நன்கு - நன்றாக, உவந்து - ஸந்தோஷப்பட்டு, என் உடல் ஆக்கி - என்னைத் தன்னைவிட்டுப் பிரியாத உபகரணமாகச் செய்து கொண்டு, என்னால் - என்னைக்கொண்டு, தன்னை, வன் கவி - பிரபலமான பாட்டுக்களை, பாடும், என் வைகுந்தநாதன் - வைகுந்த நாதனை, (என்று மறப்பனோ).

(கருத்து) இனியவைகளான ச்லோகங்களையும் பாட்டுக்களையும் பாடச் சக்தியுள்ள மிகவும் உயர்ந்த கவிகள் வால்மீகியைப் போலவும் பராசரரைப்போலவும் வியாஸரைப்போலவும் முதலாழ்வார்களைப்போலவும் இருக்கும்போது முன்னமே அவர்களைக்கொண்டு தன்னுடைய பாட்டுக்களைப் பாடுவித்தது போலவில்லாமல் இப்போது இந்தப் பாட்டுக்களைப் பாடுவதையே பிரயோஜனமாக எண்ணி ஸந்தோஷப்பட்டு, என்னைத் தன்னைவிட்டுப் பிரியாத உபகரணமாகச் செய்துகொண்டு எம்பெருமான் தன்னைப்பற்றி நல்ல பாட்டுக்களைத் தானே பாடுகிறான். தான் வைகுந்தத்துக்கு ஸ்வாமியாயிருப்பது தனக்கு எப்படிப் பெருமையோ, அப்படியே என்னைக்கொண்டு தன்னைப் பாடுவதும் தனக்குப் பெருமையாக எண்ணுகிறான். இதை எனக்குங் காட்டுகிறான். இப்படிப்பட்டவனை நான் எப்போதாவது மறப்பேனோ?

குறிப்பு:—பாட்டின் வன்மையாவது—வர்ணிக்கப்பட்டிருக்கிற அவனாலும் அளக்கமுடியாத குணமுள்ளதாயிருப்பது. (6)

---

வைகுந்த நாதனென் வல்வினை மாய்ந்தறச்
செய்குந்தன் றன்னையென் னாக்கியென் னாற்றன்னை
வைகுந்த னாகப் புகழவண் டீங்கவி
செய்குந்தன் றன்னையெந் நாள்சிந்தித் தார்வனே. (௰)

(ப - ரை) வைகுந்த நாதன் - வைகுந்தத்துக்கு ஸ்வாமியானவன், என் - என்னுடைய, வல் வினை - பலமான கர்மங்கள், மாய்ந்து அற - முழுவதும் நாசமாய் மீதியில்லாமல் போகும்படி,

செய்-செய்தவனை, குந்தன்-குந்தபுஷ்பம்போலே பரிசுத்தனை, தன்னை என் ஆக்கி - (என்னைத் தன் ஆக்கி) என்னைத் தன்னைப் போலே அஜ்ஞாநம் முதலான தோஷங்கள் இல்லாதவனாய்ச் செய்து, என்னால் - என்னைக்கொண்டு, தன்னை, வைகுந்தன் ஆக - வைகுந்தத்திற்கு ஸ்வாமியென்று ஆகும்படி, புகழ - ஸ்தோத்ரம் பண்ண, வண் - உதாரங்களும், தீம் - இனியவை களுமான, கவி - பாட்டுக்களை, செய் - செய்கிற, குந்தன் தன்னை - குந்த புஷ்பம்போலே சுத்த ஸ்வபாவமுடையவனை, சிந்தித்து - தியானம் பண்ணி (அநுபவித்து), எந்நாள் - எந்தக் காலத்திலே, ஆர்வன் - திருப்தியுள்ளவனாவேன்.

(கருத்து) வைகுந்தத்திற்கு ஸ்வாமியாயிருக்கிறவன் ஸம் ஸாரியிடத்தில் இவ்வளவு ஆசையுள்ளவனாய், என் பாபங்கள் போகவேண்டுமென்று கொஞ்சமும் எண்ணமில்லாத என்னு டைய பலமான கர்மங்களை முழுவதும் நாசம் பண்ணி, குந்த புஷ் பத்தைப்போல பரிசுத்தமாயிருக்கிற தன்னைப்போல, தாழ்ந்த என்னையும் அஜ்ஞாநம் முதலான தோஷங்களில்லாதவனாய்ப் பண்ணிவிட்டான். நான் அவனை ஸ்தோத்ரம் பண்ணினால்தான் தனக்கு வைகுந்தத்துக்கு ஸ்வாமியாயிருப்பதாகிற பெருமை ஏற் படுமென்று எண்ணி, என்னைக்கொண்டு தன்னை உதாரங்களும் இனியவைகளுமான பாட்டுக்களைப் பாடுகிறான். இப்படிப் பாடு வதையே தனக்கு ஒரு லாபமாக எண்ணும்படியான சுத்தமான ஸ்வபாவத்தையுடைய அவனுடைய குணங்களை அநுபவித்து நான் எந்தக் காலத்தில் திருப்தியை அடைவேன்? எவ்வளவு காலம் அநுபவித்தாலும் திருப்தி வராது.

குறிப்பு :—பாட்டுக்கள் உதாரங்களாயிருப்பதாவது :— வேதத்திலும் தெளிவாகத் தெரியாத பொருள்களைத் தெளி வாகக் காட்டுவது.

(2) 'குந்தன்' என்பது எம்பெருமானுக்கும் பெயர். இதை ஸஹஸ்ரநாமத்தில் பார்க்கலாம். (7)

---

ஆர்வனோ வாழியங் கையெம்பி ரான்புகழ்
பார்விண்ணீர் முற்றுங் கலந்து பருகிலும்
ஏர்விலா வென்னைத்தன் னாக்கியென் னாற்றன்னை
சீர்பெற வின்கவி சொன்ன திறத்துக்கே. (அ)

*(ப - ரை) ஏர்வு இலா என்னை - (பாடுகைக்குத்) தகுதியில்லாத என்னை, தன் ஆக்கி - தன்னைப்போல (அறிவும் சக்தியுமுள்ளவனாக) பண்ணி, என்னால் தன்னை, சீர் பெற - நல்ல குணங்களைத் தான் அடையும்படி, இன் கவி - இனியவைகளான பாட்டுக்களைச் சொன்ன, திறத்துக்கு - விதத்துக்கு, ஆழி அம் கை - திருவாழியாலே அழகான திருக்கையையுடைய, புகழ் - நல்ல குணங்களை, பார் - பூமி (பூமியிலுள்ளவர்களும்), விண் - வைகுந்தம் (அதிலிருப்பவர்களும்), நீர் - ஜலம் (அதிலிருக்கும் பிராணிகளும்), முற்றும் கலந்து - இவர்கள் எல்லாரும் காலும் ஒன்றாகச் சேர்ந்து (அவர்களுடைய வாக்கு முதலான இந்திரியங்களைச் சேர்த்துக்கொண்டு), பருகிலும் - குடித்தாலும் (அநுபவித்தாலும்), ஆர்வனோ - திருப்தியடைவனோ?*

*(கருத்து) தன்னைப் பாடுகைக்குத் தகுதியில்லாத என்னைத் தன்னைப்போல் ஜ்ஞாநமும் சக்தியுமுள்ளவனாகப் பண்ணி, திருவாழியும் கையுமாகிய அழகைக் காட்டி. என்னை அடிமையாக்கிக்கொண்டவன், நான் தன்னைப் பாடினால்தான் தனக்கு நல்ல குணங்கள் ஏற்படுமென்று எண்ணி, என்னைக்கொண்டு இனியவைகளான பாட்டுக்களால் தன்னைப் பாடிக்கொள்ளுகிறான். இந்தக் குணத்தையநுபவித்து, எந்தக் காலத்தில் திருப்தியடைவேனோ என்று சொன்னேன். அது ஸரியன்று. பூமி முதலான உலகங்களிலும் வைகுந்தத்திலும் ஸமுத்திரங்களிலும் இருக்கிற எல்லாருடைய வாக்கு முதலான எல்லாக் கரணங்களையும் நான் சேர்த்துக்கொண்டு அநுபவித்தாலும் அப்போதாவது திருப்தி வருமோ?*

*(இ - ம்) பார், விண், நீர் : இவைகள் ஆகுபெயர்களாய் இவைகளிலுள்ளவர்களைச் சொல்லுகின்றன.* (8)

---

திறத்துக்கே துப்பர வாந்திரு மாலின்சீர்
இறப்பெதிர் காலம் பருகிலு மார்வனோ
மறப்பிலா வென்னைத்தன் னாக்கியென் னாற்றன்னை
உறப்பல வின்கவி சொன்ன வுதவிக்கே. (௯)

(ப - ரை) மறப்பு இலா என்னை - அஜ்ஞாநத்துக்குங்கூட இருப்பிடமில்லாத என்னை, தன் ஆக்கி-என்னால் தன்னை, உற - (நன்றாய்) தொடும்படி (தன்னுடைய ஸ்வரூபம் முதலானவைகளை நன்றாய்த் தெரிவிக்கும்படி), பல, இன் - இனியவைகளான, கவி - பாட்டுக்களை, சொன்ன உதவிக்கு, திறத்துக்கு - எல்லா வேலைகளையும் செய்கிற விதத்துக்கு, ஏய் - தகுந்த, துப்பரவாம்-ஸாமர்த்தியத்தையுடைய, திருமாலின் - பிராட்டியோடுகூடிய ஸ்வாமியின், சீர் - நல்ல குணங்களை, இறப்பு - போன காலத்திலும், எதிர்காலம் - வருங்காலத்திலும் (நடக்கிற காலத்திலும்) பருகிலும் - குடித்தாலும் (அநுபவித்தாலும்), ஆர்வனோ - திருப்தியடைவேனோ ?

(கருத்து) ஜ்ஞாநத்துக்கு இருப்பிடமாகவில்லாமையால் அஜ்ஞாநத்துக்குங்கூட இடமில்லாமல் அசேதநத்தைப்போலிருக்கிற என்னை, தன்னைப்போல மிகுந்த ஜ்ஞாநமுள்ளவனாகப் பண்ணி, என்னைக்கொண்டு, தன்னுடைய ஸ்வரூபம் முதலானவைகள் நன்றாய்த் தெரிவிக்கிற பல இனியவைகளான பாட்டுக்களைப் பிராட்டியுடன்கூடவிருக்கும் ஸ்வாமி பாடுகிறான். இந்த உபகாரத்தைக் கீழே சொன்னபடி எல்லாருடைய எல்லாக் கரணங்களையும்கொண்டு, போனகாலத்திலும் நடக்கிற காலத்திலும் வருங்காலத்திலும் நான் அநுபவித்தாலும் எனக்குத் திருப்தி வருமோ ?

குறிப்பு :—எவனுக்கு ஜ்ஞாநமிருக்கக்கூடுமோ, அவனுக்குத்தான் அஜ்ஞாநமிருக்கும். இரண்டுமில்லாதது அசேதநம் (அறிவில்லாத வஸ்து). அதைப்போல் தாம் தாழ்ந்தவராக இருந்ததாக ஆழ்வார் எண்ணுகிறார்.

(இ - ம்) மறப்பு என்பது அறிந்த ஒன்றை மறந்துபோவது. அஃது ஆகுபெயராய் அறிவுடனும் மறப்புடனும் கூடியேயிருக்கும் அறிவின்மையைச் சொல்லுகிறது. (9)

உதவிக்கைம் மாறென் னுயிரென்ன வுற்றெண்ணில்
அதுவுமற் றாங்கவன் றன்னதேன் னுற்றன்னைப்
பதவிய வின்கவி பாடிய வப்பனுக்கு
அதுவுமொன் றுமில்லை செய்வதிங் குமங்கே. (௧௦)

(ப - ரை) உதவி - (என்னைக்கொண்டு பாட்டுப் பாடுகிற) உபகாரத்துக்கு, கைம்மாறு - பதிலுபகாரம், என் உயிர் என்ன - என்னுடைய ஆத்மா என்று நினைக்க, உற்று - நன்றாகத் தொட்டு (செம்மையாய் நிரூபணம் செய்து), எண்ணில் - நினைத்தால், ஆங்கு - அப்போது, என்றன் தன்னை, பதவிய - மிருதுவான (காதுக்கு இனியவைகளான), இன் - (அர்த்தத்தினால்) இனியவைகளான, கவி பாடிய - பாட்டுக்களைப் பாடின, அப்பனுக்கு - உபகாரம் செய்தவனுக்கு, இங்கும் - இந்த உலகத்திலும், அங்கும் - அந்த உலகத்திலும் (வைகுந்தத்திலும்), செய்வது - பதில் உபகாரமாகச் செய்யத் தகுந்தது, ஏதும் ஒன்றும் இல்லை.

(கருத்து) எம்பெருமான் என்னைக்கொண்டு சொற்களாலும் அர்த்தங்களாலும் இனியவைகளான பாட்டுக்களைத் தன்னைப் பற்றி பாடுகிற உபகாரத்துக்கு என்ன பதில் உபகாரம் செய்யலாம் என்று யோசித்து என் ஆத்மாவை அவனுக்குக் கொடுக்கலாம் என்று எண்ணினேன். இதை நன்றாக விசாரித்துப் பார்க்கும்போது அதுவும் முன்னமேயே அவனுடைய தாக ஆகியிருக்கிறது. ஏதாவது உபகாரம் செய்து தீர்க்கலா மென்று நினைத்தால் பதில் உபகாரமாகச் செய்யத்தகுந்தது எனக்கு ஒன்றுமில்லை. இங்கேயிருக்கும்போது ஜ்ஞானத்தின் குறைவினால் ஒன்றை என்னதாக நினைத்து அதை அவனுக்குக் கொடுக்கலாம் என்னலாம். மோக்ஷம் அடைந்தபிறபாடு ஜ்ஞானக்குறைவில்லாமையால் ஒன்றும் என்னதாகவில்லை என்றும் தோன்றும். இப்படி இருவிதமாயும் பதில் உபகாரம் செய்ய முடியாத எனக்கு இந்தப் பெரிய உபகாரத்தைச் செய்திருக்கிறானே.

(இ - ம்) பதவிய - குறிப்புப் பெயரெச்சம். பதவு - மிருதுத்தன்மை. (10)

இங்குமங் குந்திரு மாலன்றி யின்மைகண்டு
அங்ஙனே வண்குரு கூர்ச்சட கோபன்
இங்ஙனே சொன்னவோ ராயிரத் திப்பத்தும்
எங்ஙனே சொல்லிலு மின்பம் பயக்குமே. (கக)

(ப - ரை) திருமால் அன்றி - பிராட்டியின் கணவனான எம்பெருமானல்லாமல், இங்கும் - உபாயம் செய்கிற இடத்திலும், அங்கும் - அதன் பலனை அநுபவிக்கிற அந்த இடத்திலும், இன்மை - (வேறு ரக்ஷகன்) இல்லாமையை, கண்டு - நினைத்து, அங்ஙனே - அப்படியேயிருக்குமவரான, வண் குருகூர் சடகோபன், இங்ஙனே சொன்ன - இப்படிச் சொன்ன, ஓர் ஆயிரத்துள், இ பத்தும் - இந்தப் பத்துப் பாட்டுக்களும், எங்ஙனே சொல்லினும் - எப்படிச் சொன்னாலும், இன்பம் - (மோக்ஷ) ஆநந்தத்தை, பயக்கும் - கொடுக்கும்.

(கருத்து) பிராட்டியோடுகூடிய எம்பெருமானே தன்னை ஒருவன் உபாயமாகப் பற்றும்போதும் அதன் பலனை அடையும் போதும் ரக்ஷிக்கிறான். வேறு ஒருவனாலும் இது முடியாது என்கிற அர்த்தத்தை அறிந்து அதை ஒருபோதும் மறக்காத ஆழ்வார் அருளிச்செய்த இந்தப் பத்துப் பாட்டுக்களையும் ஒருவன் பக்தியுடனோ அல்லது பக்தியில்லாமலோ படித்தாலும் அவைகள் அவனை முக்தனாக்கி ஆநந்தத்தைக் கொடுக்கும். ஆழ்வாருடைய பாட்டுக்களை இவர்கள் கற்றவர்களென்று நினைத்து எம்பெருமான் அவர்களைக் கடாக்ஷிப்பன்.

குறிப்பு :—(1) 'அங்ஙனே' என்பதற்கு, நாம் ஆசாரியர்களிடம் உபதேசம் பெறும்போது நன்றாயிருந்து, அவர்களை விட்டுப் பிரிந்தபோது வேறாக ஆய்விடுகிறோம். ஆழ்வார் அப்படி இல்லை. தெரிந்ததை ஒருபோதும் மறக்கிறதில்லை என்பது கருத்து.

(2) 'இங்ஙனே' என்பதற்கு, தம்மைக்கொண்டு எம்பெருமான் பாட்டுக்களைப் பாடுவித்தான்; இந்த உபகாரத்துக்குப் பதில் உபகாரம் கிடையாது என்று சொன்னபடி என்பது பொருள். (11)

ஸ்வாமித்வாஶ்சர்யபா⁴வாத³வித⁴கரணதயா வக்த்ருவாக்³ப்³ரும்ஹண
த்வாது³ஜ்ஜீவாதுகத்வாத³வஹிதவசநாஶக்தி வைகுண்டே²ஶா
த் । ஶமிதஸ்வாஶ்ரிதாக⁴த்வ சக்ராயுத⁴ஶ்ரியஸ்ஸஹசரத்வாத் வி
தரித்ருத்வாத் ஸ்வஸ்வாதேஶ்ச விஷ்ணு ப்ரத்யக்ஷஶக்திவிஷயே
ஸ்வாந்து யாந்த்ருக்ருதஜ்ஞாயத: ॥ ॥௮௯॥

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன்னைச் சேர்ந்தவர்களைப் பதில் உபகாரம் செய்ய முடியாதபடித் தன்னைப்பற்றி ஸ்தோத்ரம் பண்ணுவதில் ஏவுகிறான் என்று பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) ஸ்வாமியாயிருப்பது ; (2) ஆச்சரியமாயிருப்பது ; (3) கருணையினால் வாக்குக்கு ஸ்தோத்ரம் பண்ணும் சக்தியைக் கொடுப்பது ; (4) பாபியானவர்களையும் உஜ்ஜீவிக்கும்படி செய்வது ; (5) பாடத் தகாதவர்களையும் பாடும்படி செய்வதாகிய சேராதவைகளைச் சேர்க்கும் சக்தி ; (6) வைகுந்தத்துக்கு ஸ்வாமியாயிருப்பது ; (7) ஆச்ரிதர்களின் பாபத்தைப் போக்கி அவர்களைச் சுத்தனாக்கும் தன்மை ; (8) திருவாழியை ஆயுதமாக வைத்துக்கொண்டிருப்பது ; (9) பிராட்டியின் கணவனாயிருப்பது ; (10) ஸ்வாமியாயிருந்து பெரிய உபகாரத்தைச் செய்வது. (89)

---

# பத்தாம் திருவாய்மொழி.

---

அவ — ஆழ்வாரைக்கொண்டு எம்பெருமான் தன்னைப் பாடுதற்காக வைகுந்தத்திலிருந்து பூமிக்கு வந்து எழுந்தருளியிருந்து தம்முடைய பாட்டுக்களைக் கேட்டு ஸந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறான். அசோகவனத்தில் எழுந்தருளியிருந்த ஸீதை சக்ரவர்த்தித் திருமகனைப்பற்றி ஹநுமான் சொல்லக் கேட்டு ஸந்தோஷப்பட்டதுபோல், எம்பெருமானும் ஆழ்வார் பாட்டுக்களைக் கேட்டு ஸந்தோஷப்பட்டான். அப்படி அவன் எழுந்தருளியிருக்கிற திருவாறன்விளைக்கு எப்போது நாம் போவோம் என்று ஆசைப்படுகிறார் :—

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.)

இன்பம் பயக்க வெழின்மலர் மாதரும் தானுமிவ் வேழுலகை
இன்பம் பயக்க வினிதுடன் வீற்றிருந் தாள்கின்ற வெங்கள்பிரான்
அன்புற் றமர்ந்துறை கின்ற வணிபொழில் சூழ்திரு வாறன்விளை
அன்புற் றமர்ந்து வலஞ்செய்து கைதொழு நாள்களு மாகுங்கொலோ.

(ப - ரை) இன்பம் பயக்க-ஆநந்தமுண்டாகும்படி, இனிது-இனிதாக, எழில் - (மிகுந்த) அழகையுடைய, மலர் மாதரும் - தாமரைப்பூவில் வஸிக்கிற பிராட்டியும், தானும், உடன் - கூடி, வீற்று - (வீறு) பெருமை, இருந்து - தோன்றும்படியிருந்து, இ ஏழு உலகை-இந்த ஏழு உலகங்களை, இன்பம் பயக்க - ஆநந்தத்தைக் கொடுக்கும்படி, ஆள்கின்ற, எங்கள் பிரான், அன்பு உற்று-ஸ்நேஹத்தைத் திடமாகப் பண்ணி, அமர்ந்து - நிலையாய், உறைகின்ற - வஸிக்கிற, அணி பொழில் சூழ் - அலங்காரமான தோட்டங்களாலே சூழப்பட்ட, திருவாறன்விளை - திருவாறன்விளை என்கிற திவ்யதேசத்தை, அன்பு உற்று-ஸ்நேஹத்தைப்பண்ணி, அமர்ந்து - (வேறு பிரயோஜநத்தைத் தேடாமல்) நிலையாயிருந்து, வலம் செய்து - பிரதக்ஷிணம் செய்து, கைதொழும் - அஞ்ஜலி செய்யும், நாள்களும், ஆகும் கொல் - உண்டாகுமோ ?

(கருத்து) மிகுந்த அழகையுடைய தாமரைப்பூவில் வஸிக்கிற பிராட்டிக்கும் தனக்குமிருக்கும் சேர்த்தியாலே இருவருக்

கும் ஆநந்தமுண்டாகும்படியாகவும் நித்தியஸூரிகளுக்கு இனிய தாயிருக்கும்படியாகவும் கூடியிருந்து, தாங்கள் எல்லாருக்கும் சேஷி என்று தோன்றும்படி இருந்து, ஏழு உலகங்களையும் அவைகளுக்கு ஆநந்தமுண்டாகும்படி ஆளுகிறான். அவன் தன்னைப்பற்றி என்னைக் கவிபாடும்படி செய்து, என்னுடைய பாட்டுக்களைக் கேட்பதற்குத் தகுந்த இடம் கிடைத்ததே யென்று பிரீதிபண்ணி, இந்த இடத்தில் பாட்டுக்களைக் கேட்பதையே பிரயோஜநமாக எண்ணி, அவதாரங்களில்போலே வருவதும் போவதுமில்லாமல், அலங்காரமான தோட்டங்களால் சூழப்பட்ட திருவாறன்விளையென்கிற திவ்யதேசத்தில் நித்யவாஸம் பண்ணுகிறான். அந்த ஊரில் அவன் இப்படி எழுந்தருளியிருக்கிறான் என்று பிரீதி பண்ணி அந்த தேசத்தில் வசிப்பதையே பிரயோஜநமாக நினைத்து அதைப் பிரதக்ஷிணம் செய்து அஞ்ஜலி பண்ணும் காலம் உண்டாகுமோ ?

குறிப்பு :—(1) 'ஏழுலகை' என்கிறவிடத்தில் உலகம் என்பது பிரமாணங்களாலே காட்டப்பட்ட வஸ்துக்கள். அவைகள் ஏழு விதமாயிருக்கின்றன. (1) ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்கிற மூன்று குணங்களையுடைய பிரகிருதி ; (2) காலம் ; (3) ஸத்துவம் என்கிற ஒரே குணமுள்ளதாய்ப் பிரகாசிக்கிற நித்யவிபூதி (வைகுந்தலோகம்) ; (4) ஆத்மாக்களுக்குக் குணமான ஜ்ஞாநம் என்கிற வஸ்து ; (5) கர்மத்துக்கு உட்பட்டவர்கள் ; (6) இந்தக் கட்டு நீங்கினவர்கள் ; (7) ஒரு போதும் கட்டுப்படாதவர்கள். இவைகளில் முதல் நான்கும் அசேதநங்கள்; மற்ற மூன்றும் சேதநர்கள்.

(2) உலகங்களுக்குத் தாயும் தகப்பனுமான பிராட்டியும் எம்பெருமானும் அவைகளை ஆளுகையால் அவைகளுக்கு ஆநந்தமுண்டாகிறதென்பது கருத்து.

(3) 'எங்கள் பிரான்' என்பதற்கு, தன்னுடைய செல்வத்தைக் காட்டி, தம்மைப் பாடுவித்து, தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும் உபகாரம் செய்தவன் என்பது கருத்து.

(4) ஸ்ரீ வால்மீகி என்கிற ருஷி எழுதிச் சொல்லிக் கொடுத்த ராமாயணத்தைக் குசனும் லவனும் பாட, சக்ரவர்த்தித் திருமகன் தம்பிமார்களுடன் பெரிய ஸபையிலிருந்து

கேட்டான். அதுபோல எம்பெருமான் திருவாறன்விளையில் ஆதிசேஷன்மேல் நித்தியஸூரிகள் சூழ பிராட்டியும் தானுமாக இருந்து ஆழ்வார் பாட்டைக் கேட்டருளினன். இப்படிப்பட்ட பெருமையையுடையது அந்தத் திவ்யதேசம்.

(5) 'நாள்களும்' என்கிறவிடத்தில் உம்மையால் அந்த நாள் கிடைப்பது அரிது என்று ஆழ்வார் பயப்படுகிறார் என்பது காட்டப்படுகிறது. (1)

---

ஆகுங்கொ லையமொன் றின்றி யகலிட முற்றவு மீரடியே
ஆகும் பரிசு நிமிர்ந்த திருக்குற ளப்ப னமர்ந்துறையும்
மாகந் திகழ்கொடி மாடங்கள் நீடு மதிட்டிரு வாறன்விளை
மாகந்த நீர்கொண்டு தூவிவலஞ் செய்து கைதொழக் கூடுங்கொலோ.

(ப - ரை) ஆகும் கொல் ஐயம் ஒன்று இன்றி - (இந்த வாமநனாலே உலகங்கள் அளக்கப்படுமோ என்று தேவர்களுக்கு) ஸந்தேஹம் கொஞ்சமுமில்லாமலிருக்கும்படி, அகல் இடம் - விசாலமான பூமி, முற்றவும், ஈர் அடியே ஆகும் பரிசு - இரண்டு அடிகளே ஆகும்படியாக, நிமிர்ந்த - (திரிவிக்கிரமனாய்) வளர்ந்த, திரு குறள் அப்பன் - ஸ்ரீவாமநனான உபகாரகன், அமர்ந்து - நிலையாய் (வைகுந்தத்தைக் காட்டிலும் அதிகப் பிரீதியுடன்), இருந்து, உறையும் - வஸிக்கிற, மாகம் - பெரிய ஆகாசத்தில், திகழ் - விளங்கும், கொடி - கொடிகளையுடைய, மாடங்கள் - வீடுகளையும், நீடு மதிள் - உயர்ந்த மதிள்களையுமுடைய, திருவாறன் விளை - திருவாறன்விளை என்கிற ஊரை, மா கந்தம் நீர் கொண்டு - (சந்தநம் கற்பூரம் முதலான) உயர்ந்த வஸ்துக்களால் வாஸனையுள்ள தீர்த்தங்களைக்கொண்டு, தூவி - தெளித்து, வலம் செய்து - பிரதக்ஷிணம் செய்து, கை தொழ கூடும் கொல் ஓ - அஞ்ஜலி பண்ணக்கூடுமோ?

(கருத்து) தேவர்களுக்காக வாமநனாய் அவதாரம் செய்து மஹாபலியிடம் மூன்று அடிகளை யாசிக்கும்போது, இந்த சிறிய உருவமுள்ள வாமனனால் பூமியும் ஆகாசமும் அளக்கமுடியுமோ என்று அவர்கள் கொஞ்சமும் ஸந்தேஹப்படாதபடி இரண்டு திருவடிகளாலே அவைகளை அளந்த பிரான், வைகுந்தத்தைக்

*காட்டினும் அதிக ப்ரீதிபண்ணி, நித்தியவாஸம் பண்ணுகிறதும் திருவாய்மொழியைக் கேட்பதாகிய பெரிய உத்ஸவத்துக்காகக் கட்டியிருக்கிற த்வஜங்கள் ஆகாசத்தில் விளங்குகிற வீடுகளையும் நீண்ட மதில்களையும் உடையதுமான திருவாறன்விளை என்கிற ஊரை நல்ல வாஸனையுள்ள குளிர்ந்த தீர்த்தத்தைத் தெளித்து பிரதக்ஷிணம்செய்து அஞ்ஜலி பண்ணக்கூடுமோ?* (2)

---

கூடுங்கோல் வைகலுங் கோவிந் தனைமது சூதனைக் கோளரியை
யாடும் பறவை மிசைக்கண்டு கைதொழு தன்றி யவனுறையும்
பாடும் பெரும்புகழ் நான்மறை வேள்வியைந் தாறங்கம்
[பன்னினர்வாழ்
நீடு பொழிற்றிரு வாறன்விளை தொழவாய்க் குங்கொல் நிச்சலுமே.

*(ப - ரை) வைகல் - எப்போதும், கூடும் கொல் - (திருவாறன்விளைக்குப் போவது) கூடுமோ? கோவிந்தனை - பசுக்களை ரக்ஷித்தவனை, மதுசூதனை - மதுவென்ற அஸுரனைக் கொன்றவனை, கோள் அரியை - பராக்கிரமமுள்ள ஸிம்மம்போலிருக்கிறவனை, ஆடும் - கூத்தாடுகிற, பறவை மிசை - பக்ஷியான கருடன் மேல், கண்டு - பார்த்து, கைதொழுது அன்றி - அஞ்ஜலி பண்ணுவதல்லாமல், அவன் உறையும் - அவன் நித்தியவாஸம் செய்யும், பாடும் - உரத்த குரலோடு பாடப்படுபவைகளும், பெரும் புகழ்- அவனுடைய நல்ல குணங்களைக் காட்டுகிறவைகளுமான, நான் மறை - நான்கு வேதங்களையும், ஐந்து வேள்வி - ஐந்து யஜ்ஞங்களையும், ஆறு அங்கம் - (வேதங்களின்) ஆறு அங்கங்களையும், பன்னினர் - நன்றாக நிரூபணம் செய்கிறவர்கள், வாழ் - வாழுகிற, நீடு பொழில் - விசாலமான தோட்டங்களையுடைய, திருவாறன் விளை - திருவாறன்விளையை, நிச்சலும் - தினந்தோறும், தொழ- ஸேவிக்க, வாய்க்கும்கொல் - கிடைக்குமோ?*

*(கருத்து) கிருஷ்ணனாய் அவதாரம் செய்து பசுக்களை ரக்ஷித்து வாத்ஸல்யம் ஸௌசீல்யம் என்கிற குணங்களைக் காட்டினவனும், மது என்கிற அஸுரனைக் கொன்று ஆச்ரிதர்களின் விரோதிகளை நாசம் பண்ணுவதே தனக்கு ஸ்வபாவம் என்று காட்டினவனும், பராக்கிரமமுள்ள ஸிம்மத்தைப்போல்*

விரோதிகளால் கிட்டமுடியாதவனுமான எம்பெருமான், "எம்பெருமானுக்கு நான் வாஹநமாக இருக்கும் பாக்கியத்தை அடைந்தேனே" என்கிற ஸந்தோஷத்தால் நர்த்தநம் பண்ணுவதுபோல் பறக்கிற கருடன்மேல் ஏறிக்கொண்டு என்னைக் கடாக்ஷிப்பதற்காக இங்கே வரும்போது ஸேவிப்பது போதாது. அவன் தனக்கும் பிராப்யமாய் எண்ணிக்கொண்டு நித்யவாஸம் செய்கிற இடமும், அவனுடைய உயர்ந்த குணங்களைச் சொல்லுகிற நான்கு வேதங்களை உரத்த குரலால் சொல்லிக்கொண்டும், தினந்தோறும் செய்யவேண்டிய ஐந்து மஹா யக்ஞங்களை செய்து கொண்டும், வேதங்களின் ஆறு அங்கங்களையும் நன்றாக நிரூபணம் செய்துகொண்டுமிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழுகிற இடமும், விசாலமான தோட்டங்களாலே சூழப்பட்டதும் ஆன திருவாறன்விளையை எப்போதும் ஸேவிக்கவேண்டும். இஃது எனக்குக் கிடைக்குமோ?

(இ - ம்) தொழுது - தொழிற்பெயர். தொழுதல் என்று பொருள். (3)

---

வாய்க்குங்கொ லிச்சலு மெப்பொழு தும்மனத் தீங்கு
[நினைக்கப்பெற
வாய்க்கும் கரும்பும் பெருஞ்செந் நெலும்வயல் சூழ்திரு வாறன்விளை
வாய்க்கும் பெரும்புகழ் மூவுல கீசன் வடமது ரைப்பிறந்த
வாய்க்கு மணிநிறக் கண்ண பிரான்றன் மலரடிப் போதுகளே. (ச)

(ப - ரை) வடமதுரை - வடதேசத்திலிருக்கும் மதுரையில், பிறந்த - அவதாரம் செய்தவனும், வாய்க்கும் - (அதனால்) உண்டான, பெரும் புகழ் - அளவில்லாத நல்ல குணங்களையுடையவனும், மூ உலகு - மூன்று உலகங்களுக்கு, ஈசன் - ஈசுவரனும், வாய்க்கும் - உண்டாயிருக்கிற, அணி நிறம் - அலங்காரமான காந்தியையுடையவனுமான, கண்ணபிரான் தன் - கண்ணபிரானுடைய, மலர் - மலர்ந்திருக்கிற, அடி போதுகள் - திருவடித் தாமரைகளை, ஈங்கும் (இங்கும்)-இந்த உலகத்திலும், வாய்க்கும் - பலவிதமாய்ப் பலனைக் கொடுக்கிற, கரும்பும், பெரும் செந்நெலும் - (கரும்புக்கும் நிழலைக் கொடுக்கும்படி) ஓங்கி வளர்கிற

சிவந்த கதிர்களையுடைய நெற்பயிர்களுமுள்ள, வயல்சூழ் - வயல்களாலே சூழப்பட்ட, திருவாறன்விளை - திருவாறன்விளையிலே, நிச்சலும் - ஒவ்வொருநாளும், எப்பொழுதும் - அதிலும் ஒவ்வொரு க்ஷணமும், மனது - மனதாலே, நினைக்கப்பெற - நினைப்பதாகிய லாபமானது, வாய்க்கும் கொல் - கிடைக்குமோ ?

(கருத்து) வடமதுரையில் அவதாரம் செய்ததால் மிகவும் பிரகாசிக்கும் நல்ல ஆத்மகுணங்களையுடையவனும், மூன்றுவிதமான சேதநர்களையும் அசேதநங்களையும் ஆளுகிறவனும், அவதாரத்தாலே பிரகாசிக்கிற அலங்காரமான திருமேனியின் காந்தியையுடையவனுமான கண்ணபிரானுடைய மலர்ந்த திருவடித்தாமரைகளை ஒவ்வொருநாளும் அதிலும் ஒவ்வொரு க்ஷணமும் மனதால் நினைக்கக் கிடைக்குமோ ? இதுவே நான் தேடும் லாபம். கரும்பும் அதற்கு நிழலைக் கொடுக்கும்படி ஓங்கி வளர்கிற செந்நெற்பயிருமுள்ள வயல்களால் சூழப்பட்ட திருவாறன்விளையில் இப்படி நினைப்பதும் கிடைக்குமோ ?

(இ - ம்) ஈங்கு - இங்கு : நீட்டல் விகாரம். (4)

---

அவ—திருவாறன்விளை என்கிற திவ்யதேசத்தின் பெருமையைப் பாடுங்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உபதேசிக்கிறார் :-

மலரடிப் போதுகளென் னெஞ்சத் தெப்பொழுது மிருத்தி வணங்கப்
பலரடி யார்முன் பருளிய பாம்பணை யப்பன மர்ந்துறையும்
மலரின் மணிநெடு மாடங்க ணீடு மதிட்டிரு வாறன்விளை
உலக மலிபுகழ் பாடநம் மேல்வினை யொன்றுநில் லாகெடுமே. (ரு)

(ப - ரை) மலர் அடி போது - மலர்ந்த தன் திருவடித் தாமரைகளை, என் நெஞ்சத்து - என் மனதில், எப்பொழுதும், இருத்தி - நிலையாயிருக்கும்படிசெய்து, வணங்க - நான் ஸேவிக்கும்படி, பலர் அடியார் முன்பு-தாஸர்களான பலருக்குமுன்னே, அருளிய - கிருபைசெய்த, பாம்பு அணை - நாகசயனனுனை, அப்பன், அமர்ந்து - நிலையாயிருந்து, உறையும் - வஸிக்கும், மலர் இல் - புஷ்பங்களையுடைய, (புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட),

மணி - ரத்நங்களிழைத்த, நீடு - உயர்ந்த, மாடங்கள் - வீடுகளையும், நீடு மதிள் - உயர்ந்த மதிள்களையுமுடைய, திருவாறன் விளை-திருவாறன்விளையினுடைய, உலகம் மலி - உலகத்திலே மலிந்த, (அதிகமான), புகழ் - கீர்த்தியை, பாட - பாடினால், நம் மேல் வினை - நம்மிடத்திலிருக்கும் கர்மங்கள், ஒன்றும் நில்லா-கொஞ்சமுமிருக்கமாட்டாமல், கெடும் - நாசமடையும்.

(கருத்து) தன்னுடைய மலர்ந்த திருவடித்தாமரைகளை என் மனதில் நிலையாக இருக்கும்படி செய்து தன்னைக் கவி பாடி அநுபவிக்கும்படி, ஸ்ரீ வால்மீகி முதலான அடியவர்கள் இருக்க என்னிடத்தில் விசேஷமாக கிருபை செய்திருக்கிறான் நாகசயநனான பரமகாருணிகன். அவன் வேறு இடம்போக எண்ணாமல் நித்யவாஸம் செய்கிற இடமாயும், புஷ்பங்களாலும் ரத்நங்களாலும் அலங்காரம் பண்ணப்பட்ட உயர்ந்த வீடுகளையும் உயர்ந்த மதிள்களையுமுடையதாயுமிருக்கும் திருவாறன்விளையினுடைய மிகுந்த கீர்த்தியைப்பாடினால், நம்மிடத்திலிருக்கும் கர்மங்கள் கொஞ்சமுமில்லாமல் கெடும்.

குறிப்பு :—சக்ரவர்த்தித் திருமகன், மற்ற வானரவீரர்கள் இருக்க ஹநுமானிடத்தில் அதிக வெகுமானம் பண்ணினது போல் வால்மீகி முதலானவர்களிருக்க, தம்மிடத்தில் எம்பெருமான் விசேஷமாய்க் கிருபை செய்தான் என்பது ஆழ்வார் திருவுள்ளம். இது 'அருளிய' என்பதின் கருத்து.

(இ - ம்) நில்லா - நில்லாது : ஈறுகெட்ட வினையெச்சம். (5)

---

ஒன்றுநில் லாகெடும் முற்றவுந் தீவினை யுள்ளித் தொழுமின்
[ தொண்டீர்
அன்றங்க மர்வென் றுருப்பிணி நங்கை யணிநெடுந்
[ தோள்புணர்ந்தான்
என்றுமெப் போது மென்னெஞ்சந் துதிப்பவுள் ளேயிருக்
[ கின்றபிரான்
நின்ற வணிதிரு வாறன்விளை யென்னுநீ ணகரமதுவே. (சு)

(ப - ரை) அன்று - அந்தக் காலத்தில், அங்கு, அமர் - சண்டையில், வென்று - (அவர்களை) ஜயித்து, நங்கை உருப்பிணி- நல்ல குணங்கள் நிறைந்த ருக்குமணியினுடைய, அணி நெடும் தோள்-அலங்காரமுள்ள பருத்த (மிகவுமினியதான) தோள்களை, புணர்ந்தான் - சேர்ந்தவனாய், என்றும் எப்போதும் - ஒவ்வொரு நாளும் அதிலும் ஒவ்வொரு க்ஷணத்திலும், என் நெஞ்சம் - என் மனது, துதிப்ப - ஸ்தோத்ரம்பண்ணும்படி, உள்ளே - என் மனதுக்குள்ளே, இருக்கின்ற, பிரான் - உபகாரன், நின்ற - (எல்லாரும் கண்களால் பார்க்கும்படி) இருக்கிற, அணி - (உலகத்துக்கு) அலங்காரமான, திருவாறன்விளை என்னும் - திருவாறன்விளை என்கிற, நீள் நகரம் அது - அந்தப் பெரிய பட்டணத்தை, தொண்டீர் - அவனிடத்தில் ஆசையுள்ள நீங்கள், உள்ளி - நினைத்து (மனதால் அநுபவித்து), தொழுமின் - சேவியுங்கள், தீவினை - (உங்களுடைய) க்ரூர கர்மங்கள், ஒன்றும் நில்லா - கொஞ்சமும் இருக்கமாட்டா, முற்றவும் கெடும் - முழுவதும் கெடும்.

(கருத்து) ருக்மணியைச் சிசுபாலனுக்குக் கலியாணம் செய்விக்க ஜராஸந்தன் முதலானவர்கள் ஸந்நத்தர்களாயிருக்கும் போது, அங்கே சண்டையில் அவர்களை ஜயித்து, அவளைக் கல்யாணம் செய்துகொண்ட கண்ணன், அந்த லீலையையும் அந்த அழகையும் ஒவ்வொருநாளும் அதிலும் ஒவ்வொரு க்ஷணத்திலும் நான் கொண்டாடும்படி அவளைக் கல்யாணம் பண்ணிக்கொண்ட ஸமயத்தில் இருந்த திருக்கோலத்துடன் என் மனதிலிருக்கிறான். அவனே எல்லாரும் கண்களாலே பார்க்கும்படி உலகத்துக்கு அலங்காரமான திருவாறன்விளை என்கிற பெரிய பட்டணத்தில் எழுந்தருளியிருக்கிறான். அவனிடத்தில் ஆசையுள்ளவர்களே அந்தப் பட்டணத்தை மனதாலே அநுபவியுங்கள், இப்படிச் செய்தால் உங்களுடைய கெட்ட கர்மங்கள் கொஞ்சமுமிருக்கமாட்டா. எல்லாம் போய்விடும்.

(இ - ம்) புணர்ந்தான் - வினையால் அணையும் பெயர். (6)

---

நீண கரமது வேமலர்ச் சோலைகள் சூழ்திரு வாறன்விளை
நீண கரத்துறை கின்றபிரா னெடுமால் கண்ணன்
[ விண்ணவர்கோன்
வாண புரம்புக்கு முக்கட்பிரானைத் தொலையவெம் போர்கள்செய்து
வாணனை யாயிரந் தோள்துணித்தான் சரணன்றி மற்றொன்றிலமே.

*(ப - ரை) அதுவே - அந்தத் திருவாறன்விளையே, நீள் - நீண்ட (வெகுகாலமிருந்து கைங்கரியம் பண்ணுவதற்காக நாம் அடையவேண்டிய), நகரம், மலர் சோலைகள் - புஷ்பங்கள் நிறைந்த சோலைகளால், சூழ் - சூழப்பட்ட, திருவாறன்விளை நீள் நகரத்து - திருவாறன்விளை என்கிற பெரிய பட்டணத்தில், உறைகின்ற - நித்தியவாஸம் செய்கிற, பிரான் - உபகாரகனும், விண்ணவர் கோன் - நித்தியஸூரிகளின் தலைவனும், நெடுமால் - ஆச்ரிதர்களிடத்தில் மிகுந்த ஆசையுள்ளவனும், கண்ணன் - கிருஷ்ணனாய் அவதாரம் செய்தவனும், வாண புரம் புக்கு - பாணாஸுரனுடைய பட்டணத்துக்குள்ளே புகுந்து, முக்கண் பிரானை - மூன்று கண்களையுடைய (பாணாஸுரனுக்கு) உபகாரம் செய்யவந்த ருத்திரனை, தொலைய - (பாணாஸுரனை ரக்ஷித்தது போதும் என்று எண்ணி) ஒழியும்படி, வெம் போர்கள் - கொடுமையான சண்டைகளை, செய்து, வாணனை - வாணாஸுர(னுடைய)னை, ஆயிரம் தோள்களை துணித்தான் - அறுத்தவனுமான எம்பெருமானே, சரண் - (அந்த ஊரை நாம் அடைவதற்கு) உபாயம், அன்றி - (அவனை) அல்லாமல், மற்று ஒன்று இலம் - வேறு உபாயமில்லாதவர்கள் நாம்.*

*(கருத்து) புஷ்பங்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட திருவாறன்விளையே நாம் வெகுகாலமிருந்து கைங்கரியம் பண்ணுவதற்காக அடையவேண்டிய நகரம். என்னைத் தன்னைப் பாடும்படி செய்து அதில் நித்தியவாஸம் செய்கிற எம்பெருமானே அதை நாம் அடைவதற்கு உபாயம். அவனே நித்யஸூரிகளின் தலைவனாயிருந்தும், ஆச்ரிதர்களிடத்திலுள்ள மிகுந்த ஆசையாலே கண்ணனாய் அவதாரம் செய்து ஆச்ரித விரோதிகளை நாசம் செய்வதற்காக வாணன் என்கிற அஸுரனுடைய நகரத்தில் புகுந்து, அவனை ரக்ஷிக்கவந்த மூன்று கண்களையுடைய ருத்திரன் "இவனை ரக்ஷித்தது போதும் போதும்" என்று*

ஒழிந்துபோகும்படி கொடுமையான சண்டைகளைச் செய்து வாணனுடைய ஆயிரம் தோள்களைத் துணித்தான். ஆகையால், பிராப்யமான திருவாறன்விளையை அடைவதற்கு அவனைத்தவிர நமக்கு வேறு உபாயமில்லை.

குறிப்பு :—ருத்திரனுக்கு பிரபலமான சக்தியிருக்கிறது என்று காட்டுவதற்காக 'முக்கண்' என்று பாட்டில் சொல்லியிருக்கிறது. (7)

---

அவ—அவனை நாம் சரணம் புகுந்தால் அவன் நாம் வேண்டினதைச் செய்வனே என்பதற்குப் பதில் அருளிச்செய்கிறார் :—

அன்றிமற் றொன்றிலம் நின்சரணேயென் றகலிரும்
[ பொய்கையின்வாய்
நின்றுதன் னீள்கழ லேத்திய வானையின் னெஞ்சிடர் தீர்த்தபிரான்
சென்றங் கினிதுறை கின்ற செழும்பொழில் சூழ்திரு வாறன்விளை
ஒன்றி வலஞ்செய்ய வொன்றுமோ தீவினை யுள்ளத்தின் சார்
[ வல்லவே. (அ)

(ப - ரை) அகல் - விசாலமான, இரும் - பெரிதான (ஆழமான), பொய்கையின்வாய் - குளத்தில், நின்று - (முதலையினால் பிடிக்கப்பட்டு வருத்தப்பட்டுக்கொண்டு) இருந்து, நின் சரணை அன்றி - உன் திருவடிகள் அல்லாமல், மற்று ஒன்று இலம் என்று-வேறு ஓர் உபாயம் உடையோம் அல்லோம் என்று, தன் - தன்னுடைய, நீள் கழல்-நீண்ட திருவடிகளை, ஏத்திய - ஸ்தோத்ரம் பண்ணின, ஆனையின்-ஸ்ரீகஜேந்திரனுடைய, நெஞ்சு இடர் - மனதின் துக்கத்தை, தீர்த்த பிரான், சென்று - மிகுந்த பிரீதியுடன் வந்து, அங்கு - அந்த இடத்தில், இனிது - போக்யமாக, உறைகின்ற - வஸிக்கிற இடமான, செழும் பொழில் சூழ் - அழகான தோட்டங்களாலே சூழப்பட்ட, திருவாறன்விளை - திருவாறன்விளையை, ஒன்றி - சேர்ந்து, வலம் செய்ய - பிரதக்ஷிணம் பண்ணினால், தீவினை - கெட்ட கர்மங்கள் ஒன்றும், [ ஓ ! ஜனங்களே ! ] உள்ளத்தின் சார்வு அல்ல - மனதில் இருப்பவைகளல்ல.

(கருத்து) முற்காலத்தில் விசாலமாய் ஆழமான ஒரு குளத்தில் முதலையால் பிடிக்கப்பட்டு வருத்தப்பட்டுக்கொண்டிருந்த கஜேந்திரன், "உன்னுடைய திருவடிகளைத் தவிர வேறு ஓர் உபாயம் எனக்கில்லை" என்று ஆச்ரிதர் இருக்குமிடத்துக்குப் போகும் ஸ்வபாவமுள்ள திருவடிகளை ஸ்தோத்ரம் பண்ணும் போது, "நான் குளத்தில் பறித்த தாமரைப்பூவை எம்பெருமான் திருவடிகளில் ஸமர்ப்பிக்க முடியவில்லையே" என்று அந்த யானையின் மனதிலுண்டாயிருந்த துக்கத்தைத் தீர்த்து அவன் உபகாரம் செய்யவில்லையா? ஆகையால், அவனைச் சரணம் புகுந்தால், நாம் வேண்டியதைக் கட்டாயம் செய்வன். அவனே அழகான தோட்டங்களால் சூழப்பட்ட திருவாறன்விளையில் மிகுந்த பிரீதியுடன் வந்து அங்கு வஸிப்பதையே ஸுகமாக எண்ணி எழுந்தருளியிருக்கிறான். அந்த ஊரைக் கிட்டி பிரதக்ஷிணம் செய்தால், ஓ ஜநங்களே! நம்முடைய கெட்ட கர்மங்கள் ஒன்றும் நம்முடைய மனதிலிருப்பவைகளல்ல. ஆதலால், அங்கே போய் அதை அநுபவியுங்கள். (8)

---

அவ—வைகுந்தமன்றோ ப்ராப்யம். திருவாறன்விளை எப்படி ப்ராப்யமாகக்கூடும்? என்றால், அதற்குப் பதில் சொல்லுகிறார் :—

தீவினையுள்ளத்தின் சார்வல்ல வாகித் தெளிவிசும் பேறலுற்றால்
நாவினுள்ளு முள்ளத் துள்ளு மமைந்த தொழிலினுள்ளும்
[நவின்று
யாவரும் வந்து வணங்கும் பொழிற்றிரு வாறன் விளையதனை
மேவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொல் லென்னுமென்
[சிந்தனையே. (௯)

(ப - ரை) தீவினை - க்ரூரபாபங்கள், உள்ளத்தின் சார்வு - மனதில் சேர்ந்திருப்பவைகள், அல்ல ஆகி - அல்லாதவைகளாய், தெளி விசும்பு - தெளிவைப் பரிபூர்ணாநுபவத்தைக் கொடுக்கும், ஆகாசத்தினுடைய (வைகுந்தத்தினுடைய), ஏறல் - ஏறுவதை, உற்றால் - அடைந்தால், நாவின் உள்ளும் - நாக்கானும், உள்ளத்துள்ளும் - மனதினாலும், அமைந்த - அவைகளுக்குப் பொருந்தின,

தொழிலின் உள்ளும் - உடம்பின் வேலைகளாலும், நவின்று - சொல்லி (அடிக்கடி அநுபவித்து), யாவரும் - எல்லாரும், வந்து வணங்கும், பொழில் திருவாறன்விளையதனை-தோட்டங்களாலே சூழப்பட்ட திருவாறன்விளையை, என் சிந்தனை - என்னுடைய மனோரதமானது, மேவி - ப்ரீதிபண்ணி, வலம் செய்து-பிரதக்ஷிணம்செய்து, கை தொழ - அஞ்ஜலி பண்ணி அநுபவிக்க, கூடுங்கொல்லோ - கூடுமோ; என்னும்-என்று நினைத்துக்கொண்டிருக்கும்.

(கருத்து) ஒருவன் க்ரூரமான பாபங்கள் எல்லாம் போய் பரிபூர்ணமான ப்ரம்ம அநுபவத்தைக் கொடுக்கும் வைகுந்தத்துக்கு ஏறிப்போனாலும், அவன் தோட்டங்களால் சூழப்பட்ட திருவாறன்விளையைக் கண்டால் அதற்குத் திரும்பிவந்து அந்த ஊரை வணங்கி வாக்காலும் மனதாலும் அவைகளுக்குப் பொருந்தின உடம்பின் வேலையாலும் அடிக்கடி அநுபவித்துக்கொண்டிருப்பன். இப்படி முக்தர்களும் நித்யஸூரிகளும் ஆசைப்பட்டு அநுபவிக்குமிடமாகையால் அதுவே பரம ப்ராப்யம். அங்கே போய்ப் ப்ரீதியுடன் அதைப் பிரதக்ஷிணம் செய்து, ஸேவிக்கக்கூடுமோ என்று என் மனது நினைத்துக்கொண்டிருக்கிறது.

(இ - ம்) நவின்று என்பதற்கு, நாக்கால் சொல்லி அநுபவித்து என்பது பொருள். இங்கு அநுபவித்து என்பதை மாத்திரம் சொல்லுகிறது. தெளிவிசும்பு - வினைத்தொகை; தெளி - பிறவினைப் பொருளில் வந்தது. (9)

---

அவ—திருநாடன்றே பரம ப்ராப்யம். இப்படியே பிரஸித்தியில்லையோ? உம்மை அதற்கு எம்பெருமான் கொண்டு போனால் என்ன செய்வீர் என்கிற கேள்விக்குப் பதில் சொல்லுகிறார் :—

சிந்தைமற் றொன்றின் றிறத்ததல் லாத்தன்மை தேவபி ரானறியுஞ்
சிந்தையி னாற்செய்வ தானறி யாதன மாயங்க ளொன்றுமில்லை
சிந்தையி னாற்சொல்லி னாற்செய்கை யானிலத்தேவர் குழு
[ வணங்கும்
சிந்தை மகிழ்திரு வாறன் விளையுறை தீர்த்தனுக் கற்றபின்னே.(௧0)

(ப - ரை) நிலம் தேவர் - பூமியிலுள்ள தேவர்களுடைய (பாகவதர்களுடைய), குழு - கூட்டம், சிந்தையினால் - மனதால், சொல்லினால் - வாக்கால், செய்கையினால் - உடம்பின் வேலையாலே, வணங்கும் - ஸேவிக்கப்படுவதாய், சிந்தை - (அதை அநுபவிக்கிறவர்களுடைய) மனதை, மகிழ்-மகிழ்விக்கும் (ஆநந்தத்தை அடையும்படி செய்விக்கும்), திருவாறன்விளை - திருவாறன்விளையிலே, உறை-நித்தியவாஸம் செய்கிற, தீர்த்தனுக்கு - பரிசுத்தனானவனுக்கு, (மற்றவர்களின் பாபங்களைப் போக்குகிறவனுக்கு), அற்ற பின்னே - (அவனுக்கே சேஷமென்றும், வேறு ஒருவருக்கும் சேஷமாயிருக்கத் தகுந்தவனன்று என்றும்) நான் தீர்மானம் செய்தபின்பு, என் சிந்தை - என் மனது, மற்று ஒன்றின் திறத்து அல்லா தன்மை - திருவாறன்விளையைத்தவிர வேறு ஒரு விஷயத்திலும்பிராத ஸ்வபாவத்தை, தேவபிரான் - நித்தியஸூரி நாயகன், அறியும் - அறிவன், சிந்தையினால் - என் மனதால், செய்வ - செய்யப்பட்ட, மாயங்கள் - ஒருவருக்கும் தெரியாமல் மறைக்கப்பட்ட அர்த்தங்கள், தான் அறியாதன - தான் அறியாதவைகள், ஒன்றுமில்லை.

(கருத்து) பூமியிலுள்ள பாகவத கூட்டங்கள் மனதாலும் வாக்காலும் உடம்பின் வேலையாலும் ஸேவிக்கிறதும், அநுபவிக்கிறவர்களுக்கு ஆநந்தத்தைக் கொடுப்பதுமான திருவாறன்விளையில் நித்தியவாஸம்செய்கிற தீர்த்தனுக்கு என் ஸ்வபாவம் தெரியும். நான் அவனுக்கே சேஷன்; வேறு ஒருவனுக்கும் சேஷனாயிருக்கத் தகுந்தவனன்று. திருவாறன்விளையே பிராப்யம் என்று எண்ணுவதற்கு விரோதியான என் பாபங்களைப் போக்கி அதுவே பிராப்யம் என்று எண்ணும்படி செய்துவிட்டான். இப்படி முடிந்தபின்பு, 'என் மனது அந்த ஊரைத்தவிர, வேறு விஷயத்தில் இருக்கவில்லை' என்கிற இந்த ஸ்வபாவத்தை நித்தியஸூரிநாயகன் அறிவனே. என் மனதில் இருக்கும் விஷயங்கள் வேறு ஒருவருக்கும் தெரியாதபோதிலும் அவைகளில் அவனுக்குத் தெரியாதது ஒன்றுமில்லையே. ஆகையால், அவனே என்னைத் திருவாறன்விளையிலேயே கொண்டுபோய்ச் சேர்ப்பன்.

குறிப்பு :—திருவாறன்விளையிலிருக்கும் கௌரவத்தால் திருநாட்டையும் அலக்ஷியம் செய்து அதை வாயால் சொல்ல

இஷ்டமில்லாமல் 'வேறொன்றின்' என்று பாட்டில் அருளிச் செய்கிறார்.

(இ - ம்) அல்லா - அல்லாத : ஈறுகெட்ட பெயரெச்சம். செய்வ - பலவின்பால் வினையாலணையும் பெயர். தன்வினைப் பிறவினைப்பொருளில் வந்தது. (10)

---

தீர்த்தனுக் கற்றபின் மற்றோர் சரணில்லை யென்றெண்ணித்
[ தீர்த்தனுக்கே
தீர்த்த மனத்தன னாகிச் செழுங்குரு கூர்ச்சட கோபன்சொன்ன
தீர்த்தங்க ளாயிரத் துள்ளிவை பத்தும்வல் லார்களைத் தேவர்வைகல்
தீர்த்தங்க ளேயென்று பூசித்து நல்கி யுரைப்பர்தந் தேவியர்க்கே.

(ப - ரை) தீர்த்தனுக்கு - எல்லாருடைய பாபங்களையும் போக்குகிறவனுக்கு, அற்றபின் - அவனுக்கே சேஷன் என்று முடிந்தபின், மற்று ஓர் சரண் இல்லை என்று எண்ணி - அவனைத் தவிர வேறு ஓர் உபாயமில்லையென்று நிர்ணயம் செய்து, தீர்த்தனுக்கே - (திருவாறன்விளையிலிருக்கிற) தீர்த்தனுக்கே, தீர்த்த - (தன்னை அடிமையென்று) எண்ணிக்கொண்டிருக்கிற, மனத்தனன் ஆகி-மனதையுடையவனாய், செழும் - ஆத்ம குணங்களை விருத்திபண்ணும்படியான, குருகூர் - குருகூரிலேயிருக்கிற, சடகோபன் சொன்ன, தீர்த்தங்கள் ஆயிரத்துள் - பரமபாவனங்களான ஆயிரம் பாட்டுக்களுக்குள்ளே, இவை பத்தும் வல்லார்களை-இந்தப் பத்துப் பாட்டுக்களையும் அப்யஸிக்கச் சக்தியுள்ளவர்களை, தேவர் - இந்திரன் முதலான தேவர்கள், வைகல் - எப்போதும், தீர்த்தங்களே என்று - 'இவர்கள் பரமபாவனர்களே' என்று பூசித்து, நல்கி - ப்ரீதி செய்து, தம் தேவியர்க்கு - தங்களுடைய தேவிகளுக்கு, உரைப்பர் - சொல்லுவார்கள்.

(கருத்து) திருவாறன்விளையே ப்ராப்யம் என்று எண்ணுவதற்கு இடைஞ்சல்களான தம்முடைய பாபங்களைப் போக்கி, அதனாலே தீர்த்தனாகி அதில் எம்பெருமான் எழுந்தருளியிருக்கிறான். அவனுக்கே தாம் சேஷம் என்றும், அவனைத் தவிர தமக்கு வேறு உபாயமில்லையென்றும் எண்ணியிருக்க ஆழ்வார்

அருளிச்செய்த ஆயிரம் பாட்டுக்களும் அவனைக் காட்டிலும் பாவநங்கள். அவைகளில் இந்தப் பத்துப் பாட்டுக்களை அடிக்கடி படிக்கச் சக்தியுள்ளவர்களை இந்திரன் முதலான தேவர்கள் கௌரவத்துடனும் பிரீதியுடனும் தம் தேவிகளுக்கு 'இவர்கள் திருவாய்மொழியைக் காட்டிலும் பாவநர்கள்' என்று சொல்லுவார்கள்.

(இ - ம்) இரண்டாம் அடியில், தீர்த்த - தீர்ந்த : வலித்தல் விகாரம். (11)

---

वैकुण्ठे नित्ययोगाद् आश्रितवशतयाऽनन्त-
कीर्त्या [illegible] शेषशायित्व रुक्मिणीहृद्यत्व सुरजिद्बा-
णदोः[illegible] ग्राहग्रस्तेभरक्षा [illegible]
विषये सन्निधानात् [illegible]
विघटयति हरिः [illegible] ॥ ९०

---

இந்தத் திருவாய்மொழியில் எம்பெருமான் தன் விஷயமான பாட்டுக்களைப் பாடுகிறவர்களுடைய எல்லாத் துக்கங்களையும் போக்குகிறான் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) வைகுந்தத்தில் எப்போதும் இருப்பது ; (2, 3) ஆச்ரிதர்களுக்குட்பட்டு அவர்களுக்கு வேண்டியதைச் செய்வது ; (4) அளவில்லாத கீர்த்தியோடு விளங்குவது ; (5) ஆதிசேஷன்மேலே படுத்திருப்பது ; (6) ருக்மணிக்கு மனதுக்குப் பிடித்தவனாயிருந்தது ; (7) தேவர்களை ஜயித்த வாணனுடைய தோள்களைத் துணித்தது ; (8) முதலையால் பிடிக்கப்பட்ட யானையை ரக்ஷித்தது ; (9) தனக்குக் கைங்கரியம் செய்யத் தகுந்ததான திவ்யதேசத்தில் எழுந்தருளியிருப்பது ; (10) மற்றவர்களின் பாபங்களைப் போக்குவது. (90)

---

ஶாட்யாஶ்லேஷாஸஹிஷ்ணும் ப்ரஶமிதஜநதாக்³ரஹணம் ஸ்வேஷ்டரக்ஷாம் வ்யாகுர்வாணம் ஸ்வரக்ஷாஸ்வநியமநவிதௌ ஸ்வேஷ்டஹிதாம் ஶமயந்தம் | ஸ்வீயாந் ஸ்வீயோத்கம் ஸ்வரணஸமயிஶமாந் ஸ்வஹாநிம் ஹாநிமிஹதிம் ஸ்வோத்க்ருஷ்டாம் ஸ்வஸ்திகூர்வதோஷாம் ஸ்வந்தேஷு நிஷ்டோரம் || ௭௧ |

---

ஏழாம்பத்தில் எம்பெருமான் ஆச்ரிதர்களுடைய அநிஷ்டங்களை நாசம் பண்ணுகிறவன் என்பது பத்துக் காரணங்களால் சொல்லப்படுகிறது. அவைகளாவன :—(1) வஞ்சனை செய்கிறவனே என்று ஆச்ரிதர்கள் ஸங்தேஹப்படுவதைப் பொறுத்துக் கொள்ளுகை; (2) ஆச்ரிதர்கள் தன்னை நிந்திப்பதைப் போக்குவது; (3) தான் ரக்ஷிக்கிறவன் என்பதை வெளியிடுவது; (4) ரக்ஷிக்கும் விதங்களைப் பிரகாசப்படுத்துவது; (5) எல்லாரிடத்திலும் ஸ்நேஹமிருப்பதைக் காட்டுவது; (6) தன்னைச் சேர்ந்தவர்களின் அழுங்கைக்கூப்பாட்டைப் போக்குவதில் ஆசையுள்ளவனாயிருப்பது; (7) மிகவும் தெளிவாய் நினைவில் தோன்றுவது; (8) ஆச்சரியத்தை உண்டுபண்ணும் இரண்டு விபூதிகளையுடையவனாயிருப்பது; (9) தன்னை ஸ்தோத்திரம் பண்ணும்படி ஏவுவது; (10) ஸ்தோத்திரம் பண்ணுகிறவர்களுடைய இடைஞ்சல்களைப் போக்குவது. (91)

ஸ்ரீஶைலேஶ தயாபாத்ரம் தீ⁴ப⁴க்த்யாதி³கு³ணார்ணவம் |
ஜ்ஞாநவைராக்³யஸந்தா⁴நஶேவதி⁴ம்
ஸ்ரீஶைல வேதாந்தாசார்ய ராமாநுஜ மஹாதேஶிகாய நம꞉
ஸ்ரீஶைலநிகமாந்த மஹாதேஶிகாய நம꞉

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவடிகளே சரணம்.

ஸ்ரீஶைல ஶடகோப ஸ்வாமி ஸ்வாமி மஹாதேஶிகாய நம꞉

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

ஏழாம்பத்து முற்றிற்று.

# 2-வது ஸம்புடத்தின் பாட்டுக்களின் அகராதி.